உ

கணபதிதுணை.

ஸ்ரீதிரிபுரசுந்தர்யைநமஃ

---

வியாசமுனிவரருளிய

பதினெண் புராணங்களிலொன்றாகிய

# தேவீபாகவதம்.

## உத்தரபாகம்.

இஃது

சம்ஸ்கிருத பண்டிதர்களுதவியைக்கொண்டு

ஸ்ரீகாஞ்சிபுரம் ஸ்ரீமத் ஏகாம்பர சிவயோகிகள்

மாணாக்கர்

ஆலாலசுந்தரம்பிள்ளையவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு

சென்னை

கணேச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1915.

இதன் விலை ரூபா. 3—4—0.

உ

காமாக்ஷிதேவ்யைநமஃ

# முகவுரை

அநாதிமுத்தன் அநாதிபெத்தர் என்னும் இருசொல்லும் யாரைப்பற்றி அநாதியாய் வழங்கிவருவதெனின் இறைவனையும் ஆன்மாக்களையுமேயாம். இறைவனுக்கு அநாதிமலசம்பந்தம் இல்லாமையினாலேயே ஒப்புவமை இல்லாததோர் உயர்வும், ஆன்மாக்கட்கு அநாதிமல சம்பந்தமுடைமையினாலேயே இழிவின்மிக்கதோர் தாழ்வும் உண்டாயின. இறைவனுக்கு மலசம்பந்தம் இல்லாமைக்குக் காரணம் யாதெனின், அகண்டாகார ஞானப்பேரொளிப்பிழம்பாய்ப் பிரகாசிக்கும் சித்ரூபசத்தி அவனுருவமாகக் காணப்படுகையாலென்க. அந்த ஞானப்பேரொளிப் பிழம்பைக்காணும் ஆற்றலுள்ள ஆன்மாக்களுடையஞானம் வெளிப்படாமைக்குக்காரணம் யாதெனின், அந்த ஞானக்கண்ணை வியாப்பியத் தன்மையுடைய ஆணவமல சக்திமறைத்தலினாலென்க. அதனால் இச்சையினால் இச்சிக்கத்தக்கது இன்னதென்றும், ஞானத்தினால் அதுமுற்றுப்பெறுதற்கான உபாயம் இன்னதென்றும், கிரியையினால் அது கூடுதற்கான செய்கை இதுவென்றும் செயற்படுமாறின்றி அவ்விச்சாஞானக்கிரியைகளும் உண்டோ இல்லையோவென்று ஐயுறும் வண்ணம் மலசொரூபத்தில் மறைந்து அரூபசொரூபியாய் நிற்பவாயின. எனவே ஞானசொரூபியான ஆன்மா ஆன்மாவென்றறிதற்கிடனின்றி தேகமே ஆன்மா இந்திரியமே ஆன்மா அந்தக்கரணங்களே ஆன்மா பிராணாதிவாயுக்களே ஆன்மா இவைபோலும் ஆன்மாவால் இயங்குவனவாகிய எல்லாச்சடப்பொருள்களும்ஆன்மாவென்றழைக்கப்படுவனவாய் ஆன்மாவென்றழைக்கப்பட்ட ஆன்மா அனான்மாவா யுருவில்லாதொழிந்ததென்க. அந்தோ! இவ்வாறு நாமரூபமற்று அநாமதேயமாய்ப் பரிதபித்துக்கிடக்கும் இவ்வான்மகோடிகள் பரமான்மாவோடு கூடும்வண்ணம் பரம கருணாசாலியாகிய பராசக்தியாகிய நம்மன்னை ஆன்மாக்கட்கு மலத்தை நீக்கிச் சிவத்தையளித்தற்கண் ணுள்ளதாகிய கருணையில் தனது இச்சையும், அதற்குச் செய்யக்கடவதான உபாயங்களையெல்லாம் அறியும் அறிவில் தனது ஞானத்தையும், அவற்றை அவ்வாறே சங்கற்பித்துச்செய்

யும் சங்கற்பத்தில் தனது கிரியையும் செலுத்தி அவை முற்றுப் பெறுமாறு "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவ னிறைவன் என்றெழுதிக்காட்டொணாதவனும்" "இன்னதன்மைய னென் றறிவொண்ணாதவனுமாகிய இறைவனை" "உரிமேனிதரித்துக் கொண்டதென்றலும் உருவிறந்த, அருமேனியதுவுங்கண்டோம் அருவுருவானபோது, திருமேனி யுபயம்பெற்றோம் செப்பிய மூன் றும் நந்தம், கருமேனி கழிக்கவந்த கருணை யென்றறிந்திடாயே' என்றபடி மூவகைத்திருமேனிகளும் கொள்ளச்செய்து "படைப் பாதி தொழிலும் பத்தர்க்கருளும் பாவனையும் நூலும், இடப் பாகமாதராளோ டிருந்துயிர்க்கின்பமென்றும், அடைப்பானுமதுவு முத்தியளித்திடும்யோகும் பாசந் துடைப்பானுந் தொழிலு மேனி தொடக்கானேற் சொல்லொணாதே" என்றபடி ஆன்மாக்களின் கண்ணை மறைத்த கடியதொழிலாணவத்தை படைப்பாதிதொழில் களால் போக்கப் பதியெனநிற்கச்செய்து தான் அவரது ஆக்ஞா ரூபியாய் "குவளைக்கண்ணி கூறன்காண்க, அவளுந்தானும் உடனே காண்க, "பரமானந்தப் பழங்கடலதுவே" என உலகுக்கம்மை யப்பராய் நின்றருளுகின்றனள்.

இவ்வாறு இருப்பவளாகிய பராசக்தியினது பிரபாவமுதலி யவற்றைக்கூறும் தேவீபாகவதம் என்னும் இந்நூல் விஷ்ணுபுரா ணம் நான்கனுள் ஒன்றாகச்சொல்லப்பட்டிருக்கிறது. அக்னி சூரி யன் முதலிய சில்லாண்டிற்சிதைவோருக்கே தனித்தனி ஒவ்வோர் புராணங்கள் சொல்லப்பட்டிருக்க, பல்லாண்டென்னும் பதங்கட ந்தவளாகிய இம்மகாதேவிக்குத்தனித்து ஓர்புராணம் சொல்லாது விஷ்ணுபுராணத்துள் சேர்த்துச்சொல்லவேண்டிய காரணம் என்னை யெனின்! "விஸ்வ இத்யேவவிதிதோ விஷ்ணுர் விஸ்வாதிகஸ் ஶிவ: யஜ்ஞோவிஷ்ணுஸ் ஶிவோராஜா ஹ்யத்வரஸ்யேதி விஸ்ருத:, மாயீ திபரா சிவப்ரோக்தோ ஸஶிவ: பரமாகிருதி:, சகத் விஷ்ணுமயம் ஸர்வம் ஜகதாம் பதிரீஸ்வர:, விஷ்ணுர்யோனி ரிதிப்ரோக்த: புரு ஷோ ருத்ரயீரித:. ததர்த்தோ பஹுபிஸ்ஶாஸ்தரை: புராணைஸ் சாபிநிஸ்சித:. கஸ்ஸந்தோஹோத்ர வதத: கிமர்த்தம் மாஞ்சபுருச் சத, புத்திமோஹோஸமூடம்மாம் உபேக்ஷத்வேமுநீஸ்வரா:" எனவட மொழிக்காஞ்சிப்புராணத்தும், "விச்சுவன் சிறைப்புள்ளர சுயர்த்த வன் விளம்பும், விச்சுவாதிகன் எறும்வலிச் சினவிடையூர்தி, எச்

சமே சுரும்புளர் துழாயலங்கலானென்ப, எச்சநாயகன் பொலந்து ணரிதழிமாலிகையான். மாயையாங்கொடு முரன்றனைச் செகுத் துயர்வயவன், மாயையாள்பவன் முப்புரங்கனற்றியவள்ளல், சாய ன்மாமயில் வனிதையே நாரணன்றரியார், சாயவென்ற சீர்ப்புருட னுங்கண்ணுதற்றலைவன். என்னமாமறை மிருதிநூல் புராணமற் றெவையும், பன்னுகின்றதில் ஐயுறர்பால தொன்றுளதோ, புன்மரு ட்சியின் மயங்கினேன் புலங்கொளத்தெருட்டாது, என்னையிவ் வணங்கண்டனிர் இது நுமக்கழகோ" எனத்தென்மொழிக்காஞ்சிப் புராணத்தும் வருதலால் விஷ்ணுமூர்த்தி சிவசக்தி என்பது நன்கு விளங்குகின்றது. அல்லாதூஉம் "அரியலால் தேவியில்லை ஐயனையாற னூர்க்கே" எனவரும் தமிழ்வேதப் பிரமாணத்தானும், "ஒருபா லுலக ளந்தமாலவனுமற்றை,யொருபா லுமையவளாம்" எனவும் "புருடனைச் சத்தியிற் புணர்த்தனை "யன்னதற்கொருகாட்டென்ப புருடோத்தம னே" எனவும் வரும் பலபிரமாணங்களானும் விளங்குகின்றது, பக வதி நாராயணி என்னும் அரிய திருநாமமுடைய தேவியோடு விஷ்ணுமூர்த்தி சம்பந்தமுடையாரென்பது தோன்றவே பகவா னென்றும் நாராயணரென்றும் அழைக்கப்பட்டு வருகின்றார். அன் றியும் பரசிவத்துக்குத் தாதான்மிய சக்தியாகிய பராசக்தி ஒரு கூற்றானே புருஷரூபமாகவும் ஸ்திரீரூபமாகவும் திருவுருக்கொண்டு பிரகிருதிமாயா காரியத்தை நடத்திவருகின்றாளென்பதுமொன்று. இதனை இந்நூலில் நவமஸ்கந்தத்தில் முதலத்தியாயத்தில் காணலாம். இத்தகைய சம்பந்த விசேடத்தால் சிவசக்தியாகக் காணப்படும் விஷ்ணு புராணத்துள் இத்தேவி புராணத்தையுஞ் சொல்லப்பட்ட தென் றறியக்கிடக்கின்றது. விஷ்ணுபுராண கம்யமாய் சிவபராம்ய பிரகாசினியாய் சர்வபுராண சாரமாய் விளங்கும் இத்தேவிபாகவதத் தையான் பலநல்லோரானும் பிராஹ்மணசபைகளில் நடந்தபிரசங்க விசேடங்களானும் கேள்வியுற்று அதில் ஆவலுள்ளவனுய் உலகினர் பாகவதவுண்மையுணர்ந்துமகிழவும் அதனைக்கண்டியானும்மகிழவும் தேவிஅநுக்கிரகத்துக்கு எளியனாகவும் கருதிமொழி பெயர்க்கலாயி னேன். இம்மொழி பெயர்ப்புக்குச் சகாயமாயிருந்தவர் சர்வபுரா ணப்பிரசங்க ரத்னாகரமாய் சென்னையிலிருந்த ஸ்ரீமத் அப்பாவுகுரு க்கள். சிந்தாதிரிப்பேட்டை ஸ்ரீ சுப்பிரமணியசாஸ்திரியார். காஞ்சி யிலிருக்கும் பிரஹ்மஸ்ரீ விஸ்வநாதசாஸ்திரியார். அவர்களெல் லாம் ஒருக்கால் தவறினும் அச்சமயங்கள்தோறும் தவறாவண்

ணம் ஊன்றுகோல் போலிருந்து உதவிபுரிந்து முற்றுப்பெறச்செய்தவர் எமது ஆசிரியமூர்த்திகளாகிய ஸ்ரீமத் பைரவசிவ சாசாரியஸ்வாமிகள்.

ஸ்ரீமான் செந்தில் வேலுமுதலியாரவர்கள் இந்நூலருமையும் என்பால் இயற்கையாயமைந்துள்ள அன்பின் விசேடத்தையும் கருதிபதேயன்றி செல்வம் கல்வியின்பாற்படுவதே செல்வத்தின்பயனெனவும், அச்செல்வம் பெற்றூரது சிறப்பெனவும் நன்குணர்ந்து இரண்டுஸ்கந்தங்களை அச்சிட்டுத்தந்ததுந்தவிர ரூபா நூறும் உதவிபுரிந்தனர். அதனுலும் பிறகுஇத்தேவிமகிமையை இந்நூலிற்கண்டு களித்து சேலம் மிட்டதார் ம-ா-ா-ஸ்ரீ முத்துசாமி கவுண்டர் அனுப்பியரூபா ஐம்பதனுலும், இன்னுஞ் சிற்சில நண்பர்கள் செய்த சிறுஉதவிகளாலும் பூர்வபாகத்தைமுடித்து உத்தரபாகத்தை முற்றுப்பெறச்செய்வதற்கின்றி இடர்ப்பட்டிருந்தேன். இருக்குங்காலத்தில், எய்ப்பினில் வைப்பாய் நல்லொழுக்கத்தில் மிக்கு நல்லுணர்ச்சியிற் சிறந்து கிழமையைக்கீழ்த்திடாநட்பிலோங்கிக்காணப்படும்ஸ்ரீமான்கா-மு.மயிலே அரங்கசாமிநாயகர் நூறுரூபா உதவிபுரிந்து ஆரம்பிக்கச் செய்தனர். பாக்கம் சுரோத்திரீகதாரராகிய ம-ா-ா- ஸ்ரீ ம. சிங்காரவேல் முதலியார். ம. செந்தில்வேலு முதலியார் குமாரர் - காளத்தீஸ்வரமுதலியார் தா. வெங்கடாசல முதலியார். காட்டாங்குளம் - வடிவேலுமுதலியார் ஆகியஇவர்கள் வேண்டிய உதவிபுரிந்து முற்றுப் பெறச்செய்தனர். இவர்கள் நன்மையை என்றும் பாராட்டத்தக்கவனுயுள்ளேன். நிற்க.

யோகிகளாலும் முனிவர் முதலிய சித்தர்களாலும் பரமஞானிகளாலும் மற்றுயாவராலும் இடைவிடாமல் வேண்டத்தக்கதாயிருக்கின்ற திருவருளுருவாகிய தேவியினது அரியபெரிய இப்புராணத்தை மொழிபெயர்க்கத் தொடங்கிய யான் எத்தகைய அறிவுடையன் என்று யானே எண்ணிப்பார்க்குமளவில் நகையாடத்தக்கதே. எனக்கே அத்தகைத்தாயின் ஏனையோர் நகையாடா நிற்பரென்பதில் ஐயமுமுளதோ! ஆயின் அறிவுடையான்றோர் நகையாடார். ஏனெனின், எண்ணிறந்த ஆன்மாக்களாகிய பசுக்களில் யானொரு பசு. எனவே பாசமாகிய அறியாமையோடு கூடிய அறிவுள்ளேன். என்பதையறிவர். அங்ஙனமாயினும் என்னறிவின்கண் வியஞ்சக

மாய் நின்று உணர்த்த வேண்டுவனவற்றை வுணர்த்துவதாகிய பதி யறிவும் உடனாயிருத்தலும் உண்மையாமென்றும் உணர்வர். இவ்வி ரண்டையுமறிந்த அவர் இந்நூலின் கண் சொற்குற்றம் பொருட் குற்றங்கள் உடையனவாய்க் காண்பாராயின் அங்குவியஞ்சகமாகிய பதியறிவு சொல்லையும்பொருளையும் உணர்த்தாதொழிந்ததென்றும் சொல்லும் பொருளும் குற்றத்துக்கிடனின்றிச் சுவையுடையன வாய் மகிழ்ச்சிக் கிடஞ்செய்யக்காண்பாராயின் பதியறிவு ஈண்டு நன்கு பிரகாசப்படுத்தியதென்றும் அகமகிழ்வார். பதியறிவும் பசு வறிவும் உணரப்பெற்ற பெரியோர் இந்நூலின் கண் எனது அறியா மையைக்கண்டிகழின் என்னறியாமை என்னை விட்டு நீங்குவதற்கு ஓர் வாயிலெனவும், அறிவைக்கண்டு மகிழின் அது தேவியினது திருவருள் என்பால் வருதற்கு ஓர்வாயிலெனவும் சிந்தித்து மகிழத் தக்கவனாயுள்ளேன். அன்றியும் மேலோர்க்கு அடியேன் அறிவிப்ப தொன்று.

இந்நூலில் பன்னிரண்டு ஸ்கந்தங்களில் என்னறிவைச் செலு த்திவருங்கால் ஒன்பதாவது ஸ்கந்தமொழிந்த ஏனையவைகளில் அறிவுகிளர்ச்சியுற்று அதில்வரும் விஷயங்களின் அருமை பாரா ட்டி இது எழுதும் புண்ணியங் கிடைத்ததே என்று மனக் களிப்புடன் எழுதி முடித்தேன். ஒன்பதாவது ஸ்கந்தமோ மனக் களிப்புக்கிடனின்றி தேவிபராம்யத்துக்கு அன்னியமாகவும் ஏனைய ஸ்கந்தங்களில் சாமான்யமாய் ஓதுக்கப்பட்ட தெய்வங்களுக்கு பாரம்யமிகுதியாகவும் தெய்வத்தன்மையுடைய தெய்வங்கள்மாட்டு சாதாரணமாயிருக்கின்ற மானிடர்களிடத்துள்ள ராகத்துவேஷ கா மக்குரோதாதிகள் கூத்தாடுவதாகியசெயல்களை நவநவமாய்ப் புதுக் கியும் கூறப்பட்டுள்ளன. இவைகளைக் கண்ணுற்றகாலத்து அவைக ளெல்லாம் பிரமாணங்களாகவும் வியாசர்வாக்காகவும எண்ணுவத ற்கு ஒருசிறிதும் என்மனம் இடங்கொடுக்கவில்லை. அங்ஙனமிருப்பி னும் வடநூலின்கண்வந்தவாறேஎழுதிமுடித்தேன். என்னெழுதிமுடி த்தேனென்றால் என்பேரில்சிலர்அறியாமையால்கூறவரும்பழிச்சொ ற்கஞ்சியேயாம். அஃதாவது மொழிபெயர்த்தவன் சைவனாகையால் இந்தஸ்கந்தத்தில் அவன் கொள்கைக்கு மாறுகாணப்பட்டமை யால் அவையெல்லாம் மாற்றினானென்றும் அல்லது ஒழித்தானெ ன்றும், இப்படித்தான் ஏனையஸ்கந்தங்களையும் தன்மனம்போல் குளறுபடையாய் எழுதிமுடித்தானென்றும் முதனூலுக்குச்சரி

யாய்ச்செய்ததில்லை என்றும், அதற்கு இந்தஸ்கந்தம் எழுதியதே சான்றென்றும் கூறி சாதுக்கள் யாவரையும் இடர்ப்படுத்தி இதில் சிரத்தையுண்டாகாவண்ணஞ்செய்து இந்நூலில்வரும்அரிய பெரிய விஷயங்களைக்கண்டுகளிக்கும் பாக்கியத்தையும் இழக்கச்செய்வது மன்றி முன்முடிந்து வெளியாகிய பூர்வபாகத்தைக் கண்ட அனேக அந்தணர்களும் ஏனையோரிற் பெரியோரும் முதனூலுக்கு விரோத மில்லாமல் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது மற்றை உத்தரபாகமும் இதுபோலும் முடித்து எப்போதுவெளிப்படுத்தப் போகின்றார் என்று எதிர்பார்த்திருந்தவருடைய உள்ளங்களையும் மாறுபடச்செய்வாராகலின் அப்பாவத்துக்கஞ்சியும் ஏனையஸ்கந்தங்களை எப்படி முதனூலுக்கு விரோதமில்லாமல் மனக்களிப்புடன் எழுதிமுடித்தேனே அப்படியே இந்த்லென்பதாவது ஸ்கந்தத்தையுமுதனூலுக்கு விரோதமில்லாமல் மனக்களிப்பற்று எழுதிமுடித்தேன். மனக்களிப்புக்கிடங்கொடாத காரணம் இன்னதென்று வெளியிடலாமே என்று சில அறிவாளிகள் எண்ணவரும். இந்தநூலைமொழிபெயர்ப்பதற்கு ஆரம்பித்தநாள்தொட்டு பொருளாலுண்டாகிய சிரமம் ஓர்பங்காயிருப்பினும் பண்டிதர்கள் கிடைப்பதற்கின்றிப்பட்ட சிரமமோஎழுதிமுடியாது. அந்தச்சிரமம் ஆறுவதற்கிடனில்லாமலிருக்கும்பொழுது இந்தப்பெரியசிரமத்தில் பிரவேசிப்பதென்றால் நெஞ்சம் அஞ்சுகின்றது. இப்போது அப்படியிருப்பினும் சிலமாதம்சென்றபின்னர் அதனையும் வெளிப்படுத்தலாமென்றெண்ணியிருக்கின்றேன். அன்றியும்அதனையும் இப்போதே வைத்துக் கொள்வேனால்நாட்செல்லும் சென்றால்அனேகர் எடுத்தநூலைப் பூர்த்திசெய்யவில்லைஎன்கிற பெருஞ்சுமையை என்மேல்சுமத்தியிருந்தனர். அச்சுமையைவைத்துக்கொண்டே இதில்தலைப்படஎன்மனந்துணியவில்லை இச்சுமைநீங்கிவிட்டபடியால் இனிஅதில் பிரவேசித்துமுடிப்பது எனக்குப்பெரிதானதல்ல. அன்றியும் இத்தேவீபாகவதத்தை முதனூலில் ஆங்காங்குவரும் ஸ்தோத்திரங்களையும் சிலபிரமாணங்களையும் கிரந்தாக்ஷரசகிதமாய் ஏனையவிஷயங்களைச் சங்கிரகப்படுத்தி அச்சிட்டுவெளியிடலாமென்று எண்ணியிருக்கின்றேனாகலின் அத்துடன் இதையும் சேர்த்துவெளிப்படுத்துவேன். சுபம்.

ஸ்ரீ காமாக்ஷி சகாயம்.

---

திரிபுரசுந்தர்யை நமஃ.

# தேவீ பாகவதம்.

## ஏழாம் ஸ்கந்தம்.



அத்தியாய அட்டவணை. பக்கம்.



ஏழாம் ஸ்கந்தம் முற்றிற்று.



உ

லஸத்தாடிமபாடலாயைநம꞉

# தேவீபாகவதம்.

## உத்தர பாகம்.

### ஏழாம் ஸ்கந்தம்.

### முதலாம்அத்தியாயம்.

### * பிரஹ்மாத்யுத்பத்தி.

ஐஶ்வர்யமிந்துமௌளே ரைகாத்மபிரகிருதி காஞ்சிமத்யகதம்
ஐந்தவகிஸோரஸேகர மைதம்பர்யஞ்ச காஸ்திநிகமாநாம்.

சர்வஜ்ஞான போதகராகிய சூதமுநிவர் தவஸ்ரேஷ்டர்களாகிய நைமிசாரணியவாசிகளைப் பார்த்து, ஓபெரியோர்களே! ஸ்ரீதேவீபாகவதத்தின் பூர்வபாகத்தை யான்சொல்லக் கேட்டு வந்தீர்களன்றோ; இனி உத்தரபாகத்தையுங் கூறுகின்றேன், கேட்பீர்களாக. பரீட்சித்தினுடைய புத்திரனும் தர்மஜ்ஞான சிகாமணியும் ராஜருஷியுமாகிய ஜனமேஜய மகாராஜன், வியாசபகவா னுபதேசித்துவந்த மாயாவிலாச வைபவத்தைக்கேட்டு மனக்களிப்புடையவனாய்ப் பணிந்து, ஓ சுவாமிகாள்! மஹாத்புதமாகிய பூர்வபாகத்தைக்கேட்டு அநேகதத்வார்த்தங்க ளுணரப்பெற்று ஆனந்தமுற்றேன். இனி சூரிய சந்திர வம்சங்களிற் றோன்றினவர்களான அரசர்களுடைய வம்சவிஸ்தாரங்களைக் கேட்கவிரும்புகின்றேன். ஓ முற்றுமுணர்ந்தவராகிய முநிவரே! அவ்விரண்டு வம்சங்களிலுந் தோன்றிய அரசர்கள் பராசத்திபக்தர்களென்று கேள்விப்பட்டிருக்கின்றே னாகலானும்,தேவிபக்தர்களுடைய சரித்திரங்களைக் கேட்கின்றவர்கள் சகல பாபங்களினின்று நீங்கிப் பிரபஞ்சத்தில் விர்த்தியடைந்து ஞானப்பிரகாச முடையவராவாரென்று நிச்சயிக்கப் பட்டிருத்தலானும் அவ்விருவம்சத்தாருடைய விஸ்தாரங்களைச் சிரவணஞ்செய்ய ஆவலுள்ளவனா யிருக்கிறேனென்று விண்ணப்பிக்க,வியாசபகவான் மனமகிழ்ந்து முகமலர்ந்து செல்வத்துட் செல்வமாகிய செவிச்செல்வம்

* பிரமன் முதலானவர்களுடைய உற்பத்தி.

வாய்க்கப்பெற்ற செல்வனே! நீ விரும்பியபடி சந்திர சூரிய வம்சங் களிற்றோன்றிய அரசர்களுடைய வம்சாவளியேயன்றி இதரமானரா ஜாக்களுடைய சரித்திரங்களையும் விஸ்தாரமாய்ச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. அப்பாகுழந்தாய்! பூர்வத்தில் நாபிகமலத்தினின் றுந் தோன்றிய நான்முகன் தேவியை ஆராதித்துத் தவஞ்செய்து அவரனுக்கிரகத்தால் வேண்டிய வரங்கள்பெற்று பிரபஞ்சசிருஷ் டிசெய்ய எத்தனப்பட்டு மாநுடரை மானசீகமாகச் சிருட்டிசெய்ய முயற்சிக்கும்போது அவர்களைச் சிருட்டிப்பதற்கான சக்தியற்றவ னாய் அதிக சிரமத்தினால் சிலமகான்களைச் சிருட்டித்தான். அவர் கள் தினே தினே அபிவிருத்தியாய் வருதலில்லாமையைக் கண்டு தனது மனதினின்றும் மரீசி அங்கிரசர் அத்திரி வசிட்டர் புலகர் கிரதர் புலஸ்தியர் என்கிற எழுவரையும் சநகாதி நால்வரையுஞ் சிருட்டித்தான். இவர்களைச் சிருட்டித்தபின்னர் மேன்மேலுஞ் சிரு ட்டி செய்யவேண்டுமென்று ரோஷம்பிறந்தது. அந்த ரோஷத்தி னின்று உருத்திரமூர்த்தியும், புத்ஸங்கத்தினின்று நாரதரும், அங் குஷ்டமாகிய பெருவிரலினின்று தக்ஷபிரஜாபதியும், இடதுகைப் பெருவிரலினின்றும் சர்வாங்கசுந்தரிகளாயும் புராணங்களால் பிர சித்திபெற்றவர்களாயுமுள்ள தக்ஷபத்தினிகளாகிய வீரிணி அஸிக் னி என்னும் இருவருந்தோன்றினர். ஓசநகாதிமஹருஷிகாள்! இந்தத் தக்ஷபத்னியினிடத்தினின்று நாரதர் தோன்றினரென்று வியாசர் சொல்லவும், ஜனமேஜயன், ஓ பிரமருஷியே! தேவரீர் இப்போது சொல்லிவந்ததில் பிரமாவின் மானசபுத்திரரான நாரதமுனிவர் தக்ஷபிரஜாபதிக்குப் புத்திரரானாரென்றால் எப்படிப் புத்திரராயி னார்? அவனுக்குப் புத்திரராம்படி சாபமிட்டவரார்? அதற்குக் கார ணமென்னை? பூர்வஜன்ம மெவ்வண்ணம் போயிற்று? இவையெல் லாமெனக்குச் சொல்லவேண்டு மென்றனன். வியாசர் சொல்லு கிறார். ஓ அரசனே! பிரஹ்மதேவர் தக்ஷபிரஜாபதியை யுண்டாக்கி அவனைநோக்கி, நீ எண்ணிறந்த பிரஜைகளை யுண்டாக்குவதாகிய முயற்சியில் ஆவலுடையவனா யிருத்தல்வேண்டுமென்று கட்டளை யிட, அவனும் அவ்வெண்ணத்திலேயே மிக்க ஆவலுடையவனாயிரு ந்தபடியினால் அதனை யங்கீகரித்தவனாய்த் தன்மனையாளுடன்கூடி ஐயாயிரம் பிள்ளைகளைப்பெற்று அவர்களை நோக்கி, ஓ புத்திரர் களே! நீங்களொவ்வொருவரும் பிரஜைகளை யுண்டாக்குந் தொழி

லில் ஊக்கமுடையவர்களாயிருந்து அதற்காகவேண்டிய முயற்சி களைச் செய்யுங்களென்றான். அவர்களும் அம்முயற்சியிற் றலைப் பட்டு முயன்றிருக்கும்போது நாரதமுநிவர் காலதத்துவத்தால் பிரேரேபிக்கப்பட்டவராய் அவர்களைப் பார்த்துச் சிரித்துக்கொண் டே, ஓ பிள்ளைகாள்! நீங்களனைவரும் சிருட்டிக்குந் தொழிலில் முய ற்சியுடையவர்களாகக் காணப்படுகின்றீர். இம்முயற்சியில் நீவிர் தலைப்பட்டதுபற்றி நான் மிகவுஞ் சந்தோஷிக்கிறேன். ஆயினும் பிரஜைகளைச் சிருட்டிக்கவெண்ணிய நீவிர் பூமி இவ்வளவு விசால முடையதென்று முன்னரறிந்தன்றோ அவ் வளவுக்கேற்பச் சிருட் டிக்கவேண்டும். அங்ஙனமிருக்க அதனையெண்ணாது பிரஜைகளைச் சிருட்டிக்கத் தொடங்கினீர்களே அவர்களிருப்பதற் கென்செய் வீர்? நீவிரே ஆலோசனை செய்மின்கள். உங்கள்செயலை யுலகத்தார் காண்பாராயின் பரிகசிப்பார்களென்பதிற் சம்சயமில்லை. ஆகை யால் பூமியின் பிரமாணத்தை முன்னர் தெரிந்துகொண்டு பின்னர் பிரஜைகளைச் சிருட்டிசெய்ய முயல்வீராயின் நீங்களெண்ணியகாரி யம் சித்தியாகும். இல்லாவிடில் அது எங்ஙனம் சித்தியாகும்? அது நிச்சயமென்று சொல்லவே, அவர்களெல்லாம் இந்த நாரதமுநிவர் சொன்னது உண்மையே. இச்சமயத்தில் இவர்நேரிட்டது தெய்வா தீனமேயென்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு பூமியின் பிரமாணத்தைத் தெரிந்துகொண்டு பின்பு சுகமாய்ப்பிரஜைகளைச் சிருட்டிப்போமென்று நிச்சயித்து நாற்றிசையும் சிற்சிலராகப் பிரி ந்து சென்றனர். இவர்கள் இவ்வாறு திசைகடோறுஞ் சென்றதைத் தக்ஷன்கேள்விப்பட்டு அந்தோ! இந்த நாரதனால் பிள்ளைகளும்போ யினர். அவர்களால் சிருட்டிக்கப்படும் சிருட்டியும் போயிற்றென்று மிகவும் மனம் வருந்தினவனாய் பின்னரொருவாறு தெளிந்து மீண் டும் எண்ணிறந்த பிள்ளைகளைப்படைத்து முன்போல் சிருட்டிப்ப தற்கேவினான். அவர்களுமப்படியே சிருட்டிப்பதற்கு முயலும்போது நாரதரும் முன்போலவந்து அந்தப்பிள்ளைகளை நோக்கி முன் அவர் களுக்குச் சொன்னபடியேசொல்ல, இவர்களும் அவர் வாக்கியத்தை நம்பித் திசைதோறும் போயினர். தக்ஷபிரஜாபதி அந்தப் பிள்ளை களும்போய்விட்டதைக்கேள்வியுற்று சோகத்தோடு கோபங்கொண் டவனாய் நாரதமுநிவரை நோக்கி, என்பிள்ளைகளை நீ நாசஞ்செய் தபடியால் நீயும் நாசமாய்ப் போவதோடு கர்ப்பவாசதுக்கத்தையும்

அனுபவித்து எனக்கே மகனாகவும் வரக்கடவாயென்று சபித்த னன். ஓ அரசனே! நாரதரைப்பற்றி வினவிய ஐயவினாக்களுக்கு விடை இப்போது சொல்லிவந்த சரித்திரத்தாலறியக்கடவாய். பின் னரந்தத்தக்ஷன் புத்திரசோகத்தினின்றும் ஒருவாறு நீங்கினவனாய் மறுபடியும் அறுபது கன்னிகைகளைப்பெற்று அவர்களில் பதின் மூவரை காசிபமுநிவருக்கும், பதின்மரை யமதருமனுக்கும், இரு பத்தெழுவரைச் சந்திரனுக்கும், இருவரைப் பிருகுமுநிவருக்கும், நால்வரை அரிஷ்டமுநிவருக்கும், அப்படியே நால்வரை ஆங்கீரச ருக்கும் கொடுத்தனன். அவர்களுடைய புத்திரர்களாயும் பௌத் திரர்களாயு முள்ளவர்கள்தான் தேவர்களுந் தானவர்களு மென் றறிவாய். ஓ அரசனே! இவ்விருவகையினரும் பலவான்களாய் ஒரு வருக்கொருவர் விரோதிகளாய் ராகத்துவேஷங்களைத் தினே தினே விருத்திசெய்துகொண்டு அதனாலதிமோகிதர்களாயும் மாயாவிகளா யும் மிக்கசூரர்களாயு மிருக்கின்றன ரென்றனர்.

முதலாமத்தியாயம் பிரஹ்மாத்யுத்பத்தி முற்றிற்று.

சுலோகம் (௯௧)

---

உ

லலந்திகா லஸத் பாலாயைநமஃ

இரண்டாம் அத்தியாயம்.

## * சூரியவம்ச விஸ்தாரகதனம்.



சூதர் கூறுகின்றார். ஜனமேஜயன் வியாசபகவானைநோக்கி, ஐயா! தேவரீர் இப்போது சொல்லிவந்ததில் தக்ஷப்பிரஜாபதியினுடைய வம்சோற்பத்தி தெரியவந்தது. இனி சூரிய வம்சத்திற்றோன்றிய அர சர்களுடைய வம்சமும் அவர்களுடைய சரித்திரமும் மிகப்பெரிதாத லால் அவற்றைச் சொல்லியருளுமென்றனன். வியாசமுநிவர், ஓ அர சனே! சரஸ்வதிநதிதீரத்தில் முன்பு நான் நாரதமுநிவரைநோக்கி இந்த ஏழாவது மநுவினுடைய குலத்தில் எந்தராஜாக்கள் பிரசித்தி யடைந்திருந்தார்களோ அவர்களுடைய வுற்பத்தி விசேஷமான தென்றும் அதற்குச் சமானமான சரித்திரங்கிடையா தென்றும்

* சூரியவம்ச விஸ்தாரத்தைச் சொல்வது.

அவர்களுடைய நடக்கைமிகவும் ஆச்சரியகரமான தென்றுங் கேள்வியுற்று அதில் ஆவலுள்ளவனா யிருக்கின்றேன். ஆதலால் தேவரீர் அச்சூரியவம்சத்தின் விஸ்தாரத்தைச் சொல்லவேண்டுமென்றனன். அதற்கவர் மனமகிழ்ந்து என்னைநோக்கிப் புன்னகையுடன், ஓ சத்தியவதியின் புத்திரரே! நீர் கேட்கவிரும்பிய அரசர்களுடைய வம்சாவளியைச் சொல்லுகிறேன் கேளுமென்றார். அதாவது பூர்வத்தில் பிரமன் தோன்றியவுடன் சிருட்டிக்கவேண்டு மென்கிற ஆவலுடையவனாய்ச் சிவசத்தியைத் தியானித்துப் பதினாயிரம் வருடம் தவம்புரிந்து அவளருளால் சிருட்டிசெய்யுஞ் சக்தியைப்பெற்று மானசீகமா யனேகம் புத்திரர்களை யுண்டாக்கினன். அவருள் மரீசி என்பவர் சிருட்டிப்பதில் பிரசித்தியடைந்தனர். அவரினுங் காசிபர் மிக்கபிரசித்திபெற்றனர். அவரிடத்திலிருந்தே சகலதேவாசுரர்களும் யக்ஷர்களு முண்டாயினர். சர்ப்பங்களும் பசு பட்சிகளு முண்டாயின. தேவர்களுள் பிரசித்திபெற்றவரான சூரியபகவானுக்கு வைவஸ்வதமநு வென்பவன் பிறந்தான். அவனிடத்தில் இட்சுவாகு, நாபாகன், திருஷ்டன், சரியாதி, நரிஷ்யந்தன், பிராம்சு, நகோதிஷ்டன், கருஷன், ப்ருஷத்ரன் என்னும் ஒன்பதின்மர் பிறந்தார்கள். இவர்களே மானவர்க (மநுக்க)ளென்று சொல்லப்பட்டவர். வைவஸ்வத மநுவினுடைய முதற்புத்திரனாகிய இக்ஷ்வாகுக்கு நூறுபிள்ளைகள் பிறந்தனர். அவருள் ஜேஷ்டனான விகுக்ஷி என்பவன் ஆத்மஞான குணமுள்ளவனாயிருந்தனன். இரண்டாவது புத்திரனாகிய நாபாகனுக்கு அம்பரீஷனென்பவன் பிறந்தனன். அவன் பராக்கிரமசாலியாயும் தர்மஜ்ஞனாயும் பிரஜைகளைரக்ஷிப்பதில் ஆவலுள்ளவனாயுமிருந்தனன். மூன்றாவது புத்திரனாகிய திருஷ்டனுக்குத் தார்ஷ்டகனென்பவன்பிறந்தனன். அவன் பரப்பிரமஸ்வரூப தியானத்திலும் தவயோகத்திலும் ஆவலுள்ளவனாயும் யுத்தத்திலஞ்சுகின்றவனாயு மிருந்தனன். நான்காவது பிள்ளையாகிய சரியாதிக்கு ஆனர்த்தன் என்னும் புத்திரனும் ரூபலாவண்ணியத்தோடுகூடின சுகன்னியென்கிற புத்திரியும் பிறந்தனர். சுகன்னி என்னும் புத்திரியை அந்தகனான சவனென்னு முநிவருக்குக் கொடுத்துவிட்டான். அம்முநிவன் அந்தகனாயினும் நல்லொழுக்க முதலிய குணவிசேடங்களால் சூரியன் புத்திரர்களான அஸ்வனி தேவதைகளால் அழகான கண்களைப் பெற்றவனாயினனென்று

சொல்லும்போது, ஜனமேஜயன், ஓ பிராமணசிரேஷ்டரே! தேவரீர் சொல்லிவந்த வம்சாவளியில் எனக்குண்டாகிய ஓர் சந்தேகத்தை யொழிக்கவேண்டும். அழகான கண்ணுள்ள புத்திரியைக் குருட்டு முநிவனுக்கு அரசன்ஏன்கொடுத்தனன்? குரூபியாயும்குணமில்லாத வளாயும் ஸ்திரீலக்ஷண மில்லாதவளாயும் இருக்கின்ற பெண்ணைக் குருடனுக்குக்கொடுத்தொழிக்கலாம். அதனால் தோஷமில்லை. அந்த ராசன் அம்முநிவனைக் குருடனென்று நன்றாயறிந்தவனாயிருந்தும், அந்தஅழகான பெண்ணை எப்படி அவனுக்குக் கொடுக்கத்துணிந்தான்? இதனைச் சொல்லுவீரென்று வினவ, வியாசமுநிவர் அப்பா! இந்த விசித்திரமான கதையைக் கேட்பாயாக.அந்தப்பெண்ணினுடைய தந்தையான சரியாதினென்னும் அரசனுக்கு நாலாயிரம் பத்தினிகள். அவர்களனைவரும் நல்லரூபமுள்ளவர்களாயும் நல்லலக்ஷணமுள்ளவர்களாயும் அரசனிடத்தில் மிக்க பிரீதியுள்ளவராயுமிருந்தனர். அந்தநாலாயிரவருக்கும் பெண்குழந்தை இப்பெண்ணொருத்திதான். ஆனபடியினால் அப்பெண் தாய்மார்களுக்கும் தந்தைக்கும் அதிகமான பிரியமுடையவளா யிருந்தனள். இவள்செய்தி யிங்ஙனமிருக்க, அந்த அரசனுடைய நகரத்துக்குச் சமீபத்தில் அன்னப்பட்சிமுதலிய சிறந்தபட்சிகளால் சூழப்பெற்றதாயும் வண்டுகளாலொருபொழுது மொழியாது மொய்த்திருக்கும் மதுப்பெருக்கமுடைய தாமரைமுதலிய மலர்கள் நிறைந்துள்ளதாயும் நாற்பக்கங்களிலும் தேவதாரு புன்னாகம் அசோகுமுதலிய விருக்ஷ வகைகளால் அடர்ந்து சூரியவெப்பத்தை யொழித்து எப்பொழுதுங் குளிர்ச்சியைச் செய்வதாயுமுள்ள ஓர்தடாகம் பிரமலோகத்திலுள்ள மானதசரசினுஞ் சிறந்திருந்தது. அதன்சிறப்பை இப்பொழுது என்னால் சொல்லமுடியாது. அத்தடாகத்தருகில் கோகிலங்களுடைய வொலிகளும் மயில்களுடைய சப்தங்களும் நீங்காதிருக்கப்பெற்ற வோர் பொழிலொன்றுளது. அங்கோர் பரிசுத்தமானவிடத்தில் பார்க்கவரென்னும் ஓர் முநிவர் சாந்தராய் த்ருடாசனத்திலிருந்து மௌனியாய் வாயுபக்ஷணத்தையு மொழித்து இந்திரியவிஷயசம்பந்தங்களையுமகற்றி தீர்த்தபானஞ் செய்வதையும்விட்டுப் பராசத்தியாகிய அம்பிகையைத் தியானித்துக்கொண்டு நிர்விகல்ப சமாதியுக்தராய்த் தவஞ்செய்திருந்தனர். அவரது திருமேனி கொடி செடிமுதலியவற்றால் சூழப்பெற்று புற்றுருவமாய்விட்டது. இம்

முனிவரிங்ஙனமிருக்க, அப்பொழிலின்கண் சரியாதியரசன் தன்னுடைய ஸ்திரீகளோடு தன்பெண்ணையு மழைத்துக்கொண்டு வந்து அந்தத்தாமரைத் தடாகத்தில் தன்னுடைய பத்தினிமார்களுடன் கிரீடித்துக் கொண்டிருந்தனன். அந்தச்சமயத்தில் அவனுடைய சுகன்னியென்னும்பெண் தோழிகளோடுகூடி அவ்வனத்துட்சென்று திரிந்து புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு புற்றுருவமாயிருக்கின்ற பார்க்கவமுனிவரிடம் வந்தனள், விளையாட்டிலாசையுள்ள அப்பெண் முனிவர் புற்றுருவமாயிருப்பதையறியாதவளாய் இதுவென்னபுற்றென் றதிசயித்து அதன் சமீபத்திற்சென்று பார்க்கும்போது அப்புற்றின்சந்தில் மின் மினிப்பூச்சியைப்போலொரு சிறிய வொளி தோன்றிற்று. இதுவென்ன மின்னுகின்றதேயென்று கூர்மையான முள்ளொன்றெடுத்துக் குத்தி அதைப்பார்த்துக் கொண்டிருந்தனள். அவ்வொளி அவரது கண்ணுதலால் அதிற்றைத்தது. தைக்கவே அவர் தமது யோகநிலையைவிட்டவராய் இச்செய்கை செய்தார் இங்கு யாவரென்றுபார்க்க இப்பெண்ணைக் கண்டனர். அந்தோ! ஓ பெண்ணே! நீயேனிப்படிச் செய்கின்றாய்? புற்றைச் சிதைவுசெய்யாது தூரமா யோடிப்போய்விடென் றம்முனிவர் கூறவும் அச்சொல்லை இவள் நன்றாய்க்கவனியாமல் அவர்கண்ணை நன்றாய்க் குத்திவிட்டனள். பின்னர் முனிவரென்றுணர்ந்து அப்புறமோடிப்போய் நாமென்ன காரியஞ்செய்துவிட்டோம்; இதற்காக நமக்கென்ன தீங்கு வருமோவென்று சந்தேகித்திருந்தனள்.

இவளிங்ஙனமிருக்க, அவளால் குத்தப்பட்ட கண்ணுள்ள அந்தருஷி அதிகதுன்பமுள்ளவராய்க் கோபத்தோடுங்கூடி கண்ணோயினால் மிகவும் பீடிக்கப்பட்டு மகாசங்கடத்தை யனுபவிப்பவராயினர். அந்தக்ஷணத்திலேயே அரசனுக்கும் அவனுடைய மனைவிகள் முதலிய சகல பரிசனங்களுக்கும் மலசலங்கள் வெளிவராமல் பெருந்துன்பம் விளைந்தது. ஏனையோரைப் பார்க்கிலும் அரசனுக்கும் மந்திரிக்கும் அத்துன்பம் மேன்மேற் பெருகிற்று. இருவருந் துன்பப்பட்டிருக்குஞ் சமயத்தில் பத்தினிமார்களும் பரிஜனங்களும் அவர்களிடம்வந்து தாங்கள் மலமூத்திரபந்தனையால் படும்பாட்டை அலறிக் கதறிக் கூறினார்கள். அக்கூக்குரலைக் கேட்டவரசன் இத்துக்கத்துக்குக் காரணம் யாதென்று சிந்தித்து இவ்விடத்

திலுள்ள பெரியோர்கட்கு யாதோவொரு தீங்கு நேரிட்டிருக்கவே ண்டுமென்றுலோசித்து யாவரையும்பார்த்து,இவ்விடத்தில் யார்யார் எவ்வெவ்விதமான பாவங்களைச் செய்தீர்களென்று கேட்க, அவருட்சிலர், ஓ அரசனே! குளத்திற்கு மேற்பாகத்திலுள்ளவோர் பொழிலின் மத்தியில் மகாதபசியான பார்க்கவமுனிவர் தீக்ஷணியமான தபஞ்செய்து கொண்டிருக்கிறார். அக்கினிபோல் ஜொலிக்கும் அம்முநிவரிடத்தில் எவனோ அபராதஞ்செய்து விட்டான். ஆதலால் நமக்கெல்லாம் இப்படிப்பட்ட சங்கடமுண்டாயிற்று. இது நிச்சயம். தபோவிருத்தராயும் வயோவிருத்தராயும் சிரேஷ்டராயுமிருக்கும் மகாத்மாவான அந்தருஷிக்கு அபராதஞ்செய்தவன் தெரிந்து செய்தானோ தெரியாமல் செய்தானோ அதன் பலன்தானிது.எந்தத் துஷ்டர்கள் அந்தருஷிக்கு விளையாட்டாக என்ன சங்கடத்தைச் செய்தார்களோ அது தெரியவில்லை. இங்குள்ள நாங்களெல்லாம் அம்முநிவருக்கு மனத்தினாலும் வாக்கினாலும் சரீரத்தினாலுமோர் தீங்குஞ்செய்தோ மல்லோமென்று கூறினர்.

இரண்டாம் அத்தியாயம்
சூரியவம்ச விஸ்தாரகதனம் முற்றிற்று.



சுலோகம் - (௬௫)
ஆ அத்தியாயம் உ-க்குச் சுலோகம் - (௧௦௪)

---

உ

லலாடநயனார்ச்சிதாயைநமঃ.

## மூன்றாம் அத்தியாயம்.

---

### சுகந்யாச்யவந விவாகம்.

சூதர்கூறுகின்றார். வியாசமுநிவர் அரசனைநோக்கி ஓ ஜனமேஜயனே!சரியாதிஎன்னும் அரசன்சேனைகளுட்சிலர்சொல்லியவார்த்தைகளைக்கேட்டு மீண்டும் யாவரையும்நோக்கி நல்லவார்த்தைகளாலும் கோபத்தினாலும் உண்மைவிளங்கக்கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது அவனது புத்திரியாகியசுகன்னிபரிசனங்களெல்லாம்மகாபாதைப் படுவதையும் தந்தையார் வயிற்றுச் சூலையால் வருத்தப்படுவதையும் பார்த்து ஆலோசித்தவளாய் அரசனிடம்வந்து ஓ தந்தையே!

நானிந்தவனத்தில் விளையாடிக்கொண்டிருக்கும்போது கொடிகளாற் சூழப்பட்ட இரண்டு சந்துள்ள ஓர் புற்றைக்கண்டேன். அதில் மின்மினிப் பூச்சியைப்போல் பிரகாசிக்கு மிரண்டொளிகண்டு இதுவென்னவென்றறியலாமென்றுமுள்ளெடுத்துக்குத்திப் பிடுங்கிப் பார்க்கும்போது அம்முள் ஈரமாயிருந்ததுமன்றி,அப்புற்றின் மத்தியிலிருந்து ஆஹாவென்றுஓர்சப்தமுமுண்டாயிற்று என்றந்தையே!இதுவென்னவென்று சந்தேகித்து ஆச்சரியமடைந்தேனேயன்றி அந்தப்புற்றிலிருந்த செந்து இன்னதென்று தெரிந்துகொள்ளாமல் வந்துவிட்டேனென்று கூறக்கேட்டவரசன் அதிசீக்கிரமாய்ப் புற்றிருக்கு மிடத்துக்குவந்து அப்புற்றினிடத்தில் தபோவிருத்தரான முனிவரைப்பார்த்து அந்தோ! அந்தோ!! என்றேங்கி அவரைச் சூழ்ந்திருந்தபுற்றை யுடைத்துவிட்டு அவரைநோக்கி சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து மிக்கவணக்கத்துடன் கைகூப்பிக்கொண்டு ஓ மஹாநுபாவரே! இங்கு விளையாடிக்கொண்டிருந்த எனது பாலை அறியாததன்மையால் குற்றத்தைத் தெரியாமற் செய்துவிட்டனள். ஓ பிரஹ்மசொரூபியே! அதைப்பொறுத்தருளல் வேண்டும். முனிவர்கள் கோபமில்லாதவர்களென்று யான் கேட்டிருக்கின்றேன். ஆதலால் நீர் மஹாமுனிவரா யிருக்கின்றபடியால் அதிபாலையான என்புத்திரிசெய்த குற்றத்தை க்ஷமிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அம்முனிவர் அவ்வரசன் வார்த்தையைக்கேட்டு இரக்கமுள்ளவராய் விநயத்தோடும் துக்கத்தோடுங் கூடியிருக்கிற ஓ அரசனே! நானெப்பொழுதும் அணுமாத்திரமுங் கோபங்கொள்ளுவதில்லை. இப்போது நான்படும் இப்பாட்டிலும் நான் கோபங்கொள்ளவில்லையென்பது நீயே தெரிந்துகொள்ளலாம். நான் உன் பெண்ணைச் சபித்தேனா? ஒருகுற்றமுஞ்செய்யாத நமக்கு இப்பாதையேனுண்டாயிற்றென்று அந்தப்பாவத்தையெண்ணி இப்போது நான் துக்கப்படுகின்றேன். ஓ அரசனே! நானுனது பெண்ணுக்குச் சாபமிடாவிடினும் நான் தேவி பக்தனாதலால் உங்களுக்குத் தீங்குநேர்ந்தது. தேவிபக்தனிடத்தில் குற்றஞ்செய்தவர் சகலசுகத்தையுங் கொடுக்கத்தக்க சிவனைச் சரணமடைந்தாலுஞ் சுகமடையார். ஆகலான், உங்கள் வருத்தத்துக்கு நான் காரணனல்லன். ஓ அரசனே! கண்ணில்லாத கிழவனாகிய நான் என்செய்கேன். அந்தகனாய்ப்போன வெனக்கு யார்சிஸ்ரூஷை செய்வாரென்று வருந்தினர். அவரது

துயரமொழியைக்கேட்டஅரசன் ஓ முநிபுங்கவரே! நீர்நமக்கு யாரு மில்லையே என்று துக்கிக்கவேண்டாம். நான் அநேகபரிசாரகர்களை உமக்குவேண்டிய பணிகள்செய்ய நியமனஞ்செய்கிறேன். நீர்மாத்தி ரம்இச்சிறியபிழையைப்பொறுத்துஎங்களுடையதுன்பத்தைப்போ க்கவேண்டுமென்று பிரார்த்திக்க, அம்முநிவர் ஓ அரசனே! அநே கம் பரிசாரகர்களை நீ எனக்குவைத்தாலும்நான் தவஞ்செய்யவேண் டுமே கண்ணில்லாமலெப்படி செய்வேன். அன்றியும் உன்னுடைய சேவகர்கள் என்னுடைய இஷ்டத்தையறிந்து செய்வார்களா? அடி மையாட்களுக் கன்புண்டாகுமா? ஓ அரசனே! நீ என்னைப் பொ றுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்பதும் எனக்கு வேண்டிய சுகத்தைச்செய்ய வெண்ணியிருப்பது முண்மையானால் உனதுஅரு மந்த செல்வியாகிய புத்திரியை யெனக்குத்தருவாய். நா னதனல் சந்தோஷித்தனய்த் திருப்தியடைந்து தவஞ்செய்வேன். அவளெ னக்குச் செய்யவேண்டிய பணிகளைக் காலமறிந்து செய்வாள். நான் சொல்லியபடி நீயாலோசித்துச் செய்யும்பட்சத்தில் நானுஞ்சந்தோ ஷத்தையடைவேன். நீயுஞ் சேனைகளுடன் சந்தோஷமடைவாய். இதிற் சந்தேகங்கொள்ளாது உனது கன்னிகையைத் தானஞ்செய் வையாயின் அவளுக்கு யாதொரு குறையும் உலகில் தூஷணமு முண்டாகமாட்டாவென்று சொல்லவும், அரசன் சிந்தாகுலனய் கொடுக்கமாட்டேனென்றும் கொடுக்கிறேனென்றுஞ் சொல்லாமல் குருடராயும் கிழவராயும் குரூபியாயுமிருக்கும் இம்முநிவருக்கு தேவகன்னிகைபோலிருக்கும் நமது பெண்ணைக் கொடுத்து நா மெப்படி சுகமடைவோம். நம்முடையபெண்ணை இம்முநிவருக்குக் கொடுப்பது நம்முடையசுகத்தை யுத்தேசித்தேயன்றி அவளு டைய சுகத்தை யுத்தேசித்தல்லவே. தன்சுகத்திற்காக புத்திரியின் சம்சாரசுகத்தை எந்தப்பாவிதான் கெடுப்பான்? எந்த அறிவிலிதா னிவ்வாறெண்ணுவான். அந்தகராயும் விருத்தராயு மிருக்கும் இம் முநிவருக்கு நாமும் கொடுக்கத்துணிந்து அவளும் இவரைப்பர்த் தாவாக வடைவதற் கிசைவளாயின் பின்னர் காமபாணத்தால் பீடிக்கவருங் காலத்தில் அக்காலத்தை எப்படி கழிப்பாள்? பர்த்தா வென்று இவரை வைத்துக்கொண்டு யவ்வனகாலத்தில் காமத்தை யனுபவிப்பதற்கில்லாமற் போமாயின் அதனையொழிக்க இவளால் முடியுமா? அக்காலத்திலதனை யனுபவித்துப் பின்னரொழிக்கவே

ண்டுமானு லறிவாலொழிக்கலாம். அந்தோ! நம்முடையபெண் கண்ணில்லாத கிழவரைக் கணவனுகப் பெறுவாளாயின் யவ்வனகாலத்தில் விளையுங்காமத்தை யெவ்வாறு களையவல்லவளாவள். பூர்வத்தில் விருத்தராகிய கௌதமமுநிவரைக் கணவராகக்கொண்ட அகலிகையானவள் யவ்வனகாலத்தி லல்லவா இந்திரனுல் வஞ்சிக்கப்பட்ட வஞ்சனைக்குள்ளாய் அவனுல் காமசுகத்தை யனுபவித்தாள். அச்சுகத்தைக் கவுதமரால் அனுபவித்திருப்பாளாயின் அவ்விந்திரனுடைய வஞ்சனைக்குட்படுவளா? பின்னர் கிழவராகிய கவுதமர் அச்செயலறிந்து அவரைச் சபித்தனர்.

அந்தோ! அவர் சாபங்கொடுப்பதில் வல்லவ ராயினரேயன்றிக் காமசுகங் கொடுக்கவல்லவ ராயினுரில்லை யன்றே. அப்படிதானே இவர்கதியுமாமென் றெண்ணிநாமிப்பெண்ணை யிவருக்குக்கொடுக்கப்போகாது; நமக்குவந்திருக்குந் துன்பத்தை நாமேயனுபவிப்போமென்று நிச்சயித்துக்கொண்டு அம்முநிவருக் கொன்றுஞ்சொல்லாமல் தன்னரண்மனை போய்ச்சேர்ந்து மந்திரிகள்யாவரையுமழைத்து மகாதுக்கத்துடன் அவர்களைப் பார்த்து ஓ மந்திரிகளே! நானிப்பொழுது என்னசெய்வேன் நீங்கள்சொல்லுங்கள் அம்முநிவருக்குப் புத்திரியைக் கொடுத்துவிடவா? அல்லதுஇந்தத் துக்கத்தை யநுபவிக்கவா? இவற்றை நீங்களனைவரும் ஒன்றுசேர்ந்து யோசித்து எதுநன்மையோ அதனைச்சொல்லுங்களென் றரசன் கூற மந்திரிகள் ஓமகாராஜனே! இந்த மகா சங்கடத்துக்கு என்னவாலோசனைசெய்து எதைச்சொல்லுவோமென்று அவர்கள் மயங்கியிருக்கும்போது அந்தச் சுகன்னிகை யென்பவள் தந்தை சிந்தையோடு கூடியிருப்பதையும் மந்திரிகள் யாதொன்றும் சிந்திப்பதற்கில்லாமலிருப்பதையும் பார்த்து தந்தையின்சமீபத்தில்வந்துசிரித்துக் கொண்டே ஓ தந்தையே! எனக்காகவன்றோ நீரிப்பொழுது விசனப்படுகிறீர். விசனப்படவேண்டாம். என்னுல் கண்ணேயடைந் திருக்கிற முநிவரிடம் நான்போய் அவருக்காளாகவிருந்து அவரைச்சமாதானப்படுத்திச் சந்தோஷமுண்டாக்கி உங்களெல்லோருடைய கவலையுமொழிக்கின்றேன் நீங்களெல்லோருஞ்சுகமாயிருங்களென்றுகூறவே அரசன் அவளது அறிவிற்குவியந்து ஓ குழந்தாய்! காட்டில் கண்குருடாயிருக்கின்ற அக்கிழவரைப் பெரியோரென்றெண்ணி நீ பணிசெய்தால் மனதுக்குயாதொரு துன்பமுமில்லை. கணவராகக்கொ

ண்டு சிஸ்ரூஷைசெய்தால் அதுதுன்பந்தராமற்போமா? நீ அக்கிழவருக்கு எங்களுடையதுன்பத்தைக்கருதி சிஸ்ரூஷைசெய்கின்றேனென்று துணிந்து போவதற்குப்புறப்பட்டாலும் ரதிபோன்ற வுனக்கு அவராலென்ன சுகங்கிடைக்குமென்று நான்துணிந்திருப்பேன்? தந்தையானவன் தன்பெண்ணைச் சரீரத்திலிருக்கவேண்டிய யௌவனபலம் பந்துபலம் தனபலம் தானியபல முதலியவற்றையுடைய புருஷனுக்குக் கொடுக்க வேண்டுமேயன்றி இவையொன்று மில்லாத தரித்திரனுக்குக் கொடுக்கலாமா? ஓ என்செல்வியே உனது சௌந்தர்யமெங்கே காட்டிற்றிரியு மக்கிழவரெங்கே அவ்வந்தகக் கிழவருக்குத் தாமரைமலர் போலும் மலர்ந்திருக்குங் கண்ணைப்படைத்திருக்குமுன்னைக்கொடுத்துவுன்னைத் துன்பப்படுத்துவதைப்பார்க்கிலும் நானுமென்னுடையபரிஜனங்களுந்துன்புற்றுமரணமடைவதுசுகம். இதனாலெனக்குப் பாவமில்லை. உன்னை அக்கிழவருக்குக் கொடுப்பேனானால் அப்போதே யெனக்குப் பாவம்வருமென்பதிற் சந்தேகமில்லை. ஆகையால் என்னுயிரினுஞ் சிறந்தமகளே! இனி நீ எவ்வளவு சொன்னாலும் அக்குருடருக்குன்னை நான்கொடுக்க மாட்டேன். எனக்கு வந்திருக்குந்துன்பத்தைப்பற்றி நான்தைரியத்தை விடேன். நீ என்னிடத்திலேயே ஸ்திரமாயிருப்பாய். இதனால் இந்தத்தேகமும் ராஜ்ஜியமுமிருந்தாலு மிருக்கட்டும் போனாலும் போகட்டும். ஓ குழந்தாய்! அவ்வந்தகற்குநானுன்னைக் கொடுப்பதில்லை. இது நிச்சயமென்றான்.

அவன் வார்த்தையைக்கேட்ட சுகன்னி தன்தந்தையைப் பார்த்து நகைத்து ஓ அப்பா! நீ இவ்வாறு சொல்லுவது உனக்கடுத்ததன்று. நான்சொல்வதைக் கேட்பாயாக. என்விஷயத்திற் சிந்தனை கொள்ளவேண்டாம். என்னிமித்தமாய் சர்வஜனங்களுஞ்சுகமடைய என்னை இப்பொழுதே முநிவரிடம் கொண்டுபோய்விடு. நான் பக்தியோடு அம்மஹாபரிசுத்தரான முநிவருக்குவேண்டிய பணிகளைச்செய்து அவருக்குச் சந்தோஷத்தைவருவித்து அதனை நான் கண்டு மகிழ்வதாகிய வின்பத்தையனுபவிக்கத் துணிந்திருக்கின்றேன். அவரிருக்குமிடமோ யாருமில்லாத வாரணியம். அவரோகிழவர். நானோ வாலிபமுள்ள பருவமுடையவள் இப்பொழுது நான்கற்புநிலைமையைக் காப்பாற்றிக்கொள்வதற்கான முயற்சியைத்தேடிக்கொள்வேனேயன்றிகற்புநிலைமையைக்கெடுத்துக்கொள்

வதற்கான முயற்சியைச் செய்வேனென்று ஒருபோதும் நீர் நினையா தொழிவீர். என்மனமானது அற்பசுகவிஷயங்களில் அலையாது சுகமாகவிருக்கும் என்று அதிதீரத்துடன் சொல்லிய அவள்வார்த் தையை மந்திரிகளும் அரசனுங்கேட் டாச்சரியமு மானந்தமு மடைந்து அப்பெண்ணை அப்போதே அழைத்துக் கொண்டு முநிவரிடம் போய் தலைவணங்கி அவரை நோக்கி ஓ பிரபுவே! தே வரீர்சொல்லியபடி என்னுடைய பெண்ணை உமக்குத்தத்தஞ் செய் கிறேன் வாங்கிக்கொள்ளுமென்று அப்பெண்ணை வேண்டிய ஸ்ரீதன ங்களுடன் விவாகஞ்செய்து கொடுத்தான். சவனமுநிவர் கன்னி கையைமாத்திரம் அங்கீகரித்துக்கொண்டு சந்துஷ்டராய் ஏனைய ஸ்ரீதனங்களை அங்கீகாரஞ்செய்யாது அரசனுக்கு ஆசிபுகன்றனர். அக்கணமே சேனைகளுக்கெல்லாம் தேகோபாதிநீங்கிச்சுகமுண்டாக அதனை யரசன்கண்டு மிகமகிழ் வெய்தி முநிவரிடம் விடை பெற் றெழ, அவனது புத்திரி ஓ அண்ணு! என்னுடைய வஸ்திரங்களையும் பூஷணங்களையும்வாங்கிக்கொள்ளும் நான்முநிவருக்குரித்தாகிய மர வுரியும் கிருஷ்ணசனத்தையுந்தரித்து முநிபத்னியாவேன். இந்தப்பர் த்தாவை நான்மோசஞ் செய்யேன் அவருக்கு வேண்டிய இதத்தை யே செய்வேன். எனதுகாமசுகத்தை யெண்ணாது கற்பினால்வருஞ் சுகத்தையே எப்பொழுதும் நீங்காதசுகமென் றெண்ணுவேன். எனது கற்புநிலைமையால் முநிவருக்குப்புகழ்வருவதேயன்றி உனக் கும் மூன்றுலகத்திலும் பெரும் புகழுண்டாகும். அந்தகரானகிழ வருக்கு அழகான வயதுள்ள நமது பெண்ணைக் கொடுத்துவிட் டோமே இவள்நல்லொழுக்கத்தைக்காப்பாற்றுவாளோ காப்பாற்ற மாட்டாளோவெனச் சிந்திக்கவேண்டாம். அருந்ததி வசிட்டருக்கு எவ்வளவு தர்மபத்தினியா யின்றுமுலகில்தம்பதிகளுக்குக்கலியாண காலத்தில் காட்ட யெவ்வாறிருக்கின்றாளோ அவ்வாறு நானும் முநி வருக்கிருப்பேன். அநசூயை அத்திரி முநிவருக்குப்பத்தினியா யெ ப்படிபதிவிரதை யென்று பிரசித்திபெற்றாளோ அப்படிநான் பிர சித்திபெற்று சுகமாயிருப்பேன் நீ போய்வா வென்றாள். அரசன் அவள் வேண்டியவாறேமரவுரியையுங் கிருஷ்ணசனத்தையுங் கொடு க்க அவள் வாங்கித்தரித்துக்கொண்டு அணிந்திருக்கும் வஸ்திராபர ணங்களை அரசனிடங்கொடுத்து விட்டாள். அவளதுதவகோலத் தைக்கண்ட அரசன் பேதமைத்தன்மையால் கண்ணீர்விட்டழ

ஏனையமந்திரிகளும் அழுதழுது அறிவற்றபாவைபோல் யாதொரு தெளிவுமில்லாம லசைவற்றிருந்தனர். அப்பெண்யாவரையுந்தேற்றி அவரவர்களுக்குச் சொல்லவேண்டியபடி சொல்லி விடைகொடுத்த னள். அரசன்முதலியயாவரும் விடைபெற்றுத் தெய்வத்தை நாடி நகரம்போய்ச்சேர்ந்தனர்.

மூன்றும் அத்தியாயம்
சுகன்னியாஸவநவிவாகம் முற்றிற்று.



சுலோகம். (சுசஉ)
ஆ. அத்தியாயம் ௩-க்குச் சுலோகம் (கசுஅஉ)



உ
லக்ஷ்ம்யுஜ்ஜ்வலதிவ்யாங்கியைநமஃ.
நான்காம் அத்தியாயம்.



* சுகந்யாயாதேவபிஷஜோஸம்வாதம்.

சூதர் கூறுகின்றார். சவுனகாதி மகருஷிகாள்! வியாசபகவான் ஜனமேஜயனைநோக்கி சுகன்னியினுடைய கற்பிலக்கணத்தை நானென்னவென்று சொல்லப்போகிறேன். சரியாதி மகாராஜன் போனபின் அந்தச்சுகன்னி அந்தக்கிழவராகிய தனது பர்த்தாவுக்குச் செய்யவேண்டிய சிஸ்ருஷைக ளெல்லாஞ் சாஸ்திரவிதிப்படி தன் மனதிலெண்ணி அப்படியே செய்வதில் ஆவலுள்ளவளாய்த் தன் பர்த்தா எழுந்திருப்பதற்குமுன் தானெழுந்திருந்து சவுசத்துக்கு வேண்டிய ம்ருத்திகையும் சவுசபாத்திரத்தில் ஜலமுமெடுத்துக் கொண்டு பர்த்தாவைத் தனதுகைகொடுத்துத் தூரத்திற் கொண்டு போய்விட்டுத் தான் அவருக்கு மறைவாகத் தூரத்தினின்றிருந்து அவர் சவுசம் செய்துகொண்டபின்னர் அவரைப் பிடித்துக்கொண்டு மெல்ல மெல்ல நடத்தி ஆச்சிரமத்திற்கு அழைத்துவந்து சுகமான ஆசனத்திலிருக்கச்செய்து பாதங்களை மண்போட்டு ஜலத்தி

* சுகன்னிக்குந்தேவவைத்தியர்களுக்குஞ்சம்வாதம்.

னல் விதிப்படி தானே அலம்பி ஆசமனஞ்செய்வித்து சாஸ்திரோ க்தமான தந்தகாஷ்டங் கொடுத்துத் தந்ததாவனஞ் செய்துகொள் ளும்படிச் சொல்லிப் பின்னரவரைத் தந்தசுத்தி யாயிற்றுவென்று கேட்டுப் பரிசுத்தமான வுஷ்ணஜலத்தைக் கொண்டுவந்து வைத்து, பிரபுவே! உஷ்ணோதகங் கொண்டுவந்து வைத்திருக்கிறேன்; அதனை மந்திர பூர்வகமாய்ச் சுத்திசெய்து ஸ்நானஞ்செய்யலாமே என்று சொல்லி அவர் ஸ்நானஞ் செய்தபின்னர் சந்தியாகாலம் வந்துவிட் டது; இனி, பிராதஸ்ஸந்தி செய்யலா மென்பாள். அவ்வநுஷ்டான ங்க ளெல்லா முடிந்தபின்னர் தேவபூசை செய்யலாமென்று சொ ல்லி அதற்குவேண்டிய வுபகரணங்க ளெல்லாங் கொண்டுவந்து வைத்து விதிபிசகாமல் அதனை நடத்திவைப்பாள். அது முடிந்த பின்னர் அக்னிகாரியத்தை நடத்திவைப்பாள் அது முடிந்த பின்னர் ருசியான பழங்களையும் நானாவிதமான கிழங்குகளையுஞ் செந்நெல்லன்னத்தையுங் கொடுத்துண்பிப்பாள். உண்டபின்னர் கைகால்களையலம்பி ஆசமனதீர்த்தங்கொடுத்து ஆசமனஞ்செய்யச் செய்வாள்.பின்னர் மான்றோல் புலித்தோல் முதலியஆசனங்களிற் சுற்றிருக்கச்செய்வாள். பின்னர் கைகால்களைப்பிடித்துறங்கச் செய் வாள்.அவருறங்கியபின்னர்,தன்சரீரத்துக்குச்சாதனமானகனிவகை களைப்புசித்து அதிசீக்கிரமாகக்கணவனிடம்வந்துஅவருறங்கியெழு ந்திருப்பதைப்பார்த்து மிக்கவன்புடன் சமீபத்திலிருந்து, ஓ பிரபு வே! இப்போது என்னசெய்யவேண்டுமோ அதனைச் சொல்லுமெ ன்று விநயத்துடன் கேட்டுப்பாதங்களைப் பிடிக்கவிரும்பினால் அப் படிச்செய்வாள். அக்காலத்தில் சிவசரித்திரங்களையும் பதிவிரதா தருமங்களையுங் கேட்பாள். பின்னர் சாயங்காலஞ் செய்யவேண் டிய ஹோமமுதலியவைகளை முடிக்கச்செய்து ம்ருதுவாயும் ருசி யாயுமுள்ள பழவர்க்கங்களைக் கொடுத்து அதனதன் ருசிகளைச் சொல்லி யுண்பிப்பாள். பின்னரவருடைய வுத்திரவினால் மிகுந்த பழங்களைத் தானுண்டு அவருக்குச் சுகமான படுக்கையைவிரித்துச் சயனிக்கச்செய்து அவருறங்குமளவும் பாதங்களைப் பிடித்திருந்து அவரது பாதத்தடியில்தான் நித்திரைசெய்வாள். இதுவுமன்றி கிரீ ஷ்மகாலத்தில் அவருக்கு வெப்பந்தீரவிசிறியினாற் குளிர்ச்சியையுண் டாக்குவாள். ஏமந்தகாலத்தில் அவரெதிரில் கட்டைகளைக் கொ ளுத்தி அவரைச் சமீபத்திலிருக்கச்செய்து சுகமாயிருக்கிறதா

சுகமாயிருக்கிறதாவென்று அடிக்கடி கேட்பாள். இவ்வாறு அக்கன்னிகை முநிவரைப் பர்த்தாவாக வடைந்து பிரீதியோடும் கிரமத்தோடும் நித்யம் சிஸ்ரூஷை செய்வதோடு கிருகதாசீர்மத்துக்குரிய அக்னிபூஜையும் அதிதி பூஜையும் விதிப்படி நடத்திவருவாள். சில காலங் கழிந்தபின்னர், சூரியன் புத்திரர்களான அஸ்வனிதேவதைகள் விளையாடிக்கொண்டே அச் சவனமுநிவருடைய வாசீர்மத்துக்கு வந்தார்கள்.

அச்சமயத்தில் இக்கற்புடைய மாதுசிரோன்மணி ஸ்னானம் செய்து ஆச்சிரமத்தை நோக்கிப்போக, அந்த அஸ்விநிதேவதைகள் சமீபத்தில்வந்து மோகமடைந்தவர்களாய் மத்தகஜம்போல் நடக்கிற உத்தம மான ஒ ஸ்திரீயே, நாங்கள் சூரியனுடைய புத்திரர்கள். தேவகன்னிகையா யிருக்கின்ற வுன்னைப் பார்க்கவந்தோம். நீயாருடைய பெண்? உன்பர்த்தாயார்? இத்தடாகத்தில்நீ ஸ்நானஞ் செய்வதற்குச் சகாயமின்றியெப்படிவந்தாய் இரண்டாவது லக்ஷ்மிபோல்பிரகாசிக்கின்றநீ இன்னாளென்பதைஅறியவிரும்புகின்றோம் உண்மையைக் கூறுவாய். ம்ருதுவான உன்பாதங்கள் இவ்வனத்தில் நடக்கும்படிச்செய்த தெய்வத்தைப்பற்றிஎங்கள்மனதில் துக்கமுண்டாகின்றது. மெல்லிய சரீரமுள்ள நீ விமானத்தி லேறிக்கொண்டு போகத்தக்கவளாயிருக்க யாதுகாரணத்தால் காலினால் கீழேநடக்கிறாய்? மேலே போர்வையில்லாமல் இங்காட்டில் ஏன்திரிகிறாய்? நீசகிகளையுடையவளா யிருக்கவேண்டுமே; அவர்கள் உனக்குச் சிஸ்ரூஷைசெய்யாம லிருப்பதற்குக் காரணமென்னை? நீ ராஜஸ்திரியா? அப்சரஸ்திரியா? உண்மையைக் கூறுவாய். உன்னுடைய பாக்யத்தையும் உன்னைப்பெற்ற தாய் தந்தையர்களுடைய புண்ணியத்தையும் உன்பர்த்தாவினுடைய பாக்கியத்தையும் நாங்கள் சொல்லுவதற்குச் சமர்த்தரல்லர். ஓ அழகான கண்ணுள்ள பெண்ணே! உனது கால்நிலவப் பெற்ற இப்பூமி தெய்வலோகத்திலு மதிகபெருமையுள்ளது. உனது கால்நடையினால் இப்பூமி பரிசுத்தமாய் விட்டது. உன்னுடைய பேரழகைக்காட்டிலிருக்கு மிருகங்களும் பட்சிகள் முதலிய சகல ஜெந்துக்களுங் கண்டு உன்னையே பார்க்கின்றன. நாங்களுன்னை அதிகமாய் ஸ்தோத்திரஞ் செய்ததுபோதும் நீ உன்னுடைய வுண்மையைக்கூறுவாய். உன்னுடைய தகப்பனார் யார்? பர்த்தாயார்? அவர்களைப் பார்க்க எங்களுக்குஆசையிருக்கின்

றது. ஓ அரசனே! இவ்வாறு அவ்விருவருங் கூறியவார்த்தைகளை அவள்கேட்டு நாணமுடையவளாய், ஓ அஸ்வனிதேவதைகளே! என்னைச் சரியாதியின் புத்திரியாகவும் அவ்வரசனால் சவன முனிவருக்கு மனைவியாகக் கொடுக்கப்பட்டவளாகவும் பதிவிரதா தருமத்தில் தவறாதவளாகவும் தெரிந்து கொள்ளுங்கள். ஆனால் எனது பர்த்தா தபசியாயும் விருத்தராயும் அந்தகராயுமுள்ளவராயிருப்பதால் இரவும்பகலும் அவருடைய சிச்ருஷை செய்து கொண்டிருக்கிறேன். நீங்கள்யார்? எதற்காக நீங்களிங்கு வந்தீர்கள்? நீங்கள் புண்ணியசாலிகளாகக் காணப்படுகின்றபடியால் எனது பர்த்தாவினுடைய ஆஸ்ரமத்திற்கு வர மனம்விரும்புகின்றது. வந்தாலவ்வாச்சிரமம் பரிசுத்தமடையுமென்றாள்.

அவ்வார்த்தையைக் கேட்ட அஸ்வனிதேவதைகள், ஓ சுந்தரவதியே! உன்தந்தை அக்கிழவருக்கு உன்னை என்ன காரணத்தினால் கொடுத்தனரோ? அதனைச்சொல்வாய். இவ்விருளடர்ந்தகாட்டுப்பிரதேசத்தில் மேகத்திற் காணப்படுமின்னல்போல் பிரகாசிக்கின்ற உனக்குச் சமானமான ஸ்திரீதேவதையை நாங்கள்பார்த்ததேயில்லை. நீ திவ்யமான ஆபரணத்திற்கும் வஸ்திரத்திற்குந்தகுந்தவளேயன்றி மான்றோலைத்தரித்துக்கொண்டு வெற்றுடம்பாயிருத்தற்குத் தகுந்தவளல்லை. உன்னை இவ்வனத்தில் குருடனாயும் கிழவனாயு மிருக்கிறவனுக்குப் பத்தினியாக்கி அவனுக்கு வேண்டிய வேலையைச் செய்யச்செய்து வருத்தப்படுத்தும் தெய்வத்தின் சேட்டையை நாங்களென்னென்று சொல்லுவோம். நிர்த்தஞ்செய்வதுபோலும் நடக்கும் நடைகற்ற பண்டிதையாகி நீ இக்கிழவனைப் பர்த்தாவாகவரித்து எவ்வனத்தைப்பிரகாசிக்காமற் செய்து விட்டனையே! இனி மன்மதனால் விடப்படுவனவாகியபாணங்கள் உன்மேற்படுமா? குருடனாயுங் கிழவனாயுமிருக்கின்ற அவன் மேற்படுமா? அதனை நீயே யோசித்துப்பார்ப்பாய். கிழவன்மேற் பாணம் படப்போகிறதுமில்லை; அவன் வருத்தப் படப்போகிறதுமில்லை. உன்மேற்படும்பாணங்கட்கு நீஎன்செய்யப்போகின்றாய்? அது வுன்மேற்படாதொழியுமானால் நீ துன்பப்படா தொழிவை. எவ்வனமுடையவுனக்கு விருத்தனாகிய குருடனைப்பர்த்தாவாக்கி மேன்மேலும் துன்பம் பெருகச் செய்த அந்தப்பிரமாவின் புத்தி விசாலத்தை நாங்களென்ன வென்று சொல்வோம். காட்டில் வசிப்பதும் கிருஷ்ணசன

த்தைத் தரிப்பதும் உனக்குத் தகுதி யன்றென்று இக்கிழவனைவிடு வையாயின், இவ்வேடமு முன்னை விட்டோடிப் போம். ஆதலால் எங்களிருவரில் ஒருவனைச் சாவதானமாக வாலோசித்துப் பர்த்தா வாகச் செய்து கொள்வாய். பாக்கியஹீனனையும் போஷணை ரக்ஷணை யென்னு மிரண்டும் உன்னால் செய்யவேண்டிய வனையுமிருக்கிற முனி யை விடுவதற்கு என்ன யோசனை யிருக்கிறது? நாங்கள் சொல்லிய படி எங்க ளிருவரில் ஒருவனைப் பர்த்தாவாக நீ கொள்ளுகிறபட்ச த்தில், நந்தன வனத்திலும் சைத்திரத வனத்திலும் வேடிக்கையா ய் விளையாடலாம். இந்தக் குருட்டுக்கிழவனோ டுனக்கென்ன விளை யாட்டிருக்கிறது? ஒருநாள் முழுவதும் கிரீடாவிநோதத்துக் கிட மில்லாமல் வேலைசெய்வது ஏனைய ஸ்திரீகளுக்குச் சொன்னாலுஞ் சொல்லலாம், ராஜபுத்திரியா யிருக்கின்ற நீ வேலைசெய்து தொலைக்க வேண்டிய காரணமென்ன? ஆனால் நீ ராஜக்கிரீடையோடு சமு சாரக்கிரீடைகளையு மறிந்திருக்கிறாய்; இது ஆச்சரியமே. இந்த மாநுட சஞ்சாரமில்லாத காட்டில்யாதொரு பாக்கியானுபவமு மில் லாமல் காலத்தை யெப்படி கழிப்பாயென்பதை யெண்ணினால் கவலை யுண்டாகின்றது.

என்றிவ்வண்ணம் கிழவனாகிய முனிவனைப் போகத்துக்குரிய னல்லனென்று பலமுறை இழிவுரையால் இகழ்ந்தும் போகத் துக்குரியவர்கள் நாங்களே யென்று தங்களைப்புகழ்ந்து கொண் டாடிக் கூவியும் தங்க ளபிப்பிராயத்தை வெளிப்படுத்தி வந்தனர்.

நான்காம் அத்தியாயம்

சுகன்னியாயாதேவபிஷஜோசம்வாதம் முற்றிற்று.

சுலோகம்-(நிரு,௨) ஆ அத்தியாயம் ச-க்குச் சுலோகம்-(உஉச௨.)



உ

லக்ஷகோட்யண்டநாயிகாயைநமஃ

## ஐந்தாம் அத்தியாயம்.

## * சவநஸ்யபவ்வனப் பிராப்தியாதிகதனம்.

வியாசர்கூறுகின்றார். ஓ ஜனமேஜயனே! பர்த்தாவைநிந்தித்துக் கூறும்அவர்களுடைய வார்த்தையை இராஜபுத்திரிகேட்டு நடுங்கிப்

* சவநருக்கு யவ்வனமுதலாயினவை யுண்டான சரிதம்.

பின்னர் தைரியம் பண்ணிக்கொண்டு, ஓ தேவர்களே! சூரியமூர்த்தியி னுடைய புத்திரர்களாயும், தேவர்களால் புகழத்தக்கவர்களாயும் எல்லாமறிந்தவர்களாயும் இருக்கின்ற நீங்கள் நல்லொழுக்கமாகிய இல்லொழுக்கத்திலுள்ள என்விஷயத்தில் இப்படி சொல்லத்தகுந் தவர்களல்லராயிருந்தும் சொல்லவந்தது ஆச்சரியமே! ஓ தேவ சிரேஷ்டர்களே! மஹாயோகியாயிருக்கிற முனிவருக்குளன் தந்தையா ரால் தத்தஞ் செய்யப்பட்டவளாயிருக்கும் நான் விபசாரிகள்போல் இப்போது காமவிருப்பத்தால் வேறொருபுருடனைத் தேடிக்கொள் வேனு! உலகில் அவரவர்கள்செய்யும் கர்மங்களுக்குச்சாட்சியாய் நா டோறுந்தோன்றிவரும் சூரியபகவானுடைய புத்திரர்கள் நீவிரென் பது பொய்யோ! மெய்யாயின் என்னைவிபசாரகருமத்திற் செல்லத் தூண்டுவீர்களா! அசாரமான இந்தச்சமுசாரத்தில் விதித்திருக்குந் தருமத்தை விட்டால் சாரம் யாது. தருமமொன்றே சம்சாரத்தி லுள்ளசாரம். இனிநீங்கள் வந்தவழியேநாடிப்போகலாம். போகாது நின்று முன்போல் ஏதேனும் புகல்வீராயின் நான் இராஜபுத்திரியா யிருப்பதால் க்ஷாத்திரமும் எனதுபர்த்தாவினிடத்தில் பத்தியுள்ள வளாயிருப்பதால் தெய்வபலமு முள்ளேனாதலால் உங்கட்குச் சா பம்புகல்வேன். அதனையேற்க விருப்பமுளதேல் நிற்கலாமென்றாள்.

சுகன்னியின் வீரமொழியைக்கேட்ட அஸ்வனி தேவதைகள் ஆச்சரியமும் பயமுமுடையவர்களாய், அவளைப் பார்த்து, ஓ உத் தம ஸ்திரீயே! உனது பதிவிரதா தருமத்தினால் மிகவும் சந்தோஷ மடைந்தோம். இனி நீ எங்களிடத்தில் வேண்டியவற்றைக் கேட்க லாம். நாங்கள் தேவவயித்தியர்களாதலால் உனது பர்த்தாவைக் கண்ணுடையவராகவும், எங்களைப்போல் அழகுள்ளவராகவும் ஆக் குகின்றோம். ஆனால் அவருடன் நாங்களும்சேர்ந்து மூவராய் உன் னெதிரில் நிற்போம். அப்போது மூவரில் உனது பர்த்தாவுக்கு மாலையிட்டு வரித்துக்கொள்வா யென்றனர். அவர்கள் வார்த்தை யைக்கேட்ட சுகன்னி தன்புருஷனுக்கு நல்லசரீரமுண்டாவதில் சந் தோஷ முடையவளாயினும் பின்சொல்லிய ஓர் சூளால் சிறிதுகல க்கமடைந்தவளாய்த் தனதுநாயகனிடத்திற்சென்று அஸ்வனிதேவ தைகளைக் கண்டதுமுதல் நடந்தசெய்திகளையும் இறுதியில் தனக் குண்டான கவலையுங்கூறி, இது தேவமாயையாயிருப்பதால், தேவரீ ரது கட்டளையின்படி செய்கின்றேனென்றனள். முனிவர் அவை களைக்கேட்டு, ஓ பதிவிரதா சிரோன்மணியே! நீ ஒன்றற்கும் அஞ்

சற்க. அவர்களை யழைத்துக்கொண்டுவா. அவர்களிஷ்டப்படி செய்வோம். நீ ஒன்றுக்கும் ஆலோசனை செய்யவேண்டாம்; போய்வாவென்றனர்.

சுகன்னி, சவுனக முனிவரிடத்தில் விடைபெற்று அஸ்வனி தேவதைகள்பாற் சென்று, நீங்கள் சொல்லியவாறேசெய்யலாம், வாருங்களென்றழைக்க, அவர்களும் அம்முனிவர்பாற்சென்று அவரைக் கண்ணுற்றுச் சுகன்னியைப்பார்த்து,உனது நாயகராகிய இவர் நல்ல திவ்யரூபத்தையடைவதற்குஇந்தத்தீர்த்தத்தில்மூழ்கவேண்டுமென்றுஅவ்விடத்திலுள்ள தீர்த்தத்தைக்காட்ட,அம்முனிவர்அந்தக்ஷணமே அதில் மூழ்கினர்; அவர்களும் மூழ்கினர். பின்னர் மூவரும் சமமான பருவமுள்ளவர்களாய்த் திவ்யமான காந்தியுடன் திவ்ய குண்டல தாரிகளாய் வெளியேவந்து நின்று, சுகன்னியைப்பார்த்து, ஓ சுந்தரவதியே! எங்கள்மூவரில் உனக்கு யாரிடத்தில் அதிகப்பிரீதி தோன்றுகிறதோ அவரை நீ பர்த்தாவாக வரித்துக்கொள்ளலாமென்றனர். அவள் உருவத்திலும் அழகிலும் வயதிலும் கண்டத்வனியிலும் பூஷணாதி யலங்காரங்களிலும் மூவரும் சமானமாய்க் காணப்படுகின்றபடியால் நாம் யாரைக் கணவராகக் கண்டு மாலையிடுவது?நம்மிடத்தில் வந்தவர்கள் தேவவயித்தியர்களல்லவா! அவர்கள் எல்லாமாயையும் செய்யவல்லவர்கள்தானே! நாம் எந்தமாயையைக் கண்டோம்! இப்போது இந்திரஜாலவித்தையைக்காட்டி விட்டார்களே! என்று பலபலவா யெண்ணி மனங்கலங்கி,நாம் கணவரை யறிவதற்கில்லாமையால் நமக்கிப்போது வந்தது மரணமேயன்றி வேறில்லையென்று தேவியைத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினள்.

ஓ லோகமாதாவே! துக்கத்துக்காளாயிருக்கும் யான் உன்னைச் சரணமாகவடைந்தேன். எனது பதிவிரதா தருமத்தைக் காத்தருள்வாய். ஓ மஹாலக்ஷ்மியே! சங்கரார்த்தாங்க சரீரியே! ஓ விஷ்ணுப்பிரியே! ஓ மஹாசரஸ்வதியே! அறிவிலிகளுக்கு அறிவையும் அறிவுடையாராகிய ஞானிகளுக்கு மோக்ஷசுகத்தையுங் கொடுக்கின்றவளே! மூலப்பிரகிருதியும் நீயே! பரமபுருஷனும் நீயே! நற்குணமுடையார்க்குப் போதசுகத்தையும் தீக்குணமுடையார்க்கு துக்கபலத்தையுந் தருகின்றவளே! யோகிகளுக்குச் சித்திகளையும் வெற்றிகளையும் கீர்த்திகளையும் தருகின்ற நினது ஆச்சரியசெயலைக்கண்

டு உன்னைச்சரண மடைந்தேன். ஓ மாதாவே! என் பர்த்தாவைக் காட்டுவாய். நான் பர்த்தாவைக் காணமல் துயரக்கடலில் மூழ்கி யிருக்கின்றேன். என்னைத் தேவவைத்தியர்கள் வஞ்சித்து விட்ட னர். நான்யாரைப் பர்த்தாவாகக் கொள்வேன்? ஓ எல்லாமறிந்த தாயே! என்பதிவிரதா தருமத்தையறிந்து எனக்குப் பர்த்தாவைக் காட்டுவாய் என்று பிரார்த்திக்க, திரிபுரசுந்தரியாகிய மஹாதேவி அவளது பதிவிரதா தருமத்துக்கிரங்கினவளாய், அவளுடைய புத் திக்குத் தனது கணவனையறியும்படியான சக்தியைக் கொடுத்த னள். சுகன்னியானவள் அதனையறிந்தவளாய் மகிழ்ந்து தேவியை உள்ளத்துள்ளே பணிந்து போற்றிநின்று மூவருள் தனது நாயகனு கிய சவுனக முனிவருக்கே மாலையிட்டு வரித்துக்கொண்டனள்.

அஸ்வனிதேவதைகள் அவளது அருஞ்செயலைக்கண்டு பதிவிர தா தருமத்தை வியந்து அவளை யாசீர்வதித்து, தேவியினது கரு ணையாதலால் இதற்கு நாம் சந்தோஷிக்க வேண்டியதென்று ஆன ந்தமுற்று நாங்கள் போய் வருகிறோமென்று முனிவர்பால் விடை கேட்ப, அம்முனிவர் அவர்களைநோக்கி, ஓ மஹாவைத்தியர்களாகிய அஸ்வனிதேவதைகளே! நான் பதிவிரதா தருமத்திற் சிறந்த பத்னி யைப் பெற்று நாடோறுந் துன்பத்தையே யனுபவித்து வந்தேன். அப்படி யிருந்த வெனக்கு இன்பமுண்டாக என்னிடத்தி லிருந்த கிழத்தனத்தையும் குருட்டுத் தனத்தையும் போக்கி உங்களிடத்தி லுள்ள யவ்வனத்தையும் கண்ணொளியையும் அற்புதமான ஓர் சவு ந்தரியத்தையும் தந்தீர்கள். இவ்வரிய செயலுக்கு நான் ஏதேனும் பிரதியுபகாரம் உங்கட்குச் செய்யாதொழிவேனாயின் எனக்கு நன்றி மறத்தலாகிய ஓர் துரோகமும் உலகத்திற் பழிப்பும் உண்டாகும். அன்றியும் நான் உங்களுக்குக் கடன்காரனு மாய்விடுவேன்.

ஆதலால் அஃதெனக் குண்டாகாம லிருக்க உங்களுக்கு வே ண்டிய வற்றைக் கொடுக்க இச்சிக்கிறேன். உங்களால் விரும்பப் படுவதாகிய அப்பொருள் தேவர்களாலும் அசுரர்களாலும் அடை தற் கரிதான தாயினும் அதனை நான் கொடுக்கச் சித்தமா யிருக்கி றேன். நீங்கள் செய்த இந்த நல்லுபகாரத்திற்கு யான் செய்யப் போவது அவ்வள வரிதான தன்று. ஆதலால் விரைவில் உங்கள் மனதிலிருக்கிற கோரிக்கையைச் சொல்லுங்களென்று கூறவே அவ்

விருவர்களும் முனிவருடைய வார்த்தையைக் கேட்டு ஒருவருக்கொருவர் ஆலோசனை செய்து முனிவரை நோக்கி, ஓ முனிஸ்ரேஷ்டரே! எங்களுடைய தந்தையா ரனுக்கிரகத்தால் நாங்கள் வேண்டிய இஷ்டசித்தியைப் பெற்றவர்களாயிருந்தபோதிலும் ஓர்குறையுளது. அஃதாவது, எங்களுக்குத் தேவர்களுடன் சமமாய்ச் சோமபானங்கிடையாது. அஃதுண்டாக நாங்கள் அபேக்ஷித்திருக்கிறோம். ஏனெனில் பூர்வத்தில் மேருபர்வதத்தில் நடந்த ஓர் பிரமயாகத்தில் இந்திரன், வைத்தியர்களோடு சோமபானஞ் செய்யக்கூடாதென்று எங்களைத் தடுத்துவிட, நாங்கள் தடைபட்டு நின்றுவிட்டோம். நீர் தருமமறிந்தவ ராதலால் அந்தச்செய்தியை நன்றாயறிந்துகொண்டு எங்களுக்குச்சோமபானஞ் செய்விக்கச் சக்தி யுள்ளவரா யிருப்பீராயின் எங்களுக் கிஷ்டமான அந்தக்காரியத்தைச் செய்துவையும். இதுதான் நீர் எங்கட்குச் செய்யும் பிரதியுபகாரமென்றனர். முனிவர் அவர்களது மிருதுவான வார்த்தையைக் கேட்டு, ஓ வைத்தியர்களே! நான் சரியாதி மகாராஜனுடைய யாகத்தில் இந்திரன் பார்த்துக்கொண்டிருக்கும் போதே உங்களைச் சோமபானம் செய்விக்கிறேன். இது சத்தியமென்று அவர்களுக்கு விடைகொடுத்தனர். அவர்களும் தங்களிடம் போய்ச் சேர்ந்தனர். சவனமகாமுனிவரும் சுகன்னியை யழைத்துக்கொண்டு தன்னாஸ்ரமம் வந்துசேர்ந்தனர்.

ஐந்தாம் அத்தியாயம்

சவநஸ்யயவ்வனப்பிராப்தியாதிகதனம் முற்றிற்று.

சுலோகம் - (ரு௮௭)

ஆ அத்தியாயம் ரு - க்குச் சுலோகம் - (உ௮உ௭)



உ

கூஷல்யார்த்தாயை நமஃ

## ஆறாம் அத்தியாயம்.

### * சரியாதி யஜ்ஞம்.

ஜனமேஜயன் கூறுகின்றான். சவனமஹாமுனிவர் தேவவைத்தியர்களுக்குத் தாம்சொல்லியபடி சோமபானத்தைமுன்னேதடை

* சரியாதி என்னும் அரசன் யாகஞ்செய்தல்.

செய்த இந்திரன் தடைசெய்யாவண்ணங் காத்து அவர்களுக் குண்மையாய் நிறைவேற்றினரா? இந்திரனது பலத்திற்குமுன் மனிதரான முநிவருடையபலம் எம்மாத்திரம்? இவரால் அக்காரியம் சாதிக்கப்பட்டதென்றால் அது ஆச்சரியமல்லவா? ஆதலா லதனைச் சொல்லவேண்டுமெனப் பிரார்த்திக்க, வியாசமுநிவர் கூறுகின்றார்.

ஓ மஹாராஜனே! சவனமகாமுநிவர் யாகத்தை நடத்திய அற்புதசரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

அம்முநிவர் சுகன்னியுடன் இந்திரன் இந்திராணியோடு கூடி கிரீடித்திருப்பதுபோல் கிரீடித்துச் சுகமாய் வாழ்ந்து வருநாளில், இம்முநிவர் பத்தினியின் தாய் தனதுபர்த்தாவை நோக்கி மெய் நடுங்கிக் கண்ணீர்விட்டழுது கொண்டே, ஓ பிரபுவே! உன்னுடைய பெண்ணைக் குருடரான முநிவருக்குக்கொடுத்துக் காட்டில்விட்டுவந்தீரே! அவளிறந்துபோயினளோ அல்லது உயிரோடிருக்கின்றனளோ போய் பார்த்துவரலாகாதா? என்மகளாகிய அந்தச்சுகன்னி தானே வேண்டுமென்று அந்த முநிவரைப் பர்த்தாவாகக் கொண்டனள்? அவளிப்போது என்ன செய்துகொண் டிருக்கிறாளோ? பெண்ணினுடைய துக்கம் என்மனதில் கொளுத்திக்கொண் டிருக்கிறதே. காட்டில் தவசிகளைப்போல் தவசியா யிளைத்திருக்கிற என்பெண்ணை யழைத்துவாரும். அந்தகனுன பர்த்தாவைப்போல் தவசியா யிளைத்திருக்கும் என்பெண்ணை யழைத்துவாரும். அந்தகனுன பர்த்தாவைப்போல் மரவுரி உடுத்திக்கொண்டு எல்லா வாபரணங்களையு மிழந்தனளே; அவளை நான் பார்க்கவேண்டுமென்று புலம்பும்பொழுது, அரசன், அவளை நோக்கி, ஓ பெண்ணே! ஏன் புலம்புகின்றனை? புலம்புவதனுற் பயனென்? நம்முடைய பெண்ணையும் அந்த முநியையும் பார்க்க இப்போது நாமிருவரும் போவோமென்று சொல்லித் தேரின்மீதேறிக்கொண்டு சவனமகாமுநிவரின் ஆஸ்ரமம்வந்து சேர்ந்து, அங்கு; புதிய யௌவனத்தோடு தேவபுத்திரன்போல் பிரகாசிக்கின்ற முநிவரைப்பார்த்து ஆச்சரியமடைந்து, நமதுபெண் உலகமெல்லாம் நிந்திக்கத்தக்க காரியத்தைச் செய்துவிட்டாளேயென்று சிந்தித்து, இந்தப்பெண் அந்தக் குருட்டுமுநியைக் கொன்றுவிட்டு காமபீடிதையாய் வேறொருவனைப் பர்த்தாவாகச் செய்துகொண்டாள்போலும். அந்தோ! மன்மதன் சகிக்காதவனல்லவோ? மேலும் யௌவனகாலத்திற்கு ஆரம்பகாலமாகிய

இப்பருவத்தில் அவன் ஜெயிக்கத்தக்கவனுவனு? இந்தப்பெண் நம் முடைய குலத்திற்கு பெரியபாவத்தை யுண்டுசெய்து விட்டனளே. எவனுடைய பெண் துர்நடத்தை யுள்ளவளா யிருக்கின்றுளோ அவள் பிழைப்பைச் சுடவேண்டும். சர்வபாவங்களாலும் பிராணி களுக்குத்துக்கமுண்டாவதற்காகவே பெண்பிறக்கிருள். நம்முடைய காரியத்திற்காக நாமே அநுசிதமான காரியத்தைச் செய்துவிட் டோம். குருடனுயுங் கிழவனுயு மிருக்கிறவனுக்குப் பெண்ணைக் கொடுத்தோமே. இதைப்பார்க்கிலும் அநுசிதமென்ன விருக்கிறது? தகப்பன் பெண்ணைத் தகுந்த யோக்யனுக்குக் கொடுக்கவேண்டு மல்லவா? நாமென்னவேலை செய்தோம்? நமக்கென்ன பழிவந்தது? இப்படிப்பட்ட துர்நடத்தையுள்ள பெண்ணைக் கொல்லுவோமா னுல் ஸ்திரீஹத்திஎன்கிற பாதகம் நேரிடும்.மேலும்பெண்ணைக்கொல் லுவது இன்னும் விசேஷமான பாவத்துக்குக் காரணமாகு மன்ரே? பிரசித்தமான நம்முடைய வம்சத்தைப் பாபத்துக்குள்ளாகச் செ ய்துவைத்தோமே. இனி நம்முடைய பெண்ணினிடத்தில் சிநேகஞ் செய்வோமானுல் லோகாபவாதம் இன்னும் அதிகமாய் விளையுமன் ரே? என்னசெய்வோமென்று சிந்தாசமுத்திரத்தில் மூழ்கியிருக் கும்போது, தற்செயலாய் அவ்வாசிரமத்தி லுலாவிக்கொண்டிருக் குஞ் சுகன்னி தன் பிதாவைப்பார்த்து வேகமாயோடிவந்து மிக்க பிரீதியுடன் வார்த்தையாட வாரம்பித்து அவன் முகத்தைப் பார் த்தனள். அவனவளைப்பாராது முகத்தைத் தொங்கவிட்டு ஆகுலப் பட்டிருக்க, ஓ தந்தையே! என்ன ஆலோசனை செய்கிறீர்? நீர் முகத் தைத்தொங்கவிட்டிருக்கவேண்டியகாரணமென்னை? ஓபுருஷசிரேஷ் டரே! வாரும் வாரும்என்னுடைய பர்த்தா நல்லவயதுள்ளவராயும் தாமரைபோல்மலர்ந்த கண்ணுடையவராயும் பிரகாசித்துக்கொண் டிருக்கிருர். அவரைப்பார்த்து மகிழ்ந்து நமஸ்காரஞ் செய்யுமென் று புத்திரி கூறும் வார்த்தையைக் கேட்டுச் சரியாதிமகாராஜன்கோ பங்கொண்டு, புத்திரியை நோக்கிப் பெண்ணே! தபசியான அந்தக் குருட்டு முநி எங்கே? மதத்திருக்கிற இந்த யுவாவான புருஷன் யார்? எனக்குப் பெரிய சந்தேக முண்டாயிருக்கிறது. ஓ பாபிஷ் டியே! முநியைக் கொன்று விட்டனையா? காமத்தினுல் குலத்தை யெல்லாம் நாசஞ் செய்யவந்தநீ வேருெருவனைப் பர்த்தாவாகச் செய்து கொண்டனையோ? இந்த வாச்சிரமத்தி லிருக்கவேண்டிய

எனது மருகராகிய முனிவரைக் காணுமலிருக்கிறேனல்லவா? வியபி சாரி செய்யும் பாவத்தை நீ செய்து விட்டனையல்லவா? ஓ துர்நடத்தையுள்ளவளே! முனிவரைக் காணுமல் இந்த யௌவன புருடனைக் கண்டு துக்க சமுத்திரத்தில் மூழ்கிப்போய் விட்டேனேயென்று தந்தை சொல்லும்பொழுது, அந்தப் பெண் சிரித்துக்கொண்டே தந்தையைக் கையிற் பிடித்துக்கொண்டு பர்த்தாவிடத்தில் கொண்டுபோய் விட்டு இவரைத்தானே நீர்கண்டு எண்ணுததெல்லா மெண்ணி என்னை வெறுத்தீர். ஓ தந்தையே! இவர்தான் உமதுமருகரான சவனமகாமுனிவர் அதிற் சந்தேகமில்லை. அஸ்வனி தேவதைகள் கருணையினுல் இந்த அழகையும் யவ்வனத்தையும் கண்ணையுந் தந்துபோயினர்.அவர்களால் இவ்வாறு நடக்கப்பெற்றது தெய்வத்தின் செயலென் றெண்ணக்கடவீர். உமது பெண்ணுன நான் நீரெண்ணியபடி அப்பாவத்தைச்செய்தவளல்லள். நீரிந்தரூபத்தைப் பார்த்துச் சந்தேகமடைகிறீர். அதனை அம்மகாமுனியை நமஸ்கரித்துக்கேட்பீராயின் பிறகு அவரே நான்சொல்லிய காரணத்தை விஸ்தாரமாகச் சொல்லுவரென்று சொல்ல, ஒருவாறு நம்பிக்கையுண்டாய்ப் புத்திரியின் வார்த்தைப்படி முனிவரை நமஸ்கரித்துப் பிரீதியோடு கேட்கத் தொடங்கினுன்.

ஓ பார்க்கவமுனிவரே! உமக்கு எப்படி இக்கண்கள் வந்தன? உம்முடைய கிழத்தனம் எப்படிப் போயிற்று? இவ்விருத்தாந்தத்தைத் தகுந்தபடி சொல்லும்.ஓ முனிவரே!சுந்தரத்தில்மிகுந்திருக்கும் உம்மைக் காணவே வருத்தத்தோடு கூடின சம்சயம் எனக்குண்டாயிற்று. ஓ பிராஹ்மண சிரேஷ்டரே! நீரொன்றையும் ஒளிக்காமற் சொல்லுவீராயின் நானதனைக் கேட்டுச் சம்சயம் தெளிந்து சுகத்தையடைவேனென்றனன். சவனமுனிவர் கூறுகின்ருர். தேவ வைத்தியர்களாகிய அஸ்வனி தேவதைகள் தெய்வகதியாக இவ்விடம்வர அவர்களை யுனது பெண் தனது பதிவிரதாதருமத்தால்வென்று என்னிடம்அழைத்துவந்துஎன்னைக்காட்ட அவர்கள் என்னைப்பார்த்துக் கூறியபடி நான்நீரில் மூழ்கியெழுந்திருக்கும்போது இவ்வரியவடிவத்தைப் பெறலாயினேனென்று நடந்த வரலாறெல்லாம் விடாமற் சொல்லிப்பின்னர், ஓ அரசனே!நான் அவர்களுக்குக்கைம்மாருக ஓர் வரங்கொடுத்திருக்கின்றேன். அஃதென்னையெனின், உம்முடைய யாகத்தில் அவர்கட்குச்சோமபானஞ்செய்விக்கிறேனென்றுசொன்

னேன். அவர்களுடைய சகாயத்தால் நானிப்போது நல்ல கண்களை யும் நல்ல யௌவனத்தையுமடைந்து சுகமாயிருக்கிறேன். இனி நீர் மனக்கவலையை விட்டு ஆசனத்தில் நன்றாயுட்காருமென்று சொல்ல வே, அரசன் தன்மனைவியோடு சமீபத்தி லுட்கார்ந்து பெண்ணையும் பிள்ளையையும்பார்த்து அதுகாறு மடைந்திருந்த கவலையெல்லாமொ ழியப்பெற்று ஆவலுடன் சந்தோஷசித்தர்களாய் மகாத்மாவான முநிவரோடு சுகமான சில கதைகளைச் சொல்லிக்கொண்டிருக்க, முநிவரும் அரசனை மிகவுஞ்சந்தோஷப்படுத்தி நீர் சோமயாகஞ்செ ய்யவேண்டும்;அந்தயாகத்தை நான் செய்விக்கிறேன்.ஆகலான் அத ற்கு வேண்டிய திரவியங்களைச் சேர்ப்பியும். நான் பிரதிக்ஞை செய்துகொடுத்தபடி இருவரையும் யாகத்தில் சோமபானஞ் செய் விக்கிறேன். நீர் நிச்சயமாய்ச் செய்யவேண்டும். அவர்களிடத்தில் கோபமுடையவனு யிருக்கிற இந்திரனை எனது தேஜோபலத்தினால் தடைசெய்து விடுகிறேன். இதிற் சந்தேகமில்லை யென்றனர். அர சன் அதைக்கேட்டு மகாசந்தோஷமடைந்து அப்படியே செய்வோ மென்று அங்கீகரித்து அவரைக் கொண்டாடித் தன்மனைவியுடன் தன்பட்டணத்திற்குப் பிரயாணப்பட்டு முநிவரையும் விட்டுப் போ வதற்கு மனமில்லாமல் அவரது கையைப்பற்றிக்கொண்டு சாவதா னமாய்ப் பேசிக்கொண்டே வீடுபோய்ச்சேர்ந்தான். சின்னாள் கழி த்து ஓர்சுபதினத்தில் சர்வைஸ்வரியமுள்ள சரியாதிமகாராஜன்யாக சாலை யேற்படுத்திப் பூஜ்யர்களான வசிஷ்டர் முதலிய முநிவர்களை வரவழைத்துச் சவனமகாமுநிவரால் யாகஞ்செய்யத் தொடங்கி னான். அந்தப் பெரிய யாகத்தில் இந்திரன்முதலிய சகலமான தே வர்களும் வந்துசேர்ந்தனர். அஸ்வனிதேவதைகளும் சோமபா னஞ் செய்வதற்காக வந்துசேர்ந்தனர். இந்திரனோ அஸ்வனிதேவ தைகளாகிய இருவரையும் பார்த்துச் சந்தேகப்பட்டு, இவர்கள் எதற் காக இங்கு வந்தார்களென்று எல்லாத் தேவர்களையும் பார்த்து, வைத்தியஞ் செய்கிறவர்கள் சோமபானஞ் செய்யத்தகாதவர்களல் லவா? யாரிவ்விட மிவர்களை வரவழைத்தார்கள்? நீங்களேதேனு மறிவீர்களாவென்றுகேட்டான்.அவர்களெல்லோருங்காரணத்தைச் சொல்லாதிருந்தனர். பிறகு சவனமகாமுநிவர் அஸ்வனிதேவதைக ளிருவருக்கும் பாகம்பிரித்துச் சோமரஸத்தையெடுத்தார்.இந்திரன் இவர்களுக்குப் பாகம் கொடுக்கவேண்டியதில்லை. இவர்களிதற்குத்

தகுந்தவர்களல்லவென்று தடைசெய்தான். செய்யவே, ஏனிவர்கள் சோமபானஞ் செய்யத்தகுந்தவர்களாகார்? அந்தக் காரணத்தை யுண்மையாகச் சொல்லுவாய். ஓ தேவசிரேஷ்டனே! இவர்கள் வைப்பாட்டிக்குப் பிறந்தவர்களல்லவே? சாக்ஷாத் சூரியனுடைய தர்மபத்தினிக்குப் பிறந்தவர்களல்லவா? அவர்களைநீஏன் தடைசெய்கிறாய்? எந்தத்தோஷத்தினால் சோமபானத்துக்குத் தகுந்தவர்களல்லவென்கிறாய்? அதனை எல்லாத்தேவர்களுஞ் சேர்ந்து நிச்சயஞ் செய்யவேண்டும். நானவர்களிருவரையும் சோமபானஞ்செய்விக்கவே எனது மாமனாகிய அரசனைத் தூண்டி இந்தயாகத்தை நடத்திவைக்கிறேன். இப்போது நான் சொல்லும்வார்த்தை யுண்மையானது. ஓ இந்திரனே! எனக்கிவர்கள் புதியதான யவ்வனத்தைக் கொடுத்து எனக்குபகாரஞ் செய்தார்கள். ஆதலால் நான் அவர்களுக்குப் பிரதியுபகாரஞ் செய்யவேண்டும்; என்னசொல்லுகிறாயென்றுகேட்க, இந்திரன் அவ்விருவரையும் தேவர்களெல்லோரும் வைத்தியர்களாகச் செய்து கொண்டபடியால் அவ்விருவரும் சோமபானஞ்செய்யத்தக்கவர்களல்லர். இவர்களுக்குப் பாகங் கொடுக்கவேண்டாமென்றனன். சவனமஹாமுநிவர் அடா!ருஷிபத்தினியைப் பிடித்திழுத்தவனே! வீணனகோபத்தை விட்டுவிடு. சத்தியவாதிகளானஅஸ்வனிதேவதைகள்வைத்தியரானதால் எப்படிச்சோமபானத்துக்குத் தகுந்தவர்களாகார்?விருத்திராசுரனை பிராமணனையாகத் தில்வஞ்சனையாற் கொன்றனையல்லவா? உன்றொழிலை நோக்க இவர்கள்தொழில் மிக்க குறைவானதோ வென் றதிவுக்ரங்கொண்டு சொல்லுவதைக் கண்டு ஒருவரும் பதில்சொல்லா தொழிந்தனர். தீக்ஷணியமான தேஜஸுள்ள அம்முநிவர் தமதுதபோலத்தினால் அவர்களுக்குச் சோமபானம் கொடுக்கத் தொடங்கினார்.

ஆறும் அத்தியாயம் சரியாதியஜ்ஞம் முற்றிற்று.

சுலோகம் - (சுக.)

ஆ அத்தியாயம் சு - க்குச் சுலோகம் - (கூசகூ.)

---

உ

ல்க்ஷணுகம்யாயைநமஃ

எழாம் அத்தியாயம்

## * சரியாதியஜ்ஞே அஸ்விநோசோமபானப்ராப்தி.

வியாசர் கூறுகின்றார்; ஓ ஜனமேஜயனே! சவனமுனிவர் இந்திரனை யொருபொருளாக மதியாது அஸ்வனிதேவதைகளுடைய பாகத்தைக்கையிலெடுக்கவே, இந்திரன்மகாகோபங்கொண்டவனுய்த்தன்பலத்தைக் காண்பிக்கிறவன்போல் முனிவரைநோக்கி, ஓ பாபிஷ்ட பிராமணனே! நீ மரியாதையைத் தாண்டக்கூடாது. சத்துருவான வுன்னை நான் வேருெரு விருத்திராசுரனைக் கொன்றதுபோலக் கொன்றுவிடுகிறேனென்ருன். அதுகேட்ட முனிவர், உருவத்தினுலும் பொருளினுலும் தேஜஸினுலும் என்னை வேருெருதேவனைப்போலாக்கிய அவர்களை நீ அவமானப் படுத்தவெண்ணற்க. நீயொழிந்த ஏனைய தேவர்களெல்லாம் பாகம் வாங்கிக்கொள்ளச் சித்தமாயிருக்கிருர்கள். அஸ்வனிதேவதைகள் உனக்கிளைத்தவர்களல்லர். உன்னிலும் மகா பாரக்கிரம சாலிகளென்றறிவாய். ஓ இந்திரா! வைத்தியர்கள் யக்ஞத்தில் சோமபானத்துக்குத் தகுந்தவர்களல்ல ரென்பதை நீ யெங்கேகண்டனை? ஓ மூடபுத்தியுள்ளவனே! நீகொடுக்கக்கூடாதென்றெண்ணுவையாயின் உன்தலையை இப்பொழுது அறுத்து விடுகிறேனென்றுசொல்லி, அந்த இந்திரனுடைய வார்த்தையைக்கேட்பதொழிந்து, அவ்விருவருக்கும் எடுத்த சோமபானபாகத்தைக் கொடுக்க முயலும்போது அந்தப்பாகத்தை அவ்விருவரும் வாங்கிக்கொள்ளப் பிரயத்தனப்பட்டனர்.

இந்திரன் பார்த்து, ஓ முனியே! நீ இப்போது இவர்களுக்குச் சோமபாகம் கொடுப்பையேயானுல் விருத்திராசுரனைப்போல்உன்னை வச்சிராயுதத்தால் கொன்றுவிடுவேனென்றுசொல்ல, அதனை யவர் ஓர்வார்த்தையாகவெண்ணிப் பயப்படாது அதிககோபத்தோடும் அகங்காரத்தோடும் அவ்விருவர்களுக்குஞ் சோமபானத்தைக் கொடுத்தார். உடனே இந்திரனும் அதிககோபங்கொண்டு வஜ்ராயுதத்தை யவர்மேலெறிந்தனன். கோடிசூரியர்போல் பிரகாசித்துக்கொண்டு

---

* சரியாதியாகத்தில் அஸ்வநிதேவதைகள் சோமபானம் பெறுதல்.

வரும் வஜ்ராயுதத்தைச்சர்வதேவர்களும்பார்த்துக்கொண்டிருக்கும் போதே முநிவர்தமது தபோபலத்தினால்சலிக்கவொட்டாது நிற்கசெய்து யாகாக்னியில் அபிசாரமந்திரத்தால் இந்திரனைக்கொல்வதற்கு ஓமஞ்செய்தனர். செய்யவே அவரது தபோபலத்தால் அவ்வோம குண்டத்தினின்றும்ஓர்அசுரன் மஹாபலமுள்ளவனும் மஹாகுரூரனும் மகாகோரரூபனும் மஹாபயங்கரமானகரிய பெரியசரீரமுள்ளவனும் பிராணிகளுக்கெல்லாம் பயத்தைக்கொடுக்கிறவனும் பர்வதாகாரமான தீக்ஷண்ணியத்தோடுங் கூடிய பத்துகாதநீளமுள்ள பற்களுள்ளவனும் நூறு நூறு யோசனையுள்ள நான்கு கோரப் பற்களையுடையவனும் விந்தமலைபோல் நீண்டோங்கிய புஜங்களையுடையவனும் ஆகாசத்தை நக்கிக்கொண்டிருக்கிற நாக்குள்ளவனும் பர்வதசிகரம்போல் கடினமான கண்டமுடையவனும் புலிநகம் போன்ற நகமுள்ளவனும் பயங்கரமான தலைமயிரும் முகமும் உள்ளவனும் காட்டுத்தீப்போல் கொதித்தெரியும் நேத்திரமுள்ளவனும் மதனென்கிற பெயருடன் தோன்றினன். அந்த அசுரனை அமரர்னைவரும் பார்த்துப் பயமடைந்தனர். இந்திரன் பயந்தவனா யுத்த முயற்சியைவிட்டு இவனென்செய்வானோவென்று ஏங்கிநின்றனன். அந்த அசுரனோ வச்சிராயுதம்வருமானால் அதனை வாயில் கடித்துக் கொண்டு மூன்றுலோகத்தையும் விழுங்கிவிடுகிறவன்போல் சற்றுறுத்துப்பார்த்து நின்று பின்ன ரடங்காக்கோபங்கொண்டு இந்திரனைப் பட்சிக்கப்போகிறேனென்று துறத்திக்கொண்டுபோயினன். அது கண்ட தேவர்களெல்லாம் ஓடிப்போய்விட்டோம் ஓடிப் போய்விட்டோமென் றழுதார்கள். அவன்பேரில் வச்சிராயுதத்தை விடவேண்டுமென்றுஎண்ணங்கொண்டிருந்த இந்திரன்கையாடாமல் அதனைவிடுவதற்குஅசக்தனாய்ஓடுவதற்குமில்லாமல்போர்புரிவதற்குமில்லாமல் திகைத்துத் தனதுகுருவைத் தியானித்தனன். தியானித்தமாத்திரத்தில், அவரெதிரேவந்து, இந்திரனுக்கு நேரிட்டிருக்கும் மகத்தான ஆபத்தைப் பார்த்து, மனதினால் செய்யவேண்டிய காரியத்தை நிச்சயஞ்செய்துகொண்டு, அவனைநோக்கி, ஓ இந்திரா! இவ்வசுரன் ருஷியினுடைய மஹா தபோபலத்தினால் பிறந்த மகாபலசாலியாகலான் இவன் உன்னாலும் உனது வச்சிராயுதத்தாலும் யென்னாலும்மந்திரங்களாலும்தேவர்களாலுஞ்செயிக்கத்தக்கவனல்லன். ஓ தேவஸ்ரேஷ்டனே! நீயொன்றும் யோசியாமல் சவனமஹா

முநிவரைச் சரணமடைவாய். அம்முநிவர் தன்னால் உண்டுபண்ணப்பட்ட இவனைத் தடைசெய்துவிடுவார். சக்தியானது சக்தனுடைய பவுருஷத்தைத் தகையவல்லமையுள்ளதன்று சக்தனுடைய பவுருஷமடங்குமானால் அவன் சத்தியடங்கும். ஆகலான், அம்முநிபுங்கவருடைய பவுருஷ மடங்குவதற்கு அவரை நீ சரணமடைய வேண்டுமென்றார். இந்திரன் அவர்சொல்லை யுட்கொண்டு அதிகபயத்துடன் சவனமுநிவரைவணங்கி, அவரைநோக்கி, ஓ முநிஸ்ரேஷ்டரே! எதிரே பிரசன்னமா யிருக்கின்ற இந்தப் பாபாத்மாவான அசுரனை அடக்கிச் சர்வமுமறிந்த நீர் எனக்குப் பிரசன்னராயிரும். உம்முடைய வார்த்தையின்படி நான் செய்கிறேன். ஓ பார்க்கவமுநிவரே! இதுமுதல் அஸ்வனிதேவதைக ளிருவரும் சோமபானத்துக்குத் தகுந்தவர்களே. இப்பொழுது நான்சொல்லும் வார்த்தை சத்தியமானது. ஓ தவமே பொருளாகவுள்ள முநிவரே! உம்முடைய பிரயத்தினம் சபலமாயிற்று. நீர் தருமமறிந்தவராகையால்பொய்சொல்லமாட்டீர்.இந்த அஸ்வனிதேவதைக ளிருவரையும் எப்போதும் சோமபானத்துக் குரியவராகவே யாக்கிக்கொள்ளுகிறோம். பூலோகத்தில் சரியாதியின்கீர்த்தி எங்கும்பரவுக. ஓ முநிசிரேஷ்டரே! நான் உம்முடைய வீரியத்தைப் பிரகாசப்படுத்துவதற்காகவே முன்னர் அலட்சியமாய்ப் பேசியதேயன்றி, உம்மை அலக்ஷியப் படுத்துவதற்கன்று. ஓ பிராமண சிரேஷ்டரே! என் விஷயத்தில் தயவுசெய்து மதாசுரனையடக்கும்; எல்லாத் தேவர்களுக்கும் மங்களத்தை யுண்டாக்குமென்று பிரார்த்திக்கவே, பார்க்கவரென்கிற சவனமுநிவர் கோபந்தணிந்தவராய், பயந்திருக்கும் இந்திரனைச் சமாதானப்படுத்தி, மதாசுரனை மூன்றுருவாக்கி அம்மூவரையும் சுராபானத்திலும் சூதிலும் வேட்டையிலும் திருப்தியடைந்திருக்கும்வண்ணம் போக்கி, இந்திரன்முதலிய எல்லாத்தேவர்களையும் நிறுத்தி, அரசனியற்றிய யாகத்தை நிறைவேற்றிப் பின்னர் சம்ஸ்கரிக்கப்பட்ட சோமரசத்தை இந்திரனுக்கும் அஸ்வனிதேவதைகளுக்குங் கொடுத்து யாவரையும் திருப்தியாய்ப் போம்படிச் செய்தனர். ஓ அரசனே! இவ்வாறு சவனமகாமுநிவர் சூரியபுத்திரர்களான அஸ்வனிதேவதைகளுக்குத் தன் தபோபலத்தினால் சோமபானஞ் செய்துவைத்தா ரென்றறிவாய். பின்னரந்த யாகசாலையும் அம்முநிவருடைய ஆஸ்ரமமும் பூலோகத்தில் பிரசித்திபெற்

றன. மநுபுத்திரனும் மஹாபராக்கிரமசாலியுமான சரியாதியென்னு மரசன், தனதுமருகராகிய ருஷியினுடைய மஹாதபோமகிமையான காரியத்துக்குச் சந்தோஷமடைந்து, மந்திரிகளோடு பட்டணம் போய்ச்சேர்ந்து அரசாண்டு வருங்காலத்தில், ஆனர்த்தனென்னும் பிள்ளைபிறந்தான். அவனுக்கு ரேவதனென்னும் பிள்ளைபிறந்தான். அவன் குசஸ்தலி என்னும் பட்டணத்தைச் சமுத்திரநடுவினுண் டாக்கிக்கொண்டு தேசங்களையெல்லா மனுபவித்துக் கொண்டுவந் தான். அவனுக்குக் குத்மி முதலான நூறுபுத்திரர்களும், மிகவுஞ் சுந்தரவதியான ரேவதிஎன்னும் ஓர் புத்திரியும் பிறந்தனர். அந்தப் பெண்ணுக்குக் கலியாணத்துக்குரியபருவம் வந்தபோது அரசன் நற்குலத்திற் பிறந்தவனாகிய எந்தவரசனுக்குக் கொடுக்கலாமென்று மனதில் ஆலோசனைசெய்து ஒன்றுந்தோன்றாமல் பிரமனைக் கேட் போமென்று நிச்சயித்து பெண்ணை யழைத்துக்கொண்டு பிரம்ம லோகம் போய்ச்சேர்ந்தான். அவ்விடத்தில் கந்தர்வர்களும் சித்தர் களும் பன்னகர்களும் சாரணர்களும் பிரமதேவரைக் கைகூப்பித் தோத்திரஞ் செய்துகொண்டிருந்தனர்.

ஏழாம்அத்தியாயம் சரியாதியஜ்ஞே அஸ்விநோ சோமபானபிராப்தி முற்றிற்று.

(சுலோகம் ருஉ)

ஆ அத்தியாயம் எ - க்கு சுலோகம் (கூகூ௫)

உ

லப்தகாமாயைநமஃ

## எட்டாம்அத்தியாயம்.

## * ரேவதஸ்யபிரஹ்மலோககமனுதிகதனம்.

ஜனமேஜயன் கூறுகின்றான். ஓ வியாசரே! யான் சில பிராஹ் மணர்களால் பிரம்வித்தாயும் சாந்தனுயுமிருக்கும் பிராமணனே பிர மலோகமடைவானென்று கேள்வியுற்றிருக்கின்றேன். அங்ஙனமிரு க்க,ரேவதன் தன்பெண்ணை யழைத்துக்கொண்டு பிரமலோகம்போ னுனென்றாலெனக்குச் சந்தேகமாயிருக்கின்றது. இதனையும், இறந்

* ரேவதன் பிரமலோகத்துக்குச்சென்றதுமுதலிய சரித்திரம்.

தவன் சொர்க்கலோகம் போகிறானென்று சொல்லுவதுசாஸ்திரநிச்சயமாயிருக்க,சிலமாநுடர்சுவர்க்கலோகம்போனார்வந்தாரென்கின்றனரே இதனையும்எனக்குச் சந்தேகந் தீரச்சொல்லவேண்டுமென்று கேட்டனன். வியாசர் கூறுகின்றார். ஓ ஜனமேஜயனே! மேருவின் சிகரத்தில் இந்திரலோகம் வன்னிலோகம் யமலோகம் வருணலோகம் கைலாயம் வைகுண்டமுதலிய எல்லாவுலகங்களுந் தாபிக்கப்பட்டிருக்கின்றன. அவ்விடத்துக்குத்தான் யாவரும்போவதும் வருவதுமாகவுள்ளா ரென்றறியக்கடவாய். ஆதலால் அருச்சுனன் மாநுடசரீரத்துடன் இந்திரலோகம்போய் இந்திரன் சமீபத்திலேயே ஐந்து வருட காலம் யிருந்தானென்றும், அப்படியே தசரத சக்கிரவர்த்தி முதலானவர்கள் சுவர்க்கலோகத்துக்குப் போவதும் வருவதுமாக விருந்தார்களென்றும், அப்படியே மகாபிஷன் முற்காலத்தில் பிரமலோகத்திற்குப் போனானென்றும், அவன் அங்கு வந்திருந்த கங்காதேவியைப் பார்த்தபோது காற்றினாலவளது வஸ்திரம் விலக அவளுடையதேகம் சிறிது கண்ணுக்குப்புலப்பட்டுக் காமத்துக்குள்ளானானென்றும் அந்தக் கங்காதேவியும் அவன்குறிப்பறிந்து புன்னகைசெய்ய, அவ்விருவர் குறிப்பையும் பிரமனறிந்து பூலோகத்துக்குப் போம்படிச் சபித்தானென்றுங் கூறுவதெல்லாம் அவ்விடத்திலென்றறிவாய். தேகாந்தத்தி லடையத்தக்க சுவர்க்கலோகம் பிரமலோக முதலியன வெல்லாம் மேருமலையி லுள்ளவையன்று. அவையாவும் மேலுலகிலுள்ளவையே.

ஓ அரசனே! முன்சொல்லி வந்தவரெல்லாம் எண்ணிறந்தபுண்ணியங்களையும் யாகாதிகளையுஞ் செய்தவர்களாதலால் இந்திராதியருலகத்திற்குப்போகும் வன்மையுடையராயினர். ஆதலால் மனிதர்களாயினும் புண்ணிய முடையராயின் சுவர்க்கலோகம் போய்வருதற்கு யாதொருதடையுமில்லை. எல்லாவற்றிற்குங்காரணம் புண்யமே. ஆனால் தானவர்களோவெனின்,அவர்கள் தேவர்கட்கு ஜ்ஞாதிகளாகலானும் ஈஸ்வராதியர்களிடத்தில் மகாவரம் பெற்றவர்களாகலானும் தேவேந்திராதிய ருலகங்கட்குச் செல்லத்தக்கவராயினர் என்றார். ஜனமேஜயன் சந்தேகந்தீர்ந்தவனாய்ப் பின்னர் ரேவதன் தன்கன்னிகையை யழைத்துக்கொண்டு பிரமலோகம்போய் என்ன செய்தான்?பிரம்மா இவனுக்கு என்னகட்டளையிட்டனர்?பெண்ணை யாருக்குக்கொடுத்தான் என்றான் வியாசர், ஓ அரசனே! ரேவதன்

பிரமலோகம் போனபொழுது அங்கு இரண்டு கந்தர்வர்கள் கானத்தைப்பாடி நிருத்தஞ்செய்து கொண்டிருக்க, அதனை ஒரு க்ஷணகாலம் பார்த்து மகிழ்ந்தவனாய் அந்நிருத்த முடிந்தவுடன் பிரம்மாவை நமஸ்கரித்துப்பெண்ணைக்காட்டி, ஓ பிரம்மாவே! இக்கன்னிகை என்னுடைய பெண். இந்தப்பெண்ணுக்குரிய வரனைக்கேட்பதற்காக உம்மிடம் வந்தேன். நான் நற்குலத்திற்பிறந்த அநேக ராஜபுத்திரர்களைப் பார்த்தேன். ஒருவரிடத்திலும் என் மனஞ்செல்லவில்லை. நீர்எல்லாமறிந்தவராதலால்நற்குலத்திற் பிறந்தவனாயும் பலவானாயும் சர்வலக்ஷணத்தோடு கூடினவனாயும் இந்தப் பெண்ணுக்குத்தகுந்தவனாயும் மகாதானஞ்செய்கின்றவனாயும் தர்மசீலனாயுமுள்ள ஒருராஜபுத்திரனைச் சொல்லுமென்றார். பிரமன் அவ்வரசனதுவார்த்தையைக்கேட்டுக்காலதர்மத்தைநோக்கிச்சிரித்துஅரசனைப் பார்த்துச்சொல்லுகிறார். ஓ ராஜசிரேஷ்டனே! எந்த ராஜபுத்திரனுக்கு நீ கொடுக்கவேண்டுமென்று நினைத்திருந்தனையோஅவனோடு அவனுடைய புத்திரபௌத்திர களத்திரபந்துக்களும் மாண்டுபோய்விட்டனர். இருபத்தேழாவது துவாபரயுகம் இப்பொழுது நடந்துகொண்டிருக்கிறது. உன்னுடைய வம்சத்திற் பிறந்தவர்களெல்லா மிறந்துபோய்விட்டனர். உன்னுடைய பட்டணம் அசுரர்களால் ஆக்ரமித்துக்கொள்ளப்பட்டது. இப்பொழுதுஅவ்விடத்தில் சந்திரவம்சத்திற் பிறந்த உக்ரசேனன் என்னும் ராஜன் அரசாக்ஷிசெய்து கொண்டிருக்கிறான். யயாதிவம்சத்திற்பிறந்த அந்த உக்ரசேனனுடைய புத்திரனும் அசுராம்சனுமான கம்சனொருவன்மகாபலசாலியாயும் தேவர்களுக்கெல்லாம் மகாசத்துருவாயும் தன் தந்தையைச் சிறைச்சாலையிலிட்டு மகாகர்வத்தோடு ராஜ்யபரிபாலனஞ் செய்துகொண்டிருக்கின்றான். இவ்வகையான துஷ்டராஜாக்களின் பாரத்தினால் பூமிதேவி வருந்தி யென்னைச் சரணடைந்து தன்குறையைக்கூற, நான் தேவசிரேஷ்டர்களெல்லாம் பூமியிலவதரித்து உன்னுடைய பாரத்தை நீக்கிவிடுவர்களென்றனுப்பினேன். அதுபோலவே நாராயணர் என்னு முனிவர் வசுதேவருக்கும் தேவகிக்கும் பிறந்து கிருஷ்ணமூர்த்தி என்று பெயர்பெற்று மகாபிரசித்தராய், பாபிஷ்டனான கம்சனைக்கொன்று உக்ரசேனனுக்கு ராஜ்யத்தைக்கொடுத்துவிட்டார்.

அந்தக்கம்ஸனுக்கு மாமனான ஜராசந்தன் அதனையறிந்து மகாகோபத்தோடு மதுரைக்குவந்து கிருஷ்ணமூர்த்தியோடு யுத்தஞ்செ

ய்து தோல்வியடைந்து எவனராஜனை யுத்தத்திற்கனுப்ப, அவன் யுத்தத்திற்கு வருகின்றானென்று கிருஷ்ணர்தெரிந்துகொண்டு துவாரகாபட்டணத்தில் யாதவர்களை மறைவாகவைத்துவிட்டு இப்பொழுது அத்துவாரகையிலிருக்கின்றார்; அவருடைய தமையன் பலதேவனென்று பிரசித்தனாயிருக்கின்றான். அவன் ஆதிசேஷனுடைய அம்சம். அவன் இவளுக்குத் தகுந்தவன். ஆதலால் இந்தப்பெண்ணை அவனுக்கு விதிப்படிவிவாகஞ்செய்து கொடுத்துவிட்டு நீ பதரிகாஸ்ரமத்துக்குப்போய் தவஞ்செய்வாயாகவென்று அவனுக்கு விடைகொடுக்க, அவன் அப்பிரமதேவன் உத்தரவின்படி துவாரகைக்குவந்து தன்பெண்ணுக்குவிவாகஞ்செய்துவிட்டு நதியின்கரையில் தவஞ்செய்திருந்து காலமுடிவில் சுவர்க்கலோகத்தை யடைந்தனன் என்று கூறினர்.

இவ்வாறு வியாசபகவான் கூறவே, ஜனமேஜயன் மிக்க ஆச்சரிய மடைந்தவனாய், ஓ வியாசபகவானே! ரேவதன் பிரமலோகத்திலிருந்து பூலோகத்துக்குவந்து விவாகஞ்செய்த காலத்தையெண்ணிப் பார்க்குங்கால் நூற்றெட்டு யுகம் ஆனதாகத் தெரியவருகின்றது. அவ்வளவு காலமானபோது அக்கன்னிகைக்கும் அந்த ராஜனுக்கும் விருத்தாப்யதிசை வந்திருக்குமே. அவன் அந்தப்பெண்ணை யௌவனத்தோடு கூடிய பலராமனுக்கு எப்படி கலியாணஞ்செய்துகொடுத்தான்? இது ஆச்சரியமல்லவாவென்று வினவ, வியாசர், ஓ அரசனே! பிரமலோகத்தில் கிழத்தனம் பசி தாகம் பயம் சிரமம் எப்போது முண்டாவதேயில்லை யென்றறிவாய். இந்த விருத்தாந்த மிங்ஙனமிருக்க, முன்கூறிய மநுபுத்திரனான சரியாதி மேருமலைக்குப் போனபோது அவன் சந்ததியெல்லாம் ராக்ஷசர்களால் நாசமடையத், தங்கள் நகரமாகிய குசஸ்தலியைவிட்டுப் பயந்தவர்களா யங்கு மிங்கும் ஓடிப்போயினர். பின்னர் அந்தவம்சத்தை விர்த்திசெய்வதற்கு வீரியவானான இட்சுவாகு வென்னும் புத்திரன் சூரியவம்சத்திற்பிறந்து தேவியைத் தியானஞ்செய்து வம்சவிர்த்திக்காக நாரதரிடத்தில் தீக்ஷையடைந்து தேவியினுடைய மந்திரோபதேசம்பெற்றுத்தவஞ்செய்துவந்தனன். ஓ அரசனே! அந்த இக்ஷுவாகுக்கு நூறுபிள்ளைகள் பிறந்தனர். அவர்களில் ஜேஷ்டனாகிய விகுட்சி என்பவன் மஹாபலசாலியாய்த் தன் சகோதரர்களோடு அயோத்தியை யாண்டிருந்து சகுனி முதலான ஐம்பதின்மரை உத்

தரதிசைக்குப்போக்கி ஆங்கு அரசாண்டிருக்கச் செய்தது இரண்டு பிள்ளைகளை மாத்திரம் தன்னிடத்தில் வைத்துக்கொண்டனன்.

எட்டாம் அத்தியாயம்

ரேவதஸ்ய பிரமலோககமனுதி கதனம் முற்றிற்று.



சுலோகம் - (நிசு)

ஆடி அத்தியாயம் அ - க்குச் சுலோகம் - (சநிக)



உ

லதாதநவே நமஃ

ஒன்பதாம் அத்தியாயம்.

## * கருத்ஸமாந்தாத்ராத்யுத்பத்திஃ.



ஓர்காலத்தில் இக்ஷுவாகுவானவன் அஷ்டகா சிரார்த்தம் செய்வதற்குத் தனது புத்திரனுகிய விகுக்ஷியென்பவனைப்பார்த்து, ஒ குமாரனே! நீ காட்டுக்குப்போய்ச் சிரத்தையுடன் சிரார்த்தத்திற் குரித்தாகிய பரிசுத்தமான மாம்சவகைகளை மிக்க பிரீதியோடு கொண்டுவருவாயென்று கட்டளையிட, அவனவ்வாறே ஆயுதபாணி யாய்ச்சென்று வராகம் முட்பன்றி மான் முயல் முதலிய மிருகங் களைக் கொன்று மிக்கசிரமமடைந்து சிரார்த்தத்திற்கு வந்தோ மென்பதையுமறந்து பசியினுல் பீடிக்கப்பட்டு ஒருமுயலைத்தின்று பசியாறி மிகுந்த மாம்சங்களைத் தந்தையிடங் கொண்டுபோய்க் காண்பித்தனன். தந்தை அவைகளைப் புரோக்ஷணத்திற்காக வசிட் டமுநிவரிடம்கொடுக்க, அவர் இவை சிரார்த்தத்திற் காகாவென்று கோபங்கொண்டு, ஒ அரசனே! உண்டுமிகுந்தவைகளைச் சிரார்த்தத் திற்குப் புரோக்ஷிக்கும்படி என்னிடத்தில் கொடுத்தனையே என்ன, அரசன் அச்சமுற்று அவ்வசிட்டமுநிவராலேயே புத்திரனுல் நிகழ் ந்த செய்தியைத் தெரிந்துகொண்டு கோபத்துடன் புத்திரனைத் தேசத்தைவிட்டுத் துறத்திவிட்டனன். அவன் சசத்தை அதனஞ் செய்தபடியால் அன்றுமுதல் சசாதனென்று பிரஸித்தியடைந்து தந்தையினுடைய கோபத்திற்கஞ்சி ஆரண்யஞ்சென்று அங்குள்ள

* காகுஸ்தன் மாந்தாதா முதலியோருடைய வுற்பத்தி

கந்தமூலங்களைப் புசித்துக்கொண்டு தருமநிலையில் ஆசையுள்ளவனாய்க் காலத்தைக் கழித்துக்கொண் டிருக்கும்போது இக்ஷுவாகு இறந்தனன். பின்னர் இவன் அயோத்தியாபுரிக்குவந்து அரசாண்டு வரும்நாளில் தேவப்பிரீதியாக சரயுநதி தீரத்தின்கண் அநேகயாகங்கள் செய்துவந்தனன். அச்சசாதனுக்கு ஓர் புத்திரன் பிறந்தனன். அவனுக்குப்பெயர் இந்திரவாகனென்றும் புரஞ்சயனென்றும் பெயருண்டென்றார். ஜனமேஜயன், ஓ மஹாமுநியே! அவனுக்கு இந்தநாமங்கள் எப்படியுண்டாயிற்று. அவற்றின் காரணங்களை எனக்குச் சொல்லுமென்றான். வியாசமுநிவர் ஓ அரசனே! ஓர் காலத்தில் தேவர்கள் அசுரர்களால் தோல்வியடைந்து விஷ்ணுமூர்த்தியைச் சரணமடைந்து தங்களுக்குண்டாகிய துன்பங்களைக் கூற, அவர் நீவிர் பூலோகத்துக்குப்போய் இப்போதரசாண்டுவரும் காகுஸ்தனைக்கண்டு அவன்பால் இக்குறைகளைக் கூறுவீராயின் அவன் உங்களுக்குச் சகாயார்த்தமாய்ச் சர்வாயுதபாணியாய்ப் புறப்பட்டு அசுரரோடு போர்செய்து அவர்களைக்கொன்று உங்கட்கு க்ஷேமத்தைச்செய்வான். அவனுக்குப் பராசத்தியினுடைய அநுக்கிரகமிருப்பதனால் இவ்வசுரர்கள் அவனுக்கோர் பொருளல்லர். அவனளவிறந்த சாமர்த்திய முடையவன். ஆகலான் நீவிர்செல்லுமினென்னவே, அவர்கள் அவராணையைமேற்கொண்டு அயோத்தியாபுரிக்குப்போய் சசாதனென்பவனைக்கண்டனர். அவனவர்கள் வருகையைக்கண்டு மகிழ்ந்து விதிப்படி பூஜித்து, ஓ தேவர்காள்! நீங்கள் எனது கிருகத்திற்குவந்து தெரிசனங் கொடுத்தபடியினால் யான் புண்யசாலியாயினேன்; புநிதனாயினேன்; என்ஜன்மம் சபலமாயிற்று. யாதுகருதி என்னிடம் வந்தீரோ அதனைச்சொல்லியருளுவீர். அது மனிதர்களால் செய்யக்கூடாததாயினும் அந்தக்காரியத்தை எவ்விதத்தினாலும் நான்முடித்து விடுகிறேனென்றனன். தேவர்கள், ஓ அரசனே! உனது பெருமையெல்லாம் விஷ்ணுமூர்த்தி எங்கட்குச் சொல்லி உன்னிடம்போகும்படியேவ அவரேவலின்படி நாங்களிங்குவந்தோம். பராசத்தி அநுக்ரஹத்தினால் உன்னால் முடியாதகாரியம் ஒன்றுமில்லை. ஆதலின் எங்களால் செயிக்கக்கூடாத அசுரர்களை நீயேசெயித்து இந்திரனுக்குச் சிநேகனாவாய் என்று உண்மையாய்க்கூறிய இன்னுரைகளைக்கேட்டு அரசன், ஓ தேவர்காள்! இப்போதே உங்கள்பின்னோடு வருகிறேன்; அதிற்சந்தேகமில்லை. ஆனால்

உங்கள் பிரபுவான இந்திரன் எனக்கு வாகனமாக விருப்பானுனல் நான் அத்தேவராஜனை ஊர்தியாகக்கொண்டு அசுரர்களோடு யுத்தஞ்செய்கிறேன்; இது சத்தியமென்றான்.

அதுகேட்ட தேவர்கள், தங்களரசனைநோக்கி, ஓ இந்திரனே! நமக்கிப்போது அசுரயுத்தம் பெரிதாயிருப்பதால் நீர் வெட்கத்தை விட்டுஅரசன்வேண்டுகோளின்படி ஊர்தியாகவேண்டியதேயென்று கூற, அவன் நாணமேற்கொண்டு சற்றுயோசித்திருப்ப, அதனைவிஷ்ணுமூர்த்தியுணர்ந்துஅவனுக்குத் திருப்திவரும்படி சிலநியாயங்களை யெடுத்துக்காட்டி உடன்படச்செய்யப் பின்னரவன் உருத்திரமூர்த்தியினுடைய விருஷபம்போல் பெரியதொரு விடபவடிவமெடுத்து நின்றனன். அரசன்மகிழ்ந்து அதன்மேலேறிக்கொண்டு அதன்முசிப்பில் வீற்றிருந்து அதிவேகத்துடன் அசுரர்களை நோக்கிச்சென்று அவர்களோடு பெரும்போர்புரிந்து வெற்றிகொண்டு அசுரர்களால் அபகரிக்கப்பட்ட செல்வங்களைத் தேவர்களுக்கே கொடுத்து அவர்களை மகிழ்வித்தனன். இந்திரன் அவனது ஆற்றலையும்ஈகையையுங் கண்டு மகிழ்ந்து அவ்வரசனுக்கு ராஜருஷி என்று பெயரிட்டுத் தோழனுனன். ஓ ஜனமேஜயனே! இந்த விகுக்ஷி என்பவன் இந்திரனது முசிப்பில் வீற்றிருந்ததனுல் காகுஸ்தனென்றும் இந்திரனை வாகனமாகக் கொண்டபடியால் இந்திர வாகனனென்றும் அசுரர்களுடைய புரத்தைச் செயித்தவனுனபடியால் புரஞ்சயனென்றும் பெயர்பெற்றனன். அவன் வம்சத்திற் பிறந்தவர்களும் காகுஸ்தரென்றே பிரஸித்தியடைந்தனர். அக்காகுஸ்தனுக்குத் தர்மபத்தினியிடத்தில் விஷ்ணுவினம்சமாய்ப் பிருது என்று பிரசித்திபெற்ற மகாவீரியவானுன ஓர் புத்திரன் பிறந்தனன். அப்புத்திரன் பராசத்தியின் சரணபங்கஜ சேவ்யனு யிருந்தனன். அவனுக்கு விஸ்வரந்தி என்பவனும்,அவனுக்குச் சந்திரனென்பனும்,அவனுக்கு மிக்க தேஜஸ்வியாயும் பலசாலியாயுமுள்ள யுவநா என்பவனும், அவனுக்குப் பரமதர்மிஷ்டனும் இந்திரனது பட்டணத்திற்குச் சமானமான சாவந்தி என்னும் பட்டணத்தை நிர்மித்தவனுமானசாவந்தனென்பவனும், அவனுக்குப்புருகதஸ்வனென்பவனும், அவனுக்குத் துந்து என்னும் அரசனைக்கொன்றதனுல் துந்துமாரனென்று பெயர்பெற்ற குவலயாஸ்வனென்பவனும், அவனுக்குத் திருடாஸ்வனென்பவனும், அவனுக்கு அரியஸ்வ னென்பவனும், அவனுக்கு

நிகும்பனென்பவனும்,அவனுக்குப் பர்ஹணாஸ்வனென்பவனும்,அவ னுக்குக் கிரசாஸ்வனென்பவனும், அவனுக்குப் பிரசேனஜித்தென்ப வனும்,அவனுக்கு யவ்வனாஸ்வனென்பவனும், அவனுக்கு மாந்தாதா என்பவனும் பிறந்தனர். இவன் ஆயிரத்தெட்டு மெத்தைகளை மகா தீர்த்தக்கரையில் பகவதி சந்தோஷமடைவதற்காக நிர்மித்தனன். பராசக்திக்கு அத்யந்தபக்தன். இவன் தன் தாயாருடைய கர்ப்பத் திற்பிறவாமல் தந்தையாருடைய வயிற்றைக்கிழித்துக்கொண்டு பிற ந்தவன். இவனுடைய பிறப்பு மிக்கமேன்மை யுடைத்தென்றார். அதுகேட்ட அரசன், ஓ வியாசமுநிவரே! நீர் சொல்லிய இவ்வார்த் தை இதுவரையிலுங் கேட்டதுமில்லை கண்டதுமில்லை. இந்த உற் பத்தி உலகத்தி லமையாதது.அவன் தந்தையினது கர்ப்பத்தில் எப் படி உற்பத்தியாயினன்? அதன் காரணத்தைச் சொல்லுமென் றான். வியாசர், ஓ அரசனே! யவ்வனாஸ்வனென்னும் இவன் றந்தை நூறுமனைவிகளுடனிருந்தான். அங்ஙனமிருந்தும் புத்திரப்பேறற் றவனா யிருந்தபடியினால் எப்பொழுதும் அதனை எண்ணியெண் ணிச் சிந்தாகுலனாய் அரசாக்ஷியைவிட்டு ஆரண்யத்துக்குப்போய் அங்குள்ள இருடிகளைக்கண்டு வணங்கி மகாதுக்காக்கிராந்தனாய், ஓ மஹாருஷிகாள்! நான் புத்திரபாக்கியமற்ற மஹா தரித்திரனென்று பெருமூச்சுவிட்டான். அவனது சோகத்தைக்கண்ட ருஷிகளெல் லாரும் மிக்ககருணையுள்ளவர்களாய், ஓ அரசனே! நீ துக்கிக்கவேண் டாம். துக்கிக்கவேண்டியகாரணம் யாது? அதனைச்சொல்லுவையா யின்,அதுநீங்கும்படியான மார்க்கத்தைச் செய்கின்றோமென்றனர்.

அரசன், ஓ முநிபுங்கவர்களே! எனக்குராஜ்யமும் தன தானிய முதலிய செல்வங்களும் பரிகரிதேர்முதலிய நால்வகைச் சேனைகளு முள்ளன.நல்ல சுந்தரவதிகளாகிய மனைவிகளோ நூறுபேருள்ளார். எனக்கு மூன்றுலோகத்திலும் பகைவ ருள்ளாரென்பதே கிடை யாது. உலகினரே யன்றி அரசரெல்லாரும் என்னுடை ஆணையைக் கடவாதவர். மந்திரிகளோ எனக்குக் கவசமாயுள்ளவர். சந்தான மொன்றுதா னில்லாதவனா யிருக்கின்றேன். இஃதொன்றில்லாமை யினாலேயே துக்கமென்பதறியாத நான் அதனை நன்றாயறியலாயி னேன். மறுமைக்குவேண்டிய கதியைக் கருதாதவனாயின், அந்தத் துக்கமும் நானடையவேண்டியதில்லை. அந்தத்துக்கமும் உங்களை யொத்த பெரியோர்கள் மகப்பேறற்றவனுக்கு மறுமைக்கதி கிடை

யாதென்றதனுல் வந்ததேயாகும். ஆகவே, நீங்கள் வேதசாஸ்திரங்களின் உண்மையறிந்தவர்களாயும் தபஸ்ரேஷ்டர்களாயும் காணப்படுகின்றபடியால் அத்துன்பமகலுமாறு யான் சந்தானமுடையவனுக நீவிர் ஓர் யாகத்தைச் செய்வீர்களென்று பிரார்த்திக்கின்றேன். ஓ மஹருஷிகாள்! என்னிடத்தில் உங்களுக்குக் கருணையிருக்கும் பக்ஷத்தில் எனது வேண்டுகோளின்படி யாகத்தைச்செய்ய முயல்வீர்களென்றான். அவ்வரசனுடைய இரக்கமொழிகளைக்கேட்டமஹருஷிகள்கருணுசாலிகளாயும்சந்துஷ்டர்களாயும் இந்திராதிதேவர்களுக்குப்பிரீதியான யாகத்தைச்செய்யத்தொடங்கிகும்பஸ்தாபனஞ்செய்து வேதமந்திரங்களால் நாடோறும் மந்திரித்துவந்தனர். ஓர் நாள் அரசன் மிகத்தாகமுள்ளவனுய் நீர் எங்குங்காணப்பெருமல் அர்த்தராத்திரியில் யாகசாலைக்குட்சென்று, அங்கு அந்தணரெல்லாம் உறங்குவதைக்கண்டு, தாகவிடாயினுல் ஒன்றும்யோசிக்காதவனுய்க் கும்பத்திலுள்ள தீர்த்தத்தைப் பானஞ்செய்துவிட்டான்.

ஓ அரசசிரேஷ்டனே! பின்னரந்தணர் பூஜிப்பதற்குக் கலசத்தைப்பார்க்க அதில் தீர்த்தமில்லாமையைக்கண்டு,மிகவும் பயமடைந்தவர்களாய் எழுந்திருந்து,அரசனைப்பார்த்து,இந்தத்தீர்த்தத்தை யார்குடித்ததென்றுகேட்க, அரசனும் பயந்து நடந்தசெய்தியைச் சொல்ல, அந்தணர்கள் தெய்வச்செயலைநாடி தெய்வபலமேபலமென்று நிச்சயித்துக்கொண்டு யாகத்தைமுடித்துவிட்டுத் தங்கள் தங்கள் ஆஸ்ரமம் போய்ச்சேர்ந்தனர். பின்னர் அரசனுக்கு நாளுக்கு நாள் கருவினுல் வயிறுபெருத்து வலதுபக்கங்கிழிபட புத்திரன் வெளியே வந்தனன். அங்ஙனம் அரசன் வயறுகிழிபட்டானுயினும் தேவர்களுடைய கிருபையினுல் மரணமடையாமல் பிழைத்திருந்தனன். அப்போது மந்திரிகள் யாரிடத்தில் இக்குழந்தை ஸ்தன்யபானஞ்செய்வானென்று விசாரப்படும்போது இந்திரன் இவன் (என்னை யூட்டுகின்றவன்) என்னும் பொருள்பட மாந்தாதா என்று சொல்லிக்கொண்டே அச்சிசுவின் விரலை வாயில்வைத்துச் சுவைக்கக்கொடுத்தனன். அதிற்பெருகும் பாலையுண்டே அந்த மாந்தாதா மிக்கபலவானுயினுன். ஓ அரசனே! அவனுடைய உற்பத்தி மிக விஸ்தாரமாகச் சொல்லப்பட்டுளது.

ஒன்பதாம் அத்தியாயம் கருத்ஸமாந்தாத்ராத்யுத்பத்தி முற்றிற்று.

சுலோகம் - (௯௩.௨)

ஆ அத்தியாயம் ௯ - க்குச் சுலோகம் - (௫௧௪.௨)

உ

லலாமராஜதளிகாயைநமஃ

## பத்தாம் அத்தியாயம்.

## * சத்தியவிரதோபாக்யானம்.



வியாசர்கூறுகின்றார். சத்தியசந்தனான அந்த மாந்தாதாவென்னும் அரசன் சகல தேசராசாக்களையும் வென்று உலகமெல்லாம் தன்னொருகுடைக்கீழ் வாழச் சக்கிரவர்த்தியாயினான். அதுகாறும் சக்கிரவர்த்தியாகவிருந்த அரசரெல்லாம் பயந்து மலைமுழையிற் புக்கொளித்தனர். இந்திரன் அவனது பராக்கிரமத்தைக்கண்டு த்ரசதஸ்யு என்று பெயர்கொடுத்தனன். இவ்வருஞ்சிறப்பு வாய்க்கப்பெற்ற அந்நச்சக்கிரவர்த்திக்குப்பதிவிரதாதர்மத்திலும்சௌந்தர்யாதிசர்வலக்ஷணங்களிலும் சிறந்தவளாகிய பிந்துமதிஎன்பவள் தர்மபத்தினியாயினாள். மாந்தாதா அவளுடன்கூடி புருகுச்சன் முசுகுந்தன் என்னும் இரண்டு புத்திரர்களைப் பெற்றனன். புருகுச்சனென்பவனுக்குப் பரமதார்மிஷ்டனும் பித்ருபக்தியுள்ளவனுமான அரண்யனென்பவனும், அவனுக்குப் பிரகதஸ்வனென்பவனும், அவனுக்கு எல்லாஅர்த்தங்களை யறிந்தவனும் மிக்கதார்மிகனுமான அரியஸ்வனென்பவனும், அவனுக்குத் திரதன்வா என்பவனும், அவனுக்கு அருணனென்பவனும், அவனுக்கு மிக்கசம்பத்துடையவனான சத்யவிரதனென்பவனும் பிறந்தனர். அந்தச் சத்தியவிரதன் ஊழின்வகையால் மனம்போனபடி போகின்றவனாயும் காமுகனாயும் புண்ணியத்தையறியாத மந்தமதியாளனாயும் பேராசையுள்ளவனாயு மிருந்து வாழுநாளில், ஓர்நாள் ஓர் பிராமணன் வீட்டில் கலியாணஞ் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் அக்கலியாணப் பெண்ணைப்பார்த்து காமமோகிதனாய், அப்பெண்ணை யபகரித்தோடினான். அக்கொடுமையைக்கண்ட அந்தணர் பெரியோரெல்லாம் ஒன்றுகூடி அவன்றந்தையாகிய அருணராசனிடத்திற் சென்று அந்தோ, அந்தோ! என்று பெருங்குரலிட்டுக் கூவியழுதனர். அதனைக்கண்ணுற்ற அரசன், ஓ அந்தணர்காள்! என்புத்திரனால் ஏதேனும் தீங்குநேர்ந்ததோவென்று அதிகவிரக்கத்துடன் வினவ, அந்தணர்கள் தம்மாட்டு

* சத்தியவிரதனுடைய சரித்திரம்.

மிகவும் வணக்கத்துடன் வினவும் இரக்கமொழியைக் கேட்டு அன்புடையவர்களாய் ஆசீர்வாதஞ்செய்து, அரசனே! உன்னுடையபுத்திரன் எங்களுடைய விவாககாலத்தில் கலியாணப்பெண்ணை பலவத்காரமாய்க் கொண்டுபோயினன். இதற்கு நாங்கள் என்செய்வோமென்ன, அரசன் அதனைக்கேட்டு மனம்நடுங்கி புத்திரனைநோக்கி,ஓ மந்தாத்மாவே!நீஎன்வீட்டிலிருக்கத்தக்கவனன்று;வெளியேபோய்விடு. அடா பாபிஷ்டனே! என்னுடைய தேசத்திலும்நீ இருக்கக்கூடாதென்றுகோபிக்க,அந்தப்பாவி தன் தகப்பனைப்பார்த்து நான் வீட்டிலுமில்லாமல் நாட்டிலுமில்லாமல் எங்கேபோவேனென்றான். நீ சக்கிலிகள்செய்யுஞ் செயலைச் செய்தபடியால் இனி அத்தொழிலையே நீயும் செய்து அந்தச் சக்கிலிகளுடன் வாசஞ் செய்யக்கடவாய். நீ எனது குலத்தைக் கெடுக்கவந்தவனாய் முடிந்தபடியால் இனி எனக்குப் புத்திரனாகாய். ஓ துஷ்டாத்மாவே! நீ என்பேரைக் கெடுத்துவிட்டாய். இனி உன்னிஷ்டப்படி போய்விடென்று கடுகடுத்துக் கூறவே அந்தப்பாவி! அங்கு நிற்பதற்கஞ்சி நகரத்துக்கு வெளியேவந்து நாய்மாமிசம் அருந்தும் சக்கிலிகள் வாழும் பாளயம் போய்ச்சேர்ந்து தனக்கு நேர்ந்த விதியை யெண்ணாது எப்பொழுதும் தனது குலத்துக்கேற்பக்கவசத்துடன் தனுசையும்பாணத்தையும்தாங்கினவனாய் கருணையும் ஓர்புறத்திலுடையவனாய் மிக்க பிரகாசத்துடன் வாழ்ந்து வருநாளில், ஓர்சமயம் நமது குலகுருவாகிய வசிஷ்டர் தர்மசாஸ்திரமெல்லா மறிந்தவராயிருந்தும் நமது பிதா கோபங்கொண்டகாலத்து நமது பாவத்துக் கேற்றபடி பிராயச்சித்த மேதேனுஞ் சொல்லித் தடுக்கவேண்டுமானால் தடுக்கக்கூடாதாவென்று அவர்மேல் மிக்க கோபங்கொண்டவனா யிருந்தனன். இவன் செய்தி யிங்ஙனமிருக்க,இவன்றந்தை ஏதோசிலகாரணத்தைக்கருதி புத்திரநிமித்தமாய்த் தவஞ்செய்யவெண்ணி காட்டுக்குப்போயினான். பின்னர் அவனுடைய தேசத்தில் புத்திரனைத் துறத்தியபாவத்தினால் பன்னிரண்டுவருடம் இந்திரன் மழை பெய்விக்காம லிருந்தனன். அச்சமயத்தில்விஸ்வாமித்திரமுனிவர் தன்மனைவியை அத்தேசத்தில் விட்டுவிட்டு கவுசிகிஎன்னும் நதிக்கரையில் அரிய தவஞ்செய்துவந்தனன். அவன் மனையாட்டி காலதவுர்பாக்கியத்தால் குடும்பத்தை ரக்ஷிக்க வல்லமையற்றவளாய் மிகவும் வருத்தப்படும்போது பிள்ளைகள் பசியினால் பீடிக்கப்பட்டு அழுதுகொண்டிருப்பதைப் பார்த்

துச் சகியாதவளாய்ச் சென்னலரிசியை யாசித்துஅவர்களைப் பாது காத்து வந்தனள். சிலநாள் கழித்து அதுவுங் கிடைப்பதற் சரிதாய்ப் போயிற்று. போகவே, பிள்ளைகள் பசியினால் வாட்டமுற்று வருந்துவதைப்பார்த்து, பட்டணத்தில் அரசனில்லையே. நாம்யாரிடஞ்சென்று யாசிப்போம் என்னசெய்வோம் நம்மை ரட்சிக்கிற பர்த்தாவில்லையே குழந்தைகளை யேனும் ரக்ஷிப்பாரில்லையே என்று குழந்தைகளைப் பார்த்துப் புலம்புகின்றவளாய், அந்தோ!நமது பர்த்தா சமர்த்தராயிருந்தும் நமது மனையாட்டி தனமில்லாமல் பிள்ளைகளை எப்படி காப்பாற்றுவாள்? அதனால் அவள் வருத்தப் படுவாளே என்று தெரிந்துகொள்ளுந் தெளிவற்று தவஞ்செய்யப் போயினரே; நம்முடைய பிழைப்பு வீணாயிற்றே பர்த்தாவில்லாமல் இவர்களை நாம் எவ்வாறு பாதுகாப்போம். இந்தப் பிள்ளைகளெல்லாம் பசியினால் மரணபாதையடைந்து இறந்து படுவார்போற் காண்கின்றதே இப்படி எல்லாப்பிள்ளைகளும் இறந்து போகப் பார்ப்பதைப் பார்க்கினும் ஒருபிள்ளையைமாத்திரம்விற்று அந்தத் திரவியத்தினால் மற்ற பிள்ளைகளைக் காப்பாற்றுவோம். அன்றியும் ஓர்கால் தெய்வகதியாய்நாமிறந்துவிடுவோமாயின்எல்லாப்பிள்ளைகளும் திரவியமில்லாமல் பிழைக்கும்வகையற்று இறந்துபோய் விடுவார்களல்லவோ? ஆகையால் சீவித்திருக்கும் இப்பொழுதே விரைவில் நாமெண்ணியபடி ஒரு பிள்ளையை விக்கிரயஞ்செய்வதேநலமென்றெண்ணி மனதைத்திடப்படுத்திக்கொண்டு நடுப்பிள்ளையைத் தர்ப்பைக்கயிற்றாற் கழுத்திற்கட்டிக்கொண்டு அழுதுகொண்டே வெளியில்புறப்பட்டாள். இதனைச் சக்கிலிபாளையத்தனாய்வாழும் சத்தியவிரதன் பார்த்து,ஓ ருஷிபத்தினியே! அழுதுகொண்டிருக்கிற குழந்தையைக் கழுத்தில் கட்டிக்கொண்டு போகின்றனையே, எதற்காகப் போகின்றனை?அந்தவுண்மையைச் சொல்லென்றுகேட்க,அந்த ருஷிபத்தினியானவள், ஓ ராஜபுத்திரனே! நான் விஸ்வாமித்திரருடையபத்தினி. அவர் என்னைவிட்டுத் தவஞ்செய்யக் காட்டுக்குப் போயினர். ராச்சியத்திலோ க்ஷாமம்வந்துவிட்டது. அதனால் பிச்சையேற்கப்புகினும் ஐயமிடுவாரில்லை. என்செய்வேன்? யான் பசிப்பிணியால் வருந்தும் வருத்தத்தைப் பார்க்கிலும் என்மக்கள் படுகின்ற பாட்டைக் கண்டு சகியாதவளாய் நடுப்பிள்ளையாகிய இந்த வொருவனையாவது விற்று ஏனைய மக்களைப் பாதுகாக்கலாமென்று துணிந்து இவனை விற்கவந்தே னென்றனள்.

அதனைக்கேட்ட சத்தியவிரதன் அந்தோவென்றிறங்கி, ஓ அம்மணி! உனதுபர்த்தா வருமளவும் நீ இந்தப் புத்திரனை விற்கவேண்டாம்; இவனையும் ரக்ஷிப்பாய். சீவனம் யான் கற்பிக்கின்றேன். நீ உன் ஆச்சிரமம்போய்ச் சேருவாய். அவ்விடத்தில் சமீபத்திலிருக்கும் மரத்தில் சில பட்சியங்களை யான் கொண்டுவந்து வைத்துவிட்டு வீட்டுக்குப் போகின்றேன். இதனைச் சத்தியமாய் நம்புவா யென்றனன். இவன் வார்த்தையைக்கேட்ட அந்த அம்மணியும் அப்படியே அக்குழந்தையின் தர்ப்பைக்கட்டை யவிழ்த்துவிட் டழைத்துக்கொண்டு தன்னுடைய ஆஸ்ரமம் வந்துசேர்ந்தனள். அப்பிள்ளையானவன் தர்ப்பையால் கழுத்திற்கட்டப்பட்டபடியால் களபந்தனென்றழைக்கப்பட்டு மகாதபசியாக விருந்தனன். சத்தியவிரதன் தான் சொல்லியபடியே பக்தியோடும் கருணையோடும் காட்டிற்சென்று மிருகங்களையும் வராகங்களையும் மகிஷங்களையும் அடித்துக் கொன்று அவ்வம்மணியிருக்கும் ஆசிர்மத்திற்குச் சமீபத்திலுள்ள மரத்தில்கட்டி அவர்களை யுண்ணும்படிச்செய்து ரக்ஷித்துவந்தனன். அந்த ருஷிபத்தினியும் அந்த மாமிசத்தை யெடுத்துக்கொண்டு வந்து பிள்ளைகளுக்குங் கொடுத்துத் தானும் புசித்துச் சந்தோஷமாயிருந்தனள்.

இவ்வண்ணம் வாழ்ந்துவருநாளில், ஓர்நாள் சத்தியவிரதன் காடெங்குந்திரிந்தும் ஒருமிருகமேனும் அகப்படாமல் வருத்தமுற்று ஆரணியமத்தியில் வரும்போது வசிட்டருடைய ஆச்சிரமத்தில் பசுவிருக்கப்பார்த்தனன். ஆஹா! இது வசிட்டருடைய ஆசிர்மமல்லவா? இம்முனிவர் நமது தந்தை நம்மைக் காட்டிற்கு போகும்படி சொல்லியபோது தடைசெய்யாமலும் சகலபாபங்களுக்கும் பிராயச்சித்தமறிந்தவரா யிருந்தும் நமக்கொரு பிராயச்சித்தத்தைக் கற்பிக்காமலும் போயினரல்லவாவென்றும் கோபங்கொண்டு அக்கோபமிகுதியினால் பசுவாயிற்றே என்கிற தர்மத்தையு மறந்து அஞ்ஞானவசத்தனாய்த் திருடன்போல் அப்பசுவை யடித்துக் கொண்டுவந்து வழக்கம்போல் அம்மரத்திற் கட்டிவிட்டு மிகுந்த மாமிசத்தைத் தானும் புசித்தனன். அந்தருஷிபத்தினியும் கோமாமிசமென்று தெரிந்துகொள்ளாமல் பிள்ளைகளுக்குங்கொடுத்துத் தானும்புசித்துவிட்டாள். பின்னர் வசிஷ்டர் பசுவைக்கொன்றுவிட்ட செய்தியறிந்துகொண்டு, அந்தச் சத்தியவிரதனைநோக்கி, ஓ துராத்மாவே!

அன்று பிராஹ்மணபத்தினியை யபகரித்தபாபம் போதாமல் இன்று பசுவையுங்கொன்று பெரும்பாவத்தைத் தேடிக்கொண்டனேயே! அடா மூடா! கோவதையினாலும் பிராமணபத்தினியை யபகரித்ததனாலும் தகப்பனாருடைய கோபத்தினாலும் உனக்குண்டாகிய பாவத்திரட்சியால் பசுவின் கொம்பைப்போல் பயங்கரமான மூன்று கொம்புண்டாய் திரிசங்குவெனப் பெயர்பெற்று பிசாசுபோல் பிராணிகளுக்கெல்லாம் கோரரூபமாய்த் திரிந் துலாவக்கடவா யென்று சபித்தனர். அவன் அந்தச்சாபத்தை யேற்றவனாய்ஆஸ்ரமத்தி லிருந்துகொண்டே ஒரு முநிபுத்திரனிடத்தில் உத்தமமானதோர் மந்திரத்தைக் கிரகித்துக்கொண்டு பகவதியைத் தியானித்துத் தவஞ் செய்து வந்தனன்.

பத்தாம் அத்தியாயம்

சத்தியவிரதோபாக்கியானம் முற்றிற்று.

சுலோகம் - (௫அ)

ஆ அத்தியாயம் ௧0 - க்குச் சுலோகம் - (௫௭௨)

உ

லம்பமுக்தாலதாம்சிதாயைநமஃ

பதினோராம் அத்தியாயம்.

## திரிசங்குசாபவிமுக்தி.

ஜனமேஜயன் வியாசமுநிவரைப்பார்த்து, ஓ ஐயா! திரிசங்கு வானவன் எப்படி சாபத்தினின்று நீங்கினான்? அதனை எனக்குச் சொல்லியருளு மென்றான். வியாசர் ஓ அரசனே! அந்தத் திரிசங்கு வானவன் தேவியினிடத்தில் மிக்க பக்தியுள்ளவனாய் இடைவிடாது நவாக்ஷர மந்திரத்தை யுச்சரித்துக்கொண்டு அந்த ஆச்சிரமத்திற்றானே வசித்திருந்து ஒருநாள் அங்கிருக்கும் அந்தணர்களை நமஸ்கரித்து, ஓ பிராமணோத்தமர்களே! நான் இப்போது உங்களிடத்தில் வணக்கத்துடன் விண்ணப்பித்துக் கொள்ளும் விண்ணப்பத்தைத் தயைசெய்து கேட்டருளல் வேண்டும். அஃதென்னையெனின்! நீங்க

ளெல்லோரும் கருணையுடன் எனக்குருத்விக்கிகளாக விருந்து ஜப த்தில் பத்திலொருபாகம் ஓமஞ் செய்யவேண்டும். நான் அரசனு டைய மகன்றனே? நான் சத்தியவிரதனல்லவா? நானிப்போது படும் கஷ்ட நிவிர்த்திக்காக நீவிர் இக்காரியத்தைச் செய்வேண்டும் இஃதே எனது வேண்டுகோளென்றான். அந்த வார்த்தையைக் கே ட்ட அந்தண ரனைவரும் அவனை நோக்கி, நீ அரசன் மகனாயினும் குருவினாற் சபிக்கப்பட்டு யாவராலும் நிந்திக்கப்பட்ட பைசா சத்தன்மையை யடைந்திருக்கின்றபடியால் உனக்கு வேதத்தி லதிகாரமில்லை. நீசொன்ன யாகத்திற்குந் தகுந்தவனல்லை; நாங்க ளென்செய்வோ மென்றார். அவன் அந்தவார்த்தையைக்கேட்டு மகாதுக்கமடைந்தவனாய் நம்முடைய பிழைப்பைச் சுடவேண்டும். இந்தக்காட்டிலிருந்து என்னவேலைசெய்வோம். தகப்பனாரும் நம் மைவிட்டுவிட்டார். குருவும் சபித்துவிட்டார். ராஜ்யத்தைவிட்டு காட்டிற்கு வந்துவிட்டோம். பைசாசத்தன்மையும் வந்துவிட்டது. இனி நாம் செய்யத்தக்கதுயாது என்றெண்ணி யெண்ணிச் சிந்தா குலமுற்று அக்னிப்பிரவேசமாவோமென்று துணிந்து அதிகமான கட்டைகளைப் போராகக்குவித்துத் தீமூட்டித் தீர்த்தத்தில் ஸ்நா னஞ்செய்து அந்த அக்னிகுண்டத்திற் கெதிராகவந்து இதில் பிர வேசித்து விடவேண்டுமென்று நிச்சயித்து மகாமாயையான சண்டி காதேவியை நினைத்துக் கைகூப்பிக்கொண்டு நின்றான். பகவதிதேவி இவன் இறக்கத்துணிந்திருப்பதைப்பார்த்து,ஆகாயத்தில் பிரத்யக்ஷ மாய் அவன்காணும்படி தரிசனங்கொடுத்து அவனைநோக்கி, ஓ சாதுவானவனே! உன்னுடைய கோரிக்கையென்ன? அக்னியில் சரீ ரத்தை விடாதே. நீ ஸ்திரமான மனதுள்ளவனாயிரு. உன்றந்தைக் குக் கிழத்தன்மை வந்துவிட்டபடியால் அவன் நாளையமறுநாள் உனக்கு ராஜ்யபட்டாபிஷேகஞ் செய்து ராஜ்யத்தைக் கொடுத்து விட்டுத் தான் காட்டுக்குப்போய் தவஞ்செய்து சகலகர்மங்களையுந் துறந்து பிரமலோகம்போய்ச் சேரப்போகிறான். ஓ மஹாவீரனே! நீ துக்கத்தை விட்டுவிடு. உன்னை அழைத்துக்கொண்டு போவதற்கு மந்திரிகள் வரப்போகின்றனர். என்னுடைய அநுக்கிரகத்தால் உன க்குச் சகலபாக்கியங்களும் உண்டாகும். அதுநிச்சயம். என் றனுக் கிரகஞ்செய்து அந்தர்த்தானமாயினள்.

அது கேட்டச் சத்தியவிரதன் மரணமடைவதைநிவர்த்தித்துத் தேவியைத் தியானித்துக்கொண்டிருந்தனன். இவையெல்லா மறிந்

திருந்த நாரதமுநிவர் அப்பொழுதே அயோத்தியாபட்டணத்து க்குவந்து ஆதிமுதல் நடந்தசெய்திகள்யாவும் அரசனுக்குச்சொல்லவும் அவ்வரசன் புத்திரனுடைய மரணமுயற்சியைக்கேட்டு வெகு துக்கமடைந்து புத்திரசோகனாய் மந்திரிகளைப்பார்த்து, ஓ மந்திரிகளே! என்புத்திரனுடைய மரணமுயற்சியை நீங்களு மறிந்தீர்களன்றோ. இனிநாம் சும்மாவிருக்கக் கூடுமோ. சத்தியவிரதனாகிய எனது புத்திரன் எனதாணை கடவாமல் காட்டில்வசித்துப்பலகஷ்டங்களை யனுபவித்தவனா யிருந்தும் யாதொரு புண்ணிய வசத்தாலோ தேவியினுடைய அநுக்கிரகத்துக்குப் பாத்திரனாயினா னாதலால் அவன் இனி புனித மானவனே. அவன் இனிக் காட்டில் வசிப்பதற்கு யோக்யனல்லன். நீங்க ளிப்பொழுதே காட்டுக்குப்போய் அவனை நல்லவார்த்தையினால் சமாதானப்படுத்தி அழைத்துக்கொண்டுவாருங்கள். நான் அவனுக்கு ராஜ்யபட்டாபிஷேகஞ் செய்வித்துப் பூபாரத்தை அவன்பாரமாக்கிக் காட்டிற்குப் போகிறேனென்று கூறி மந்திரிகளையனுப்ப, அவர்க ளப்படியே சென்று அழைத்துவந்தனர். பலஹீனனாயும் அழுக்காடையணிந்தவனாயும் சடைமுடியனாயும் கோரரூபனாயும் சிந்தாகுலனாயு மிருக்கிற சத்தியவிரதனை அரசன்பார்த்து, ஆ ஹா! நாம் என்ன நிஷ்டூர மான காரியத்தைச் செய்துவிட்டோமென்று எண்ணுதன வெல்லா மெண்ணி மனம்புழுங்கி அவனைக்கட்டியணைத்துத் தன்சமீபத்தி லிருக்கும் ஆசனத்திலுட்காரச்செய்து அவனைப்பார்த்து மிக்க அன்போடு, ஓ புத்திர சிகாமணியே! தர்மத்தில் புத்திவைக்கவேண்டும். பிராஹ்மணர்களைக் கௌரவிக்கவேண்டும் நியாயமாய்வரும்படியான தனத்தைக் கிரகிக்கவேண்டும். எப்பொழுதும் ஜனங்களைரக்ஷிக்கவேண்டும். எவ்விடத்திலும் பொய்சொல்லக்கூடாது. பூஜிக்கத்தகுந்தவர்களுடைய பூஜையைச் செய்யவேண்டும். தபஸிகளை ரக்ஷிக்கவேண்டும். இந்திரியங்களைச் செயிக்கவேண்டும். ஆலோசனை எப்பொழுதும் மந்திரிகளோடு ரகசியமாய்ச் செய்யவேண்டும். சொற்பசத்துருவாயிருந்தாலும் அலக்ஷ்யமா யிருத்தல்கூடாது. சத்துருவினிடத்தில் பிரீதியுள்ளவனான மந்திரியை நம்பக்கூடாது. சத்துருக்களிடத்திலும் மித்துருக்களிடத்திலும் சாரணர்களையனுப்பி அவர்களுடைய சுபாவத்தை நன்றாய்த்தெரிந்துகொள்ளவேண்டும். எப்பொழுதும் தர்மத்தில்புத்திவைக்கவேண்டும். நித்தியம் தானங்கொடுக்க

வேண்டும்.வீணனவாதஞ் செய்யக்கூடாது. துஷ்டசங்கத்தைவிட்டு விடவேண்டும். நானாவிதமான யாகங்களைச் செய்யவேண்டும்மஹ ருஷிகளையெல்லாம்பூஜிக்கவேண்டும். ஸ்திரீயை இஷ்டையாக நினை த்தல்கூடாது. சூதில்ஆவலுள்ள மனிதனைச்சிநேகனாகவைத்துக்கொ ள்ளக் கூடாது. வேட்டையில் எப்பொழுதும் விரக்திவைத்தலா காது. பிரயாணிகளையும் வேட்டையில் பிரவேசிக்கவொட்டாமல் தடைசெய்யவேண்டும். நாடோறும் பிராதக்காலத்தில் எழுந்திரு ந்து ஸ்நானமுதலான விதிகளையெல்லாம் தவராமற்செய்துவரவேண் டும். நன்றாய் தீக்ஷைசெய்துகொண்டு பராசத்தியைப் பூசைசெ ய்யவேண்டும். ஓ புத்திரனே! இந்தச் சன்மத்துக்குப்பலன் பராசத்தி யின் பாதத்தைப் பூஜிப்பதுதான். தேவிக்குப் பூஜைசெய்து அவ ளது பாததீர்த்தத்தைப் பானஞ்செய்தவன் மீண்டும் பிறவியை வந்தடையானென்பதுநிச்சயம். காணப்படுகிற பிரபஞ்சமெல்லாம் மகாதேவியின் சொரூபந்தான். பார்க்கிறவளும் அவள்தான். இப் படி அவளிடத்திலே மனதுவைத்தவனாய்ப் பயமில்லாதவனா யிருக் கவேண்டும். நித்தியகர்மங்களைச் செய்துகொண்டு சதசில் பிராமணா ர்களை வரவழைத்துத் தர்மசாஸ்திரங்களைக் கேட்கவேண்டும். வேத ங்களை யறிந்தசத்பாத்திரர்களாகிய அந்தணர்களை நன்றாய்ப் பூசித் து அவர்கட்குப் பசு பூமி பொன் தனம் இவைகளைப் பிரதிதினம் தானஞ்செய்துவரவேண்டும். வாசிக்காத பிராஹ்மணன் பூஜிக்கத் தக்கவனல்லன். அவனுக்கு ஆகாரந்தவிர வேறு அதிகதானம் செ ய்தலொழிந்து அவமானப்படுத்தாதுபோக்கல் வேண்டும். பிராஹ் மணர்கள் எத்தகையராயினும் பூலோகத்திற்குத் தேவர்களாகையா லும், க்ஷத்திரியர்கள் அவர்களிடத்தில் பிறந்தவர்களாதலாலும் நாம் பூஜிக்கத்தக்கவர்கள். இதிற்சந்தேகமில்லை. அவர்கள் நாம் செய்யும் தானங்களாலும் நமஸ்காரங்களாலும் சம்பத்தைக் கோருகின்றவர் களாதலால் அவர்களே விசேஷமாய்ப் பூசிக்கத்தக்கவர்கள். இந்த க்காரணங்களேயன்றி ஜலத்திலிருந்து தேஜஸும் கல்லிலிருந்து பஞ்சலோகமு முண்டாய் எல்லாவிடத்திலும் பிரகாசித்துப் பின் னர் தத்தம் உற்பத்திக்குக் காரணமான ஜலமுதலானவைகளிலே யே தணிந்துபோதல்போல் நம்முடையவுற்பத்திக்குக் காரணமான அந்தணரிடத்தில் நாம் அடங்கியிருத்தல் வேண்டும். ஓ குழந்தாய்! உலகத்தில் நாம் செய்யத்தகும் தண்டனையைத் தர்மசாஸ்திரத்தில்

சொல்லியிருக்கிறபடி எப்பொழுதுஞ் செய்துகொண் டிருக்கவேண்டும். நியாயமாய் வரும்பணத்தைச் சிறிது சிறிதாய்ப் பொக்கிஷத்திற்சேர்க்கவேண்டும்.

பதினோராம் அத்தியாயம்

திரிசங்குசாபவிமோசனம் முற்றிற்று.



சுலோகம் - (ருஙு)

ஆ அத்தியாயம் கக - க்குச் சுலோகம் - (சுஉரு)



உ

லம்போதரப்பிரஸவேநமஃ

பன்னிரண்டாம் அத்தியாயம்.

* திரிசங்கோஃபுநஸ்சாபப்ராப்திஃ.



வியாசர்கூறுகின்றார். இவ்வண்ணம் தந்தையானவன் வேதவிதி வழாமல் கூறிய தருமங்களை யெல்லாம் திரிசங்குகேட்டு அப்படியே ஆகட்டுமென்று நமஸ்கரித்து மிகுந்த அன்புட னிருக்கத் தந்தையானவன் வேதசாஸ்திரமும் மந்திரங்களு மறிந்த பிராமணர்களை வரவழைத்துப் பட்டாபிஷேகத்துக்கு வேண்டியசாமக் கிரிகைகளை விரைவிற் சேர்க்கும்படித் திட்டஞ்செய்து நல்ல சுபதினத்தில் சகலபுண்ணியதீர்த்தங்களையும் வரவழைத்து மந்திரிகளையும் தன் தேசத்திலிருக்கிற அரசர்களையும் வரவழைத்து அபிஷேகம் செய்வித்துச் சிங்காசனத்தில் வீற்றிருக்கச்செய்து சர்வாதிகாரங்களையுங் கொடுத்துத் தன் பத்தினியுடன் வானப்பிரஸ்தாஸ்ரமத்தைப் பெற்றுக்கொண்டு கங்காநதிதீரத்தில் அதிவுக்ரமான தவஞ்செய்து வருங்நாளில், பூலோகவாசங்கழியுநாள்வரத் தேவர்கள் அவனிடம் அதிவுபகாரத்துடன் சொர்க்கலோகத்துக்கு அழைத்துக்கொண்டு போய் இந்திரனுடைய ஆசனத்திற்குச் சமீபத்தில் வீற்றிருக்கச் செய்ய சூரியன்போற் பிரகாசித்திருந்தனன். ஜனமேஜயன் கூறுகின்றான். முன்வசிஷ்டருடைய கோ(பசு)வை வதைசெய்ததனால்

* திரிசங்குமறுபடியும்சாபமடைதல்.

சத்தியவிரதன் பைசாசத்தன்மை பெற்றானென்று பேசினீரன்றோ? அவனுக்கு அப்பைசாசத்தன்மை எப்படி நிவிர்த்தியாயது. அதை எனக்குச் சொல்லுமென்று வினவினான். வியாசர் கூறுகின்றார். ஓ அரசனே! சத்தியவிரதன் பக்தியோடு பகவதியைப்பணிந்த போதே அவள் அகமகிழ்ந்து திவ்யதேகத்தைக் கொடுத்தருளினள். அதனால் அவனிடத்தி லந்தபேய்த்தன்மையும் மாய்ந்தது. அவன்செய்த பாபங்களனைத்தும் பறந்தோடின. அவன் அம்பிகையின் அனுக்கிரகத்துக்கு அருகனானானென்று அவனுடைய தந்தையும் வசிட்டரும் மகிழ்வெய்தினர்.

ஓ அரசனே! தர்மாத்மாவாக விளங்கிய தன்தந்தை மரித்த பின்னர் தான் நாட்டையாண்டு வருநாளில் தேவியைக்குறித்து அநேக யாகங்களைச் செய்துவந்தனன். இவ்வுலகத்தில் உண்மைக்கு ஓர்வரம்பாகிக் கீர்த்திபெற்ற அரிச்சந்திரன் அவனுடைய பிள்ளைதான். சத்தியவிரதனாகிய திரிசங்கு தன்மகனாகிய அரிச்சந்திரனுக்கு அரசுரிமையளித்து, தான் மனிததேகத்துடனே சுவர்க்கலோகம்போக வெண்ணி வசிட்டருடைய ஆச்சிரமத்தை நாடி அடைந்து கைகூப்பி வணங்கி நின்று ஓபிரஹ்மபுத்திர! மஹாநுபாவ! சர்வமந்திரதந்திர சர்வஜ்ஞ! என்விண்ணப்பத்தைத் தேவரீர் நன்மனத்துடன் கேட்டருளுக. நானிந்த வுடலுடனே தேவலோகஞ்சென்று அங்கு அரமகளிர்செய்யும் அதிகமதுரமான கந்தருவகானங்கேட்டு அவ்வுலகத்துப் போகமும் சுகமும் பொருந்த விரும்பினேன். ஓமஹாமுநிவ! யானெண்ணியபடி இச்சரீரத்துடன் அநுபவித்தற்கு எந்தயாகத்தை எப்படிச்செய்தல்வேண்டுமோ அப்படியே அதனை ஆக்குக. என்காரியத்தை இப்போதே முடித்துவிடும். யாவராலும் அடைதற்கரிய அண்டர்நாட்டினை யானடையுமாறு அருள்செய்வீராக வென்று இரக்கத்துடன் வேண்டினான். வசிட்டர் கூறுகின்றார், ஓஅரசனே! இந்தவூனுடலோடு உம்பர்நாட்டுலாவுதல் ஒண்ணாது. இந்தவுடலை விட்டவனுக்குத்தான் சுவர்க்கம் அவசியங்கிட்டும். இதுதான் சாத்திரங்கூறுமுறை. இது நீயறியாததன்றே. உன்கோரிக்கை பயனற்றிருப்பதுகொண்டு யான்பயப்படுகின்றேன். மாநுடசரீரத்துடன் வானுலகில்வாழும் பெண்களோடு வாழமுடியுமோ! ஓமஹாநுபாவ! முன்னர் யாகஞ்செய்வாய் இறந்தபின்னர் உன்னெண்ணத்தின்படி சுவர்க்கமடைந்து இன்புறு

வாய்.அவ்வார்த்தைகளைக்கேட்டுமிகமனவருத்தமுற்று முன்னேதன்னைச்சபித்தவரான வசிட்டரைநோக்கி, பிராமணரே! என்னிடத்து நல்லெண்ணம் உமக்கு இல்லையென்று யானறிவேன். உம்மைக்கேட்டதும் என்பெருங்குற்றமே. நீர்யாகஞ்செய்யாவிடின் வேறுயாரையேனும் பௌரோகிதராக வரித்துக்கொண்டு அதனைச்செய்து முடித்திடுவேனென்று சொல்லினன். சொல்லக்கேட்ட வசிட்டர் கோபங்கொண்டு,ஏதுன்மதி! நீசண்டாளனாகக்கடவை. ஏ ஏ! இச்சரீரத்தோடே சக்கிலியாகக்கடவை என்றுசபித்தனர். சபித்தும் கோபங்குன்றாதவராய்ப் பொன்னுலகையழிக்க வெண்ணியபாவி! காமதேனுவைக்கொன்றகைதவனே! அந்தணன்மனைவியை யபகரித்த அதிபாதகனே! நல்லநெறிக்கோர் நாசகாலனே! வருபிறப்பிலும் நீ வானவர்நாடு வரப்பெறாயென்றனர்.

ஐம்பொறியடக்கிய அருந்தவத்தோரது சினம் கணமேனுங் காத்தலரிதன்றே! அந்தோ! அப்போதே அரசப்பொலிவெல்லாம் போய் அவன் சக்கிலியின்உருவம் வரப்பெற்றான். பொற்குண்டலம் கற்குண்டலம்போற்கருத்தது. தேகத்திலிருந்த சந்தனம்போன்ற நன்மணம் மலமெனநாறியது. அவன் பொன்னுடையெல்லாம் கிழிசிலையாயின. அவன் தேகம்யானையது போலாயது. வசிட்டமுநிவர் காயத்திரி ரூபமான சத்தியை உபாசிப்போராதலால் அவர் கோபத்தினாற்கொடுக்கப்பட்ட சாபம் அவனுக்கு அப்போதே பலித்தது. சத்தியுபாசகன் சத்தியின்பத்தர்களை அவமானப்படுத்த லாகாது என்பதனை இதனாலறியக்கடவாய். ஓ அரசனே! திரிசங்கு தன்தேகத்தைப்பார்த்துத் துக்கமடைந்து மனம்வருந்தி வீட்டிற்குப்போகாமல்காட்டிலேயே நான்கு பக்கங்களிலும் திரிந்துலாவி என்னசெய்வேன்? எங்குப்போவேன்? என்சரீரம் மிகவும் நிந்திக்கத்தக்கதாயிருக்கின்றதே? எனக்குண்டாகிய இந்தத்துக்கம்நீங்கும்வகையாது? தெரியவில்லையே! என்வீட்டிற்குப் போவேனெனில், என்குமாரன் பெரிதும் வருத்தமடைவனே! என்மனையாட்டியும் இந்தவுருவைக் கண்டு உடன்கூடிவாழ நினையாளே! ஜாதியாரும் உறவினரும் அண்டையிலணுகாரே! இவ்வாறு யாவரானும் வெறுக்கப்பட்டு உயிர்வாழ்வதினும் சாவதே சாலச்சிறந்ததென்றெண்ணினன். எண்ணி, நஞ்சுண்டு சாவேனா? நீரிலழுந்தி சாவேனா? கழுத்திற் சுருக்கிட்டு நான்றுசாவேனா? மூட்டியதீயிலே மூழ்கிச்சாவேனா? பட்

டினிகாத்துப் பிராணனைவிடுவேனோ? என்றுபலவாறு யோசித்தான். பின்பு இவ்வித மரணங்களால் யான் ஆன்மஹத்திதோஷம் அடைவேனன்றோ? அன்றியும் இந்தச் சுபாகத்தன்மையும் சாபமும்பிறவிதோறும் தொடருமல்லவோ? என்றுலோசித்து எப்படியினும் ஆன்மஹத்தி செய்யேன் என்று நிச்சயித்து யான் செய்திட்ட கன்மத்தை இந்தகன்மதேகத்திலேயே இந்தக்காட்டிலேதானே அநுபவிப்பேன். அதனலிக்கன்மம்கெட்டுப்போம். பிராரத்துவகன்மங்களுக்கு அநுபவந்தவிர வேறுவகையால் கேட்டைக்காணேம். ஆகையின் சுபாசுபகன்மத்தை அநுபவித்து விடுவேனென்று துணிந்தான். அவ்வாறே புண்ணிய ஆச்சிரமத்திற்கு அருகேயுள்ள புண்ணியதீர்த்தங்களைச்சேவித்தும் அம்பிகையைத் தியானித்தும், சாதுக்களைச் சந்தித்து வந்தித்தும் காலத்தைக்கழிப்பேனயின் யான் முன்செய்த புண்ணியத்தால் ஓர்கால் சாதுக்களுடைய சங்கம்நேரிட்டாலும் நேரிடுமென்று தன்மனதிலே தெளிந்தான். தெளிந்து தன்னாட்டைவிட்டு கங்காநதிக்கரையிலே சவனமுனிவருடைய ஆச்சிரமத்தில் வசித்துவந்தான்.

அரிச்சந்திரன் தன்தகப்பனுக்குச் சாபம்வந்தகாரணத்தைத் தெரிந்துகொண்டு மந்திரிகளைவரவழைத்து, ஐய! என்னுடைய தந்தையை நீங்கள் மிக்கஅன்பும் அடக்கமும்காட்டி அழைத்துவாருங்கள். அவர் மனம் வருந்தாமல் நாட்டிற்குவருவாராயின் நீங்களும் ஏனையகுடிகளும் முன்போலவே அவரையேற்று வாழ யாதொருதடையுமில்லையே? ஆசிரியராகிய வசிட்டபகவானுக்குக் கருணைவருமாறு நாம் நடந்துகொள்ளுவோமென்றும், அவர் அதனால் சாபநீக்கஞ் செய்வாரென்றுஞ்சொல்லுங்கள் என்றுதன்னெண்ணத்தை அவர்களுக்கறிவித்து அரசனிருந்தவிடத்துக்குஅனுப்பினன். அனுப்பப்பட்ட அமைச்சர் அவனைத்தேடிக் கண்டு வணங்கித் தம்மையறிய வுணர்த்திப்பின்னர், இளவரசாகிய அவன்மகன் சொல்லியவெல்லாஞ்சொல்லி அரண்மனைவந்தடையுமாறுஅவனைவேண்டினர். அவன் அதற்குடன்படானய், ஓ மந்திரிகளே! இவ்வேடத்துடன் யான் அயோத்திக்குவாரேன். வேறு ஆலோசனை செய்வதைவிட்டு, காலதாமதப்படாமல் என் அரும்புதல்வனகிய அரிச்சந்திரனுக்கு முடிசூட்டி நீங்களும் உடனிருந்து நாட்டினையாண்டு வாருங்கள். பிராமணநிந்தனையொன்றும் புரியாதையுங்கள். யாகம்பலவும் இய

ற்றியிடுங்கள் என்று தன் எண்ணத்தை அவர்களுக்கு வெளியிட்டு விடைகொடுத்து அனுப்பிவிட்டான். அரசன் ஆணையைக்கடத்தற்கு அஞ்சிய அவர்கள் நகரம்வந்துசேர்ந்து அரிச்சந்திரனிடம் அவன்பிதாபேசிய யாவும் பேசி நல்லநாளிலே விதிமுறையே அவனுக்கு அபிடேகஞ்செய்தார்கள். அவனும் அவ்வாறே நல்வழிவழுவாது செங்கோல்செலுத்தித் தருமசிந்தையனாய்த் தந்தையை எண்ணி எண்ணி காலங்கழிப்பானாயினன்.

பன்னிரண்டாம் அத்தியாயம்

திரிசங்குமறுபடியும் சாபமடைந்த சரித்திரம் முற்றிற்று.



சுலோகம் - (௬௪)

ஆ அத்தியாயம் ௧௨ - க்குச் சுலோகம் (௬அ௬)



உ

லப்யாயைநமஃ

பதின்மூன்றாம் அத்தியாயம்.

* விஸ்வாமித்ரஸ்ய ஸ்வாஸ்ரமம் ப்ரத்யா கமனம்.



ஜனமேஜயன் வியாசரைநோக்கி, ஓ ஐயா! அரிச்சந்திரனுடைய பட்டாபிஷேகத்தைக்கூறினீர். திரிசங்கு இது ஆயினனென்றுசொல்லாதொழிந்தீர். குருவருள்பெற்று அவன்சாபத்தினின்றும் விடுபட்டானா? அன்றி இறந்துபட்டானா? அவனது சரித்திர முழுவதும்யாது? அதைக்கேட்கயான் மிக்க ஆவலுடையவனா யிருக்கின்றேனென்று கேட்டனன்.

வியாசர்கூறுகின்றார். திரிசங்கு தன்மகன்பட்டத்துக்குவந்ததைப்பற்றிச் சந்தோஷமுடையனாய், இராச்சியவிசராம்விட்டு தேவியை மனத்திற்சிந்தித்துக்கொண்டு காலங்கழித்துவந்தான். அவன் அங்ஙனமிருக்க, விசுவாமித்திரர்தவத்தை முடித்து மனைவிமக்களைக் காணவெண்ணி அவர்களிருந்தவிடம்வந்து சுகமேயிருக்கக்கண்டு களித்து மனையாளைப்பார்த்து, ஓஅழகியகண்ணுடையாளே! பஞ்ச

* விஸ்வாமித்ரர்தன்னாஸ்ரமத்துக்குவருதல்.

காலத்திலே அன்னமின்றி நமதுகுழந்தைகள் எப்படிவாடிவருந்தினரோ? அக்காலத்தில் அவர்களை எவ்வாறு நீ காப்பாற்றினையோ? பொருளொன்றுமின்றி என்னபாடுபட்டனையோ? கூறுவாய். ஓ நல்லொழுக்கமுடையாளே! என்மனமெல்லாம் தவத்தைநாடி நின்றதாலும் யான் பொருளில்லாமல் கைம்முடங்கியிருந்ததாலும் கருப்புக்காலம் அடுத்தது கேட்டும் காடுவிட்டுவராதே இருந்துவிட்டேன் யானும் ஊனின்றி உடல்வற்றி ஒருநாள் பசிப்பிணிவருத்த வருந்திப் போகுமிடம் வேறில்லாமையால் ஒருபறைச்சேரியினுள்ளே நுழைந்து புலைமகன் உறங்கும்வேளையிலே திருட்டுத்தனமாய்ப் பாண்டத்தைத்திறந்து,சமைத்திருந்த நாய்மாமிசத்தைக் கையிலெடுத்தேன். அப்போது அவன் விழித்துப்பார்த்து நீயார்? இந்தப்பாதிராத்திரியிலே என்வீட்டிற்கு நீயேன்வந்தாய்? வந்த நீ ஆலோசனையின்றி எதன்பொருட்டுப் பாண்டத்தைத் திறந்தனை? இது புலைச்சேரியாயிற்றே சொல்வாயென்று மிக்கஅன்போடு கேட்டான்.நான்மிக்கபசியோடு கூடினவனாயிருந்தபடியால் வாய்குழறிக்கொண்டே, ஓமஹானுபாவனே! நான்பிராமணருஷி; பசிபொறுக்கமுடியாமல் திருட்டுத்தனமாய் இப்பாண்டத்தைத்திறந்து அன்னமுண்டாவென்று ஆராய்கின்றேன். ஓபுத்திமானே! நான் திருட்டுத்தனமாகவந்த அதிதி. ஆதலால்சமைத்திருக்கப்பட்ட இந்தமாமிசத்தைப் புசிக்கும்படி எனக்கு உத்தரவு கொடுப்பாயென்றேன். அதற்கவன் ஓ விஸ்வாமித்திரரே, என் வார்த்தையைக் கேட்பீராக. நான்சுபாகன். இதுபுலைச்சேரி. இதிலுள்ள அந்த மாமிசத்தைப் புசிக்கவெண்ணுதேயும். அந்தோ பாவம் பாவம். மநுஷ்யதேகம்கிடைப்பதுமிகவும் துர்லபம்? அதனினும் துர்லபம் பிராமணசென்மம். அதனினும் அரிதாகிய துர்லபம் பிராமணத்வம். இவ்வருமைகளை நீர் அறியீரா? நல்லலோகத்தையடைய எண்ணமுள்ளவன் எந்தகாலத்திலும் துஷ்டமான ஆகாரத்தைப்புசித்தல் அடாதன்றோ? ஏழுவிதகர்மத்தினல் அந்தியசாதிகள் கிரகிக்கத்தக்கவர்களல்லரென்று மநுகூறியிருக்கின்றாரன்றோ? நான் செய்த கர்மத்தினல் சுபாகனாயினேனாதலால், நான் ஒதுக்கப்படத்தக்கவனென்பதில் சந்தேகமில்லை. இப்போது உம்மை யான் தடைசெய்வது லோபத்தினலன்று ஓபிராமணசிரேஷ்டரே! உமக்குவருஞ்சாங்கரிய தோஷம் வரக்கூடாதென்கிற எண்ணமன்றி வேறில்லையென்றான். அவன் வாய்மொழியைக்கேட்ட யான், ஓ தருமமறிந்த

சண்டாளனே! நீ உண்மையைக் கூறினையாதலால் உனக்கு ஆபத்கால தர்ம சூக்ஷ்மமார்க்கத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக. சர்வவிதத் தாலும் சரீரரக்ஷணை செய்யவேண்டியது ஆவசியகம். பாபத்தைப் போக்கிக் கொள்வதற்கும் சத்தியுண்டாக்கிக்கொள்வதற்கும் பிரா யச்சித்தம் செய்துகொள்ளலாம். பசியைநீக்கிக்கொள்வதற்கு அன் னமன்றிபிராயச்சித்த மேதேனுமுண்டா? ஆபத்தில்லாக்காலத்தில் பாபம் செய்தால் நரகமுண்டாமேயன்றி ஆபத்துள்ளகாலத்திற் பாபஞ்செய்தால் நரகமுண்டாகமாட்டாது. ஒருவன் பசியோடு இற ந்து விடுவானாயின் அவனுக்கு நரகமுண்டு. இதிற் சந்தேகமில்லை யாதலால், சுகத்தைக் கோருகின்றவன் பசியை என்னவிதமான ஆகா ரத்தினாலாவது அடக்கவேண்டும். ஆதலால் நான் திருட்டுத்தனமா ய்ச்சரீரத்தை ரக்ஷிக்கத்துணிந்தேன். க்ஷாமகாலத்தில் பசியின்பொ ருட்டுத் திருடுகிறவனுக்கு என்னபாபஞ் சொல்லியிருக்கிறதோ அந் தப்பாபம் மழையைப் பெய்யவொட்டாமல் தடைசெய்கிறவனுக் குச் சேருமென்றேன். ஓ பிரியே! நானிதனைச்சொல்லவும், ஆகாயத் திலிருந்து யானையின் துதிக்கையிலிருந்து கொட்டுகிறதுபோல் மேகம் வருஷித்தது அந்தமழையைப்பார்த்து நான் மிக்கசந்தோஷ மடைந்து உடனே அந்தவீட்டிலிருந்து வெளியேவந்துவிட்டேன். என்செய்தியிதுவாகும். மிகப்பயங்கரமாயும் பிராணிகளையெல்லாம் நாசஞ்செய்வதாயு மிருந்த அந்த க்ஷாமகாலத்தில் நீ எப்படி சீவித் தனை என்றார்? அதற்கவள் ஓ பர்த்தாவே! நீரிவ்விடம் என்னை விட்டுப்போனபொழுதே க்ஷாமம்வந்துவிட்டது. அன்னத்திற்காக குழந்தைகள் மிக்கவருத்தப்பட்டார்கள். அவர்களைப்பார்த்து நான் பயந்து காடுகாடாய்ச் செந்நெல்லைத் தேடும்போது சிறிது கிடை க்கும். அதனையுண்டு சிலகாலங்கழித்தேன். பிறகு அதுவுங் கிடைக் காமற்போயிற்று; அப்போது காட்டிற் செந்நெல்லுமில்லை; விருக்ஷ ங்களிற் பழமுமில்லை; பூமியில் வேறு எவ்விதமான பதார்த்தங்களு மில்லை. இவ்விதமான துர்ப்பிக்ஷகாலத்தில் யார்பிக்ஷையிடுவார்கள்? குழந்தைகள் பசியினால் பாதைப்படுங்காலத்தில் என்செய்வோம்? எங்கேபோவோம்? பசியினாலழத்தொடங்கும் குழந்தைகளுக்கு என்னபதில் சொல்லுவோமென்று மனதிலெண்ணிப்பின்னர், ஒரு தனவானுக்கு ஒருபிள்ளையை விற்கிரயஞ்செய்து அந்தத்திரவியத் தினால் மற்றையபிள்ளைகளை ரக்ஷிப்போம். இதுவன்றி வேறொருபா

யமில்லை யென்று நிச்சயித்து, இந்தப்புத்திரனை விற்கிரயத்திற்காக அனுப்ப, இவன் மிகவும் அழுதான். நானிவனை யிழுத்துக்கொண்டு வெட்கமில்லாமல் விற்க வெளிப்பட்டேன். அப்போது மார்க்கத்தில் சத்தியவிரதனென்னும் ராஜருஷி மிகவும் வருத்தப்படுகிற என்னைப்பார்த்து இக்குழந்தை யேனழுகின்றானென்று கேட்டான். நான் ஓ அரசனே! பசியின்கொடுமைக்கு இவனை விற்க இழுத்துக் கொண்டு போகின்றேனென்றேன். அச்சத்தியவிரதன் மிக்கதயவுள்ளவனாய், இந்த குழந்தையை நீயழைத்துக்கொண்டு வீட்டிற்குப் போவாய். நான் உன்னுடைய முனிவர்வருமளவும் உனக்குங் குழந்தைகட்கும் வேண்டும் மாமிசத்தைத் தினந்தோறுங் கொடுக்கின்றேனென்று கூறி, அப்படியே பன்றி மான் இவைகளின் மாமிசத்தை இந்தமரத்தில் வைத்துவிட்டுப் போவான். ஓ நாயகனே! நம்முடைய குழந்தைகளைத் துக்கசாகரத்தினின்றுங் கரையேற்றினவன் அந்தப் புண்ணியசாலியேயாகும். ஒருதினத்தில் அவனுக்கு மாமிசம் அகப்படாமற்போய் வசிஷ்டருடைய பசுவைக்கொன்றுவிட்டான் அவர் மிகவுங் கோபமுடையவராய்த் திரிசங்குவாகவும், கோவதைசெய்தபடியால் சண்டாளனாகவுஞ் சபித்துவிட்டார். ஓ கௌசிக முனிவரே! அவனது துக்கத்தினால் எனக்கு மஹாதுக்கமுண்டாயிற்று. எனக்காக ராஜபுத்திரன் சண்டாளத்தன்மையடைந்தான். ஆதலால் ஏதேனும் ஓருபாயத்தாலாவது தபோபலத்தாலாவது அவனை நீர் இரக்ஷிக்கவேண்டுமென்றாள்.

இச்செய்தியைக்கேட்ட விஶ்வாமித்திரர் மிகவும் மனவருத்தப்படுகிற தன்மனைவியைச் சமாதானப்படுத்தி இந்தக்காட்டில் உங்களை ரக்ஷித்துவந்த அந்தப் புண்ணிய புருஷனை எனது வித்தியாபலத்தினாலும், தபோபலத்தினாலும் சாபத்தினின்றும்விடுவித்து அவன் துக்கத்தை நிவிர்த்திசெய்கிறேனென்றுசொல்லிப் பின்னர் தாம் தம்மனதில் அந்த அரசனுக்கு எப்படி துக்கம் நீங்குமென்று சிந்தித்து ஓர் ஆலோசனையைச் செய்துகொண்டு திரிசங்கு இருக்குமிடம்போயினர். அவன் இவர்வருகையைப்பார்த்து ஆச்சரியப்பட்டு, அவர்பாதத்தில் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அப்படியேகிடந்தான். விஶ்வாமித்திரர் அவ்வரசனைத் தூக்கிக் கையாற்பிடித்துக் கொண்டு சமாதானப்படுத்தி, ஓ அரசனே! என்பொருட்டு நீ சபிக்கப்பட்டனையாதலின் நானதனைப்போக்கி, உனதுகோரிக்கையை

நிறைவேற்றிவைக்கிறேன். நடந்தசெய்தியைக் கிரமமாகக் கூறுவா யென்று கேட்கவும், அவன் தான் சுவர்க்காரோகணம் செய்ய வெண்ணி வசிட்டரை வினவியதுமுதல் அவர் சாபமிட்ட காரண மீறாக யாவும் விடாமற்கூறி, ஓ முநிவரே! என்னுடையதுக்கத்தை நீக்குவதற்கு நீர்சமர்த்தரென் றெண்ணுகிறேனென்று துக்கித்துக் கொண்டு மௌனமாயிருந்தான். கௌசிகமுநிவர் அவனுடைய சாபநிவர்த்திக்கு ஆலோசனைசெய்தனர்.

பதின்மூன்றாமத்தியாயம்
விஸ்வாமித்ரர் தன்னாச்சிரமத்துக்கு வருதலாகியசரிதம் முற்றிற்று.



சுலோகம் - (கூ௨.)

ஆ அத்தியாயம் பதின்மூன்றுக்குச் சுலோகம் - (எருக)



உ

லஜ்ஜாட்யாயைநமஃ

பதினான்கா மத்தியாயம்.

## * திரிசங்கோஸ்வர்க்ககமனம்.



வியாசர் கூறுகின்றார்,—மகாதபசியாகிய விஸ்வாமித்திரர் செய்யவேண்டிய காரியத்தை மனதில்நன்றாயாலோசித்துப்பின்னர் யக்ஞத்துக்குவேண்டியசம்பாரங்களனைத்தும் சேகரித்துக்கொண்டுமுநிவர்களை யழைத்தனர். அவர்கள் வசிட்டரால் தடைசெய்யப்பட்டு ஒருவரேனும் வராதொழிந்தனர். விஸ்வாமித்திரர் ருஷிகள் வராமையையறிந்து மனவருத்தமுடையவராய்த் திரிசங்குவினிடம்வந்துமிக்ககோபத்தோடும் அரசனைநோக்கி,ஓ சிரேஷ்டனான அரசனே! பிராமணர்க ளெல்லாரும் வசிட்டமுநிவரால் தடைசெய்யப்பட்டு இந்த யாகத்திற்கு வராதொழிந்தனர். இனி நீ எனது தபோபலத்தைப்பார் உன்னைச் சுவர்க்கலோகத்திற் கேற்றி உனதுகோரிக்கையை நிறைவேற்றிவைக்கிறேன்; நீயஞ்சற்க வென்றுசொல்லி, ஜலத்தைக்கையிலேந்திக்கொண்டு நான்செய்துவந்த காயத்திரி ஜபத்தினாலுண்டாகும் புண்ணியத்தை யுனக்குத் தத்தஞ்செய்தேன். இனி நீ சுவர்க்கத்திற்குப்போவாய். அநேகநாளாய் சம்பாதித்த எனது புண்

* திரிசங்கு சுவர்க்கத்துக்குப்போதல்.

ணியத்தை இப்போ துனக்குக் கொடுத்தேனுகையால் சுவர்க்கத்தி லுனக்குச் சுகமுண்டாகும் வேறுயோசனைசெய்யவேண்டாம் செல் லுகவென்றுசொல்லவே,திரிசங்கு பட்சிபோல் ஆகாயத்திலெழும்பி இந்திரபட்டணத்திற்குச் சமீபமாகப் போகும்போது, தேவர்கள் பார்த்து இந்திரனிடம்போய் வாயுவேகமாக யாரோவொரு சண்டா ளன் வருகிறுனென்றுர். அதுகேட்ட இந்திரன் அதிவேகமாயோடி வந்துபார்க்க, வருகின்றவன் திரிசங்கு மகாராஜனென் றறிந்துகொ ண்டு தெரியாதவன்போல் அடா சண்டாளனே! எங்கேயாவது தேவலோகத்திற்குச் சண்டாளன்வருவானு? நீ இங்குவருதற்குத் தகுந்தவனல்லவே. பூலோகத்திற்குப் போவென்று துறத்தினுன். துறத்தவே, அவன், தேவலோகத்தில் வசிப்பவன் அங்குவசிக்கும் புண்ணியமிழந்தவுடன் எப்படி பூமியில் வீழ்ந்துவிடுவானே, அப் படி வீழத்தலைப்படும்போது விஸ்வாமித்திரரைநினைத்து, ஓ முனி வரே! நான் சுவர்க்கத்திலிருந்து கீழேவீழ்கின்றேன். என்னை ரட் சிப்பீர்! ரட்சிப்பீரென்று பெருங்கூச்சலிட்டழைத்தான். விஸ்வா மித்திரமுனிவர் அவனது பெருங்குரலைக்கேட்டு, அரசனே! நீ அவ்விடத்திலேயே நிற்கநிற்கவென்றுர். என்னவும், கீழ்நோக்கி வீழ்கின்ற திரிசங்குராசன், முனிவர் தமது தவமஹிமையைக் கொண்டு கூறியவார்த்தையினுல் ஆகாயத்தில் அவ்விடமே நின்றனன். அவனங்ஙன நிற்க,விஸ்வாமித்திரர் உடனே ஆசமனஞ் செய்து இரண்டாவது தேவலோகமொன்று சிருட்டிக்கவெண்ணி ஓர் அரியயாகஞ்செய்யத் தொடங்கினர். இந்திரன் அவரது முய ற்சியைப்பார்த்து வேகமாய் வந்து, ஓ முனிவரே! கோபத்தாற்கலங் கினவராய் ஏன் இப்படிப்பட்ட காரியத்தைச்செய்கின்றீர். சிருட் டிக்கமுயன்றதுபோதும். உமக்கு ஆகவேண்டிய காரியமென்னே? அதனைச்சொல்லுமென்றுன். விஸ்வாமித்திரர்,ஓ பிரபுவே! உன்னுல் சுவர்க்கத்திலிருந்து வீழ்ந்த அதிதுக்கிதனுன திரிசங்கு மஹா ராஜன் இப்பொழுது சந்தோஷிக்க உன்னுடைய சுவர்க்கலோகத் துக்கழைத்துக்கொண்டு போவா யென்றனர். இந்திரன் அவரது தபோபலத்துக்கஞ்சினவனுய், அவராணையைக்கடவாமல் அரசனுக் குத் திவ்யதேகங்கொடுத்து விமானத்திலேற்றிக் கொண்டு முனிவரி டம் விடைபெற்று சுவர்க்கம் போய்ச்சேர்ந்தனன். விஸ்வாமித்திர ரும் தமது ஆச்சிரமம் போய்ச்சேர்ந்தனர். அரிச்சந்திரன் விஸ்வா

மித்திரர் தன்தந்தையாருக்குச் சுவர்க்கபதம் வரும்வண்ணஞ்செய்த வுபகாரத்தைக் கேட்டுச் சந்துஷ்டனாய் அரசியனடாத்திக்கொண்டு அதிசுந்தரவதியாகிய மனையாட்டியுடன் நெடுங்காலங் கிரீடித்துக் கொண்டிருந்து புத்திரப்பேறுண்டாகாமையைநாடி மிகவுமதுக்க முற்று வசிஷ்டரிடஞ்சென்று, நீர் சகலமந்திரதந்திரங்களினு வல் லவராதலால் என்னைப்புத்திரப்பேறில்லா வறுமையினின்றும் நீக்கி என்குலத்துக்கு ஓர்பெருஞ் சிறப்புண்டாம்வண்ணம் புத்திரசம் பத்துவரும் உபாயத்தைச்செய்யும். ஓ பிராமணசிரேஷ்டரே! புத் திரப்பேறற்றவனுக்கு நற்கதியில்லையென்பது நீரறிந்ததன்றோ? நானதனையெண்ணித் துக்கப்படும்போது, நீரதனை யறியாதவர் போன்று உபேக்ஷைசெய்கின்றீர். ஈதழகாமோ? இங்குள்ள கலவி ங்கபட்சிகளைப்பாரும்; அவை தன் குஞ்சுகளைக் கொண்டாடுகின் றனவே. இவையன்றோ புண்ணியமுடையவை. அற்பபாக்கியனாகிய நானோ இரவும் பகலும் சந்தான மின்மையைக்கருதி வருந்துகின் றேனென்றான். அதுகேட்ட முனிவர் உள்ளத்தில் சிந்தனையுடைய வராய் அரசனைநோக்கி, ஓ மஹாராஜனே! நீ சொல்லுவது உண் மைதான். இந்தச்சமுசாரத்தில் பிள்ளையில்லாத துக்கம்போல் பெ ரியதுக்கம் வேறொன்றுங் கிடையாது. நீ வருணபகவானை மிக்க சிரத்தையோடு பூசைசெய்யின் அவர் உனது காரியத்தை முடிப் பார். சந்தானங்கொடுக்கிற விஷயத்தில் வருணமூர்த்தி மிகச்சிறந்த வர். தெய்வாநுக்ரஹம் புருஷப்பிரயத்தனம் என்னுமிரண்டையும் மனிதர்கள் முக்கியமாயெண்ணவேண்டும். முயற்சியில்லாமல் காரிய சித்தி எப்படியுண்டாகும்? உண்மையறிந்தவர் நியமமாய்ச்செய் யத்தக்கது முயற்சியே. முயற்சிசெய்தால் காரியசித்தி யுண்டாகும். அது தவறினுலுண்டாகாதென்று ஆசிரியர்கூற, அவ்வார்த்தையைக் கேட்டு அவரை நமஸ்கரித்துத் தவஞ்செய்யக்கருதி நகரத்தைவிட் டுக்கங்கைக்கரையில் பரிசுத்தமான ஓர்ஸ்தானத்தில் பத்மாசனனாய்ப் பாசதரனாகிய வருணபகவானைத் தியானித்து மிகவுக்கிரத்தோடு தவஞ்செய்து வந்தனன். வரவும், வருணபகவான் கருணைகூர்ந்து பிரத்யக்ஷமாய், ஓ தருமமறிந்தவனே! உனது தவத்தினால் சந் தோஷமடைந்தேன். உனக்குவேண்டும் வரம் யாதென்ன, அரசன்! ஓ பிரபுவே! சுகத்தையளிக்கவல்ல புத்திரனை எனக்கருளும். யான் புத்திரனில்லாமல் வருந்துகிறேன். மூன்றுகடனில் ஒன்றான இவ்

வொருகடனைக் கழித்துக்கொள்ளுவதற்காக இம்முயற்சி செய்தே னென்றான். வருணன், ஓ அரசனே! உன்னிஷ்டப்படி நல்லகுண சாலியான புத்திரன் பிறப்பான். அவன் பிறந்தபின் நீ சந்துஷ்ட னாய்ச் சிறிதேனுஞ் சந்தேகங்கொள்ளாமல் அந்தப்புத்திரனை யாக த்தில்பசுவாகக்கட்டி எனக்குப் பிரீதிபண்ணுவையேயாயின் நான் உனக்கு இந்த வரத்தைக்கொடுக்கின்றேனென்றான். அரசனதனைக் கேட்டு எனக்கு உலகில் அபுத்திரவானென்கிற பெயரொழிந்து புத்திரவானென்கிற பெயர் வருமாயின் நீர் விரும்பியபடி அந்தப் பிள்ளையைப் பசுவாகச்செய்து யாகஞ்செய்கின்றேன். சத்தியமா ய்ச் சொல்லுகின்றேன். என் மானத்தைக் காப்பாற்றவந்தவரே! பூலோகத்தில் மலடனென்று பேர்பெறுகிறதுக்கம் பெரியது. ஆகை யால் நல்ல பிள்ளையைக் கொடுமென்றான். வருணபகவான் ஓஅரச னே! உனக்கு நல்லபிள்ளை பிறக்கப்போகின்றான், நீ முன்னே என் னிடத்திற் சொன்னவார்த்தைப்படி தவறாமல் செய்வாயாகவெ ன்று விடைகொடுக்க, அரிச்சந்திரன் வீடுபோய்ச்சேர்ந்து, தரும பத்தினியினிடத்தும் ஏனைய நூறுமனைவிகளிடத்தும் வரப்பிரசாதத் தைச் சொல்லிமகிழ்ந்து வாழ்ந்துவருநாளில், சிலகாலங்கழித்து தர்மபத்தினி கர்ப்பவதியாயினாள். அரசன் அதைக்கேட்டுச் சந் துஷ்டனாய் விதிப்படி செய்யவேண்டிய சம்ஸ்காரங்களைச் செய்து வர, பத்தாவது மாதத்தில் சுபமானதினத்தில் தாராபலம் கிரக பலம் முதலியன கூடியிருக்கும்போது தேவபிள்ளைக்குச் சமான மான சுபுத்திரனைப்பெற்றாள். அந்தச் சுபவார்த்தையை அரசன் கேட்டு உடனே ஸ்நானஞ்செய்து அந்தணரெல்லாஞ் சூழ்ந்திருக்க ஜாதகர்ம முதலானவைகளை நடத்திச் செய்யவேண்டியதானங்களை யுஞ்செய்து சந்தோஷசித்தனாய் நிர்த்தகீதவாத்திய முதலிய சகல சாம்ராஜ்ய சம்பிரமத்துடன் வாழ்ந்திருந்தனன்.

பதினான்காம் அத்தியாயம்
திரிசங்கோசுவர்க்ககமனாதிகதனம் முற்றிற்று.



சுலோகம் - (ருரு)
ஆகஅத்தியாயம் கச-க்குச் சுலோகம் (அாசு)



உ

லயவர்ஜிதாயைநமஃ

பதினைந்தாம் அத்தியாயம்.

## * அரிச்சந்திரவருணயோஸ்ஸம்வாதம.



வியாசர் கூறுகின்றார்: புத்திரோற்சவத்தினால் அரசனுடைய கிருகம் விளங்கும்போது, வருணபகவான் ஓர் பிராமணனைப்போல் அங்கு வந்து, மங்களம் உண்டாகுகவென்று ஆசீர்வதித்து, ஓ அரச! நான்வருணன் எனது வரதானத்தால் உனது புத்திரதாகந் தணிந்து விட்டதல்லவா? நீ எனக்கு முன்சொல்லிய சத்திய வசனப்படி யாகஞ்செய்வதற்குத் தடையென்னை யென்றான். அரசன் அவ்வார்த்தையைக் கேட்டுத் தாமரைமலர்போன்ற பிள்ளையை நானெப்படி கொலைசெய்வேன். வந்தவருணரோ மகாவீரியமுள்ளவர். சுபத்தைக் கோருகின்றவர். இவரை அவமானப்படுத்தல் தகுதியன்று. அன்றெனின், பிள்ளையினிடத்தில் உண்டாகும் சிநேகம் எந்தப் பிராணிகளாலும் விடத்தக்கதாமோ? இதற்கு நானென்ன செய்வேனென்று பலவாறாகவெண்ணி சிந்தாகுலமுற்று ஒருவாறு தீரஞ்செய்துகொண்டு வருணனை நமஸ்கரித்து அர்க்கியமுதலியவற்றா லுபசரித்து அருகில்நின்று ஓ தேவதேவனே! கருணைக் கடலே! உம்முடைய உத்தரவின்படி வேதோக்தமான விதியினால் வெகுதக்ஷிணையோடு யாகத்தைச்செய்கிறேன்; அதிற்சந்தேகமில்லை; பிள்ளைபிறந்தபத்துநாளைக்குள் தகப்பன் யாககர்மம் செய்யத்தக்கவனல்லனென்றும் தாய் ஒருமாதத்திற்குள் சுத்தியாகாளென்றும், யாகத்திற்குத்தம்பதிகளாக விருத்தல்வேண்டுமென்றும் தருமசாஸ்திரங் கூறுகின்றதல்லவா? அதனை நீரும் அறிந்தவர்தானே? ஓ ஜலாதிபதியே! ஒருமாதம் தயவுசெய்து பொறுத்துக்கொள்ளுமென்றான். வருணபகவான் ஆசிபுகன்று நான் போய்வருகின்றேன் நடத்தவேண்டியவற்றை நடத்துவாய் மாதாந்தத்தில் வருகிறேன் அப்பொழுதேனும் தடையின்றி நீயாகஞ்செய்யவல்லையோவென்று சொல்லிப்போயினன் போனபின் அரிச்சந்திரன் மிக்கசந்தோஷமடைந்தவனாய்த் தடங்குடமாய்ப் பால்கறக்கும் பசுக்களைச்சேர்னத்

* வருணபகவானுக்கும் அரிச்சந்திரனுக்கும் சம்வாதம்.

திஞல் அலங்கரித்துக் கோடிகோடியாகவும் திலங்களைப்பர்வதாகார மாகவும் வேதமறிந்த அந்தணர்களுக்குத் தானஞ்செய்து புத்திரனுடைய முகத்தைப்பார்த்து ஆனந்தமுற்று லோகிதனென்று பெயர்வைத்தான். மாதமுடிவில் வருணபகவான் முன்போல் வந்து யாகஞ்செய் செய் என்று விரைந்துகூற அரசன் அவரைப்பார்த்து துக்கசாகரத்தில் மூழ்கினவனுய் நமஸ்கரித்துபசரித்துக் கைகூப்பி நின்று பிரபுவே! இன்று தேவரீர் என்வீட்டிற்கு வந்தது தெய்வாதீனமே. என்னுடைய கிருகம் பரிசுத்தமாயிற்று. உம்முடைய இஷ்டப்படி யாகஞ்செய்கிறேன். வேதமுணர்ந்தபெரியோர் பல்லிழந்த பசுவினுல் யாகஞ்செய்தல் அடாதென்று சொல்லுகின்றனரே. பல்முளைத்தபிறகு கூறியபடி யாகத்தை முடித்துவிடுகிறேன், இதிற் சந்தேகமில்லையென்றுன். வருணபகவா னதனைக் கேட்டுச் சரிதானென்றுபோயினன். அரிச்சந்திரன் சந்தோஷமாய் வீட்டிற் கிரீடித்துக்கொண்டிருந்தான். வருணபகவான் பல்முளைத்த சங்கதியுணர்ந்து முன்போல்அரசனிடம்வந்து யாகமியற்றுதற்கினி என்னதடையுளதென்றுன். அரசன் மிக்க வுபசாரத்துடன் ஆசனங்கொடுத்து சிறப்புடன் பூசித்துத் தோத்திரஞ்செய்து ஓ பிரபுவே! இந்தயாகத்தை விதிப்படி விசேஷதக்ஷிணை கொடுத்துநடத்த வெண்ணியிருக்கின்றேனென்றுகூறி மீண்டும் அதிகவணக்கத்துடன் தலைதாழ்த்தி ஓஸ்வாமி!இந்தப்பாலனுக்குச் சவுளகர்மம் நடக்கவில்லையே யாகத்தில்பசுவாகவருவோர்க்குக் கர்ப்பகேசம் இருத்தலாகாதென்று பெரியோர்கள் சொல்லக்கேட்டிருக்கின்றேன். இந்த விதி நீரும் அறியாததன்றே. ஆதலால் அந்தச்சடங்கு செய்து முடிந்தபின்னர்யாகத்தைச் செய்துவிடுகிறேன். அதுவரையும் பொறுத்துக்கொள்ள வேண்டுகின்றேனென்றுன். வருணதேவன் ஓ அரசனே! நான் வரும்போதெல்லாம் நியாயம்போல் ஒவ்வொன்றைச் சொல்லி என்னை வஞ்சித்து வருகின்றுய் யாகஞ்செய்வது உண்மையேயானுல் ஏனையசம்பாரங்கள் சித்தமாயிருக்கின்றனவா? அது எனக்குப் புலப்படவில்லை; பிள்ளையினிடம் உனக்கிருக்கும் ஆசையால் என்னை வஞ்சித்து வருகிறுயாகும்; இதற்குச் சந்தேகமில்லை இனிச்சௌளகர்மஞ்செய்தவுடனே யாகஞ்செய்யாமலிருப்பாயாகில் யான் கோபத்துடனே மிக்க பயங்கரமான சாபமொன்று உனக்குக் கொடுத்துவிடுவேன்; இப்போது உன்சொற்படியே

திருர்பிப்போகின்றேன்; இக்ஷுவாகு குலத்திற் பிறந்த நீ பொய் சொல்லலாகாதென்று சொல்லிப்போயினர்.

இனி வரும்போது பார்த்துக்கொள்வோமென் றரசன்சந்துஷ்டனுய்ப் பிள்ளையோடு விளையாடி மகிழ்ந்து வாழ்ந்துவரும்நாளில் சவுளகர்மஞ்செய்யுங்காலம் வந்தது; வரவே அச்சடங்கை மிக்க ஆடம்பரத்தோடு நடத்திவருங்காலத்தில் பத்னியும் பிள்ளையையெடுத்துக்கொண் டரசனசமீபத்தில்வந்துட்கார்ந்தாள். அதேகாலத்தில் வருணதேவரும் ஓ அரசனே! யாகஞ்செய் யாகஞ்செய் என்று மேக முழக்கம்போலக் கர்ஜித்து அக்னிபோல அனலைவீசி அரசனருகில் வந்தனர். அவரைக்கண்டவுடனே அரசன் அடங்காத துயரங்கொண்டு நடுங்கிப்பயந்து நமஸ்கரித்து ஆசனத்திலிருக்கச்செய்துசெய்ய வேண்டிய வுபசாரம்யாவுஞ்செய்து ஓ பிரபுவே! தங்கள் காரியத்தை இப்போதே செய்துவிடுகிறேன்; அதிற்றடையொன்றுமில்லை; ஆனுல் ஓர்விண்ணப்பம். அதனைத்தேவரீர் அமைந்த மனத்தோடு கேட்டருளல்வேண்டும். அது யுக்தமாகவிருந்தால் எடுத்துக்கொள்ளுக. அல்லாவிடில் தள்ளிவிடுக. அதனுல் யாதொரு பாதகமு மில்லை. பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் என்கிற மூவருமே துவிஜாளென்று சொல்லப்படுகின்றுர்களாகையால் அவர்கள் சம்ஸ்காரம் பெறவேண்டியவர்களென்றும் பெருவிடில் அவர்கள் சூத்திரர்களோடொப்பாவார்களென்றும் வேதவித்துக்கள் சொல்லுகின்றுர்களே. அந்த வுபநயனவிதி இந்தக்குழந்தைக்கு ஆகவில்லையே; அஃதாகுமளவும் சூத்திரனுகையின் இவனெப்படி யாகத்துக் குரியனுவான். உபநயனஞ் செய்யவோ இன்னுஞ் சிலகாலஞ்செல்லவேண்டும்; ஏனெனில் அந்தணர்களுக்கு எட்டாவது வயதும் அரசருக்குப் பதினோராவது வயதும் விதிக்கப்பட்டிருக்கிறதல்லவா, அடியேன் தேவரீருக்கு விதிகளையெல்லாம் எடுத்துக்காட்டத் தக்கவனல்லேன்; ஊழியன்போல் ஞாபகப்படுத்துகின்றேன்; என்மகனுக்கு உப நயனஞ் செய்வித்தபின்னர் உத்தமமான அந்த யாகத்தைச் செய்துமுடிக்கிறேன். உலோகபாலகராயும் தருமநெறிக் குட்பட்டவராயும் சர்வ சாஸ்திர மறிந்தவராயு மிருக்கின்ற தேவரீருக்கு இதன்மேலும் யான் சொல்லத்தக்கவை யாவுள? இப்போது யான் கூறியவார்த்தைகளைஉண்மையாகநம்பி சந்தேகங்கொள்ளாது இருக்கைக்கேகலாம்; மன்னித்தரு

ளுக வென்று அரச னதிகவிநயத்துடன் பலமுறைசொல்ல வருண மூர்த்தி மிக்கதயவுகாட்டி உன்னெண்ணப்படியே செய்கின்றேனெ ன்று போய்விட்டனர். போனபின்னர் அரசன் தெளிவுவந்தமுகத்த னாய் நினைக்கின்றான்: இவரிடத்து நான் பிள்ளைவரம்பெற்றதும் போ தும் இப்போது இவரால் படும்பாடும் போதும்; அந்தோ! அன்று பிள்ளைகொடுக்குந் தெய்வமாகவந்த இவர் இன்று அவனைக் கொல் லும் யமனாகவருகின்றார்; இப்படியுமுண்டோ? இதுவரையும் மூன்று கண்டம் வந்தொழிந்தது; இனிச்செய்யவேண்டிய சுபகாரியத்தைச் செய்வேனென்று சந்தோஷத்துடன் வாழ்ந்துவந்தபோது, மகனுக் குப் பத்தாவது வயதுவந்தது. வர, இனிப்பதினொன்றும் வயதுவரப் போகின்றதென்று நாளை யெண்ணிக்கொண் டிருந்து அந்நாள்வந் தவுடன் சிரேஷ்டமான பிராமணர்களையும் மந்திரிமுதலானவர்களை யும் வரவழைத்து அதிகசம்பிரமத்தோடு குமாரனுக்குப் பூணூல் தரித்து, வருணன்வருவானென்று சிந்தித்துக்கொண்டிருக்குஞ்சம யத்தில் அவர் வந்துவிட்டனர். அரசன்பார்த்து அவர்வரு கையை எதிர்பார்த்திருந்தவன்போ லோடிவந்து நமஸ்கரித்துக் கைகூப்பிநின்று ஓ என்தெய்வமே! தாங்கள் அளித்தபிள்ளை உபந யனஞ்செய்யப்பெற்றான். தங்கள்உபகாரத்தை என்னென்று சொல் லுவேன். மலடனென்று என்னை உலகம் கூறும் அபவாதத்தினின் றும் ஒழித்தீரே! இஃதொன்றினுக்கே யான்செய்யத்தக்க கைம் மாறுயாதிருக்கின்றது? நீர்கேட்டபடி அவனைக்கொடுப்பதுதானாகும். ஓ ஐயனே: நீர்மனமகிழும்படி அந்தயாகத்தை மிகச்சிறப்பாகச் செய்யவெண்ணியிருக்கிறேன். இதுசத்தியம். ஆனால் சமாவர்த்தன கருமமொன்றிருக்கின்றதென்றும் அது அவசியம் உபநயனம் நடந் தவுடன் செய்யவேண்டுமென்றும் அதுசெய்யாவிடில் உபநயனஞ் செய்தும் பயனில்லையென்றுஞ் சொல்லுகின்றார்கள். அதனையும் செய்து மகிழ எண்ணுகின்றேன. அதுமுடிந்தவுடன் உமதிஷ்டப் படியே யாகஞ்செய்வதில் யாதொருதடையுமிராது. எல்லாச்சடங் கும் முடிவுபெற்றன. இந்த ஒருசடங்கு முடிவுபெறும்வரையில் நீர் பொறுத்தருளுமென்று மிகவும் பிரார்த்திக்கின்றே னென்றும், சிந்தனையொன்றும் வேண்டாமென்றுஞ் சொல்லி முடித்தனன். இதையெல்லாங் கேட்ட வருணமூர்த்தி ஓ அரசனே. ஆஹா உன் னுடைய சாமார்த்தியத்தை நான் என்னவென்று சொல்லுவேன்:

நான்வரும்போதெல்லாம் அந்தந்தக்காலத்துக்கேற்றவாறு தகுந்த நியாயங்காட்டி ஒவ்வொருவார்த்தையினால் என்னை யேமாற்றி வஞ்சித்து வருகின்றாய்; இதுஉனக்கழகாகுமா? நல்லது, உன்வார்த்தைப் படியே சமாவர்த்தனமுடிந்தபின்னர் வேறொன்றுஞ் சொல்லாமல் எனது யாகத்தைமுடித்துவிடு. இப்போது நான் போய்வருகின்றே னென்று தமதிடம்போயினர். அரசன் சந்துஷ்டனாய் மேல்நடத்த வேண்டிய காரியங்களை நடத்தினான்.

அரசனது குமாரன் வருணமூர்த்தி வந்ததையும் அவனுக்குத் தந்தைநடுங்கியதையும் அவன் யாகஞ்செய்ய வற்புறுத்தியதையும் பார்த்து, நம்மை யாகஞ்செய்வதென்று சொன்னாரே; நாம்யாகத் திலோ சாகவேண்டும்;ஆஹா! நன்றாயிருந்தது. அந்தோ! அந்தோ!! என்றேங்கி யிருக்கும்போது அரசனும் அவனெண்ணிய குறிப்புண ர்ந்து துக்கித்தனன். மகன் அதனைக்கண்டு தந்தையை யாதொன் றும் வினவாமலே அயலாரிடத்துஎல்லாச்சங்கதிகளையும் நன்றாயறி ந்து இனி நானிங்கிருப்பேனாயின் என்தந்தை என்னை இவ்வுலகில் வாழவிடார்; வருணனும் என்னை விடப்போகிறதில்லை; ஆகலான் நானோடிப் பிழைப்பதே யுசிதமென நிச்சயித்து மந்திரிகுமாரர்க ளோடும் ஆலோசித்துத் தானெண்ணியபடியே நாட்டைவிட்டுக் காட்டையடைந்தான்.

அச்செய்தியை அரசனறிந்து கவலைமேற்கொண்ட மனத்த னாய் அவனைக் காட்டிலே தேடிவரும்படி அநேகதூதரை யனுப்பி யிருந்தபோது வருணதேவர் அரசனிடம் வந்துஒஅரசனே! இதுவ ரையில் சொல்லிவந்த தெல்லாம் முடிந்துவிட்டது. இனி ஒன்றுஞ் சொல்வதற் கிடனில்லை. சென்னாலும் யான் கேளேன். இப்போது யாகஞ்செய்யத் தடையென்னவென்றுகேட்க அரசன் முன்போல் யோசனைசெய்வது ஒன்றுமின்றி அவரடிபணிந்து ஒதேவனே! நான் என்னசெய்வேன். என்மகன் நீரடிக்கடி வந்துபோவதற்குக் காரண த்தையறிந்துகொண்டு உமக்குப்பயந்துஓடிப் பாய்விட்டான்.போன விடமிதுவெனத் தெரியவில்லை. நான் தூதர்களை மலைகளிலும் புதர் களிலும் முநிவர்களுடைய ஆச்சிரமங்களிலும் அனுப்பியும் அவர்கள் அவனை எங்கேனுங் கண்டுபிடித்தாரில்லை. ஒபகவானே! நானென்ன செய்வேன். உமக்கு இந்தப்பிள்ளையை விதியுக்தமாய்க் கொடுக்க

வெண்ணியேஎல்லாச்சடங்கும் மிகச்சிறப்பாக நடத்தினேன். நடத்தியும் பயனற்றவனாயினேனென்று அவர்மெச்சும் படியாகப்பேசி உள்ளத்துள்ளே புத்திரனைக் காணாத்துயரத்தால் புலம்பிக்கொண்டு நின்றான். அரசனுடைய வார்த்தையினால் அடிக்கடி வஞ்சிக்கப்பட்டவருணன் மிக்ககோபங்கொண்டு ஓ அரசனே! என்னை எதனால் பல முறையும் வஞ்சித்துவந்தனையோ அதனால் மிகவுஞ் சகிக்கக்கூடாத * ஜலோதரமென்கிறவியாதி உன்னைத்தொடர்ந்து பீடிக்கக்கடவது என்றுசபித்துப்போயினன். போகவே அரசனும் அச்சாபத்துக்குள்ளாய்வியாதியினால் பீடிக்கப்பட்டுத் துக்கித்துக்கொண்டிருந்தனன்.

பதினைந்தாமத்தியாயம்

அரிச்சந்திரவருணயோஸ்ஸம்வாதம்முற்றிற்று.



சுலோகம் - (௬௬)

அத்தியாயம் பதினைந்துக்குச் சுலோகம் - (௮௭௨)



உ

ஹ்ரீங்காரரூபாயைநமஃ

பதினாறும் அத்யாயம்.

$ அரிச்சந்திரகிருதயக்ஞம்.



வியாசர்கூறுகின்றார்: - யாவருடைய கண்ணுக்குங் காணாமல் காட்டில்காலங்கழித்துவந்த லோகிதாசன், தன்தந்தை நோயினால் வருந்துவதைக் கேள்வியுற்று, மிக்கஇரக்கமுள்ளவனாய் அவனைப் பார்க்க வீட்டிற்குப்போக வெண்ணங்கொண்டும், முன்பயத்தினால் போவதற்குக் காலெழாமல் ஒருவருடங் கழித்தான். பின்னர் ஒருவாறு துணிந்து புறப்பட்டுவருவதை இந்திரனறிந்து அவனை வஞ்சிக்கவெண்ணி பிராமணனாய் அவன்முன்றோன்றி ஓராஜபுத்திர! நீ நீதிஅறியாதவன்; உன்னைப்போலு மூடனொருவனுண்டோ? சுவாலைவிட்டெரியும் அக்னியிலுன்னை ஓமஞ்செய்ய எதிர்பார்த்திருக்கும் உன்தந்தையினிடம் போக நீ எண்ணங்கொண்டனையே; நீ

* உதரத்தில் நீரடைந்து வெளிவராது துன்பப்படுத்தல்.

$ அரிச்சந்திரன் யாகஞ்செய்தல்.

முன் இக்கானகத்துக்கு ஓடிவந்தது அதற்கஞ்சியே யன்றோ? இப்போததனை மறந்தனைபோலும்! உலகில் உயிர்களெல்லாம் தத்தம் ஆன்மாவினிடத்தில் அதிகபிரியமுடையன. புத்திர தார தனாதிகளிடத்து அன்புபாராட்டுவதும் தன் ஆன்மசுகத்தை முன்னிட்டன்றி வேறில்லை. ஆகவே உன் தந்தை தன்னைரக்ஷித்துக்கொள்ளவோ உன்னைரக்ஷிக்கவோ இப்போதெண்ணுவான். நான் உண்மையைச் சொல்லுகின்றேன். அதனையோசிப்பாயாக.நீபோனவுடன் உன்னைப் பசுவாகநிறுத்தியாகத்தைநடத்தி உன்தந்தை தன்பிணியைப்போக்கிக்கொள்ளுவான். ஆகலான் நீ அவனிடத்துச் செல்லாதொழிக. அவனிறந்தபின்பு அரசாளப்போவாயென்று சொல்லவும் அவன் சொல்லால் இராஜகுமாரன் மயங்கிப்போவதற்கஞ்சி மீண்டும் ஒருவருடங் காட்டிலே காலங்கழித்துவந்தான். பின்னுந் தன்தந்தை ஜலோதரவியாதியினால் மிகவுந் துக்கப்படுகிறதைக் கேள்வியுற்று மனம்புழுங்கிப் பிதாவைப்பார்ப்பதனால் நானிறந்தாலும் இறக்கின்றேனென்று துணிந்துபுறப்பட்டுப் போகும்போது அவ்வழியில் இந்திரன் முன்போல்வந்து முன்னையினும் அதிக இன்னுரையால் மயக்கி அவனைப்போகாதபடி தடைசெய்ய அந்தலோகிதாசன்போகாதுநின்றனன். அரிச்சந்திரன் நோயினால் மிகவும்வருந்தி வசிட்டமுனிவரை வணங்கித் தன்ரோகநிவர்த்திக் கோருபாயம்சொல்லும்படி வேண்டிக்கொள்ள அவர் ஓ அரசனே! ஒருபுத்திரனை கிரயத்துக்குவாங்கி நீ யாகஞ்செய்துவிடுவையாயின் உனதுவியாதிஒழிந்துவிடுமென் றுரைத்தனர். அதுகேட்டஅரசன் பிள்ளையைவிற்பவர் யாவர்? யாவராவது விற்பாராயினும் எனக்கு அவன்புத்திரனாவனாவென்றுகேட்க, அவர் வேதமறிந்த பிராமணர்கள் * புத்திரர்கள் பத்துவிதப் படுவாரென்று சொல்லுகின்றன ரென்றும், தேசத்தில்

---

* 1. அவுரசன் (விதிப்படி விவாகஞ்செய்துகொண்டவளுக்குப்பிறந்தவன்.) 2. தத்தன் (ஸ்வீகாரபுத்திரன்.) 3. க்ரீதன் (கிரயத்துக்குவாங்கப்பட்டவன்.) 4. க்ருத்ருமன் (அபிமானபுத்திரன்.) 5. அதம்பரவரான் (ஒரேபிரவரத்திற்சேர்ந்தவர்களுக்குப்பிறந்தவன்) 6. கூடோற்பன்னன் (கள்ளப்புணர்ச்சியாற்பிறந்தவன்.) 7. அபவித்தன் (தப்புபீஜத்திற்குப்பிறந்தவன்.) 8. பௌனர்ப்பவன் (புருஷனிறந்தபின்மீண்டும்விவாகஞ்செய்துகொண்டவளுக்குப்பிறந்தவன்.) 9. கானீனன் (கல்யாணத்துக்குமுன்பிறந்தவன்.) 10. தாசிப்ரபவன் (வேலைக்காரிக்குப்பிறந்தவன்.)

தேடிப்பார்த்தால் பொருளாசையுடைய பிராமணனெவனுவது பிள்ளையைக் கொடுத்துவிடுவானென்றும், அவனைப் புத்திரனுக வாங்கி யாகஞ்செய்தால் வருணதேவன் மகிழ்ச்சியடைந்து உடற்பிணியை யகற்றுவானென்றுங் கூறினர். அரசன் அவர்கூறியவாறே மந்திரிகளையனுப்ப அவர்களும் பிள்ளைவிற்போர் யாவரென எங்குந் தேடி வரும்போது அஜிகர்த்தனென்னும் ஓர்பிராமணன் மிக்கதரித்திரனுய் சுனப்புச்சன் சுனஸ்சேபன் சுனோலாங்கூலனென்னு மூன்று புத்திரர்களோ டிருக்கக்கண்டு, ஓ அந்தணரே! நீர் அரசன்செய்யும் யாகத்துக்கு ஒருபிள்ளையைக்கொடுப்பீராயின் நாங்கள் நூறுபசுவைக்கொடுக்கின்ருேமென்றனர். அதைக்கேட்டு அவன் சிறிதுமயங்கிநிற்க அப்போது ஐயா! அந்தணரே! ஏனிப்படி மயங்குகின்றீர் ஒருபிள்ளைபோனுலும் மற்றஇரண்டுபிள்ளைகளும் எங்களால் கொடுக்கப்படும் நூறுபசுக்களு மிருக்கின்றனவே இதற்கு யோசனை என்னவென்று மந்திரிகள்கேட்க, பார்ப்பான் மிக்க பசிபாதையுள்ளவனுதலால் ஒருமகனை விற்க மனம்வந்து தன் உத்தரகிரியைக்கு மூத்தபிள்ளையை வைத்துக்கொண்டு இருவரைக்காட்டி இவரில் யாரையேனும் அழைத்துப்போங்களென்று சொல்லினன். அவ்வந்தணன் மனையாட்டி எனக்கு மிகுந்தபிரியமுள்ளவன் கனிஷ்டனுகையால் அவனை யான்கொடுக்கவிசையேனென்ருள். மந்திரிகள் நடுவனைக்கொடுங்களென்று நூறுபசுக்களைக்கொடுத்து அவனை யழைத்துக்கொண்டுபோக அரசன்கண்டு சந்தோஷித்து அவனை நரபசுவாக யூபஸ்தம்பத்தில் கட்டிவைத்தனன். அந்தப்பிள்ளை ஐயோ! ஐயோ! வென்றலறி நடுநடுங்கி யழத்தொடங்கினுன். அவன்படும் பாட்டைக்கண்ட முனிவரும் ஏனையரும் மனமிரங்கினர். யாகபசுவைக்கொல்லும் சாமித்திரனும் இவனது பரிபவத்தைக்கண்டு கொலைசெய்வதற்கான கத்தியைவைத்துவிட்டு அரசனைநோக்கி அழுதுகொண்டிருக்கிற பிராமணப்பிள்ளையைஎன்பிழைப்புக்காகக் கொல்லமாட்டேனென்ருன். பின்னர் அரசன் யாகசாலையிலிருந்த அந்தணர்களைப்பார்த்து இனி என்னசெய்யத்தக்கதென்று வினவினன். அவன்வினவியதைக்கேட்ட அந்தணர்களும் ஏனையரும் ஓவென்று பெருங்குரலிட் டழத்தொடங்கினர். அதுகண்டஅரசனும் எங்கும் அழுகைக்குரலாயிற்றேயென்று மனங்கலங்கியிருப்ப அச்சிறுவன் தந்தையாகிய அஜிகர்த்தன் ஓ அரசனே! அஞ்சவேண்டாம் நான்

பொருளபேட்சை யுடையவனேயன்றிப் புத்திராபேக்ஷை யுடைய னன்றாகையால் இன்னும் எனக்குநூறுபசுவைக்கொடுப்பையாயின் என்மகனாகிய அந்தயாகபசுவை நான் கொன்றுவிடுகின்றேனென் றான். அரிச்சந்திரன் அவன்வார்த்தையிலே சந்தோஷித்து அப்படி யேயாகட்டுமென்று சொல்ல அந்தப்பாபிஷ்டனாகிய அந்தணன் அதுசெய்வதற்குப் பிரயத்தனப்பட்டான். அவனைச் சபையிலிருந் தாரெல்லாரும்பார்த்து ஆவென்றலறி அந்தோ! பிள்ளையைக் கொல லத்துணிந்தானே இவன்மாநுடனா?பேயா?மஹாபாபிஷ்டன்;க்ரூர மானகர்மமுள்ளவன். பிராமணவேடத்தைமாத்திரம் தரித்துக்கொ ண்டிருக்கின்றான்.எவன்றான் தன்பிள்ளையைக்கொல்வதற்குத் துணி வான்.இவன்சண்டாளனேயாகும் சீசீ!பாபகர்மத்தைச்செய்ய இசை கின்றானே.ஐயோ!பிள்ளையைக்கொன்று தனத்தையடைந்து என்ன சுகத்தை யடையப்போகின்றான். தன் அங்கத்தினின்றும் தன்ஆத் மாவே பிள்ளையாக மாறிப்பிறக்கின்றதல்லவா ? தன்மகனைக் கொல் வோன் தன்னாத்மாவைக் கொல்லுவோனாவனல்லவா? என்று பல ரும்பலவண்ணம் பேசிக்கூச்சலிட்டனர்.

அச்சமயத்தில் விஸ்வாமித்திர ரெழுந்து அரசனிடஞ்சென்று அதிகதயவுடன் ஓ அரசனே! யூபஸ்தம்பத்தில் கட்டுண்டழுகின்ற சுனஸ்சேபனை விட்டுவிடுவையாயின் உனதுயாகமும் பூர்த்தியாய் விடும். உனதுரோகமும் நிவிர்த்தியாய்விடும். கொலைசெய்யாமை யைக் காட்டினுஞ் சிறந்தபுண்ணியமும் கொலைசெய்வதைக்காட்டி னும் கொடியபாபமுங் கிடையாது; வியாதியாளனாகிய நீசெய்யும் இந்தக்காரியத்தில் அழுகைக்குரலாகுமா? நீயே எண்ணிப்பார்; தன் னுடலைக் காப்பாற்றிக்கொள்ள அன்னியவுடலை நாசஞ்செய்தல்கூடு மா? தன்தேகசுகத்தை நாடுபவன் பிறவுயிர்களின் தேகசுகத்தை நாடல்வேண்டும். எல்லாவுயிர்களிடத்தும் அருளுடையவர்களுக்கு அவ்வருளுக்குக் கேடுவிளைவிக்கும் உயிர்கள் உலகிலொன்றுங் காணப்படவில்லை. உலக கர்த்தாவானபகவான் சர்வப்பிராணிகளும் சந்தோஷிக்க அதைக்கண்டு சந்தோஷிக்கின்றவனாகவிருக்கின்றான். ஈஸ்வரனை விரும்புவோர்க்கு எல்லாவுயிர்களையும் தன்னைப்போ லெண்ணுமெண்ண மிருக்கவேண்டும். யாவரும் வாழவிரும்புவரன்றி சாவவிரும்பார். பிராமணப் பிள்ளையைக் கொன்று உனது தேக

த்துக்குச் சுகமுண்டாக்கிக்கொள்ள எண்ணுகின்றனையே அது போலவே இந்தப்பிள்ளைக்குத் தன்தேகத்தைக் காப்பாற்றிக்கொள்ள வெண்ணமிருக்குமன்றோ?ஓ அரசனே! இச்சிறுவன் பூர்வசென்மத்தில் உனக்குச்செய்ததுரோகத்தை இப்பொழுது அவன்பால் நீ காட்டுகின்றதாகவெண்ணுகின்றேன். அப்படிஇல்லாவிடில் குற்றமில்லாத இவனைக்கொல்ல எண்ணுவையா? துவேஷத்துக்குக்காரணமில்லாதஒருவனை எவன்கொல்லுகின்றானோ அவனை, மறுபிறப்பிலே அவனால் கொல்லப்பட்டவன் கொன்றுவிடுவா னென்பது பிரமாணம். உலகில் புத்திரபாக்யத்தின்பொருட்டு அஸ்வமேதாதிகளையும் கங்காயாத்திரைகளையும் செய்கின்றனர். தனத்துக்கு விற்ற இவன் றந்தைமிக்கதுஷ்டாத்மா;பெருங்கேடன்;படுபாவி;கொடுந்துரோகி; ஓ அரசனே! நாட்டினடுவிலிருந்து எவன் பாபகாரியத்தைச் செய்கிறானோ அவனுடையபாபத்தி லாறிலொருபங்கு அரசனைச்சாரும்; அதிற்சந்தேகமில்லை. பாபஞ்செய்கிறவனை அரசனாகிய நீ தடுக்க வேண்டும். நீ தடுத்திருந்தால் பிள்ளையைவிற்பானா? சூரியவம்சத்தில் திரிசங்கு ராஜபுத்திரனாகப்பிறந்து நீ வேறொருவம்சத்தில் வேறொருவருக்குப்பிறந்தவன்போல இக்கொலையை இச்சித்தனையே! என்னுடையவார்த்தையைக் கேட்டு இம்முனிபுத்திரனை விட்டுவிடு. உனக்குச் சுகமுண்டாகும்.உன்றந்தை சாபமேற்றுச் சண்டாளனாய்விட்டான்; அவனை அச்சண்டாளதேகத்தோடே சுவர்க்கம் போகும்படி நான்செய்தேன். நீ அவன்மகன் என்னும் அபிமானத்தினால் இவ்வளவும் உனக்குச்சொல்லுகின்றேன். என்னுடையவார்த்தையைத் தட்டாமல் மிகவுந் தீனனாயழுகிற இப்பிராமணப்பிள்ளையை விட்டுவிடு. இந்தயாகத்தில் இந்தப்பிள்ளையை விடுவதாகிய யாசகமொன்றை யான் உன்னை யாசிக்கின்றேன். இதைக்கொடுக்கத் தவறுவையாயின் அதனாலுண்டாகும் தோஷத்தை நீ என்தெரிந்துகொள்ளாமலிருக்கின்றனை. இந்தயாகத்தில் எதை யார்கேட்பினும் கொடுக்கவேண்டுமென்றும் கொடாவிடில் பாபம்நேரிடுமென்றுங் கூறுவதில் சந்தேக முண்டோவென்று சொல்லக்கேட்ட அரசன்

முநிவரே! ஜலோதரபாதையில் மிகவும் வருத்தப்படுகின்ற யான் இந்தப் பிராமணப்பிள்ளையைவிட்டு யாகத்தை எப்படி முடிப்பேன் வேறேதேனும் ஒன்றைக்கேளும் தடையின்றித் தருகின்றேன். இந் தயாககாரியத்தைத் தடைசெய்தல்முறையன்று என்றான். விஸ்வா மித்திரர் இவன்சொல்லிலே கோபமும் பிராமணப் பிள்ளையினிடத் தில் துக்கமுமுடையராயினர்.

பதினாறும் அத்தியாயம்

அரிச்சந்திரகிருதயக்ஞம் முற்றிற்று.



சுலோகம் (௫௬)

அத்தியாயம் பதினாறுக்குச் சுலோகம்(௬௩௧)



உ

ஹ்ரீங்காரநிலயாயைநமஃ

பதினேழாம்அத்தியாயம்.

விசுவாமித்திரவசிட்டசம்வாதம்.



வியாசர்கூறுகின்றார்;—அருட்கடலாகிய விஸ்வாமித்திரர் யூப ஸ்தம்பத்தில் கட்டுண்டு மரணத்தையெண்ணிப் புலம்புகின்ற சிறு வனருகிற்சென்று, ஓகுழந்தாய்! உனக்குவருணமந்திரத்தை நானுப தேசிக்கின்றேன; அதை என்சொற்படி ஜபித்துக்கொண்டேயிருப் பையாயின் உனக்கிப்போதுண்டாயிருக்கும் துக்கநீங்கிச் சுகமுண் டாகுமென்றார். அவன் அப்படியே அவ்வுபதேசத்தை அவரிடம் பெற்று அழுவதைவிட்டு மானசீகமாக ஜபித்துவர வருணபகவான் சந்துஷ்டராய் அவன்முன்னேதோன்ற அவரை அங்குவந்திருந்தா ரெல்லாருங் கண்டுஆச்சரியமடைந்து தோத்திரஞ்செய்தனர்.

அரசனும் ஆச்சரியமடைந்தவனாய் ரோகத்தினால் வருந்தும் வருத்தத்தோடு அவன்பாதத்தில்வீழ்ந்துவணங்கிக் கைகூப்பிநின்று ஓசிரேஷ்டமானதேவரே! கருணைக்கடலே! நானொருபாவி! பெருமூ

டன்! குற்றவாளி! மிக்ககிருபுணன்! என்பிள்ளையினிடத்துள்ள ஆசையினால் உம்மைப்பரிகாசஞ்செய்துவிட்டேன்; நீர்பொறுமையுள்ள பிரபுவாதலால் பொறுத்துவந்தீர்; நான்செய்தகுற்றம் பொறுக்கத்தக்கதன்று. என்புத்தியெல்லாம் துர்ப்புத்தியே. எதைச்சற்புத்தியாக நினைப்பேன். ஒருபொருளில் விருப்பமுடையவன் அதன் குற்றமறியான். ஆகையால் என்மகனிடத்துவைத்த ஆசையால் உம்மைவஞ்சித்துவிட்டேன். புத்திரனில்லாதவனுக்குச் சொர்க்கமில்லையென்கிற அந்த ஒருவார்த்தைக்குப் பயந்து உம்மைப் பரிகாசஞ்செய்துவிட்டேன். பிரபுவே! அறிவீனனுடைய பிழையை அறிவுடையோர் பொறுத்தல்கடனன்றோ? ஓபகவானே! நான் துக்கமும் நோயுந் தொடர்ந்துள்ளேன். என்பிள்ளையும் என்னை வஞ்சித்துப் போயினன். அவன்போனவிடம் புலப்படவில்லை. ஓகருணைக்கடலே! என்மகன் மரணத்துக்கஞ்சி வஞ்சித்துப்போனபின்னர் ஒருவனைத் தனத்துக்குவாங்கி தேவரீருக்குச் சந்தோஷமுண்டாகும்வண்ணம் யாகத்தை ஆரம்பித்தேன். நீரும் பிரசன்னமாயினீர். என் துக்கமும் நோயும் நீங்கிற்றென்றனன். வருணபகவான், ஓ அரசனே! புலம்பிக் கொண்டே என்னை மனதில் புகழ்ந்து தியானிக்கின்ற இந்தப்பிள்ளையை யூபஸ்தம்பத்தினின்றும் அவிழ்த்துவிடு. இந்தயாகம் பூர்த்தியாய்விட்டது என்றுசொல்லிப் பின்னர்ச் சபையிலிருக்கும் யாவரும் பார்த்துக்கொண்டிருக்க தானே அப்பிள்ளையை அவிழ்த்துவிட்டனன். சபையாரெல்லாம் அதுகண்டு சந்தோஷப்பெருக்கினால் ஜயஜயவென்று ஆனந்தக்கூச்சலிட்டனர். அரசனும் மிக்கசந்தோஷமடைந்து யாகத்தைப் பூர்த்திசெய்தனன். யாகப்பசுவாய்வந்து அலறிய சுனஸ்சேபனும் சந்துஷ்டனாகிச் சபையாரைநோக்கிக் கைகூப்பிநின்று பெரியோர்களே!உங்களிடத்தில்நானொருவிண்ணப்பஞ்செய்கின்றேன் அதற்குரியதருமத்தை வேதசாஸ்திரத்துக்கு விரோதமில்லாத உண்மையை நீங்கள் சொல்லவேண்டுகின்றேன். இப்போது நான் யாருடையபிள்ளை? எனக்கு முதன்மையான தந்தை யார்? அதனை உண்மையாய்ச் சொல்லுவீர்களாயின் நானவரைச் சரணடைந்து வாழவிருக்கின்றேன். என்றுசொல்லக்கேட்ட சபையினருட்சிலர் இவன் அஜிகர்த்தன் மகனன்றோ? இவனிப்போது வேறு எவனுக்கு மகனாவான் என்றும், சிலர் அஜிகர்த்தனுக்கும் அவன்மனையாட்டிக்கும் பிறந்து அவர்களால் இதுகாறும் காக்கப்

பட்டு வந்தானாதலால் இவன் மற்றொருவனுக்கு எவ்வண்ணம் புத்திரனாவானென்றுங் கூறினர். அப்போது வாமதேவரென்பவர், உங்களாற்சொல்லப்பட்டவன் இந்தப்பிள்ளையைத் திரவியவாசையினால் விற்றவனாயிருக்க இவனுக்கு எப்படி அவன் தந்தையாவன். தனத்தைக் கொடுத்துப்பெற்ற அரசனே தந்தையாவா னென்றார். சிலர், அன்னதானஞ்செய்தவன், வித்யாதானஞ்செய்தவன், பொருளைக்கொடுத்தவன், பயத்தைநீக்கினவன், பெற்றவன் இவ்வைவரும் தந்தையாவாரென்று பெரியோர்சொல்லுகின்றாராதலால் இவனைப் பயத்தினின்றும்நீக்கிய வருணபகவானே இவன்றந்தையாவனென்றார். இவ்வாறு யாவரும்சந்தேகத்தோடு கூறிவந்தனரேயன்றிஇவன்றான் இவனுக்குத் தந்தையாவானென்று திடமாகக் கூறினாரில்லை.

அத்தருணத்தில் எல்லாமறிந்தவரான வசிட்டமுனிவர் அவர்களைநோக்கி வேதசம்மதமாகிய நிச்சயத்தைச்சொல்லுகின்றேன் கேண்மின்கள். மகனே தான்பெறும்பொருளாகவெண்ணி அவனிடத்தில் இரக்கங்கொண்டவனே தந்தையாவன். இப்பொழுது அஜிகர்த்தன் இச்சுனச்சேபனிடத்தில் ஆசையைவிட்டு தனத்தில் ஆசைவைத்து அவனைவிற்றான்; அதுவேயுமன்றி கத்தியினால் வெட்டவுந்துணிந்தான் இவ்விருவருக்கும் சம்பந்தமாயிருக்கவேண்டிய அன்பு எங்கிருக்கின்றது? ஆகவே அஜிகர்த்தன் இவனுக்குத் தந்தையாகான். கிரயஞ்செய்துகொண்ட அரசன்தந்தையாவனோவெனின், அவனும் இவன்பாலிரக்கமின்றி யூபஸ்தம்பத்திற் கட்டினானையால் தந்தையாகான். வருணபகவானோ வெனின், இவன் தோத்திரஞ்செய்ததனால் சந்தோஷமடைந்து பாசத்தை அவிழ்த்துவிட்டனரேயன்றி இரக்கத்தினாலன்றாகலின் அவருமாகார். அன்றியும் உலகத்தில் எவரெவர் எவரெவரை மந்திரங்களால் தோத்திரஞ்செய்கின்றனரோ அவரவருக்கு அவரவர் மகிழ்ந்தவராய் அவரவர் விரும்புவனவாகிய தனம் பிராணன் பசுக்கள் அரசாக்ஷி மோக்ஷம் இன்னும் வேண்டியவைகளை வேண்டியவாறு கொடுக்கின்றனர். அதுபோல் இந்த வருணபகவானும் செய்தவரென்று அறிமின். வேறுயாவரெனின், விஸ்வாமித்திர முனிவ ரொருவரே இவனுக்குத் தந்தையாவார். ஓசபையோர்களே! அஜிகர்த்தன் பொருளைநாடினான். அரசன் தன்நோயைநாடினான். வருணபகவான் மந்திரத்தை

நாடினன். விஸ்வாமித்திரரோ தற்பிரயோசனங்கருதாது அவனது துயரத்தைக்கண்டு மனமிரங்கி மந்திரோபதேசஞ் செய்து அவனைச் சங்கடத்தினின்று நீக்கினராதலின் அவருக்கே இவன் பிள்ளையாகத் தக்கவனென்றார். சபையாரனைவரும் இதுவே சரிசரியென்று ஒப்புக் கொண்டனர். அப்பொழுது விஸ்வாமித்திரர் அந்தப் பிள்ளையை வலது கையால் பிடித்துக் கொண்டு ஒகுழந்தாய்! என்கிரகத்துக்கு வருகவென்று மிக்க அன்போடு அழைக்க அந்தச் சுனச்சேபனும் அன்போடு அவர் பின் தொடர்ந்து போயினன். வருணபகவானும் ஏனைய ருத்விக்குகளும் சபையோர்களும் தங்கள்தங்களிடம்போய்ச்சேர்ந்தனர். அரசனும் அரோகதிடகாத்திரனாய் ஆனந்த முற்று தன்னரண்மனைக்குப்போயினன். இச்செய்திகள்யாவும் அரசன்மகனறிந்து பயமற்றவனாய் நகரத்தைநோக்கிவரும்போது தூதர்களறிந்து அரசனுக்குத்தெரிவிக்க அரசனுமாவலோடு எதிர்செல்ல குமாரனுங்கண்டு நமஸ்காரஞ்செய்தனன். தந்தை வாரியெடுத்து ஆனந்தக்கண்ணீரால் நனைத்து மார்போடணைத்து உச்சிமோந்து மடியில் வைத்துக்கொண்டு அவன் க்ஷேமங்களைவினவி ஆனந்தமுற்றுத் தானடத்திய நரமேதத்தின்செய்தியை விரிவாயெடுத்துச்சொல்லி அரசாண்டு சின்னாள்கழித்து ராஜசூயயாகஞ் செய்யவெண்ணி வசிட்டரைப்பிரார்த்தித்துஅவரைஹோதாவாகவைத்து யாகத்தைமுடித்து அவரைப்பூஜித்து அதிகச்சிறப்புடன் மரியாதைகளைச்செய்தனுப்ப அவர் இந்திரனுடையசபைக்குப்போயினர். அப்போது விஸ்வாமித்திரரும் அங்குவந்துசேர்ந்தனர். அவர் வசிட்டமுநிவரைப்பார்த்து ஆச்சரியமடைந்துஒமுநிசிரேஷ்டரே! இச்சிறந்தசன்மானம் உமக்கு யார்செய்தது?உண்மையைச்சொல்லுமென்றார். அவர் என்னுடைய எஜமானனும் மகாபராக்கிரமசாலியுமான அரிச்சந்திரன் மிக்க தக்ஷணையோடு ராஜசூய யாகமொன்றியற்றினன். அதில் அவன் செய்த சன்மானமாகும் இது வென்று சொல்லி அவனைப்புகழத் தொடங்கி, முநிவரே!அதில் ஹோதாவாகயானிருந்தேன்; அவனைப் போலும் அரசன் எவனிருக்கின்றான். மிகச்சத்தியவாதி? நிலையான விரதமுள்ளவன்;மிகுந்தகொடையாளி; தர்மசீலன்;உயிர்களைக்காப்பாற்றுவதில் ஆவலுள்ளவன்; அவனுக்கு நிகரானஅரசன் முன்னிருந்ததுமில்லை; இனிவரப்போகிறதுமில்லை; தானஞ்செய்கிறதே தன் சுபாவமாகவுள்ளவன்;மஹாசூரன் என்றார். இவ்வகையாய் ஓயாமல்

அரிச்சந்திரனைப் புகழ்கின்ற புகழ்ச்சியை விஸ்வாமித்திர முனிவர் கேட்டு அதிககோபங்கொண்டு கண்சிவந்துவசிட்டரைநோக்கி,ஓமுனி புங்கவரே! யாகஞ்செய்கிறேனென்று வருணபகவானை வஞ்சித்தவ னும் கபடத்தில் ஆவனுள்ளவனும் பொய்சொல்லுவதில் சலிப்பில் லாதவனுமான அந்த அரிச்சந்திரனை அளவுகடந்து நீர் பலமுறை யும் புகழ்கின்றீரே! நீர் அவனுக்குள்ளனவாகக்கூறிய குணங்களெ ல்லாம் உண்மையாயின் யானவைகளைக் காண்கின்றேன். நான்பிறந் தது முதல் சம்பாதித்த தவத்தையும் வேதசாஸ்திரம் படித்த புண் ணியத்தையும் பந்தயமாய்வைக்கிறேன். நீரும் உம்முடையதவத் தை யெல்லாம் பந்தயமாகவையும். அவனை இந்தக்ஷணத்திற்றானே பொய் சொல்லுகின்றவனாகவும், தானஞ் செய்யாதவனாகவும்,மகா துஷ்டனாகவும் நான் செய்யாமற் போவேனாயின் என்னுடையபந் தயத்தை யிழந்துவிடுகிறேன். நான் சொல்லியபடி செய்வேனாயின் உம்முடைய புண்ணியத்தை நீரிழந்தவராக வெண்ணுமென்று கூறி சுவர்க்கலோகத்திலிருந்து மிகுந்தகோபத்துடன் தன் ஆச்சிரமம் வந்து சேர்ந்தனர்.

பதினேழாம் அத்தியாயம்
விஸ்வாமித்திர வசிஷ்டசம்வாதம் முற்றிற்று.



சுலோகம் (ருக)
அத்தியாயம் பதினேழுக்குச் சுலோகம் (கூகூ0)



உ

ஹ்ரீம்பதப்ரியாயைநமஃ

## பதினெட்டாம் அத்தியாயம்.

## * அரிச்சந்திரஸ்யஆரண்யகமனம்.



வியாசர் கூறுகின்றார்:—ஓ ஜனமேஜயனே! ஓர்காலத்தில் அரிச் சந்திரன் வேட்டையாடுதற்குக் காட்டுக்குப் போம்போது அவ்விட த்தில் அழகிய கண்ணும் மிக்க சுந்தரமுமுடைய ஓர் பெண் அழுது

* அரிச்சந்திரன் ஆரண்யம் அடைதல்.

கொண்டிருக்கக்கண்டு,ஓபெண்ணே!நீயார்? ஏனிங்குதனியேயழுகின்றனே?உன்னைத் துன்பப்படுத்தினர்யாவர்? உனக்குஎன்னதுக்கம்வந்தது? பயங்கரமான இந்தக்கானகத்தில் யாரால் விடப்பட்டனே? உன்கணவன்யார்? தந்தையார்? எனதுநகரத்தில் ஓர் அரக்கனும் பரஸ்திரீயைத் துன்பப்படுத்தான். வேறுபாவிகளுங்கிடையா. எவனுன்னைத்துன்பப்படுத்தினனோ அவனை விரைவாகக் கூறுவையாயின் நானவனைத் தண்டனைசெய்கிறேன். உன்துக்கத்தைச்சொல்லிவிட்டு நீவருந்துதலொழிந்து என் நகரத்தில் வசிப்பாயாக என்றான். அந்தப்பெண் தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே அரிச்சந்திரனைநோக்கி, ஓஅரசனே! மஹருஷியான விஸ்வாமித்திரர் என்னைக்குறித்துக் கொடூரமான தபஞ்செய்கிறார். அதுதான் நான்கண்ணீர் விடுதற்குக் காரணமென்ன; அரசன்,ஓ நங்காய் நீ சுகமாயிரு; இனி உனக்குத் துக்கம்நேரிடாது; உனக்குத் துன்பத்தை யுண்டுபண்ணுகின்ற அந்தமுநிவ ரியற்றுந்தவத்தை நான் தடைசெய்கிறேன்;நீ கவலையற்றிருப்பாயாக வென்றுகூறி, முநிவரிடம்போய் அவரைக்கண்டு வணங்கி,ஓ பிரபுவே! யாதுகருதி ஸ்திரீயினுடைய தேகத்தைத் தபசினல் வருத்துகின்றீர்?உண்மையைச்சொல்லுவீராயின் உமது கோரிக்கை யாதோ அதனையான் நிறைவேற்றுகிறேன்; தவஞ்செய்வதை விடும்;எழுந்திரும்;எழுந்திரும்;எல்லாமறிந்த முநிவரே! உலகிற்குத் துன்பத்தைவிளைவிப்பனவும் நடுங்குதற்கேதுவான பயங்கரத்தை விளைவிப்பனவுமான தவத்தை எனது நகரத்தில் ஒருவருஞ் செய்தல் கூடாதென்பது நீர் அறியீரோவென்று அதை மறுத்து நகரம்போயினன். முநிவர் மகாகோபங்கொண்டு அப்போதங்கு வசிஷ்டரிடத்தில் நடந்த சம்வாதத்தையும், இப்போது இங்கு தவத்தைத் தடைசெய்ததையு மெண்ணி நியாயவிரோதமாயும் பயங்கரமாயுமுள்ள சிலகாரியங்களை உத்தேசித்து அவற்றை நடத்தத்துணிந்து ஓரரக்கனைப் பன்றியுருவாகத் தவத்தாற்படைத்து அரசன்பால்ஏவினார். பெருத்தசரீரமுள்ள அந்தவராகம் யாவர்க்கும் பயங்கரமுண்டாகக் கொக்கரித்துக்கொண்டு அரசனுடைய தோட்டத்துட் புகுந்து அங்குள்ள தோட்டக்காரர் மருண்டோடும்படிச்செய்து மாலதிக்கொடிகளையும் கடப்பமரங்களையும் காட்டுமல்லிகைச்செடிகளையும் சண்பகம் தாழை முதலிய மரங்களையும் மல்லிகைக்கொடியேறியமரங்களையும் அலரிச்செடிகளையும் இன்னும் மென்மையான

புஷ்பச்செடிகளையும் முசுகுந்தம் அசோகம் மகிழம் திலகமுதலிய மரங்களையும் தன்கொம்புகளாற்றோண்டிப் பூமியைக்குடைந்து வேருடன்களைந்துவிட்டது; கொடிவகைகளைக் கறித்துவிட்டது. இந்த கோலாகலத்தைக்கண்ட தோட்டக்காரர்கள் ஆயுதங்களைக் கைக்கொண்டும் அதனைக்கொல்வதற்கு முடியாமலோட, அவர்களோடு பூமாலைதொடுக்கின்றவரும் பயந்து கூக்குரலிட்டோடிப்பயகம்பனத்துடன் அபயம் அபயமென்று அரசனைச் சரணடைந்தனர். அவர்களை அரசன்பார்த்து உங்கட்கு எதனாலிவ்விடுக்கணுண்டாயிற்று? எவர் இத்துன்பஞ்செய்தவர்? அவர்கள் இன்னாரென்று சொல்லுவீராயின் ஓம்ரேபாணத்தினால் அவர்களை நான்கொன்று விடுகிறேன். எவன் எனக்குச் சத்துருவாய் இத்துன்பத்தைச்செய்தானோ? பாபபுத்தியுள்ள அவன் தேவனோ? எவ்விதமான உருவமுள்ளவன்? எவ்வளவு பலத்தோடு கூடினவன்? எங்கிருக்கின்றான் சொல்வீராயின் நானவனைக் கூர்மையான வாளினால் அறுத்துவிடுகிறேனென்றுசொல்ல,அவர்கள் ஓ அரசனே! துன்பஞ்செய்தவர் தேவருமல்லர், அசுரருமல்லர், யக்ஷருமல்லர்,கின்னரருமல்லர், பெருத்தசரீரமுள்ள ஒரு பன்றியாகும். அது உம்முடையதோட்டத்தில் மென்மையான புஷ்பச்செடிகளையும் கொடிவகைகளையும் தன்கொம்பினால் வேரோடுந்தோண்டிவிட்டது. நாங்கள் அதனைப் பாணங்களாலும் தடிகளாலும் அடிக்க அது சிறிதும் பயப்படாமல் எங்களையே துரத்திக்கொண்டு வருகின்றதென்றார். அரசன் அதனைக்கேட்டுக் குதிரைமீதேறி யானைமுதலிய சதுரங்கசேனைகளோடும் அத்தோட்டத்துட்போய் அங்கு கொறு கொறென்று சப்தித்துக்கொண்டிருக்கும் பன்றியையும் அதனாலழிந்துகிடக்கின்ற தோட்டத்தையுங் கண்டு கோபமேலிட்டவனாய்ப் பன்றியைக்கொல்வதற்கு வில்லைவளைத்து நாணேறிட்டு அம்பைத்தொடுத்து வேகமாயோடினன். இவன்வருகையைக்கண்டஅப்பன்றி சிறிதுமஞ்சாது பயங்கரமுண்டாகும்படி சப்தித்துக்கொண்டெதிரிலோடிவர,அரசன் ஒருஅம்பினைவிட்டான். அப்பன்றி அதற்குத்தப்பித்துக்கொண்டு அரசனைத் தாண்டியோடி

ற்று. அரசன் மற்றொருபாணத்தைவிட்டான். அதற்குந் தப்பித்துக் கொண்டு சிறிதுதூரம் கண்ணுக்குப்புலப்பட்டும் சிறிதுதூரம் புலப் படாமலும் பலபலவிதமாய்க்கூச்சலிட்டுக்கொண்டோடிற்று. அரச னும் அதனைவிடாமற் பின்றொடர்ந்தான் தொடரவே, அது அங்கு மிங்குமோடிச் சேனைகளைக்கடந்து மானுடசஞ்சாரமற்ற வேறொரு காட்டுக்குப்போயிற்று. அரசனும் யாவரையும்விட்டு அதனை விடா மல் ஓடினான். அப்போதுச்சிப்போதாகவே குதிரையோடு பசிதாக முற்றிருந்தனன். பன்றியு மதுகண்டு எதிர்வந்துநின்றது. அரசன் அதன்வரவையறியாது அதிகசோகமுடையவனாய் நாம் வழிதப்பி வந்துவிட்டோமே; இதுபயங்கரமான காடாகவிருக்கின்றதே; என் செய்வது;எங்குப்போவது; ஒருவருஞ்சகாயமில்லையேஎன்று சிந்திக் கும்போது நிர்மலமான ஓர்நதியைக்கண்டு உடனே குதிரைக்குத் தண்ணீர்காட்டித் தானுமருந்திச் சுகமுற்று நகரத்திற்குச்செல்லும் வழியறியாது திபங்குஞ்சமயத்தில் விஸ்வாமித்திரர் விருத்தப்பிரா மணவேடங்கொண்டு எதிரேநின்றனர். அவரைக்கண்டு அரசன் மகி ழ்ந்து நமஸ்கரித்தனன். அவர் உனக்குச் சுகமுண்டாகுகவென் றாசி புகன்று,நீமானுடசஞ்சாரமில்லாதகாட்டில் ஒருவனா யாதுகருதிவந் தனை? வந்த நீ ஏன்கலங்குகின்றனை? மனதைத் திடப்படுத்திக்கொ ண்டு என்னிடம் வந்தவரலாற்றினைக் கூறுவா யென்றனர். அரசன், ஓ முநிவரே! என்னுடைய நந்தவனத்தில் பயங்கரமான ஓர் பன்றி வந்து மென்மையான புஷ்பச்செடிமுதலானவற்றைத் தோண்டிவி ட்டது.நானதனைக்கொல்ல ஆயுதபாணியாய்ச் சேனைகளுடன்பட்ட ணத்தைவிட்டுப்புறப்பட்டுப் பின்றொடர்ந்தேன். அந்த மாயமுள்ள பன்றி என்கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்துபோயிற்று. சேனைக ளெல்லாம் எங்குநின்றனவோ அறியேன். யான் பசிதாகத்துடன் இவ்விடஞ்சேர்ந்தேன். இப்போது நகர்க்குச்செல்ல வழியறியாது மயங்குகின்றேன்.என்பாக்யவசத்தினால்இந்தக்காட்டில் அகப்பட்ட நீர் வழிகாட்டுவீரானால் நகரம்போய்ச்சேருவேன். நான் பிரசித்தி யுள்ள அயோத்தியாபுரிக்கு அரசனாயுள்ள அரிச்சந்திரன் இராஜ

சூயயாகஞ்செய்தவன். அவரவர்வேண்டுகோளின்படி வேண்டியவற்றைக்கொடுக்கின்றவன். ஓ பிராமணசிரேஷ்டரே! உமக்கு யாகம்செய்வதற்குத் தனம்வேண்டுமாயின் அயோத்திக்குவாரும்; போதுமானதனம் கொடுப்பேனென்றனன்.

பதினெட்டாம் அத்தியாயம்

அரிச்சந்திரஸ்ய ஆரண்யகமனம் முற்றிற்று.



சுலோகம் (௫அ)

அத்தியாயம் பதினெட்டுக்குச் சுலோகம் (௲௪அ)



உ

ஹ்ரீங்காரபீஜாயைநமஃ.

பத்தோன்பதாம் அத்யாயம்.

## * விஸ்வாமித்திர ஹரிச்சந்திரசம்வாதம்.



வியாசர் கூறுகின்றார்:—ஓ ஜனமேஜயனே! அரிச்சந்திரனுடைய வார்த்தையை விஸ்வாமித்திரர்கேட்டுச் சிரித்து ஓ அரசனே! பாபத்தைப்போக்கிப் பரிசுத்தஞ் செய்யவல்ல இப்புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பித்ருக்களுக்குத் தர்ப்பணஞ்செய்; இப்போது நல்லசுபகாலமாக விருத்தலால் உன்சக்திக் கேற்றவண்ணம் ஏதேனும் தானமுஞ்செய்; எவனொருவன் மஹாபுண்ணியதீர்த்தத்தைக் கண்டு ஸ்நானஞ்செய்யாது போவானோ அவன் ஆத்மகாதகனாவானென்று பிரம்ஹாவே சொல்லியிருக்கின்றாராதலால் என்சொற்படியே யாவுஞ்செய்;எனக்குச் சந்தோஷம்வரும்; நீ போகவழியுங் காண்பித்து நான் உனக்குத் துணையாய்வந்து உன்னை நகரத்துக்குக் கொண்டுபோய்விடுகிறேனென் றுரைத்தனர். அவ்வுரையை நம்பி அவர்வசப்பட்டுப்பித்தடைந்த அரசன் தான் ஏறிவந்தகுதிரையை ஒரு மரத்திற்கட்டிவிட்டு விதிமுறையே ஸ்நானதானாதிகளெல்லாம்

* விஸ்வாமித்திரருக்கும் அரிச்சந்திரனுக்கும் சம்வாதம்.

நடத்தி விஸ்வாமித்திரரைநோக்கி, ஓ ஸ்வாமி! நீர் வேண்டுமென விரும்பும் எதையும் நான் கொடுக்கவிருக்கின்றேன்; உமக்கு ரதகஜ துரக பதாதிகள் வேண்டுமா? பசுக்கள்வேண்டுமோ? பூமிவேண்டுமா? தனதான்யாதிகள்வேண்டுமா? எதுவேண்டுமோ அதனை இப்போதே கேளும்;ராஜசூயயாகத்தில் முனிவர்கள்கேட்கும் எந்தப்பொருளை யும் தவறாது கொடுக்கச் சங்கற்பஞ் செய்துகொண்டேன். அவ் வாறே இப்போது தருகின்றேன் நீர்விரும்புகிற எதையுங் கேளுமென்றான்.

விஸ்வாமித்திரர், ஓ அரசனே! உனது கீர்த்தியே பூலோகத்தில் பிரசித்திஎன்றும், தானஞ்செய்வதில் உனக்கு நிகராவாரிலரென்றும் சூரியவம்சத்து அரசருள்ளே பெருந்தானஞ் செய்கின்றவன் திரிச ங்கு புத்திரனாகிய நீயேஎன்றும்உனைப்போலும்இதுவரையிலும்பி றந்ததுமில்லை இனிப்பிறக்கப்போகிறதுமில்லையென்றும்,வசிட்டரால் முன்னரே கேள்வியுற்றிருக்கின்றேன். இப்போது நீகூறுவது மதற் கேற்கத்தானிருக்கின்றது. உன்னிடத்து நான் வேண்டுவது யாது ளது. ஆயினும் ஓ அரசனே! என்மகனுக்கு விவாகஞ்செய்யுங்காலம் வந்திருக்கிறபடியால் அதற்குவேண்டிய தனமாத்திரங் கொடுப்பா யென்றார். அரசன் ஓ பிராமணசிரேஷ்டரே! விவாகத்துக்காரம்பஞ் செய்யும். உமக்கு எவ்வளவு தனம்வேண்டுமோ அவ்வளவுந் தருகி ன்றேன், இது நிச்சயமென்று சொல்லியவளவில் வஞ்சகமுனிவர் தனது தவமகிமையைக்கொண்டு கந்தருவமாயையினால் ஓர் பிள்ளை யையும் கன்னிகையையும் அரசனுக்குக்காட்டி, இப்பிள்ளை என்ன அழகாயிருக்கின்றான்; இக்கன்னிகைக்கு வயதுபத்து; இப்போது இவ்விருவர்களுக்குத்தான் கலியாணமாகவேண்டும். இவர்களுக்கு விவாகஞ்செய்விப்பதினாலுண்டாகும் புண்ணியம் ராஜசூயயாகத்தா லுண்டாகும் புண்ணியத்தினும் மிக்கதாமென்றார். அரசன் அவ்வார் த்தையைக்கேட்டு முனிவர்மாயையினால் மோகமடைந்து அப்படியே செய்கின்றேனென்று பிரதிக்ஞைசெய்து மௌனியாய்நிற்க;முனிவர் அரசனை யழைத்துக்கொண்டுபோய்ப்பட்டணத்திற் சேர்த்துவிட்டு தன்னாச்சிரமம் வந்துசேர்ந்தார். சிலநாள் கழிந்த பின்னர் அவர்க ளுக்கு விவாகத்தைமுடித்துவிட்டு அரசனைநோக்கி இப்போது கலி யாணமேடையிலிருக்கும் வரனுக்கு உனக்குத்தோன்றுந்தானமொ

ன்றைச் செய்யுமென்றான். அரசன் ஓ பிராமணரே! உமக்கிஷ்டம் எதுவோ அதைச்சொல்லும் கொடுக்கின்றேன். அது இந்தச்சமயத்தில் கொடுக்கத்தகாத பொருளா யிருந்தாலும் கொடுக்கின்றேன். இப்போது நான் கீர்த்தியடையும் எண்ணமே யுடையேன். எவன் பரலோகசுகத்தைக் கொடுக்கும்படியான கீர்த்தியைச் சம்பாதிக்காம லிருக்கின்றானோ அவன்மிக்க சம்பத்துடையவனாயினும் அவனுடையவாழ்க்கை வீணாகுமன்றோ?என,முனிவர்,ஓபிரபுவே!நீவிரும்பியது கீர்த்தியே யாமாயின் பரிசுத்தமான கலியாணமேடையில் யானை குதிரை ரதம் ரத்னம் முதலானவைகளால் நிறைந்துள்ள ராஜ்யத்தைப் பரிவாரங்களுடன் வரனுக்குத் தானஞ்செய்வாய் அது எனக்குச் சந்தோஷ மென்றார். அப்படியே கொடுத்தேன் கொடுத்தேனென்று விஸ்வாமித்திரனுடைய மாயையினால் மயங்கிய அரசன் சிறிதும் ஆலோசனையின்றிச் சொன்னான். அம்முனிவரும் தான் பெற்றுக்கொண்டதாக வொப்புக்கொண்டனர். மறுபடியும் தனக்குத்தகுந்த தக்ஷிணை தரவேண்டுமென்றும், தக்ஷிணையின்றிச்செய்யுந்தானம் பயனற்றதென்று கூறியிருக்கின்றபடியால் தானபலனையபேக்ஷித்தவன்தானத்துக்குத்தக்க தக்ஷிணை தரவேண்டுமென்று, முனிவர்கூறவும் அரசன்கேட்டு ஆச்சரியமடைந்து அந்ததக்ஷிணை எவ்வளவோ அதை நீரேசொல்லுவீராயின் நானதனைத்தடையின்றிக் கொடுக்கின்றேனென்றார். முனிவர் இரண்டரை பாரம்பொன் கொடுக்கவேண்டுமென்றார். அதற்கரசன் அப்படியே கொடுப்பதாக வொப்புக்கொண்டு, பின்னர் அதிலுள்ள நன்மை தீமைகளாகிய சாதகபாதகங்களைச் சிறிது சிந்தித்துத் திகைத்து நின்றான். நிற்கும்போது சேனாதிபதி முதலானவர்கள் அருகில்வந்து வரையாது கொடுக்கும் வள்ளலே!என்று போற்றி,இப்போது சிந்தனையுடன் தேவரீரிருப்பதாக வறிகின்றோம்; அஃது யாதென்ன அரசன் அதற்கொன்றுஞ் சொல்லாமல் தான் ஆலோசனையின்றிச்செய்தகாரியத்தைச்சிந்தித்துக்கவலைகொண்டமனத்தனாய் அந்தப்புரத்திற்குப் போயிருந்து எல்லாப்பொருளையுந் தானமாகக்கொடுத்த நாம் மீண்டும் தட்சணைகொடுக்க ஒப்புக்கொண்டோமே, இதுவென்னஅறிவீனம்?திருடன்போல் காட்டி லிந்தப்பார்ப்பான் வஞ்சித்துவிட்டானே! ராஜ்யமுழுவதும் கொடுத்தது மன்றி இரண்டரைபாரம் பொன்னுங்கொடுக்க வொப்புக்கொண்டோமே! அந்தப்பொன்

னுக்கென்னசெய்வோம்? முனிவன்செய்தகபடமறியாமல் புத்திகெட்டுப்போனேனே! தபசியானபிராமணன்நம்மைத்தபிக்கச்செய்தனனே யூழின்வலி யறியாமற்போனேனே! ஆ தெய்வமே! இனிநடக்கவிருப்பதனை அறிவாரார், என்று சிந்தாகுலமுற்றிருந்தான். அப்போது அவன்மனைவி அங்குவந்து சிந்தாகுலனாயிருந்த நாயகனைப்பார்த்து, நீர் கவலைகொள்ளத்தக்க குறையொன்றுங்காணேன். காட்டிலிருந்த நமது பிள்ளையும் வந்துசேர்ந்தான். ராஜசூயயாகமும் சிறப்பாகச் செய்து முடித்தோம். உமக்குமேற்பட்டபலமுடைய சத்துருக்கள் எவ்விடத்துங் கிடையாது. உமக்குத்தாழ்ந்த பலஹீனர்களான படைகளுங் கிடையாது. நரமேதஞ் செய்செய் என்று அடிக்கடிவந்த வருணனுஞ் சந்தோஷத்தோடுபோயினன். எவ்வகையானுங் குறைவில்லாத நீர் வியசனப்படுவது எதற்கு? அதைச்சொல்லும். சிந்தாகுலத்தால் தேகஞ் சீர்ணித்துப்போகுமே? அது போன்ற மரணம் வேறொன்றுண்டோ! ஓ அரசனே! சோகத்தை விட்டுவிடும். நீர் சமர்த்தரல்லவா சுகமாகவிரும் என்று தேற்ற அவளன்பான வார்த்தையினால்தேறி, மனம் சிறிது தணிந்து கவலை வந்ததற்கான காரணத்தைச் சிறிது அவளுக்குக் கூறி, போஜனஞ் செய்யாமலும் மிருதுவான படுக்கையில் சயனங்கொள்ளாமலும் இராப்பொழுதைக்கழித்து, காலையிலெழுந்து சந்தியாவந்தனாதி நித்தியகருமங்களைச் செய்யும்போது, அரசாக்ஷிமுதலிய வனைத்தையும் அபகரித்த விஸ்வாமித்திரமுனிவர் வந்தனர். வந்தவர் அடிபணிந்து நிற்கும் அரசனைப்பார்த்து, ஓ அரசனே! அடிக்கடி உன்னிடம் வருவதென்றால் என்னால் முடியுமா? இவ்வரசானது என்னுடையதென்று சொல்லியநீ அதனை இன்னும் ஏன் விடாமலிருக்கின்றாய்? இரண்டரைபாரம்பொன்னை எப்போது கொடுப்பாய்? நாளை நாளையென்று சொல்லாதே. கொடுப்பதானால் இப்போதே கொடுத்து சத்தியவானாயிருப்பாய் என்றுசொல்ல, அரசன் அதற்கு இந்த இராச்சியத்தை உமக்குக்கொடுத்துவிட்டேன். இப்போதேவேறிடத்துக்கு போகின்றேன். நீர் சிந்தைப்படாமலிரும். எனக்குண்டாயிருந்தபொருளெல்லாம் உம்முடையதாயிற்றே! வேறுபொருளேது! உமக்குக் கொடுக்க வொப்புக்கொண்டதக்ஷிணையை இப்போது கொடுக்கச் சக்தியற்றவனா யிருக்கின்றேன். எனக்கெப்போது கிடைக்கின்றதோ அப்போது கொடுக்கின்றேன் என்று மறுமொழி கூறினன். பின்பு

மாதவி என்னும் தன்மனைவியையும் பிள்ளையையும் பார்த்து, யான் யானை குதிரை ரதம் ரத்னம் சுவர்னம் முதலான சகல சம்பத்தோடு இந்தராச்சியத்தைகல்யாணமேடையி லிந்தமுநிவர்மகனுக்குத்தான ஞ்செய்துவிட்டேன் தானமாகாதிருப்பவர் நாம்மூவரே. இனி நாம் அயோத்தியைவிட்டுக் காட்டில் வாசஞ்செய்யப்போவோம் என்று முநிவரை நமஸ்கரித்து அரண்மனையைவிட்டு வெளிப்பட்டு நடந்த னன். ஊழின்வலி யிப்படியு மிருந்ததோவென்று மனைவியும் மகனும் அவன்பின்நடந்தனர். நகரத்திலுள்ளார் அந்தமூவரையும்பார்த்து ஆ! ஹா!! வென்று பெருஞ்சத்தமிட்டழுதார்கள். அரசனே! என்னகாரியஞ் செய்துவிட்டீர்? ஆ! ஹா!! உமக்கும் இந்த கஷ்டம் நேரிட்டதே! தெய்வமும் உம்மை வஞ்சித்துவிட்டதே என்று பதறி னர். அந்த விஸ்வாமித்திரர் முநிவராயிருந்தும் சிறிதும் இரக்க மில்லாதவராயினரே, அவர் பிரம ருஷியாவராவென்று அந்தண ரெல்லாம் நிந்தித்துக் கதறினர். இவ்வண்ணம் யாவரும் துக்கத்தில் மூழ்க அரசன் போகும்போது, விஸ்வாமித்திரர் அரசனை வழிமட க்கி தக்ஷிணையாகக் கொடுக்கிறேனென்று சொன்ன பொன்னைக் கொடாமற்போகின்றனையே; இல்லையென்றுசொல்லிவிடு; அப்போது அதை நான்பெற்றவனுகவே மகிழ்ந்து போகின்றேன். ராஜ்யத்தை யுந் தனத்தையும் கொடுத்துவிட்டதைப்பற்றி உனக்கு வருத்தமிரு ந்தாற்சொல்லு; நானதைத் திருப்பிக்கொடுத்துவிடுகிறேன். கொடுக் கிறேனென்றுசொன்னதைக்கொடுக்கவேண்டுமென் றுனக்கெண்ண மிருக்குமாயின் கொடுத்துவிட்டிருப்பாயன்றோ வென்று விஸ்வா மித்திரர் சொல்லும்பொழுது அரிச்சந்திரன் வணங்கியசிரமும் வாடின முகமுமாய்க் கைகூப்பிநின்று சொல்லுகின்றான்.

பத்தொன்பதாம் அத்தியாயம்

விஸ்வாமித்திர அரிச்சந்திர சம்வாதம் முற்றிற்று.



சுலோகம் (சுஅ)

அத்தியாயம் பத்தொன்பதுக்குச் சுலோகம் (௲௬௰௧)



ஹ்ரீங்காரமந்திராயைநம.

## இருபதாம் அத்தியாயம்.

## * ஹரிச்சந்திரகிருததக்ஷிணாதானயத்னம்.



அரிச்சந்திரன் கூறுகின்றான்;—ஓ முனிவரே! உமக்கு நான்சொன்னபொன்னைக் கொடுக்காமல் போஜனம் செய்வதில்லை. நீர் மனம் வருந்தவேண்டாம். நான்பட்டகடனை எப்படியும் நீக்கிக்கொள்வேன். நான் சூரியவம்சத்திற்பிறந்த அரசன்; ராஜசூயயாகம்செய்தவன்; மனிதர்கேட்பனவெல்லாங்கொடுப்பவன்; இவ்வருஞ்சிறப்பினையுடையேனாகிய யான் முன்னொருமுறை வாய்விட்டுச்சொன்னதை மாற்றி இப்போது இல்லையென்று சொல்லேன். ஓ பிராமண சிரேஷ்டரே! உமக்குச்சொன்னதுபோல் கொடுத்துவிடுவேன் ஆனால் எனக்குப்பணம் வருமளவும் உம்மைப் பொறுத்திருக்க வேண்டுகின்றேனென்றான். விஸ்வாமித்திரர் ஓஅரசனே! உனக்கு பணம் வருமென்றுசொல்லுகின்றனையே அதுஎப்படி? அதுவருவதற்கான அரசும்பொருளும்போய்விட்டதே. உனக்குப்பொய்சொல்லாமலிருக்கஆசைமாத்திரம் வீணாகவிருக்கின்றது. அதனைச் சாதிக்க வழிகாணேம். பொருளில்லாத வுன்னை வருத்துவதும் வீண்தான். எனக்கு எப்படி பணம்வரும் அரசனே! இப்போதாவது கொடுக்கமாட்டேன் என்று சொல்லிவிடு நான்கொண்ட வீணாசையைவிட்டு சுகமாய்ப் போய்ச் சேருகிறேன். நீயும் மனைவிமகனுடன் நகரத்துக்குப்போவாய். அரசனே! இன்னமுஞ் சொல்கின்றேன். கொடுப்பதற்கு பொன்னிருக்கிறதா? இல்லையே! இல்லாமலிருக்கிறதை இல்லையென்று சொல்வது உண்மைதானே? நீ இல்லையென்றால் உண்டென்றுகொடுத்ததாக மனமகிழ்வேன். என்னசொல்கின்றாயென்றுகேட்கவும், அரசன்கேளாதவன்போல் நடந்துகொண்டே ஓ பிராமணரே! இந்தவெறும்பேச்சு ஏன்பேசுகின்றீர்? மனதைத்தைரியப்படுத்திக்கொள்ளும். நான் கொடுத்துவிடுகிறேன். என்பத்தினியும், புத்திரனும், நானும்திடமான சரீரமுடையவர்களா யிருக்கின்றோம். எங்களை ஏவலாட்களாய் ஒருவருக்கு விற்றாயினும் எங்கள்கடனைத்

* அரிச்சந்திரன் தக்ஷணைகொடுக்கப்பிரயத்தனப்படுதல்.

தீர்க்கின்றோம். இக்காசிநகரத்தில் எங்களை வாங்கிக்கொள்ளுகிறவரைப்பாரும். அவருக்கு நாங்கள் அடிமைப்பட்டு இரண்டரைபாரம் பொன்னையும் வாங்கிக்கொடுக்கின்றோம். நீரதனைப்பெற்றுச்சந்துஷ்டராய் என்னால் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை ரக்ஷித்துக்கொண்டிருமென்று, விசாலாக்ஷிசமேதராய் விஸ்வநாதர் வீற்றிருக்கும் காசிப்பட்டணஞ்சேர்ந்து, அவ்வழகான நகரத்தைப்பார்த்து, பிறந்த பயன்பெற்றேனென்று களித்து, கங்காநதியிலே ஸ்நானஞ்செய்து தேவபிதுர்தர்ப்பணமும் தேவபூஜைமுதலியனவும் செய்து முடித்தான். பின்னர் ஆ! ஹா!! அழகான இந்தக்காசிப்பட்டணம் மனிதரால் அனுபவிக்க ஆகுமோ? சூலதாரியாகியசிவனே யநுபவிக்க ஆகுமென்றெண்ணிப் பத்தினியுடன் வியசனப்பட்டுக்கொண்டு உள்ளே நுழைந்து நான்கு திசையும்பார்த்து நம்மை விலைக்குக் கொள்ளத் தக்க கனவான்கள் இங்குள்ளாரென்னு நம்பிக்கை வரப்பெற்று தக்ஷிணைக்குநிற்கும் விஸ்வாமித்திரரைவணங்கிக்கைகூப்பி; ஓஸ்வாமி! நான் என்மகன் என்பத்தினி ஆக மூவருமிருக்கின்றோமல்லவா? எங்களால் உமது தக்ஷிணையைத்தரப்பெறுவீர். இப்பொழுதேவேறு காரியம் ஏதேனும் என்னால் நடக்கவிருந்தால் அதைசொல்லுமென்றுகேட்க, முனிவர் (இன்னும் வார்த்தைசொல்லிக் கொண்டிருக்கின்றனையன்றிப்பொருள்கொடுத்தாயில்லை வார்த்தை சொல்லவேண்டாம்.) நீ முன்னே ஒரு மாதத்தில் கொடுப்பதாய்ச் சொல்லியது நினைவிருக்கின்றதா? அம்மாதமும் முடிந்தது. என்தக்ஷிணையைக் கொடுத்துவிடுவாயென்ன, ஐயா! அந்தக்கெடுவுமுடிய இன்னும்ஒன்றரை நாளிருக்கின்றது. அதுதவறாமல் பார்த்துக்கொள்ளும் என்று சமாதானங்கூற, ஆனால் நான்போய்வருகின்றேன்; நான் மறுமுறை வரும்போது பணந்தரத் தவறினால் சபித்துவிடுவேனென்று போயினார். அரசன் முநிவர்கூறிய இரக்கமற்றமொழியைக்கேட்டுச்சிந்தை வருந்தி அவருக்குக்கொடுப்பதாக விசைந்த தக்ஷிணையை எப்படி கொடுப்போம்! இக்காசியிலுள்ள அநேகம்பிரபுக்கள் அயோத்தியில் நமக்கு நட்பினராயிருந்தனரே! அவர்கள் இங்கு எங்கிருக்கின்றனரோ? நான் விரும்பியிருக்கும் பொன் யாவரிடங் கிடைக்கும்? முன் சிநேகமில்லாத ஒருவரிடமிருந்து ஒன்றைப் பெறுவது யாசகமாகும். அது அரசருக்கழகன்று; நீதியுமன்று. ஈதல் ஓதல் வேட்டல் என்னு மூன்றுமே அரசருக்கடுத்ததென்று தருமசாஸ்திரங்களிற்

சொல்லப்பட்டிருக்கிறது. பிராமணனுக்கு ஒப்புக்கொண்ட தக்ஷிணை கொடாமற்போவோமாயின் அவன்சொத்தை நாம் அபகரித்ததாக முடிவதுமன்றி, அந்தப் பாவத்தால் மறுபிறப்பில் புழுவாய்ப்பிறக்க வருமே! இதனால் மரணமடைவோமென்று துணிவதற்கு மில்லை. ஆகையால் நாம்விலைப்பட்டு நமதுகடனைப்போக்கிக்கொள்வதே நன்றாகுமென்று தலைசாய்த்துச் சிந்தித்துப் புலம்பிக்கொண்டிருந்த அரசனை அவன்மனைவி பார்த்து அழுதுகொண்டே தாழ்ந்த குரலோடு, என் நாதனே! சிந்தாகுலப்படுவதை விட்டுவிடும். நமது குலதர்மத்தைக் கடைப்பிடியும். உண்மையற்றவன் பிணத்திற் கொப்பாவான். ஆகையால் சத்தியத்தைக் காப்பாற்றுவதினும் ஒருவனுக்குச் சிறந்ததருமம் வேறொன்றையுங் காணேம். பொய் கூறும் வாக்குடையவன் செய்கின்ற அக்னிகாரியம் வேதபாடம் தானம் முதலியசகல சற்கர்மங்களும் பயன்படாமற்போம். அறிவுடையாரைக் கடைத்தேற்றற்கே தர்மசாஸ்திரத்தில் சத்தியம் சொல்லப் பட்டிருக்கிறது மேலும்பாவிகள் மேன்மேல்கெட்டுப்போவதற்கே உலகில் பொய்மையுளதாயிருக்கிறது. இவையெல்லாம் பெரியோரால் கூறப்பட்டுள்ளன. நூறஸ்வமேதமும் ராஜசூயயாகமுஞ்செய்துள்ள அரசனை அசத்தியவாக்கொன்று சுவர்க்கத்தினின்றும் வீழ்த்திவிட்டதல்லவா? என்று அரசன்தேறக் கூறினள். அது கேட்ட அரசன் வம்சவிருத்தியைச் செய்பவனுன இந்தப் பிள்ளைக்கு சொல்லவேண்டியது ஏதாவது இருந்தால் சொல்லென்றான். அவள் அவனுக்குச் சொல்லவேண்டிய அவசியமொன்று மில்லை அரசனே! நீ பொய்சொல்லவேண்டியதில்லை. புத்திரன் கொடுக்க வேண்டியபலனைக் கணவனுக்குஸ்திரீகொடுக்கிறவள். ஆதலால்என்னைவிற்று வரும் பணத்தைப் பிராமணனுக்குத் தக்ஷிணை செலுத்திவிடும் என்று சொல்லினள். அந்தச்சொல் செவியிற் புகுந்த மாத்திரத்தில் அரசன் மூர்ச்சித்து விழுந்து பின்னர்தெளிந்தெழுந்து துக்கித்து நகங்கையே! முன் என்னைப் புன்னகையோடு இன்சொல்லால்மகிழ்வித்த நீ இப்பொழுது வன்சொல் கொண்டு வாட்டிவிட்டாய். ஆ! இப்படியும் பேசக் கற்றிருக்கின்றனையோ? கற்றிருந்தாலும் அதை என்பால் பேச எப்படி துணிந்தனை? என்று மூர்ச்சையாயினன். அதனைக் கண்ணுற்றமனைவி அரசனைப்பார்த்து இரக்கமுற்றுதுயரத்தோடு, ஆ ஆ மஹாராஜ! நான் சொல்லத்தகாதசொல்

லச் சொன்னேனென்று இந்திரனிலும் உபேந்திரனிலும் மேலான வனும் பூமண்டலத்துக்குநாயகனும் செவந்த பாதங்களையுடை யவனும் விளங்கும்நீ இவ்வாறுபூமியில்வீழ்ந்து துக்கிக்கின்றனையே அந்தணர்களுக்குக் கோடிகோடியாகத் திரவியங்கள் கொடுக்கும் நீ இவ்வாறுசோபித்து பூமியில்வீழ்ந்து கிடக்கலாமா? தெய்வமும் உன்னை இவ்வாறுசெய்ததே! ஆ! ஆ!கஷ்டம்?கஷ்டம் என்று சொல் லிக்கொண்டே நாயகனுடைய துக்கத்தைத்தாங்கப் பெறுதவளாய் மூர்ச்சையடைந்து கீழேவீழ்ந்தாள். இவரிருவரும் இவ்வாறுக, இடையேயிருந்த குழந்தை பசியினுல் பீடிக்கப்பட்டு ஓ அண்ணு! அண்ணு! எனக்கு அன்னம் கொடு. ஓ தாயே! எனக்குப் போஜன மிடு. எனக்கு அதிக பசியுண்டாயிருக்கிறது; என்ணு உலர்ந்து போயிற்று என்றழத்தொடங்கினுன்.

இருபதாவது அத்தியாயம்

அரிச்சந்திரகிருததக்ஷிணுதானயத்னம் முற்றிற்று.



சுலோகம் (சஙு)

அத்தியாயம் இருபதுக்குச் சுலோகம் (ஹாஙுசு)



உ

ஹ்ரீங்காரலக்ஷ்ணுயைநமஃ

**இருபத்தோன்றம் அத்யாயம்.**

*** ஹரிச்சந்திரகிருதசோகம்.**



வியாசர் கூறுகின்றுர்:-அரிச்சந்திரனும் அவன்மனைவியும் மக னும் துக்கித்துக்கொண்டிருக்க விஸ்வாமித்திரர் எமன்போல மஹா கோபங்கொண்டவராய்த்தன்னுடையபொருளைக்கேட்பதற்குவந்து விட்டார். அவர்வந்த வேகவோசையால் சற்றுவிழித்து அவரைப் பார்த்து மீண்டும்மூர்ச்சையடைய, அம்முனிவர் ஜலத்தைத்தெளி த்து மூர்ச்சைதெளியச்செய்து,ஓ அரசனே! எழுந்திரு; எழுந்திரு;

* அரிச்சந்திரனடைந்த சோகம்.

இது வென்னவித்தை? எனது பொருளைக்கொடுத்துவிடு; கடன் பட்டவருக்குள்ள துக்கம்தினந்தோறும்வளருமேயன்றிக்குறையுமா வென்று சொல்ல, அரசன்விழித்துப்பார்த்து அந்தோ! முனிவரோ வந்திருப்பதென்று மறுபடியுமூர்ச்சையடைந்தான். பின்னும் அர சனைக்களைதெளிவித்து ஓ அரசனே! எனக்குப்பொன்னைக்கொடுக்க எண்ணுந்தோறும் உனக்குமூர்ச்சையுண்டாகின்றதோ? நன்று! நன்று! கொடுப்பதிலே உனக்குறுதியிருக்குமாயின் என்தக்ஷணை யைக்கொடுத்துவிடு. சூரியன்பிரகாசிக்கின்றதும் சலத்தில்பூமிமிதக் கின்றதும் சுவர்க்கலோகமிருக்கின்றதும் சத்தியத்தினலன்றோ? ஒரு சத்தியம் ஆயிரம் அஸ்வமேதத்துக்குச்சமானமாகும். அதனி னுஞ்சிறந்தகவுரவம்வேறில்லை. இச்சத்தியம்உன்னிடத்துளதெனில் அதைரியமும் துக்கமுமுண்டாகுமோ? இதன்சிறப்பைஇப்போ தெடுத்துச்சொல்வது வீணாகும். இதனாலெனக்கென்னபிரயோஜன முண்டாகும். எனதுதக்ஷணையை சூரியன் அஸ்தமனமாகுவதற் குள்ளே கொடாதுபோவையேயாயின் உன்னைச்சபித்துவிடுவேன். இது நிச்சயமென்று கோபத்தோடு முனிவர்சொல்லிப்போயினர் போக,அவருக்குமிகவும்பயந்தவனாய் அந்திப்பொழுதுக்குள் தனம் எங்கேகிடைக்கப்போகின்றது. கடன்காரனால் நாம்கவலைப்படும்படி வந்துவிட்டதே யென்று துக்கித்துக்கொண் டிருந்தபோது அவ் விடத்தில் அநேகபிராமணரோடுசகலசாஸ்திரசம்பந்நனான ஒருபிரா மணன் ஒருவீட்டினின்றும் வந்தான். அவனை ராஜபத்தினிபார்த்து தன்மனத்தில் ஓர்தைரியங்கொண்டு அரசனைநோக்கி, ஓ என்நாய கனே! மூன்றுவருணங்களுக்கும் பிராமணன் தந்தையென்றுசொல் லப்பட்டிருக்கிறபடியால் தந்தையினுடைய திரவியத்தைப்புத்திரர் கள் அடையலாமே? ஆதலால் நமக்குவேண்டுந்தனத்தை இவரைக் கேட்போமென்று எனக்கோர்புத்தியுண்டாயிருக்கிறதென்றாள். ஓ பெண்ணே! கேட்க எனக்கதிகாரமில்லையே. ஏற்பதுபிராமணனுக் கேயன்றி க்ஷத்திரியனுக்கும் சர்வபூஜ்யனாகிய ஆசாரியனுக்குங் கிடையாதே.சரணமடைந்தவர்களுக்கு அபயங்கொடுப்பதும் ஜனங் களைரக்ஷிப்பதும் யாகஞ்செய்வதும் வேதமோதலும் தானங்கொடுத் தலுமேயன்றிப் பிறரைநோக்கிக்கொடென்றுகேட்பது அரசனுக்கு எப்பொழுதும் விதிக்கவில்லையே; இப்பொழுதும் கொடுக்கிறே னென்கிறவார்த்தையொன்றே என்மனத்தில்வைப்பாகவிருக்கிறபடி

யால் எவ்விடத்திலாயினுஞ்சென்று எவரிடத்திலாயினும் திரவியத்தைச்சம்பாதித்துகடனைக்கொடுத்துவிடுகிறேனென்றான்.சந்திரமதி ஓ பர்த்தாவே! நீர்சொல்வது சரியே. யாவருக்கும்பொதுவாகவும் மேலாகவுங்காலமொன்றிருக்கின்றது. அதன்முன் யாருடைய வழி தான்நிலைபெறும். அதுபரிபவத்தையும் சன்மானத்தையுங்கொடுக்கின்றது. புருஷனைத்தாதாவாகவும் யாசகனாகவுஞ்செய்வதும் அதுவே. பண்டிதனாகமாத்திர மிருக்கவேண்டியபிராமணனைக் கோபியும் பலசாலியுமாக்கி உம்மைராஜ்யத்தினின்றும் சேனையினின்றும் இப்போது நீக்கிவிட்டதே; இது காலத்தின்கொடுமையன்றோ? இதனை எண்ணிப்பாருமென்றாள்; அரசன், ஓ அறிவுடையாளே! எல்லாங் காலத்தின்வசமாயிருப்பினும் நமதறிவுவேறாயிருப்பதாகும். ஆகவே அந்த அறிவின்செயலும் ஒன்றுண்டென்றறிவாய்.எப்படியென்றால்கேட்பதாகிய தாழ்ந்ததிசைவந்த காலத்தில் கேட்பதற்கு அந்த அறிவு வருந்துகின்றது. அறிவு தோன்றியகாலத்தில் மானமேயிட்டு அதிகூர்மையான அக்கத்தி நாக்கை யறுத்துவிடுகின்றது. அறிவு தோன்றாதகாலத்தில்மானத்தைவிட்டு பிறரிடத்திற்சென்று கொடு கொடுஎன்று நாம் கேட்கின்றோம்.ஆகையால்அன்னியரையாசிப்பதில் எனக்குச்சிறிதும் இஷ்டமில்லை. ஓ மஹாநுபாவையே! நான்க்ஷத்திரியனாகையால் பிறரிடத்தில் ஒன்றையும் யாசிக்கமாட்டேன். என்கையால் சம்பாதிக்கப்பட்டபொருளைத் தினந்தோறும் தானஞ்செய்கின்றேனென்றான்.சந்திரமதி, உமக்கு எற்கமனமில்லாவிடினும் இது ஒன்று செய்யும்; இந்திரன்முதலியதேவர்களால் விதிப்படியே உமக்குக்கொடுக்கப்பட்டுள்ள நான் உம்முடைய பொருள். உம்முடைய ஆணைக்கும் ஆதரவுக்கும் உட்பட்டவள். ஆதலால் என்னைவிலைசெய்து அந்தப்பொருளைக் கொண்டுபிராமணன்கடனைக் கொடுத்துவிடுமென்றாள்.அவ்வார்த்தையைக்கேட்டு இவ்வார்த்தை இவள் சொல்லவந்ததேயென்றெண்ணி கஷ்டம் கஷ்டமென்று சொல்லித் துக்கத்தோடு அரசனழுதான். அந்தோ! நாம் சொன்ன நீதியை கஷ்டமென்பாராயின், என்னசெய்வோம் இது கஷ்டம் கஷ்டமென்று அவளுஞ் சொல்லி, நீரிதுசெய்யாமற் போவீராயின் பிராமணனிடுஞ் சாபமாகிய அக்கினியிற் கொளுத்தப்பட்டு நீசனாய்ப் போய்விடுவீர். என்னைச் சூதுக்காவது மதுபானத்திற்காவது ராஜ்யலாபத்திற்காவது அதிகசுகத்தை யநுபவித்

தற்காவது என்னைவிற்பீராயின் பழியும் பாவமுமுண்டாகும்; என்னை இப்போது விற்பது குருதக்ஷணைக்கே யாகலான் புகழுண்டாகும்; இதனை யோசித்துக் கவலைகொள்ளாது என்னை விற்று குருதக்ஷணையைக்கொடுத்து உமது சத்தியத்தை நிறைவேற்றிக்கொள்ளுமென்றாள்.

இருபத்தொன்றும் அத்தியாயம்

அரிச்சந்திரகிருதசோகம் முற்றிற்று



சுலோகம் (உஎ)

அத்தியாயம் இருபத்தொன்றுக்கு சுலோகம் (௲அ௲)



உ

ஹ்ரீங்காரஜபஸுப்ரீதாயைநம꞉

## இருபத்திரண்டாம் அத்தியாயம்.

## அரிச்சந்திர கிருத பத்நீ விக்ரயம்.



சூதர்கூறுகின்றார்:— இவ்வாறு மனையாட்டி தன்னைவிற்கும்படிப் பன்முறையுஞ்சொல்லிவர, அரசன் ஒகற்புடையாளே! உன்னை விற்று நான்கொள்ளும்பொருள் என்பொருளென்பதிற் சந்தேகமில்லை. உன்னிடத்து எனக்குள்ளதயையொன்றே என்னை அப்படி செய்யத்தடுக்கின்றது. அன்றியும் நீஎன்பொருளாயினும் பெண்பாலாக விருக்கின்ற வுன்னை விற்பது எனது ஆண்தன்மைக்கு அழகாகுமா? இது மிக்ககொடியவர்களாலுஞ் செய்யக்கூடாதவேலை. இக்கொடுஞ்சொல்லைச்சொல்ல உனது நெஞ்சும் நாவும் எப்படித் துணிந்ததோ வென்று பலவகையான இரக்கமொழிகளைக் கூறினான். பின்பு அதிக துக்கத்துடன் பட்டணத்திற் பிரவேசித்து கடைவீதியிற்சென்று கண்ணீர்விட்டு வாய்குழறி அப்பட்டணத்து ஜனங்களைக்கூவி எனதுவார்த்தையைக்கேளுங்கள். எனக்குப் பெண்டாகிய இவளை உங்களில் யாருக்காவது வேலையாளாகச்செய்து கொள்ளக் கருத்திருக்குமானால் சொல்லுங்கள். இதோவிற்கிறேன் இவளு

க்காகக் கொடுக்கும்பொருளை நான்வாங்கிக்கொள்ளுகிறேனென்று சொல்லும்போது சிலர் அரசனைப்பார்த்து இவள் யாருடையபத்னி? நீயார்? ஒருவன்பத்னியை நீவிற்கவந்தகாரணம் என்னவென்று கேட்டனர். அரசன் அவர்களைநோக்கி ஓநகரவாசிகளே! நான் இரக்கமென்பதைச் சிறிதுமறியாத கொடுமையாளி; மனிதனல்ல அரக்கன்; மிகவன்னெஞ்சன் ஆதலால் இத்தன்மையாகிய பாவத்தைச் செய்யத்துணிந்தேனென்றான். அப்போது விஸ்வாமித்திரன் விருத்த பிராம்மணவேடங்கொண்டு வந்து அரசனைநோக்கி, எனக்குவேலைக்காரியாக இவளைவிற்றுவிடுகின்றனையா? நான் வாங்கிக் கொள்ளுகிறேன். உனக்குவேண்டியபொருளைக் கொடுக்கிறேன்;என் மனைவி மெலிந்தசரீரமுள்ளவளாயிருப்பதினால் வீட்டுவேலைசெய்ய அவளுக்குத்திடனில்லை. இவள் என்வீட்டுவேலைக்குச் சரியானவளாகத் தோன்றுகின்றாள். ஆதலால் எனக்குக் கொடுத்துவிடு இதுவுந் தெய்வசகாயந்தான். நீவிற்கத்துணிந்த இவளை நான்வாங்கிக் கொள்ளுகிறேன். உனக்கெவ்வளவு பணங்கொடுக்கவேண்டுமென்றான். இரக்கமற்ற வஞ்சகனாகிய அப்பார்ப்பான் வார்த்தையானது அரிச்சந்திரனது மனதைப் பிளந்து மறுவார்த்தைசொல்லவொட்டாமல் அவனை நிறுத்திவிட்டது. அவன் நிற்குநிலையை அந்தப்பிராமணன்பார்த்து உன்மனைவியினுடைய காரியப்பாட்டையும் வயது வடிவு அழகுமுதலியவற்றையுமறிந்து நானே விலைமதித்துக்கொடுக்கிறேன்; வாங்கிக்கொள்வாய்;தருமசாத்திரத்தில், பெண்ணொருத்தி முப்பத்திரண்டிலக்கணத்திற் குறையிலளாய் நல்லொழுக்கமும் நற்குணமுமுள்ளவளா யிருப்பின் அவளைக் கோடிபொற்காசுக்கு மதிக்கலாமென்றும் அதுபோன்ற ஆடவனை பத்துகோடிக்குமதிக்கலாமென்றும் பெரியோர்கூறுவரென்றான். அதுகேட்ட அரசன் யாதொன்றுஞ் சொல்லாதிருக்க பிராமணன் அவனுடைய அநுமதியை எதிர்பாராமல் அவன் வஸ்திரத்தில் தனத்தைக்கொட்டிவிட்டு சந்திரமதியின் தலைமயிரைப் பிடித்திழுத்தான்.இழுக்க அவள், பிராமணரே! இப்பொழுது சிறிதுநேரம் என்னைவிடும் குழந்தையைப்பார்த்து விட்டு வருகிறேன். உம்மிடம் வந்தபின்னர் நான் பிள்ளையை எப்படிபார்க்கப்போகிறேனென்று சொல்லிக்கொண்டே ஓ குழந்தாயென் றவனைக்கூவி எனக்கு இந்ததிசைவந்துவிட்டது என்று சொல்ல, அவன் அலறிச்சமீபத்தில்வரும்போது அப்பா! நான்

ஒருவனுக்குப் பணியாளாகிவிட்டேன் என்னைத்தொடவேண்டா மென்றொதுங்கினாள். அவனதனைக்கேளாதவனாய் அம்மாவென்று கண்ணீர்விட்டழுதுகொண்டே ஓடிவந்து தாயினுடைய வஸ்திரத்தை இழுத்து இடறிவிழுந்தபோது பிராமணன் மிகக்கோபித்து அவனையடித்தான். அடிபட்டும் அம்மா அம்மா வென்று கூவிக் கொண்டே தன்னுடன்வந்த அப்பிள்ளையை சந்திரமதி பார்த்து ஓ பிராமணோத்தமரே! என்னிடத்தில் சிறிது தயவுசெய்து இந்தகுழந்தையையும் விலைக்குவாங்கிக்கொள்ளும்; இவன் இல்லாமல் என்னை நீர்வாங்கிக்கொண்டாலும் உமதுகாரியத்திற் குபயோகமில்லை. ஓ பிரபுவே! பாக்யஹீனையாகிய என் விஷயத்தில் இவ்வளவு தயவு செய்யுமென்று வேண்டினாள். அந்தப்பிராமணன் இதைவாங்கிக் கொண்டு பாலகனைக்கொடுக்கட்டுமென்று மீட்டும் பத்துகோடிபொன்னை அரசன்மடியிற்கொட்டிவிட்டு, அவனைப்பிடித்துத் தாயுடன் சேர்த்துக்கட்டி சிறிதுமிரக்கமின்றி அழைத்துக்கொண்டு போகத் தொடங்கும்போது அவள் அரசனைச்சுற்றிவந்துகைகூப்பி முழங்காலால் வணங்கிநின்று கண்ணீர்விட்டு என்பர்த்தாவாகிய இவர் செய்துள்ள தானமாகிய புண்ணியத்திலே ஒருதினையளவாவது இருக்குமானால் எனக்கு மறுபடியும் இவர் கணவராகவேண்டுமென்று வணங்கினாள். அரசன் தன்னுயிரினு மினிய மனைவியைப்பார்த்து மனங் கலங்கி யழுது ஆ ஆ இப்படியும் சொல்லலாயிற்றே சத்தியத்தோடு நல்லொழுக்கமும் நற்குண நற்செய்கைகளும் வாய்ந்து மரத்தினிழல் அம்மரத்தை விட்டுப் பிரியாதிருப்பதுபோல் நம்மைவிட்டுப் பிரியாதிருந்த இவள்பிரிய எப்படிவந்தது? அந்தோ! என்னைவிட்டுப் போகிற ஓ புத்திரனே! நீஎங்கேபோகிறாய்? நான் எந்த திக்கைநோக்கிப் போவேன்! என்துக்கத்தை நிவர்த்திசெய்வார்யார்? அந்தோ! ஓ ஐயரே! இராச்சியத்தை விட்டதினாலும் வனவாசம் பண்ணவந்ததனாலும் எனக்கு யாதொரு துக்கமுமில்லை; இப்போது பிள்ளையை விட்டுப் பிரியவந்ததனால் பெருந்துக்கத்துக் கிடனாகின்றேனென்று பிராமணரை நோக்கிச் சொல்லிவிட்டு மனைவியைப்பார்த்து உலகத்தில் கற்புடையவர்கள் நல்ல தங்கணவனுடனிருப்பதே பேரின்பமென்று நினைக்கின்றார்கள் அவர்களிற் சிறந்த உன்னை விட்டுவிட்டேனே. இக்ஷுவாகுவமிசத்திற் பிறந்தவனாயும் இராச்சியசுகத்திற்கெல்லாந் தகுந்தவனாயு மிருக்கிற என்னைப் புருஷனாக வடை

ந்த நீ இப்போது என்கண்ணுக்குமுன்னே அடிமைத்தன்மையடைந்து விட்டனையல்லவா? இப்படிப்பட்ட பெரிய துக்கசமுத்திரத்தில் மூழ்கிப்போன என்னை கறையேற்றிவிடுவாயென்று; மனைவியையும் மகனையும் பார்த்துப் பார்த்துப் பலவாறாகப் புலம்பிக்கொண்டிருக்கும்போதே சந்திரமதியை அந்தப்பிராமணன் சாட்டையினலடித்து அழைத்துக்கொண்டு போயினன். அதைக்கண்ட அரசன் துக்கத்துடன் பெருமூச்சுவிட்டு வாயுபகவானும் சூரியனும் சந்திரனும் மற்றசனங்களும் பார்த்தறியாத நம்முடைய மனைவியை யாவரும் பார்க்கவும் அடிமைப்பெண்ணென்று இந்தப்பிராமணன்சொல்லவுமாயிற்றே! ஆஹா! மென்மையானகையும் விரலுமுடைய சூரியவமிசத்திற் பிறந்த புத்திரனை உலகாளச்செய்யாமல் அந்தணனுளச் செய்தேனே! இந்த வன்னெஞ்சம்படைத்த என்னைச் சுடவேண்டும். எனக்கினியாளே! ஏ! குழந்தையே! பாபியான என்கெடுநடத்தை யிப்படியு மிருந்ததோ! இருவரையும் விற்கவந்தும் நானிறவாமலிருக்கின்றேனே! என்று அலறினன். அந்தப்பிராமணனே அவ்விருவரையும் பறபறத்து இழுத்துக்கொண்டு நகரத்தைக்கடந்து கண்ணுக்குப்புலப்படாமற்போயினன்.

அச்சமயத்தில் விஸ்வாமித்திரமுனிவர் சிஷியருடன்வந்து அரசனே! நீ சத்தியந்தப்பாதவனுனல் முன் கொடுக்கிறேனென்று சொன்னதக்ஷிணையைக் கொடுத்துவிடு என்று கேட்க, அரசன் ஓ முனிவரே! நமஸ்காரம் இந்தத்தக்ஷிணையை ராஜசூயயாகத்திற்குக் கொடுக்கிறேனென்றுசொன்னதற்கு எடுத்துக்கொள்ளுமென்றான். இந்தத்திரவியம் உனக்கு எப்படிகிடைத்தது? எப்படிசம்பாதித்தனை? அதனைச்சொல்லென்று முனிவர்வினவ, அரசன் ஓ மஹாநுபாவரே! அதைச்சொல்வதினல் உமக்கென்ன பிரயோஜனம்; அதைச்சொல்லவெண்ணினும் மேன்மேலெனக்குத் துயரமிகுகின்றதென்ன, முனிவர் ஆனல் இந்தப்பணம் கெட்டதாயிருக்கவேண்டும் நான் வாங்கமாட்டேன் இதுவந்தவழியையுண்மையாய்க்கூறுவாய் இது நல்ல அறவழியிலேவந்த பொருளாயின் கொடு; இல்லாவிடின்வேண்டாமென்றார். முனிவரே! என்பிள்ளையைப் பத்துகோடி பொன்னுக்கும் மனைவியைக் கோடிபொன்னுக்கும் நான் விற்றுவிட்டேன் இதனைப்பெற்றுக்கொள்ளும்உமக்குச்சொன்னபடிபதினெரு

கோடிபொன்னும் நான்கொடுத்துவிட்டேனென்று அரசன்சொல்ல முனிவர் இதையாநான் வாங்கிக்கொண்டுபோவது? இத்தக்ஷிணை ராஜசூயயாகத்திற்குத்தகுந்ததா? நீசொன்னபடி சீக்கிரத்தில் முழுத் தொகையும் கொடுப்பாயாக சொன்னதைக் கொடுப்பதற்கு முன் பின்யோசிக்கின்றபாவியே! நீ இப்பொன்னோடு என்னையொழிக்கலா மென்று நினைப்பையானால் என்தபோபலத்தினாலும் பிராமண்ய பல த்தினாலும் பிரபாவத்தினாலும் நான்கற்றுக்கொண்ட சுத்தமான வேதபாடத்தினாலும் நானுனக்குச் செய்யப்போவதைப் பார்ப்பா யென்று அடங்காத கோபங்கொண்டார். அரசன் ஓ முனிவரே! சிறிதுநேரம்பொறுத்திரும்; சரியாகத் தக்ஷிணை கொடுக்கிறேன். இப்போதுதான் மனைவியையும் புத்திரனையும் விற்றேன். மற்றதற் கும் ஈஸ்வரன்துணைசெய்வார் பொறுமென்று வேண்டினன். முனிவர் ஓ அரசனே! இன்னமும் பகற்பொழுதுமுடிய ஒருசாமமிருக்கின் றது அதுவரையில் பார்ப்பேன்; அதன்மேல் வேறுகெடுவு சேளே னென்றார்.

இருபத்திரண்டாம் அத்தியாயம்

அரிச்சந்திரன் செய்யும் பத்தினிவிக்கிரய முற்றிற்று.



சுலோகம் - (௩௪)

ஆக அத்தியாயம் இருபத்திரண்டுக்குச் சுலோகம் (௲௨௱௭)



௨

ஹ்ரீம்மத்யைநமஃ

இருபத்துமூன்றாம் அத்தியாயம்.

## * சாண்டாலகிருத அரிச்சந்திரகிரய க்ரஹணம்.



வியாசர் கூறுகின்றார்;— விஸ்வாமித்திரமுனிவர் கருணையென் பது சிறிதுமின்றி வன்னெஞ்சுடன் அரிச்சந்திரனைநோக்கி இப்படி சொல்லிவிட்டு அவன்கொடுத்த தனத்தை யெடுத்துக்கொண்டு போயினார். பின்னர் அரசன் மிக்க துயரமடைந்தவனாய் பெருமூச் செறிந்து தலையிறங்கிக்கொண்டு யாவருங்கேட்கப் பேரொலியோடு

* அரிச்சந்திரன் சண்டாளனுக்கு விலைப்படுதல்.

சூரியன் மறைவதன்முன்னே என்னை விலைக்கு வாங்கிக்கொண்டு என் துக்கத்தைத எவன் ஒழிப்பானோ அவன் விரைவில் சொல்லக்கடவனென்றான். என்று சொல்வதற்குமுன் எமதருமராஜன் ரோமங்களால் விகாரமாய்க் காணப்படும் மார்பும் பெருத்தமீசையும் கருத்துத்தொங்கிய வயறும் புலால்நாற்றம்வீசும் முறட்டுத்தேக முடையனாய் சவமாலையை அலங்காரமாகக் கையில் பிடித்துக்கொண்டு சண்டாள வுருவமேற்றுவந்து உன்னைநான் வாங்கிக்கொள்ளுகிறேன்; வேண்டியபணமெவ்வளவு சொல்லுவாயென்றான். மிகக்கொடுமையான பார்வையுள்ளவனாய் சிறிதேனுந் தயவில்லாமற் பேசுகின்ற அச்சண்டாளனை நீயாரென்று அரசன்கேட்க அவன் ஓ அரசனே! நான் ஒருசண்டாளன்; நீ என்னுணைவழிநின்று பிணத்துக்குக்கட்டியஆடையை யவிழ்த்துவைக்கவேண்டியது;இதுதான் நீசெய்யவேண்டிய வேலையென்றுசொன்னான். அரசன் ஓ சண்டாளனே! பிராமணனாவது க்ஷத்திரியனாவது என்னை வாங்கிக்கொள்ள வேண்டுமேயன்றி வேறொருவரென்னை வாங்குதல்கூடாது. உத்தமனை உத்தமனும் மத்திமனை மத்திமனும் அதமனை அதமனும் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று பண்டிதர்கள்சொல்லுகிறார்கள் ஆகையால் என்னை வாங்கவேண்டியவன், மேற்சொல்லியவர்களில் ஒருவனாயிருத்தல் வேண்டுமென்பதே எனதுகோரிக்கைஎன்றான். சண்டாளன் இந்தத் தருமந்தெரிந்த நீ உன்னை விற்கத்துணிந்து விலைகூறும்போது என்னை உத்தமன் வாங்கவேண்டுமென்றுகூறுது என்னெதிரில் யோசனையின்றி என்னை வாங்கிக்கொள்ளுங்களென்று இரைச்சலிட்டனையே. ஆலோசனைசெய்து எந்தமனிதன் பேசுகிறானோ அவனெண்ணியபடி எண்ணியதனை யடைகிறான். ஜாதிபேதம்வைக்காமல் பொதுவாய்க்கூவி இப்போது இந்தத்தர்மம்பேசுதல்முறையன்று. நீசொல்லியவனுக்குப் பொருள்கொடுக்க இஷ்டமும்சத்தியமும் உனக்குப் பிரமாணமா யிருக்குமானால் இப்போதுநான் கொடுக்கும்பொருளை வாங்கிக்கொள்ளுவாய். சத்தியமொன்றையே எண்ணுகின்றவனுக்கு நீசொன்னதருமம் வேண்டுவதில்லை. அசத்தியஞ்செய்பவன் அதமனாய் கோரமான நரகத்தில் அதிசீக்கிரமாய் விழுவான். அதைப்பார்க்கிலும் சண்டாளஜன்மம் நல்லது; பொய்சொல்லுவது நல்லதன்றென்று அந்தச்சண்டாளன் சொல்லிக்கொண்டு இருக்கும்போதே; விஸ்வாமித்திரமுநிவர் வந்து தனக்குண்டாகிய கோபத்தி

னுல் சுழல்கின்றகண்ணினுல் அரசனைநோக்கி இந்தப்பறையன் நீ எவ்வளவுபணங்கேட்கின்றனையோ அவ்வளவுபணமுங் கொடுக்கச் சித்தமாயிருந்தும் அதனைவாங்கி நீ எனக்குச் சொன்னபடி தக்ஷிணை முழுமையுங் கொடாமலிருக்கிறகாரணம் எனக்குத்தெரியவில்லை என்றூர். அரசன் ஓ கௌசிகமுநிவரே! சூரியவம்சத்திற் பிறந்த அரசன் நான்; இந்தப்பணத்துக்காக எப்படி சண்டாளனுக்கு அடிமைப்படுவேன்; இது என்மனத்தை வாட்டுகின்றதென்ன, முநிவர் ஓ அரசனே! இதுவெல்லாமெனக்கேன் சொல்லுகிறுய். இப்போதே எனக்குப் பணத்தைக் கொடுப்பாய் இல்லையாளுல் உன்னைச் சபித்துவிடுகிறேன். நீ சண்டாளனுக்கு அடிமையாவையோ பிராமணனுக் கடிமையாவையோ அது எனக்குத் தெரியாது;என்னுடைய தக்ஷிணையைக் கொடுத்துவிடு. சண்டாளன்தவிர உனக்கிப்போது பணம் கொடுப்பாரொருவரையுங் காணேம். இனி நான் பணம்வாங்காமல் வெறுங்கையோடும் போகேன். இன்னும் அரைநாழிகைப்பொழுதுதா னிருக்கின்றது அதற்குள்ளே நீ பணங்கொடுக்கின்றனையா; நான்சாபத்தை உனக்குக் கொடுக்கவா? என்னசொல்லுகிறுயென்றூர். அரிச்சந்திரன் மெய்மறந்து பிரேதம் போல் விஸ்வாமித்திரர் பாதத்தில் வீழ்ந்து ஐயா நான் உமக்கு அடிமையாளாக விருக்கின்றேன்.இந்தச்சண்டாளனுக்கு நான்அடிமையாவதென்றுல் என்மனம் மிக வருத்தப்படுகின்றது. உமக்காவதென்றுல் மிகவுஞ்சந்தோஷப்படுகின்றது. சண்டாளசம்பந்தம் மிகவும் கஷ்டமானதாதலால் நீர் தயவுசெய்ய வேண்டும். உமதிஷ்டப்படி எந்தச்சமயத்தில் எதுகட்டளையிடுகின்றீரோ அதைச்செய்ய சித்தமாயிருக்கின்றேன். என்று சொல்லவும் முநிவர் ஓ அரசனே! உன்னையடிமையாக அங்கீகரித்தேனென்றூர். அரசன் அதிகசந்தோஷத்தோடும் மறுமுறை தாய்வயிற்றிற்பிறந்ததாக வெண்ணிக் கொண்டு விஸ்வாமித்திரரைநோக்கி நான் சொன்னது சொன்னது தான் அதிற்சந்தேகம்வேண்டாம் சத்தியம். இப்பொழுது என்ன செய்யவேண்டுமென்றுன். வஞ்சகராகிய முநிவர் ஓ சண்டாளனே! இங்கேவா! நீ என்னடிமையாளுக்கு எவ்வளவுபணம்கொடுக்கிறுய் நான் இவனை உனக்குவிற்றுவிடுகிறேன் இப்போது வேலைக்காரன் வேண்டியதில்லை. எனக்குப் பணத்துக்கு அவசரமாகவிருக்கின்றது என்னசொல்லுகிறு யென்றுகேட்கவும் சண்டாளன் சந்தோஷமாய்

சமீபத்தில்வந்து பிரயாகையில் பத்துகாதத்துக்குப் பத்துகாதம் ரத்தினம் நிறைந்துள்ள பூமியை உமக்கு நான் கொடுத்துவிடுகிறேன். இவனைவிற்றுவிடும் அவனும் பணத்துக்கு மிகவும் அவதிப்படுகின்றான். அதனை நீரே தீர்த்தவராவீரென்று சொல்லி அந்த க்ஷணமே ஆயிரம் ரத்னங்களும் ஆயிரம் பொன்காசுகளுங் கொடுக்க முனிவர் வாங்கிக்கொண்டனர். அரிச்சந்திரன் முன்போல் மனவருத்தப்படாமல் சந்தோஷமாய் நமக்கு விஸ்வாமித்திரமகாமுனிவர் பிரபுவல்லவா; அவர் எந்தெந்தவேலையை நம்மால் செய்வித்துக் கொள்ளுகின்றாரோ அவையெல்லாம் நாம் செய்யவேண்டியதுகடமைதானே; என்று எண்ணும்போது, ஓ மஹாநுபாவனே! நீகடனிலிருந்து நீங்கிவிட்டனை. விஸ்வாமித்திரருக்குச் சொன்னபடி தக்ஷிணைகொடுத்துவிட்டனை. என்று ஆகாயத்தில் அசரீரிவாக்குண்டாயிற்று. தேவர்கள் புஷ்பவருஷம் வருஷித்தார்கள். இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் நல்லது நல்லதென்று அரசனைப்புகழ்ந்தார்கள். அரசனும் சந்தோஷத்துடன் விஸ்வாமித்திரரைப்பார்த்து ஓ முனிவரே! எனக்குத்தாயுந்தந்தையும் பந்துவும் நீர்தாம்; என்விஷயத்தில் என்னவெண்ணியோ ஒருக்ஷணத்தில் என்னை மோசஞ்செய்துவிட்டீர் மறுக்ஷணத்திலேயே கடனில்லாதவனுகவுஞ் செய்துவிட்டீர். எனக்குமிகவுஞ் சந்தோஷமாயிற்று. இனிநான் என்ன செய்யவேண்டும். உம்முடையவார்த்தை எனக்கு நன்மையே செய்யுமென்றெண்ணுகின்றேனென்றுசொல்லும்போது முனிவர் ஓ அரசனே! இதுமுதல் சண்டாளன் என்னசொல்லுகின்றானே அதனை நீ செய்யவேண்டும் என்றுகூறி உனக்குச் சுகமுண்டாகுகவென்று ஆசீர்வதித்து தனத்தை எடுத்துக்கொண்டு போய்விட்டனர்.

## இருபத்துமூன்றும் அத்தியாயம்

### சண்டாளனுக்கு அரிச்சந்திரன்விலைப்படுதல் முற்றிற்று.



சுலோகம் (௬அ)

அத்தியாயம் இருபத்துமூன்றுக்குச் சுலோகம் (௲உ௭௫)



ஸ்ரீம்விஷ்ணுவேநம:

## இருபத்துநான்காம் அத்தியாயம்.

# அரிச்சந்திரஸ்ய சண்டாலா ஜ்ஞாநுவர்த்தனம்.



சவுனகாதியர் சூதமுனிவரைப்பார்த்து அவ்வரிச்சந்திரமஹாராஜன் சண்டாளனுடைய கிருகத்தில் என்னசெய்திருந்தானோ அதைக்கேட்க ஆவலுள்ளவர்களாக விருக்கின்றோம்; தேவரீர் சாவதானமின்றிச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தனர்.

சூதமுனிவர்கூறுகிறார்;— ஓ முனிகணங்காள்! விஸ்வாமித்திரர் சென்றபின்னர் சண்டாளன் மகிழ்ந்த மனத்துடன் அரசன் சமீபத்தில் வந்து என்னிடத்தில் இருப்பதற்கு மனமில்லாமல் நீ அசத்தியனுயோடிப்போவாயோ?என்னசொல்லுகிறு யென்று தடியினல் மோதி யடித்தான். அதனல் பிரமித்து மனங்கலங்கிய அரசனே அச்சண்டாளன் தனது சேரிக் கழைத்துக்கொண்டு போய்க் கைகால்களுக்கு விலங்கு பூட்டி ஓர் சிறைச்சாலையிற்றள்ளிவிட்டுத் தான் யாதொரு கவலையுமின்றி சுகித்துறங்கினுன்.

அரசனே அன்றுமுதல் நான்குநாள்வரையில் அன்னபானுதிகளின்றித் துக்காக் கிராந்தனுய்அந்தோ! நாம் இச்சண்டாளனுடைய சிறையிலகப்பட்டுப் படும்பாட்டை நம்முடைய மனைவியறியமாட்டாளல்லவா? நம்முடைய நாயகர் நம்மையும் புத்திரனையும் பிராமணனுக்குக் கொடுத்துவிட்டனரே;இனி நம்மிருவரையும்விடுவிக்கும் படியான காலம்அவருக்குவருமா? என்றுநினைக்கின்றுளோ; ஓர்கால் குழந்தையானவன் நம்மைநினைத்து அழத்தொடங்குவானுயின் அப்போது அவனுடைய சமாதானத்துக்காக நாம் சமீபத்திலிருப்பதுபோல நம்மை யழைக்கின்றுளோ; நமதுராஜ்யம் நம்மைவிட்டுப்போயிற்று,நட்பினரெல்லாம் போயினர்,எதுபோயினும் எவர் போயினும் மனைவியும் மகனும் இருக்கலாகாதா? இனிநாம்காண்போமென்பதற்கும் இடனில்லாமல் விக்கிரயமுஞ்செய்து விட்டோமே! நாமும் சண்டாளனுக்குமீளாவடிமையாயினேமே. ஆஹா! நமக்குநேர்ந்த துக்கபரம்பரை மிக ஆச்சரியம் என்று இவ்வாறெல்லாம் எண்ணி எண்ணி அச்சிறைச்சாலையிற்றுனே கிடந்தனன்.

---

* அரிச்சந்திரன் சண்டாள னேவியவற்றைச் செய்தல்.

ஐந்தாநாள் அச் சண்டாளன் வந்து விலங்கைத்தறித்து மிகுந்தகோபத்துடன் அதட்டித் தலையிற்குட்டி அடா, இனிநீ பிணத்துணியை வாங்கி வரும் வேலைக்குப்போ; காசிக்குத் தென் பாகத்தில் பெரிய மயானமொன்றிருக்கின்றது; அதில் நீ கிரமமாகக் காவலிருந்து கண்டோர் அஞ்சத்தக்க இப்பெருந் தடியைக் கையில் தூக்கிக்கொண்டு இரவும் பகலும் ஓயாமல் யாவருங்கேட்க "இதோ வீரவாகுவினது தடி யிருக்கின்றது" என்று பெருங்கூச்சலிட்டுக் கொண்டே இருக்க வேண்டியது; நிற்காதே ஓடு; என்று அரசனை அதட்டியோட்டினான்.

அவன் யாதும் சொல்லாமலே அங்கு நின்றும் ஓடி மிகுந்த பயங்கர முடைய அந்தப் பெரிய சுடுகாட்டைக் கண்டான். அது வெந்த பிணங்களை யன்றிச்சிரிப்பது போலப் பல்லைக்காட்டும் வேகாப் பிணக்குவியல்கள் பல உடையது. புகையும் புலாலுநாற்றமும் மிக்கது. நாய் நரிமுதலிய துஷ்ட விலங்கின் கூட்டங்கள், கழுகினங்கள் சூழ்ந்தது. அழுகைக் குரலால்நிறைந்தது. ஓஅண்ணுவோ! ஓமாமாவோ! மச்சினவோ! ஓபெண்ணேவோ! கண்ணேவோ! உன்னை எங்கே காண்பேன்! இனி என்றே காண்பேன்! என்னை விட்டுப்போயினையோ! இந்த மோசஞ் செய்வாயென்று நான் எண்ணவுமில்லையே என்செய்வேன்! என்செய்வேன்! என்றிப்படி பல கூச்சலும் நான்கு பக்கத்தும் நிறைந்துள்ளது. எரிகிற மாமிசங்களிலே சட சடவோசையும் சுரு சுருவோசையும் உருகிய கொழுப்பின் சொய்யோசையும் கேட்பது; பிரளய காலம் போலே பெருஞ் சுவாலை விட்டுப் பற்றி யெரிவது. இப்படிப்பட்ட புறங்காட்டைக் கண்டவுடன் ஆஹா!! இது வென்ன ஆச்சரியம் சேனுதிபதிகளும், குறுநிலமன்னர்களும், அந்தணர்முதலியபெரியோர்களும் நிறைந்து மங்களங்கொண்டாடும்படியான ஸ்தானத்தைவிட்டு இந்த அமங்களஸ்தானத்துக்கு வரவும், மங்கல வோசை கேட்பதொழிந்து அழுகைக்குரலோசையைக் கேட்கவும் ஆயிற்றே என்றேங்கியும், மனைவிமக்களைநினைந்து அற்பபாக்கியனுனஎன்னைவிட்டெங்கேபோனீர்கள். நான்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதேஅதிககோபத்தோடு இழுத்துக்கொண்டுபோன அந்தப்பிராமணன் உங்களையெங்கே ஓட்டிவிட்டான். நீங்களெங்கே ஓடிப்போனீர்கள். என்று

கண்ணீர்விட்டும், நீங்களாவது நானாவது நல்ல தருமஞ்செய்திருப் போமாயின் இக்கஷ்டங்கள்வருமோவென்று சிறிது வருத்தத்தின் பயனை ஆராய்ந்தும் அவசமுறும் அச்சமயத்தில் சண்டாளன் சொல்லியனுப்பிய ஏவலைச்செய்யாமலிருக்கின்றேமேஇது வென்ன கொடுமையென்றெண்ணி அச்ச முற்று இனி யதனைச் செய்வே னென்று துணிவான். மறுபடியும் நாம் தருமத்தில் சிந்தனைவைத் திருப்போமாயின் இக்கதி நமக்கு வருமா? உலகில் சுகத்தைக்கொடுப் பதுதருமமன்றிவேறுயாதிருக்கின்றது எல்லாச் சுகத்தையும் கொ டுப்பது தருமமொன்றே; துக்கந்தருவது தருமத்தை மறத்தலன் றே; என்றெண்ணிச்சோர்வான். இவ்வாறு சோர்ந்தும் தெளிந்தும் சிலநேரங்கழித்து சரீரமுற்றும் அழுக்கடைந்திருப்பதைப் பார்த்து இப்போது நமக்குக்கிடைத்திருக்கும் உத்தியோகத்துக்குத்தகுந்த படி உடம்பும் அமைந்ததே என்றுமகிழ்வான். நாம் வந்தபின்னர் எத்தனை பிணங்கள் வந்திருக்கின்றனவோ என்று ஓடிப்போயெல்லை முற்றும் சுற்றிப் பார்த்து இத்தனை பிணங்களென்று கணக்கிட்டும் அதற்கு வரவேண்டிய பணம் இவ்வளவு என்று தொகுத்தும் இதில் தனக்குச் சேரவேண்டியவை இவ்வளவு எஜமானனுக்குச் சேரவே ண்டியவை இவ்வளவென்று வகுத்தும், அதன் பின்னர் சோதிக்க வேண்டிய பிணங்களைத் தன் கைகளா லாராய்ந்து பார்த்தும் சிறிது ஓய்வான். இவ்வண்ணம் ஓர்கந்தைத்துணியை அரையிலுடுத்தித்தன் அழுக்கடைந்தமேனியிலே அருவருக்கும் புலால் நாற்றம் வீசப் பிணத்துக்கு வரும் வாய்க்கரிசியை உணவாகக்கொண்டு, இரவும் பகலும் நித்திரையின்றி ஆ! ஹா என்று ஓசையிட்டு ஓர்வருடம் மயா னமே இடமாக வாழ்ந்துவந்தனன்.

இருபத்துநான்காம் அத்தியாயம்

அரிச்சந்திரன் சண்டாளனேவியவற்றைச்செய்தல் முற்றிற்று.

---

சுலோகம் (௩௩)

அத்தியாயம் இருபத்துநான்கிற்குச் சுலோகம் (௲௩௱௮)

உ

ஹ்ரீம் சீலாயை நம:

## இருபத்தைந்தாம் அத்தியாயம்.

## மிருதபுத்திரம் பிரதி சந்திரமதீ விலாபம்.



சூதர்கூறுகின்றார்;—அரிச்சந்திரன் செய்தி யங்ஙனமிருக்க, அந்தணர்பின்சென்ற சந்திரமதியும், லோகிதாசனும் அவனிடம் வேலைகளைச் செய்து காலங் கழித்து வருநாளில் ஓர் நாள் லோகிதாசன்பிராமணச்சிறுவர்களுடன் பட்டணத்தை விட்டுப்புறப்பட்டுத் தருப்பையும் சமித்துமுள்ள ஓர் நல்லிடத்தை நாடி வரும்போது அவனெண்ணியபடியே அதிமனோகரமாய் ஓரிடத்தில் தருப்பை தோன்றியது. அது கண்டு மகிழ்ந்த அவனும் அந்தணச்சிறுவர்களும் அதனை சாஸ்திரப்படி அறுத்து ஒருகட்டாகக்கட்டி, இன்று நமது எஜமானராகிய ஐயருக்கு இதுஅதிகசந்தோஷத்தை விளைவிக்குமென்றுகளித்து ஒரு புறத்தில் வைத்துவிட்டு, சமித்துகளையுஞ் சேகரித்துக்கொண்டு பின்னர்இரண்டினையும் தலையில் தூக்கிக்கொண்டுசுமக்கக் கூடாத பெருஞ்சுமையாதலால் அதிகவருத்தத்துடன் நடந்து சென்று தாகங்கொண்டு ஓர் தடாகத்தருகேயுள்ள புற்றுமேட்டில் அந்தச்சுமையையிறக்கித் தண்ணீருண்டு, தாகந்தீர்ந்து மீண்டும் புற்றருகேவந்து அச்சுமையை எடுக்கும்போது விஸ்வாமித்திரருடைய ஆணையால் அதிலுள்ளகருநாகமொன்று அவனைத் தீண்டிற்று. தீண்ட, உடனே விடந்தலைக்கேறி அவன்பூமியில் வீழ்ந்திறந்தனன். அதனைக்கண்டஅந்தணச் சிறுவர்களெல்லாரும் பயந்தோடி அவன் தாயினிடத்திற் சென்று,ஓபிராமணனுடையவேலைக்காரியே!ஓடிவா,என்று கூச்சலிட,சந்திரமதிநமது மகனுக்கு என்ன ஆபத்து விளைந்ததோ; நாம் என்னகேட்க விருக்கின்றதோ; வென்று ஓடோடி வந்தனள்.அச்சிறுவர்கள் ஓ வேலைக்காரி! உன்மகன் விளையாடுவதற்கு எங்களோடு வந்தான்' பின்பு தருப்பைசமித்துகளைச்சேகரித்து புற்றடியில்வைத்தான். அதை எடுக்கும்போது பாம்பு கடித்துஇறந்தான்.அவ்விடத்திற்றனே வீழ்ந்துகிடக்கின்றான் போய் பார்த்துக்கொள்ளென்றுசொல்லிவிட்டு ஓடிப்போயினர்.

இறந்தானென்றஇடியோசை செவியிற் புகுவதற்குமுன்னமே அவள் வெட்டுண்டவாழைபூமியில்விழுவதுபோல் விழுந்து மூர்ச்சித்துக்கிடக்க எஜமானனுகிய அந்தணன் இது வென்ன வேஷமடி! என்றுதண்ணீரைத் தெளித்து அவள்மூர்ச்சைதெளிவித்தான். தெளிந்ததும் அழத்தொடங்கும்போதுஅடி துஷ்டை! அந்திப்பொழுதில் அழுகின்றனையே,உனக்கு அறிவில்லையா! தலையைவிரித்துக்கொண்டு அலங்கோலமாய்ப்புலம்புகின்றனையே, உனக்கு மானமில்லையா!சீச்சீவாயைமூடு; என்னிடத்தில்கிரயமாகப்பணத்தைவாங்கிக்கொண்டு நீ எதற்காக அழுகின்ருய்; அவனுனக்கென்னநஷ்டம். என்னை யல்லவோஅவன் நஷ்டத்துக்கு ஆளாக்கிவிட்டான்.நானல்லவோ அழவேண்டும். இப்பொழுது யார்குடியைக்கெடுப்பதற்கு அழுகின்ருய்? ஒநீலீ! உன்னுடைய நீலித்தனத்தை நானறிவேன். என் பணத்துக்கு என்ன வழிசொல்லவிருக்கின்ருய்? என்னுடையவேலையையும் நீ சரியாகச்செய்வதில்லை அந்தப்பையனே உன்னிலும் துஷ்டன். இருவருந் துஷ்டர்களாகவே வந்துசேர்ந்தீர்கள் என்று பலவாருகப்பேச அவள் அவன்பேசுவதைப்பற்றியொன்றுமெண்ணுமல் மகனிடத்துப்போகுஞ்செய்தியைச் சொன்னுல்என்னசொல்வானே; என்ன செய்வானே வென்று நடுங்கி வாய்குழறிக்கொண்டே ஓசுவாமிகாள் !தருப்பைகொய்து வரப்போனஎன்மகன் பாம்புகடித்திறந்துவிட்டானும்; அவனைப்போய்ப்பார்த்து வருகிறேன்,உத்தரவு கொடுக்கவேண்டும் என்று கேட்டனள், அப்பிராமணன் ஆஹா துஷ்டையே! துர்நடத்தையுள்ளவளே! என்னிடத்தில் பணத்தை வாங்கிக்கொண்டு என்வேலையைச்செய்வதற்குமனமில்லாமல் ஏதேதோ சொல்லுகின்றனையே; உனக்கிது பாபம் இதுபுண்ணியமென்பது தெரியாததென்ன; சேவகத்துக்கிருக்கின்றவன் சம்பளத்தை வாங்கிக் கொண்டு வேலைசெய்யாமல் துரோகஞ்செய்வானுயின் அவன் ஒருகற்பகாலம் ரௌரவாதிநரகத்தையனுபவித்துப் பின்னும் கோழியாகப்பிறப்பானென்று சொல்லப்பட்டிருக்கின்றது. பாவத்துக் கஞ்சாதவளாயிருக்கின்ற உனக்கித்தருமங்களைச் சொல்வதனுலென்னபயன்? பாவிகளுக்கும், மூடர்களுக்கும், கொடியவர்களுக்கும், நீசர்களுக்கும், பொய்யர்களுக்கும், துஷ்டர்களுக்கும் சொல்லுகிறதர்மவசனம் உவர்நிலத்தில் விதைத்தவிதைபோலாகும். பரலோகவிருப்பமிருக்குமாயின் வேலையைவிட்டுப் போய்வருகிறேனெ

னச்சொல்லுவையா என்று கோபித்துக்கொண்டான். சந்திரமதி ஒசுவாமின்! கோபங்கொள்ள வேண்டாம்; தயவுடன்கேளும்; மக னிறந்துபோனுனென்றுல் நான்என்னவிதமாயிருப்பேன். ஐயோ தெய்வமே! ஓஐயா! நீர்போய்வாவென்றுசொல்லும்; ஓர்கணத்துக் குள் வந்து சேருகிறேன்என்று அப்பார்ப்பான் பாதங்களில் வீழ் ந்து புலம்ப, அவன் மிக்க கோபங்கொண்டு கண் சிவந்து உன்புத் திரனிறந்தானென்று சொல்லுவதனுல் எனக்கென்ன மனமிரங்கு மா; அவன் எனக்கோர் கடன்காரனல்லவா; அத்துஷ்டனுடைய வார்த்தையைச்சொல்லாதே;அடிதுஷ்டை!மறுபடியும்போய் வருகி றேனென்று சொல்லுவையேயாயின் சாட்டையாலடிப்பேன். நான் கோபி என்று நீஅறியமாட்டாயா? வழக்கம்போல் செய்யவேண்டிய வேலையெல்லாம் செய்வதோடு செய்யாது விட்டிருக்கிற வேலைகளை யும் இன்றையதினம்செய்து விடவேண்டும். இங்கே அழுது கொ ண்டிராதே,வேலையைப் பாரென்று சொல்ல,மறுபடியும்போய்வரு கிறேனென்றுசொல்வதற்கஞ்சி,செய்யவேண்டியவேலைகளை எல்லாம் அதிகவிரைவாகச் செய்துமுடித்து, பிராமணன் படுத்தபிறகு அவன் காலுக்கு எண்ணெய்தேய்த்துக்காலைப்பிடிக்கும்பொழுது பாதிராத் திரியாயிற்று. அச்சமயத்தில்அவ்வந்தணன் அவள்வேலைசெய்து வரு வதோடு புத்திரசோபந்தலைகொண்டு மயங்குவதையும் கவனித்து சிறிது இரங்கினவனுய் அவளைப்பார்த்துஅடீ! துஷ்டை! நீசீக்கிர மாய்ப்போய் உன்மகனைக்கொளுத்திச்செய்யவேண்டியகடன்களைச் செய்துவிட்டு,விடிவதற்குமுன்வந்து,உன்வேலையைப்பார் உன்வேலை யைச்செய்ய இங்குயாருமில்லை. போய்வா வென்றுன்.

அச்சொல்லைக்கேட்டவுடன், புத்திரனைக்கண்டவள்போலெண் ணி, அழுதுகொண்டே யாதொருதுணையுமின்றி வேடன் வலையிற் சிக்குண்ட மான் தெய்வகதியாய்த்தப்பியோடுவதுபோல் ஓடி, புற்று கள்தோறும் போய் அப்பா மகனே! அடா குழந்தாய்! என்று கத றிக் கதறித் தேடினுள். தேடித் தருப்பைச்சுமையின்மேல் விழுந்து கிடக்கும் தன்னருமந்த மகனைப்பார்த்து வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு பதறிப் பதறி ஒ மகனே! பாம்பு கடித்த போது அம்மாவென்று என்னையழைத்தனையோ? அப்பாவென்று அரசனை யழைத்தனையோ?அடாமகனே! ஒருவரும் உதவாமற்போ

யினமோ இதோ நான் வந்திருக்கின்றேன் என்னெதிரேவா! மகனே மகனேஎன்றுநான் அழைக்கின்றேனே ஏன்வராமலிருக்கின்றாயென் றுபலவாறாகப் புலம்பி பிணத்தின்மேல் விழுந்துமூர்ச்சித்துப்பிணத் தோடு பிணமாய்க்கிடந்து பின்ஒருவாறுதெளிந்து மகனையெடுத்து மார் போடணைத்துமுகத்தோடு முகம்வைத்து அழுதாள். பின்னர்ப் பூமியிற்கிடத்தி ஐயோ ஐயோ என்று கதறி, ஓ எனது நாயகனே! எங்கேயிருக்கின்றீர். உனது மகன் இறந்துகிடக்கின்றானே! ஓடிவா ரும். இவன் உமது பிராணனல்லவா! எப்படிவிட்டிருக்கின்றீர்!உம க்கு வந்துசொல்லுவாரொருவருமில்லையா!நீர்வந்தால் ஓர்சமயம் எழு ந்திருப்பான் போல் தோன்றுகின்றதே!அப்பாமகனே! இதோ உன து தந்தைவந்தார்,பார்க்கின்றனையாவென்று அவனையெடுத்து முகத் தையுற்றுப்பார்ப்பாள். ஏது இவனிறந்தவன்றானென்றறிந்து மூர்ச் சித்து அவனோடுதானும் வீழ்வாள். மறுபடியும் எழுந்து அவனை யெடுத்துக்கொண்டு ஓகுழந்தாய்! ஏன்இன்னம் உறங்குகின்றாய்; விழித்துக்கொள்; நரிகளுடைய கூச்சல் மேலிட்டிருக்கின்றது; அது வோ பயங்கரமாகவிருக்கின்றது அந்தக்கூச்சலே யன்றிபூதபிசாசங் களுடைய கூச்சல்களும் கிளம்பிவிட்டன;உன்னுடைய நேசர்களோ ஒருவருமில்லை;நீதனித்திருக்கின்றாய்.நான்உன்னைப்பலவாறாக வழை த்தும் நீஒன்றும் சொல்லாமலிருக்கின்றனையே.நீ என்மகனல்லவா! உனக்குநான்தாயென்று தெரியவில்லையா! ராஜ்யத்தை யிழந்த தனாலும், அரசனை யிழந்ததனாலும், அடிமையானதினாலும் உண் டான துன்பங்களெல்லாம் உனது முகத்தைப் பார்த்தல்லவா நான் நாளையொழித்துவந்தேன்.களித்து மிருந்தேன். நீஜனனமானகாலத் தில் அந்தணரெல்லாம் உன்னைத்தீர்க்கமான ஆயுளுடையவனென் றும், இப்பூமண்டலத்தையாண்டுபுத்திரபவுத்திரபாரம்பரியத்தோடு கூடி மஹா சவுரியவந்தனாய்கொடையாளியாய் குருதெய்வம் அந்த ணர் முதலியோருடைய பூஜையை விசேஷமாகச்செய்து தாய்தந் தைகளாகிய எங்களுடைய மனத்தைக் களிப்பிப்பானென்றும் சொன்னார்களே;அவையெல்லாம் பொய்த்துப் போயினவே.உனது கால்களிலும் கைகளிலும் சக்கரரேகை, சத்திரரேகை, ஸ்ரீவச்சரே கை, கலசரேகை முதலானசுபரேகைகள் யாவும் இருந்தனவே. அவைகளைக்கண்டு நான் மகிழ்ந்தேனே. அக்குறிகளை நீயடையப் பெற்றதற்குரிய பிரயோஜனம் இங்கே கிடப்பதுதானோ! என்பாள்.

தனது நாயகனை நினைந்து ஓமஹாராஜனே! பூமண்டலத்தையாளும் பிரபுவே! உம்முடைய ராஜ்யமும், மந்திரிகளும், நீர் வீற்றிருக்கும் சிங்காசனமும், வெண்கொற்றக்குடையும், செல்வமும், சதுரங்க சேனைகளும் எவ்விடத்திற்போயின? என்னையும் மகனையும் விட்டு விட்டு நீர் எங்கேபோயினீர்?ஓஎன்னுயகனே! உமக்குஇனிமையான வனுன மகனைப்பாரும். குங்குமப்பூக்குழம்பு படிந்திருக்கும்மார்பில் மண் தூசுபடிந்திருப்பதையும், உமது மடியிலிருந்து உமது நெற்றியி லுள்ள கஸ்தூரிப்பொட்டைக் கலைக்குங்காலானது இப்போது மண் மேட்டிலிருக்கின்றதையும் பாரும். இவன் மண்ணில் விளையாடுங் காலத்தில் மண்படிந்திருக்கும் முகத்தைக்கண்டுஆசையோடும் ஓடி வந்து நான்முத்தமிடும்முகத்திலே இப்பொழுது ஈக்களும் புழுக்க ளும் மொய்ப்பதைப்பாரும். மகாதரித்திரனுடையமகன்போல்தரை யிலேவிழுந்து இறந்துகிடக்கின்ற கோலத்தைப்பாரும் என்பாள். ஓதெய்வமே! நான்பூர்வஜன்மத்தில் என்னபாவஞ்செய்தேனோ அதன் கரையை இன்னமுங்காணுமலிருக்கின்றேனேஎன்பாள். மக னைப் பார்த்து அப்பாமகனே! அழகான சுந்தரனே! என்று கூவிக் கூவிக்கதறுவாள். இவளிப்படி யிருக்குஞ் சமயத்தில் நகர்சோ தனைக்காரர் அந்தக்கூச்சலைக்கேட்டு ஆச்சரிய மடைந்து அவளரு கில் வந்துநீயார்? இந்தக்குழந்தையாருடையது! உன்கணவன் எவ் விடத்திலிருக்கின்றான்? இந்தக்காட்டில் நீ அச்சமில்லாமல் தனியா யழுதுகொண்டிருப்பதேன்?என்றுகேட்டனர் அதற்கவள் ஒன்றுஞ் சொல்லாமலிருந்தனள். இருக்கவே அவர்கள் மீண்டுங் கேட்டனர். அப்போதும் உத்தரஞ்சொல்லாமல் அழுதுகொண்டே இருந்தாள். ஓ ஜனமேஜயனே! அந்நகர்ச்சோதனைக்காரருட் சிலர் அவளிடத்தில் வேறுவிதமான சந்தேகமும் அச்சமுங்கொண்டு தங்களுடைய தேக ங்களில் மயிர்சிலிர்க்கஆயுதங்களை யெடுத்துக்கொண்டு ஒருவரை யொருவர் பார்த்து, இவள் சரியானஸ்திரீயாகத்தோன்றவில்லை; எது கேட்டாலும் பதிலுஞ் சொல்லவில்லை இந்தக்குழந்தையை இவள் தான்கொன்றிருக்க வேண்டும். இவளை நாம் எவ்விதமுயற்சியினு லாவது கொன்றுவிடவேண்டும். இவள்நல்லகுலவதியாயிருப்பாளா னல் இரவில்பட்டணத்தை விட்டுவெளியில் வந்திருப்பாளா! இவள், தான் தின்னுதற்காக யாருடையகுழந்தையையோ கொன்று விட்டு இப்பொழுது யாதுகருதியோ அழுகின்றுள். இவ்வழுகையைநாம்

உண்மையாக நம்பக்கூடா தென்று சொல்லி அவள் தலைமயிரைச் சிலர் இழுத்துப்பற்றினர்; சிலர் இரண்டு கையையும் இரண்டு பக்கத்திலும் பிடித்துக் கொண்டனர்; சிலர்கழுத்தைப்பிடித்தனர்; சிலர் இவள் ஆகாயத்தில் பறந்துபோனாலும் போவாளென்று மேலே ஆயுதங்களைப்பரப்பினர். சந்திரமதியை இவ்வண்ணங்காவலுக்குள்ளாக்கிச்சண்டாளனிடத்தில் கொண்டு போய் ஓ சண்டாளனே! இவள் ஊருக்குப்புறப்பான வெளியிலே ஓர் குழந்தையைக் கொன்றுவிட்டுக் கொல்லாதவள்போல் கூக் குரலிட்டிருந்தாள்; நாங்கள் கண்டு பிடித்தோம் இவளை நீதூரத்திற்கொண்டுபோய்க் கொலைசெய்யவேண்டுமென்று சொல்லி அவளை அவனிடத்தில் ஒப்புவித்தனர். அப்போது அந்தச் சண்டாளன் ஆஹா! இவளைநான் நன்றாயறிவனே! இந்தவுலகில் இவள் கொலைசெய்யும் பாதகி என்று யாவரும் அறிவரே இது வரையில் இவள் ஒருவர் கையிலும் அகப்படாமலன்றோ உலாவிவந்தாள்? ஓகாவலாளிகளே ! அநேகருடைய குழந்தைகளை ஆகாரமாகக் கொண்டிருக்கிற இவளைநீங்கள் பிடித்ததனால் உங்களுக்குமஹாபுண்ணியமும் உலகத்தில்நல்லகீர்த்தியும் உண்டாகும். பிராமண ஹத்தி செய்தவனையும், ஸ்திரீ ஹத்தி செய்தவனையும், பொன் திருடுகின்றவனையும், தீ இடுகின்றவனையும், மார்க்கத்தில் படுகுழிசெய்கின்றவனையும், மதுபானஞ் செய்கின்றவனையும், குரு பத்தினியை யனுபவிக்கின்றவனையும்,வெகுஜனங்களுக்கு விரோதமான காரியங்களைச் செய்கின்றவனையும் கொலைசெய்கின்றவருக்கு மஹா புண்ணியமுண்டென்று சொல்லப்பட்டிருக்கின்றது. மேற்சொன்ன பாவிகள் கொல்லக்கூடாத அந்தணராயினும்,ஸ்திரீகளாயினும் அவர்களைக் கொல்வதினால்யாதொரு தோஷமுமுண்டாக மாட்டாதென்பது நிச்சயமே; ஆகையால்உங்களால் கொண்டு வரப்பட்ட இவளை நான் கொன்று விடுகிறேன். இது எனக்கும் மஹாபுண்ணியம்; நீங்கள் இனிச்சுகமாய்ப்போய் வாருங்கள் என்று சொல்லிவிட்டு, உடனே அந்தச்சந்திரமதியை மிக்கவலியகயிற்றாற் கட்டித்தலைமயிரைக் கெட்டியாகப்பிடித்துக் கொண்டு, நல்லமணிக் கயிற்றைமடித்துத் தனதுகைசலிக்க வடித்தான்.பின்பு அரிச்சந்திரனைப்பார்த்து அடா வேலைக்காரனே!இந்தத்துஷ்டஸ்திரீயை நீயாதொருஆலோசனையுஞ் செய்யாமல் கொலைசெய்யவேண்டும்;கொண்டுபோவென்றான். அரசன் அந்தச்சொல்லைக்கேட்டுத் திடுக்கிட்டுஸ்திரீவதைசெய்வதற்கஞ்சி

நடுக்கத்துடன் தனது எஜமானனாகிய சண்டாளனைப்பார்த்து இவ் வேலை செய்ய என்னாலாகாது;வேறு எவ்விதமானவேலையைச்செய் யச் சொன்னாலும் அதனை நான்செய்வதற்கஞ்சமாட்டேன்; அது சாத்தியமானதாயிருந்தாலும் அசாத்தியமானதாயிருந்தாலும் அத னைச் சொல்லுவீராயின் இப்பொழுதே செய்கிறேன்; அதற்கு நான் பின்னிடேனென்று சொல்லவும், அந்தச்சண்டாளன் ஓவேலைக்கார னே! நீ ஏன் இதற்குப்பின்னடைகின்றாய்; இவளைக்கொல்லுதற் குப் பயந்தோ! பாவத்திற்குப் பயந்தோ! கொல்லுவதற்கென்றால், இதோ உன்கையில் கத்தி யிருக்கின்றது;அதற்குமுன் இவள் என்ன செய்யலாம்நீஅஞ்சாதே! பாவத்துக்கென்றால்,இவள்சிசுக்களை யெல் லாம் கொன்றவள்; இவளைக்கொல்லாது விடுவதுதான் பாவமே யன் றி கொல்வது பாவ மன்று. இனி நீ நான் சொல்லியபடி தாமசஞ் செய்யாமல் இவளைக் கொண்டுபோய்க் கொலை செய்வாயாகவென் றான். அது கேட்டஅரசன் ஓ எஜமானனே! தருமசாஸ்திரமறிந்த முனிவர்கள் எவ்விதமான குற்றஞ்செய்தாலும் ஸ்திரீகளைக் கொலை செய்யக் கூடாதென்றும், அவர்களைக் காப்பாற்றவே வேண்டு மென்றும், அறிந்தேனும் அறியாதேனும் ஸ்திரிகளைக்கொலை செய் வானாயின் அவன் ரௌரவ மென்னும் கொடிய நரகத்தை யடை வா னென்றுஞ்சொல்லுகின்றார்களே!அச்சொல்லானது என்னை இப் போது தடுக்கின்றதேயன்றி வேறொன்று மில்லை யென்றான். சண்டா ளன் அதுகேட்டு அடாமூடா! அநேகசிசுக்களைக்கொன்று அந் தச்சிசுக்களுக்குரியதாய் தந்தையரை சாவுமளவுந் துக்கத்தில்மூழ் கியிருக்கும்படியாகச்செய்த இவளுக்கா அந்தத்தருமம்? இவளுக் கன்று; ஆகையால் நான் சொல்லியபடி இவளைக்கொலை செய் என் றான். மீண்டும்அரசன் ஓ எனது பிரபுவே! நான் ஸ்திரிகளைக்கொலை செய்வதில்லை என்கிறவிரதத்தை ஜன்மவிரதமாகவைத்திருக்கின் றே னாதலால் இவளைக்கொலை செய்யேனென்றான். அதுகேட்ட சண்டாளன் அதிக கோபங்கொண்டு அடாதுஷ்டா! என் சம்பள த்தைவாங்கிக்கொண்டு என்வேலையைத் தடை செய்கின்றனையே! இது துஷ்டத்தன மல்லவா! எவனாவது எஜமானனிடத்தில் சம்பள த்தை வாங்கிக்கொண்டு அவனிடம்வேலையைச் செய்யாது தடுப்பா னேயானால் அவன் நரகக்குழியினின்றும் ஒருநாளுங் கரையேற மா ட்டா னென்றுதருமசாஸ்திரங் கூறவில்லையா? அதற்கென் செய்வா

யென்றான்.ஐயா! நான் எனக்குள்ள விரதத்தைச்சொன்னேனேயல்லதுநீரிடும் வேலையைச்செய்யேனென்று சொல்லவில்லையே! இப்பொழுதும் இந்த ஒருஸ்திரீயைத்தவிர வேறு யாரைக்கொலையைச்செய்யச்சொன்னாலும்அதைச்செய்யச் சித்தமாயிருக்கின்றேன்; உம்மால் கொல்லப்படவேண்டிய சத்துருமகாவீரனாயிருந்தாலும் அதற்கஞ்சேன்; அவனை ஓர் கணத்திற் கொன்று அவனது பூமிமுதலானவற்றையும் உமதுடைமையாக்குகின்றேன்; அன்றி, விண்ணாளும்தேவேந்திரனாயினும் அவனையும் அப்படியே செய்கின்றேன்; என்ன செய்யச் சொல்லுகின்றீரென்றான். சண்டாளன்மிக்க கோபங்கொண்டவனாய் அடா! நீ எனக்குஅடிமையாளாகவிருக்க அதற்குத்தக்க வார்த்தையைச் சொல்லாமல் வீரத்தில் மிக்க சூரர்கள் பேசத்தக்க வார்த்தையைப்பேசுகின்றனையே! அடாநாணமில்லாதவனே! அடாவேலைக்காரனே! உனக்கேன் இந்த அகங்காரம்? கொலைசெய்வதற்கஞ்சும் நெஞ்சைப்படைத்த நீ கொலைசெய்வதற்கஞ்சா நெஞ்சைப்படைத்த பறையனுக்கு ஏன் அடிமையாயினாய்? என்னிடத்தில் பேடியைப் போலிருக்கின்றநீ வீரத்தைப்பேசுவதனால் என்ன பிரயோஜனம்? இப்பொழுது நான் சொல்லும் வார்த்தையைக்கேள். இதோ இக் கூர்மையான கத்தியை வாங்கிக் கொண்டு இவளுடைய தலையை அஞ்சாமலறுப்பா யென்று பலவத்காரமாய் அரசன்கையில்அதைக் கொடுத்து ஓட்டினான்.

இருபத்தைந்தாம் அத்தியாயம்

மிருதபுத்திரம்பிரதிசந்திரமதீவிலாப முற்றிற்று.



சுலோகம் (அக)

அத்தியாயம் இருபத்தைந்துக்குச் சுலோகம் (௲௩௯௭)



உ

ஹ்ரீம்பதாராத்யாயைநமஃ.

## இருபத்தாறாம் அத்யாயம்.

## * சந்திரமதீஹரிச்சந்திரபோரன்போன்பவிஞ்ஞானம்.



சூதர்கூறுகின்றார்:—ஓமுநிவர்களே!சண்டாளன்கட்டாயப்படுத்திக் கத்தியைக்கொடுக்கப்பெற்றுக்கொண்ட அரசன், தலைவணங்கிக்கொண்டுநிற்கும் சந்திரமதியைப்பார்த்து ஸ்திரீகளைக்கொலைசெய்வதில்லையென்கிறவிரதத்தைமேற் கொண்டிருந்த என்னைக்கெடுக்க வந்தபெண்ணே!மஹாபவிஷ்டனுன என்னெதிரில் அங்கே உட்காருவாய். உன்தலையைவெட்டஎனதுகைக்குச்சத்தியிருக்குமாயின் நான் வெட்டித் தள்ளுகிறேன் என்றுசொல்லிக்கத்தியைஉயரத்தூக்கிவெட்டப்போயினன். அப்போதவள் தன்னுடைய மரணத்தைவிரும்பினவளாயிருந்தும் புத்திரன் மரணத்தையெண்ணி அரசனைநோக்கி ஓசண்டாளனே! ஸ்திரீ அத்திக்கு நீஅஞ்சினவனுயிருப்பது உண்மையேயாயின் உனக்கொருவார்த்தை நான் சொல்லுகிறேன். அதனைக் கேட்டுப் பின் உன்னிஷ்டப்படி செய்வாய். இந்தப்பட்டணத்துக்குச்சமீபத்தில் என் பிள்ளை இறந்துகிடக்கின்றான். அவனை எடுத்து வந்து உனதுசமீபத்தில் கொளுத்திவிடுகிறேன். அவ்வளவுகாலம் நீபொறுத்துக்கொண்டிருந்து பின்னர் என்னைவெட்டிவிடு இது தான் நான் உன்னைவேண்டிக்கொள்வதென்ன; அரசன் அப்படியே போய்வா வென்றனுப்பினன். அவள் மிக்க வன்னெஞ்சுடையாரும் கண்ணீர் விட்டழும்படியாயழுதுகொண்டே பிணமாய்க்கிடக்குங் குழந்தையினிடத்திற்சென்று ஆபுத்திரனே! என்மனதுக்கினியவனே!ஓபாலகனே!என்று தலைமயிர்புழுதிபடப் பூமியிற்புரண்டுபுரண்டழுது மகனை வாரியெடுத்துக்கொண்டு மயானத்திற்கு வந்து பெருங்கூச்சலிட்டழுதாள்.

அரசன் அழுகைக்குரற் கேட்ட அவ்விடத்திற்குப் போய் அந்தச்சவத்தினுடைய வஸ்திரத்தை இழுத்தான். இழுக்கவும், குழந்தையினுடைய ரூபலாவண்ணியங்கள் தோன்றின. இவன் யா

* சந்திரமதியும் அரிச்சந்திரனும் ஒருவரை யொருவர் அறிந்துகொள்ளல்.

ரோ அரசனொருவனுக்குமகன்போற்காணப்படுகிறான் என்று மன
தில் சிறிது சந்தேகமடைந்து நன்றாய்ப்பார்த்தான். அக்குழந்தை
பூரண சந்திரன் போன்ற முகமும், மிகவுயர்ந்தநாசியும் கண்ணாடி
போன்ற கன்னங்களும், கறுத்துச்சுருண்டுஒரளவாக நீண்டு அலை
போலவணங்கிய தலைமயிரும், தாமரைப் பூப்போன்ற கண்களும்,
கோவைக் கனிபோன்ற உதடும், பரந்தகன்ற மார்பும், பிரமாணப்
படி நீண்ட கைகால்களும், மலைபோலப்பருத்த புஜங்களும், அகன்ற
பாதமும், மென்மையான விரல்களும், கம்பீரமான நாபியும், பெரு
த்த கழுத்து முடையதாயிருப்பதைப் பார்த்து இவ்வரிய சிசுவை
பாபிஷ்டனாயமன் காலபாசத்தினால் கட்டிக்கொன்றுவிட்டானே
என்று மனங்கலங்கிக் கொண்டேநமது லோகிதாசன்சந்திரமதியினு
டைய மடியிலிருக்கும்பொழுது இவனைப்போலுங்காணப்பட்டா
னல்லவா வென்று தன்மகனை நினைத்துக் கண்ணீர்விட்டுப் பின்னர்
இவன் நமது மகனன்றோ? அவனைத்தான் யமன் தன் ஸ்வாதீனஞ்
செய்துகொண்டானோ என்னவோ வென்றெண்ணி ஓவென்றலறிக்
கூச்சலிட்டு நின்றான். அப்போது சந்திரமதி மஹாதுக்கத்தினால்
ஹா! காசிபகுலத்திற்பிறந்த என்மகனே! இந்தகோரமானதுக்கம்
எனக்குயாரிட்டசாபத்தினால் நேரிட்டதோ தெரியவில்லையே! ஓம
ஹாராஜாவான எனதுபர்த்தாவே! யான்படும் இந்தத்துக்கத்துக்கு
க்கரைகண்டிலேன். என்னைவிட்டுப்பிரிந்து நீர் எவ்விடத்திலோசுக
மாக விருக்கின்றீர்! அதற்குக்காரணம் என்னவோதெரியவில்லையே.
பிரஹ்மாவே! அரிச்சந்திரமஹாராஜாவுக்கு சகலபரிஜனங்களோடு
ராஜ்யநாசமும் மனைவிமகன்விக்கிரயமுமாகிய மஹாதுக்கபரம்பரை
யை எப்படிநீசெய்யத்துணிந்தனையோ! என்றுபிரலாபித்தனள்.
அந்தபிரலாபத்தை அரசன்கேட்டு அவள் தன்பத்தினியேயென்
றும்,இறந்துபோனகுழந்தைதன்மகனேயென்றுந்தெரிந்துகொண்டு
மஹாதுக்கத்தோடு மூர்ச்சையடைந்து கீழேவீழ்ந்தான். அவன்
சோகித்து வீழ்ந்ததன்மையை சந்திரமதிகண்டு இவர்நமது பர்த்தா
வாகவேண்டுமென்று தெரிந்துகொண்டு உடனேமூர்ச்சையடைந்து
கைகால் அசைவின்றிப்பிணம்போற் கிடந்தாள். இருவரும் சிறிது
நேரம் சென்றபின்னர் முன்னுணர்ச்சியடைந்தவர்களாய்க் கண்வி
ழித்து ஒருவரையொருவர்பார்த்து அடங்காத்துயரங்கொண்டு
புலம்பி அரசன் ஆ மகனே! முன்னெற்றி மயிர்சுருண்டு மிகவும்

அழகுபெற்ற உன்முகத்தைக் கண்டு மகிழ்ந்த என்னுடையமனது இப்பொழுது ஏன்பிளந்து போகாமலிருக்கின்றது ஓ குழந்தாய்! நீ அண்ணு! அண்ணுவென்று சொல்லிக்கொண்டுவர உன்னைநான்கு ழந்தாய் குழந்தாய்! என்றெடுத்து அன்போடுகட்டிக் கொண்டு இனி எப்போது சந்தோஷமடையப்போகின்றேன். என்னப்பனே! உனதுமுழங்காலிற்படிந்திருக்குந் தூசினல்என்னுடைய ஆடையும் சரீரமும் எப்போதுஅழுக்காகப்போகிறது. சர்ப்பமானதுஉன்னைக் கடித்ததென்று சொன்னுளேஅதுஉன்னைக்கடிக்கவில்லை. இராஜ்ய முதலியசகலசம்பத்தையுமிழந்து உன்னையுமிழந்து உனதுதாமரை மலர்போன்றமுகத்தைப்பார்த்து புலம்புகின்ற என்னைக் கடித்ததெ ன்றுசொல்லி, மகனை யெடுத்து மார்பிலணைத்துக் கொண்டுமேறுபடியும் மூர்ச்சையடைந்து வீழ்ந்தான். வீழ்ந்த அரசனைப்பார்த்து இவரை முன்னேநமது பர்த்தாவென்று யூகித்தோமே அதுஉண் மையே; இவர்குரலேஇப்போது நிச்சயமாய்த் தெரிவித்துவிட்டது. அப்படியே இவரதுஎள்ளுப்பூப்போன்ற அழகியமூக்கும், முல்லை மலர்போலப்பிரகாசிக்கும் பற்களும் தெரிவிக்கின்றன என்று, ஒரு வாறுபுத்திரசோகத்தைமறந்து நமதுபர்த்தாவே இவரானல் மயான த்துக்குவரவேண்டியகாரணமென்னையென்று ஆச்சரியமுற்று புத்தி ரதுக்கத்தோடு பர்த்தாவினுடைய துக்கத்தையு மேற்கொண்டவ ளாய்ப்பூமியில்வீழ்ந்து கிடக்கும் பர்த்தாவைப்பார்த்து, நாக்குழறி க்கொண்டேஓதெய்வமே! தயையில்லாதவனே! மரியாதையறியா தவனே! நாணமில்லாதவனே! உன்னைச்சுடவேண்டும். தேவருக்குச் சமானமான இந்தவரசனைச் சண்டாளனுகச்செய்துவிட்டாயே; இராஜ்யநாசத்தையும், பந்துஜனப்பிரிவையும், புத்திரகளத்திர விக் கிரயத்தையும், செய்தனபோதாது இப்போது சண்டாளனுகவும் செய்துவிட்டாயே; ஓபர்த்தாவே! உமதுகுடையெங்கே? சிங்கா சனமெங்கே? சாமரை விசிறிகளெங்கே? ஆஹா! தெய்வம் என்ன கஷ்டத்தைக்கொண்டுவந்து விட்டது. ஓஅரசனே! நீர்பூமியில் நடக் கத்தொடங்குவீராயின் இராஜாக்களெல்லாம் அடிமையாட்களைப் போல் தங்கள் தங்கள் உத்தரியங்களால் பூமியைத் துடைப்பார் களே: அத்தன்மையான செல்வம்படைத்த நீர் இப்போது மண் டையோடும் பானையோடும் கந்தைத்துணியும் பிணமாலையும் தலைம யிரும் எலும்பும்பிணச்சாம்பலும் நிறைந்திருக்கிற இந்தப்பயமான

மயானத்தில் உள்ளங்கால்தேய நடக்கலாயிற்றே! பலவாத்தியவோ சைகளைக்கேட்டகாதுகள் கழுகு நரி முதலியவற்றின் வெடிகுரல் களைக்கேட்கலாயிற்றே! அகிற்புகைமுதலிய நறுமணங்களையுணர்ந்த நாசி பிணப்புகையின் நாற்றத்தை யுணரலாயிற்றே! நல்ல மஹான்க ளாகியபெரியோர்கள்உலாவும் புண்ணியபூமியில் சந்தோஷத்தோடு லாவிக்கொண்டிருந்தகால்கள் பிணத்தைப் பிடுங்கித்தின்னும் இரா க்ஷசர்களுலாவும் இந்தமயானபூமியில்துக்கத்தோடுஞ் சஞ்சரிக்கலா யிற்றே! என்றிவ்வாறுசொல்லிஅரசன் கழுத்தைக்கட்டிக்கொண்டு மிக்கதுக்கத்துடன் அழத்தொடங்கினாள். ஓ அரசனே!இந்தத்துக்க மெல்லாம் எனக்குச் சொப்பனத்திலுண்டாகின்றதா வாஸ்தவத் திலுண்டாகின்றதா வென்று சொல்லும் என்னுடைய மனம் மயங் கிக்கிடக்கின்றபடியால் அதனையறிந்துகொள்ள இப்போதெனக்குச் சக்தியில்லை. நீர் அடைந்திருக்கும் இந்தக் கஷ்டம் சொப்பனமன்றி உண்மையேயானால்தருமஞ்சகாயஞ்செய்யுமென்பதுபொய்யே;பிரா மணபூஜையும்தேவபூஜையும் சத்தியந்தவறாமையுமாகிய இவைதரும மென்பதும் பொய்யே; தருமத்தையே செய்த நீர் இப்படிராஜ்யத் திலிருந்து நீக்கப்பட்டு துக்கத்தையனுபவிக்கின்றீராகையால் தரும முமில்லை சத்தியமுமில்லை. இவ்வண்ணம்சொல்லுகின்ற சந்திர மதியினுடைய வார்த்தையை அரசன் கேட்டுப் பெருமூச்செறிந்து வாய்குழறிக்கொண்டே தான்சண்டாளனானவரலாற்றை அவளறி யச் சொன்னான். அதுகேட்ட அவள் அடங்காத்துயரங்கொண்ட ழுது மனம்வெம்பிநெடுமூச்சுவிட்டுப் பிள்ளையிறந்துபோன சங்கதி யைக் கிரமமாய்க்கூறினாள். கூறக்கேட்ட அரசன் மூர்ச்சித்துப்பூமி யில்விழுந்து சிறிது நேரங்கழியத் தெளிந்தெழுந்துபுத்திரனையெடு த்து முத்தமிடும்போது சந்திரமதி அரசனைநோக்கிச் சொல்லுகின் றாள். ஓபிரபுவே! இப்போது புத்திரனை வைத்துக்கொண்டு நீர் புலம் புவதுதருமமன்று. எழுந்து என்னுடைய சிரசை அறுத்து உமது பிரபுவினுடைய உத்தரவை நிறைவேற்றிவிடும். எஜமானத்துரோகம் உமக்குண்டாகக்கூடாது. உமக்கு எந்தவிதமானகெடுதி வந்தாலும் சத்தியவாதியாயிருத்தல்வேண்டும். அசத்தியமும் பிரபுத் துரோக மும் மஹாபாப மாகையால்அவற்றைநீர் செய்யவேண்டா மென் றாள். அந்த நீதிமொழியை அரசன்கேட்டு மூர்ச்சித்து விழுந்து ஒருகணநேரம் பொறுத்து உணர்ச்சிவரப் பெற்று மிக்க துக்கத்

தோடு கதறி எனக்கு இஷ்டமானமனைவியே! இந்த நிஷ்டூரமான வார்த்தையை எனக்கெப்படிச்சொன்னாய்? எக்காரியத்தை நான் செய்யத்தகாதோ அதை என்னைச்செய்யச்சொன்னாய். நீ சொன்னாலும் அதனைநானெப்படி செய்யக்கூடு மென்றான். அதற்கவள் நான் பார்வதிதேவியையும் தேவர்களையும் பிராமணர்களையும் பூஜைசெய்திருக்கின்றேனாதலால் உம்மால் இப்போதுவெட்டப்பட்டாலும் மறுஜன்மத்தில் நீரே எனக்குப்பர்த்தாவாகப்போகிறீர். ஆனபடியால் நான்சொன்னபடி செய்யுமென்றாள். அரசன் அம்மொழிகேட்டு மூர்ச்சித்துப்பூமியில் விழுந்து பின்னர்த்தெளிந்து இறந்தபுத்திரனுடையமுகத்தை முத்தமிட்டு ஓ எனக்கு இஷ்டமான பிரியே! புத்திரனையு மிழந்துபோய் உன்னையு மிழப்பேனாயின் நான் பூமியிலிருக்குமளவும் துக்கத்தை யனுபவிப்பேனேயன்றி வேறென்ன அனுபவிக்கப் போகின்றேன்! அது எனக்கிஷ்டமில்லை. அக்கினிப்பிரவேச மாகின்றேன். அந்தோ! அது செய்வதற்கும் நான்சுவாதீனனாயில்லாமல் சண்டாளனுக்காளாயிருக்கின்றேனே. இனிஅச்சண்டாளனால் உத்திரவு கொடுக்கப்படாமல் அக்கினியிற்பிரவேசிப்பேனாயின் மறுஜன்மத்தில் சண்டாளதாசனாக விருந்து இறந்த பின்னர் நரகத்திற்காளாவே னன்றோ! எவ்விதத்தும் என்னைத்துக்கம் விடாததாகக் காணப்படுகின்றபடியால் பிராணனை விடுவதே நலமென் றெண்ணுகிறேன்.ஐயகோ! வம்சவிர்த்தியைச்செய்வதற்கு ஒருகுழந்தை யிருக்கிறா னென்கிற தைரியத்தால் நானிந்தச்சண்டாளனுக்கு அடிமையாயினேன். ஊழின்பலத்தினால் அக்குழந்தையும் இறந்து போய்விட்டான். இதற்குச் சமானமான சோகம் மூன்றுலகத்திலும் அசிபத்திரவனத்திலும் வைதரணிநதியிலுங் கிடையாது. ஆதலால், பிள்ளையினுடைய சரீரத்தைக் கொள்ளுகிற அக்கினியில் நானுங்குதித்துவிடுகிறேன். இப்போது நீ பொறுத்துக்கொள்ள வேண்டியது. இதற்குமேல் நீபதிலொன்றுஞ் சொல்லவேண்டாம். தாமரைமலர்போலுங்கண்ணுள்ளவளே! நீமனதை எவ்விடத்தும் விடாமல் என்னுடையவார்த்தையைக் கேட்பாயாக. என் உத்தரவு பெற்றவளாய்ப் பிராமணனுடைய வீடுபோய்ச்சேர்வாயாக;நீதானம் செய்ததும் ஹோமஞ்செய்ததும் பெரியோர்களைப் பூஜித்ததும் உண்மையாயிருக்குமாயின் பரலோகத்தில் நீபுத்திரனோடு வந்துசேருவாய். பின்னர்நாம்மூவரும் அயோத்திக்கும் போகோம்; சேரிக்கும்

வரமாட்டோம். ஓபெண்ணே! நாமிருவருங்கூடிக்கலந்திருந்தகால த்தில் அந்தரங்கத்தில் உன்னை ஏதாவது வருத்தப்படுத்தி யிருப்பே னாயின் அவையெல்லாம் பொறுத்துக்கொள்ள வேண்டும். நாம்ராஜ பத்தினி என்கிறமமதையினால்பிராஹ்மணனை அனாதரவுசெய்யாதே. சர்வப் பிரயத்தினத்தினாலும் பிரபுவைச்சந்தோஷிப்பிக்கவேண்டிய தென்று அவளுக்குக்கூற வேண்டியவெல்லாங்கூறி முடித்தான்.

சந்திரமதி ஓராஜருஷியே! நானும் இந்த அக்கினியில் விழுந்து விடுகிறேன் உயிர் வாழ்ந்திருந்து இந்தத்துக்கபாரத்தைச் சகிக்கமா ட்டேன். இப்போதே நானும் உம்முடன் வருகிறேன். உம்மோடு வருவதே எனக்குமிக்கசுபத்தைத்தருவதாகும். வேறுவிதமா யென க்கு நன்மை யுண்டாகமாட்டாது. எனக்குக் கவுரவத்தைக் கொடு க்கும்பிரபுவே! சுவர்க்கத்தையாவது நரகத்தையாவது உம்முடனே அனுபவிக்கின்றேனென்றாள். அந்தவார்த்தையை அரசன்கேட்டு அப்படியே ஆகட்டுமென்று அங்கீகரித்தான்.

இருபத்தாறும் அத்தியாயம்
சந்திரமதி அரிச்சந்திரயோ ரன்யோன்ய விஞ்ஞான முற்றிற்று.



சுலோகம் (௭௪)
அத்தியாயம் இருபத்தாறுக்குச் சுலோகம் (௲௬௱௭௧)



உ
ஹ்ரீங்கர்ப்பாயைநமஃ
இருபத்தேழாவதுஅத்தியாயம்.

## அரிச்சந்திரஸ்ய ஸ்வர்க்க கமனம்.



சூதர் கூறுகின்றார்:—அரசன் காஷ்டத்தை யடுக்கி அதன்மேல் தன்பிள்ளையைக்கிடத்தித் தன்மனைவியும் தானும் கைகூப்பிக்கொ ண்டு "சதாக்ஷி"என்னும்பரமேஸ்வரியைப்பஞ்சகோசமத்தியிலிருப் பவளாகவும், புச்சப்பிரஹ்மசொரூபியாகவும், ரக்தவஸ்திரந்தரித்தி ருப்பவளாகவும், கருணைக்குக்கடலாகவிருப்பவளாகவும், நானாவித மான ஆயுதங்களைத்தரித்திருப்பவளாகவும், உலகத்தை ரக்ஷிப்ப தில் ஆவலுள்ளவளாகவுந் தியானஞ்செய்தான். அச்சமயத்தில் இந் திரன் சகலதேவர்களுடன் யமதருமனை முன்னிட்டுச் சீக்கிரமாய்

வந்துசேர்ந்து ஓமஹாப்பிரபுவே! நான்சொல்லும்வார்த்தையைக் கேட்பீராக. இவர்பிரஹ்மா, இவர்தர்மராஜா, இவர்கள்சாத்தியர்கள், இவர்கள் விஸ்வ தேவர்கள், இவர்வாயுதேவர், இவர்கள் லோகபாலகர்கள், இவர்கள் நாகராஜாக்கள், இவர்கள் ஏகாதசவுருத்திரர்கள், இவர்கள் அஸ்வனிதேவர்கள், இவர்கள் விஸ்வாமித்திரர் முதலானமுனிவர்கள், இவர்களெல்லாம் உங்கள் மூவரோடும் உறவாட வேண்டு மென்னும் ஆசையால் வந்திருக்கின்றனர். யாவரினும் விஸ்வாமித்திர மஹாமுனிவர் உன்பால் பிரியாநட்புவேண்டி அதிக ஆவலுடன் வந்திருக்கின்றாரென்றான். தருமராஜன் ஓ அரசனே! நீசாகச வேலை செய்யாதே; நான் யமதருமராஜன்; உன்னைப் பரிக்ஷிக்க வந்தேன். உன்னிடத்திலுள்ள சத்குணங்களைக்கண்டு மிக்க சந்தோஷமடைந்தே னென்றான். அவன் சொல்லிமுடிந்த பின்னர் இந்திரன் ஓ அரிச்சந்திரமஹாராஜனே! நான்தேவேந்திரன்; உன்னாலும் உன்புத்திர பத்தினிகளாலும் அநாதியான புண்ணியலோகம் ஜெயிக்கப்பட்டது. ஆதலால் நீ புத்திரகளத்திரத்துடன் சுவர்க்கத்திற்கு வருவாய். சாதாரணமான மனிதர்களால் அடையக்கூடாத புண்ணியலோகம் உனது நன்னடைக் கையால் நீயடையப்பெற்றா யென்று சொல்லி அவமிருத்வையடைந்து காஷ்டமாகிய மெத்தையின் மத்தியிலிருக்கும் சிசுவின்மேல் அமிர்த வருஷத்தை வருஷித்தான். புஷ்பமாரியும் பொழிந்தது. துந்துபிவாத்திய முழுழங்கிற்று. இறந்துபோன புத்திரன் மிருதுவானசரீரமும் தெளிந்தமுகமும், சந்துஷ்டியான மனதுமுடையவனாய்ச் சுகமாயெழுந்துட்கார்ந்தான். அவனை அரிச்சந்திரன்பார்த்துக் கட்டிக்கொண்டு பத்தினியுடன் அரசர்களெல்லாருந்தன்னைச் சூழ்ந்திருக்க இந்திரனால்போடப்பட்ட கற்பகமாலை பூண்டு மகாசுகமும் சம்பூரணமான கோரிக்கையும் பரமானந்தமுமடைந்தவனாயிருந்தனன். அப்போது இந்திரன் அரிச்சந்திரனை நோக்கி ஓ அரசனே! உன்னுடையபுண்ணிய கர்மங்களுக்குப்பலனான சுவர்க்கலோகத்திற்கு நீ வரவேண்டுமென்றான். ஓ இந்திரனே! எனக்குப் பிரபுவாகியசண்டாளனாலே உத்தரவு கொடுக்கப்படாமலும், அவனுடையகடனைத்தீர்க்காமலும் சுவர்க்கலோகத்திற்கு நான் வரமாட்டேனென்றான்.

யமதருமன் ஓ அரசனே! உன்னுடைய சண்டாளப் பிரபுயானே வேறொருவனு மன்று; உனக்குவரப்போகிறதுக்கத்தைத்

தெரிந்துகொண்டு யானே சண்டாள தர்மத்தையடைந்து அந்தச் சேரியிலுள்ள எல்லாஜனங்களேயுங்காண்பித்தேன். நீ சிறிதும் ஐயுறல்வேண்டா மென்று சொல்லும் போது, இந்திரன் ஓ அரசனே! பூலோகத்தில் மானிடர்கள் புண்ணிய கர்மங்கள் செய்து எந்தஸ்தானத்தை வேண்டுகின்றார்களோ அதுநீவேண்டாமலேஉனக்கு வருகின்றது; நீ அங்குவருவாயென்றான். அரசன் ஓ தேவராஜனே! உமக்குநமஸ்காரம்; எனது வார்த்தையைக்கேளும். அயோத்தியாபட்டணத்திலுள்ள மனிதர்களெல்லாம் என்சோகத்தில் மூழ்கியிருக்கின்றனர். அவர்களேவிட்டு யான் சுவர்க்கத்திற்கு எப்படிவருவேன். பிராமணஹத்தி கோஹத்தி ஸ்திரீஹத்தி சுராபானம் இவைகளோடு தன்னேநம்பினவர்களேவிடுகிறபாபமும் சமானமாகும். ஆகலான், தன்னேச்சரணடைந்தவர்களே விடக்கூடாது; விட்டால் அவனுக்குச்சுகமெப்படியுண்டாகும். இந்தநியாயத்தால் அவர்களே விட்டுநான்சுவர்க்கத்துக்கு வரமாட்டேன்; நீர்போம். அவர்களோடு வர எனக்கு அனுமதி கொடுப்பீரானல் வருகிறேன். நான்நரகத்துக்குப்போனலும் அவர்களுடன்தான்போவேன் என்றுசொல்ல, ஓஅரசனே! உனதுபட்டணத்திலிருக்கின்றவர்களுடையபுண்ணிய பாபங்கள் வெவ்வேறுவிதமா யிருக்கும்பொழுது அவர்களுடன் நீவரவேண்டுமென்று எப்படி யிச்சிக்கின்றாயென்றான். அரசன் ஓ தேவேந்திரனே! அரசனானவன் இராஜ்யம் தனக்குக்கிடைத்திருக்கும் செல்வமகிமையினலன் ரீமகாயாகங்களும் தடாகப் பிரதிஷ்டை முதலான புண்ணியகருமங்களும் செய்கின்றான். அவையெல்லாம் பிரஜைகளுடைய செல்வவரவாலல்லவா:ஆகலான் எனக்குக்காணிக்கை கொடுத்து சந்தோஷத்தையும் புண்ணியத்தையுங் கொடுத்த அந்தநகரத்தாரை விட்டு நான் சுவர்க்கத்துக்குவரமாட்டேன். ஓ தேவேந்திரனே! தானம் யாகம் ஜபமுதலானபுண்ணியகருமங்களில் எதெதனல் நான் சுவர்க்கத்தில் நீண்டகாலம் புண்ணியகர்மானுபவம் அனுபவிக்கும்படியாக விருக்கின்றதோ அப்புண்ணியகர்மானுபவம் உமது தயவினல் நகரத்தாருடன் ஒருநாளனுபவிக்கவந்தாலும் போதுமென்றான். இந்திரன் அப்படியே ஆகட்டுமென்றுசந்தோஷத்தோடுஞ்சொல்லி,யமதருமராஜன் விஸ்வாமித்திரமஹாமுநி என்னும் இவர்களுடன் அரிச்சந்திரனேயழைத்துக்கொண்டு பட்டணம்வந்து அரசனேப்பார்த்து யமதருமராஜாவினுடைய தயவினல்

உனது நகரத்திலிருக்கும் ஜனங்களெல்லாம் சுவர்க்கலோகத்திற்கு வரலாமென்றான். நகரவாசிகள் இந்திரனிடத்தில் தங்களரசன்சொல்லியவுறுதிமொழியையும், அதற்குஇந்திரன் சொல்லிய இன்னுரையையுங் கேட்டுஅளவில்லாத சந்தோஷத்தை யடைந்தவர்களாய்,அவருள்ளவரெவர் சம்சாரத்தில் ஆசையில்லாதவர்களாக விருந்தனரோ அவர்களெல்லாம் தங்கள் தங்கள் புத்திரர்களுக்கு அதிகாரங்கொடுத்துவிட்டு சந்தோஷத்துடன் தனித்தனி ஒவ்வொருவிமானங்களிலேறிக்கொண்டு பொன்னிறம்பெற்ற சரீரிகளாய்ப் பிரகாசித்து சுவர்க்கத்திற்குச்செல்லச் சித்தமாயினர். அரசனும் தன்னுடாகிய அயோத்தியை யரசாட்சிபுரிந்துவரத் தன் மகனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்து அவனையும் ஏனையோரையும் சந்தோஷப்படுத்தித் தேவர்களுக்குங் கிடைத்தற்கரிய கீர்த்தியை நிலைநாட்டி,சிறியமணிகளால்அலங்கரிக்கப்பெற்றதும் நினைக்குமிடங்களில் செல்லத்தக்கதுமான திவ்யமாகிய விமானத்தி லேறினான். அப்பொழுது சர்வசாஸ்திரங்களும் உணரப் பெற்றசுக்கிராசாரியார் அரசனைப்பார்த்து ஓ அரசனே! நீ பொறுமையிற்சிறந்தவன், நீ செய்த தானபலமானது மிக ஆச்சரிய முடைத்தானது இவைகளினாலன்றோ இந்திரனோடு சமானமாயிருக்கும் பதத்தையடையப் பெற்றனையென்று புகழ்ந்தனர்.

ஓ முனிவர்களே! உங்களுக்கு அரிச்சந்திரனுடைய சரித்திர முற்றும் எடுத்துரைத்தேன். இச்சரித்திரத்தை எவன்கேட்கின்றானோ, படிக்கின்றானோ அவன் நாடோறும் சுகமேயடையப்பெறுவான். அன்றியும், சுவர்க்கத்தைவேண்டியவன் சுவர்க்கத்தையும், புத்திரப்பேற்றை வேண்டியவன் புத்திரப்பேற்றையும், நல்லமனைவியை வேண்டியவன் மனைவியையும், இராஜ்யத்தைவேண்டியவன் இராஜ்யத்தையும் பெறுவான் என்றுசூதபகவான்கூறினர்.

இருபத்தேழாம் அத்தியாயம்

அரிச்சந்திரஸ்யஸ்வர்க்க கமனம் முற்றிற்று.



சுலோகம் - (சஉ)।

அத்தியாயம் இருபத்தேழுக்குச் சுலோகம் (கூ௩௯)



உ

ஹ்ரீம்பதாபிதாயைநம:

# இருபத்தெட்டாம் அத்தியாயம்.

## சதாக்ஷிமஹிமாநுகதனம்.



ஜனமேஜயன் வியாசமுனிவரைநோக்கி கீர்த்திபொருந்திய அரிச்சந்திரமகாராஜனுடைய சரிதம் மிக ஆச்சரியமுளது ஓமுனிபுங்கவரே! தருமாத்மாவாகிய அந்தமஹாராஜன் அக்கினிப்பிரவேசமாதற்குத் துணிந்தபோது சதாக்ஷியென்னும் பகவதியைத் தியானித்தானென்றீரே அத்தேவி எக்காரணத்தால் அப்பெயருள்ளவளானாள்? அதனைச் சொல்லி என்சென்மம் உய்யும்வண்ணஞ் செய்யும். எவன் தேவியினது குணானுபவத்தைக் கேட்கின்றானோ அவன்எப்போதும் திருப்தியாயிருக்கும் நல்லறிவுடையவனென்றும் அஸ்வமேதபலத்தை அடிக்கடி யடைவானென்றுங் கூறுகின்றபடியால் தேவிவைபவங்களையே மேன்மேலுங் கேட்கவேண்டுமென்கிற ஆவலுள்ளவனாயிருக்கிறேனென்றான்.

வியாசர் கூறுகின்றார்:—ஓ அரச! நீவிரும்பியவாறு சதாக்ஷியினது சுபகரமான உற்பத்தியைக் கூறுகிறேன் கேட்பாய். அன்றியும் நீ தேவிபக்தனாகையால் உனக்கு சொல்லத்தகாதது ஒன்றில்லை. பூர்வத்தில் துர்க்கமன் என்னும் அசுரன் இரணியாக்ஷனுடைய குலத்தில்வந்த குரு என்பவனுக்குப்பிறந்திருந்தான். அவன். தேவர்களுக்குப் பலமாயிருப்பது வேதம் ஆகவே அவ்வேதம் நாசமடையுமாயின் தேவர்கள் நாசமடைவதற்கு யாதொரு சந்தேகமின்று, ஆகையால் அவ்வேதத்தை நாசஞ்செய்வோமென்று மனதில் நிச்சயித்துக்கொண்டு, இமாலயஞ்சேர்ந்து நான்முகனைத் தியானித்து ஆயிரம் வருடம் காற்றைப்புசிப்பவனாய்த் தவஞ்செய்துவந்தனன். அவனது தபாக்கினியால் சகலலோகங்களுடன் தேவாசுரர்கள் தகிக்கப்பட்டனர். பின்னர் பிரமன் சந்துஷ்டனாய், அம்ஸவாகனாரூடனாய் மலர்ந்தமுகத்தவனாய், தன்னைத் தியானிக்கும் அசுரன் முன் தோன்றி, ஓபக்தனே! யான் நான்முகன், நீவேண்டியவரத்தைக் கேட்பாயென, அவ்வார்த்தையைக் கேட்ட அசுரன் தியானத்தை விட்டெழுந்து பிரமனைத்துதித்து, அன்பர்க்குதவும் அம்ஸ

வாகனனே! மூன்றுலோகத்திலுள்ள தேவர்கள், அந்தணர்கள் முத லியவர்களிடத்துள்ள வேதமந்திரம் யாவும் எனக்குச் சுவாதீனமா யிருக்கச் செய்வதோடு, எல்லாத்தேவர்களையும் யான் செயிக்கும் ஆற்றலையும் அளிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். பிரமன் அவ் வாறே ஆகுகவென்று கூறி மறைந்தனன். அதுமுதல் பூவுலகில் பூசுரர்களுக்கு வேதங்களெல்லாம் மறந்துபோய் ஸ்நானம் சந்தி ஔபாசனம் சிரார்த்தம் யக்ஞம் ஜபமுதலியவைகளும் இல்லாமற் போயின. போகவே, அந்தணர்களெல்லாம்! ஆ ஹா! இது என்ன விந்தை! இது என்ன மாயம்! என்று ஒருவர்க்கொருவர் கதறிவேத மின்றி நாமென்ன செய்யப்போகிறோமென்று மஹாசங்கடத்தை யடைந்தனர். தேவர்களும் அவிர்ப்பாகமில்லாமையால் நிர்ஜரா ளென்பதுபோய் சஜராளாய்க் கிழத்தன்மையடைந்தனர். அப் பொழுது அவ்வசுரன் தேவலோகம்போய்ப் போர்புரியத்தொடங்க வச்சிரத்திற்குச் சமானமான தேகமுள்ள அவனோடு யுத்தஞ்செய்ய வன்மையற்று தேவர்களெல்லாம் ஓடி மலைக்குகைகளிலும் மேருச் சாரலிலும் ஒளித்திருந்து பராசத்தியைத் தியானித்தனர்.

பூவுலகில் செய்யவேண்டிய யாகங்கள் மறையோர் செய்வதற் கில்லாமற் போகவே நூறுவருடம் மழைபெய்யாமற்போயிற்று. அதுபோகவே, கிணறு நடவாவி ஏரி குளம் இவைகளில் நீர் வற்றிப்போயிற்று வற்றவே பசு எருமை முதலான சகலஜெந்துக் களு மிறந்தன வீடுகளில் நாடோறும் மனிதப்பிணங்களே விழ்ந் தன. இவ்வண்ணமான அனர்த்தங்கள் மிகுதிப்பட்டகாலத்தில் சில அருளுடைய அந்தணர்கள் தேவியைத் தியானுதிகளால் வழிபட வெண்ணங்கொண்டு இமயகிரிக்குப்போய் ஆகாரமின்றித் தேவி யினிடத்தில் ஆசையுடையவர்களாய்ச் சமாதியினுலும் தியானத் தினுலும் பூஜையினுலும் சந்தோஷப்படுத்தி நமஸ்கரித்து ஓ மஹேஸ்வரீ! பரமாத்மாக்களாயும் மஹாபாரதிகளாயும் இருக்கின்ற இந்த ஜனங்களிடத்துத் தயவுசெய்வாய்! ஹே அம்பிகே! நீ தயவு செய்யாதிருப்பது தகுதியன்று. நீ கொண்டகோபத்தைத்தணிப்பாய் நீ எல்லோரிடத்தும் அந்தர்யாமியா யிருக்கின்றவளல்லவா. நீ எவ ரெவரை எப்படி யாட்டிவைக்கின்றனேயோ அப்படியே அவரவராடு கின்றனர்; இப்பிரஜைகளுக்கு வேறு கதி ஏது; அடிக்கடி எனிப்

படி பரீட்சைசெய்கின்றனே? ஏமஹேஸ்வரீ! நீ எவ்வண்ணஞ்செய்ய இச்சிக்கின்றனேயோ அவ்வண்ணஞ் செய்யவல்லவளா யிருக்கின்றனே; மஹாசங்கடத்தில் மூழ்கிக்கிடக்கும் எங்களைக் கரையேற்றி விடுவாய்; எங்களுக்கு ஜீவனமின்றி எப்படிச் சுகமுண்டாகும்! ஓ ஜகன்மாதா! நீ தயவுசெய்வாய்! அளவிறந்த பிரமாண்டங்களுக்கு நாயகியாகிய ஹேதேவீ! உன்னை யாங்கள் அடிக்கடி நமஸ்கரிக்கின்றோம். கூடஸ்தரூபியாயும் சித்ரூபையாயுமிருக்கிற உனக்கு நமஸ்காரம். புவநேசையாயும், வேதாந்தவேத்யையாயு மிருக்கின்ற உனக்குப் போற்றியோ போற்றி; சகல ஆகமங்களாலும் நேதிநேதி என்னும் வாக்கியார்த்தங்களால் அறியப்படுகிற சர்வகாரணியாகிய ஹேதேவீ!உன்னை எல்லாவிதத்தாலும நமஸ்கரிக்கின்றோம்; என்று தோத்திரஞ்செய்யவே,புவனேஸவரியாயும், மஹேஸ்வரியாயு மிருக்கின்ற பார்வதிதேவியானவள் நீலமலைபோலும் சரீரகாந்தியை யுடைத்தாயும், நீண்டு நீலோத்பலம்போலும் கண்களையுடைத்தாயும், கடினமாயும் சமோத்துங்கமாயும் விருத்தமாயும் பருமனுமீர்க்கிடைபோகா நெருக்குடையதாயுமுள்ள தனங்களை யுடைத்தாயும் பாணத்தையும், தாமரையையும், மலரையும் தளிரையும் வேரையும் பசிதாகநரைகளைப் போக்கவல்ல அளவிறந்தரசத்தோடு கூடிய பழங்களையுமுடைய ஓர்பூங்கொடியையும்,விலையும் தாங்கியிருக்கும் நான்குதிருக்கரங்க ளுடைத்தாயும்;சகலசௌந்தரிய சரீரத்தை யுடைத்தாயும்,ரூபலாவண்ணிய பிரகாசத்தை யுடைத்தாயும், கோடிசூரிய பிரகாச முடைத்தாயும், கிருபாசாகரத்தை யுடைத்தாயும் அநேககண்க ளுடைத்தாயு முள்ள தனது சொரூபத்தைக்காட்டிப் பின்னர் ஒன்பது கரங்களினின்றும் அளவில்லனவாய் நீர்த்தாரையை விடாமற்பொழிந்தாள்.

உலகமாதாவாகிய தேவியானவள் துக்கப்படுகிற சகலப்பிராணிகளையும் பார்த்து இரக்கமுடையவளாய் நீரைப்பெருக்க, அப்பெருக்கத்தினால் சகலஜனங்களும் சகல ஓஷதிகளும் சுகமுற்று விருத்தியாயின. நதிநதங்களும் பெருக்கெடுத்தோடின. முன்னொளித்திருந்த தேவரனைவரும் வெளியாயினர். பின்னர் அந்தந்தத்தேவர்களும் பிராமணர்களும் ஒன்றுசேர்ந்து தேவியைத் தியானித்து வேதாந்தங்களால் அறியத்தக்கவளே! உனக்கு நமஸ்காரம்; பிரம

சொரூபிணியே! உனக்கு நமஸ்காரம்; உனதுமாயையினாலே எல்லா லோகங்களையும் சிருஷ்டிக்கின்றவளே! உனக்கு நமஸ்காரம்! பக்தர்களுக்குக் கற்பகவிருக்ஷமாக விருப்பவளே! பக்தர்களுக்காக சகளத்திருமேனியைத் தரிக்கின்றவளே! நித்யதிருப்தியுடையவளே! உபமானமில்லாதவளே! புவனேஸ்வரியே! உனக்கு நமஸ்காரம்; எங்களுடைய சங்கடங்களைத் தணிக்க நீ அநேக கண்களைத் தரித்தபடியால் நீ சதாக்ஷி என்கிற திருநாமத்தைப் பெறக்கடவாய்; நாங்கள் பசியினால் பாதிக்கப்பட்டுள்ளோமாகையால் உன்னைத் தோத்திரஞ்செய்யச் சக்தியில்லை! ஓ தேவீ தயவுசெய்து எங்களுக்கு வேதத்தை வாங்கிக் கொடுப்பாயென்று பிரார்த்தித்தனர். அவர்களுடைய பிரார்த்தனையைக் கேட்டுத் தன் திருக்கரத்திற்றரித்திருக்கும் மலர் முதலியவற்றோடு கூடிய கொடியினின்றும் உயிர்கள் உண்ணத் தக்கவையான காய்களையும், ருசியான பழங்களையும், இன்னம் வேறுவகையாயுள்ளவைகளையும், அறுசுவையோடு கூடின நானாவித அன்னங்களையும் உண்டாக்கித்தந்தனள். அதனால் ஓ அரசனே! அத்தினத்தில் எங்கும் கோலாகல சப்தத்தோடு அத்தேவிக்கு "சாகம்பரி" என்கிற திருநாம முண்டாயிற்று.

இந்தக்கோஷ்டத்தைக்கண்ட தூதர்கள் அசுரேந்திரனுக்குச் சொல்ல, அவன் ஆயிரம் அக்குரோணி சேனைகளோடு ஆயுதபாணியாய்ப் பாணங்களைப் பிரயோகஞ்செய்துகொண்டே அதிவேகமாய் ஓடிவந்து சதாக்ஷி முன்னிற்கும் தேவசேனைகளையும் பிராமண கூட்டங்களையும் அங்கிருக்கவொட்டாது துரத்தினான். துரத்தவே, அவரெல்லாம் கிலகிலாவென்கிற பெரிய பயங்கரமான ஓர் பெருங் கூச்சலிட்டு எங்களை ரட்சிப்பாய்! என்று கதறினர். அவர்களது பயந்த ஓசையைக்கேட்ட தேவி, தேஜோமயமான ஓர் சக்கரத்தை எடுத்து அவர்களுக்கு யாதொரு துன்பமு மணுகாவண்ணம் நான்கு பக்கமும் சுழன்றுவரும்படி ஏவி, தான் வெளியில்நின்று அவ்வசுரனோடு அஞ்சத்தக்க யுத்தஞ்செய்தாள் இருவருடைய பாணங்களும் ஒன்றோடொன்று உராய்ந்து நெருப்புமாரி பொழிந்து சூரியமண்டலத்தை மறைத்தன; நாணியின் டங்கார ஓசைகளால் நான்குதிக்குஞ் செவிடுபட்டன; தேவியினுடைய திருமேனியினின்றும் காளி, தாரணி, பாலா, திரிபுரை, பைரவி, ரமை, பகலை, மாதங்கி, திரிபுர

சுந்தரி, காமா, துலஜாதேவி, ஜம்பனி, மோஹினி, சின்னமஸ்த்தினி, குஹ்யை, காளி என்னும் பெயருள்ள முப்பத்திரண்டு சத்திகள் லட்சங் கையுள்ளவர்களாய்த் தோன்றினர். இவர்களேயன்றி வேறு அறுபத்துநான்கு சத்திகளும் ஆயுதங்களோடுகூடிய அநேக சத்திகளுந் தோன்றினர். இவர்களுடைய ஆரவாரங்களும் மிருதங்கம் சங்கம் வீணை முதலிய வாத்யங்களுடைய வோசைகளும் யுத்தபூமியெங்கும் நிறைந்துவிட்டன. மேற்படி சத்திகளால் அசுரனுடைய அக்ரோணிசேனைகள் நாசமடையும் பொழுது அச்சேனைகளுக்குப் பிரபுவான துற்கமனன் வெளியே வந்து எங்கும் ரக்தவெள்ளமாகும்படி சத்திகளோடுகூடப்பத்துநாள் போர்செய்தனன். பதினொன்றாம்நாள் அவ்வசுரன் சிவந்தமாலைசிகப்புவஸ்திரம் சிவந்த சந்தனம் அணிந்து ஓர்பெரிய ரதத்தின்மீதேறி சத்திகூட்டங்களுக்குள் நுழைந்து அவர்களைச்செயித்து மகாதேவியின் ரதத்திற்கு எதிரில் தன்னிரதத்தை நிறுத்தி அவளோடு இரண்டு ஜாம பரியந்தம் அதிபயங்கரமான போர்புரியும்போது தேவி ஐந்நூறு பாணங்களை அவன்மீதும் நான்குபாணங்களை ரதத்திற்பூட்டிய நான்கு குதிரைகள்மீதும்ஒருபாணத்தை சாரதியின்மீதும்ஒருபாணத்தைக் கொடிமரத்தின்மீதும் இருபாணங்களை அசுரனுடைய இருநேத்திரங்களிலும் மற்று மிருபாணங்களை இரண்டு புஜங்களிலும் ஐந்து பாணங்களை அவன் மார்பிலும் பிரயோகிக்க அசுரன் உதிரத்தைக் கக்கிக்கொண்டே தேவியின் எதிரில் வீழ்ந்தான் வீழவும் அவனுடலினின்றும் ஓர் ஒளி தோன்றி தேவியின்திருமேனியில் மறைந்தது. மூன்றுலோகங்களும் சாந்தமாயிற்று. பிரமன் முதலான தேவர்களும் திக்குபாலகர்களும் ஆனந்தத்தால் நாவானது தழுதழுப்ப தேவியைத்துதிக்கத் தொடங்கினர். சகல வுலகங்களையுஞ் சிருஷ்டிக்கவும் சங்கரிக்கவும் காரணபூதையான ஓபரமேஸ்வரியே! சாகம்பரியானசிவையே!சதலோசன(நூறுகண்ணு)முள்ளதேவியே! உன்னை நமஸ்கரிக்கிறோம். எல்லா உபநிடதங்களாலும் தோத்தரிக்கப்பட்டவளே! துற்கமனை நாசஞ் செய்தவளே! பஞ்சகோண மத்தியிலுள்ளவளே! உன்னை நமஸ்கரிக்கின்றோம். ருஷிசிரேஷ்டர்களெல்லாம் நிர்விகற்பமாய்த் தியானஞ்செய்யப்படுகிற பிரணவார்த்த சொரூபியான புவனேஸ்வரி! உன்னை நமஸ்கரிக்கிறோம். அனந்த கோடி பிரமாண்டங்களுக்கும் பிரமவிஷ்ணுவாதியர்களுக்கும் தா

யானவளாயும் திவ்யவிக்கிரக தேஜோநிதியாயும்விளங்குமுன்னை நமஸ்கரிக்கின்றோம். மிக்கதயவுள்ள பரமேஸ்வரியான சதாக்ஷிதேவியை விட்டு மற்ற பாமரதேவர்களை எவன் ஆபத்தில் நினைத்து அழுவான் என்று விஷ்ணுமுதலிய தேவர்களும் அந்தணசிரேஷ்டர்களும் நானாவித மான பூஜாத்திரவியங்களாலும் பட்சண விசேஷங்களாலும்பூஜித்துத்துதிக்கவும் தேவி அவ்வழிபாட்டால் சந்துஷ்டியடைந்து வேதங்களை அந்தணர்களிடத்துக் கொடுத்து குயிலிசை போன்ற தனது இன்சொல்லால் ஆசீர்வதித்து உத்கிருஷ்டமான என்னுடைய இச்சரீரத்தை நீங்கள் விசேஷமா யாதரித்து அன்பு பாராட்டவேண்டும். நானில்லாமற் போனதனு லன்றோ உங்களுக்கு இப்பொழுது இப்படிப்பட்டசங்கடம் நேர்ந்தது. ஆதலால் நீங்கள் எப்பொழுதும் என்னைப் பூஜித்துக்கொண்டே யிருக்கவேண்டும். உங்களுடையக்ஷேமத்திற்காக இதை விட வே றுபதேசம் நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை; என்னுடைய இம்மஹாத்மியத்தை எப்போதும் படித்து வந்தால் நான் சந்துஷ்டியாய் உங்களுடைய ஆபத்தை யொழித்து விடுகிறேன். நான் துற்கமாசுரனைச்சங்கரித்தபடியால் துற்கி என் றழைக்கப்படுவேன். இத்துற்கி என்னு நாமத்தையும் சதாக்ஷி என்னு நாமத்தையும் எவன் உச்சரிக்கின்றானோ அவன் மாயையைவென்று வெளிவந்தவனாவான். இதன் பலன் அதிகமாகநான்சொல்லவேண்டுமோ உங்களுக்குச் சுருக்கி ஒருண்மையைச் சொல்கின்றேன். சகல சுராசுரர்களாலும் நானே நமஸ்கரிக்கத் தக்கவள் இதனையறிந் துய்வீர்களாகவென்று சொல்லித் தேவர்களுக் கெல்லாஞ் சந்தோஷத்தை யுண்டாக்கிச் சச்சிதானந்த சொரூபிணியான தேவியானவள் அந்தர்த்தானமாயினள். ஓ அரசனே! இந்தச்சரித்திரம் ரகசியமாயிருந்தாலும் உனக்குச் சொன்னேன்; சர்வசுபத்திற்கும் காரணமான இதனைப் பிரயத்தனத்தோடு எவன் காப்பாற்றி வைத்துக்கொண்டு பக்தியோடு கேட்கிறானோ அவன் இவ்வுலகத்தில் சகல கோரிக்கைகளையும்பெற்று தேவியின் உலகத்தை யடைகிறான். சுலோகம் (அரு)

உஅ-ம் அத்தியாயம் சதாக்ஷிமகிமாதிகதனம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் இருபத்தெட்டிற்குச் சுலோகம் (கறிகூகூ)



ஓ

ஹ்ரீங்காரவாச்யாயைநமஃ.

## இருபத்தோன்பதாம் அத்தியாயம்

## * ஜனமேஜயஸ்யவியாசகிருததேவிகதாபிமுகீகரணம்.



வியாசர் கூறுகின்றார்:— ஓ அரசனே! இதுகாறும் சூரியவம்சத்தாருடைய வுத்தமமான சரிதைகளைக்கூறினேன். இனிச்சந்திர வம்சத்தாருடையசரிதங்களைச்சொல்லுகிறேன். இவர்களும்பராசக்தியினது அநுக்கிரகத்தினால் ஐஸ்வர்யத்துடன் வாழ்ந்துவந்தவர்களென்றுநிச்சயிக்கக்கடவாய். ஓ அறிவிற்சிறந்தவனே! உலகின்கண் காணப்பட்ட சராசரங்களில் எந்தவுயிர் பலத்திலும் சம்பத்திலும் மேம்பட்டனவாகக்காணப்படுகின்றதோ அது பராசக்தியினுடைய அம்சத்தினு லுண்டானதென் றுணர்ந்து நிச்சயித்துக் கொள்வாய். சூரியசந்திரவம்சத்தவரும் ஏனையோரும் பராசத்தியை யுபாசித்தே சம்சாரமென்கிற விருக்ஷத்தின் வேருக்குக்கோடரியானார்கள். ஆகலின் எவ்விதமுயற்சியினாலாவது புவநேஸ்வரியை நமஸ்கரிக்கவேண்டும். தானியத்தைவிரும்புவோன் பதரைக்கழிப்பதுபோல தேவியை யபேக்ஷிக்கிறவன் இதரதேவர்களைக்கழித்தல் வேண்டும். யான்வேறு காரியங்களை யொழித்து வேதமாகிய பாற்கடலைக்கடைந்து அதிலெடுத்த ரத்னமாகிய பராசக்தியின் மலரடியில் அசைவில்லாமல் என்மனதைவைத்திருக்கிறேன் பஞ்சப்பிரஹ்மாசனத்தில் வீற்றிருக்கத்தக்க தகைமை பராசக்திக்கன்றி வேறொரு தெய்வத்திற்கில்லையாகலின் அம்மஹாதேவியே பஞ்சப்பிரஹ்மாசனத்தில் வீற்றிருப்பவளென்றும் பஞ்சப்பிரம்ஹங்களுக்கு அதிகரித்தவளென்றும் வேதத்தில் பிரகாசமாகச்சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வீஸ்வரியே ஓதரூபமாகவும் ப்ரோதரூபமாகவும் பிரமாண்டத்தில் மங்களகரமாயிருக்கின்ற புவநேஸ்வரியாகவும் விளங்குகின்றாள்.

ஓ அரசனே! இப்படிப்பட்ட தேவியை யறியாத மநிதன் முக்தனாகான் † எந்தமாநுடன் தோலைப்போல் ஆகாசத்தைச்சுருட்ட

---

* ஜனமேஜயனை வியாசர் தேவிசரிதத்தில்ஆவலுள்ளவனாகச்செய்தல்.

†"யாதாசர்ம வதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மாநவாஃ-ததாசிவாமவிஜ்ஞாய துக்கஸ்யாந்தோபவிஷ்யதி,அதஏவஸ்ருதவ்ப்ராஹ்மஸ்வேதாஸ்வதரசாகிநஃ"

வல்லவனோ அவன் தேவியை யறியாமல் சம்சாரதுக்கமுடிவையறிய வல்லவனுவனென்று வேதத்தில் சுவேதாஸ்வதரசாகையில் கூறப் படுகின்றது. தனது குணங்களால் மறைபட்டிருக்கும் பரமாத்ம சக் தியைத் தியானஸோகத்தில் வல்லவர்க ளறிவார்களென்று பெரி யோர் கூறுகின்றனர். பிறந்ததனுற் பெறுதற்குரிய பயனைப்பெறும் நிமித்தம் எவ்வித முயற்சியினுலாவது பயத்தினுலாவது பக்தியி னுலாவது சர்வசங்கபரித்யாகஞ்செய்து இருதயத்தில்நிலையாக நிறு த்திப்பராசக்தியைப்பிரதானமாகக்கொள்ளும் ஞானத்தை யுடைய வனுகவேண்டுமென்று பறைபோல வேதாந்தங் கோஷிக்கின்றது. ஆகலான் எவ்விதவியாஜத்தினுலாவது நினைத்தல்வேண்டும். நினைத் தற்குக் காலநியமமும் வேண்டாம். இருக்கும்போதும் உறங்கும் போதும் நடக்கும்போதும் மற்றெப்போதும் தேவியை நினைத்தல் வேண்டும். இவ்வாறு இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருந்தால் அந்நினைவே சம்சாரபந்தத்திலிருந்து விடுவிக்கும். ஆகலான் ஓ அர சனே! நீசர்வமுயற்சியாலும் மஹேஸ்வரியைத்தொழுவாய். விராட் ஸ்வரூபிணியாயும் சூத்ரரூபிணியாயும் அந்தர்யாமியாயுமிருக்கிற மஹாராணியாகிய் தேவியை முதலிலே சோபானமுறைப்படி தியா னிக்கமுயற்சிசெய்யவேண்டும். அங்ஙனஞ்செய்யப்பெறின் மனஞ் சுத்தியாய்விடும். அம்மனதைத்துணையாகக்கொண்டு சச்சிதானந்த லக்ஷ்யார்த்த சொரூபிணியாயும் பிரஹ்ம சொரூபிணியாயும் பிரவஞ் சமாயையை உல்லாசத்தால் விடுவிக்கின்றவளாயுமிருக்கின்ற பரா சத்தியைப் பூஜித்தல்வேண்டும். பூஜையென்பது பராசக்தியினிட த்து மனம் லயமாதலேயாம். சோமசூரியவம்சத்தில் வந்த அரசரெல் லாம் பராசக்தியின் பக்தர்களாயும் தர்மிஷ்டர்களாயுமிருந்தவர்கள். அவ்வித்வான்களுடைய சரிதமானது பரமபாவனமாயும் கீர்த்தியை யும் நன்மார்க்கத்தையுங் கொடுப்பதாயு மிருப்பதால் நீவிரும்பிய வண்ணமெடுத்துச்சொன்னேன். இனிப்புண்ணியத்தைக்கொடுக்கும் படியான எந்தச்சரிதத்தைக் கேட்கவிரும்புகின்றனையோ அதனைச் சொல்வா யென்றார்.

ஜனமேஜயன் ஓஐயா! கௌரி லக்ஷ்மி சரஸ்வதி என்னுமூவரை யும் பூர்வத்தில் பராசக்தி உருத்திரமூர்த்திமுதலியமூவருக்குங்கொ டுத்தனரன்றோ அங்ஙனமிருக்க, பார்வதிதேவி பர்வதாராஜனுக்கும்

தக்ஷனுக்கும் புத்திரியாகவந்தனளென்றும் லக்ஷ்மிதேவி பாற்கட லிற் பிறந்தனளென்றுங் கேட்டுள்ளேன். மூலதேவியினிடத்திற் றோன்றிய இவர்கள் வேறொருவருக்குப் புத்திரிகளாகவந்தார்களெ ன்பது அசம்பாவிதமாகலான் அதுபற்றிச் சந்தேகமிருக்கிறது. அதனை ஞானமெனுங் கத்தியினால் நீரறுத்தெறிவீராகவென்றான்.

வியாசர்கூறுகின்றார்:— ஓ அரசனே! தேவியிடத்தில்பக்தியுள்ள வனுக்குச் சொல்லத்தகாத ரகசியமொன்றுமில்லை. தேவிபக்தனாகிய உனக்கு இந்தரகசியமான பரமாத்புதசரித்திரத்தைச் சொல்லுகின் றேன் கேட்பாயாக. தேவியானவள் பார்வதி முதலிய மூன்று சக்தி களை எந்நாளிலேமும்மூர்த்திகளுக்குக் கொடுத்தனளோ அந்நாள் முதல் அம்மூவருஞ்சிருஷ்டிமுதலிய முத்தொழிலையுஞ் செய்துவந் தனர். ஓர்காலத்தில் ஹாலாஹலரென்கிற மஹாபலசாலிகளான அசுரர்கள் தோன்றி ஒருகணத்துக்குள் மூவுலகங்களையுமவெல்ல வல்லவரத்தைப் பிரமதேவனிடத்துப் பெற்று அகங்கார மேலிட்டு தங்கள் சேனைகளுடன் ஸ்ரீகைலாயத்துக்கும்வைகுண்டத்துக்குஞ் சென்றெதிர்க்க உருத்திரருந் திருமாலும் அவர்களுடன் அறுபதி னாயிரவருடம் தேவதானவரெல்லாம் ஆஹாவென்று பெருங்குர லிட்டோலமிடப்பெரும்போர்புரிந்து வென்றுதத்தமக்குரிய விடங் களிற்சென்று தாஞ்செய்தபோர்த்தொழிலுக்குப் பலந்தந்தவர்கள் தம்சத்திகளாகிய பார்வதி லக்ஷ்மிகளென்றுணராமல் தமதுபலத் தினாலென்றெண்ணி நானென்னும் அபிமானத்தை மேற்கொண்டு அவ்விருசத்திகளையு மதியாது சிரித்தனர் இவர்கள் சிரிக்கக்கண்ட அவ்விருவரும் இவர்களுக்குண்டாகிய செருக்கைக்குறிப்பாலுணர் ந்து இவர்களைப்பார்த்துச்சிரித்தனர். இதைக்கண்ட ஹரிஹரர்கள் கோபங்கொண்டு ஆதிமாயையினால் மோகிக்கப்பட்டு சக்திகளுக்கு அவமானமுண்டாகும்வண்ணம்அசங்கதமானவார்த்தைகளாலவச, அவ்விருவரும் அக்கணமே அவர்களுக்குத்தோன்றாமல்மறைய ஹா ஹாஎன்று ஓர்பேரொலி யுண்டாயிற்று. அதுவேயுமன்றி ஹரி ஹரராகிய இருவரும் அவ்விருசத்திகளையுந் தூஷித்தகாரணத்தால் தேஜஸூம் ஞானமுமில்லாதவர்களாய்த் தங்கள் தொழிலை மறந்து கிடந்தனர். பிரம்ஹா இவர்களைப்பார்த்து தேவர்களுக்குள் சிரேஷ் டர்களான இவர்களேன் தங்கள்காரியங்களில் வல்லமை யற்றிருக்

கின்றனர். காரணமின்றி எதனுல் இவர்களுக்கு இப்படிப்பட்ட சங்கடம் நேரிட்டது. நாசம் வருவதற்கான குற்றமில்லாத இவ்வுலகத்திற்கு நாசகாலம் இப்போது வரும்போற் காண்கின்றதே யென்று சிந்தாகுலமுற்று இந்தக்காரணத்தை நானறிந்தேவிடுவேன். இதற்கு நானெப்படி பரிகாரஞ்செய்யக்கூடுமென் றிவ்வண்ணஞ் சிந்தைசெய்து கண்மூடித் தியானஞ்செய்தனன். செய்யவே இது பராசத்தியின் கோபத்தினு லுண்டாயிற்றென் றறிந்துகொண்டு பின்னர் அவ்விருவர்களுக்கும் எந்தெந்தக்காரியமுண்டோ அந்தந்தக் காரியங்களைத் தனக்கு வாய்ந்துள்ள சத்தியின்பிரபாவத்தினுல் சிறிது காலம்வரையில் நடத்தி வந்தனன். பிறகுஅவ்விருவரும் இவ்வாறிருப்பது அழகன்றென்று தன்புத்திரர்களான மனுமுதலானவர்களையும் சநகாதிமுனிவர்களையும் வரவழைத்து அவர்களைநோக்கி ஓ புத்திரர்களே! நான் சிருட்டித்தொழிலேயன்றிக் காத்த லழித்தலாகிய காரியங்களிலும் இப்போது ஆவலுள்ளவனு யிருக்கின்றபடியால் தபஞ்செய்ய வலியற்றவனு யிருக்கின்றேன். எத்தொழிலுக்குந் தவந்தான் பலமாயுள்ளது. அதனை மறந்திருப்பேனுயின் தொழில் குறையும். ஆகையால் நான் இவ்வுலக பாரத்தை வகித்துக்கொண்டு பராசத்தியை எப்படி சந்தோஷப்படுத்துவேன். ஹரிஹரர்கள் பராசத்தியின்கோபத்தினுல்தங்களுடையதொழில்களில்சக்தியற்றவர்களாயினர்; ஆதலால் நீங்கள் அச்சக்தியையுத்தேசித்து ருத்திர விஷ்ணுவுக்குமுன்போல் சக்தியுண்டாம்வண்ணம் தவமும் பூஜையும் எப்படிச்செய்யவேண்டுமோஅப்படியேஅதியற்புதமாகச்செய்மின். ஓ எனக்கினிமையான புத்திரர்காள்! அங்ஙனஞ் செய்வீராயின் உங்களுக்குக்கீர்த்தியுண்டாம். எவனுக்கு எந்தக்குலத்தில் ஜன்மமுண்டாகிறதோ அவ னக்குலத்துக்குத் தன்பலத்துக்குந்தக்கபடி பரிசுத்தத்தைச் செய்யவேண்டும். அப்பரிசுத்தம் எல்லாலோகத்துக்குஞ்செய்ததுமாகும்;அவன்தான் புண்ணியவானுவானென்றூர். இவ்வாறு பிரமன்கூறிய வார்த்தையைக்கேட்டு யாவரும் ஆரண்யம் போய் நிர்மலமனதுடன் பூஜிக்கவிச்சித்தனர். சுலோகம் (சுரு)

உகூ-ம் ஜனமேஜயஸ்யவியாசகிருததேவிகதாபிமுகீகரணமுற்றிற்று.



உ

ஹ்ரீங்காரபூஜ்யாயைநமஃ

முப்பதாம்அத்தியாயம்.

# கௌரீஜன்மாதிகதனம்.



வியாசர் கூறுகின்றார்:—ஜனமேஜயனே! பின்னர் மநுமுதலான சநகாதியர் வனத்துக்குப்போகவேண்டுமென் றுத்தேசித்து இமயமலைச்சாரலை யடைந்து மாயாபீஜமந்திரத்தை இலக்ஷவருடம் ஜபித்துக்கொண்டுசாவதானமாய்த் தவர்புரிந்து வந்தனர். அவர்கள் செய்து வந்த தியானுதிகட்குச் சச்சிதானந்தசொரூபிணியாகிய பராசக்தி கருணைகூர்ந்து பாசம் அங்குசம் வரதம் அபயம் என்னு முத்திரைகளுடன் நான்குதிருகரங்களும் கருணாரசத்தால் நிறைந்த முக்கண்ணுமுடையவளாகத் தோன்றினள். சர்வலோகமாதாவாகிய அத்தேவியை நிர்மலசித்தமுடைய அம்முநிவர்கள் கண்டு களித்துத் துதிக்கத் தொடங்கினர்.

பிரபஞ்சசொரூபிணியாயும்அக்நி சொரூபிணியாயுமிருக்கின்ற உனக்கு நமஸ்காரம். தேஜோ சொரூபிணியாயும்பிரமாண்டத்தில் ஓதப்ரோத (மேலுங்கீழும்) ரூபமாகவிருகின்ற சூக்ஷ்மசரீரங்களுக்குச் சூத்ராத்ம சொரூபிணியாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம். பிரஜா சொரூபிணியாயும் வியாகிருத சொரூபிணியாயும் பிரத்தியக் சொரூபிணியாயும் பிரஹ்மசொரூபிணியாயுமிருக்கின்ற உனக்குநமஸ்காரம். சர்வசொரூபிணியாயும் சர்வ லக்ஷ்யாத்மசொரூபிணியாயு மிருக்கின்ற உனக்கு நமஸ்காரம்.

என்றிவ்வாறு ஜகன்மாதாவை பக்தியுடன் நாக்குழறி தோத்திரஞ்செய்து பாதகமலங்களை நமஸ்காரஞ்செய்தனர். இன்னிசைக் குரலுள்ளதேவி சந்தோஷித்தவளாய் ஓ மஹாநுபாவர்களே! நான் உங்கட்கு வேண்டியவரங்களைக் கொடுக்க வந்திருக்கின்றேன். வேண்டுவனவற்றைக் கேளுங்க ளென்றருள; அவர்கள் அரி ஹரர்கள் சரீரசாந்தியைப்பெறவும் பராசக்திசொரூபமான பார்வதி லக்ஷ்மிகளை யடையவும் பிரார்த்தித்தனர். தக்ஷபிரஜாபதி, தேவியை நோக்கி ஓதேவியே! நீஎன்குலத்திலவதரிப்பையாயின் நான் உன்னை

ஜபித்துந் தியானித்துங் பூஜித்தும் கிருதகிருத்யனுவேன். ஓ ஈசானி! இப்போது நான் வேண்டியதைக் கொடுக்கிறேனென்று உனது திருவாக்கால்சொல்லி யருளுமென்று விண்ணஞ்செய்ய,தேவி மநு முதலானவர் களேயும் தக்ஷனேயும் பார்த்து ஹரிஹரர்கள் என்னுடைய சக்திகளே அவமதித்ததனுல் அவர்களுக்கிந்த அவஸ்தை வந்தது. இனி இப்படிப்பட்ட அபராதத்தை என்விஷயத்தில் அவர்கள்செய்யாதொழிக. இப்பொழுது என்னேப்பிரார்த்தித்தபடியால் என் கருணுலேசத்தால் அவர்களுக்குச் சரீரத்தில் சக்தி யுண்டாகக்கடவது எனது பிரேரேபணேயால் ஒருசக்தி தக்ஷனது கிருகத்திலும் ஒருசக்திபாற்கடலிலும் தோன்றுவார்கள். ஓ அன்பர்களே! மாயா பீஜாக்ஷரமானது எனக்கு முக்கியமாயும் பிரியமாயுமுள்ளதாகலின் நீவிர் சகல லோகங்களேயும் சுவாதீனஞ்செய்து கொண்டு எனது விராட்சொரூபத்தையாவது உங்களுக்கு இப்போது காணப்படும் இச்சச்சிதானந்த சொரூபத்தை யாவது தியானித்து எப்போதும் பூஜித்துவரவேண்டுமென்று கூறி மணித்வீப வாசினியாகிய தேவி மறைந்தனள். பின்னர் தக்ஷபிரஜாபதி முதலானேர் பிரமதேவனிடஞ்சென்றுநடந்த செய்திகளேக் கூறினர்.

ஓ! அரசனே! ஹரி ஹர ரிருவரும் தேவியின் கருணேயால் சக்தி யுக்தராயும் தங்கள் தங்கள் தொழிலில் வல்லமையுள்ளவர்களாயும் நிரஹங்காரிகளாயும் வாழ்ந்தனர். இவ்வண்ண மிருக்கும்பொழுது பராசக்தி யனுக்கிரகித்தவண்ணம் ஓர்காலத்தில் சத்திசம்பந்தமான தேஜசு தக்ஷப்பிரஜாபதியினுடைய கிருகத்தில் அவதாரஞ்செய்தது. அப்பொழுது மூன்றுலகத்திலும் தேவர்களெல்லாஞ் சந்துஷ்டராய்ப் புஷ்பவருஷம் பொழிந்தனர். அந்தரத்தில் துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கின சித்தசுத்தி வாய்க்கப்பெற்ற சாதுக்களுடைய மனம் சந்துஷ்டியடைந்தன. நதிகளெல்லாம் நிர்மலமாய்ப் பெருக்கெடுத்தோடின. சூரியன் அகண்டவொளியாய்ப் பிரகாசித்தனன் இவ்வா றுலகெல்லாங் களிக்க அவதரித்த சத்தி பராசத்தியின் அம்சமாதலால் "சதி" என்று பெயர்பெற்று ஹரனுக்கே பத்தினியாய்ப் பின்னர் ஓர்காரணத்தினுல் அக்கினிப் பிரவேசமாயினுளென்ருர். இதனேக்கேட்ட அரசன் வியாசரை நோக்கி ஓமுநிவரே! இதுவென்ன அனர்த்தமான வார்த்தையைச்

சொன்னீர். நீர் சொன்ன அந்தத்தேவியின் திருநாமத்தை நினைத்தமாத்திரத்தில் சம்சாரமென்கிற கொடிய அக்கினி தணியத்தக்கதாக விருக்க அந்தத்தேவி அக்னிப்பிரவேச மாயினளென்பதென்னை? எந்த கர்மவிபாகத்தினால்அக்கினியினால்கொளுத்தப்பட்டாள்? இது ஆச்சாரியகரமாக இருக்கின்றது. இதனைக் கூறுமென்றான்.

வியாசமுநிவர் கூறுகின்றார்,—ஓ அரசனே! ஓர்காலத்தில் தூர்வாச மஹாமுநிவர் ஜாம்பூநதேஸ்வரி (பொன்மயமான தேவி)யையடைந்து அவளைத் தரிசனஞ்செய்து மாயாபீஜத்தை ஜபித்தார் அதனால் தேவி மகிழ்ந்தவளாய் தனது கண்டத்திற் றரித்துள்ள மகரந்தம்நிறைந்து ரீங்காரத்வனியோடுகூடிய ஓர்புஷ்பமாலையை அம்முநிவருக்கு அனுக்கிரகஞ்செய்தனள். அதனை அவர்மகிழ்ந்து சிரமேற்கொண்டு ஆகாயமார்க்கமாய் சதிதேவிக்குப் பிதாவாகிய தக்ஷபிரஜாபதியினிடஞ்சென்று அங்குள்ள சதிதேவியை நமஸ்கரிக்கும்போது தக்ஷப்பிரஜாபதி,ஓதூர்வாசமுநிவரே! இந்தமாலை உமக்கெப்படி கிடைத்தது? இது மனிதரால் அடையத்தக்கதல்லவே என்று கேட்க, அம்முநிவர் ஆனந்தபாஷ்பத்துடன் இது தேவியினுடைய அனுக்கிரகத்தினால் கிடைத்ததென்றார். ஆனால் அதனை எனக்குக் கொடுக்கவேண்டு மென்ன முநிவர் இவன் சதிதேவியின் பக்தனாக விருக்கின்றபடியால் இவனுக்குக் கொடுக்கக்கூடாத பொருள் மூவுலகத்தினும் இல்லையல்லவா வென்று நினைந்து மாலையைக் கொடுக்க அவன் அதனைத் தலையால்வணங்கிவாங்கிப் படுக்கையறையில் தூக்கிவைத்தனன். பின்னர். இராத்திரி பத்தினியுடன் அங்கிருக்கும்போது அந்தமாலையினின்றும் வீசிய பரிமளத்தினால் காமவேட்கையுடையவனாய்க் கிரீடித்தனன். அத்தோஷத்தினால் உண்டாகிய பாவத்தினாற்றான் சங்கரனிடத்திலும் சதிதேவியினிடத்திலும் உண்டாயிருந்த பக்திமாறி இருவரிடத்துந் துவேஷமுடையனாயினன்.

ஓஅரசனே! சதிதேவி தக்ஷனிடத்துண்டாகிய சிவத்வேஷத்தையெண்ணி நாம் இனி இவனிடத்திலுண்டான இத்தேகத்தைவைத்திருத்தல் தருமவிருத்தமென்கிற தருமத்தைப்பாராட்டி யோகாக்னியிற் பிரவேசித்தனள். அச் சத்தி சொரூபமானஒளியே இமயகிரியிற்றோன்றியதென்றனர். ஜனமேஜயன் சிவபெருமானுக்குத்தனது

பிராணனைக்காட்டிலும் சதி இனிமையாயிருப்பவளாயிற்றே அத்தேவி அக்னியிற் கொளுத்தப்படும்போது அவர் என்னசெய்தார்? அதனைச் சொல்லுமென்ன முநிவர் அப்பா! அச்சிவபெருமானுக்குண்டாகிய கோபத்தையும் அதனாலுண்டாகிய அனர்த்தத்தையும் எனக்குச் சொல்லுவதற்குச் சக்தியில்லையாயினும் ஒருவாறு கூறுகின்றேன்; சிவபெருமானுக்கு மூன்றுலோகமும் லயமடையும்படியான கோபாக்னி யுண்டாயிற்று அதினின்றும் வீரபத்திர மூர்த்தி பத்திரகாளி முதலிய எண்ணிறந்த கணங்களோடு தோன்றி மூன்றுலோகத்தையும் நாசஞ் செய்யத் தொடங்கினர். அச்சமயத்தில் பிரமன் முதலிய சகல தேவர்களும் சிவ பெருமானைச் சரணமடைந்து தக்ஷபிரஜாபதியினால் யாவரும் நாசமாயினோம் நாங்களென் செய்வோமென்றுமுறையிட, அப்பெருமான் கருணையுடையவராய் தம்மைநிந்தித்த தக்ஷனது குற்றத்தைக் கருதாது அவனை ஆட்டுத்தலையுட னெழுந்திருக்கச்செய்து யாவருக்கும் அபயந்தந்து யாகசாலையையடைந்து அங்கு சதி யோகாக்னியினால் சரீரத்தை விட்டிருப்பதைக்கண்டு மனம்பொறாதுவருந்திசித்கலாரூபமாகிய அவரது திருமேனியைத்தோளில் வைத்துக்கொண்டு தேசமெலாந் திரிந்து வரும்போது பிரமன்முதலியதேவர்களோடுந்திருமால்பணிந்து எம்பெருமானே! தேவரீர் மீதிருக்கும் சதியினது சரீரம் சித்கலாரூபமாதலால் அக்கலைகள் தனித்தனிஉலகமுற்றும் பீடமாகவிருக்கச்செய்து அப்பீடங்களில் சத்தனாகிய தேவரீரும் வீற்றிருக்கப் பிரார்த்திக்கின்றே னென்று வேண்ட சதிநாயகன் அவ்வாறேஆகுகவென்றருள்புரிந்து அத்திருமாலிடத்து அக்களாசரீரத்தைக் கொடுத்து இதிலுள்ள கலைகளைப் பூமண்டலத்தில் ஆங்காங்குப் பிரதிஷ்டை செய்வாயென்றனர். அவர் அவ்வாறே தாபிக்க அவைகளில் சத்திநாதன் வீற்றிருந்து திருமால் முதலிய தேவர்களைப்பார்த்து இப்போது ஆங்காங்கு பீடரூபமாய்ப் பிரதிஷ்டையாயிருக்குந் தேவியை எவர்கள் பஜிக்கின்றார்களோ அவர்களுக்கு லோகத்தில் கிடைத்தற்கரிதாகிய பொருளொன்றுமில்லை சதிதேவி தன் அங்கங்களாகிய இவைகளில் எப்பொழுதும் சாந்நித்தியமா யிருக்கின்றாள் ஆதலால்விசேடமாய்ச்சித்தியையுண்டாக்கவல்லதும் மிகப்பிரசித்தி பெற்றதுமான மாயாபீஜ மந்திரத்தை இந்தத்தானங்களில் எந்தமனிதன் புரஸ்சரணை செய்கின்றானோ அவனுக்கு அம்மந்திரசித்தி யுண்

டாகிறதென்று அநுக்கிரகித்து யாவருக்கும் அந்நெறி காட்டத் தாமும் அந்தசெபத்தியான சமாதிமுதலானவைகளால் காலத்தைக் கழித்துக்கொண்டு வந்தனரென்று கூறினர்.

ஜனமேஜயன், ஓ மஹாமுநிவரே! தேவிஸ்தானங்களாகக்கூறப்படும் சித்தபீடங்கள் எத்தனை? அவைகளின் பெயரென்னை?ஒகிருபாமூர்த்தியே! எனக்குச்சொல்லுவீராயின் நான் கிருதார்த்தனாவேனென்றுசொல்ல, வியாசர் ஓ அரசனே! தேவியினுடைய பீடங்களை இப்போதுனக்குநான்சொல்வதுமன்றி சித்தியைக் கோருகின்றவர்களால் எங்கெந்த பீடங்களில் எங்கெந்த தேவி உபாசிக்கத் தகுந்தவளோ, சம்பத்தைக்கோருகின்றவர்களால் எங்கெந்த தேவி உபாசிக்கத்தகுந்தவளோ அம்முறைகளையும் உண்மையாகச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. அவைகளைக் கேட்டமாத்திரத்தில் மனிதன்பாவத்தினின்று நீங்கினவனுவானென்று சொல்லத்தொடங்கினர்.

ஓ அரசனே! காசியில் கவுரிமுக நிவாசினியாய் (1) விசாலாக்ஷீ என்றும், நைமிசாரணியத்தில் (2) லிங்கதாரணீ என்றும், பிரயாகையில் (3) லளிதை என்றும், கந்தமாதனத்தில் (4) காமுகீ என்றும், மானதசரசில் (5) குமுதா என்றும், அதற்குத் தென்றிசையில் (6) விஸ்வகாமாபகவதீ என்றும், வடதிசையில் (7) விஸ்வகாமப்ரபூரிணீ என்றும்; கோமந்தத்தில் (8) கோமதீ என்றும், மந்தரத்தில் (9) காமசாரிணீ என்றும், சயித்திரரதத்தில் (10) மதோத்கடை என்றும், அஸ்திஞபுரத்தில் (11) ஜயந்தி என்றும், கான்யகுப்ஜத்தில் (12) கௌரீ என்றும், மலயாசலத்தில் (13) ரம்பை என்றும், ஏகாம்பர பீடத்தில் (14) கீர்த்திமதி என்றும், விஸ்வத்தில் (15) விஸ்வேஸ்வரீ என்றும், புஷ்கரத்தில் (16) புருஹூதை என்றும், கேதாரபீடத்தில் (17) சன்மார்க்கதாயினீ என்றும், இமயகிரியின் பின்பக்கத்தில் (18) மந்தை என்றும், கோகர்ணத்தில் (19) பத்திர கர்ணிகா என்றும், பவானியில் (20) ஸ்தானேஸ்வரி என்றும், பில்வபத்திரிகையில் (21) பில்வகை என்றும், ஸ்ரீசைலத்தில் (22) மாதவீ என்றும், பத்திரையில் (23) பத்ரேஸ்வரிஎன்றும், வராகசைலத்தில் (24) ஜயை என்றும், கமலாலயத்தில் (25) கமலை என்றும், ருத்ரகோடியில் (26) ருத்திராணிஎன்றும், காலஞ்சரத்தில் (27)காளி என்றும், சாளக்கிராமத்தில் (28) மஹாதேவி என்றும், சிவலிங்கத்தில்

ஜலப்பிரயை என்றும், மஹாலிங்கத்தில் (30) கபிலை என்றும், மாகோட்டையில் (31) மகுடேஸ்வரீ என்றும், மாயாபுரியில் (32) குமாரீ என்றும், சந்தானத்தில் (33) லலிதாம்பிகை என்றும், கயையில் (34) மங்களாம்பிகை என்றும், புருஷோத்தமத்தில் (35) விமலை என்றும், சகஸ்ராக்ஷத்தில் (36) உத்பலாக்ஷீ என்றும், இரண்யாக்ஷத்தில் (37) மகோத்பலைஎன்றும், விபாசாயத்தில் (38) அமோகாக்ஷீ என்றும், புண்டரவர்த்தனத்தில் (39) பாடலீ என்றும், சுபாருசுவத்தில் (40) நாராயணீ என்றும், திரிகூடபர்வதத்தில் (41) ருத்திரசுந்தரீ என்றும், விபுலத்தில் (42) விபுலாதேவீ என்றும், மலையாசலத்தில் (43) கலியாணி என்றும், சஹ்யபர்வதத்தில் (44) ஏகவீரை என்றும், ஹரிச்சந்திரத்தில் (45) சந்திரிகை என்றும், ராமதீர்த்தத்தில் (46) ரமணை என்றும், யமுனாதீர்த்தத்தில் (47) மிருகாவதீ என்றும், கோடிதீர்த்தத்தில் (48) கோடவீ என்றும், மாதவவனத்தில் (49) சுகந்தை என்றும், கோதாவிரியில் (50) திரிசந்தீ என்றும், கங்காதுவாரத்தில் (51) ரதிப்பிரியை என்றும், சிவகுண்டத்தில் (52) சுபானந்தை என்றும், தேவிகாதடத்தில் (53) நந்தினீ என்றும், துவாரகையில் (54) ருக்மணீ என்றும், பிருந்தாவனத்தில் (55) ராதை என்றும், மதுரையில் (56) தேவகீ என்றும், பாதாளத்தில் (57) பரமேஸ்வரீ என்றும், சித்திரகூடத்தில் (58) சீதா என்றும், விந்தியத்தில் (59) விந்தியாதிவாசினீ என்றும், கரவீரத்தில் (60) மகாலக்ஷ்மீ என்றும், விநாயகக்ஷேத்திரத்தில் (61) உமாதேவீ என்றும், வைத்தியநாதத்தில் (62) ஆரோக்யை என்றும், மஹாகாளத்தில் (63) மகேஸ்வரீ என்றும், உஷ்ணதீர்த்தத்தில் (64) அபயாம்பிகை என்றும், விந்தயபருவதத்தில் (65) நிதம்பை என்றும், மாண்டவியத்தில் (66) மாண்டவீ என்றும், மயேஸ்வரிபுரத்தில் (67) சுவாஹாதேவீ என்றும், சகலண்டத்தில் (68) பிரசண்டை என்றும், அமரகண்டகத்தில் (69) சண்டிகை என்றும், சோமேஸ்வரத்தில் (70) வராரோகை என்றும், பிரபாசத்தில் (71) புஷ்கராவதீ என்றும், சரஸ்வதிநதிதடத்தில் (72) தேவமாதை என்றும், மஹாலயத்தில் (73) மகாபாகை என்றும், பயோஷ்ணியத்தில் (74) பிங்களேஸ்வரீ என்றும், கிருதசௌக்யத்தில் (75) சிம்மிகை என்றும், கார்த்திகையில் (76) அதிசாங்கரீ என்றும், உற்பலாவர்த்தத்தில் (77) லோலாதேவீ என்றும், சோணசங்கமத்தில் (78) சுபத்திரை என்றும், சித்தவனத்தில் (79) லக்ஷ்மீ

என்றும், பரதாஸ்ரமத்தில் (80) அனங்கை என்றும், ஜாலந்தரத்தில் (81) விஸ்வமுகீ என்றும், கிஷ்கிந்த பர்வதத்தில் (82) தாரை என்றும், தேவதாருவனத்தில் (83) புஷ்டிர்மேதா என்றும், காஷ்மீரமண்டலத்தில் (84) பீமாதேவீ என்றும், ஹிமாத்ரியில் (85) துஷ்டி விஸ்வேஸ்வரி என்றும், கபாலமோசனத்தில் (86) சுத்தி என்றும், காயாரோகணத்தில் (87) மாதாதேவீ என்றும், சங்கோத்தரத்தில் (88) தரா என்றும், பிண்டாரக க்ஷேத்திரத்தில் (89) திருதி என்றும்; சந்திரபாகாநதியில் (90) கலாதேவி என்றும், அச்சோதயத்தில் (91) சிவதாரணீ என்றும், வேணுநதியில் (92) அமுர்தை என்றும், பதிரியில் (93) உரசி என்றும், உத்தரகிரியில் (94) அவுஷதை என்றும், குசத்தீபத்தில் (95) குசோதகை என்றும், ஹேமகூடத்தில் (96) மன்மதை என்றும், குமுதத்தில் (97) சத்தியவாதினீ என்றும், அஸ்வத்தில் (98) வந்தினீ என்றும், குபேராலயத்தில் (99) நிதி என்றும், வேதமுகத்தில் (100) காயத்திரி என்றும், சிவசந்நிதியில் (101) பார்வதி என்றும், தேவலோகத்தில் (102) இந்திராணி என்றும், பிரமன்முகத்தில் (103) சரஸ்வதி என்றும், சூரியபிம்பத்தில் (104) பிரபை என்றும், சப்தமாதாக்களில் (105) வைஷ்ணவிதேவீ என்றும். பதிவிரதைகளில் (106) அருந்ததி என்றும், அழகானஸ்திரீகளில் (107) திலோத்தமை என்றும், சர்வசரீரிகளுடைய சித்தத்தில் சக்தி (108) பிரஹ்மகலை என்றும், தேவி பெயர்பெற்று விளங்குகின்றாள்.

ஓ ஜனமே ஜயனே! இதுகாறும் சதிதேவியின் அங்கங்கள் தங்கிய விடங்கள் நூற்றெட்டென்றும் அவ்விடங்களே சக்தி பீடங்களெனப் பெயர்பெறுமென்றும் அப்பீடங்களில் விசாலாக்ஷி என்னுந்திருநாமமுதல்பிரஹ்மகலைஎன்னும்திருநாமமீறாகச்சொல்லி வந்தநாமங்களால் தேவிவிளங்குகின்றாளென்றும் அறியக்கடவாய். இன்னமுஞ் சக்திபீடங்க ளநேகமிருப்பினும் இந்நூற்றெட்டும்உத்தமமானவை. இந்தப் பீடநாமங்களையும் இந்தத் தேவி நாமங்களையும் எவன் கேட்பானோ எவன் நினைப்பானோ அவன் சர்வ பாபத்தினின்றுநீங்கிமறுமையில் தேவியினது உலகத்தை யடைவான். இப்பீடங்களை யுத்தேசித்து விதிப்படி யாத்திரைசெய்து அவ்விடங்களில் பிதுர்க்களுக்கு சிரார்த்தாதிகளும் தர்ப்பணமும் பகவதிக்கு விதிப்படி மகக்காகிய பூஜைகளுஞ்செய்து அடிக்கடி ஓஜகத்தாத்ரீ!

ஜகதம்பிகே! என்று அபராதக்ஷமைகேட்டுக்கொள்ளவேண்டும். தன் சக்திக்கேற்றவாறு மாயாபீஜமந்திரத்தை புரஸ்சரணை செய்யவேண்டும். அந்தணர்கள் சுமங்கலிகள் கன்னிகைகள் பிரமசாரிகள் ஆகிய இவர்களை அறுசுவையோடுகூடிய வுணவுகளால் திருப்தி செய்விப்பதுமன்றி அந்தசக்திக்ஷேத்திரங்களில் வசிக்கும் சண்டாளாதியர்களையும் தேவிரூபமாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியால் அவர்களையும் உபசரித்துத் தன்னைப் புண்ணியசாலியாக நினைத்தல்வேண்டும், அந்தப்புண்ணியக்ஷேத்திரங்களில் பிறரிடத்தில்தானம்வாங்குதலும் ஆசையுள்ளவனுயிருத்தலுங் கூடாது. எவனிவ்வண்ணம் பிரீதியோடு ஸ்ரீதேவியாத்திரை செய்கின்றானோ அவன் ஆயிரங்காலபரியந்தம் பிரமலோகத்தில் வசிப்பான். அவனது பிதுர்க்களும் பிரமலோகமேயன்றி தேவிபட்டணத்திலும் வசித்துப் பின்னர் பிரமஞ்யானமடைந்து சம்சார சாகரத்தைக்கடந்து முக்தராகின்றனர்.

ஓ அரசனே! தேவியினிடத்து பக்திவைத்து இவ்வஷ்டோத்தர சதத்தைச் செபித்து அநேகர் வேண்டிய சித்தியடைந்தனர். அன்றியும் அவர்களா லடையக்கூடாத வஸ்துவுமில்லை; யாதொரு குறைவுமில்லை; அவர்களே புண்யவான்கள் இது நிச்சயம். எவன்தேவியின் ரூபமடைகின்றானோ அவன் தேவர்களால் எப்போதும் நமஸ்கரிக்கப்படுவானெனின் மனிதர்களால் பூஜிக்கப்படுவானென்று சொல்லவும்வேண்டுமோ! சிரார்த்தகாலத்தில் இந்நாமாஷ்டசதத்தைப் படித்தால் அவனதுபிதுர்க்கள் திருப்தியடைந்து நற்கதியடைகின்றனர். இந்தமுக்திக்ஷேத்திரங்கள் சாக்ஷாத் ஞானஸ்வரூபமாக விருக்கின்றபடியால் மனிதன் புத்தியுள்ளவனுக விருந்தால் இச்சக்திபீடங்களை ஆச்சரியமாக அடையக்கடவன். யாவரிடத்தில் இப்புஸ்தகம் எழுதப்பட்டிருக்கிறதோ அவர்கள் கிருகத்தில் மாரிமுதலான பயமொழிந்து பருவகாலத்தில் சமுத்திரம் எப்படி விருத்தியடைகின்றதோ அப்படி சம்பத்து விருத்தியடைந்து நிலைபெற்றிருக்கும். ஓ அரசனே! நீ என்னை என்னகேட்டனையோ அந்தரகசியங்க ளனைத்துஞ் சொன்னேன். இனி என்ன கேட்க விருக்கின்றனை யென்று வினவினர். சுலோகம் (க௦உ)

முப்பதாம் அத்யாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௩௦-க்கு சுலோகம் (கஎச௩.)

ഉ

ஹ்ரீங்காரபீடிகாயைநமஃ

## முப்பத்தோன்றாம் அத்தியாயம்.

## * தேவதாநும் தேவீ பிரத்தியக்ஷம்.



ஜனமேஜயன் ஓ முநிபுங்கவரே! கதா வமிர்தத்தைப் பானஞ் செய்யப்பெற்ற வொருவன் யான் திருப்தி யடைந்து விட்டேன் இனிப்போது மென்பானே, அன்றியும் அமிர்தபானஞ் செய்கின்ற வர்களுக்கு மிருத்யுவில்லை என்பதுபோல தேவியினது கதாவமிர் தத்தைப் பானஞ் செய்கின்றவர்கட்கும் அது கிடையா தாகலான் பர்வதத்திற் கெல்லாம் பிரபுவாகிய இமகிரியில் முன் பராசத்தியின் ஒளியானது பார்வதியாய்த் தோன்றிற் றென்று கூறினீர் அதனை இப்போது விரிவாய்க் கேட்க விரும்பியுள்ளேனென்றுபிரார்த்திக்க வியாசர் கூறுகின்றார்.

தன்யனும் கிருதகிருத்யனும் பெரியோர்களால் மதிக்கப்ப ட்டசிஷ்டனும் மஹானும் பாக்யவானும் யாதொரு காம்யமுங் கருதாமல் தேவியினிடத்தில் பக்தியுள்ளவனுமிருக்கிற அரசனே! முன் சதிதேவியின் திருமேனி அக்கினியில்பிரவேசித்தபோது சிவ பெருமான் ஒரு செயலு மற்றவராய் உலகமெங்கும்உலாவி யோகி யைப்போல் பிரபஞ்ச சங்கற்பமின்றி ஓரிடத்திலிருந்து தேவியின் சொரூபத்தைத் தியானித் திருந்தனர். இவ்வாறு சிவபெருமான் போக சங்கற்ப சக்தி ரகிதராய் அசைவற் றிருப்பவே மூவுலகினு முள்ள சராசரங்களாகிய எல்லாவுயிர்களும் பாக்கிய மற்றனவாயும் உள்ளத்தில் ஆனந்தமற்று துக்க சிந்தனையை யுடையனவாயும் தத்தமக்குரிய செயல்களில் ஆசை யற்றனவாயும் துக்க சாகரத்தில் ஆழ்ந்து கிடப்பனவாயும் ரோக முடையனவாயு மாயின. சூரிய சந்திராதி கிரகங்களுக்கும் தேவர்களுக்கும் விபரீதமான செயல்க ளுண்டாயின. பூத முதலிய சிறு தெய்வங்களே சத்திய முடை யனவென்று கொண்டாடப் பெற்றன. இவ்வா றிருக்குங் காலத் தில் தாரகனென்னும் ஓர்பெரிய அசுரன் பிரமதேவனுடைய வரத்

* தேவர்களுக்குத் தேவி காக்ஷி கொடுத்தல்.

தினுல் மூன்றுலோகத்துக்கும் பிரபுவாய்த் தேவர்கட்கு அளவிறந்த துன்பத்தைச் செய்ய அவர்கள் பொறுக்க முடியாதவர்களாய்த்தத் தமக்குரிய இடங்களை விட்டோடிப்போய் இவனுக்கு யாவரால் மரணமுண்டாகு மென்று சிந்திக்க, சிவபெருமானது அவுரசபுத்திரனு லுண்டாமென்றுணர்ந்து, அந்தோ! இப்பொழுது சிவ பெருமானிடத்துத் தேவியில்லா திருப்பதால் புத்திரனெவ்வண்ண முண்டாவான் பாக்கிய ஹீனர்களாயிருக்கும் நம்முடைய காரியம் எவ்வாறு முற்றுப்பெறப்போகிற தென்று பலவாறுகச் சிந்தாகுலப்பட்டு ஏக்கமுற்றவராய் வைகுண்டத்தையடைந்து, திருமால் தனியேயிருப்பதைக்கண்டு இதுதான் நல்லசமயமென்றெண்ணி அவரைப் பணிந்து, ஓ நாராயணமூர்த்தியே! எங்கட்குண்டாயிருக்குந் துக்கத்தைப் போக்கிக் கொள்வதற் குபாயம் யாதென்றுவினவினர். அவர், வேண்டிய வெல்லாந்தரும் கற்பகமாயும் மங்களையாயும் புவனங்கட்கெல்லாம் ஈசானையாயும் மணித்வீப வாசினியாயு மிருக்கின்ற தேவி இருக்க நீங்களேன் துன்பமுறுகின்றீர்கள், அவ்வுலகமாதா நம்மைச் சிக்ஷிக்கும் பொருட்டு நம்மைப் பாராதவள்போல் இப்போதிருக்கின்ருள், அதனுல் இத்துன்ப முண்டா யிருக்கிறது, வேறு காரணமில்லை, குணதோஷங்களை நாடிச் சிக்ஷிக்கின்ற தாயானவள் குழந்தையை யணைத்தலும் அடித்தலும் காருண்யந்தானே, அது போல் தேவியாகிய மாதாவி னிடத்தில் நாம் அடிக்கடி செய்கின்ற குற்றங்கட்கான தண்டனைகளைச் செய்து வருகின்ருள், அவளே பொறுப்பாள், வேறுயாவரிருக்கின்றனர், ஆதலான் அப்பராம்பிகையை நீங்கள் காலதாமதஞ் செய்யாமல் சரண்புகுந்து யாதொருகாரியமும் சிந்திக்காமல் அவளையே சிந்திப்பீர்களாயின் அவ்வம்பிகை நமது காரியத்தை நிறைவேற்றுவா ளென்று கூறி, எல்லாத் தேவர்களையும் புறப்படும்படிச் செய்து தாமும் லக்ஷ்மியுடன்புறப்பட்டு இமயமலையை வந்தடைந்து, சிலர் மந்திர புரச்சரணையும் சிலர் அம்பிகையினுடைய யஞ்ஞவிதிப்படி அம்பிகையினது யாகத்தையும் சிலர் திரிதியையாதி விரதங்களையும் சிலர் சமாதி நிஷ்டையினையும் சிலர் நாம பாராயணத்தையும் சிலர் சூக்தங்களையும் சிலர்மந்திர பாராயணங்களையும் சிலர் இருக்காதிகளையும் சிலர் அந்தர்யாகத்தையும் சிலர் நியாச பாராயணத்தையும் சிலர் ஹ்ருல்லேகாமந்திரத்தினுல் பூஜையையும் அநேக வருஷகாலமாய்ச் செய்து வந்தனர்.

ஓ ஜனமேஜயனே! பின்னர் ஓர் காலத்தில் தெய்வகதியாய் ஒரு சித்திரைமாதம் நவமிதிதி கூடிய சுக்கிர வாரத்தில் வேதங்கள் நான்கு பக்கங்களினு நின்று தோத்திரஞ்செய்ய கோடிசூரிய ருதித்தாற்போல் பிரகாசத்தோடு கூடினதாய் கோடி சந்திர ருதித்தாற்போல் குளிர்ந்த கிரண சமூகங்களோடு கூடினதாய் கோடிமின்னல்கள் மின்னுவதைப் போல் ஒளியோடு கூடினதாய் அடியையும் முடியையும் நடுவையும் கடந்ததாய் கைகால்முதலிய அங்கங்களில்லாததாய் ஆண் பெண் அலியென் றறியக் கூடாததாய் அகண்டாகாரமாய் ஓர் பேரொளி தோன்றிற்று. ஓ அரசனே! அவ்வொளியைத் தேவர்கள் கண்களாற் காண்பதற்குக் கூசிப் பின்னர் தைரியங்கொண்டு அச்சோதி ரூபத்தைப் பார்க்க, அது மிகவும் மனோகரமாய் புதிதாய்த் தோன்றிய யவ்வனபருவ முடைய குமாரியாய்க் காணப்பட்டது. இனி அதனைக் கேட்பாயாக.

குமாரியானவள் வண்டுபோற் கறுத்து மல்லிகை ஜாதிமுதலிய மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கூந்தலையும், திருவாக்கிலுள்ள பச்சைக் கர்ப்பூரங்கலந்த தாம்பூலத்தினாலும் திருச்செவியின்கண் தளதளவென்று பிரகாசித்துக் கொண்டிருக்கும் காதோலையினாலும் விளங்கும் திருமுக மலர்ச்சியையும், அஷ்டமி சந்திர பிம்பம்போல் பிரகாசிக்கும் நெற்றியையும், நீண்ட புருவங்களையும், செந்தாமரை போன்ற மூன்று கண்களையும், உன்னதமாகிய நாசியினையும்,மனோகரமான அதரத்தையும்,குருக்கத்தி மலர்போன்ற பற்களையும்,தாமரை யரும்பைப் பழிக்கின்ற தனங்களையும், காதோலை தோள்வளை அட்டிகை முதலிய சுவர்ணாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டதிருச்செவி முதலிய அங்கங்களையும், கிண்கிணிக் கூட்டங்களால் ரணரணவென் றொலிக்கின்ற மேகலாபரண மணிந்த இடையினையும், ரோம வரிசைகளோடு சுகமாய்ப் பிம்பம்போற் காணப்பட்ட நிதம்பத்தையும், பாசம் அங்குசம் வரதம் அபயம் என்னும் இம்முத்திரைகளோடு கூடிய நான்கு திருக்கரங்களையும், மாதுளை மலரையும் தாழை மலரையு மொத்த திருமேனியையும் உடையவளாய் சந்திர ரேகைகளோடு பிரகாசிக்கும் ரத்ன கிரீட மணிந்தவளாய் குங்கும திலக மணிந்தவளாய் விலை மதிக்கப்படாத ரத்ன பதக்கங்களாலும் முத்தாரங்களாலும் பிரகாசிக்கின்றவளாய் சகல தேவர்களாலும்

நமஸ்கரிக்கப் பெற்றவளாய் சர்வாபீஷ்டங்களையும் நிறைவேற்றுகின்றவளாய் யாவரையும் மோகிக்கச் செய்கின்றவளாய் புன்னகையுள்ளவளாய் காரணங் கருதாது கருணைசெய்யும் பிரசன்னமான திருமுகமுள்ளவளாய் யாவருக்குமாதாவாய்க் காட்சிகொடுத்தனள்.

அவ்வம்பிகையைத் தேவரெல்லாங்கண்டுநமஸ்கரித்துக்கண்ணீர் சொரிந்து கண்டம்விம்ம நாக்குழற தோத்திரஞ் செய்தற்குக் கூடாதவராய்ப் பின்னர் ஒருவாறு ஊக்கங்கொண்டு பக்தியுடன் தலைவணங்கி ஜகதம்பிகையை நோக்கி தேவியே! உனக்கு நமஸ்காரம். மஹாதேவியே! சிவையே! எப்பொழுதும் உனக்கு நமஸ்காரம். பிரகிருதி ஸ்வரூபிணியே! சர்வத்திற்கும் மங்கள ஸ்வரூபமா யிருக்கின்றவளே! உனக்கு நமஸ்காரம். அக்னியைப்போல் நிறத்தை யுடையவளே! தவத்தினுற்பிரகாசிக்கின்றவளே! சூரியசம்பந்த முடையவளே! கர்மபலங்களில் சம்பந்திக்கச் செய்கின்றவளே! உனக்கு நமஸ்காரம். துர்க்காதேவியே! உன்னை நாங்கள் சரணமாகவடைகிறோம்.

ஹே! கிரிஜே! காளராத்திரியைப் போன்றவளாயும் பிரமனால் தோத்திரஞ் செய்யப்பட்டவளாயும் வைஷ்ணவியாயும் ஸ்கந்த மாதாவாயும் சரஸ்வதியாயும் அதிதியாயும்தக்ஷபுத்திரியாயும்இருக்கின்றவளே! பரிசுத்தையாயும் சிவையாயு மிருக்கின்ற வுனக்கு நமஸ்காரமென்றும், உன்னை மஹாலக்ஷ்மி ஸ்வரூபமாக வறிகின்றேன் சர்வ சக்தி ஸ்வரூபமாகத் தியானிக்கின்றேன், ஆகையினால் நம்மை அதிகமாகப் பிரவர்த்திக்கச் செய்கின்றாளென்றும் துதிக்கப்பட்டவளே! யுனக்கு நமஸ்காரம். விராட் சொரூபிணியாயும் சூத்ராத்ம மூர்த்தையாயு மிருக்கின்றவளே! உனக்கு நமஸ்காரம். வியாகிருத (அநேக) ரூபிணியாயிருக்கின்ற வுனக்கு நமஸ்காரம். பிரம்ஹமூர்த்தையாயிருக்கின்ற வுனக்கு நமஸ்காரம். எந்த அஞ்ஞானத்தினால் கயிறுபோன்ற வுலகமானது சர்ப்பமாகக் காணப்படுகின்றதோ எந்த தேவியின் கியானத்தினால் (கயிற்றினிடத்தில் சர்ப்பமாகக் காணப்பட்ட பயப்பிராந்தி) நாசமடைகின்றதோ அந்த புவனேஸ்வரியாகிய வுனக்கு நமஸ்காரம். தத்பத லக்ஷியார்த்தமாகிய சிதேகரச ரூபிணியாயும் வேததாத்பரியத்தை முன்னே யுணர்த்தவல்ல அந்த அகண்டானந்தரூபிணியாயும் வேததாத்பரியம் விளையும் இட

மாயும் இருக்கின்ற வுனக்கு நமஸ்காரம். பஞ்சகோசங்களைக் கட ந்து அவஸ்தாத்ரய சாக்ஷிணியா யிருக்கின்ற வுனக்கு நமஸ்காரம். துவம்பத லக்ஷ்யார்த்தமாய் பிரத்யகாத்ம ஸ்வரூபிணியா யிருக் கின்ற வுனக்கு நமஸ்காரம். பிரணவஸ்வரூபிணியா யிருக்கின்ற வுனக்குநமஸ்காரம். ஹ்ரீங்கார மூர்த்தையா யிருக்கின்ற வுனக்கு நமஸ்காரம். நானுமந்திர ஸ்வரூபிணியாயும் நானு மந்திராத் மிகை யாயும் கருணு ஸ்வரூபிணியாயு மிருக்கின்ற வுனக்கு நமஸ்காரம். என்று தோத்திரஞ்செய்யவும் மணித்வீப வாசினியாகியதேவி தேவ ர்களைப்பார்த்து மதுரமானகுயிலோசைபோலும் இனிக்கும்சிலஇன் சொற்களைக் கூறுகின்ருள், ஓ தேவர்காள்! நீங்கள் எந்த காரியத்தை விரும்பியிருக்கின்றீர்கள். எதற்காகஇவ்விடத்தில்கூடினீர்கள்? நான் எப்பொழுதும் பக்தர்களுக்குக் கற்பக விருக்ஷம்போல் வரங் கொடுத் திருப்பவள் ஆகலான்பக்தி மிகுந்த உங்களுக்கு நானிருக் கும்போது என்ன சிந்தனை? உங்களுக்குச் சம்சாரத்தாலுண்டாகுந் துக்கத்தினின்றும் கரையேற்று விக்க நான் பிரதிக்ஞை செய்திருக் கின்றே னென்று மிக்கபிரேமையோடு திருவாய்மலர்ந்தருளிய அவ் வுண்மை வசனங்களைத்தேவர்கள்கேட்டு சந்துஷ்டியடைந்த மனது டையவர்களாய்ப் பயமற்றுத்தங்களுக்கு நேர்ந்தசங்கடங்களைச் சொ ல்வாராயினர்.

ஓ தேவி! நீ எல்லாமறிந்தவளாயும் சர்வ சாக்ஷிணியாயு மிருக் கின்றவளாதலால்இம்மூவுலகத்திலும் நீயறியாதது யாதிருக்கின்றது சிறிதேனு மில்லையன்ருே? ஓ சிவே! தாரகனுல்நாங்கள் எப்பொழுதும் பீடிக்கப் பட்டுள்ளோம். அவனுக்கு மரணம் சிவபெருமானுடைய திருமேனியினின்றுந் தோன்றுகிற குமாரனுலென்று பிரமன்கூறி யிருக்கின்ருன். அச்சிவபெருமான் சக்தியோடுகூடினுலன்ருே குமா ரனுண்டாவான் ஓ பரமேஸ்வரியே! அப்பெருமான் சக்தியோடு இப் பொழுது கூடியில்லையே அதனை நீ யறியாயோ? எல்லாமறிந்தவர் எதிரில்யாதும்அறியாதவர்எதனை எடுத்துக்கூறுவர் அதுபோலாகும் நாங்கள் உன்னெதிரில் இப்பொழுது சொல்லியது. எங்களால்சொ ல்லாது விட்டவையெல்லாம் நீயே யறிதி. எங்கட்கு எப்பொழுதும் உன்திருவடியில் சலனமில்லாத பக்தியிருத்தல் வேண்டும். இது தான் நாங்கள் முக்கியமாய்ப் பிரார்த்திக்கத்தக்கது, ஏனைய வெல்

லாம் சரீர நிமித்தமானதன்றி வேறில்லை. என்று தேவர்கள்கூறி யதைக்கேட்ட தேவி ஓ பக்தர்களே! நீங்கள் வேண்டியபடியே என் திருவடியில் உங்களுக்குண்மையானபக்தியுண்டாகக்கடவது. பர்வத ராஜன் என்னை கமலத்தில் என்னை வைத்துபக்தியுடன் உபா சித்து வருகிறான். நானும் அவனுடைய கிருகத்திற்குச் செல்ல ஆவலுள்ளவளா யிருக்கின்றேன். ஆகலான் எனது சக்தியானது பார்வதி என்கிற திருநாமத்துடன் அவன்பாற்றோன்றப் போகின் றது. அப்பார்வதியை நீங்கள் பரமேஸ்வரனுக்குக் கொடுப்பவர் களாகப் பிரயத்தனப்படப் போகின்றீர்கள். அத்தேவியே உங்கள் அபீஷ்டத்தை நிறைவேற்றப்போகின்றாளென்று அநுக்கிரகஞ்செய் யும்பொழுது பர்வதராஜன் நமது தவம் முற்றுப்பெற்றது முற்றுப் பெற்றது என்று ஆராவன்புகொண்டு கண்ணீர் அரும்பித் தேவியை நோக்கி ஓ பரமேஸ்வரி! நீ எவனுக்கு அநுக்கிரகஞ் செய்யவேண்டி நினைக்கின்றனையோ அவனை மிகவும் பூஜ்யனாகச்செய்து விடுகிறாய்; நீ அவ்வண்ணம் நினையாயாயின் ஜடனாகிய நானெங்கே சச்சிதா னந்த ரூபிணியாகிய நீ எங்கே. நான்நூறு ஜன்மங்களில் அரியதவ வஞ் செய்திருந்த போதிலும் உனக்குத்தந்தையாகும் பாக்கிய மா கிய தவத்தைச்செய்திருப்பேனோ செய்திரேன். அங்ஙனமிருந்த போதிலும் என்னை இவ்வுலகில் கண்டோரெல்லாம் ஆ! ஹா!! இவன் இவ்வம்பிகையைப் புத்திரியாகப் பெறுதற்கு எத்தனை அஸ்வமே தஞ் செய்தானோ என்றும் எத்தனைவிதமான புண்ணியங்களெல் லாஞ் செய்து முடித்தானோ என்றும் எத்தனைகாலம் தேவியை உபாசித்தானோ என்றும் இவையெல்லாம் செய்யாதிருப்பானாயின் ஜகன்மாதாவாகிய இவள் புத்திரியாகவருவாளா என்றும் பிரமாண் டங்களையெல்லாம் கருப்பத்தில் வைத்திருக்கும் தேவி எப்போது இவனுக்குப் புத்திரியாயினளோ இவனுக்குச்சமானமான மனிதன் இவ்வுலகில் எவனிருக்கின்றானென்றும் பேசும்படியான கீர்த்தி யைத்தந்தனையே, ஓ ஜகஜ்ஜனனீ! நானே பாக்யசாலி, நானே தன்ய வான், என்னுடைய பிதுர்க்க ளெல்லாம் எவ்விதமான உயர்ந்த பதத்திலிருக்கின்றனரோ நானறியேன், நீவசிப்பதற்கு நானுபயோ கப்பட்டபடியால் என்பிதுர்க்கள் செய்தபாக்கியத்தை எவ்வள வினவென்று கூறுவேன். நீ இவ்வண்ணமான அரியகருணையை எவ்வண்ணஞ் செய்தனையோ அவ்வண்ணமான கருணையினாலேயே

சகலவேதாந்த சித்தாந்தமாகிய சொரூபத்தையும் பக்திசகிதமாகிய யோகத்தையும் சுருதிசம்மதமாகிய ஞானத்தையும் எனக்குபதேசிக்கவேண்டும். அங்ஙனஞ் செய்வையாயின் நான் உனது சொரூபமாகவே யிருப்பேனன்றோ. என்று ஆனந்த மிகுதியினால் பர்வதராஜன் கூறும் விண்ணப்பங்களைக்கேட்டு மலர்ந்தமுகமுள்ளவளாய் ரகசியார்த்தங்களை யெல்லாம் உபதேசிக்கத் தொடங்கினள். (எசுஉ)

ஙக-வது அத்யாயம் தேவதாஹம்தேவீப்ரத்திய க்ஷம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ஙக-க்கு சுலோகம் (கஅகஎஉ.)

---

உ

ஷ்றீங்காரவேத்யாயைநமஃ

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்.

## தேவீகீதாப்ராரம்பம்.



தேவி தேவர்களையும் பர்வதராஜனையும் பார்த்துக் கூறுகின்றாள்,- இப்போது என்னால் சொல்வதைக் கேளுங்கள். அதைக் கேட்டமாத்திரத்தில் நீவிரனைவரும் எனது சொரூபத்தை யடைவீர்கள். (க)சிருட்டிக்கு முன்பரப்ரஹ்மத்திற்கு வேறுதலின்றி அப்பிரமத்தினிடத்தில் ஆத்மசொரூபமாயும் சித்சொரூபமாயும் சம்வித் சொரூபமாயும் நான்மாத்திரமிருந்தேன்.என்னைத்தவிரவேறொன்றுமில்லை. (உ) அப்பிரஹ்மமோ அப்ரதர்க்கியம் (இப்படிப்பட்டதென்று அளவுபடுதற்கரிய) நிர்த்தேசிக்கக்கூடாதது உவமானமற்றது. உபாதியற்றது. இத்தன்மையுள்ள அப்பிரமத்தினிடத்தில் அக்னியிற் சூடும் சூரியனிடத்தில் கிரணமும் சந்திரனிடத்தில் நிலவும் எவ்வாறு எப்பொழுதும் வேறின்றியிருக்கின்றதோ அவ்வாறுநானிருக்கின்றேன். அப்படியிருக்கும் என்னிடம் நீக்கமற்றிருப்பதான மாயை என்றுபெயருள்ள ஒருசத்தியுண்டு அந்த மாயாசக்தி சத்தென்றும் அசத்தென்றும் சதசத்தென்றுஞ் சொல்லத்தக்கதல்ல. அந்தமாயா சத்தியினிடத்தில் சீவர்களும் அச்சீவர்களுடைய கர்மங்களும் காலங்களும் வேற்றுமையில்லாமல் சுழுத்தி யவஸ்தை

யில் விவகாரங்களெல்லாம் அடங்கியிருப்பதுபோல அடங்கி யிருக்கின்றன. (சு) இந்த மாயையினிடத்தில் என்னுடைய சக்திசம்பந்தமிருப்பதால் இந்தமாயைக்கு நானே பீஜாத்மகமாக விருக்கிறேன். இந்தமாயைக்கு நான் பீஜமாயிருப்பினும் அதற்குஆவரணம் (மறைக்குஞ் சத்தி) என்கிற நாமமுடைய ஓர் தோஷ சத்தியுண்டு. (அதாவது-திரோதை) இந்த மாயையில் என்சம்பந்த மிருப்பதால் என் சம்பந்த முள்ள சைதன்யமும் இதனிடத்தில் சம்மந்தப்பட்டிருப்பதென்றறிவாய். (எ) இந்தச் சைதன்னிய சம்பந்தத்தால் இந்த மாயையே நிமித்த காரணமாயும், பிரபஞ்சமாகப் பரிணமப் படுவதால் உபாதான காரணமாயும்இருப்பதென்றறியக்கடவாய். இதனைச்சிலர் தமசென்றும் சிலர்ஜடமென்றும் சிலர் ஞான மென்றும் சிலர் பிரதான மென்றும் சிலர்பிரகிருதி யென்றும் சிலர்சக்தி யென்றும் சிலர் உற்பத்தியில்லாத தென்றுங்கூறுவர். சைவசாஸ்திரத்தில் வல்லவர்கள் விமர்சை (விளக்கம்) என்றும் வேததத்வார்த்த சிந்தனையுடையவர் அவித்தை யென்றுங் கூறுவர். இப்படியே இந்தமாயை நானாவிதமான பெயர்களால் வேதாதிகளிலும் அழைக்கப் பட்டு வருகின்றது. இம் மாயை திரிசியமாகக் காணப்படுகையால் சடமென்றும்ஞானநாசப்படுத்துகையால் அசத்தென்றும்கூறுவர். சைதன்னிய சம்பந்த முடைத்தாய் நிமித்தகாரணமா யிருப்பதால் சைதன்னியமென்று சொல்லக்கூடாதோ வெனின்! சைதன்யங்காணப் பட்டதல்ல, இது காணப்பட்டது. ஆகலான் மாயை சைதன்யமன்று சடமேயாம். அன்றியும் சைதன்னியம் சுயப்பிரகாசமாய்ப் பிரகாசிப்பதன்றி மற்றொன்றால் பிரகாசிக்கப் படுவதன்று. படுமெனின் அனவஸ்தாதோஷமும் கர்மகர்த்துரு விரோதமு முண்டாகும். மற்றென்னெனின் தீபம்போல் தனக்குத்தானே பிரகாசித்துக் கொண்டு தனக்கு வேறுயுள்ள எல்லாப் பொருளையும் பிரகாசிக்கச் செய்வதாகும். அன்றியும் காணப்படும்பொருளானது சாக்கிரம் சுவப்பனம் சுழுத்தி என்னும் அவஸ்தாத்திரயங்களில் மாறுதலடைவதுபோல் விபசாரத்தை யடைவதின்று அந்த அவஸ்தாத்ரயங்களை யனுபவிப்பது மின்று. அநுபவிப்ப தெனின். அது அநுபவிப்பதற்கு இதற்கு வேறாய் இதனை யநுபவிக்கச்செய்யவல்ல ஒரு சாக்ஷி வேறு யிருக்கவேண்டு மன்றோ. இது ஸ்வயம் பிரகாச மென்றும் ஒன்றினால் பிரகாசிப்பதில்லை யென்றும் முன்ன

மே கூறியிருக்கின்றபடியால் இதற்கு வேறொரு சாக்ஷி எங்ஙனங் கூடும். ஆகலான் நல்ல சாஸ்திர மறிந்தவர்கள் இதனை நித்யத்வம் என்றும் பக்தியை விளைவிப்பதாகிய பிரேமைக்கு ஆஸ்பதமாயிருத்தலால் ஆனந்த ரூபமென்றுங் கூறுவர். ஓ பர்வத ராஜனே! இப்பொழுது சொல்லிவந்த நியாயத்தால் எனது சம்வித் சொரூபம் இதுவென்றும் அது நித்யத்வமென்றும் ஆனந்தமென்றுஞ் சாதிக்கப்பட்டது.

பிரேமாஸ்பதமா யிருக்கின்ற இவ்வானந்த வஸ்துவன்றி யொருவஸ்துவு மில்லையாகலான் இது ஓர்காலத்தும் உண்டானதென்று சொல்லக்கூடாது. மற்றென்னெனின் அபரிச்சின்னமா (அளவிறந்ததா) யிருத்தலினால் நித்தமென்பதேயாம். இதுவே என்னுடைய சம்மதம்.

சம்வித் சொரூபமாகிய இந்தஞானம் (சீவாத்மாவாகிய) ஆத்ம தர்மமாகாது. ஏனெனில் இவ்வாத்மாவானது சடமாகிய மாயா தர்மத்தை யடைந்திருத்தலினால். அற்றன்று, இவ்வான்மா அந்த ஞான தர்மத்தையு முடையதே யெனின் ஞானத்துக்கு சடத்தன்மை கண்டதில்லை. அத்தன்மை ஒரு சிறிதும் சம்பவிக்கவு மாட்டாது. ஏனெனின்! ஞானம் சித்துத் தன்மையை யுடைய தாகலின் அதனிடத்தில் சடத்தன்மை காணப்படாது. அது அந்த ஞானத்தினிடத்தில் சம்பவிக்கவுமாட்டாது. ஆகலான் சித்துசித்தே அது ஒருபொழுதும் அசித்தின் தருமத்தைப் பொருந்தாது. இங்ஙனமான சம்வித் சொரூபமாகிய என்னுடைய ஞானசொரூபம் எப்பொழுதுஞ் சுகரூபமாயும் சத்தியமாயும் பூரணமாயும் அசங்கமாயும் துவைதலக்ஷண மற்றதாயுமுள்ளது. (உக) ஆத்மாவோவெனின், தன்னைவிட்டு நீங்காததாகிய மாயாகர்ம சம்பந்தத்தால் சநநத்துக் கேதுவாயுள்ள கர்மத்தை யடைகிறான். முன்சொன்ன ஞானத்துக்கு ஆனந்தமெப்படி நித்தியமென்று சொல்லப்பட்டதோ அப்படியே இந்தமாயாகர்மம் இந்த ஆத்மாவுக்குப் பூர்வமாகவே உள்ளதென்று சொல்லப்படும். அவ்வாறுள்ளதாகிய அது காலகர்மங்களால் பிரிக்கப்பட்டு சம்ஸ்கார (பரிசுத்த)த்தை யடைகின்றது. (உஉ) அஃதாவது மாயாகர்ம சம்பந்தத்தால் அவிவேகியாய் பலபிறப்படைதலினால் அப்பிறவிகள்தோறும் கர்மங்கள் கழிவுற்றுவருவதே

யாகும், அதனை இவ்வான்மா அறியான். ஓபர்வதராஜனே! இப்போது என்னால் சொல்லப்பட்ட ஆன்ம லக்ஷணத்தை நீ நன்றாயறிவாயாக.

என்னுடைய ஸ்வஸ்வரூபமோ லவுகிகமற்றதாயும் அவ்யாகிருதமா (விகாரமற்றதா)யும் அவ்யக்தமா (நன்றாய்க்காணக்கூடாததா)யும் மாயையோடு கூடியதாயும் சகலகாரணங்கட்குங் காரணமாயும் சகலதத்வங்களுக்கும் ஆதியாயும் சச்சிதானந்த விக்ரஹமாயும் சர்வகர்ம கநீபூதமா (சர்வகர்மங்களையும் தனக்குள்ளடக்கிக்கொண்டிருப்பதா)யும் இச்சாஞானக்கிரியாசக்திகளுக்கிடமாயும் ஹ்ரீங்கார மந்திரவாச்சியமாயும் ஆதிதத்வமாயும் இருப்பதென்று சகல சாஸ்திரங்களிலுஞ்சொல்லப்பட்டிருக்கின்றது. (உகூ) அந்த ஆதி தத்துவத்தினின்றும் சப்ததன்மாத்திரரூபமாயிருக்கின்ற ஆகாயமும் அதினின்றும் பரிசதன்மாத்திரை ரூபமாயிருக்கின்ற வாயுவும் அதினின்றும் ரூபதன்மாத்திரை ரூபமாயிருக்கின்ற அக்னியும் அதினின்றும் ரசதன் மாத்திரைரூபமாயிருக்கின்ற ஜலமும் அதினின்றும் கந்ததன்மாத்திரை ரூபமாயிருக்கின்ற பிருதிவியுந்தோன்றின.(உஎ) இவ்வைந்து சூக்குமபூதங்களும் பஞ்சீகரணத்தால் பிருதிவியினிடத்தில் சத்தபரிச ரூப ரச கந்தங்களும் ஜலத்தினிடத்தில் சத்தபரிச ரூபரசங்களும் அக்கினியினிடத்தில் சத்தபரிச ரூபங்களும் வாயுவினிடத்தில் சத்தபரிசங்களும் ஆகாயத்தினிடத்தில் சத்தமுங் கூடியிருக்கும். இந்தபஞ்ச தன்மாத்திரைகளினின்றும் லிங்கசரீரமெனப்படும் சூக்ஷ்மசரீரந்தோன்றும் இந்த சூக்ஷ்மசரீரம் தூலசரீரத்திற்கு சூத்திரம் (கயிறு) போன்றுள்ளது. (௩0)

இனி இவ் வைப்பூதங்களும் பஞ்சீகரணமாதல் எவ்வகை யெனின்:-பஞ்சபூதங்களைத் தனித்தனி இரண்டாகப்பிரித்து அவற்றுள் ஒவ்வொருபூதத்தின் ஒவ்வொருபாகத்தை வேறாகவைத்துமற்ற ஒவ்வொரு பூதத்தின் வேறுபாகத்தைத் தனித்தனி நன்னான்காக்கி அவற்றை முன் வேறாக வைத்த பாகத்தில் தன்னம்சபாகம் நீக்கி வேறு நான்கு பூத பாகத்தையும் அதனோடு சேர்க்க ஐந்தாகிப் பஞ்சீகரணமாகின்றன. எப்படி யென்றால், பிரிதிவிபூதத்தை இரண்டுகூறாக்கி ஒருகூற்றை வேறுவைத்து மற்றொரு கூற்றை நான்காகப்பிரித்து அந்த நான்கையும் இதுபோலும் பிரித்த சலமுதலிய

நான்கு பூதங்களோடு சேர்க்க ஐந்தாகின்றது. இதுபோலவே சல பாகத்தைப் பிரிதிவி தேயு வாயு ஆகாசமுதலிய நான்கோடும் அக்னிபாகத்தை பிரிதிவி அப்பு வாயு ஆகாசமுதலிய நான்கோடும் வாயு பாகத்தைப் பிரிதிவி அப்புதேயு ஆகாசமுதலிய நான்கோடும் சேர்க்க ஐந்தாகின்றன. இவ்வாறு பஞ்சீகரணப்பட்ட இவற்றின் காரியமே ஆன்மாக்களுடைய தூலசரீரம். இத்தூலசரீர சமூகமாகிய சமஷ்டியே விராட்சொரூபமாம்.

பஞ்சபூதங்களுடைய சத்வாம்சத்தினின்றும் அந்தக்கரணமும், சுரோத்ரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை ஆக்ராணம் என்னும் ஞானேந்திரியங்களும் உண்டாகின்றன. அந்தக் கரணம் விருத்தி பேதத்தால் நான்காயிற்று. எங்ஙனமெனின் ஒருவிஷயத்தில் சங்கற்ப விகற்பங்க ளுண்டாகின்றபொழுது மனமென்றும், அவ்விஷயத்தில் சந்தேகமில்லாமல் நிச்சயத்தை யடைகிறபோது புத்தியென்றும்,நிச்சயத்தை அடிக்கடி எண்ணும்போது சித்தமென்றும், சிந்திப்பவன் நானென்று செல்லும்போது அகங்காரமென்றும் பெயர்பெற்றன.

அப் பஞ்ச பூதங்களுடைய ராஜச அம்சத்தினின்றும் வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம் என்னுங் கர்மேந்திரியங்களும் பிராணன் அபானன் சமானன் உதானன் வியானன் என்னும் பஞ்சவாயுக்களும் உண்டாகின்றன. இவ்வைந்தில் இருதயத்தில் பிராணவாயுவும், குதத்தில் அபானவாயுவும், நாபியில் சமானவாயுவும், கண்டத்தில் உதானவாயுவும், சரீரமுற்றும் வியானவாயுவும் இருப்பனவாம். ஞானேந்திரியம் ஐந்து கர்மேந்திரியம் ஐந்து பிராணாதிவாயுக்கள் ஐந்து மனம் புத்தி * இரண்டு இப்பதினேழுங் கூடியதே சிவசூக்ஷுமசரீரம். இச்சூக்குமசரீர சமஷ்டியே எனக்குச் சூக்குமசரீரமென்று சொல்லப்படும். முக்குணங்களும் பூதங்களோடு கலவாதிருக்கும் அவசரம் பிரகிருதி எனப்படும். அது

* வேதபுராணாதிகளில் அந்தக் கரணத்தை ஒன்றாகவும் இரண்டாகவும் மூன்றாகவும் நான்காகவும் ஐந்தாகவும் சிற்சில விடங்களில் கூறுவதுண்டு அவற்றை ஈண்டு இரண்டனுள்ளடக்கிக் கூறியுள்ளன.

தான் அவ்யக்தம். இது வித்யா சப்பந்தம் அவித்யா சம்பந்தம் என இருவகை. எந்தப்பிரகிருதி தனது ஆச்ரயத்தையடைந்து ரக்ஷிக்கப்படுகின்றதோ அது வித்யை யென்று சொல்லப்படும். சத்வசம்பந்தமான அந்த வித்யையை அதிஷ்டித்துப் பிரவஞ்ச விவகாரத்தில் உன்முகப்படுகிற பரமான்மாவுக்கு இயற்கைஞான சொரூபியாகிய ஈஸ்வரனென்று பெயர். அப்பெயரேயல்லாமல் சர்வக்ஞனென்றும் சர்வசக்தனென்றும் சர்வானுக்கிரககாரகனென்றுஞ் சொல்லப்படும். அவித்தையோடு கலந்து சுக துக்க மோக வடிவாய் நின்றுழலும் அஞ்ஞதியஜ்ஞான ஆன்மாவுக்குச் செயற்கைஞான சொரூபியாகிய சீவனென்றும் கிஞ்சிஜ்ஞத் தன்மையுடையவனென்றும் பெயர். இவன் சர்வதுக்காஸ்ரயனும் அவித்யா சம்பந்தமாயுள்ள தூலசூக்கும காரணசரீர வாசியாயு மிருப்பன். தூல தேக அபிமானத்தால் விஸ்வனென்றும், சூக்கும தேக அபிமானத்தால் தைஜஸனென்றும் காரணசரீராபிமானத்தால் பிராஜ்ஞ னென்றுஞ் சொல்லப்படுவன். குணரூபியாகிய ஈஸ்வரன் சீவர்களுடைய தூலமுதலிய மூன்று சரீர சமஷ்டியபிமானத்தால் ஈசனென்றும் சூத்ரனென்றும் விராட் என்றும் சொல்லப்படுவன். சீவர்களுடைய இச்சையின்படி அனுபவிக்கவேண்டிய நானுபோக நிமித்தமாய் சர்வேஸ்வரனுகிய ஈஸ்வரனை என்னுடைய சக்தியினுல் பல திருவுருக்கொண்டு சர்வானுக்கிரகஞ் செய்யும்படிச் செய்கிறேன். ஓ பர்வதராஜனே ! இப்போது சொல்லிவந்த கிரமத்தால் எல்லாச் செயலும் என்னுடைய சக்தியினுலன்றி ஆவதில்லையென அறியவந்தனை. இதனையறியக்கடவாய். (சுலோகம்-௫0)

௩உ-ம் அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௩உ-க்குச் சுலோகம்(கஅசுளஉ.)



ஓ

ஹ்ரீங்காரசிந்தியாயைநமஃ.

## மூப்பத்து மூன்றும் அத்தியாயம்.

# தேவீ விஸ்வரூப தரிசனம்.



தேவிகூறுகின்றாள்:—சராசராத்மகமாயுள்ள எல்லாவுலகமும் என் மாயாசத்தியினு லுண்டாக்கப்பட்டன, அந்தமாயையும் உண்மையில் ஆலோசித்துப்பார்க்குங்கால் என்னைவிடவேறாக இல்லவே இல்லை. அதனை விவகாரதிசையில் வித்தை என்றும் மாயையென்றும் சொல்லப்படும். அப்படி சொல்லப்பட்டதை தத்துவ திருஷ்டியால் பார்க்கும்போது அது கேவலம் நானாகவே யிருப்பதன்றி என்னையன்றி வேறாக யிருப்பதன்று. அப்படி அதுவாகவேயிருக்கின்ற நான் எல்லாவுலகங்களையுஞ் சிருஷ்டித்து அவைகளில் அந்தர்யாமியாயிருந்து ஆத்மாக்களை முன்னிட்டு மாயாகர்மங்களோடு கூடியிருக்கின்றேன். அவ்வான்மாக்கள் மாயாபேதத்தால் எப்படி எப்படியாகின்றனவோ அப்படி அப்படி அவ்வக்காரணங்களினால் லோகாந்தரகதி யடைகின்றன. கருணைசாலியாகியநான் அவ்வாறு ஆன்மாக்களைமுன்னிட்டு மாயா கர்மங்களோடு கூடாமற்போவேனாயின் அவ்வான்மாக்கள் அந்தந்தகதிகளையடைவதற்குவேறுஹேதுவுண்டோ? ஆன்மாக்கள் வெவ்வேறுபேதங்களையடைகிறபோது நான் எப்படியிருப்பனெனில் உபாதியினால் பேதப்பட்ட கடாதிகளிலுள்ள ஆகாயம் கடாகாசம் மகாகாசமென எப்படி பேதப்பட்டதோ அப்படி நான் ஆன்மாக்களிடத்தில் வெவ்வேறு பேதப்பெயர் பெற்றிருக்கின்றேன். என்னிடத்தில் ஆன்மாக்களுடைய கருமசம்பந்தம் எவ்வாறிருக்குமெனின் உச்சநீசாதிவஸ்துக்களை சூரியன்பிரகாசப்படுத்துகிறதேயன்றி அந்தவஸ்துக்களுடைய தூஷணாதிகளை அடைகின்றானா? இல்லையே. அதுபோல நானும் ஆன்மாக்களைப் பிரகாசப்படுத்துவதேயன்றி அவைகளுடைய தோஷங்களை யடையத்தக்கவளாகேன். இவ்வுண்மையறியாத சிலர் புத்திமுதலான கர்த்திருத்வம் என்னிடம் உண்டாகிறதென்றும் மூடபுத்தியுடைய சிலர் ஆத்மாதான் கருத்தாவென்றும் நிச்சயித்துச் சொல்லுகிறார்

கள்; ஆனால் புத்திமுதலானதும்அன்று,ஆன்மாவுமன்று,அக்கியான பேதத்தாலும் மாயையின்பேதத்தாலும் எனது மாயையினாலேயே ஜீவேஸ்வரர்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. எவ்வாறு பிரிக்கப்பட்டுள்ளதெனின், ஆகாசம் கடாகாசம் மகாகாசம் என எப்படி பேதமாய்க் கற்பிக்கப்படுறதோ அப்படி சீவாத்மாக்கள் கற்பிக்கப்பட்டனரென்றும் ஈஸ்வரபேதங்கள் அநேகமென்றும் பிரிக்கப்பட் டிருக்கின்றன. உண்மையில் இவ்விரண்டு பேதங்களுமில்லை. (பேதப்படுவதற்குக்காரணமென்னையெனின்) தேகேந்திரியாதிகளுடைய கூட்டங்களாலும் குணங்களுடைய வாசனுபேதங்களாலும் அவித்தை மாயைகளுடைய பேதங்களாலுமே யன்றி வேறில்லை.

அரசனே! ஓதப் புரோதரூபமா யிருக்கின்ற இந்தப் பிரபஞ்சமெல்லாமும்நானே, இவைகட்கெல்லாம் சூத்ராத்மாவாயிருக்கின்ற ஈஸ்வரனும்நானே, விராட்சொரூபமும்நானே, அயன் அரன் அரர் என்பவரும் சரஸ்வதி லட்சுமி கௌரிகளும் நானே, பசு பட்சிகளும் சண்டாளனும் திருடனும் வேடனும் நானே, குரூரமான கர்மங்களும் சத்கர்மங்களும் மஹாசனங்களும் ஆண் பெண் அலிகளும் நானே சந்தேகமில்லை, எங்கெந்த வஸ்துக்கள் காணப்படுகின்றனவோ கேட்கப்படுகின்றனவோ அந்தந்த வஸ்துக்களில் யான் உள்ளும் புறம்பும் எப்பொழுதும் வியாபித்திருக்கின்றேன். ஆகையினால் தாவர ஜங்கமங்களாகிற சகலவஸ்துக்களும் என்னால் விடப்பட்டனவாகா;எனக்கு மேலொருவஸ்துவில்லை; உண்டெனில் அது மலடிக்கு மைந்தனிருப்பதுபோலுமாம். விஷ்ணுவாதிகளைச் சொல்லலாகாதோவெனின் அது கயிற்றினிடத்தில் சர்ப்பப்பிராந்தி முதலானவை தோன்றுமாறுபோலத் தோற்றமாத்திரமேயன்றி வேறில்லையாம். ஏனெனில் இவர்களெல்லாம் என்னால் கற்பிக்கப்பட்டுஎன்னாலேயே பிரகாசிக்கப்படுபவர் இதிற்சந்தேகமில்லை. எப்படி கற்பிதமானவஸ்துக்கள் அதிஷ்டானத்தினால் பிரகாசிக்கின்றவோ அப்படி அதிஷ்டானமாகிய என்னால் பிரகாசிக்கின்றவர்களாம் என்றுசொல்லும்பொழுது பர்வதராசன் தேவியைநோக்கிச் சொல்லுகிறான்.

ஓ தேவி! சமஷ்டியாகிய சர்வ பிரபஞ்சமும் உன்னுடைய சரீரமென்ற தெப்படி? அத்திருமேனியின் காட்சியை யான்காண

விரும்புகிறேன்; கிருபை செய்யக்கூடுமோ வென்று விண்ணப்பஞ் செய்யத் திருமால் முதலிய தேவர்களும் கேட்டுச் சந்தோஷித்துப் புகழ்ந்தனர். பக்தர்களுடைய அபீஷ்டத்தைக் கிரகிக்கின்றவளான தேவி பர்வத ராஜனுடைய வேண்டுகோளேயும் தேவர்களுடைய சந்தோஷத்தையும் பூர்த்திசெய்யத் திருவுளங்கொண்டு தன்னுடைய நிஜ சொரூபத்தைக் காண்பித்தனள்.

அந்த மஹா தேவியினுடைய பராத்பரமாகிய விராட்சொரூபத்தைத் தேவர்களும் அரசனுங் கண்ணுரக் கண்டனர். அந்த விராட் சொரூபத்தினுடைய பிரபாவம் எத்தன்மைத்தெனின்! முடி ஆகாயத்தின் மேல் பாகமாயும், சூரிய சந்திரர்கள் கண்களாயும், திக்குகள் செவிகளாயும், வேதங்கள் வாக்காயும், பிராணன்கள் வாயுவாயும், பிரபஞ்சம் இருதயமாயும், பிருதிவி முற்பக்க இடமாயும், ஆகாசம் நாபியாயும், ஜோதி சக்கரம் மார்பாயும், மகலோகம் கண்டமாயும், ஜனலோகம் முகமாயும், தபோலோகம் நெற்றியாயும், சத்யலோகம் நெற்றியின் கீழிடமாயும், இந்திராதியர் கைகளாயும், சப்தம் சுரோத்திரேந்திரியமாயும், அஸ்வனி தேவதைகள் நாசியாயும், கந்தம் கிராணேந்திரியமாயும், அக்நி நேத்திரேந்திரியமாயும், இரவு பகல் இமைகளாயும், பிரமஸ்தானம் புருவநெறிப்பாயும், சலம் தாடைகளாயும், ரசம் நாவாயும், யமன்கோரப்பற்களாயும், சந்திரகலே கடைவாய்ப் பற்களாயும், பிரியம் பற்களாயும், மாயை கலாப்பிரகாசமாயும், சுவர்க்கம் கடைக்கண்பார்வையாயும், வெட்கம் மேலதரமாயும், லோபம் கீழதரமாயும்,தர்மமார்க்கம் புருஷ்டபாகமாயும், சமுத்திரம் வயிறுயும், பிரஜாபதி ஆண்குறியாயும், மலேகள் எலும்பாயும், நதிகள் நாடியாயும், மரங்கள் ரோமங்களாயும்,உத்தம நடைகள் கவுமாரம் யவ்வனம் ஜரை முதலிய பருவங்களாயும், மேகங்கள் தலேமயிராயும், சந்தி காலங்கள் இரண்டு வஸ்திரங்களாயும்,சந்திரகலே மனசாயும், விஷ்ணுமூர்த்தி ஞானசக்தியாயும், ருத்ரமூர்த்தி அந்தக்கரணமாயும், குதிரை முதலிய விலங்கினங்கள் தொடைக்குமேலுள்ள இடையாயும், அதல விதலமுதலிய உலகனேத்தும் இடைக்குக்கீழுள்ள ஸ்தானங்களாயு மிருக்க, நாக்கினல் நக்குவதைப்போல்ஆயிரங்கிரணங்கள் வளேந்து வளேந்து தடவ கடகடவென்று பற்களேக்கடித்துக்கொண்டும், நேத்திரங்களி

விருந்துதீப்பொறிசிதறவும், அநேகவிதமான ஆயுதங்களை தாங்கியும் ஆயிரம் சிரங்களோடும் ஆயிரங்கண்களோடும் ஆயிரங்கால்களோ டும் கோடிசூரியருதித்தாற்போல் பிரகாசித்தும் கோடிமின்னல்கள் மின்னுவதைப்போல் மின்னி, கண்களால் பார்பதற்குக் கூடாத மகாகோரமாயும், மனதால் நினைப்பதற்குக்கூடாத மகாபயங்கரமா யும் தோன்றியது. அந்தவுருவத்தை தேவாசுரர்முதலிய யாவருங் கண்டு கம்பிதர்களாய் ஹாஹா வென்று கூக்குரலிட்டு நடுங்கிய மனமுடையவர்களாய் மூர்ச்சித்து தேவி என்கிற ஞாபகமுமில்லா தவர்களாயினர். அச்சமயத்தில்நான்குவேதங்களும் நான்குதிக்கிலு மிருந்து கோஷித்து மூர்ச்சித்துக்கிடந்த தேவர்களையெல்லாம் எழு ப்பிவிட்டன. எழுந்த அவர்களெல்லாம் தைரியமும் நல்லறிவுமு டையவர்களாய் அன்புமேலிட்டு மிக்கபிரேமையுடன் கண்ணீரை ஆறுகப்பெருகவிட்டு கண்டம்விம்மி நாதழுதழுத்து தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

ஏ அம்பா! எங்களுடைய அபராதங்களைப் பொறுத்தருள்வா ய், உன்னிடத்தில் உற்பத்தியான எங்களை ரட்சிப்பாய், எங்கட்கெ ல்லாம் பிரபுவாயிருப்பவளே! உனக்கு எங்களிடத் துண்டான கோ பத்தை யடக்குவாய், எங்களால் பார்க்கக்கூடாத உன்னுடைய திரு மேனியின் தரிசனத்தினுல் நாங்களனைவரும்பயந்தவர்களாயும் பாம ரர்களாயும் இருக்கின்றோமாகையால் இச்சமயத்தில் உன்னுடைய பராக்கிரமத்தையும் சொரூபத்தையும் எப்படியறிந்து எவ்வாறு தோத்திரஞ் செய்யப் போகின்றோம். ஆயினும் எங்களிடத்தில் எவ் வாறு இப்போது உண்டாகின்றதோ அவ்வாறு துதிக்கின்றோம்.

புவனேஸ்வரியாகியஉனக்குநமஸ்காரம்.பிரணவஸ்வரூபிணியா கியஉனக்கு நமஸ்காரம். சர்வவேதாந்தசித்தாந்தஸ்வரூபிணியாகிய உனக்கு நமஸ்காரம். யாரிடத்திலிருந்து அக்கினியுண்டாயிற்றோ, யாரிடத்திலிருந்து சந்திர சூரியர்களுண்டாயினரோ, யாரிடத்தி லிருந்து சகல ஔஷதிகளும் உண்டாயினவோ,அந்தசர்வாத்மஸ்வ ரூபிணியாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம். யாரிடத்திலிருந்து சகல தேவர்களுந் தோன்றினார்களோ, யாரிடத்திலிருந்து சாத்தியர்களும் பக்ஷிகளும் பசுக்களும் மாநுடர்களும் தோன்றினார்களோ அந்த சர்வாத்ம ஸ்வரூபிணியான உனக்கு நமஸ்காரம். பிராண பானுதி

களும் பயிர்களும் தவங்களும் சிரத்தையும் சத்தியமும் பிரஹ்மசர்ய விதிகளும் யாரிடத்திலிருந் துண்டாயினவோ அந்தத்தேவியாகிய உனக்கு நமஸ்காரம். சுவாலைகளோடு கூடியிருக்கின்றஅக்கினிபகவானுக்கு சப்தசமித்துக்களும் சப்தவோமங்களும் சப்தலோகங்களும் யாரிடத்திலிருந் துண்டாயினவோ அந்த சர்வஸ்வரூபமாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம். யாரிடத்திலிருந்து சமுத்திரங்களும் நதிகளும் மலைகளும் உண்டாயினவோ, யாரிடத்திலிருந்து ரசமுள்ள எல்லாவோஷதிகளும் உண்டாயினவோ அந்தத்தேவியாகிய உனக்கு நமஸ்காரம். யாரிடத்திலிருந்து யாகங்களும் தீக்ஷைகளும் யூபங்களும் தக்ஷிணைகளும் நான்கு வேதங்களும் உண்டாயினவோ அந்தத்தேவியாகிய உனக்கு நமஸ்காரம். உனது திருமேனியின் முன்பக்கத்தை நமஸ்கரிக்கின்றோம். பின்பக்கத்தை நமஸ்கரிக்கின்றோம், மேற்பக்கத்தைநமஸ்கரிக்கின்றோம், கீழ்ப்பாகத்தை நமஸ்கரிக்கின்றோம். எங்கட்கு மாதாவாயிருக்கின்ற உன்னை நான்கு திக்குகளிலுமிருந்து நமஸ்கரிக்கின்றோம். பிரபஞ்சிகளாகிய எங்களால் காணக்கூடாத இவ்வுருவத்தைமாற்றி எங்களால் காண்பதற்கினியதும் அழகினும் அழகியதுமான சுந்தரத்திருமேனியை நாங்கள் காணுமாறுகாட்சி கொடுத்தருளுவாய் என்று பயந்து தோத்திரஞ் செய்யுந் தேவர்களைக் கிருபா சமுத்திரமாகிய ஜகதம்பிகை கருணையுடன்பார்த்து அந்தப்பயங்கரரூபத்தைமாற்றி சுந்தரரூபத்துடன் சுந்தரியாய்க் காட்சி கொடுத்தருளினள். அவ்வுருவம் எத்தன்மைத்தெனின்,

பாசாங்குச வரதாபயத்துடன் கூடிய திருக்கரங்களுடனும் மிருதுவான திருமேனியுடனும் கருணைநிறைந்த கண்ணுடனும் புன்னகையோடு கூடிய திருமுகத்துடனும் தோன்றியதாகும். அத்திரிபுரசுந்தரியைத் தேவர்கள் தரிசனஞ்செய்து முன்னடைந்த பயமொழிந்து சாந்தசித்தர்களாய் சந்தோஷத்துடன் கலகல வென்று ஆரவாரஞ் செய்து நமஸ்கரித்தனர். (சுலோகம். ௫௪)

௩௩-வது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௩௩-க்குச் சுலோகம் (௧௬௨௩௭.)

---

௨

ஹ்ரீம்மைய்யைநமஃ.

## முப்பத்துநான்காம் அத்தியாயம்

## * மோக்ஷம்பிரதிஜ்ஞானஸ்யாவஸ்யகதா.



தேவிகூறுகின்றாள்:—ஓ மந்தபாக்கிய முடையவர்களான நீங்களெங்கே, மஹா ஆச்சரியகரமான என்னுடைய விஸ்வரூப மெங்கே, அங்ஙனமாயினும் நான் பக்தர்களிடத்து பிரியமுடையவளாகையால் பக்தர்களாகிய உங்களுக்குக் காணுதற்கரிய என்னுடைய விஸ்வரூபத்தைக் காட்டினேன். இந்தவுருவம் அகண்டாகாரமாதலால் இதனை என்னுடைய கிருபையொன்றினாலல்லது வேதாத்தியயன விசேஷத்தினாலாவது யோகாப்பியாசங்களாலாவது தவயோகங்களாலாவது காணக்கூடுமோவெனின் கூடாது என்றுகூறிப் பர்வதராஜனைப்பார்த்து ஓராஜேந்திரனே! உனக்கிப்போது பரமார்த்தமாகிய வுண்மையொன்றைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. பரமாத்மாவோ (தேகேந்திரியங்கட்கு அன்னியமாகிய ஆத்மாவாம். ஆன்மாவோ தேகேந்திரியாதிகளாகிய) உபாதிசம்பந்தத்தால் சீவத்தன்மையடைந்தும் அச்சீவத்தன்மையினால் கர்த்திருத்வாதிதர்மங்களையடைந்தும்(நானென்றெழுந்த அந்த கர்த்திருத்வமாகிய அகங்காரத்தினால்) தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் ஏதுவாகிய கிரியைகளைச் செய்துப்(அத்தர்மாதர்ம ரூபமாகிய அறம்பாவங்களுக்கேற்க)நானாவிதமான யோனிகளை அடைந்தும், அந்தயோனிகளாகியபிறவிகளுக்கேற்ற சுகதுக்கங்களை யனுபவித்தும் (அந்த சுகதுக்கானுபவங்களால்பரிபாகப்பட்ட கர்மங்களுக்கேற்றபடி) மீண்டும் அந்தகர்மங்களில் விருப்பமடைந்து(அக்கர்மங்களுக்கேற்ற)நானாவிதமான சரீரங்களையடைந்துப்,அந்தசரீரங்களுக்கேற்ற சுகதுக்கங்களை (மீண்டும்) அநுபவித்தும் இவ்வாறு குலாலசக்கிரம்போல் இச்சீவனானவன்எப்பொழுதும் ஓய்வின்றி மாறிமாறிப்பிறந்தும் இறந்தும் சுழன்றுகொண்டிருப்பன். இவனுக்கொழிவுகிடையாது. இவ்வாறு சுழல்வதற்குக் காரணம் யாதெனின் அஞ்ஞானமேயாம். அந்த அஞ்ஞானத்தில்

* மோக்ஷத்துக்கு ஞானம் அவசியமென் றுரைத்தல்.

ருந்து இச்சையுண்டாகிறது. ஆகையால் மாநுடனாகப்பிறந்தவன் சனனமரணத்துக்கு மூலகாரணமாகிய அஞ்ஞானத்தை நாசஞ்செய்யும் விஷயத்தில் நியமமுள்ளவனாய் முயற்சிசெய்யவேண்டும். அங்ஙனஞ்செய்வானாயின் அஞ்ஞானநாசமுண்டாம். அஃதுண்டாயின் புருஷார்த்தங்களின் முடிவாயுள்ள மோட்சசுகமுண்டாம். அஃதுண்டாயின் சீவன்முக்தித்திசையுண்டாம். இஃதுடையவன்றான்சன்மசாபல்யமடைவான்.

ஓ அரசனே! அந்த அஞ்ஞானம் நாசமாவதற்கு ஞானந்தான் வன்மையாயுள்ளது. இந்த ஞானமன்றி ஏனையகர்மாதிகளாலும் கர்மோபாசனைகளாலும் அஞ்ஞான நிவர்த்தியாகா தாயினும் ஞானத்துக்குச் சாதனமாத்திரமாயுள்ளனவாம். எங்ஙனமெனின் கர்மங்களும் கர்மோபாசனைகளும் விஷயபோகங்களில் இச்சையையும் அவ்விச்சையின் வழியே துவேஷத்தையும் மாறி மாறி விளைவித்து மகத்தான அனர்த்தத்தைச் செய்து வருவதால் அவைகளால் அஞ்ஞான நிவர்த்தியாகாதென்றும், அனர்த்தத்தை விளைவிக்கும் ராகத்துவேஷத்தின் வழியேசென்று அவைகளைச் செய்யாமல் அவைகளைவிட்டு சர்வப் பிரயத்தினத்தினாலும் ஞானத்துக்குச் சாதனமாகக்கொண்டு செய்வாராயின் அவை ஞானத்துக்குச் சாதனமாகுமென்றும் அறிவாய். (சிலர் கர்மங்களைச் செய்யாமல் கைவிட்டு ஞானந்தான் அவசியமென்று ஞானவிசாரஞ் செய்யத்துணிகின்றனர். அது பிரமாண யுக்தமன்று. ஏனெனின், குர்வந்நேவேஹ கர்மாணி த்யதஃ கர்ம ப்யவஸ்யகம்) இவ்வுலகில் கர்மங்களைச்செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிற படியால் கர்மம் அவசியமானது என்று பிரமாணங் கூறுகின்றது. அதனால் கர்மங்களை விட்டு ஞானவிசாரஞ்செய்தல் கூடாதென்பதே நிச்சயம். வேதவிதிதமாகிய கர்ம சமூகங்கள் ஞானத்துக்குச்சகாயமென்றும் இதத்தைச்செய்வதென்றும் அறிவுடையார் சிலர் கூறுகின்றனர். அங்ஙனங்கூறுவது சித்தாந்தவிரோத மன்று. எங்ஙனமெனின் கர்மமானது இருதயத்திற் கட்டுண்டிருக்கிற ராகத்துவேஷாதிகளைப்பேதித்து அவைகளைப் போக்குவதற்குச் சாதனமாயிருத்தலால் சகாயமெனவும், அவ்விருதயம் பரிபாகமாதற்கு இன்றியமையாத கருவியாயிருத்தலால் இதமெனவுங் கூறியதாகும். ஆனால் இந்தக்கர்மமும் ஞான

மும் ஒன்றுய்ச் சம்பந்தப்பட்டிருப்பதோ வெனின் அன்று. ஒளி யும் இருளும்போல வேறுபட்டிருப்பவைகளே. எங்ஙனமெனின் சூரியோதய காலத்தில் இருள் பிரகாசத்தையடையா திருப்பது போல ஞானோதய மாகுங்காலத்தில் கர்மங்கள் அப்பிரகாசத்தை யடைந்திருக்கு மென்றறிவாய்.

அறிவிற்சிறந்தவனே! ஞானம் உண்டாகுங்காலம் சித்தசுத்தி யுண்டான பின்னரென்றும், அச்சித்தசுத்தி கர்மங்களாலென்றும் வெளிப்படலால் வேதங்களில் சர்வகர்மங்களையும் விதித்திருக்கின் றன. ஆகலான் அச்சித்தசுத்தி யுண்டாவதற்கு அந்தக்கர்மங்களைச் சர்வப்பிரயத்தனத்தினாலும் அவசியம் அநுஷ்டித்து வரவேண்டும். அவ்வா றநுட்டித்து வந்தால் அவை சித்த சுத்திசெய்யவல்ல சமம் தமம் திதிக்ஷை வைராக்கியம் சத்தியமாதிகளை யுண்டாக்கும். அஃதுண்டானபின்னர் சந்நியாசம் பெறல்வேண்டும். அதுபெற்ற பின்னர் நல்ல குலத்திற் பிறந்தவராயும் பிரஹ்மநிஷ்டராயும் பரசிவ பக்தி யுடையவராயுமுள்ள ஞானசாரியரையடைந்து நமஸ்கரித் தல்வேண்டும். அதன்பின்னர் அவரனுக்கிரகத்துக் குரிமையாய் நாடோறும் வேதாந்தவிசாரஞ் செய்து வரவேண்டும். அந்த விசா ரத்தில் ஜீவ ப்ரஹ்மைக்கிய போதகமாயிருக்கின்ற தத்வமஸ்யாதி வாக்யங்களைச் சிரவணஞ் செய்தல்வேண்டும். அச் சிரவணத்தால் சிவ ப்ரஹ்மைக்கிய நிலையைச் சிந்தித்துத் தெளிதல்வேண்டும். அங் ஙனந் தெளியப்பெற்றால் சனனமரணபயமற்று எனது சொரூப சித்தியை யடையலாம். ஓ ஞானசீலனே! இன்னமும் இந்தமகா வாக்கியார்த்த சோதனையின் முறைமையைக் கேட்பாயாக. முத லில் தத்வமஸ்யாதி மகாவாக்கியங்களில் அமைந்துள்ள பதார்த்த ஞானமும் அதன்பின்னர் அப்பதசமூகமாயுள்ள வாக்கியார்த்த ஞானமுமுண்டாகவேண்டும். இவற்றுள் தத்பதவாச்யார்த்தம் நான் என்றும் துவம்பதவாச்சியார்த்தம் சீவனென்றும் அசிபத வாச்சியார்த்தம் இந்த இருவருடைய ஐக்கியமென்றும் வேதங்கள் கூறுகின்றன. அங்ஙனங் கூறுவதோடு துவம்பதவாச்சியார்த்தம் சீவனென்பதிற் சம்சயமில்லையென்றுங் கூறுகின்றன. ஆனல் தத் பதவாச்சியார்த்தம் நான் என்றும் துவம்பதவாச்சியார்த்தம் சீவ னென்றும் வெளிப்படலால் இவ்விரண்டு வாச்சியப்பொருள்கள்

விரோதமுடைய தாதலால் இவ்விரண்டிற்கும் ஐக்கியம் எங்ஙனங்கூடுமெனின், லக்ஷணையாற்கூடும். அந்த லக்ஷணையாதெனின், சுருதியிற் கூறப்பட்ட துவம்பதம் தத்பதம் என்னும் இரண்டும் சித்லக்ஷண முடையதாகலின் அந்தசின்மாத்திர லக்ஷணத்தால் இரண்டிற்கும் ஐக்கியங்கூடும். எங்ஙனமெனின், துவம்பத வாச்சியார்த்தன் சீவனாயினும் அந்தச்சீவன் பிரமம் அறிவிக்க அறிகின்ற சித்லக்ஷணமுடையவனென்றும், பிரமம் அறிவே சொரூபமாய் நின்று அறிவிக்கின்ற சித்லக்ஷணமுடையதென்றும் அறிந்து பிரம மாத்திரமாகநிற்கும் அத்வைத ஐக்கியாநுபவத்தை யறியப்பெறு வானாயின் ஐக்கியங்கூடுமென்க.

ஓ பர்வதராஜனே! இதனைத் திட்டாந்தமுகத்தா லறிவாயாக. பல பொதுலக்ஷணங்களினால் காணக்கூடாமலிருக்கிற ஓர் தேவதத்தனைக் காணத் தொடங்குங்கால் அவனுக்கு முக்கியமாயுள்ள சில சிறப்பு லக்ஷணங்களைக்கொண்டு ஆராய்ந்து அவனைக் காணலும் அங்ஙனங் காணப்பெற்றால் அவனை அக்கூட்டத்தினின்றும் வேறு பிரித்து இவன்றான் அந்தத் தேவதத்தன் என்று சம்சயமில்லாமல் நிச்சயித்தறிந்து தன்னோடு கூட்டிக்கொள்ளுதலும் போல, அல தேக முதலியவற்றோடும் தத்துவசமூகங்களோடுங்கூடிக் காணக் கூடாமலிருக்கிறசீவனை முன்கூறியவாறு சித்தென்கிறலக்ஷணையால் ஆராய்ந்து இது தான் அந்தஆன்மா சம்சயமின்றென்றறிந்து தேகாதிகளை (ப்பரித்தியாகஞ்செய்து) கழித்துத் தன்னினமாகிய பிரமத்தோடுகூடி பிரஹ்ம சம்பத்தை யடைகிறான்.

இனி ஆன்மாவுக்கு வேறாயுள்ள தூலசூக்கும காரணங்களாகிய தேகாதிகளின் லக்ஷணங்களைக் கேட்பாயாக. மகாபூதங்களாகிய பிருதிவியாதி பஞ்சபூதங்களினின்றும் பஞ்சீகிருதமாகிய சரீரமே தூலதேகம். இது அழிவுடைத்தாகிய மாயையினின்றுங் காரியப்பட்ட மாயாமயமாயும் சுகதுக்கபோகமாகிய சகல கருமாநுபவங்கட்கும் ஆலயமாயும் நரைதிரை மூப்புமுதலிய வியாதிகளோடு கூடினதாயும் இவைகளால் ஆத்மாவுக்கு உபாதி செய்வதாயுமுள்ளது. இது முதல் தேகம். ஞானேந்திரிய பஞ்சகம் கர்மேந்திரியபஞ்சகம் பிராணாதிபஞ்சகம் மனம் புத்தி என்று சொல்லப்பட்ட தத்துவ சமூகங்களே சூக்குமதேகம். இது அபஞ்சீகிருத பூத

சம்பந்தனாயும் தூலதேகாநுபவயாய் வருகிற சுகதுக்கங்களை யறிவிக்கிறதாயும் இவ்வுணர்ச்சி வழியால் ஆத்மாவுக்கு உபாதி செய்வதாயுமுள்ளது. இது இரண்டாந்தேகம். தூலதேகம்போல் சுகதுக்காநுபவங்களை அநுபவிக்கச்செய்யாததும் சூக்குமதேகம்போல்சுகதுக்கங்களை அறிவிக்காததுமாய் அநாதியாயும் அநிர்வாச்சியமாயும் அஞ்ஞானமயமாயுமுள்ளதே காரணதேகம். இது ஆன்மாவுக்கு அறியாமையைச் செய்வதாகிய வுபாதியைச் செய்வது. இது மூன்றாந்தேகம். ஓ பர்வதராஜனே! ஆன்மாவானவன் இங்ஙனங் கூறிவந்த தேகத்திரயங்களையும் இவைகட்குள்ளாயுள்ள பஞ்சகோசங்களையும் தனக்கு வேறென்று களைவதற்காய்க் கூறியுள்ள நேதிநேதிவாக்கியங்களால் முறையே விசாரித்தறிந்து மேல்நோக்குங்காலத்து அறியக்கிடந்தது, அங்ஙனஞ் சேடித்து நின்ற எனது சொரூபமாகிய பிரஹ்மசித்தொன்றே என்றறிவாய்.

இதுவரையில் சீவன் தேகாதிகளுக்கு வேறென்றும் அத்தேகாதிகள் அந்தச்சீவனுக்கு உபாதிசெய்வதாகிய தூலசூக்கும காரண சரீரங்களாக விருப்பதென்றும் அச்சரீராதி தத்துவங்களை நேதிசெய்து களைந்தவழி சேடித்து நின்றது பிரமசித்தொன்றே என்றுங்கூறினேன். இனிப்பிரமத்தின் இலக்கணத்தைக்கேட்பாயாக.

இந்தப் பரமாத்மாவுக்கு சநநமரணமில்லை, ஒன்றினின்று உண்டாவதுமில்லை, கருமசனனங்கிடையாது, நித்யமானது, சாஸ்வதமாயுள்ளது, அனாதி, சரீரம் இம்சிக்கப்பட்டாலும் இது இம்சிக்கப்படுகிறதில்லை. எவனொருவன் இந்த வான்மா இம்சைப்படுவதாக நினைக்கின்றானோ எவனொருவன் இம்சிக்கப்பட்டதாக நினைக்கின்றானோ இவ்விரண்டுபேரும் தெரிந்தவர்களல்லர். இது ஒருவரைத் துன்பஞ் செய்கிறதில்லை, இது ஒருவனால் துன்பப்படுகிறதுமில்லை, அணுவுக்கணுவாயும் மஹத்துக்கு மஹத்தாயுமிருக்கிறஇந்தப் பரமாத்மா சகலப்பிராணிகளுடைய இருதயகுகையில் வைக்கப்பட்டிருக்கிறது, அத்தன்மையான இந்தப்பரமாத்மாவை துக்கரஹிதனாயிருக்கின்ற சீவாத்மாவானவன் அந்தப்பிரமத்தினுடைய பிரசாதத்தினாலே அப்பரமாத்மாவினுடைய மகிமைகளைத் தானுடையவனாகின்றான். இந்த ஆத்மாவை ரதமுடையவனாக வறிவாய். (எவ்வாறெனின்) சரீரம் ரதமாகவும், புத்தி சாரதியாகவும், இந்திரியங்கள்

குதிரைகளாகவும், மனம் கடிவாளமாகவும், விஷயங்கள் சஞ்சரிக்குமிடமாகவுங்கொண்டு இந்திரியங்களோடும் மனதோடுங் கூடி விஷயானுபவங்களை ஆன்மா அனுபவிக்கிறதாகச்சொல்லுகின்றபடியால் அவ்வண்ணமாகவே யறியக்கடவாய்.

எவன் இதைத் தெரிந்து கொள்ளாமலும் நல்லமனதில்லாதவனுகவும் சுசியில்லாதவனுகவும் இருக்கின்றுனே அவன் தத்பதத்தை யடையமாட்டான்; சம்சாரத்தை யடைவான். எவன் இதையறிந்து எப்போதும் நல்லமனதோடும் சுசியோடுங் கூடியிருக்கின்றுனே அவன் தத்பதத்தை யடைகிறுன். அவன் மறுபடியும் பிறக்கிறதில்லை. எவன் விஞ்ஞானத்தைச் சாரதியாகவும், மனதைக் கடிவாளமாகவுங் கொண்டவனுகவிருக்கின்றுனே அவன் என்னுடைய பரமபதத்தை யடைகிறுன்.

என்னுடைய பரமபதமென்பதும் அதனை யடைதலென்பதும் எவ்வாறெனின், என்னுடைய ஸ்தானந்தான் பரமபதம், அந்தப் பதத்தை எவன் முன்சொல்லியவாறு பரமாத்ம லக்ஷணத்தைச் சுருதியினுலும் யுக்தியினுலும் நிச்சயித்து தன்னுத்மாவினிடத்தில் அந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தை வைத்துப் பாவித்தலாகிய நிதித்தியாசனஞ் செய்கின்றுனே அவன் என்னுடைய பதத்தை யடைதலென்பதுமாம்.

இன்னமும் அந்த பாவனையின் முறைமை எப்படியெனின், முன்னர் தன்னுள்ளத்தில் யோகவிர்த்தியினுல் தேவியைத் தியானித்துப் பின்னர் தேவி பிரணவத்தின் நாமமாயிருக்கிற மூன்றக்ஷரங்களாகிய யந்திரத்தைத் தியானுர்த்தம் வாசகவாச்சிய மென்னும் இரண்டின் வழியானும் பாவிக்கவேண்டியது. மூன்றக்ஷரமாவது யாதெனின் ஹகாரம், ரகாரம், ஈகாரம், இம் மூன்றெழுத்துங்கூடி ஹ்ரீங்கார சொரூபமாகிய துரீயமாகும். இவற்றுள் ஹகாரம் தூலசரீரம், ரகாரம் சூக்குமசரீரம், ஈகாரம்காரணசரீரமென்றுசொல்லப்படும். தூல சூக்கும காரணசரீரங்களாகின்ற மூன்றக்ஷரங்களோடு கூடிய அப்பீஜமந்திரத்தை, சமஷ்டி சூக்கும தூல காரணசரீரமாகச் சொல்லப்பட்ட அச்சமஷ்டிக்கும் வியஷ்டிக்கும் அபேதமாக

வும் ஸ்நாதிகாலத்துக்கு முன் ஆதரவுடன் பாவனைசெய்து அதன் பின்னர் கண்ணைமூடிக்கொண்டு பிராண அபானவாயுக்களை நாசியின் மத்தியில் சமமாக நிறுத்தி இந்திரிய விஷயங்களைநிவர்த்தித்து மத்ஸர முதலியதோஷங்களை விடுத்து நிஷ்காமபக்தியோடு சப்த கோஷமில்லாத குகையிலிருந்து தூலசரீராபிமான விஸ்வமாகிய ஹகாராக்ஷரத்தை ரகாராக்ஷரத்தோடு சேர்த்தும், சூக்கும சரீராபிமான தைஜசமாகிய ரகாராக்ஷரத்தை ஈகாரத்தோடு சேர்த்தும், காரண சரீராபிமான பிராஜ்ஞனாகிய ஈகாராக்ஷரத்தை ஹ்ரீம் என்கிற அக்ஷரத்தோடு சேர்த்தும் வாச்சிய வாசக பேதமின்றி அத்துவிதமாகத் துவாதசாந்த ஸ்தானமாகிய அந்தவிடத்தில் ஜகதீஸ்வரியாகிய என்னை அகண்ட சச்சிதானந்த ஸ்வரூபமாகப் பாவித்துத் தியானித்தலாகும். இவ்வண்ணம் சாக்ஷாத்கார தியானத்தை உத்தமனாகிய ஒருவன் செய்வானாயின் அவன் என்னுடைய ஸ்வரூபத்தோடு பேதமில்லாமல் ஒன்றாயிருத்தலாகிய தன்மையை யடைகிறான். பராத்பரமாயிருக்கின்ற என்னை இப்போது சொல்லிவந்த யோக யுக்தியினால் பார்க்கப்பெறின் அப்பொழுதே அக்ஞானத்திற்கும் அதன்காரியங்கட்கும் நாசமுண்டாகின்றன. (௬௦-ம் ௫௰)

௩௪-ம் அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௩௪-க்குச் சுலோகம் (௧௬௭௩)

---

உ

ஹ்ரீம்சரீரிண்யைநம:

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்.

## யோகமந்திர சித்திசாதனம்.



பர்வதராஜன் கூறுகின்றான்,— ஓ மஹேஸ்வரியே! நான் ஞானப்பிரதமாயிருக்கின்ற தத்வதரிசனஞ் செய்வதற்கான யோகம் எதுவோ அந்த யோகத்தை அதற்குரிய அங்கத்தோடு எனக் கநுக்கிரகஞ் செய்வாயென்றான். தேவி அந்த மலையரையனைநோக்கி ஓ

யோகசீலனே! நீ கேட்கின்ற இந்தஞானப் பிரதயோகமானது மேல் நடு கீழ் என்று சொல்லப்பட்ட மூவுலகினுமில்லை. ஆயினும் ஜீவாத்ம பரமாத்மாக்களுடைய ஐக்கியத்தையே யோகிகளால் யோகமென்று கூறப்படுகின்றது; இதையன்றி வேறொன்றையும் அப்படிக் கூறப் படுகிறதில்லை. ஆனால் இதற்குக் காமம் குரோதம் லோபம் மோஹம் மதம் மாச்சரியம் என்பனவாகிய ஆறு தடைகள் உள்ளன. நீக்கற்கரிய இவ்விக்னங்களைத் தம்மிடம் வரவொட்டாமல் தடுக்கத் தக்கவர்களே ஜீவான்ம பரமான்ம ஐக்கிய யோகத்தை யடைவர். இந்த யோகத்துக்கு அங்கங்கள் எட்டாம். அவை இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்யாஹாரம் தாரணை தியானம் சமாதி என்பன. இவைகளே யோகத்துக்குச் சாதனமாகக் கூறப்படும்.

இனி, க. இயமமாவது-அஹிம்சை, சத்தியம், களவில்லாமை, பிரம்ஹசரியம், தயை, சன்மார்க்கம், பொறுமை, தைரியம், மிதமான ஆகாரம், சௌசம், எனப்பத்தாம்.

உ. நியமமாவது-தவம், சந்தோஷம், ஆஸ்திக்யம், (தெய்வமுள தென்றல்) தானம், தேவபூஜை, சித்தாந்தசிரவணம், நாணம், புத்தி, ஜபம், ஹோமம், எனப்பத்தாம்.

ங. ஆசனமாவது-பத்மாசனம், சுவஸ்திகாசனம், பத்திராசனம், வஜ்ராசனம், வீராசனம் என ஐந்தாம்.

(க) இவற்றுள் பத்மாசனம் - பாதங்களைத் துடைகளின்மேல் வைத்து இரண்டுகைகளால் பெரியவிரல்களைப் பிடித்துக்கொண்டு நிமிர்ந்திருத்தல்.

(உ) ஸ்வஸ்திகாசனம்-இரண்டுபாதங்களையும் தொடைகளுக்கும் முழங்கால்களுக்கும் இடையிலுள்ள சந்தியில்வைத்து நேராகவிருத்தல்.

(ங) பத்ராசனம் - புறங்கால்களைப் புருஷ்டபாகத்தில் மடக்கிவைத்து விருஷணத்தின்அடியின் வழியாய் அப்பாதங்களைப் பாதசந்திகளோடும் கைகளால் பிடித்திருத்தல்.

(ச) வஜ்ராசனம்-தொடைகளின்மேல் பாதங்களைக்கிரமமாகவைத்து முழங்கால்களில் கைவிரல்களை உன்முகமாக அமைத்து நிமிர்ந்திருத்தல்.

(ரு) வீராசனம்-ஒருபாதத்தைப் பூமியிலும் மற்றொரு பாதத்தைத்தொடையிலும் வைத்துசரீரத்தைநேராகவிருத்தல்.

ச. பிராணாயாமமாவது - வெளியேஇருக்கிறவாயுவை இடகலையினால் உள்ளேவாங்கிப் பதினாறுமாத்திரையளவு சுழுமுனைநடுவில் நிறுத்திப் பின்னர் முப்பத்திரண்டுமாத்திரையளவு பிங்கலைநாடியின்வழியாய் விடுதலேயாகும்.

இது சகர்ப்பம் விகர்ப்பமென இருவகைப்படும். (க) **சகர்ப்பம்** அடிக்கடி வெளியேசெல்லுகிற வாயுவை பன்னிரண்டு மாத்திரை அல்லது பதினாறுமாத்திரை காலம் ஜபத்தியானாதிகளுடன்உள்ளே கிரகித்து ஜபத்தியானாதிகளைச் செய்தல். (2) **விகர்ப்பம்** ஜபத்தியானாதிக ளில்லாமல் மேற்கூறியவாறு பிராணாயாமஞ் செய்தல். இம்முறையாகப் பிராணாயாமத்தை அப்பியசிக்கும் காலத்தில் சரீரம் வியர்க்குமானால் அதமமென்றும், நடுங்குமானால் மத்திமமென்றும், பூமியைவிட்டு மேலெழும்புமானால்உத்தமமென்றுஞ்சொல்லப்படும்.

ரு. பிரத்யாசாரமாவது-இயம நியமாதிகளால் கொள்ளப்பட்ட உத்தம குணங்கள் நிறைந்து தானெண்ணிய அபீஷ்டங்களைப் பெறுமளவும் இந்திரியங்களை விஷயங்களிற் போகவிடாமல் தடுத்து சுவாதீனஞ் செய்துகொள்ளலாகும்.

சு. தாரணையாவது-காற்பெருவிரல்கள்,முழங்கால்கள்,தொடைகள்,மூலாதாரம், ஆண்குறி, நாபி, இருதயம், கண்டம்,கன்னம்,நாசி, நடுப்புருவம், நெற்றி, சிரசு, துவாதசாந்தம் இவ்விடங்களில் பிராணவாயுவை விதிமுறையாக நிறுத்துவதாகும்.

எ. தியானமாவது-தன்னால் விரும்பப்பட்ட தேவதையோடு தனது அசைவற்ற மனதை லயிப்பித்தலாகும்.

அ. சமாதியாவது-ஜீவாத்மாவாகிய தான் பரமாத்மாவினின்று வேறாகாது சமத்துவபாவனை செய்து கொண்டு எப்போதுமிருத்தலாம். இவையே அஷ்டாங்க யோகலக்ஷணமென்று யோகவிசாரமுடையவர் கூறுவர்.

ஓ பர்வதராஜனே! நானிப்பொழுது உனக்கு உத்தமமான மந்திரயோகத்தைச் சொல்லுகிறேன். சரீரமாகிய இப்பிரபஞ்சம் பஞ்சபூத காரியாத்மகமாயும் சோமசூர்யாக்னிகளால் தேஜோரூபமாய்ப்

பிரகாசிக்கின்ற சிவப்பிரஹ்மைக்கிய ரூபமாயும் விளங்குகின்றதெ ன்று பெரியோர் கூறுவர். இதுவேயுமன்றி இச்சரீரத்தில் மூன்ற ரைக்கோடி நாடிக ளிருக்கின்றனவென்றும் முக்கியமாயுள்ளன பத் தென்றும் அவற்றுள்ளும் மூன்று நாடிகளே மிகமுக்கியமானதென் றுங்கூறுவர். அவை இடகலைபிங்கலை சுழுமுனைஎன்பனவாம். இம்மூன் றும் இச்சரீரத்துக்குப் பிரதானமான முதுகென்பாகிய மேருதண் டத்தின் சிகரத்தில் சோமசூர்யாக்னி சொரூபமாய்ப் பிரகாசிப்பன. இவற்றுள், இடகலைநாடி,-மேருதண்டத்தின் வாமபாகத்தில் வெள் ளிய சந்திர பிரகாசமுடைத்தாய் அமிர்தமயமாய் சத்திசொரூபமா கிய ஸ்திரீரூபமாயுள்ளது. பிங்கலை நாடி,-தக்ஷணபாகத்தில் சூரியப் பிரகாசமுள்ளதாய்ப் புருஷரூபமாயுள்ளது. சுழுமுனைநாடி,-புருவ நடுவில் அக்னிசொரூப முள்ளதாய் சகல தேஜசோடும் பிரகாசிப் பது. இந்தச் சுழுமுனைநடுவில் பலகாரணங்களால் பலபெயர் புனைந்த விசித்திரமான இச்சா ஞானக் கிரியாத்மகமாய் கோடிசூரி யப் பிரகாசமாய் சுயம்புலிங்கமானது பிரகாசித்துக்கொண் டிருக்கும். அதன்மேல் சிவாத்மகமாயுள்ள பிந்து நாத சொரூபமாய் மாயாபீஜ மிருக்கும். அதன்மேல் குண்டலி சத்தியானது ரக்தவிக் ரஹ சொரூபமாகிய தேவியோடு அபின்னமாய்க் கலந்து அனற் சிகையைப்போல் பிரகாசித்துக்கொண்டிருக்கும். ஓ பர்வதராஜனே! அக்குண்டலினிசத்திக்குமெனக்கும் வேற்றுமையின்று; அதுஎனது சொரூபமே. இக்குண்டலினிசத்திக்கு வெளிப்புறத்தில் உருக்கிய பொன்னிறமான மூலாதாரத்தில் நான்குதளக் கமலமொன்றிருக் கிறது. இதைப் பொன்னிறமும், வ-ஶ-ஷ-ஸ என்கிற அக்ஷர வுருவங்களோடு கூடிய நான்கு தளமுமுடையதாகத் தியானிக்க வேண்டும். இது ஸ்வாதிஷ்டான முதலிய ஆதாரங்கட்கு மூலமா யிருத்தலின் மூலாதாரமெனப் பெயர்பெற்றது. அதற்குமேல் நெ ருப்பைப்போல் செந்நிறமுடைத்தாய் ஆறுதளத்தோடு சுவாதிஷ் டானமென்கிற கமலமிருக்கின்றது. இதை வஜ்ரகாந்தியைப்போன்ற பிரகாசமும் ப-ஶ-ம-ய-ர-ல என்கிற அக்ஷர வுருவங்களோடுகூடிய ஆறுதளங்களு முடையதாகத் தியானிக்கவேண்டும். ஸ்வ என்கி றசொல், பரமானலிங்கம் என்னும் பொருளைத் தருதலாலும், தான் அதிஷ்டிப்பதற்கு இடமாகலானும் ஸ்வாதிஷ்டான மெனப்

பெயர்பெறும். அதற்குமேல் நாபிஸ்தானத்தில் மேகத்திற்றோன்றும் மின்னலைப்போலும் மிகப்பிரகாச முடைத்தாய்ப் பத்துதளத்தோடுமணிபூரகமென்கிறகமல மிருக்கின்றது. இதன்தளங்கள் ட-ட-ண-த-த-த-த-ந-ப-ப என்கிறஅக்ஷரங்களோடு கலந்திருக்கும்.பிளவுபட்டரத்னம்போல் ஒளிவீசுவதால் மணிபூரகமெனப்பெயர்பெற்றது. இந்த விடத்தை விஷ்ணுமூர்த்தி அதிஷ்டானமாகக்கொண்டிருப்பர். ஆகலான் அவரைக்காண்பதற்கு அவ்விடம்காரணமாம். அதற்குமேல் உதிக்கின்ற சூரியனைப்போல் பிரகாசமுடையதாய்ப் பன்னிருதளத்தோடு அநாஹதமென்கிறகமலமிருக்கின்றது. அக்கமல தளங்களில் க-வ-ம-வெ-ஜ-வ-ஹ-ஜ-ஸ-ஞ-ட-○ என்னும் அக்ஷரங்கள் சப்த சொரூமாயமைந்து உருவங்களாற்றிருக்கும். இது அக்ஷரவுருவங்களற்று சப்த பிரஹ்மமயமாயிருப்பதால் அநாஹதமெனப்பெயர்பெறும். இதன்மத்தியில் பதினுயிரம் சூரியகாந்தியை யுடைத்தாய் பாணலிங்க மிருக்கின்றது.அன்றியும் அந்தவிடம் ஆனந்தத்துக்கு இடமாயிருத்தலால் புருஷனுக்கு மேலான அதிஷ்டானமாயு முள்ளது. அதன்மேல் தூம்பரவர்ணமாகிய மஹா பிரகாசமுடைத்தாய்ப் பதினாறு தளத்தோடு விசுத்தமென்கிற கமல மிருக்கின்றது. இந்தக் கமலதளத்தில் அகாரமுதல் ஹ: என்கிற அக்ஷரம்இறுதியாகவுள்ள பதினாறு உயிரெழுத்துக்களும் உருவங்களாக வமைந்திருக்கும். இது சீவனுக்குப் பிரமதரிசனத்தினால் சுகத்தைக்கொடுக்கிறபடியால் விசுத்தமென்றுசொல்லப்படும்.இதனை ஆகாசமென்று கூறுவர். ஆத்மஸ்தானமாயுள்ள இதன்மேல் ஆக்ஞா சக்கரம். இது ஆக்ஞையினுடைய சம்பந்தம்பெற்ற தாகலின் அப்பெயரெய்தியது. இது ஹ க்ஷ என்னும் இரண்டுஅக்ஷரங்களோடு கூடியுள்ளது.

அதன்மேல் கைலாசமும் அதன்மேல் ரோதிநீ என்னும் ஓர் சக்கிரமுமுண்டு. இவ்வாறு சொல்லப்பட்ட ஆறுதாரங்களின்மேல் ஆயிரந்தளத்தோடு பிந்துஸ்தான மிருப்பதாகக் கூறப்படுகின்றது. சர்வோத்தமமா யிருக்கின்ற யோகமார்க்கம் இவ்விதமாகும். முதலில் பூரக யோகத்தினால் வாயுவை ஆதாரத்தில் சேர்ப்பித்துப் பின் குதத்துக்கும் குறிக்கும் நடுவேயுள்ள சக்தியை சிவக்குறியினால் கிரமமாய்த் தட்டி யெழுப்பிப் பிந்து சக்கரத்தை யடை

வித்தபோது சம்புவும் பராசக்தியும் ஒன்று சேர்ந்திருப்பதாகப் பாவிக்கவேண்டும். அப்போதுண்டாகிற திராக்ஷாரசம்போன்ற அமிர்தத்தை அச்சக்திக்கு ஊட்டியபின்னர் ஆறுதார சத்திகளையும் அவ்வமுத தாரையால் திருப்தி செய்வித்து அதே மார்க்கத்தினுல் மூலாதாரத்தை யடைவித்தல் வேண்டும்.

இவ்விதம் நாடோறும் அப்பியசித்து வருகின்றவனே சனன மரண துக்கத்தினின்றும் சம்சார பயத்தினின்றும் விடுபடுவான். முன்சொன்ன மந்திரங்களெல்லாம் அவனுக்குச் சித்தியுமாகும். இப்படிச் செய்யாதவனுக்குச் சித்தியாகா. என்றும் விடாமற் செய்கின்ற அப்பியாசி எனக்குள்ள குணங்களையே அடையப்பெறுவான். அவனுக்கு எனதுகுணனுபவமேயன்றி வேறில்லை. இதுவரையில் உத்தமமா யிருக்கின்ற வாயு தாரணத்தைக் கூறினேன். இனி தாரணையைச் சொல்லுகிறேன்கேட்பாயாக.

திக்கு காலமுதலியவற்றுல் அவச்சின்ன(கட்டு)ப் படாத தேவியினிடத்தில் புத்தியைஅசைவறநிறுத்தி ஜீவப்பிரஹ்மைக்கியத்தைச்செய்வானுயின் அவன்சீக்கிரத்தில் தன்மயனுகிறுன். அப்படிச் செய்யாவிடத்து அவனுடைய அறிவு அஞ்ஞானத்தோடு கூடியே யிருக்கும். மந்திரசித்தி (தன்மய சித்தி)யை அடையாது. யோகி யோகசித்தியுண்டாகும் வரையில் யோகத்துக்கு அவசியமாகிய அஷ்டாங்காதிகளைச் செய்தல் வேண்டும். அவ்வப்பியாசம் எப்படியெனின் என்னுடைய பாதம்அஸ்தம் முதலானமதுரமான அங்கங்களில் சித்தத்தை அசைவற நிறுத்தி மறுபடியும் அந்தந்த ஸ்தானங்களைச் செபித்து நிர்மலசித்தனுய் எனதுருவ முற்றிலும் நிறுத்துவதாகும். ஞானசொரூபமா யிருக்கின்ற தேவியினிடத்தில் மனமானது எவ்வளவு காலத்தில் லயம் அடையக்கூடுமோ!அவ்வளவு காலம் ஜபஹோமங்கள் செய்து இஷ்டமான மந்திரத்தை அநுஷ்டிக்கவேண்டியது. இவ்வாறு செய்வதாகிய மந்திர யோகாப்பியாசத்தினுல் ஞேயஞானத்தை அறிவதாகிய சாமர்த்திய முண்டாகும். யோகசித்தி யின்றி மந்திரசித்தியுண்டாகாது. மந்திரமின்றி யோகசித்தி யுண்டாகாது. இருளடைந்த வீட்டிலிருக்கும் பாத்திரத்தைக் காண்பதற்குத் தீபங்காரணமாதல்போல, பிரமசித்தி யுண்டாவதற்கு மேற்சொன்ன இரண்டினுடைய அப்

பியாசமும்காரணமாகவிருக்கிறது. மாயையினால் மூடப்பட்டிருக்கிற ஆத்மா இம்மந்திர சாதனத்தால்வெளிப்படும். இந்தப்பிரகாரம் யோகவிதி சாங்கமாக என்றுசொல்லப்பட்ட தென்றறிவாயாக.

௩௫-ம் அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௩௫-க்குச் சுலோகம் (உ0௩௫௨.)



உ

ஹகாரரூபாயைநமஃ

**முப்பத்தாறம் அத்தியாயம்.**

## தியானயோகம்.

தேவிகூறுகின்றாள்:-இத்தகையயோகத்தோடுகூடியபிரம்ஹரூபிணியாகிய என்னைப்பிரஹ்மசொரூபமாகத் தியானிக்கவேண்டியது எப்படி யெனின், ஆசனத்தில் சுகமாயுட்கார்ந்து நிஷ்காமசித்தனாய் அடியில்வருமாறு தியானிக்கவேண்டியது.

யோகசாதனங்கைவந்தவன், சருவப்பிராணிகளின் இருதயகுகையில்பிரகாசமானபிரஹ்மம் அறியப்படுகிறதாயும் நன்றாயிருக்கிறதாயும்எல்லாம்அடங்குமிடமாயும்உள்ளதென்றுதியானிப்பதாகும். எல்லாமென்பது யாதெனின் சரவஸ்துக்களாகிய பசுமுதலியவைகளும் பிராணாதிவாயுக்களோடு கூடியுள்ள மநுஷ்யபசுக்களும், இமைகொட்டல்முதலிய செயல்களோடுங் கூடியுள்ள சரவஸ்துக்களும் இவைகளல்லாத அசரவஸ்துக்களுமாம். இவையெல்லாம் அந்தப் பிரஹ்மசொரூபத்தில் அடங்கியிருப்பதாக அறிந்து தியானித்தலே தியானமெனப்படும். இன்னமும் அந்தபிரஹ்மம் எப்படியிருப்பதென் றறியவேண்டுமெனின் மூர்த்தமாயும் அமூர்த்தமாயும் உள்ள சத்தாயும் அசத்தாயும் இருப்பதாயும், பிரார்த்திக்கத்தகுந்ததாயும், லவுகிகஞானத்துக்கு அகோசரமாயும், ஆத்மஞானத்துக்கு அதீதமாயும், சீவாத்மாக்களுக்கு மேலான பரமாத்மாவாயும், சர்வபதார்த்தங்களுக்குள் சிரேஷ்டமாயும், பிரகாசமாயும் எதுவுள்ளதோ அதுவே பிரஹ்மமெனவும், எது அணுவுக் கணுவா

யும் மகத்துக்கு மகத்தாயும் இருக்கிறதோ அதுவே பிரஹ்மமென வும், இந்தப்பிரபஞ்சத்தில் காணப்படுகிற பூலோக புவர்லோக முதலிய வுலகங்களும் அந்த வுலகவாசிகளாகிய மநுஷ்யர்களும் எதனிடத்தில் அடங்கியிருக்கிறதோ அந்தவிடமேதான் சர்வாஸ்ர யமாயிருக்கின்ற பிரமமெனவும், அதுவேதான் நாசரஹிதமென வும், பிராணன்எனவும், அதுவேதான் மனவாக்குகளெனவும், அதுவேதான் ஏனைய இந்திரியங்களெனவும், நித்தியமெனவும் அறிதல்வேண்டும். அறிந்தபின் அதனிடத்தில் மனதைநிறுத்துவ தே தியானமெனப்படும். ஓ சிஷ்யனே! இங்ஙனங்கூறிய முறைப் படி பிரஹ்மத்தை யறியக்கடவாய்.

இவ்வகையாய்ப் பிரஹ்மத்தையறிந்தபின்னர் உபநிடதத்தை ச்சிரவணத்தால் தநுஸாகவளைத்து அதில் நாடோறும் மனனஞ்செ ய்வதனு னுண்டாகும் கூர்மையான ஆத்மஞானமென்கிற அஸ்திரத் தைச் சந்தித்து அதனைப்பிரமபாவனையை யடைந்திருக்கிற மனத் தினல் லக்ஷ்யமாகிய பிரமத்தின்மேல் பிரயோகிக்கவேண்டியது. அஃ தாவது தனது ஞானத்தைப் பிரமத்தினிடத்தில் வைக்கவேண்டு மென்பதேயாம். இதனையே உபநிடதத்தைத் தனுசாகக்கொண்டு அதில்ஈஸ்வரோபாசனையின்வசப்பட்டமனமாகியபாணத்தைத் தொ டுத்து அதனை அக்ஷரசொரூபமாக விருக்கின்ற பிரஹ்மமாகியலக்ஷ் யத்தினிடத்தில் பொருந்தும்படிச் செய்யவேண்டுமென்றுங் கூறு வர். இதுவுமன்றி பிரணவத்தைத் தநுசென்றும் ஆத்மாவைப்பாண மென்றும் பிரமத்தை லக்ஷ்யமென்றுங் கூறி அந்தலக்ஷ்யமாகிய பிரஹ்மத்தினிடத்தில் ஆத்மாவாகிய பாணத்தை சாக்கிரதை யாய்த் தைக்குப்படிச் செய்யவேண்டியது. அப்படிச்செய்யவே ஆன்மா பிரஹ்மசொரூபமேயாகின்றது. சாக்கிரதைஎன்பது யா தெனின் புறவிஷயங்களில் மனதைவிடாமல் ஏகாக்ரசித்தனுயிரு த்தலேயாம். அப்படியிருக்கப்பெறின் பாணமானது எப்படி ஒரு வனுள்ளத்தில் ஊடுருவிச்செல்கின்றதோ அப்படி ஆன்மஞானமா னது பிரமத்தினிடத்தில் செல்லுமென்றதென்க.

இன்னமும் மோக்ஷசாதனத்துக்கு மார்க்கம் யாதெனின் சுவர் க்கம் பூமி ஆகாயம் மனம் பிராணன் ஆகிய இவையெல்லாம் எந் தப்பிரமத்தில் கூடியிருக்கின்றதோ அந்தஏகமாகிய பரமாத்மாவை

யே அறிதல்வேண்டும். இதற்கு அன்னியமான வார்த்தைகளை விட்டுவிடவேண்டும். ஏனெனில் ஓர் சகடத்திலுள்ளகுடத்தில் இலைகள் எப்படி கோர்ப்புண்டிருக்கின்றனவோ அப்படியும் தேகத்தில் நாடிகள் எப்படி வியாபித்திருக்கின்றனவோ அப்படியும்போல் ஆன்மஞானத்துக்குச் சாக்ஷியாயிருக்கின்ற பரமான்மா இருதயத்துக்குள் ளிருக்கின்றது. அங்ஙனம் இருக்கின்றபடியால் பார்த்துக் கொண்டிருக்கின்றேன் கேட்டுக்கொண்டிருக்கிறேன் அறிந்து கொண்டிருக்கிறேன் என்று ஆன்மவிருத்தியானது சீவித்திருக்கிறதென் றறிதல்வேண்டும்.

மஹத்தாகிய அஞ்ஞானத்தின் கரையைத்தாண்டுவதற்கு ஆத்மாவைப்பிரணவசொரூபமாகத் தியானித்தல்வேண்டும். அப்போதே உனக்கு மங்களமுண்டாகும். இந்த ஆத்மா திவ்யமாகிய பிரஹ்மபுரியென்னும் ஆகாசத்தில் நன்ருக விளங்கும். அப்பரமாத்மா மனோமய அன்னமயங்களின் வசப்பட்ட சரீரத்திலுள்ள இருதயத்தில் தங்கி பிரேரேபித்துக் கொண்டிருக்கும். ஆனந்த ரூபமாகப் பிரகாசிக்கின்ற அப்பரமான்மாவைத்தீரர்கள் விஞ்ஞானத்தினுல்பார்ப்பார்கள். பார்க்க, இருதயக் கிரந்தியானது பிளவுபட்டுச் சந்தேகங்களெல்லாம் சேதத்தையும் கர்மங்களெல்லாம் நாசத்தையும் அடையும். அப்போது அப்பரப்பிரம்ஹத்தை நிஷ்களமாயும் அஞ்ஞானமற்றதாயும் சிரேஷ்டமாகிய சுவர்னகோசமாயும் பரிசுத்தமாயும் ஒளிகளுக்கெல்லாம் ஒளியாயும் ஆத்மவித்துக்கள் அறிவார்கள். அங்கே சூரியன் சந்திரன் நக்ஷத்திரம் மின்னல் அக்னிமுதலிய எதுவும் பிரகாசிப்பதில்லே. இவையெல்லாம்தமக்குள்ள பிரகாசத்தை அந்தப் பரப்பிரம சகாயத்தைக்கொண்டே பெறுகின்றபடியால் தாம் அதன் முன்னே பிரகாசிக்கக்கூடவில்லே. அமிர்தமான இந்தப் பிரஹ்மமே கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு பூமி ஆகாயம் ஆகிய எங்கும்உள்ளதென்றும் இப்பிரபஞ்சமெல்லாம் பிரமமேயென்றும் எவன் அறிகின்ருனே அவனே கிருதகிருத்யனும். பிரம சொரூபமாயிருக்கின்ற அவனுக்குத் துக்கமுமில்லே சுகமுமில்லே. துவைத பாவனையை யுடையவனே பயத்தை யடைவன். இவன் பயமடைவதில்லே. அந்தப் பிரமத்தைவிட்டு நானில்லே என்னேவிட்டு அப்பிரமமுமில்லே ஆகையினுல் அதுவே நான்; நானே அது. பர்வதனே! இத

ஊே நிச்சயமென்று அறிவாய். இவ்வண்ணமான பிரமதரிசனம்பெற்றவன் இருக்கின்ற இடத்திலே தான் நானும் இருப்பேன். இவனை விட்டுத்தீர்த்தங்களில்லை கைலாய வைகுண்டங்களில்லை. மற்றெவ்விடத்திலும் நானிருப்பதில்லை. என்னை யறிந்த ஞானிகளின் இருதயத்தில் எப்போதும் நான் வசித்திருப்பேன். அப்பரமஞானியை யர்ச்சிக்கின்றவனுக்கு என்னைப் பூஜிப்பதினு லுண்டாகும் பயனில் கோடிபங்கு அதிக முண்டாகும். அவன் குலமும் பவித்திரத்தை யடையும். அவனைப்பெற்றதாயும் கிருதகிருத்தியத்தைப் பெறுவாள், சித்த லயமடைந்த ஞானியானவன் வசிக்கின்ற இடமே புண்ணிய பூமி யென்னும் பெயரைப்பெறும். இதைப்பத்தியும் சீலமுமுடைய ஜேஷ்ட புத்திரனுக்கும் சிஷ்யனுக்குஞ் சொல்லவேண்டுமேயன்றி மற்றையருக்கு ஒரு சிறிதுஞ் சொல்லக் கூடாது. தெய்வத்தினிடத்தில் எவ்வளவு பக்தி வைக்கின்றனே அவ்வளவு பக்தி பிரமஞானத்தை யுபதேசித்த ஆசாரியனிடத்தும் வைத்தல் வேண்டும். அந்த ஆசார்ய பக்தியுடையவனுக்குச் சொல்லப்பட்ட பிரஹ்ம ஜ்ஞானார்த்தம் அவன் மனத்திலே பிரகாசமாய் விளங்கும். இந்த ஞானோபதேசியே சாக்ஷாத் பரமேஸ்வரனவன். இவ்வளவு நன்மையைக் கொடுப்பதாகிய ஞானத்தைப் பிரயத்தனப்பட்டு அடையவேண்டும். அப்படி யடையாமற்போகின்றவன் கடன்காரனவன். பிரமஞானத்தையுதிப்பிக்கின்றவன் பிதாவைக்காட்டிலும் அதிகனென்றுசொல்லப்படும். ஏனெனில், பிதாவினு லுண்டாகிய ஜன்மமானது நஷ்டத்தையடைகிறது. ஆசாரியனு லுண்டாகும் ஞானம் நஷ்டத்தையடைகிற தில்லை. ஆகலின் ஆசிரியனுக்குத் துரோகஞ் செய்தல் கூடாது. பிரஹ்மஜ்ஞானத்தை உபதேசிப்பவனே பரமகுருவென்று சாஸ்திரசித்தாந்தங் கூறுகின்றது. ஈஸ்வரன் கோபித்துக்கொண்டால் குருரக்ஷிக்கின்றான். குருகோபித்தால் சிவன்ரக்ஷியான். ஆகையினுல்சர்வப்பிரயத்தினத்தினுலும் ஸ்ரீகுருவைச் சந்தோஷிப்பிக்க வேண்டும். எப்போதும் மனவாக்குக்காயங்களால் அவரையே தியானிக்கவும்வேண்டும். அப்படிச்செய்யாவிடில் நன்றிமறந்த பாதகனவன். இவனுக்குப் பிராயச்சித்தங் கிடையாது. அதர்வணவேதத்தில் வல்லவராகிய தத்யங்கமுநிவரிடம் அஸ்வனிதேவதைகள் சென்று அவரை வணங்கி எங்களுக்குப் பிரஹ்மோபதேசஞ் செய்யவேண்டுமென்று

பிரார்த்திக்க முனிவர் மறறொருவேளைவருவீர்களானால் அப்படியே உபதேசிக்கின்றேமென்று அவர்களை யனுப்பிவிட்டனர். அதை இந்திரனறிந்து அந்தமுனிவரிடஞ்சென்று நீர் அஸ்வனிதேவதை கட்குப் பிரஹ்மோபதேசஞ் செய்வீராயின்நான் உமதுசிரசை வெட்டிவிடுவேனென்று சொல்லிப்போயினன். பின்னர் அஸ்வனிதேவதைகள் வந்து கேட்டபோது நடந்தசெய்தியை முனிவர் சொல்ல அதற்கவர்கள் நீர் அஞ்சவேண்டாமென்று கூறி அவரநுமதிப்படி அவருடைய சிரசைச்சேதித்து குதிரையினுடைய சிரசைக் கொண்டுவந்துவைத்து அவ்வுபதேசத்தைப் பெற்று மறைந்திருந்தனர். உடனே இந்திரன் வந்து அவரைக்கோபித்து நான்சொல்லியதை அவமதித்தபடியால் உம்முடையதலையைச் சேதித்து விடுகிறேனென்று அவனுக்குண்டாகிய கோபமிகுதியினால் முன்னிருந்த தலையல்லவென்பதையும். அறியாமல் சேதித்துவிட்டுப்போயினன். மீண்டும் அஸ்வனிதேவதைகள் வந்து முன்னிருந்த அவரது தலையை வைத்துப்போயினர்.

ஓபர்வத ராஜனே! இவ்வளவு சங்கடப்பட்டு சம்பாதிக்கவேண்டிய தாகவிருக்கின்றது. இப் பிரஹ்மவித்தையை. எவன் இதனைச் சம்பாதிக்கின்றானோ அவன்தான் கிருதகிருத்யன்; அவனே தான் தன்யன். நீ கேட்ட பிரமஞானத்தை நான் முழுமையுஞ் சொன்னேன். இதன்மேற் சொல்லவேண்டுவ தொன்றுமில்லை என்றனள். (சு-ம்-௬௦.)

முப்பத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம்-௩சு-க்குச் சுலோகம் (உ௦சுசு.)

---

உ

ஹலத்ருத்பூஜிதாயைநம:

## முப்பத்தேழாம் அத்தியாயம்.

## பக்தியோகம்.

பர்வதராஜன் கூறுகின்றான்,-ஹேசாம்பவீ! ஆசையற்ற மத்திமனுக்கு சுகமான எந்தஞானத்தினால் உன்னுடையபக்தி யுண்டாகுமோ அதனைச் சொல்வாயென்று கேட்க தேவிகூறுகின்றாள்

மோக்ஷத்தை யடைவதற்குச் சொல்லப்பட்ட மார்க்கம் மூன்று. அவையாவன கர்மயோகம் ஞானயோகம் பக்தியோகங்களாம். இம்மூன்றும் எப்போதும் சுலபமாகச் சுவாதீனஞ் செய்துகொள்ளக் கூடியதே. எப்படியெனின், கர்மயோகத்தைக் காயத்தினுலும், பக்தியோகத்தை மனத்தினுலும், ஞானயோகத்தை அறிவினுலும் சுவாதினஞ் செய்துகொள்ளலாம். பக்தியோகமானது,-மனிதர்களுடைய குணபேதத்தால் தாமசபக்தியென்றும், ராஜஸ பக்தியென்றும், சாத்வீகபக்தியென்றும் மூவகைப்படும். அவற்றுள் தாமசபக்தியாவது,- பிறர்வருந்தவேனும் டம்பமாகவேனும் மாச்சர்யத்தினுலேனும் குரோதத்தினுலேனும் என்னிடம் விசுவாசம்வைத்துச் செய்யும் செய்கைகளாம். ராஜஸபக்தியாவது,—பிறருக்குத் துன்பஞ் செய்யாது தனக்கு மாத்திரம் நன்மையானவற்றைச்செய்துகொண்டும் ஏதேனும் ஓர் இச்சையை நாடோறும் எண்ணியும் புண்ணியபலன்களை யனுபவிக்கும்பொருட்டும் பேதபுத்தியினுல் என்னை யுபாசித்தலாகும். சாத்வீக பக்தியாவது, - பாவநிவர்த்தியின் பொருட்டு எல்லாக் கருமங்களையும் ஈஸ்வரார்ப்பணமாகச் செய்தல், இக்கருமம் வேதோக்தமாகையினுல் இதை எப்போதுஞ் செய்ய வேண்டியதென்கிற நிச்சயபுத்தியுடையனுதல், ஆண்டான் அடிமையென்கிற பேதபுத்தியோடு தெய்வத்தினிடத்தில் பிரீதியுடையனுயிருத்தல் முதலியனவாம்.

இச் சாத்வீக பக்தியோகமானது சகல கலியாண குணங்களுக்கும் உற்பத்தி ஸ்தானமாக விருக்கின்ற என்னிடம் தைலதாரைபோல் நீங்காது புத்திவைத்தலாகிய சிரேஷ்டமான பக்தியை யடைவிப்பிக்கும். இதுவன்றி முன் சொல்லிய ராஜஸதாமஸ பக்தியோகங்கள் அடைவிக்கா. அந்த மேலான பக்தி இவையாமென்று இன்னமுஞ் சொல்லுகிறேன். அதனை நீ அறிந்து கொள்வாயாக. அஃதாவது எப்பொழுதும் என்னுடைய குணங்களைக் கேட்பதும் என்னுடைய நாமகீர்த்தனங்களைச் செய்வதும், யாதொருகாரணத்தை எண்ணுதிருப்பதும் சாலோக்கிய சாமீப்ய சாரூப்பிய சாயுச்சியங்களை விரும்பாமலும், என்னுடைய சேவையைக் காட்டிலும் அதிகமானது ஒன்றுண்டென்று சிறிதும் அறிவதில்லாமலும் மோக்ஷாபேக்ஷையையும் விட்டு என்னிடத்தில் சிரேஷ்டமான

ஆசையைவைத்து சேவ்யசேவக பாவத்தைக்கொண்டு சோம்பலொழிந்து என்னையேதியானிப்பதுமாம். இதனைப் பரமபக்தியென்றும் ஞானயோகமென்றுஞ் சொல்லப்படும். இந்தப் பரமபக்தியை ஞானயோகமென்று எப்படிச்சொல்லப்படுமெனின், அந்தஞானயோகமும் பரமபக்தியும் வேறுபிரித்தற்கின்றி பரமபக்தியினது விளைவாகவே ஞானயோகம்முடிதலாலும் இந்தஞானயோகத்தில் என்னையே தியானித்தலாகிய பரமபக்தி பிரகாசித்தலானும் பரமபக்திக்கும் ஞானயோகத்துக்கும் சிறிதும் வேற்றுமையறிதற்குக் கூடாதென்க. அதனை இனிவரும் விஷயத்தினாலறிவாய். என்னையெனின், என்னை நித்தியம் எவன் தன்னைக்காட்டிலும் ஒருபொருளிலும் பேதமில்லாமல் அறிகின்றானோ பேதமாக அறியவில்லையோ அவன் சகலசீவர்களையும் என்னுடைய ரூபமாகவே சிந்திப்பான். தன் ஆத்மாவினிடத்தில் எவ்வளவு பிரீதியிருக்கின்றதோ அவ்வளவு ஆசை அன்னியமான உயிர்களிடத்தும் வைப்பன். சைதன்னியமானது எல்லா வுயிர்களிடத்தும் சமானமாக விருக்கின்றபடியால் அந்த சைதன்ய சொரூபிணியாகிய என்னையும் உயிர்களையும் அபேதமாகவே நினைப்பான்.

எவனுக்கு இந்தவுண்மையான பரமபக்தியானது உண்டாகிறதோ அவனுக்கு என்னுடையரூபமாகிற சின்மாத்திரத்தி லயமுண்டாகின்றது. பக்தியினுடைய முடிவு இதுவேயாகும். இதுதான் குணமென்று சொல்லப்படும். பக்தி ஞானம் என்னும் இரண்டிற்கும் வைராக்கியமானது எல்லை. எவன் பிராரத்துவவசத்தால் பக்தியின்முடிவாகிய ஞானத்தைப் பெறுதொழிகின்றானோ அவன் எனது வாசஸ்தானமாகிய மணித்வீபத்தையடைந்து அங்குள்ள சகலபோகங்களையும் இச்சிக்காமற்போனாலும் அநுபவிக்கத் தக்கவனாவன். அந்த லோகாநுபவமுடிவில் முன்சொன்ன எனது சித்ரூபஞானம் நன்றாக வுண்டாகும். அந்த ஞானத்தால் எப்போதும் முத்தனாய்விடுகிறான். ஞானத்தினால் முத்தியுண்டாகிறதேயல்லாமல் மற்றொன்றினாலாகாது. ஹ்ருதயத்துள்ளிருக்கும் ப்ரத்யேகாத்மஞானமானது எவனுக்கு இவ்விடத்திலுண்டாகிறதோ அவனுக்கு எனது ஞானசொரூபமானது தநுவாகிறது. அதனால் அவனது பிராணன் நாசமடைகிறதில்லை. எவன் பிரஹ்மத்தை

பிரமமாக அறிகின்றானோ அவன் பிரஹ்மமாயிருந்தே பிரஹ்மத்தை யடைகிறான். கண்டாபரணமானது கண்டத்தி லிருப்பது போலும் பிரஹ்மமானது தன்னிடத்திலேயே யிருக்கிறது. அந்தப் பிரஹ்மத்தை அஞ்ஞானத்தினால் உணராதிருக்கின்றான். அஞ்ஞானமானது ஞானத்தினால் நாசமானபோது தன்னிடத்திலிருந்த பிரஹ்மத்தையே தான் யடையப்பெறுகிறான் இவ்வுண்மை இவ்வாறிருக்க அறியப்பட்டதும் படாததும் என்னும் இரண்டிற்கும் வேறாகவிருக்கிறது எதுவோ அதுவே என்னுடைய சம்வித் சொரூபம். இந்த சொரூபத்தை ஒருவன் எப்படி யடைவானெனின், தர்ப்பணாதி கருமாக்களால் எப்படி பிதுர்க்கள் திருப்தியடைகின்றார்களோ அப்படி என்னை உத்தேசித்துச் செய்வதாகியகர்மாக்களால் நான் திருப்தியடைகிறேன். அந்தத் திருப்தியினால் அவனுக்கு ஆத்மஞானப் பிரகாசம் வெளிப்படுகின்றது. அப்போது கண்ணாடியில் தன்னுடைய பிம்பம்காணப்பட அப்பிம்பந் தானாகவே கண்டு களித்தல்போல் அவனுடைய ஞானப்பிரகாசத்தில் என்னுடைய சம்வித்சொரூபம் காணப்பட அப்போது அந்தச் சொரூபத்தைத் தானாகவே கண்டுகளிப்பன். இவ்வண்ணம் தன்னையும் தன்னிடத்தில் காணப்பட்ட என்னையும் வேறாகக் காண்டலாகிய துவித பாவனை யொழியப்பெற்றவன் என்னுடைய உலகத்தை யடைகிறான். இந்தஞானசித்தியை யடைய வைராக்கியத்தோடுமுயற்சி செய்பவன் அந்த ஞானத்தை யடையப்பெறாது மரணமடையப் பெறுவானாயின் அவன் பிரமலோகத்தையடைந்து அந்தப் பிரம கல்பபரியந்தம் அங்கு வசித்துப்பின்னர் சுசியும் செல்வமுமுடையவனது கிருகத்தில் பிறப்பான். பிறந்தபின்னர் ஞானசாதனங்களைச் செய்து அச்சாதனத்தால் மேற்கூறிய ஞானத்தையடைவான்.

ஆகையால் ஒருவனுக்கு இந்தஞானம் ஒருசன்மத்திலுண்டாகத் தக்கதல்ல. அநேகசென்மத்தினு லுண்டாகத்தக்கது, இவ்வருமையுணர்ந்து சர்வப்பிரயத்தனத்தாலும் ஞானார்த்தத்தின்பொருட்டு எத்தனஞ் செய்யவேண்டியது. அப்படிச்செய்யாமற்போவானாயின் அவனுக்குமகத்தானநாசமுண்டாகும். ஏனெனின், இச்சன்மம் மறுபடிகிடைப்பது அரிது. கிடைத்தபோதிலும் முதன்மையாகிய பிராஹ்மணசன்மங்கிடைப்பது அரிது. அது கிடைத்தாலும்சமாதி

சம்பத்தும் யோகசித்தியும் உண்டாதலரிது. அதுபோலவே உத்தம மாகிய ஆசிரியர் கிடைத்தலரிது. அதுபோலவே வன்மையான இந்திரியாதிகளும் சரீரத்துக்குச் சம்ஸ்காரவிசேடமும் வாய்க்கப்பெறுத லரிது. அநேக ஜன்ம புண்ணியத்தினால் மோக்ஷாபேக்ஷையுண்டாகும். இவையெல்லாம் உண்டாயிருந்தும் ஞானார்த்தமான பிரயத்தனத்தைச் செய்யாதிருப்பானாகில் அவனுடைய சன்மம் வியர்த்தம். ஆகையால் ஓ ராஜனே! ஞானத்தின்பொருட்டு கூடியபிரயத்தனத்தோடு எத்தனஞ் செய்யவேண்டியது. அப்படிச் செய்வானாயின் அடிக்கடி அஸ்வமேதஞ்செய்த பலனை யடைகிறான். இது நிச்சயம். பாலில் நெய்யிருப்பதுபோல் ஒவ்வொருபிராணிகளிடத்தும் இந்த ஞானம் இருக்கிறது. அதனை மனமாகியமத்தினாற் கடைய வேண்டியது. கடைந்தால் ஞானமுண்டாய்க்கிருதார்த்தராகின்றனர் என்று வேதாந்தங் கோஷிக்கின்றது. இவ்வாறான ஞானத்தையும் இந்தமுடிவான ஞானத்தையுடைய பரமபக்தியும் உடையவனது செய்கைகள் எதுஎதுவோ அவைகளைக்கருமயோகமென்றுசொல்லப்படும் அவையாவன,—என்னை எப்பொழுதும் நமஸ்கரித்தல், பூஜித்தல், சண்டாளன்வரையில் பேதபுத்தியை விட்டு குரோதபுத்திநீங்கி யிருத்தல், எனது ஸ்தான தெரிசனத்திலும் எனது பக்தர்களுடைய தெரிசனத்திலும் சாஸ்திரங்களைக்கேட்பதிலும் மந்திரங்களிலும் சிரத்தையுண்டாதல், என்னிடம் அதிகமான பிரியம் வைத்துச் சரீரம் புளகாங்கிதங்கொண்டு கண்ணீர் அரும்பி கண்டம் விம்மி ஜகத்துக்குக்காரணியாயும் சர்வகாரண காரணியாயும் இருக்கின்ற என்னை அநந்யபாவத்தால் பூஜித்து என்னுடைய நித்தியமாயிருக்கின்ற நித்தியநைமித்திக முதலானவற்றைத் தனலோபமின்றி நித்தியம் பக்தியோடு செய்தல், என்னுடைய வுற்சவத்தைச் செய்தல் உற்சவத்தைத் தெரிசித்தல், எனது நாமங்களைப் பெருங்கூச்சலிட்டுச் சொல்லுதல், நிருத்தனஞ் செய்தல், ஆகிய இவைகளே கருமயோகமெனப்படும். பக்தி ஞானமுடையவன் அகங்காராதிகளோடு தேகாபிமானத்தை விட்டுப் பிராரத்தத்தால் எது எப்படி செய்யப்படுகிறதோ எது எப்படியாகிறதோ அவைகளிலும் தேகசம்ரக்ஷணையிலும் சிந்தனையற்று வாழ்வன். எனக்கு அன்னியமாய்ச்சிறிதும் பாவிக்கமாட்டான். ஓ பர்வதராஜனே! இது வரையில்

உனக்குப் பக்தியோகம் இதுவென்றும் ஞானயோகம் இதுவென்றும் கர்மயோகம்இதுவென்றும் சங்கிரகமாகச்சொன்னேன். இனி என்னகேட்க இச்சிக்கின்றனை என்று வினவினள். (சு-ம். ௪௫)

முப்பத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௩எ-க்குச் சுலோகம் (உகககக.)



உ

ஹரிணேகூஷ்ணையைநம:

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்.

## * தேவீவிரதோற்சவாதி.



பர்வதராசன் கூறுகின்றான்,-ஓதேவி! தேவரீருக்குப் பிரீதியுள்ளதாயும் பரிசுத்தமாயும் முக்கியமாயுமிருக்கின்ற ஸ்தானங்கள் உலகில் எத்தனை பார்க்கத்தக்கவை? அதுபோலும் உனக்கு சந்தோஷத்தை விளைவிக்கத்தக்க விரதங்கள் எத்தனை? அவையெல்லாம்எனக்குக் கூறுவாயாக. இவற்றை நான்கேட்கப் பெறுவேனாயின்கிருதார்த்தனாவேன் என்றான்.

தேவி கூறுகின்றாள்:-ஓ பர்வதராசனே! நான் சர்வஸ்வரூபிணியாயிருக்கின்றபடியால் பார்க்கப்பட்ட ஸ்தானங்களெல்லாம் என்னுடைய ஸ்தானங்களேயாம். எல்லாக்காலங்களும் என்னுடைய உற்சவ காலங்களேயாம். அவ்வா றிருந்தபோதிலும் பக்தர்களிடத்தில் எனக்குள்ள பிரீதியினால் சிலகூறுகின்றேன். நீ சாவதானமாய்க் கேட்பாயாக.

ஸ்தானங்கள் எவையெனின் இலக்ஷ்மிதேவிக்குவாசஸ்தானமாயுள்ள மஹாஸ்தானமாகிய கோலாபுரம், ரேணுகாதேவிக்கு வாசஸ்தானமாகிய மாத்ருபுரம், துர்க்காதேவிக்கு சர்வோத்தமமான வாசஸ்தானங்களாயுள்ள துளஜாபுரம், சப்தஸ்ருங்கம், இங்குலை, ஜ்வாலாமுகி, சாகம்பரி, பிராமரி, ஸ்ரீரக்ததந்திரிகா, அன்னபூரணிக்

---

* தேவியினது விரதம் உற்சவம் முதலியவை.

கு வாஸஸ்தானமாயும் தனக்குமேல் உத்தமமில்லாததுமாயுள்ள காஞ்சிபுரம். அக்காஞ்சியில் பராசத்தியினால் பிரதிஷ்டிக்கப்பட்ட வகாம்பரஸ்தானம், யோகேஸ்வரியினால் பிரதிஷ்டிக்கப்பட்ட மஹாலசம் (மஹாபிரகாசத்தை யுடைய) தேஜோஸ்தானம். விந்தியாசலநிவாசினியினது சர்வோத்தமமாகிய ஸ்தானம், பீமாதேவி ஸ்தானம், விமலாதேவி ஸ்தானம், ஸ்ரீ சந்திரகலா மகாஸ்தானம், கௌசிகி ஸ்தானம், நீலபர்வத சிகரத்திலிருக்கும் நீலாம்பிகை ஸ்தானம் ஜாம்புநதேஸ்வரி ஸ்தானம், ஸ்ரீ நகரம், நேபாளத்தில் பிரதிஷ்டிதமாயுள்ள குஹ்யகாளீஸ்தானம், தகராகாசமாகிய சிதம்பரஸ்தானம், வேதாரண்யம், சீனாவில் பிரசித்திபெற்ற நீலசரஸ்வதி ஸ்தானம், வைத்தியநாதத்தில் சர்வோத்தமமாகியவகலாஸ்தானம், புவனேஸ்வரி ஸ்தானமாகிய மணித்வீபம், திரிபுரபைரவிஸ்தானமாகிய யோனிமண்டல ரூபமாயிருக்கின்ற காமாக்யம், அது பூவுலகில் க்ஷேத்திர ரத்னமாயும் மஹாமாயாஸ்தானமாயும் மாதந்தோறும் ரஜஸ்வலையாகின்ற ஸ்தானமாயு முள்ளது. இந்தஸ்தானம்போலும் சிறந்தஸ்தானம் பூவுலகில் எங்குமில்லை. அங்கு சகல தேவதைகளும் பர்வதரூபமாய் வசிக்கின்றார்கள். அறிவுடையார் அவ்வெல்லை முற்றும் தேவிஸ்வரூபமென்றும் இதனைக்காட்டிலும் உத்தமஸ்தானம் வேறில்லை என்றுங் கூறுவர். காயத்திரிஸ்தானமாகிய புஷ்கரம், சண்டிகா ஸ்தானமாகிய அமரேசம், புஷ்கரேக்ஷணி ஸ்தானமாகிய பிரபாசம், லிங்கதாரணி ஸ்தானமாகிய நைமிசம், புஷ்கராக்ஷி ஸ்தானமாகியபுருஹூதை, ரதிஸ்தானமாகிய ஆஷாடம், சண்டமுண்டிகளுடையஸ்தானம், பரமேஸ்வரியாகிய தண்டிணி ஸ்தானம், பராபூதிஸ்தானம், பூதிஸ்தானம், நகுலேஸ்வரி ஸ்தானமாகிய நகுலம், சந்திரிகாதேவி ஸ்தானமாகிய அரிச்சந்திரம், சங்கரிஸ்தானமாகிய ஸ்ரீபர்வதம், திரிசூலி ஸ்தானமாகிய ஜப்யேஸ்வரம், சூக்ஷ்மாதேவி ஸ்தானமாகிய ஆம்ராதகேஸ்வரம், சங்கரி ஸ்தானமாகிய மகா காளேஸ்வரம், சர்வாணிஸ்தானமாகிய மத்திம ஸ்தானம், மார்க்கதாயினிஸ்தானமாகிய கேதாரக்ஷேத்திரம், பைரவி ஸ்தானமாகிய பைரவம், மங்களஸ்தானமாகிய கயை, ஸ்தாணுப்பிரியைக்கு ஸ்தானமாகிய குருக்ஷேத்திரம், ஸ்வாயம்புவி ஸ்தானமாகிய நகுலம், உக்ராதேவி ஸ்தானமாகிய கனகலம், விஸ்வேஸ்வரி ஸ்தானமா

கிய விமலேஸ்வரம், மஹானந்தா ஸ்தானமாகிய மஹாந்தகை, பீமேஸ்வரி ஸ்தானமாகிய பீமக்ஷேத்திரம், சங்கரி ஸ்தானமாகிய பவானி, ருத்ராணி ஸ்தானமாகியஅர்த்தகோடி, விசாலாக்ஷிஸ்தானமாகிய அவிமுக்தமென்னும் காசி, மஹாபாகா ஸ்தானமாகியமஹாலயம், பத்திரகாளீ ஸ்தானமாகிய கோகர்ணம், பத்ரீஸ்தானமாகியபத்ரகர்ணிகை, உத்பலாக்ஷி ஸ்தானமாகிய சுவர்ணாக்ஷி, ஸ்தாண்வீஸ்தானமாகிய ஸ்தாணுக்ஷேத்திரம்,கமலா ஸ்தானமாகிய திருவாரூரென்னுங் கமலாலயம், பிரசண்டை ஸ்தானமாகிய சகலண்டகக்ஷேத்திரம், திரிசந்தியா தேவிகளின் ஸ்தானமாகிய குருண்டலக்ஷேத்திரம், மகுடேஸ்வரி ஸ்தானமாகிய மாகோடம், சண்டகி ஸ்தானமாகிய மண்டலேசம், காளிகா ஸ்தானமாகிய காலஞ்சரம், த்வனீஸ்வரி ஸ்தானமாகிய சங்குகன்னம், ஸ்தூலகேஸ்வரி ஸ்தானமாகிய ஸ்தூல கேஸ்வரம், ஹ்ருலேகா மந்திர ஸ்தானமாகிய ஞானிகளுடைய இதயகமலம்.

பர்வதராசனே! இதுவரையில் எனக்குப்பிரியகரமான ஸ்தானங்கள்சொல்லப்பட்டன. என்னுடைய பூஜையை விரும்பினவன் முன்னர் அந்தந்தக்ஷேத்திர மகிமைகளைக் கேட்டுப் பின்னர் எல்லா க்ஷேத்திரங்களிலுஞ் சென்று அந்தந்தத் தேவியைப் பூஜிக்கவேண்டும். அந்தந்த மகிமைகளைக் கேட்டுப் பூஜிக்க முடியாவிட்டால் எல்லாக்ஷேத்திரங்களுங் காசியிலிருக்கின்ற படியால் அங்குசென்று பக்திபரனாய் அங்குவசித்து அந்தந்த ஸ்தானங்களைத் தினந்தோறுத் தெரிசித்து எனதுமந்திரத்தை ஜபிக்கவேண்டும். இவ்வண்ணமாகத் தேவியைத் தியானித்தால் பந்தத்தினின்றும்விடுபட்டு முக்தனாகின்றான். விடியற்காலத்தில் இந்தத் தேவிநாமங்களைப் படித்தால் அந்தக்ஷணமே சகலமானபாவங்களும் நசித்துவிடும். சிரார்த்தகாலத்தில் பிராஹ்மணர் முன்னிலையில் இந்தநிர்மலமான நாமங்களைப் படித்தால் பிதுர்க்கள் முக்தர்களாய் சிரேஷ்டமான பதத்தையடைகின்றார்கள்.

இனி விரதங்களைக் கூறுகின்றேன். அவற்றைப் புருஷர்களும், ஸ்திரீகளும் கேட்டுப் பிரயத்தனத்தோடு அனுஷ்டிக்கவேண்டும். அவ்விரதங்களாவன- அநந்ததிரிதியைவிரதம், ரசகலியாணிவிரதம் ஆனந்தத்தை விளைவிக்கின்ற ஆருத்திராவிரதம், மங்களவாரவிர

தர், சுக்கிரவாரவிரதம், கிருஷ்ணபக்ஷசதுர்த்தசிவிரதம், பிரதோஷ விரதம், புரட்டாசி மாதத்திலும் சித்திரைமாதத்திலும் வருகிற நவராத்திரிவிரதம். இவைபோலவே சோமவாரவிரதமும் எனக்குப் பிரீதியானது.

இனி-ரசகலியாணி விரதமாவது-அநந்ததிரிதையையோடு கூடியதினம். ஆருத்தரா விரதமாவது-ஆருத்திராநக்ஷத்திரத்தோடு திரிதியைகூடியதினம், பிரதோஷவிரதமாவது- மஹாதேவனாகிய தேவன் தேவியை அந்திப்பொழுதில் உன்னதமான ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து சகலதேவர்களுந் தம்மைச்சூழ்ந்திருப்ப அவ்வம்பிகை எதிரில் நடனஞ் செய்வன். அவ்வந்திப்பொழுதே பிரதோஷகால மெனப்படும். அக்காலத்தில் ஆகாராதிகளை விட்டிருந்து மஹாதேவியைப் பூஜிக்கவேண்டும். தேவிக்குப் பிரீதியாகிய இவ்விரதத்தைப் பக்ஷங்கடோறும் விசேடமாகச் செய்யவேண்டும். சோமவாரத்திலும் பிரதோஷத்திலும் இரவில் போஜனஞ் செய்யவேண்டும். இங்ஙனஞ் சொல்லிவந்தனவேயன்றி ஏனைய விரதகாலங்களும் நித்திய நைமித்திகமாகச் சொல்லப்பட்டகாலங்களும் எனது விரதகாலங்களேயாகும். எனக்குப் பிரீதிகரமான இவ்விரதங்களை மத்சரகுணமற்று அனுஷ்டிக்கவேண்டும். அப்படி விரதங்களை எவன்அனுஷ்டிக்கின்றானோ அவன் என்னுடைய சாயுஜ்யத்தை யடைகிறான். அவன்தான் எனக்குப் பிரியனும் பக்தனுமாயுள்ளவன். இனி எனக்குப் பிரியமான உற்சவங்களைச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

டோலோற்சவம், சயனோ (பள்ளியறையு) ற்சவம், ஜாகரணோற்சவம் (திருப்பள்ளியெழுச்சி) ரதோற்சவம், வசந்தோற்சவம், சிராவணமாசத்தில் செய்யும் பவித்ரோற்சவம், இதுபோலும் எனது பக்தர்களால் செய்யப்பட்ட ஏனைய உற்சவங்களும் எனக்குப் பிரீதிகரமேயாம். இதுபோலவே எனது பக்தர்கட்கும் சுமங்கலிகட்கும் குமாரிகட்கும் சிறுபிள்ளைகட்கும் போஜனஞ் செய்விப்பதும், என்னிடம் புத்திவைப்பதும் எனது கதையைக் கேட்பதும் எனக்குப் பிரியமாகும். இவ் விரதங்களுக்காகவும் உத்ஸவங்களுக்காகவும் திரவியம் செலவாவதைப்பற்றிக் கவலைகொள்ளாமல் சங்

தோஷ சித்தத்தோடும் சோம்பலில்லாமல் பக்தியுடன் பிரதியுருஷ முறும் எவன் செய்கின்றானோ அவனே தன்யன், கிருதகிருத்யன். என்னுடைய பிரீதிக்குப் பாத்திரமானவன், அவனே சர்வபந்தங்களினின்றும் விடுபட்டவன். இவைகளைச் சிஷ்யத் தன்மையை யடையாதவனுக்கும் பக்தியில்லாதவனுக்கும் அநுஷ்டிக்கும்படிச் சொல்லக்கூடாது. (சு-ம்-சகூ)

முப்பத்தேட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௩அ-க்குச் சுலோகம் (உககூ0)

---

உ

ஹரப்பிரியாயைநம:

முப்பத்தோன்பதாம் அத்தியாயம்.

## தேவீபூஜாவிதி.

பர்வதராஜன் தேவியை நோக்கி தேவதேவீ! மஹேசாநீ! கருணாசாகரே! ஹே அம்பிகே! உனது பூஜாவிதியைக் கூறவேண்டுமென்றுகேட்க, தேவி கூறுகின்றாள்.-ஓ அரசனே! அம்பிகையாகியஎனக்குப்பிரியமான பூஜாவிதியைக்கூறுகின்றேன். அதனை நீ அதிகசிரத்தையோடுங் கேட்பாயாக. அப்பூஜை புறப்பூஜை உட்பூஜை என இருவகைப்படும். அவற்றுள் புறப்பூஜை வைதிகம் தாந்திரிகம் என இருவகைப்படும். அவ் வைதீகபூஜை வேததீக்ஷையோடு கூடின வைதிகன் செய்யக்கடவன். தாந்திரிகபூஜை தாந்திரிகதீக்ஷையுடைய தாந்திரிகன் செய்யக்கடவன். இவ்விதம் பூஜாரகசியத்தை யறியாது விபரீதமாகச் செய்கிற மூடன் எப்போதும் பதிதனாகின்றான். முதலிற் கூறிய வைதிகம் இதுவென்றுகூறுகின்றேன்.

வேதசம்பந்தமுடையது எதுவோ அது வைதிகமெனப்படும். வேதம் யாருடைய சம்பந்தமுடையதெனின்! சர்வக்ஞையாயும் சர்வசக்தியுடையவளாயும் இருக்கிற என்னிடத்தினின்று முண்டானது. எனவே என்றுசொல்லப்பட்டது. ஆகவின் என் சம்பந்தமுடையது. என் சம்பந்த முடையதாகவே அதுதான் பிர

மாணமெனப்படும். ஏனெனில் முக்காலத்தும் அஞ்ஞானமென்பதைச் சிறிதுமறியாத ஞானசொரூபிணியாகிய என்னால் சொல்லப்பட்டதனாலென்க. ஆகவே, அது அப்பிரமாணமாகமாட்டாது. ஸ்மிருதிகள் பிரமாணமாகாதோவெனின், அவைகளும் சுருதி அர்த்தத்தையே கொண்டு வெளிவந்தனவாகலின் பிரமாணங்களேயாம். ஸ்மிருதிகளில் ஓரிடத்தில் ஓர் சமயத்தில் தந்திரப்பார்வையினால் தந்திரமெனப்படும் வாமாதி ஆகமங்களிற் கூறப்படுந் தருமங்களையும் தருமமாகச் சொல்லப்படுகிறதே அவைகளைக் கொள்ளலாமோவெனின் அந்தப்பாகத்தை வைதீகர்கள் கிரகிப்பதில்லை. ஏனெனின் அந்த சாஸ்திரங்களால் அக்கியான முண்டாகிறபடியால் அதனைக்கொள்ளார். அவ்வாகமங்களைக்கொண்டு கூறும்பிரமாணங்களும் அக்யானதோஷத்தை யடைகின்றபடியால் அந்தப்பிரமாணங்களும் அப்பிரமாணத்தையடைகின்றன. ஆகவேமுமூக்ஷுக்கள் வேதத்தையே யநுசரிக்கவேண்டும். உலகில் எப்படி அரசனுடைய ஆக்ஞையைவிடக்கூடாதோ அதுபோல்வேதாக்ஞையைவிடக்கூடாது. சர்வேசையாகிய என் ஆக்ஞையே அந்தச்சுருதி. அது மாநுடர்களால் எப்படிவிடத்தக்கது. என்னுக்ஞையைப் பரிபாலிக்கவேண்டியே பிரஹ்ம க்ஷத்திரியர்களைச்சிருட்டித்தேன். அவர்களால் இந்தச்சுருதியினது ரகசியங்களை யறியத்தக்கது. எந்தெந்த காலத்தில் தர்மத்துக்கு நாசம்வருகின்றதோ அதர்மம் எப்போ துண்டாகின்றதோ தேவாசுரர்களுடையகலகங்கள்எப்போதுண்டாகின்றனவோ நான் அந்தந்தக்காலங்களில் ஆவிர்ப்பவிக்கின்றேன். தர்மத்தை எவர் செய்யாதிருக்கின்றார்களோ அவர்களின் சிக்ஷைநிமித்தம் கேட்டமாத்திரத்தில் பயமுண்டாகும்படியான நரகத்தை யுண்டுசெய்திருக்கின்றேன். எவன் வேதோக்தமான தர்மத்தைவிட்டு வேதநிந்திதமான தர்மத்தை ஆச்ரயிக்கின்றானோ அந்த அதமர்களை அரசன் சுதேசத்தினின்றுத் துறத்திவிடவேண்டும். பிரமக்கியானிகள் அவர்களிடம் பேசமாட்டார்கள். பிராமணர்கள் அவர்களைத் தங்களுடைய பந்திகளில் சேர்த்துக்கொள்ளமாட்டார்கள். சுருதிஸ்மிருதிக்கு விரோதமாக சாஸ்திரங்கள் அநேகமிருக்கின்றன; அவையனைத்தும் சர்வப் பிரயத்தனத்தாலும் தாமசசாஸ்திரமென்று விடக்கடவது. வேதநிந்திதர்களாகிய வேதபாஹ்யர்கள் மோகிக்கும் பொருட்டு வாமம் காபாலிகம் கௌலம் பைரவ முதலிய

இந்த ஆகமசாஸ்திரங்கள் ஈஸ்வரனு லுண்டாக்கப்பட்டன. இது வன்றி அவ்வாகமங்கள் உண்டாவதற்குவேறுகாரணங் கிடையாது. தக்ஷன்காரணமாக ததீசி பிருகு முதலியமுனிவர் சாபத்தால் எந்தப்பிராமணர்கள் வேதமார்க்கத்திற்குப் புறம்பானவர்களாயி ருக்கின்றார்களோ அவர்களைக் கரையேற்ற சைவம் வைஷ்ணவம் சாக்தம் சௌரம் காணுபத்யம் என்கிற ஆகமங்கள் சோபானக்கிர மமாக உண்டாக்கப்பட்டன.

அந்த ஆகமங்களில் சிற்சிலபாகங்களில் வேதவிரோதமில்லாத தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கிறன. வைதிகர் அதைக் கிரகிப்பதில் தோஷங்கிடையாது. பிராமணன் வேதவிருத்தமான அர்த்தத்தில் அதிகாரியாகான். வேதாதிகாரயீனன்அந்தசாஸ்திரத்தில் அதிகா ரமுள்ளவனுகின்றான்.ஆகையினல் சகலமானபிரயத்னத்தினுலும் வைதிகன் வேதத்தையே ஆச்ரயிக்கவேண்டும். தர்மத்தோடுகூடிய ஞானமானது பரப்பிரமத்தைப் பிரகாசப்படுத்தும். ஈஷணுத்திர யத்தைவிட்டு என்னையே சரணடைந்து சர்வப்பிராணிகளிடத்தும் தயையுடையவர்களாயும் மானம்அகங்காரமில்லாதவர்களாயும் என் னிடத்தே மனதையும்பிராணனையும்வைத்தவர்களாயும் என் ஸ்தான த்திலேயே ஆசக்தி யுள்ளவர்களாயும் சந்நியாசிகளாவது வானப்பி ரஸ்தர்களாவதுகிருகஸ்தர்களாவது பிரமசாரிகளாவது சர்வேஸ்வரி என்று பெயருள்ளஎன்னைப்பக்தியோடு உபாசிப்பார்களாயின்அப் படிப்பட்டவர்களுடைய அஞ்ஞானமாகிய இருளை ஞானமாகிய சூரியப்பிரகாசத்தினல் நாசஞ் செய்கிறேன். இதிற் சம்சயமில்லை. ஓபர்வதராஜனே! இதுவரையில் சொல்லிவந்தவைகளான் புறப் பூஜை வைதீகம் தந்திரிகம் என இருவகைப்படுமென்பதனை விளக் கியதாகும். இனி வைதிகபூஜையும் மூர்த்திபேதத்தால் இரண்டு வகைப்படும் என்பதனைக்கூறுகின்றேன் சர்வத்தையும் பிரேரேபிக் கின்ற பராத்பரையாகிய யான் முன்னேமகத்தாகவும் சர்வசக்தி யுடையதாகவும் அனந்தந் தலை கண் கால்முதலிய அவயவங்களா கவுங் காட்டிய விராட்சொரூபமாகிய விஸ்வரூபத்தை நீங்கள்கா ணும்படி முன்னேகாட்டினேனன்றோ அந்தஸ்வரூபத்தைத்தியான பூர்வகமாகப் பூஜித்தலொன்று.

தாம்பிராதிகளி லமைந்துள்ள ஓர்பிம்பத்திலாவது தண்டி லத்திலாவது சூர்யமண்டலத்திலாவது சந்திரமண்டலத்திலாவது

ஜலத்திலாவது பாண லிங்கத்திலாவது யந்திரத்திலாவது பெரிய படத்திலாவது தன் இருதயத்திலாவது ஆவாகித்து பராத்பரையாகிய என்னை நல்லகுணமுள்ளவளாயும் கருணையினால் நிறைந்தவளாயும் தருணியாயும் மிகச்சிவந்த நிறமுடையவளாயும் சௌந்தர்ய சாரத்திற்குக் கடைசிஎல்லையானவளாயும் சகலசுந்தரமான அவயவங்களுடையவளாயும் சிருங்கார ரசத்தினால் நிறைந்தவளாயும் எப்போதும் பக்தர்களுடைய துக்கத்தில் பயந்தவளாயும் அநுக்கிரகத்தில் நல்லமுகமுடையவளாயும் சந்திரகண்டத்தைத் தரித்தவளாயும்பாசாங்குச வரதாபயங்களைத் தரித்தவளாயும் ஆனந்தரூபிணியாயுந் தியானித்து தன்சக்திக் கேற்றவாறுசோடசோபசாரத்தோடு பூஜித்தலொன்று.

இவ்வகையான பூஜையைத் தினமும் பூஜிக்கவும் தியானிக்கவும் ஸ்மரிக்கவும் வேண்டியதென்று பிரதமாசாரியர்கள் கூறியிருக்கின்றனர். ஓ அரசனே! சாந்தம் ஸ்திரபுத்தி டம்பமின்மை அகங்காரமின்மை முதலியநற்குணங்களை யடைந்து எனதுபூஜாபரனாவாய். என்னையே சரணமாகப்பெறுவாய். ஞானநோக்கைக்கொண்டு என்னையே நோக்குவாய். என்னையே ஜபிப்பாய். மனத்தினாலுந் தியானிப்பாய். வேறிடத்தில் பக்திசெலுத்தாமல் என்னையே ஆச்ரயித்துப் பூஜிப்பாய். தபசு தியானம் இவைகளினால் என்னையே சந்தோஷிப்பிப்பாய். இவ்வாறு செய்வையாயின் என் அனுக்கிரகத்தால்சம்சார பந்தத்தினின்றும் விடுபடுவாய். எவனொருவன் என்னிடம் முக்கியமாகச் சித்தம்வைத்தவனாயும் பக்தசிரேஷ்டனாயும் இருக்கின்றானோ அவனே எனக்குச் சம்மதன். அவனை இந்தச் சம்சாரத்தினின்றும் கரை யேற்றுகிறேனென்று பிரதிக்ஞைசெய்கிறேன். தியானத்தினாலாவது கர்மத்தோடுகூடிய பக்திக்யானத்தினாலாவது நான் எப்போதும் அடிக்கடி அடையத்தக்கவள். பக்திக்கியானமில்லாத கர்மத்தினால் நான் அடையத் தக்கவளல்லள். தர்மத்தினால் பக்தியும் பக்தியினால் கியானமு முண்டாகின்றது. தர்மமாவது முன் சொல்லிவந்த பிரமாணங்களாகிய சுருதி ஸ்மிருதிகளால் சொல்லப்பட்டவைஎவையோ அவைதான் தருமம். அன்னியசாஸ்திரங்களால் சொல்லப்பட்டவை தர்மாபாசங்களாம்.

அந்தர்யாகபூஜையில் எவ்வளவுகாலம் அதிகாரமில்லையோ அதுவரையில் முற்கூறிவந்த முறைப்படி பூஜைசெய்யவேண்டியது. அந்தர்யாகபூஜைக்கு அதிகாரம் வரப்பெற்று அது கைகூடுமானால் ஞா

னத்தில் லயமுண்டாகும். அது வுண்டாகும்போது புறம்பேதோ ன்றியிருந்த எனது உருவம் தோன்றுதொழியும். அதுவொழியவே அதுபற்றிய புறப்பூஜையும் நிகழ்வதற்கிடனின்றிப் போம். அங் ஙனம்போகவே ஞானலயத்திற்றோன்றும் உபாதியற்ற எனது சம் வித்சொரூப தெரிசனமுண்டாகும். அஃதுண்டாகுங்கால் அழிந்து போவதான மாயாமயமான உலகத்தோற்றமும் அதுபற்றி நிகழ வரும் ஆசையும் அற்று சம்வித்சொரூபா காரமாகவே நிலைபெற் றிருக்கவரும். ஆகலான் ஓபர்வதராஜனே! நாடோறும் விடியற்கா லத்தில் சம்சாரதுக்க நாசத்தின்பொருட்டு சர்வசாக்ஷிணியாயும் ஆத்மரூபிணியாயு மிருக்கிற என்னை யோகயுக்தமான புத்தியினாலே பாவித்துவருவாயாக. இனி பாஹ்யபூஜையை விஸ்தாரமாகச் சொல் லுகிறேன் சாவதானமாகக் கேட்பாயாக. (சு - ம் சஎ.)

முப்பத்தோன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ஈகூ-குச் சுலோகம் (உஉ0ரு.)

---

உ

ஹராராத்யாயைநமஃ

நாற்பதாம் அத்தியாயம்.

## தேவீபாஹ்யபூஜை.

தேவிகூறுகின்றாள்:—புத்திமானானவன் நாடோறும்பிராதக்கா லத்தி லெழுந்துசுத்தமான விடத்திலிருந்து சிரசின்மத்தியில் மலர் ந்திருக்குந்தாமரையொன்றிருப்பதாகப்பாவித்து அதில்நிஜரூபமான குருவைக் கர்ப்பூரகாந்தியைப்போலும் பிரசந்நராயும் பிரகாசிக் கின்ற பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவராயும் சக்தியோடுகூடி னவராயும் தியானித்துப் பிறகு குண்டலிசக்தியைப் போற்றிப் பின்னர் அவ்விடத்தைவிட்டு எழுந்திருந்து வெளியேபோகுஞ் சம யத்தில் சச்சிதானந்த ஸ்வரூபிணியாகிய என்னைச் சிகையின் மத்தியில் பிரகாச ரூபமாகவும், திரும்பிவரும்போது அமிர்தம் போன்று இருப்பவளாகவும், மார்க்கமத்தியில் தன்னை அநுசரி த்திருக்கின்ற ஆனந்தரூபிணியாகவும் தியானித்து நமஸ்கரிக்கி றேன் என்று எண்ணி நமஸ்கரித்துப் புறப்பட்டுப் போகவேண்டும்.

பின்னர் சௌசாதி ஜபாந்தமான சகலகாரியங்களையு முடித்துக் கொண்டு எனக்குப்பிரீதிகரமாக அக்னிஹோத்திரஞ்செய்து அதன் முடிவில் தன்னுசனத்தில் ஸ்திரமாக வுட்கார்ந்து முறையே பூஜைக்குச் சங்கற்பஞ்செய்துகொண்டு அதன்பின்னர் பூதசுத்தியும் மாத்ருகாநியாசமும் ஹ்ருல்லேகா மாத்ருகாநியாசமும் செய்யவேண்டியது. எவ்வாறெனில் மூலாதாரத்தில் ஹகாரத்தையும் ஹ்ருதயத்தில் ரகாரத்தையும் புருவநடுவில் ஈகாரத்தையும்சிரசில் ஹ்ரீங்காரத்தையும் நியாசஞ்செய்யவேண்டும். இதுபோலவே ஏனைய மந்திரங்களுக்குரிய நியாசங்களெவையோ அந்த நியாசங்களையெல்லாஞ் செய்யவேண்டியது, அதன்பின்னர் தர்மஜ்ஞான முதலிய நான்கு மந்திரங்களால் ஓர்பீடத்தைக் கற்பித்துக்கொண்டு தன்மனதில் நினைக்கின்ற இஷ்டகாம்ய சித்தியின்பொருட்டுத் தன்னுள்ளத்தில் மஹாதேவியைத் தியானித்துப் பிராணுயாமஞ்செய்து அதன்பின்னர் என்னுடைய ஸ்தானமென்று சொல்லப்பட்ட ஹ்ருதயகமலத்தில் பிரமவிஷ்ணுவாதி பஞ்சகர்த்தாக்களைப் பஞ்சப்ரேதாசனமாக எனது பாதமூலத்தி லிருப்பதாகப் பாவித்தல்வேண்டும். அரசனே! இவர்கள் பஞ்சபூதங்களுக்கும் பஞ்சாவஸ்தைகளுக்கும் கர்த்தாக்களாக விருக்கின்றபொழுது இவர்களைப் பிரேதஸ்வரூபமாக ஏன் நினைத்தல்வேண்டுமெனின் இவர்கள் வியக்த சித்ரூபர்களாயிருத்தலால் இவர்களை அவ்வியக்த சித்ரூபிணியாகிய நான் இடமாகக் கொண்டே சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களைச் செய்யுங் கருத்தைநோக்கி சாக்தேயதந்திரத்தில் இவர்களைப் பிரேதங்களென்றும் எனக்கு ஆசனமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றதென் றறிவாய். இவ்வகையான பஞ்சபிரேதாசனு ரூடையாக மனேபீஷ்ட சித்தியின்பொருட்டுப் பூஜித்தும் ஜபித்தும் பின்னர் தேவிப் பிரீதி என்று அந்தஜபத்தை அர்ப்பணஞ்செய்து அர்க்கியங்கொடுத்தும் முடிந்தபின்னர் புறப்பூஜைக்குச் சாதனமாக அமைந்துள்ள பூஜா திரவியங்களையும் பூஜாபாத்திரங்களையும் முதலில் சலத்தைக்கொண்டு மந்திரத்தினல் சுத்தியும்திக்பந்தனமும் செய்துஅதன்பின்னர் ஆசாரியனை நமஸ்கரித்துப் புறப்பூஜைசெய்வதற்கு அநுக்ஞைபெற்று வெளியேயுள்ள பீடத்தில் பிம்பமூர்த்தியை யெழுந்தருளச் செய்து அம்மூர்த்தியிடத்தில் ஹ்ருதயத்தில் திவ்யமாயும் மனேகரமாயும் பாவித்துள்ள தியானமூர்த்தியை பிராண ஸ்தாபநமந்திரத்தினல் ஆவாகனுதிகள்செய்து பின்னர் அர்க்கிய பாத்ய ஆசமன ஸ்நானுதிகளும் வஸ்திரத்வய பூஷண கந்தபுஷ்பாதிகளும் ஆகிய இவைகளைப் பக்தியுடன் கிரமமாகக்கொடுத்தும் சமர்ப்பித்தும் யந்திரபீடத்திலுள்ள ஆவரண தேவதைகளைப் பூஜிக்கவேண்டியது. இவ்வாறு பிரதிதினமும் செய்தல்விசேஷம். அசக்தனுகவி

ருந்தால் சுக்ரவாரத்தில் மேற்சொன்ன நியமப்படிச் செய்யவேண்டும். அங்கதேவதைகளை மூலதேவியினுடைய பிரபாரூபமாகத் தியானிக்கவேண்டும். அந்தத்தேவியினது காந்திசமூகத்தால் இந்த மூன்றுலோகமும் வியாபிக்கப்பட்டதாகப் பாவிக்கவேண்டும், பின்னர் ஆவரண தேவதைகளையும் மூலதேவதையையும் நல்லவாசனையுள்ள புஷ்பங்களாலும் சந்தனமுதலானவைகளாலும் நைவேத்யங்களாலும் கண்ணாடி முதலியவற்றாலும் தக்ஷிணைசகிதமான தாம்பூலங்களாலும் சகஸ்ரநாமங்களாலும் பூஜித்து என்னை சந்தோஷிப்பிக்கவேண்டியது. அன்றியும் எனது கவசத்தாலும் சூக்தத்தாலும் ருத்திரத்தாலும் அதர்வணசிரசின் மந்திரங்களாலும் ஹ்ருல்லேக வுபநிடத மந்திரங்களாலும் மகாவித்யாஸ்வரூபிணியாகிய என்னை அடிக்கடி சந்தோஷிப்பிக்கவேண்டும். அன்றியும் ஜகத்தாத்ரியாகிய என்னிடம் பிரேமையுடையமநிதன் உபசாரங்களெல்லாஞ் செய்துமுடிந்தபின்னர் அபராதக்ஷமை கேட்டுக்கொண்டும் புளகாங்கிதனும் கண்களினின்றும் பெருகுகின்ற ஆனந்த பாஷ்ப முடையவனும் தழுதழுத்த நாவினை யுடையவனும் இருந்து நிருத்த கீத வாத்யங்களால் என்னைச் சந்தோஷிப்பிக்கவேண்டும். இவையேயன்றி வேதங்களும் சைவபுராணாதிகளும் என்னைப் பிரதிபாதிக்கின்றமையால் அவைகளையும் பாராயணஞ்செய்து நான் ஆனந்திக்கும்படிச்செய்யவேண்டும். இவை முடிந்தபின் என் தேகத்தோடு எல்லாவற்றையும் உனக்குக்கொடுத்தேனென்று அர்ப்பணமும் நித்தியஹோமமுஞ்செய்வேண்டும். இவ்வண்ணம் பூஜைமுடித்து பிராமணர்கள் சுமங்கலிகள் சிறுபிள்ளைகள் பாமரர்கள் அன்னியர்கள் ஆகிய இவர்கள் எல்லோரையும் நானாகப் பாவித்து போஜனஞ் செய்வித்து என்னை ஹ்ருதயத்தில் நமஸ்கரித்துப் பிறகு உத்வாஸநஞ்செய்யவேண்டும். ஓ நல்ல விரதஞ்செய்கின்றவனே! என் பூஜைமுதலிய எல்லாவற்றையும் ஹ்ருல்லேகாமந்திரத்தினால் செய்துவருவாய். எனெனில் அம்மந்திரம் எல்லாமந்திரங்களுக்கும் நாயகமா யுள்ளதாகலானும் அம்மந்திரமாகிய கண்ணாடியில் பிரதிபிம்பம்போல் நான் பிரதிபிம்பித்துக் கொண்டிருக்கிறேனாதலாலும் அம்மந்திரத்தைக்கொண்டே எல்லா மந்திரங்களையும் சமர்ப்பிக்கவேண்டும். குருவை ஆபரணமுதலியவைகளால் சந்தோஷப்படுத்தி நான் கிருதகிருத்ய னானேனென்று எண்ணிக்கொள்ள வேண்டும். இப்படி ஸ்ரீமத் புவனசுந்தரிதேவியாகிய என்னைஎவன் பூஜிக்கின்றானோ அவனுக்கொருகாலத்தும்கிடைக்காதபொருள்கிடையாது. அந்தத்தில்என் மணித்வீபத்தைஎந்தவிதத்தாலும்அடைகிறான். இவனைத் தேவர்கள் நித்யம் நமஸ்கரிக்கின்றார்கள். ஓபர்வதராஜனே! தேவியாகிய எனதுபூஜையைச் சொன்னேன். யாவரும் பூஜாவிதியைக் கிரம

மாய்விசாரித்துத்தத்தம் அதிகாரத்துக்கேற்றபடி பூஜையைச்செய்ய வேண்டும். இப்பூஜையினால் நீ கிருதார்த்தனாகின்றாய். என்னுடைய இந்தக் கீதாசாஸ்திரத்தை சிஷ்யனாயில்லாதவனுக்கும் பக்தியில்லாதவனுக்கும் தூர்த்தனுக்கும் நல்லமனமில்லாதவனுக்கும் உபதேசிக்கலாகாது. அவர்களுக் குபதேசஞ்செய்தால் தன்மாதாவின் ஸ்தனத்தை வெளிப்படுத்தி யாவருங் காணச்செய்வதுபோலாம். ஆகையினால் மேற்சொல்லிவந்த பதிதர்கட்கு உபதேசிக்க எண்ணாமல் மறைத்துவைப்பதற்கேஎண்ணவேண்டும். பக்தனாயிருக்கிறசிஷ்யனுக்கும் ஜேஷ்டபுத்திரனுக்கும் நல்ல சுபாவமுள்ளவனுக்கும் ஆசாரமுள்ளவனுக்கும் என்னிடத்தில் பக்தியுள்ளவனுக்குமே உபதேசிக்கவேண்டும். சிரார்த்தகாலத்தில் பிராமணர்கள் சமீபத்தில் இவ்வத்தியாயத்தைப் படித்தால் பிதுர்க்கள்திருப்தர்களாய்உத்தம பதவியை யடைகின்றார்கள்.

வியாசர் கூறுகின்றார்:-இவ்வாறு தேவிகூறி அங்கேயே மறைந்தனள். சகலதேவர்களும் சந்தோஷித்தனர். இமயமலையிற்சென்ற தேவி கௌரி என்று பிரசித்தியடைந்து சங்கரருக்குத் தேவியாயினள். அவ்வம்பிகையிடத்தினின்றும் ஸ்கந்தருண்டாயினார். அவரால் தாருகன் கொல்லப்பட்டான். இதுவரையில் பார்வதிதேவியின அவதாரத்தைச் சொன்னேன். இனிலக்ஷ்மிதேவியினது உற்பத்தி எவ்வாறெனின்பூர்வம் பாற்கடலைக் கடைந்தபோது அதில் அநேக ரத்னங்களுண்டாயின. அச்சமயத்தில் லக்ஷ்மி கிடைக்கும்பொருட்டுத் தேவர்கள் மிக்க ஆதரவோடு துதித்தார்கள். அதன்பிறகு தேவி தேவர்களுக் கனுக்கிரகஞ் செய்யும் பொருட்டு லக்ஷ்மியையுண்டாக்கினாள் அந்தலக்ஷ்மிதேவியைத்தேவர்களெல்லாம் விஷ்ணுமூர்த்திக்குக்கொடுத்தார்கள். ஓ பர்வதராஜனே! இவ்வத்தியாயத்தைப் படித்தால் சகல புண்ணியகர்மங்களையுங் கொடுக்கும். இந்தரகசியமான அத்தியாயத்தை உனக்குச்சொன்னேன். இந்தக் கீதார்த்தரகசியத்தை மறவாமல் சிந்தித்துவரவேண்டியது. உன்னால் பவித்திரமாயும் பாவனமாயுமுள்ள எது கேட்கப்பட்டதோ அது என்னால் சொல்லப்பட்டது. இன்னும் எதனைக்கேட்க இச்சிக்கின்றனை என்றார் என்று சூதமுனிவர் சவுனகாதியருக்குக்கூறியருளினார். (சு-ம். ௪௪௩)

௪௦-ம் அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௪௦-க்குச்சுலோகம். ௨௨௫௨.

ஏழாவது ஸ்கந்தம் முற்றிற்று.

ஆ ஸ்கந்தம் எ-க்கு அத்தியாயம் (கக௯) சுலோகம் (௧௦௪௦௨௩)



# எட்டாவதுஸ்கந்தம்.

## அத்தியாயவிஷய அட்டவணை.

௳

ஹரிப்ரம்ஹேந்திரஸேவிதாயைநமஃ.

# தேவீபாகவதம்.

## எட்டாம்ஸ்கந்தம்.

### முதலாம் அத்யாயம்.

### மனவேமீதேவிகிருதவரதானம்.

ஸ்ரீதகம்பாவீமாநம் சிதலிதபரசிவதைர்யமஹிமாநம்
கலயேபாடலிமாநம் கஞ்சநகஞ்சுகிதபுவநபூமாநம்.

ஜனமேஜயன் வியாசபகவானை வணங்கி, ஐயா! சூரிய சந்திர வமிசங்களிற்றோன்றிய அரசர்களுடைய நன்மைவாய்ந்த சரித்திரங்களைக் கேட்பதற்கின்பமாய்த்தேவரீர்சொல்ல யான் கேட்டிருக்கின்றேனாகலின் இன்னமுங்கேட்க ஆவலுள்ளேன்; ஜகதம்பிகையான தேவி ஒவ்வொரு மன்வந்தரங்களிலும் எந்தெந்த விடங்களில் எந்தெந்த ரூபங்களினால் எந்தெந்தகருமங்களினால் பூஜிக்கப்படுகின்றாளோ அத்தேவியினது விராட்சொரூபவர்ணனை எவ்விதமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றதோ எந்தத்தியானத்தினால் அவ்வம்பிகையினது சூட்சுமசொரூப தரிசனத்தைப்பெற்று நற்கதிபெறலாமோ அவையனைத்தும் எனக்கருள்வீரானால் நான்கீர்த்தியடைவேனென்று வினவ, முனிவர் கூறுகின்றார். அரசனே! தேவியின் உத்தமமான ஆராதனையைச்சொல்கிறேன். இப்பூசை செய்வதினாலும் கேட்பதினாலும் மனிதன் மேன்மையடைவான். நீ இப்போது என்னைக் கேட்டவாறே முன் நாராயணர் தன்னைக்கேட்ட நாரதமுனிவருக்குச் சமாதானஞ் சொல்லியிருக்கின்றார். அஃதென்னெனின், ஒருகாலத்தில் நாரதமுனிவர் இப்பூவுலக முழுவதுஞ் சுற்றிவந்து நாராயணர் ஆஸ்ரமத்தையடைந்து தனது சரீரஸ்ரமம் நீங்கப்பெ

ற்று அவரை நமஸ்காரஞ்செய்து ஓ தேவதேவ! புராண புருஷோத்தம! ஜகதாதார! சர்வக்ஞ! சிலாக்ய! சத்குண! என்றுபோற்றி இந்த உலகத்திற்கு ஆதிதத்துவமாய் விளங்குவது எது? இவ்வுலகனைத்தும் எவ்விடத்திலிருந் துண்டாகின்றது? எவ்விடத்தில் நிலைத்திருக்கின்றது?பிரளயத்தில் எவ்விடத்தில் ஒடுங்குகின்றது?எவ்விடத்திலிருந்து சர்வபலமும் உண்டாகின்றது? எந்தஞானத்தை யறிந்தால் மோகத்திற்குக் காரணமான மாயை நாசமடையும்? எந்த அர்ச்சனையினுல் எந்தஜபத்தினுல் எந்தத்தியானத்தினுல் இருளில் சூரியனுதித்தாற்போல் இதயபுண்டரீகத்தில் ஞானப்பிரகாச முதிக்கும், ஓதேவ! என்னுள்ளத்தில் விரிவாய்த்தோன்றிய வாசங்கைகட்கெல்லாம் இவ்வுலகினருடைய அக்யானுந்தகாரம் விரைவில் நீங்குமாறும் நன்ருய்த்தெரியுமாறும் சமாதானம் கூறுவீரென்ருர். நாராயணர் அவருடைய வார்த்தையை மிகவும்புகழ்ந்து தேவருஷிகளுக்குள் உயர்ந்த நாரதரே! தேவியே சகத்திற்கு ஆதிதத்துவமென்றும், அத்தேவியே சகத்தை முக்குணங்களால் சிருட்டி திதி நாசங்களைச் செய்து நிர்க்குணையாய் விளங்கு கிருளென்றும், சகத்தின் உத்தமமான வுண்மை என்னுலும் இருடிகளாலும் தேவகந்தர்வர்களாலும் வேதபண்டிதர்களாலும் சொல்லப்பட்டிருக்கின்றது. இதைக்கேட்டமனிதன் உலகில் பிரமையடையான் சுகமுறுவான். பூசிக்கப்படும் அத்தேவியின் சொரூபத்தையுங் கூறுகின்றேன். அதனைக்கேட்போர்க்குச் சகலபாபமும் போம்; போகமோக்ஷ முண்டாம்.

சுவாயம்பு என்னும் முதல்மநு பிரதாபவானுயும், எல்லா மன்வந்தரங்கட்கும் அதிபனுயும், ஸ்ரீமானுயும், சதரூபா என்பவளுக்குப் புருஷனுகியும், தன்பிதாவாகிய பிரமனுக்கு சிறந்த பக்தி சிரத்தையுடன் தொண்டு புரிபவனுயு மிருந்தான். அதனுல் அவன் பிதா சந்தோஷித்துப் புத்திரனைநோக்கி, ஓ புத்திரனே! நீ உத்தமமான தேவியை ஆராதனம் செய்வையாயின் அத்தேவியின் கருணையினுல் பிரஜைகளைச் சிருட்டிசெய்யவல்ல ஆற்றல் உனக்குண்டாகுமென்ருன். விராட்டாகிய அந்தச் சுவாயம்புமநு மனத்தை யொருவழிப்படுத்தி சகத்காரணியாயும் தேவர்களுக்கெல்லாம் பிரபுவாயும் ஆதிமாயையாயும் சர்வசத்தியாயும் சர்வகாரணங்கட்குங் காரணியாயும் இருக்கின்றதேவியைத் தவத்தினுல் திருப்திசெய்யக்கருதி

மெய்ப்பக்தியோடு தியானித்து சர்வோபசாரத்துடன் பூசித்து, தேவர்கட்கெல்லாந் தெய்வமாயிருக்குந் தெய்வமே! சகத்துக்கெல்லாம் காரணபூதையான தேவியே! உனக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். சங்கு சக்கராதிகளைத் தாங்கியிருக்குந் திருக்கரங்களையுடையவளே! நாராயணரது இதயத்தை ஆஸ்ரயித் திருக்கின்றவளே! வேதமூர்த்தியே! லோகமாதாவே! காரணஸ்தான ரூபிணியே! வேதத் திரயங்கட்குப் பிரமாணமாயுள்ளவளே! சர்வதேவர்களாலுந் தோத்திரஞ் செய்யப்பட்டவளே! சிவே! மஹேஸ்வரியே! மஹானுபாவையே! மஹாமாயையே! மஹோதையே! மஹாதேவப்பிரியாவாஸே! மஹாதேவப்பிரியங்கரே! பசுபதிப்பிரியே! ஜேஷ்டே! மஹானந்தே! மஹோற்சவே! மஹாப்பிரியே! மஹாபயஹரே! எல்லாத்தேவர்களாலும் பூஜிக்கப்பட்டவளே! உனக்கு நமஸ்காரம். சர்வமங்களே! சிவே! சர்வப்பிரயோஜனங்களையும் சாதிக்கின்றவளே! ரக்ஷிக்குந்தன்மையில் வல்லமையுள்ளவளே! திரியம்பகே! கவுரீ! நாராயணீ! உனக்குநமஸ்காரம். ஓதப் புரோதரூபமாயிருக்கின்ற இப் பிரபஞ்சத்திற்கு ஏகசைதன்யையாயும் ஆத்யந்த ரஹிதையாயும் தேஜோநிதியாயுமிருக்கிற எந்தப் பராசத்தியினது கடாக்ஷத்தினால் சர்வலோகத்தையும் பிரமன் படைக்கிறான்ஞே விஷ்ணு காக்கின்றானோ ருத்திரமூர்த்தி அழிக்கின்றானோ மதுகைடபரது பயத்தினால் பீடிதனானபிரமன் யாரைத்துதித்து துக்கசாகரத்தினின்று நீங்கினனோ அந்தத்தேவிக்கு நமஸ்காரம். கீர்த்தி ஸ்மிருதி காந்தி லக்ஷ்மி பார்வதி சதி தாக்ஷாயணி என்கிற இவரெல்லாம் நீதானே. வேதகர்ப்பத்தி லிருக்கின்றவளும் புத்தியையும், சதா அபயத்தையுங் கொடுக்கின்றவளும் நீதானே. ஆகலின் உன்னைக்குறித்துத் துதிக்கின்றேன், நமஸ்கரிக்கின்றேன் பூசிக்கின்றேன் யாகஞ்செய்கின்றேன் தியானஞ்செய்கின்றேன்பாவிக்கின்றேன் ஜபிக்கின்றேன்கண்டுகளிக்கிறேன் எனக்குப் பிரசன்னமாவாய். வேதங்கட்கெல்லாம் இருப்பிடமான பிரமனும், இலக்ஷ்மிக்கிருப்பிடமான திருமாலும், திரிலோகங்கட்கும் அதிபனான உருத்திரனும், ஜலஜெந்துக்களுக்கெல்லாம் பிரபுவான வருணனும், நவநிதிகட்குந் தலைவனான குபேரனும், பிரேதங்கட்கெல்லாம் இறைவனான இயமனும், இராக்ஷதர்கட்கெல்லாம் நியாமகனான நிருதியும், அமுதமயமாயிருங்கின்ற சந்திரனும் உனதுகருணையினாலேயே தத்தமக்குரிய அதிகாரங்களைப்

பெற்றிருக்கின்றூர். மூவுலகங்களாலும் வணங்கத்தக்க தேவியே! மங்களசொரூபியே! உன்னையடிக்கடி நமஸ்கரிக்கின்றேனென்றூன்.

பகவதியாயும் துர்க்காதேவியாயும் நாராயணியாயு மிருக்கின்ற பராசத்தி பிரத்தியக்ஷமாய் சுவாயம்புமநுவை நோக்கி, ஓ ராஜ சிரேஷ்டனே! நீசெய்த தோத்திரத்தினுலும் பக்தியினுலும் பூஜையி னுலும் நான் மிக்க சந்தோஷத்தை யடைந்தேன். நீ என்னிடத்தில் யாதுபெறவேண்டி யிருக்கின்றனையோ அதனைக்கேள்; தருகின்றே னென்றூள். மநு, ஓதேவி! கருணையுள்ளவர்களுக்குள் பிரதானமா னவளே! நீ என்னுடைய பக்தியினுல் சந்துஷ்டையா யிருப்பையே யாயின் உன்னுஞ்ஜையினுல் பிரஜைகளுடைய சிருட்டி தடையில் லாமல் என்னுல் உண்டாகவேண்டுமென்றூன். தேவி அங்ஙனமே நீ யுண்டாக்குவாய்; அவை மேன்மேல் விருத்தியையும் அடையும்; எவனொருவன் என்னிடத்துள்ள பக்தியினுல் இத்துதியைத் தோத் திரஞ்செய்கின்றூனே அவனுக்கு வித்தையும் சந்தானசித்தியும் கீர் த்தியும் தேஜஸும் தனதானியமுதலிய சம்பத்தும் எவ்விடத்தி லும் தடைபடாத சக்தியும் ஜயமும் சத்துருநாசமும் சுகமும் உண் டாகுமென்று அனுக்கிரகஞ்செய்து அவன் பார்த்துக்கொண்டிருக் கும் பொழுதே அந்தர்த்தானமாயினள்.

பின்னர் சுவாயம்புமநு பராக்கிரமத்திற் சிறந்தவனுய்ப் பிர மனைநோக்கி, என்றந்தையே! எனக்கு ரகசியமான ஓரிடத்தை நீர் நியமித்துத் தந்தால் அதில் நானிருந்து பிரஜைகளைச் சம்பூரணமா கச் சிருட்டிப்பேன். யாகங்களால் தேவர்களைப் பூஜிப்பேன். தாமத ஞ்செய்யாமல் இடத்தை யுண்டாக்குமென்று கேட்க, பிரமன் சி றிதுபொழுது நிதானித்தவனுய் இவன் விரும்பியகாரியம் எப்படி முடியும்? பூமியோ இப்பொழுது நீராய்க் கரைந்துகிடக்கின்றது; சிருட்டிசெய்யும் நாமே அநேககாலமா யதனைச்செய்யாமலிருக்கின் ரேம் என்று சிந்தித்து, பின்னர் எந்தப்பகவானது ஆணையினுல் நா மிருக்கின்ரேமோ அந்த ஆதிபுருஷனுன பகவான் நமது கோரிக் கையை நிறைவேற்றுவர் என்று அவரைத் தியானித்தனன்.(சஅ)

க-வது மநுவுக்கு தேவிகொடுக்கும் வரதானம் முற்றிற்று.



ஹயாரூடசேவிதாங்ரைநமஃ.

## இரண்டாம் அத்தியாயம்.

# வராஹகிருத தரண்யுத்தரணம்.



ஸ்ரீநாராயணர் கூறுகிறார்:— ஓ நாரதமுநியே! பிரமதேவன், மநு மரீசி முதலியோர் தன்னைச் சூழ்ந்திருப்பப் பகவானைத் தியானஞ்செய்தபொழுது ஓரங்குஷ்டப்பிரமாணமுள்ள வராகமொன்று அப்பிரமனது நாசிநுனியினின்றும் வெளிப்பட்டுப் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அனைவரும் அதிசயிக்க ஓர்யானையளவாய் வளர்ந்தோங்கியது. அதனைக்கண்டபிரமன் தன்னைச்சூழ்ந்திருக்கு மவர்களைப் பார்த்து கூறுகின்றார். ஓ பெரியோர்களே! இந்தவராகத்தைப் பார்த்தீர்களா? எனதுநாசியிலிருந்து தோன்றியபொழுது ஓ ரங்குலப்பிரமாணமாயிருந்தது; இப்பொழுது ஒருபெரியபர்வதமாக வளர்ந்திருக்கின்றது; இது என்னஆச்சரியம்? இது வராகமன்று; இது எனது யஜ்ஞரூபியான பகவானேயாகும். அவர் இப்போது நான் எண்ணியிருக்கும் வருத்தத்தை யொழிக்கும்பொருட்டு இவ்வுருவத்தோடு வந்தனரென்று சொல்லிக்கொண்டிருக்கும்போது வராகமூர்த்தியாய்வந்த பகவான் யாவருக்கும் ஆனந்தம் உண்டாகும்வண்ணம் ஓர் கர்ஜனைசெய்தனர். அப்பேரொலியைக் கேட்ட பிரமன்முதலாயினோர் இவர் பகவானென்பதற்குச் சந்தேகமென்னவென்று கொண்டாடினர். ஜனலோகம் தபோலோகம் சத்தியலோகமுதலிய உலகங்களில் உள்ளவரெல்லாம் வேதரூபமான அநேக ஸ்தோத்திரங்களினாலும் நான்குவேதங்களினாலும் போற்றினார்கள். அவர்கள்செய்யுந் தோத்திரங்களைக் கேட்டிருந்த வராகமூர்த்தி கருணைநிறைந்த கடாக்ஷத்தால் அவர்களுக்கெல்லாம் அனுக்கிரகஞ்செய்து பெருவெள்ளமாய்க் காணப்படும் ஜலத்தில் மூழ்கி நுழைந்தனர். நுழையும்போது அவரது பிடரிமயிர் முதலானவற்றால் சமுத்திரராஜன்மிகவும் பீடிக்கப்பட்டு, ஓபகவானே! சரணமடைந்தவர்களின் பீடையை யொழிக்கின்றவரே! என்னை ரக்ஷிப்பீராக வென்றுவேண்ட, கருணையுடையவராய் அவனைவருத்தாது ஜலசரங்களைப் பேதித்துக்கொண்டு உள்ளேநுழைந்து பூமி

எவ்விடத்திலிருக்கின்றதென்று அங்குமிங்குமா யோடியோடி மோந்து மோந்து நிதானித்துப்பார்க்க முடிவில் பூமி காணப்பட்டது. சகலஜந்துகளுக்கும் ஆதாரமான பூமி காணப்படவே சகலதேவர்களுக்கும் ஆதாரமான பகவான் அந்தப்பூமியைத் தனது கோரப்பல்லினால் தாக்கித் தூக்கிக்கொண்டு மேலேவந்தனர். யானையானது தாமரைக்கிழங்கைத் தோண்டித் தனதுதந்தங்களில் இடுக்கிக்கொண்டுவருவதுபோல் பூமியைத் தனதுகோரப்பற்களில் இடுக்கிக்கொண்டு மிக்கபிரகாசத்தோடுவருகிற அந்தவராகமூர்த்தியைப் பிரமன் பார்த்து? ஓ புண்டரீகாக்ஷனே! உமக்கு ஜயமுண்டாகுக, பக்தர்களுடைய பீடையைப் போக்குகின்றவனே!சர்வத்தோடுகூடியதேவர்களுக் காதாரமானவனே! சர்வகாமபலத்தைக் கொடுக்கின்றவனே! தேவரீர் எடுத்துவரும் இந்தப்பூமியை நோக்குங்கால் யானையொன்றுதனதுகொம்புகளில் தாங்கிக்கொண்டுவரும் தாமரைக்கிழங்கைப் போற் காணப்படுகின்றது. அன்றியும் தேவரீர் கரியதிருமேனியோடும் பூமிதேவியை மேலேதூக்கிக்கொண்டு வருவது, யானையானது தாமரைமலரைத் தனது துதிக்கையினால் மேலே தூக்கிக்கொண்டு வரும் காட்சிபோன்று மிருக்கின்றது. சிருட்டிக்கும் சங்காரத்துக்கும் காரணமாயிருக்கும் திதியைச் செய்கின்றகடவுளே உம்மை அடிக்கடி நமஸ்காரஞ்செய்கின்றேன். கிருதயுகத்தில் தானவர்களை நாசஞ்செய்த உம்மை முன்னும்பின்னும் நமஸ்கரிக்கின்றேன். சகல தேவர்களுக்கும் ஆதாரபூதராயும் மஹாகாந்தி யுடையவராயும் விளங்குகின்றவரே! உம்மை நமஸ்காரஞ்செய்கின்றேன். தேவரீரால் பிரஜைகளைச் சிருட்டிக்கும் காரியத்தில் நியமிக்கப்பட்ட நான்அதிகவல்லபத்தை யுடையவனாய் உமது ஆணைகடவாமல் அந்தத்தொழிலைச் செய்கின்றவனாயும் செய்யாதவனாயும் இருக்கின்றேன். ஓஹரியே! பூர்வத்தில் தேவரீருடைய சகாயத்தினாலன்றோ தேவர்களெல்லாம் தமது காலத்துக்கும் பலத்துக்குமேற்றவாறு அமிர்தத்தைப் பாகஞ்செய்து பானஞ்செய்தனர். பின்னரன்றோ, இந்திரன் திரிலோக சாம்பிராஜ்யத்தையும் சகலசம்பத்தையும் அனுபவிக்கத் தக்கவனாயும் தேவ சமூகங்களால் பூஜிக்கப்படத் தக்கவனாயும் ஆயினான்! அக்னிதேவனும் அக்னித்தன்மையடைந்து ஜாடராக்னிமுதலானபேதங்களால் தேவர் அசுரர் மானுடர்களுக்குத் திருப்திசெய்விக்கின்றான்! தர்மராஜனும் பிதுர்த்தேவதைகட்கு அதிபதியாய்ச்

சர்வகர்மங்கட்கும் சாக்ஷியாய் அந்தந்த சுபாசுபங்கட்குரிய பலனை நியமித்து அவற்றைஅனுபவிக்கச்செய்யும் அதிபதியாகிறான். நிருதி இராக்கதர்கட்கெல்லாம் பிரபுவாய், யக்ஷர்களுக்கு விக்கினநாசகனாய், சர்வப்பிராணிகளுடைய கர்மங்கட்குஞ் சாக்ஷியாய், பிரஜாபதியாயிருக்கின்றான்,வருணன் நீர்வாழ் உயிர்கட்குப்பிரபுவாய்,நீருக்கதிபதியாய், லோகபாலகனாயிருக்கின்றான், வாயு கந்தமுடையவனாய் சர்வபூதங்களுக்கும் பிராணகாரணனா யிருக்கிறான், குபேரன் கின்னரர்கட்கும் யக்ஷர்கட்கும் ஜீவனாஸ்ரயனாயும் அதிபனாயும் சர்வலோகங்களாலும் கொண்டாடத்தக்கவனாயு மிருக்கிறான். ஈஸானன் சகல ருத்திரர்கட்கும் ஈசனாயும் சர்வதேவாதிபாலகனாயும் சங்காரகர்த்தாவாயும் சருவலோகவந்திதனாயு மிருக்கிறான். என்றிவ்வாறு பிரமன் ஆதிபுருஷனான பகவானைத்துதிக்க அவர்கடாக்ஷித்து மகாசுரனான இரணியாக்கதனைக் கதாயுதத்தினாற்சங்கரித்துப் பூமியைச் சலத்தினின்று மெடுத்துத் தாபித்துத் தன்னிருக்கையடைந்தார். சிரேஷ்டமாகிய இச்சரித்திரத்தைக்கேட்பவர்களும் படிப்பவர்களும் பாபத்தினின்றும் விடுபட்டு விஷ்ணுபதமடைவார்கள்.(கஅ)

உ-வது வராஹமூர்த்தி பூமியை மேலெடுத்தசரிதம் முற்றிற்று.



உ

ஹயமேதஸமர்ச்சிதாயைநம:

மூன்றம் அத்தியாயம்.

## ஸ்வாயம்புவமநுவம்சவர்ணனம்.



நாராயணர் கூறுகின்றார்:—ஓ நாரதமுநியே! விஷ்ணுபகவான் பூமி நிலைபெற்றிருக்குமிடத்தில் முன்போல் நிலைபெறச்செய்து வைகுண்டஞ்சென்றனர். பின்னர் பிரம்மா தனது புதல்வனாகிய சுவாயம்புமநுவைப்பார்த்து, மஹாபலசாலியான புத்திரனே! பிரகாசமுள்ளவர்களுக்குள் மிக்க பிரகாசமுள்ளவனே! வராகமூர்த்தியினால் ஸ்தாபிக்கப்பட்ட இந்தப்பூமியில் நீஇருந்து யதோசிதமாக பிரஜைகளைச் சிருஷ்டித்துவருவாய். யஜ்ஞபுருஷனுக்கு உபயோகப்படத்தக்க யஜ்ஞபதார்த்தங்களால் தேசகாலங்களுக் கேற்றபடி

யஜ்ஞேசனைப் பூஜித்துவருவாய். வருணாஸ்ரமங்களுக்குச் சாஸ்தி ரோக்தமாய் விதித்திருக்கும் தருமாசார நிபந்தனைகள் தவறாதிருக் கக் காத்துவருவாய்.இந்தக் கிரமத்திற்றான் பிரஜைகள் விருத்தியை யடையும். சற்குணம் கீர்த்தி காந்தி நல்வடிவம் வித்தை விநயம் சதாசாரம் முதலியவற்றோடுகூடிய புத்திரர்களையும் புத்திரிகளையும் பெற்று புத்திரிகளைக் குணவான்களுக்குக் கொடுத்து சம்சாரபந்த மற்ற மனமுடையவனாய் பிரதானபுருஷனான பரனைப்பக்திசாதன த்தினாலும் யோகசாதனத்தினாலும் சதாகாலமும் ஆராதித்துவரு வாய். வருவையாயின், இஷ்டகாமிய பதங்களையும் யோகிகளால் அடையத்தக்க ஞானபதத்தையும் அடைவாயென்று ஆசிபுகன்று அந்தமநுவைப் பிரஜைகளைச் சிருட்டிசெய்யுந்தொழிலில் மனம் பொருந்தச்செய்து தன்னிடம்போயினர்.

பிறகு தந்தைகூறிய ஆணையைச் சிரமேற்கொண்டு பிருதிவீப தியாகிய மநு அரசாண்டுவருங்காலத்தில் பிரியவிரதன் உத்தானு பாதனென்னும்இரண்டுபுத்திரர்களையும்,ஆஹூதி,தேவஹூதி,பி ரசூதிஎன்னும் மூன்று புத்திரிகளையும் பெற்றனன்; அவர்களுள் ஆஹூதியைருசிஎன்பவனுக்கும்தேவஹூதியைகர்த்தமனென்பவ னுக்கும், பிரசூதியை தக்ஷனென்பவனுக்கும் கொடுத்தான். இந்த வுலகத்தி லிருப்பவரெல்லாம் இம்மூவருடைய சம்பந்தமுடையவர் களாகவே இருப்பர். ருசி ஆஹூதி என்பவருக்கு எஜ்ஞனென்னும் ஆதிபுருஷனும், கர்த்தமன் தேவஹூதிஎன்பவருக்கு சாங்கியாசா ரியர் என்று சர்வலோகத்திலும் பிரசித்திபெற்ற கபிலரும், தக்ஷன் பிரசூதி என்பவருக்கு எண்ணிறந்த வர்களும் பிறந்தனர். முதற்புத் திரிக்குப் பிறந்த எஜ்ஞன் சுவாயம்பு மன்வந்தரத்தில் அரக்கர்களி டத்திலிருந்து தேவகணங்களோடுகூடி மநுவைப் பாதுகாத்தனன். இரண்டாவது புத்திரிக்குப்பிறந்த கபிலர் மஹாயோகியாய் தனது ஆஸ்ரமத்திலேயே வசித்து தன்தாய்க்கு அவித்தியா நிவர்த்தகமா யுள்ளபரமஞானத்தையும் அத்யாத்ம ஜ்ஞானநிச்சயமாகிய தியான யோகத்தையும் சர்வ அஞ்ஞான நிவர்த்தகமாயுள்ள காபிலசாஸ் திரத்தையும் உபதேசித்து பின்னர் புலகர் ஆஸ்ரமம்போய்ச்சேர்ந்து இப்பொழுதும் வாழ்ந்திருக்கின்றனர். இந்தமஹாத்மாவை நினைக் கப்பெற்றால் சாங்கியயோகம் சித்தித்துவிடும். நமஸ்காரஞ்செய்யப்

பெற்றால் மேலான சகலவிரதமும் சித்திக்கும். மூன்றாவது புத்திரிக்குப் பிறந்தவர்களெல்லாம் தேவர்களையும் மாநுடர் முதலானவர்களையுஞ் சிருஷ்டித்தனர். கேட்டமாத்திரத்தில் சகலபாபங்களையும் நாசஞ்செய்யவல்ல மநுவின்புத்திரிகளுடைய வம்சவர்ணனைகளைச் சொன்னேன். இனி அம்மநுவின் புத்திரர்களுடைய சுபகரமாகிய வம்சத்தைச் சொல்லுகிறேன். இதைக்கேட்டால் மேலானபதங் கிடைக்கும். அன்றியும் இவர்களுடைய வம்சசரித்திரங்களால் த்வீபங்கள் வருஷங்கள் சமுத்திரமுதலானவைகளெல்லாம் பிரசித்தமாய் நன்றாய்த் தெரியவரும். (சுலோகம்-உ௩)

௩-வது சுவாயம்புமநு வம்சவர்ணனை முற்றிற்று.



௨

ஹயக்ரீவாயநம:.

நான்காம் அத்தியாயம்.

## பிரியவ்ரதவம்ஸவர்ணனம்.



ஸ்ரீநாராயணர் கூறுகின்றார்:—சுவாயம்புமநுவின் ஜேஷ்டபுத்திரனான பிரியவிரதனென்பவன் தனது தந்தைக்குரிய பணிவிடைகளைச் சிரத்தையுடன் நாடோறும் செய்பவனாயும், சத்தியதர்மங்களைப் பாராட்டுகின்றவனாயு மிருந்தனன். அவன் பிரஜாபதி விஸ்வகர்மா இவர்களின் புத்திரிகளான பர்ஹிஷ்மதியும் சுரூபையும் அழகுமுதலியவற்றிலுஞ் சீலகர்மாதி தருமங்களிலு மேம்பட்டிருக்கும் விசேடத்தைக்கண்டு கலியாணஞ்செய்துகொண்டனன். பின்னர் அவனுக்கு ஊர்ஜஸ்வதி எனும் பெண்ணும், ஆக்னீத்ரன், இத்மஜிஹ்வன், யஜ்ஞபாஹு, மஹாவீரன், ருக்மசுக்ரன், க்ருதபிருஷ்டன், சவனன், மேதாதிதி, வீதிஹோத்திரன், கவி என்னும் அக்கினியின் பெயருள்ள புத்திரர்கள் பதின்மரு முண்டாயினர். இவருள் கவி சவனன் மஹாவீரன் என்னு மூவரும் விரக்திபெற்று ஆத்மவித்தையில் மேன்மையினையும், ஊர்த்வரேதஸ்ஸையும், பரமஹம்ஸாஸ்ரமத்தையும், எவற்றையும் நிஸ்ப்ருஹமாய்க் காணும் அறிவையும் உடையவர்களாய் நித்யதிருப்தர்களா யிருந்தனர். மற்றொரு மநு

விடத்தில் உத்தமன் தாமசன் ரைவதன் என்பவர்பிறந்தனர். மஹா தேஜஸ்விகளாயிருந்த அம்மூவருமே மந்வந்தரங்கட்கு அதிபர்களாயிருந்தனர். இவர்களுக்குத் தாதையாகிய பிரியவிரதன் பதினொரு அர்ப்புதவருடம்இந்திரியபலீஷ்டனாய்அரசாண்டுவந்தனன்.சுவாயம்புவின் சம்பந்தமான இவன், சூரியன் பூமியில் உதயமாகியும் பகலுமிரவுமாக விருக்கக்கண்டு நம்முடைய அரசாக்ஷியில் ஏனிப்படியிருக்கவேண்டும் முற்றுமன்றே பிரகாசமாயிருத்தல் வேண்டும் என்றாலோசித்து நமதுயோகபலத்தினால் ஒருபாகத்திலுள்ள இருளை ஓட்டுவோமென்று நிச்சயித்து சூரியனைப்போலும் பிரகாசிக்கின்ற ஒரு ரதத்தில் ஆரோகணித்தவனாய்ப் பூமியை ஏழுமுறை சுற்றிவந்தனன். அப்படிச் சுற்றிவந்த தேர்ச்சக்கரமழுத்திய அடியே இப்பொழுது ஏழுகடலென்று வழங்கிவருகின்றது. ஜம்புத்வீபம் பிலக்ஷத்வீபம் சால்மலித்வீபம் குசத்வீபம் கிரவுஞ்சத்வீபம் சாகத்வீபம் புஷ்கரத்வீபம் என்னும் ஏழுத்வீபங்களும் அந்த ஏழுகடலின் மத்தியிலுள்ளன.இந்தக்கடல்கள்ஒன்றையொன்று சூழ்ந்திருப்பனவாகலின் ஒன்றுக்கொன்று இரண்டிரண்டு பங்கு மேற்கொண்ட வளவினையுடையன. இவை முறையே லவணமாயும், கரும்புரசமாயும், மதுவாயும், நெய்யாயும், பாலாயும், தயிராயும், சுத்தஜலமாயு மிருக்கின்றன. ஆக்னீதரன் இத்மஜிஹ்வன் யஜ்ஞபாகு ருக்மசுக்ரன் கிருதபுருஷ்டன் மேதாதிதி வீதிஹோத்திரன் என்னும் எழுவரையும் அவ்வேழுத்வீபங்களையும் முறையே ஆளும்படி நியமித்தனன். பின்னர் ஊர்ஜவஸ்வதி என்னும் பெண்ணை சுக்கிராசாரிக்குக் கொடுத்தனன். அவளுக்குத் தெய்வயானை என்னும் ஓர் பெண் பிறந்தாள். இவ்வகையாகப் பிரியவிரதன் யாவர்க்கும் செய்யவேண்டுவன வெல்லாஞ் செய்து முடித்து ஞானசிந்தை யுடையவனாய் யோகமார்க்கத்தை அனுஷ்டித்திருந்தனன். (உஅ)

ச - வது பிரியவிரதன்வம்சவர்ணனை முற்றிற்று.



உ

ஹம்ச வாகநாயைநமஃ.

ஐந்தாம் அத்தியாயம்.

## பூகோள விஸ்தாராதி வர்ணனம்.



நாராயணர் கூறுகின்றார்:—ஒ தேவருஷியே! த்வீபவருஷ முதலாக அனேக பேதங்களாக ஈஸ்வரனாற் கற்பிக்கப்பட்ட சகலபூமண்டல விஸ்தாரத்தையும் சுருக்கமாய்ச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. இதுகாறும் நான் சொல்லிவந்தனவெல்லாம் சுருக்கமேயன்றி பெருக்கமாகா. ஆகலான், இப்பொழுது விரிவாக ஜம்புத்வீபத்தை முன்னர்ச் சொல்லுகிறேன். விசாலமும் விருத்தாகாரமு முள்ள இந்தத்வீபம் லக்ஷம்யோஜனை பரப்பினையுடையது. இதில் ஒவ்வொன்றும் ஒன்பதினாயிரம் யோஜனை அளவுடையதாக ஒன்பது வருஷங்க (கண்டங்க) ளுள்ளன. அவை மிகவும் நீண்டும் உயர்ந்துமுள்ள எட்டுப் பர்வதங்களாற் பிரிக்கப்பட் டிருக்கின்றன. இவற்றுள் விற்போலும் வளைவுள்ள இரண்டு வருஷங்கள் தெற்கிலும் வடக்கிலும் இருக்கின்றன. நீளமாய் நான்குவருஷங்களுமுள. இளாவிருதமென்னும்வருஷம் சதுரமாய்ப் பூமியின்மத்தியி லிருக்கிறது.

இதில் லக்ஷம்யோசனை யுயரமுள்ள மேருமலையாகிய சுவர்னமலை இருக்கின்றது. மலைகட்கெல்லாம் அரசாகிய அப்பொன்மலை இந்தப் பூகோளமாகிய தாமரைமலருக்கு ஒரு கர்ணிகையை (பொகுட்டை)ப்போ லிருக்கின்றது. இது பூமியின்மேல் முப்பத்திரண்டாயிரம் யோசனை அகலமும், பூமியின்கீழ் பதினாறுயிரம் யோசனை ஆழமும் உடைத்தானது. இந்தவருஷத்திற்கு வடபாகத்தில் நீலம் ஸ்வேதம் சிருங்கம் என்னும் மூன்றுமலைகளும்,ரம்மியம் இரண்மயம் குரு என்னும் மூன்றுவருஷத்திற்கும் எல்லையைக் காட்டிக்கொண்டிருக்கின்றன. இம்மலைகளுக் கெல்லை அவைகளின் இரண்டுபக்கங்களினு முள்ள உப்பு சமுத்திரமேயாகும்.தனித்தனி இரண்டாயிரம் யோசனை கனமுள்ள இந்தப் பர்வதங்களில் பத்து அம்சத்தின்மேனின்று கிழக்குநோக்கிப் போகும் நதிகளும், மேற்குநோக்கிப்போகும் நதங்களும், வடக்கு நோக்கிப்போகும் உத்தரவாகினிகளும்,

அளவில. இனி இளாவிருத வருஷத்திற்குத் தென்பாகத்தில் மிக விசாலமும் அழகும் பதினாயிரம்யோசனை யுயரமு முள்ள நிடதம் ஏமகூடம் இமாலயம் என்னு மூன்றுமலைகளே, ஹரிவருஷம் கிம் புருடம் பாரதம் என்னு மூன்றுவருடங்கட்கும் எல்லையைக் காட்டு கின்றனவா யுள்ளன. இனி இளாவிருத வருஷத்திற்கு மேற்பாகத் தில் மாலியவானென்னும் மலையுளது; கீழ்ப்பாகத்தில் கந்தமாதனம் என்னும் மலையுளது. கேதுமாலாவருஷத்துக்கும் பத்திராஸ்வ வரு ஷத்துக்கும் நீலம் நிஷதம் என்னும் இரண்டாயிரம் யோசனை கன முள்ள இரண்டு பெரியமலைகள் எல்லையைக் காட்டுகின்றன.

மந்தரம் மேரு சுபார்சுகம் குமுத மென்னும் மலைகள் முன் சொன்ன பொன்மலைக்குப் பாதங்கள்போ லிருப்பன. அம்மலை கள் பதினுலாயிரங்காதம் உயரமும் பதினாயிரங்காதம் அகலமுமு ள்ளன. அம்மலைகளில் ஆயிரத்தொருநூறு யோசனையுயரமும், நூறு யோசனை அகலமுமுள்ள மா கடம்பு நாவல் கல்லாலை என்னு நான் குவிருக்ஷங்களும் நான்குபக்கங்களில்நாட்டிய கொடிமரங்கள்போல் உயர்ந்தோங்கியிருக்கும். பாலாயும் தேனாயும் கரும்புரசமாயும் நல்ல ஜலமாயுமுள்ள நான்கு மடுக்கள் அம்மலைகளின் மீதுள்ளன. தேவர்க ளெல்லாம் இவைகளின் பரிசத்தினலேயே போகைஸ்வர்யத்தை யடைகின்றனர். தேவமங்கையர்கட்கு இன்பசுகத்தைத் தரவல்ல நந்தனம் சைத்ரரதம் வைப்ராஜம் சர்வபத்ரகம் என்னும் நான்கு தேவவுத்தியானங்களுள; அவைகளில் தேவகணங்கள் தங்கள் ஸ்திரீ களுடன் கூடியிருந்து அவர்களால் செய்யப்படும் கானரசங்களைக் கேட்டு இன்புற்று மகிமையும் பெருமிதமும் சுகமும் சுதந்தரமும் உல்லாசமும் கிரீடையும் உடையவர்களாயிருப்பர். மந்தரபர்வத சிகரத்தில் ஆயிரத்தொருநூறு யோசனை யுயரமுள்ள மாவின் நுனி யிலிருந்து மிருதுவாயும் இனிமையாயும் மலையின் சிகரம்போல் பெருத்ததாயும் அமுர்தசம்பந்த முடையதாயுமுள்ள மாங்கனி கள் வீழாநிற்கும். வீழ்வதனுல்பிளவுபட்டு ஒழுகுகின்ற செந்நிற முடைய ரசங்கள் பெருக்கெடுத்தோடி அருணை நதி யென்று ஓர் பெயர்பெற்றுச் செல்லாநிற்கும். அந்நதியை ஆதிமாயை அதுலை அனந்தை புஷ்டி ஈஸ்வரமாலினி துஷ்டநாசகரி காந்தியாயனி என்று தேவர்களும்போற்றி நானாதவிமான உபசாரங்களால் பூஜித்து அந்த

தியின் கடாக்ஷத்தால் போகமோக்ஷாதி சர்வகாமங்களையும் பெறுகின்றனர். இத்தகையான சிறப்பின் விசேடத்தால் சாம்பூநதமென்னும் பொன்னும் அதில் விளைகின்றது. (௩௰,௨)

ரு-வது பூகோளவிஸ்தாராதிவர்ணனே முற்றிற்று.



உ

ஹரித தாநவாயைநமஃ.

ஆறும் அத்தியாயம்.

## இதரத்ருமாதிவர்ணனம்.



ஸ்ரீநாராயணர் கூறுகின்றார்:—ஓநாரதமுநியே! மந்தரமலையினின்றும்வீழாநின்ற அருணநதியானது இளாவிருதவருஷத்தில் கீழ்த்திசையைநோக்கிச் செல்லுகின்றது. இந்நதியிற்படிந்துவருங் காற்றானது நறுமணமேற்றுப் பத்துயோசனை தூரம் பூலோகத்தில் வாசனைவீசாநிற்கும். இதனைப் பார்வதிதேவியாரது தோழிகளும் யக்ஷகந்தர்வர்களுடைய பத்தினிகளும் ஆக்கிராணித்து இன்புறுவார்கள். இதுபோலவே மேருமலையில் நாவல் விருக்ஷத்தினின்றும் வித்தில்லாமலும் ஒரு யானையளவு பருத்து மிருக்கின்ற நாவற்கனிகள் விழுந்து உடைபட்டு இளாவிருதவருஷத்திற்குத் தென்பாகத்தில் ஜம்புநதி என்று பெயர்பெற்றோடாநிற்கும். அங்குவசிக்கின்ற தேவர் நாகர் இருடிகள் அரக்கர் முதலியோர் அந்நதியை ஜம்புவர்த்தினிதேவி என்று போற்றுவர். அந்தஜம்புநதியாகிய தேவி சர்வபூததயாகாரியாயும், மேன்மை பாராட்டத்தக்கவளாயும், பாபாத்மாக்களாயுள்ளார் தன்னை ஸ்மரித்த மாத்திரத்தில் அவரது பாபரோகங்களைப் போக்கும் பாபநாசனியாயும், துதித்தமாத்திரத்தில் சர்வவிக்னங்களைப் போக்கும் விக்னநாசனியாயும் அமரர்களால் போற்றத்தகும் மானனீயாயும் இருப்பவள். கோகிலாக்ஷி காமகளா கருணாகாமபூஜிதா கடோரவிக்ரஹா தன்யா நாகிமான்யா கஸ்தனீ என்கிற நாமங்களால் இஷ்டகாமிய சித்தியின்பொருட்டு மாநுடர்களால் ஜபிக்கப்படுபவளாயு மிருக்கின்றாள். இவ்வாறு தெய்வரூபமாயிருக்கின்ற அந்நதியின் இரண்டுபக்கங்களிலுமுள்ள மண்ணானது

ஜம்புநதியின் சாரத்தில் ஊறப்பெற்று அங்குவீசும் காற்றானும் சூரியசம்பந்தத்தால் அங்குண்டாகும் அக்கினியானும் பொன்னிற்சிறந்த சாம்பூநதமென்னும் பொன்னாய், வித்தியாதரஸ்திரீகளும் தேவஸ்திரீகளும் அணியத்தக்க மகுடம் கேயூர முதலிய பலஆபரணங்களுக்காகின்றது. சுபார்ஸ்வகிரியின் சிகரத்திலுள்ள மஹத்தாகிய கடப்பவிருக்ஷத்தினின்றும் பெருகாநின்ற மதுரசமானது ஐந்துதாரையாய்ப் பிரிந்து இளாவிருதவ்ருக்ஷத்திற்கு மேற்பாகத்தில் பெரியநதியாய்ப் பெருக்கெடுத்தோடாநிற்கும். இந்தரசத்தைத் தேவர்கள் உண்பவராகலான் அவர்கள் முகத்திற்படிந்து வீசாநின்ற காற்றானது நான்குபக்கத்தினும் நூறுயோசனை தூரம் நறுமணங்கமழாநிற்கும். இம்மது ரச மஹாநதியானது தாரேஸ்வரீ மஹாதேவீ பக்தகார்யகாரணீ தேவபூஜ்யை மஹோற்ஸாஹை காலரூபை மஹாநநை கர்மபலதை காந்தாரக்ரஹணீஸ்வரீ கராளதேஹை காலாங்கீ காமகோடிப்பிரவர்த்தினி என்று சகலதேவர்களாலும் தோத்திரஞ்செய்யப்பட்டிருக்கின்றது. இதுபோலவே குமுதபர்வத சிகரத்திலுள்ள சதபலமென்னும் ஆலமரத்தின் கிளைகளினின்று பெருகாநின்ற பால் தயிர் தேன் நெய் கருப்பஞ்சாறு முதலியவை அக்குமுதகிரியின்கண் ணுள்ள கோமுகங்களினின்றும் பெருகி இளாவிருத வருஷத்திற்கு வடபக்கத்தில் நதிகளாயோடும். இவையன்றி அன்னம் வஸ்திரம் சயனம் ஆபரணம் முதலியவைகளும் விளையாநிற்கும். அந்நதியானது மீனாக்ஷி தத்தலேதேவி தேவாசுரநிஷேவிதை நீலாம்பரை ரவுத்ரமுகீ நீலாலகயுதை தேவசமூகங்களுக்குப் பலத்தையும் வரத்தையும் கொடுக்கின்றவள் அதிமான்யை அதிபூஜ்யை மத்த மாதங்க காமினீ மதனோன்மாதினீ மானப்பிரியை மானப்பிரியாகரை மாரவேகதரை மாரபூஜிதை மாரமாதினீ மயூரவரசோபாட்யை சிகிவாகநகர்ப்பபூ என்கிற நாமங்களால் அழைக்கப்பட்டுளது. இந்தநாமங்களைத் தோத்திரம் ஜபம் தியானம் செய்கின்றவர்கட்கு யாவரானும் மதிக்கத்தகும் மேன்மையுண்டாகும். அந்நதியின்கணுண்டாகும் பால் தயிர் முதலியவற்றைப் பானஞ்செய்கின்றவர்கட்கு வியர்வை துர்வாசனை வார்த்திகம் ரோகம் சித்தப்பிரமம் குளிர்ச்சி உஷ்ணம் காற்று சரீர காந்தி மாறுபடுதல் இவைபோன்ற துன்பங்கள் சரீரம் இருக்குமளவும் உண்டாதலின்றிச் சுகமொன்றே நிலைபெற்றுவாழும்.

இனி, பொன்மலையின் மேலிடத்திலுள்ள பர்வதங்களைச் சொல்லுகிறேன்; அந்தமலையின் நான்குபக்கங்களினும் தாமரை மலரின் நடுவிலுள்ள பொகுட்டைச் சூழ்ந்திருக்கும் மகரந்தங்களைப் போல் குரங்கம் குரகம் குசும்பம் விகங்கதம் திரிகூடம் சிசிரம் பதங்கம் ருசகம் நீலம் நிஷதம் சிதீவாசம் கபிலம் சங்கம் வைடூரியம் அருதி அம்சம் இடபம் நாகம் காலாஞ்சரம் நாரதம் என்று இருபது மலைகளிருக்கின்றன. (சுலோகம்-கூஉ)

கூ-வது மற்றமரமுதலியவைகளின்வர்ணனை முற்றிற்று.



உ

ஹத்தியாதி பாபசமந்யைநமஃ.

ஏழாம் அத்தியாயம்.

## மேருபர்வதவர்ணனை.



ஸ்ரீநாராயணர் கூறுகின்றார்:—மேருமலைக்குக் கீழ்ப்பக்கத்தில் முப்பத்தாறுயிரம் யோசனை கனமும் இரண்டாயிரம் யோசனை யுயரமுமுள்ள ஜடரம் தேவகூடம் என்னும் இரண்டு மலைகளும், மேற்பக்கத்தில் பவமானம் பரிமாத்திரம் என்னும் இரண்டு மலைகளும், தென்பக்கத்தில் கைலாயம் கரவீரம் என்னும் இரண்டு மலைகளும், வடபக்கத்தில் ஸ்திரீஸ்ருங்கம் மகரம் என்னும் இரண்டு மலைகளும் உள. இவ்வெட்டுமலைகளும் தன்னைச் சூழ்ந்திருக்க நடுவில் சூரியன்போற் பிரகாசிக்கும் மேருமலையின் சிகரமத்தியில் பதினாயிரம்யோசனை அகலத்தோடு நற்சதுரமாய் மனோவதி என்னும் ஓர் பட்டணம் பிரமதேவனுக்குளது. பொன்மயமாய்ப் பிரகாசிக்கின்ற அதன் சிறப்பை வித்தையிற்சிறந்த வித்வான்களும் சொல்லுதற்கெளிதன்று. அம்மேருமலையின் கிழக்குமுதலாகச் சொல்லப்பட்ட அஷ்டதிக்குகளிலும் அமராவதீ தேஜோவதீ சம்யமனீ கிருஷ்ணாங்கனு ஸ்ரத்தாவதீ கந்தவதீ மகோதயை யஸோவதீ என்னும் எட்டுமலைகளும் பொன்மயமாய்ப்பிரகாசிக்கின்றன. அவை முறையே திக்குப்பாலகர்களுக்குப்பட்டணங்களாயுமுள்ளன. அவ்விடத்

திற்றனே யஜ்ஞரூபியாகிய விஷ்ணுமூர்த்தி தனது இடக்காற்பெரு விரல் நகத்தால் தொளைபடுத்திய பிரமாண்டத்தின் மேற்பக்கத்திலிருக்குந்தொளை நடுவினின்றும் பெருகாநின்ற கங்காநதியானது ஆயிரம்யுகமாய் ஆகாயமார்க்கத்தை ஆக்ரமித்துக்கொண்டு மிகவும் பரிசுத்தமான துருவஸ்தானத்தைக் கடந்து தேவவிமானத்தின் வழியா யிறங்கிவந்து சந்திரமண்டலத்தையளாவி பிரமன்வீற்றிருக்குந் தாமரையில் விழுந்து அங்கிருந்துசீதை அலகை நந்தை பத்திரை என நான்காகப்பிரிகின்றது. அவற்றுள் சீதை பருவதசிகரங்களில் விழுந்து கேசரையென்னும் பெயர்பெற்று கந்தமாதன மலையின்வழியாய் பத்ராஸ்வ வருஷத்திற்குக் கீழ்ப்பக்கமாய் வந்து லவணசமுத்திரத்தை யடைந்தும், இரண்டாவதுநதியானது மாலியவான்மலையிலிருந்துவெளிப்பட்டு வேகத்தோடு கேதுமாலாவருஷத்தையடைந்து சக்ஷு என்னும் பெயர்பெற்றுமேற்குசமுத்திரத்தையடைந்தும் மூன்றுவதுநதியானது தென்பாகத்தில் காடுகளையும் மலைகளையும் கடந்து ஏமகூடமலையையடைந்து அதிவேகமாய் பாரதவருஷத்திற்குவந்து தென்சமுத்திரத்தையடைந்தும், நான்காவது நதியானது மூவுலகையுஞ் சுத்தஞ்செய்வதாய்உத்தரகுருவையடைந்து சமுத்திரத்தை யடைந்தும் விளங்குகின்றன. இவற்றுள் மூன்றுவதாகிய நந்தையில் அடிக்கடி மூழ்கிவரப்போவோர்க்கு ராஜசூயம் அஸ்வமேதம் என்னும் யாகபலன் கிடைக்கும். தேவர்களால் பூஜிக்கப்படும் இந்நதிகளேயன்றி மேருமந்தர பர்வதங்களினின்று பாரதவருஷமுதலான எல்லாவருஷங்களிலும் நதிநதங்கள் அநேகமாய்ப் பெருகுகின்றன. அவற்றுள் பாரதவருஷம் கருமபூமியென்றுசொல்லப்படும். மற்ற எட்டுவருஷங்களும் சுவர்க்கசுகத்தையும் பூலோகசுகத்தையும் கொடுக்கின்றவைகளாகவும் சுவர்க்கலோக புண்ணியசேஷத்தை யநுபவிக்கு மிடங்களாகவு மிருக்கின்றன. அங்கு புருஷர்களுக்குப் பதினாயிரம் யானைபலமும் பதினாயிரவருடம் ஆயுளும் வச்சிரம்போன்ற தேகமும் தேவர்களுக்குச் சமானமான தேஜஸும் எப்போதும் சுரதத்திலே சந்துஷ்டியும் நிறைந்த ஆயுளோடு கூடிய களத்திரமுமுள்ளவர்களாய் சுகமுடையவர்களாயிருக்கின்றனர். ஸ்திரிகளெல்லாம் இடையாயுள்ள காலங்களில் புத்திர சந்தானத்தால் வலிவும்அழகும் குலைந்து போகாமல் கடைசி காலத்தில் கர்ப்பவதியாகின்றார்கள். எப்பொழுதும் திரேதாயுகத்திற்குச் சமானமான காலமாகவேயிருக்கப்பெற்றுளது (சுலோக-௬௭)

ஏ - வது மேருபருவதவர்ணனை முற்றிற்று.



ஹரிதஸ்வாதிஸேவிதாயைநம:

## எட்டாம் அத்தியாயம்.

## இளாவிருதவிருத்தாந்தம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—இளாவிருதவருஷத்தில் தேவர்கள் முற்கூறிய யாகங்களாலும், ஜபத்தியான சமாதி முதலானவைக ளாலும் தேவியைப் பூஜிக்கின்றனர். வனங்களெல்லாம் எப்பொழு தும் எல்லாருதுக்களிலும் புஷ்பங்களாலும் பழங்களாலும் தளிர்க ளாலும் அழகுபெற்றும், காடுகள் மலைகள் மலைச்சாரல்கள் ஆறுக ளாலும் அவைகளில் சுத்தமான ஜலம் செங்கழுநீர் கருநெய்தல் ஆம்பல் முதலிய புஷ்பங்களாலும் அம்ஸமுதலான பக்ஷிகளாலும் அணியணியாய் நிறையப்பெற்றிருப்பதுமன்றி புருஷர்களெல்லாம் அழகில்மிக்க ஸ்திரீகளுடைய விசித்திரமான சரசசல்லாப விநோத ங்களால் சந்தோஷத்தினின்றும் நீங்காதவர்களாய்க் கிரீடித்துக்கொ ண்டிருக்கின்றனர். இவ்வொன்பது வருடங்களிலும் விஷ்ணுமூர்த்தி தேவியை ஆராதித்துக்கொண்டிருக்கின்றனர். அவர் தேவியைப் பூஜிக்கின்றவரா யிருக்கின்றபடியினால் அங்குள்ளவர்களும் தேவி பூஜகர்களாகவே இருக்கின்றனர்.

இளாவிருதவருஷத்தில் திருமால் லக்ஷ்மிதேவியுடனிருக் கின்றனர். அங்கு பவானியினுடைய சாபத்தினால் எந்தப்புரு டரும் பிரவேசிக்கிறதில்லை. பிரவேசிப்பாராயின் ஸ்திரீகளாய்விடு கின்றனர். அங்கு பவானியைப் பிரபுவாகவுடைய அநேகங்கோடி ஸ்திரீகளால் சூழப்பட்டிருக்கும் தேவேசன், சங்கருஷணனைத் தனது தியானயோகத்தினால் யாவருக்கும் இதத்தைச் செய்ய வேண்டுமென்கிற எண்ணத்தோடு மனத்தை அசைவற நிறுத்தி "ஸ்ரீபகவானே! ஓம் நமோ பகவதே மஹாபுருஷாய சர்வகுண சங்கியானாய நந்தாய வ்யக்தாய உமக்குநமஸ்காரம் செய்கிறேன். தியானிக்கின்றவர்களுடைய சங்கடங்களைப் போக்கடிக்கிற திருப் பாதங்களை யுள்ளவராயும் சகலசம்பத்துக்கும் முக்கியராயும் பக்தர்

களிடத்தில் மகாதயையுள்ளவராயும் சம்சாரசாகரத்தைக் கடக்க ச்செய்கின்றவராயும் சர்வேஸ்வரராயும் இருக்கின்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன், சத்துவ ரஜஸ் தமஸு என்னும் முக்குண சேஷ்டைகளால் எவனுடைய அறிவானது சலனத்தையடையாமல் இருக்கிறதோ அந்தப்பகவானை ஆத்மாவை சுவாதீனப்படுத்தவேண்டுமென்கிற எண்ணமுடைய எவன் கவுரவஞ் செய்யமாட்டான். எந்தப் புருஷனுடைய தியானத்தினால் சிவந்தகண்ணுள்ளவராய் மதம் பிடித்தவன்போல் ஒருவரும் எதிரில்லாமல் பிரகாசிக்கின்றார்களோ, தேவகன்னிகைகள்எவனுடையபாதபரிசத்தினால் இந்திரியங்கள்கலங்கி நாணமடைந்து பூஜைசெய்யும்வன்மை யற்றவராகின்றனரோ, எவன் இப்பிரபஞ்சத்தின் ஜன்ம ஸ்திதி லய ரூபமாகவும் எவன் முக்குணரகிதனாகவும் கூறப்படுகின்றானோ அவனை நமஸ்கரிக்கின்றேன், இப்பூமண்டலம் எவனதுஆயிரம்முடிகளில் தரிக்கப்பட்டிருக்கிறதோ, பிரமன் எவனிடமிருந்து தோன்றினனோ, எவனுடைய பிரகாசத்தினால் மாயை சிருட்டிக்கப்பட்டதோ,நாமனைவரும் எவனுடைய சுவாதீனத்தினால் வலையிலகப்பட்ட பக்ஷிகள்போல் சுவாதீனமற்றிருக்கின்றோமோ, எவனுடைய கிருபையினால் உலகினைச் சிருட்டிக்கின்றோமோ, யாவரும் எவனால் நிர்மிக்கப்பட்ட மாயாபந்தத்தைத் தாண்டக்கூடாமல் மோகிக்கின்றனரோ அவனை நமஸ்கரிக்கின்றேன்" என்று துதிக்கின்றனன்.

பத்திராஸ்வ வருஷத்தில் தருமபுத்திரர் ஹயக்கிரீவராகிய விஷ்ணுமூர்த்தியை நமஸ்கரித்து சமாதியிலிருந்து தியானித்துத் துதிக்கின்றனர். அவரது வம்சத்தில் வருபவரெல்லாம் பத்திர சேவகர்களென்று சொல்லப்படுகின்றனர். அவரெல்லாம், "தருமரூபியானபகவானே! உனக்கு நமஸ்காரம். உனதுகிரியைகள் மிகவும் ஆச்சரியகரமானது. உனதுகடாக்ஷம் கிடைக்கும்வரையில் தபித்துக்கொண்டிருக்கின்றோம். புத்திரர்களைப் பிதாவானவன் எப்படி காப்பாற்றுவானோ அப்படி எங்களால் செய்யப்படும் தியான நமஸ்காரங்களை எண்ணிக் கடாக்ஷஞ்செய்யும். பண்டிதர்கள் பிரபஞ்சம் நாசமடைவதென்று அறிந்தவராயினும் உமதுமாயையினால் மோகமடைகின்றனர். இப்படிச்செய்யும் கிருத்தியமுடைய உமக்குநமஸ்காரம். சகலத்திற்கும் உற்பத்திஸ்தானமானவனே! நீகருமத்தைச்செய்யாமலே செய்தவனாக அங்கீகரிக்கின்றனே. இது ஆச்

சரியகரமானதல்ல. ஏனெனில் நீகாரியகாரணபூதனும் சர்வாத்ம சொரூபியாயும் பிரபஞ்சத்திற்குவேறுபட்டவனுயும் இருப்பவனுக லான் ஆச்சரியமென்னை. யுகாந்தத்தில் தமசினுல் மறைக்கப்பட்ட வேதங்களைப் பாதாளத்திலிருந்து உம்மைக்கொண்டுவந்து கொடுக் கும்படி பெரியோரெல்லாம் யாசிக்கின்றனர். இவ்வாறு சகலருக்கும் நன்மையைச்செய்கின்ற உமக்கு நமஸ்காரம்" என்று துதிக்கின்றவ ராயிருப்பர் என்றனர். (சு - ம். உக.)

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹஸ்தி கும்போத்துங்க குசாயைநமஃ

## ஒன்பதாம் அத்தியாயம்.

## வருஷாந்தர்க்கதசேவ்ய சேவகத்வவிசாரம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—அரிவருஷத்தில் நரசிஹ்மமூர்த்தியா னவர் சகலபாபத்தையும் நாசஞ்செய்து பக்தர்களுக்குஅனுக்கிரகி க்கும்பொருட்டு யோகஞ்செய்துகொண்டிருக்கின்றனர். அவரது உருவத்தையறிந்தவனுகிய பிரகலாதன் அந்தப்பகவானுடைய குண தத்துவத்தையறிந்து பக்தியுடன் "ஓம் நமோபகவதே நரசிம்ஹாய நமஸ் தேஜஸ்தேஜஸே ஆவிராவிர்ப்பவ வஜ்ரதம்ஷட்ரகர்மாசயா ந்ரந்தய ரந்தய தமோக்ரஸ ஓம்ஸ்வாஹா ா அபயம் மமாத்மநி பூயிஷ் டாஃ ஓம் க்ஷௌம்" என்பதாதி மந்திரங்களை உச்சரித்தனன். இதன் பொருளாவது "நரசிம்ஹ ரூபராயும் ஒளிகளுக்கெல்லாம் ஒளியானவராயும் வஜ்ராயுதம்போல் பற்களுள்ளவராயும் இருக்கி ன்ற உமக்கு நமஸ்காரம். காமக்கிரந்தியையறுத்துவிடும் அறுத்து விடும். எங்கட்குத் தெரிசனங்கொடும் தெரிசனங்கொடும். எங்க ளுடையஅஜ்ஞானத்தை நீக்கிவிடும், இந்தஆத்மாவுக்கு அபயத் தைக்கொடும். இவ்வுலகுக்கெல்லாம் சுபம் உண்டாகக்கடவது. துஷ்டர்களெல்லாம் நசித்துப்போகக்கடவர். பிராணிகளெல்லாம் சிவனைத் தியானிக்கக்கடவர். மனமானது விஷ்ணுவை நமஸ் கரிக்கக்கடவது. எங்களுடையபுத்தி காரணமின்றிப் பகவானிட

த்தில் பிரவேசமாருக. எங்களுடையமனம் வீடு மனைவி மக்கள் தனம் இவைகளில் எங்கட்குச்சம்பந்த முண்டாகவேண்டும். உம துசேவையில் ஆசையுண்டாகுக. எந்தப்பகவானுடைய சம்பந்த த்தினல் மனமானது சுத்தியையடைகின்றதோ அந்தப்புகழுடைய பகவான் எங்களுடையகாமங்களை யறுத்துவிடுவாராக. அப்படிப் பட்டவிஷ்ணுவை எவன்ருன் நமஸ்கரிக்கமாட்டான். எவனுக்குக் காரணமின்றி விஷ்ணுமூர்த்தியினிடத்தில் பக்தி உண்டாகின்றதோ அவனிடத்தில் சகலதேவர்களும் வசிக்கின்றனர். பக்தியில்லாதவ னுக்கு நற்குணங்களெல்லாம் எப்படியுண்டாகும். விஷ்ணுமூர்த்தி சர்வப்பிராணிகளுக்கும் மீன்களுக்கு ஜலம் ஆதாரம்போல முக்கி யகாரணராயிருக்கின்றனர். அவருக்கு வீட்டில்பூஜையில்லாமலிரு ந்தால் அந்தவீடுடையவனுக்கு மகத்துவம் உண்டாகாது. அவன் காமம் துக்கம் கோபம் முதலியவற்ருல் பீடிக்கப்பட்டு மகாதுக்கத் தைஅடைவான். அராகம் துவேஷம் காமம் குரோதம்பயம் வியாதி இவைகளுக்கெல்லாம் மூலமாயும் சம்சாரத்துக்குப் பிரதான ஸ்தா னமாயுமுள்ள கிருகத்தைவிட்டு நரசிம்ஹருடைய பாதத்தை நமஸ் கரிக்கின்றவர்களுக்குப் பயமேது''என்றிவ்வாறு பிரகலாதன் நரசிம் ஹரை மனதிற்ருபித்து நாடோறுந்துதித்துவருவான்.

கேதுமாலாவருஷத்தில் மன்மதரூபியாய் அரசர்களால் பூஜிக் கப்பட்டவராய் பகவானிருப்பர்.அவரை,"ஓம்ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம் ஓம்நமோபகவதே ருஷீகேஸாய சர்வகுணவிசேஷைர் விலக்ஷிதாத் மநே ஆகூதீனும் சிதீனும் சேதஸாம் விசேஷேணும் சாதிபதயே சோடச கலாய சந்தோமயாய அன்னமயாய அமிர்தமயாய ஸஹ ஸே ஓஜஸே பலாய காந்தாய காமாய நமஸ்தே உபயத்ரபூயாத்" என்னுமந்திரத்தையுச்சரித்து,இலக்ஷ்மிதேவி,அவ்வருடத்திற்குப் பிரபுவாய் எப்பொழுதும்பூஜித்து, "உலகத்தில் ஸ்திரீகள் உம்மை ஆராதித்து பர்த்தாவாகக்கொள்ளுகின்ருர்களேயன்றி வேறுயாரைக் கொள்ளுகின்றனர். ஏனெனில் பிரியம் தனம்ஆயுள் முதலியவற்றி ற்கு நீரே சுதந்தரராயிருக்கின்றபடியினுலும், எவன் ஒருவரிடத் தும் பயப்படுவதில்லையோ அவன்ருன்பதியாவன் என்றபடி நீர்தான் ஒருவரிடத்தும் பயப்படாதவராயிருத்தலினுலும் ஸ்திரீகள் உம் மையே சாக்ஷாத்காரமாக அடைகின்றனர். ஓபிரபுவே! சுராசு ரர்கள் இந்திரியங்களையடக்கி அரியதவத்தைச்செய்து உம்மை

யடைந்தும் உமது பாதபக்தியில்லாமையால் உம்மையறிந்திலர். சத்தியராயும் நித்தியராயுமுள்ள நீர் எனது வந்தனத்தை ஏற்றுக் கொள்ளும். என்னைமுதலாயினரைக் காக்கின்றகடவுளாகிய உமது இச்சையை அறிவதற்கு எவர்தான் சமர்த்தர்கள். உலகங்கட்குப் பிரபுவாயும் காமதேனுஸ்வரூபமாயும் இருக்கின்ற உம்மைப் பிரஜாபதிமுதலான வருஷநாதர்கள் காமசித்தியின்பொருட்டுத் தோத்திரஞ்செய்கின்றனர்” என்றிவ்வாறு துதித்துக்கொண்டிருப்பள்.

ரம்யகவருஷத்தில் மச்சமூர்த்தியை மநுவானவர், “ஓம்நமோ முக்யதமாயநமஃ, ஸத்வாய பிராணாயௌஜஸே பலாய மஹாமத்ஸ்யாயநமஃ” என்னுச்சரிப்பதுமன்றி, லோகபாலகர்களால் அறியப்படாதவனாய் உள்ளும்புறம்பும் கம்பீரமாய்ச் சஞ்சரிப்பவனாய் எவன் இருக்கின்றானோ, தாருரூபமாயிருக்கின்ற ஸ்திரீயை நாமமாத்திரத்தினால் தன்சுவாதீனப்படுத்திக்கொள்வதுபோல் இப்பிரபஞ்சத்தை எவன்சுவாதீனஞ்செய்து கொள்ளுகின்றானோ அவன்தான் ஈஸ்வரன் என்றும், லோகபாலகர்களெல்லாம் தங்களுக்குள்ள துவேஷங்களைவிட்டுத் தனித்தனியாகவேனும் ஒன்றாகவேனும் அசுரனால்கவரப்பட்ட வேதத்தை மீட்டு உலகத்தைக்காத்தாரில்லை அதனை நீரே செய்து ஜகத்பிராண னாத்மாவானீர் உமக்குநமஸ்காரம் என்றும் தோத்திரத் தியானநியோகங்கள் செய்து சகல கல்மஷங்களினின்று நீங்கிப் பாகவதோத்தமனாய்ப்பக்திமார்க்கத்தில் ஈடுபட்டிருந்தனர் என்றனர். (சு - ம் உக.)

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹஸ்தி க்ருத்தி பிரியாங் கயைநமஃ

## பத்தாம் அத்தியாயம்.

## புவனகோச வர்ணனம்.

---

நாராயணர்கூறுகின்றார்:—இரண்மயவருஷத்தில் பகவான் கூர்மரூபங்கொண்டிருப்பர். அவரை அர்யமன்என்னுஞ்சூரியன், “ஓம் நமோபகவதே அகூபாராய சர்வசத்வகுணவிசேஷணாய நோபலக்ஷித ஸ்தானாய நமோவர்ஷ்மணே நமோபூம்நே நமோவஸ்தானாய

நமஸ்தே" என்று உச்சரித்து,"இவ்வுலகெல்லாம் யாருடையசொரூபமோ, யாருடையமாயையினால் வெவ்வேறாகக்காணப்படுகின்றதோ, யாருடையசொரூபத்திலிருக்கின்றதோ இவ்விதமென்று காணக்கணக்கில்லையோ, இம்மாதிரியென்று சொல்லச்சொல்லில்லையோ என்றுசொல்லப்படும் பிரமத்தன்மையைப் பெற்றுள்ள பகவானான உம்மை நமஸ்கரிக்கின்றேன். சராயுஜாதி நால்வகையோனியாகச் சொல்லப்பட்ட ஸ்தாவரஜங்கமங்களும் தேவருஷிபிதுர்க்களும் சுவர்க்கம் ஆகாயம் பூமி மலை ஆறு சமுத்திரத்துவீபங்களும் நக்ஷத்திரங்களுமாகச் சொல்லப்பட்டனவெல்லாம் உனதுசொரூபமென்றேசொல்லப்பட்டிருக்கின்றது. எவனிடம் எண்ணிறந்தநாமங்களைப் பண்டிதர்கள்கற்பித்திருக்கின்றனரோ அப்புருஷனாகிய உம்மை நமஸ்கரிக்கின்றேன்" என்று வருஷப்பிரபுக்களோடு துதிக்கின்றான்.

இப்படியே உத்தமமாகியகுருவருஷத்திலும் ஆதிவராகரூபியானபகவானைப் பூதேவி பக்தியோடுபூசித்து,"ஓம்நமோபகவதே மந்திரதத்வலிங்காய யக்ஞகிருதவே மஹாத்வராவயவாய மஹாவராஹாய நமஃகர்மசுக்லாய த்ரியுகாய நமஸ்தே"என்றுச்சரித்து,"எவனுடைய சொரூபத்தைக் கவிகள் முக்குணங்களில் மனமாகியமத்தை நாட்டிக் கடைந்து சாக்ஷாத்காரஞ்செய்வதற்கு ஆவர்த்திசெய்கின்றார்களோ அவனாகியஉம்மை நமஸ்கரிக்கின்றேன். தன்னுடையகுணங்களால் இவ்வுலகினைப்பார்க்கின்ற எவனுடையமாயையானது உற்பத்திநாசங்களைச் செய்கின்றதோ அந்தமாயைக்கு ஆதாரமாயும் திரிகுணகர்மங்களுக்குச்சாக்ஷியாயும் இருக்கின்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். எவன் ஆதிவராகரூபியாய் அசுரனைக்கொன்று கடலிலிருந்த என்னைக் கோரப்பற்களில் இடுக்கி வெளியில் கிளம்பினனோ அவனாகிய உம்மை நமஸ்கரிக்கின்றேன்" என்று துதிப்பள்.

கிம்புருஷவருஷத்தில் ஸ்ரீராமரை அநுமார்,"ஓம்நமோபகவதே உத்தமஸ்லோகாயநம" என்றும், "ஆர்யலக்ஷண சீலவ்ருதாயநம" என்றும், "உபசிக்ஷிதாத்மநே உபாசிதலோகாயநம" என்றும், "ஸாதுவாதநிகஷணாய நமோ ப்ரஹ்மண்ய தேவாய மஹாபுருஷாய மஹாபாகாயநம" என்றும், "விசுத்தாத்மாவாயும் பிரகிருதிகுணங்களின் நியமனத்தை யுடையவராயும் சாந்தராயும் அமிர்தம்போன்றவராயும் அகங்காரமில்லாதவராயுமுள்ள உம்மைத்துதிக்கின்றேன். மாநுடராய்வந்தது ராக்ஷஸரைக்கொல்வதற்கேயல்ல; மனிதர்களுக்

குநல்லொழுக்கத்தை யுண்டாக்கவேஆகும். ஏனெனில், ஆத்மஞானிகளுக்கே சிநேகராயும் பகவத்சொரூபராயும் இருக்கின்ற விஷ்ணுமூர்த்தி நீரல்லவா? உமக்கும் சீதைக்கும் எப்படி துக்கம்உண்டாகும். ஸ்திரீயினாலுண்டாகும் துக்கத்துக்கு நீர் எப்படிசம்பந்தப்பட்டவராவீர்? பரமாத்மதிருஷ்டியை மறவாதவரல்லவா? அதனால் நீர் வாக்குமனங்களால் துதிக்கமுடியாதவர். ருஷிகளாலே செய்யப்படும் தியானயோகங்களால் சுவாதீனப்படத்தக்கவர். உம்மைநமஸ்கரிக்கின்றேன். தேவர்களானாலும் அசுரர்களானாலும் மானுடர்களானாலும் வேறெந்தஜாதியர்களானாலும் நன்றிமறவாதவராயும் சத்தியசந்தராயும் திடவிருதராயும் தாமரைமலர்போன்ற கண்களுள்ளவராயும் இருக்கின்ற இராம பிரபுவைப் போற்றுவராயின் அவர்கள் கதியடைவர்" என்றும் தோத்திரத்தியானங்கள் செய்து பக்தியுடன் பூஜித்துவருகிறார் என்றனர். (சு - ம் உ0௨)

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹரித்ரா குங்குமா திக்தாயைநமஃ

## பதினொன்றாம் அத்தியாயம்.

## சேவ்யசேவகவிசாரம்.

---

நாராயணர்கூறுகின்றார்:—இந்தப் பாரதவருஷத்தில் நான் ஆதிபுருஷனாகவிருந்து உன்னால்தோத்திரஞ்செய்யப்படுகிறேன். எப்படியென்றால்"ஓம்நமோபகவதே உபசமசீலாயோபரதா நாத்மாயநமோகிஞ்சனவித்தாய ருஷிருஷபாய நரநாராயணாய பரமஹம்ஸ பரமகுரவேஆத்மாராமாதிபதயே நமோநம" என் றுச்சரிப்பதும், "சர்வலோகத்தையும் சிருஷ்டிக்கின்றவனாயும் அதில் சம்பந்தமில்லாதவனாயும்தேகசம்பந்தமுள்ளவனாயும் இல்லாதவனாயும் எவனிருக்கின்றானோ, எவனுக்குப் பார்க்கக்கண்களிருந்தும் இல்லையோ, எவன் குணங்களோடு கூடிக்கொண்டிருந்தும் தூஷிக்கப்படாமலிருக்கின்றானோ அப்படிப்பட்டபகவானை நமஸ்காரம்செய்கிறேன். இப்படிப்பட்ட

யோகத்தை இரண்யகர்ப்பனாகியபகவான் யோகிகளால் அனுஷ்டிக்கப்பட்டதென்று சொல்லியிருக்கின்றார். அஃதாவது-மரணகாலத்தில் மிகுந்தபக்தியோடு நிர்க்குணஸ்வரூபியான உம்மை எவன்தோத்திரஞ்செய்கின்றானோ அவன் சகலபுருஷார்த்தத்தையும் அடைகிறான். இகத்திலும்பரத்திலும் காமத்தில் விருப்பமுள்ளவனாய் மனைவிமக்களிடத்தும் தனத்தினிடத்தும் அதிகவிசாரத்தை வைத்துக்கொண்டு எவன் சந்தேகப்படுகிறானோ அவனுடைய பிரயத்தனத்துக்குப் பிரயோஜனம் சிரமமன்றி வேறொன்றில்லை. ஓபிரபுவே! உம்முடையமாயையினால் உண்டாகும் அஞ்ஞானத்தை நீர் சீக்கிரத்தில்பிளந்து என்னை உம்முடையபாதத்தில் சுத்தபத்தியுள்ளவனாய் யோகத்தில் மனதைவைக்கும்படிச் செய்யவேண்டு மென்பதுமாம். ஓநாரதரே! இப்பாரதவருஷத்தில் நீரேயன்றி நதிகளும் பர்வதங்களும் தோத்திரஞ்செய்கின்றன. அவைகளைச்சொல்லுகிறேன்; நீர் மனத்தை ஒருவழிப்படுத்திக் கேட்பீராக.

இமயமலை மங்களப்பிரஸ்தம் மயினாகம் திரிகூடம் ரிஷ்ய கூடகம் சய்யம் தேவகிரி ருஸ்யமூலம் ஸ்ரீசைலம் வேங்கடாத்திரி மகேந்திரம் வாரிதாரம் விந்தியம் புத்திமான் ருக்ஷபர்வதம் பாரியாத்திரம் துரோணம் சித்திரகூடம் கோவர்த்தனம் ரைவதம் குகுபம் நீலபர்வதம் கவுரமுகம் இந்திரநீலம் காமகிரி முதலானமலைகளும், இவைபோன்றஅனேகமலைகளும் புண்ணியத்தைக்கொடுக்கின்றனவைகளாக வுள்ளன. அந்தப்பர்வதங்களினின்றும் உண்டாகும்நதிகள் நானாவிதமானதேசங்களில் பெருக்கெடுத்துச்செல்லுகின்றன. அந்நதிகளில் ஸ்நானம் ஆசமனம் செய்வதனாலும் அவைகளைக் கண்ணால் பார்த்து வாக்கினால் உச்சரிப்பதனாலும் மனவாக்குக் காயங்களாற்செய்யும் கர்மங்கள்நாசமடைகின்றன.

அவைகளின் பெயர்களாவன:—தாம்பிரபர்ணி சந்திரவாசா கிருதமாலா வடோதகா வைகாயசி காவேரி வேணு பஸ்வனி துங்கபத்திரா கிருஷ்ணவேணீ சற்காரவர்த்தகா கோதாவரீ பீமரதி நிர்விந்தியா பயோஷ்ணிகா தாபி ரேவா சரஸா நர்மதா சரஸ்வதி சர்மண்வதீ சிந்து அந்தசோணா மஹாநதௌ ருஷிகுல்யா திரிசாமா வேதஸ்மிருதி கவுசிகை யமுனை மந்தாகினீ திரஷத்வதி கோமதி சரயு ரோதவதி சப்தவதி சுவேதமா சந்திரபாகா மருத்விரதா விதஸ்தா அசக்னி விஸ்வா என்பனவாம், இந்தப்பாரதவருஷத்தில் சனிக்கின்ற

புருஷர்கள் தாம்தாம்செய்த புண்ணியபாவங்களுக்கீடாக சொர்க்க நரக பூமிகளிற் பிறந்துஎப்படி சுகதுக்கமோக்ஷங்களை யடைகின்றார்களோ அப்படியே இந்நதிகளும் அடைகின்றன. இந்நதிகள் காரியசித்திக்குத் தகுந்தவையென்று முநிவர்கள்சொல்லுவர்.

இந்தப்பாரதவருஷத்திலிருக்கும் மநிதர்கள் என்னபுண்ணிய செய்ததனலோ விஷ்ணுபகவான் தானே அவர்களுக்குப் பிரசன்னராய் தெரிசனங்கொடுக்கின்றனர். இப்புண்ணியசீலர்களைப்போல் விஷ்ணுபகவானுடையசேவைக்கு உபயோகமான மாநுடசரீரத்தை யானும் அந்தபாரதவருஷத்தில்எடுக்க ஆசைப்படுகிறேன். எது யாகமுதலியவற்றால் சாதிப்பதற் கருமையாயிருக்கின்றதோ அது அந்தப்பகவானை உச்சரிப்பதனலேயே உண்டாகின்றது. அவரது பாதங்களை உச்சரித்தால் யாருக்குப் பாவநாசம் உண்டாகிறதில்லை. ஏனையவருஷங்களில் கற்பகாலபரியந்தம் ஆயுள் அடைந்திருப்பதைப்பார்க்கிலும் இந்தப்பாரதவருஷத்தில் க்ஷணகாலம் சீவதிசையோடிருப்பது சிரேஷ்டமானது. இவ்விடத்தில் புத்திமானனமநிதன் சகலபோகைஸ்வர்யங்களையும் விட்டு சந்நியாசத்தையடைந்து விஷ்ணுமூர்த்தியைப் பூஜிப்பானுயின் அவன் அவர்பதத்தை யடைகிறான். எவ்விடங்களில் விஷ்ணுவினுடைய கதைகளும் பாகவதர்களும் யாகமுதலான மஹோற்சவங்களும் இல்லையோ அவ்விடங்கள்தேவலோகமாயிருந்தாலும் வாசஞ்செய்யத் தக்கவையல்ல. இப்பாரதவருஷத்தில் மாநுடராகப்பிறந்து ஞானம் கிரியை திரவியமுதலான சம்பத்துக்களைப்பெற்றும் ஜன்மபரம்பரையை நீக்குவதற்கு முயற்சிசெய்யாம லிருப்பாராயின் அவர்கள் மறுபடியும் மிருகங்களைப்போல் திரியக்ஜாதிகளிற்பிறந்து சம்சாரத்தில் ஸ்திரமானபந்தத்தையடைகின்றனர். எவர்கள்சிரத்தையோடு அக்னியில் விதிப்படி மந்திரத்தால் ஓமஞ்செய்து அவிசைக்கொடுக்கின்றார்களோ அந்த அவிசைப்பகவான் கிரகித்துக்கொள்ளுகிறார்.

பகவான் மனிதர்கள் தன்னைச் சத்யமானபொருளைக் கேட்பாராயின் அந்தச் சத்தியப்பொருளைக்கொடுப்பர். அசத்யப்பொருளாகிய திரவியத்தைக்கேட்பாராயின் அதைக்கொடுப்பதில்லை. ஏனெனில், சத்தியப்பொருளைமறந்து இதனையே மறுபடியுங்கேட்கத்தலைப்படுவார்கள். ஆகலான் தன்னை நமஸ்காரஞ்செய்கின்றவர்களுக்கு

பிரபஞ்சப்பொருளை இச்சிக்கும்இச்சையை மறைக்கத்தக்கதிருவடிகளைக்கொடுத்து ஒருவஸ்துவினிடத்திலும் ஆசையைவிளைவிக்காமல் வைராக்கியத்தை யுண்டாக்குகின்றனர்.

ஓநாரதரே! சுவர்க்கத்திலிருக்கின்ற தேவர்களும் சித்தர்களும் மகருஷிகளும் இந்தவுண்மையையறிந்து பாரதவருஷத்தின் மான்மியத்தைப் புகழ்ந்து கொண்டாடுகின்றனர். குதிரைமார்க்கத்தைத் தேடுகின்ற சாகரர்களால் ஏற்படுத்தப்பட்ட சுவர்ணபிரஸ்தம் சந்திரபிரஸ்தம் சுக்ரபிரஸ்தம் ஆவர்த்தனபிரஸ்தம் ரமணகபிரஸ்தம் மந்திரோபாக்யபிரஸ்தம் ஹரிணப்பிரஸ்தம் பாஞ்சசன்யபிரஸ்தம் என்று எட்டு த்வீபங்களுண்டு, சிங்களம் லங்கை முதலாகச்சொல்லப்பட்ட உபத்வீபங்கள் உள்ளன. இந்தத்வீபங்கள்போல் அல்ல ஜம்புத்வீபம். அதனளவும் கீர்த்தியும் பெரிதானது. இனிபிலக்ஷ த்வீபமுதலாகச் சொல்லப்பட்ட ஆறு த்வீபங்களின் விஸ்தாரத்தைச் சொல்லுகிறேன் என்றனர். (சு - ம் ௬௨௨.)

பதினொன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹர்யாஸ்வாத் யமரார்ச்சியைநமஃ

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

## தீபாந்தர சமாசாரங்கள்.

---

### பிலக்ஷ த்வீபம்.

நாராயணர் கூறுகின்றார்:—மேருவை நடுவேயுடைய ஜம்புத்வீபம் உப்புக்கடலால் நான்குபக்கமுஞ் சூழப்பட்டிருக்கின்றது. இவ்வுப்புக்கடலின்அளவு ஜம்புத்வீபத்தின் அளவேயாம். அக்கடலைப் பிலக்ஷத்வீபம் சூழ்ந்திருக்கிறது. அந்தத்வீபம் உப்புக்கடலின் இரண்டுபங்களவுள்ளது. இப்பிலக்ஷத்வீபம் கருப்பஞ்சாற்றுக்கடலால்சூழப்பட்டிருக்கிறது. அக்கடலினளவுஅந்தத்வீபத்தினளவேயாம். பிரியவிரதனுடையபுத்திரனை சப்தஜிஹ்வன் அங்கு பிரபுவாயிருக்கின்றான். அவனுக்குப்பிரபு பொன்மயமான அக்னிதேவனே. இங்ஙனமிருக்க அந்த சப்தஜிஹ்வன் தன்னுடைய த்வீ

பத்தை ஏழுவருஷங்களாகப்பிரித்து தன்புத்திரர்களுக்குக்கொடுத்தான் ஆத்மஞானிகளால் சிறப்பிக்கப்பட்ட யோகசித்தியை யடைந்து அதனாலேயே பகவானுடைய பாதத்தையடைந்தனன்.

அங்கு சிவம் யவசம் பத்ரம் சாந்தம் க்ஷேமம் அமிர்தம் அபயம் என்று ஏழுவருஷங்களும், அருணன் ரும்மன் ஆங்கிரசன் சாவித்ரீ சுப்ரபா ருதம்பரா சத்யம்பரா என்றுஏழுநதிகளும், மணிகூடம் வஜ்ரகூடம் இந்திரசேனன் ஜோதிஷ்மான் சுவர்ணம் இரண்யக்ஷம் மேகமாலா என்று ஏழுபர்வதங்களும் உள்ளன. இந்நதிகளின் தீர்த்தத்தை ஜனங்கள்பார்த்தாலும் தொட்டாலும் பாவங்களினின்றும் நீங்கினவர்களாயும் அஜ்ஞானரகிதர்களாயும் ஆகின்றனர்.

இந்தபிலக்ஷத்வீபத்தில் அம்சம் பதங்கம் ஊர்த்வாயனம் சத்யாங்சங்கம்என நான்குவருணத்தவர்களுண்டு. அவர்களுக்கு ஆயுள் பிரமாணம் ஆயிரம். அவர்கள் அநேக லோகதிருஷ்டாந்தங்களையும் மூன்றுவேதத்தையும் அறிந்தவர்கள். சூர்யமண்டலத்தையும் சுவர்க்கதுவாரத்தையும்கடக்கும் வன்மையாளர். விஷ்ணுரூபம் சத்தியத்தின்சொரூபம் பிரமாவின் சொரூபம் அமிர்தத்தின் சொரூபம் சூரியன்சொரூபம் முதலியவற்றை யறிந்தவர்கள். பிலக்ஷத்வீப முதலான த்வீபங்களுள் ஐந்து த்வீபங்களில் உள்ளவர்களுக்கு ஆயுள் இந்திரியங்களுக்குரிய வன்மை தேஜஸு பலம் புத்தி பராக்கிரமம் ஆகிய இவையெல்லாம் சமமாகவிருக்கும்.

## சான்மலித்வீபம்.

மேற்கூறிய பிலக்ஷத்வீபத்தைச் சூழ்ந்திருக்கும் கருப்பஞ்சாற்றுக்கடலுக்கு இரண்டுபங் கதிகமாயுள்ளது சான்மலித்வீபம். இது அக்கருப்பஞ்சாற்றுக்கடலைச் சூழ்ந்திருக்கின்றது. இச்சான்மலித்வீபம் இதற்குச் சமானமான அளவுள்ள சுராக்கடலால் சூழப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் சான்மலிவிருக்ஷம் லக்ஷம்யோஜனை விஸ்தீரணமுள்ளதாயிருக்கும். பக்ஷிராஜனாகியகருடன் வசித்துக்கொண்டிருப்பான். அந்த சான்மலித்வீபத்தைப் பிரியவிரதன் புத்திரனான எஜ்ஞபாஹு என்பவன் சுரோசனன் சௌமனஸ்யன் ரமணன் தேவவருஷகன் பாரிபத்ரன் ஆப்யாயனன் விஜ்ஞாதன் என்னும் தனதுஏழுபுத்திரர்களுக்கு அந்தத்வீபத்தை அவ்வவர் பெயரால் ஏழாகப் பகுத்துக்கொடுத்தனன். அங்கு சரசம் சதஸ்

ருங்கம் வாமதேவம் கந்தகம் குமுதம் புஷ்பவருஷம் சஹஸ்ரஸ்ருதி என்னும் ஏழுபர்வதங்களும், அநுமதி சிநீவாலீ சரஸ்வதீ குஹூ ரஜநீ நந்தா ராகா என்னும் ஏழுநதிகளும் உள்ளன. அந்த வருஷங்களிலுள்ள புருஷர்கள் ஸ்ருததரன் வீரியதரன் வசந்தரன் இஷுந்தரன் என்னும் நான்குவருணஸ்தர்களாக இருப்பர். இவர்கள் வேதமயமான தங்களுடையபகவானுக்கு சுக்ல கிருஷ்ணபக்ஷங்களில் பிதுர்த்தேவதைகளின்பொருட்டுத் தங்களுடையபசுக்களால் யாகஞ்செய்கிறார்கள். சகலப்பிரஜைகளுக்கும் பிரபுவான சந்திரன் சந்தோஷிக்க சந்திரரூபியானபகவானைப் பூஜிக்கின்றனர்.

## குசத்வீபம்.

சான்மலித்வீபத்தைச் சூழ்ந்திருக்கும் சுராக்கடலுக்கு இரண்டு பங்கதிகமாயுள்ளது குசத்வீபம். அது சுராக்கடலைச்சூழ்ந்திருக்கின்றது. அக்குசத்வீபம் அதற்குச்சமானமான அளவுள்ள நெய்க்கடலால் சூழப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் இந்த்வீபத்தின்பெயர்க்குக் காரணமான குசஸ்தம்பம் என்னும் விருக்ஷம் தன்னுடையசோலைகளின் காந்தியினால் திக்குகளைப் பிரகாசப்படுத்திக்கொண்டிருக்கிறது. பிரியவிரதனுடைய புத்திரனான இரணியரேதாஎன்பவன் அரசன். அவன் வசு வசுதானன் திடருசி நாபிகுப்தன் ஸ்துத்யவிரதன் விவிக்தன் நமதேவகன் என்னும் தன்னுடைய ஏழுபுத்திரர்களுக்கு அந்தத்வீபத்தை அவ்வவர்பெயரால் ஏழாகப்பகுத்துக்கொடுத்தனன். அங்கு சக்கரம் சதஸ்ருங்கம் கபிலம் சித்திரகூடகம் தேவானீகம் ஊர்த்வரோமா திரவிணம் என்னும் ஏழுபர்வதங்களும், ரசகுள்ளியா மதுகுள்ளியா மித்திரவிந்தா ஸ்ருதவிந்தா தேவகர்ப்பா கதஸ்ய மந்திரமாலிகா என்னும் ஏழுநதிகளும் உள்ளன. அந்நதிதீர்த்தங்களைப் பானம் பண்ணுகிறமனிதர்கள் மகாதேஜஸையடைகின்றனர். இந்த்வீபத்திலுள்ள மனிதர்கள் குசலன் கோவிதன் அபியுக்தன் குலகன் என்னும் நான்குவருணஸ்தர்களாகவிருப்பர். இவர்கள் யாககர்மத்தைச்செய்யும் சாமர்த்தியமுடையவராகவும் எல்லாம் அறிந்தவர்களாகவும் தேவர்களுக்குச் சமானமானமகிமையுடையவராகவும் இருத்தலினால் பிரமசொரூபத்திற்கு அவ்யத்தை வகிக்கிற அக்கினிசொரூபமானபகவானை புருஷயஜ்ஞத்தினால் யாகஞ்செய்துவருவார்கள். இவ்வாறே எல்லா த்வீபத்திலுள்ளவர்களும் பூஜிக்கின்றார்கள் என்றனர். (சு - ம் ௩௦.)

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

ஹரிகேச சக்யைநமஃ

# பதின்மூன்றும் அத்தியாயம்.

## சிருஷ்டத்வீப சமாசாரவர்ணனம்.

---

நாரதர் நாராயணரைநோக்கி எல்லாவற்றையும் அறிந்த மஹானுபாவரே! நீர் சிருஷ்டத்வீபவரலாற்றைக் கூறுவீராக; அதைக்கேட்டமாத்திரத்தில் பரமானந்த முண்டாகுமல்லவா என்று வினவ நாராயணர் கூறுகின்றார்.

### கிரவுஞ்சத்வீபம்.

குசத்வீபத்தைச் சூழ்ந்திருக்கும் நெய்க்கடலுக்கு இரண்டுபங்கதிகமாயுள்ளது இந்தக்கிரவுஞ்சத்திவீபம் இது நெய்க்கடலைச் சூழ்ந்திருக்கிறது. இக்கிரவுஞ்சத்வீபம் இதற்குச் சமானமான அளவுள்ள பாற்கடலாற் சூழப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் கிரவுஞ்சாத்திரி என்னும் பர்வதமே அந்தத்வீபத்தின் பெயரைப் பிரகாசப்படுத்துகிறது. முன் சுப்பிரமணியக்கடவுள் சத்தியாயுதத்தினல் பிளக்கப்பட்ட மலையும் இதுவேதான். பாற்கடலின் அலைகளால் மோதப்பட்டதாயும் வருணபகவானுல் காக்கப்பட்டதாயுமுள்ள இதற்கு ஸ்ரீமானுயும் சர்வலோகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவனுயுமுள்ள பிரியவிரதனுக்குப் புத்திரனை கிருதப்பிருஷ்டன் அரசன். அவன், ஆமன் மதுருகன் மேஷபிருஷ்டன் சுதர்மகன் பிராஜிஷ்டன் லோகிதாரணன் வனஸ்பதி என்னும் தனது ஏழுபுத்திரர்களுக்கு அந்தத்வீபத்தை அவ்வவர்பெயரால் ஏழாகப் பிரித்துக்கொடுத்துத் தான் பகவானைச் சரணுகவடைந்தான். அங்கு சுக்ல தர்மமான போஜன உபபர்ஹண நந்த நந்தன சர்வதோபத்திர என்னும் ஏழுபர்வதங்களும், அபயா அமிர்தௌகா ஆரியகா தீர்த்தவதி விருத்திரூபவதி சுக்கிலா பவித்திரவதிகா என்னும் ஏழுநதிகளும் உள்ளன. இந்நதிகளின் பரிசுத்தமானஜலத்தை புருஷன் ருஷபன் தத்வர்த்த ரவிணன் தேவகன் என்னும் நான்குவருணத்தவர்களும் பானம்செய்கிறார்கள். இவர்கள்ஜலரூபமானபகவானை அஞ்சலியஸ்தர்களாய்ப் பூர்ணபக்தியுடன் யாகஞ்செய்து "ஆபஃ புருஷவீர்யாஃ ஸ்தபுனந்தீ பூஃ புவஸ்வரஃ தானஃ। புரீதாமீவக்நி ஸ்புருஶதா மாத்மநா புவஃ" என்பதால் துதிக்கின்றனர்.

### சாகத்வீபம்.

கிரவுஞ்ச த்வீபத்தைச் சூழ்ந்திருக்கும்பாற்கடலுக்கு இரண்டு பங்கதிகமாயுள்ளது இத்தசாகத்வீபம். இது பாற்கடலைச்சூழ்ந்திருக்கின்றது. இச்சாகத்வீபம் முப்பத்திரண்டுலக்ஷயோசனைவிஸ்தீரணமுள்ளது. இதற்குச்சமானஅளவுள்ளதயிர்க்கடலால்சூழப்பட்டுள்ளது. அங்கு சாகமென்னும் விருக்ஷம் அந்த த்வீபத்தின்பெயரைப் பிரகாசப்படுத்துகின்றது. இதற்கு பிரயவிரதனுடையபுத்திரனை மேதாதிதி என்பவன் அரசன். இவன் புரோஜபன் மனப்பூர்வஜயன் தவமானகன் தூம்பரானீகன் சித்திரரேபன் பகுருபன் விஸ்வதிக் என்னும் தனது ஏழு புத்திரர்களுக்கு அந்தத்வீபத்தை அவ்வவர்பெயரால் ஏழாகப் பகுத்துக்கொடுத்து யோகத்தையடைந்தான். அங்கு ஈசானம் ஊருசிருங்கம் பலபத்திரம் சதகேசரம் சகஸ்ரஸ்த்ரோதகம் தேவபாலம் மகாசனம் என்னும்ஏழுபர்வதங்களும், அனகா பிரதமா ஆயுர்த்தா உபயசிருஷ்டி அப்ராஜிதா பஞ்சபதீ சகஸ்ரஸ்ருதி நிஜதிரிதி என்னும் ஏழுநதிகளும் உள்ளன. இந்த த்வீபத்திலுள்ளவர் சத்திய விரதன் கிருதுவிரதன் தானவிரதன் அநுவிரதன் என்னும்நான்குவருணஸ்தர்களாகவிருப்பர். இவர்கள் எந்தப்பகவான்பிராணவாயுசொரூபமாக விருக்கின்றாரோ எந்தப்பகவான் சர்வபூதங்களுடைய உள்ளும்புறம்பும் சர்வாந்தர்மியாயிருந்து ரக்ஷிக்கின்றாரோ எந்தப்பகவானிடத்தில் இந்தப்பிரபஞ்சமெல்லாம் சுவாதீனமாயிருக்கின்றதோ அந்தப்பகவானாகிய விஷ்ணுமூர்த்தி நம்மை ரக்ஷிக்கக்கடவரென்று ரஜோதமோகுணங்களற்று பிராணாயாமத்தினால் பூஜிக்கின்றனர்.

### புஷ்கரத்வீபம்.

சாகத்வீபத்தைச்சூழ்ந்திருக்கும் தயிர்க்கடலுக்கு இரண்டுபங்கதிகமாயுள்ளது இப்புஷ்கர த்வீபம். இது தயிர்க்கடலைச் சூழ்ந்திருக்கின்றது. இப்புஷ்கரத்வீபம். இதற்குச் சமானமான அளவுள்ள சுத்தஜலத்தினால் சூழப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் அக்கினி சுவாலையைப்போல் பிரகாசித்துக்கொண்டிருக்கும் பதினாயிரம் பொன்னிதழுள்ள தாமரைப்பூவிருக்கின்றது. அது பிரம்மாவுக்கு ஆசனமாயுள்ளது. இது இங்ஙனமிருக்க முன் சொல்லிய மானசோத்தர பர்வதம் கிழக்கு மேற்கு என்னும் எல்லைகளை அறிவதற்கு இரண்டுபக்கத்தும் இருக்கின்றது. இந்தப் பர்வதத்தினுடைய

உயரமும் அகலமும் பதினாயிரம்யோசனை. இதனைச்சூழ்ந்து நான்கு பக்கத்தும் இந்திரன் முதலிய உலோகபாலகர்களது பட்டணங் களிருக்கின்றன. இதற்குமேல், சூரியன் சென்று மேருபர்வதத் தைப் பிரதக்ஷணமாகவந்து முன்போல் இந்த மானசோத்தரமெ ன்னும் பர்வதத்தில் தோன்றுகின்றான். இவ்வாறு சூரியன் சுற்றி வருவதாகிய அந்தக்காலம் நமக்கு ஓர்வருடமும் தேவர்களுக்கு இரவும்பகலுங்கூடிய ஓர்நாளுமாம். அந்த த்வீபத்தின் இரண்டு வருஷங்களுக்கு பிரியவிரதன் புத்திரனான வீதிஹோத்திரன் தனது புத்திரர்களான ரவணன் தாதகி என்னும் இருவரையும் ஆளும் வண்ணம் அதிபதிகளாக்கினான். அந்த இரண்டெல்லையிலுமுள்ள புருஷர்கள் சகலப்பிராணிகளுடைய கர்மச்செய்கைகளிலுங் கல ந்து அவரவர்கர்மங்களையெல்லாம் அறிந்து அந்தந்தகர்மஸ்வரூ பமாகவே யிருக்கின்ற பிரஹ்மலிங்கமாயும் பிரஹ்மசொரூபமாயும் பரமேஸ்வரனாயும் இருக்கின்ற பகவானே ஒன்றாயும் அத்வயமா யும் சாந்தமாயும் இருக்கின்ற உனக்கு நமஸ்காரமென்று பக்தியு டையவர்களாய்ப் பூஜிக்கின்றனர். (சு - ம். ௩௬.)

பதின்மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹாதி வித்யாயைநமஃ

## பதினான்காம் அத்தியாயம்.

## லோகாலோகபர்வதவிந்யாஸம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—அதற்குப்பின் லோகாலோகம் என் னும் பர்வதம் பிரகாசமுள்ளலோகத்திற்கும் அது இல்லாதலோ கத்திற்கும் நடுவிலிருக்கின்றது. ஓ தேவருஷியே! அது மான சோத்தரபர்வதத்திற்கும் சுமேருபர்வதத்திற்கும் எவ்வளவுபூமி மத்தியிலிருக்குமோ அவ்வளவும் பொன்மயமாயும் கண்ணாடி யைப்போல் சுத்தமாயும் இருக்கும். அங்கு எந்தவஸ்துவா யினும் வைத்தால் அதற்கு உற்பத்திநாசமுதலான மாறுதல் ஒன் றுங்கிடையாது. பிராணிகள்ஒருவரும் வசிப்பதுமில்லை. இப்பர்

வதத்தை மூன்றுலோகத்திற்கும் அப்புறமுள்ள ஐம்பதுகோடிவிஸ்தாரமான பூகோளத்தினுடைய நான்கிலொருபங்கு உயரமுள்ளதாகச் சூரியன்முதலான கிரகங்களுக்கு முந்தியே ஈஸ்வரன்படைத்திருக்கின்றனன். இந்தப்பர்வதப் பிரகாசத்தினாலேயே சூரியன் முதல் துருவன்வரையிலுமுள்ள கிரகங்களெல்லாம் காந்தியடைந்து மூன்றுலோகத்திற்கும் பிரகாசத்தைச்செய்கின்றன. அதன் மீது நான்குதிக்குகளிலும் பிரமாவினால் சிருட்டிக்கப்பட்டு சமஸ்த லோகத்திற்கும் ஆதாரமாயுமிருக்கும் ருஷபம் புஷ்கரசூடம் வாமனம் பராஜிதம் என்னும்நான்குதிக்கஜங்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கும் அங்கு தமதுவீரிய வுபப் பிரஹ்மணங்களையும் தமதுவிபூதிகளாலுண்டாகும் விசுத்ததத்துவ ஐசுவர்யத்தையும் பிரகாசப்படுத்திக்கொண்டு அஷ்டசித்திகளோடும் விஷ்வக்சேனர் முதலான சேனாபதிகளோடும் தனது ஆயுதங்களோடுஞ் சகலலோகக்ஷேமத்தின் பொருட்டு விஷ்ணுபகவான் கற்பாந்த பரியந்தம் தனது மாயையினால் சிருட்டிக்கப்பட்ட இவ்வுலகைக் காத்துக்கொண்டிருக்கிறார்.

இம்மலைக்குவெளியில் யோகீஸ்வரர்களுக்கு வழியான சுத்தமானஆகாயமிருக்கின்றது; ஆனால் அங்கு சூரியப்பிரகாச மில்லை. பிரமாண்டத்தின், மத்தியிலிருக்கிற சூரியன் இப்பூமி ஆகாயம் இவ்விடத்தில்மாத்திரம் பிரகாசிக்கின்றான். சூரிய அண்டத்திற்கும் பூலோகத்திற்கும் மத்தியில் இருபத்தைந்துகோடியோசனை தூர மிருக்கிறது. மிர்த்தண்டத்தினின்றும் பிறந்தபடியால் மார்த்தாண்டனென்றும் இரணியகர்ப்பத்திலிருந்து பிறந்தபடியால் இரண்யாண்டசமுத்பவன் என்றும் பெயர்பெற்ற சூரியன் திக்குகள் ஆகாயம் நரகம் சுவர்க்கம் பூமி இவைகளின்பேதங்களைத்தெரியப்படுத்துகின்றான். சுவர்க்க மோக்ஷ நரகத்திற்கும் தேவர்களுக்கும் மானுடர்முதலான சர்வராசிகளுக்கும் சூரியன் அந்தர்யாமியானகடவுளாக இருந்துகொண்டிருக்கின்றான். அச்சூரியன் த்விதளம் நிஷ்பாவாதி என்னும் தளங்களுக்கு மத்தியிலிருந்துகொண்டு கிரணங்களால் மூன்றுலோகங்களையும் பிரகாசப்படுத்துகின்றான். உத்தராயணத்திற்குவரும்போது உயர ஏறுகின்றபடியால் ருஷபமுதல் ஐந்துராசிகளில் மெல்லநடந்துபகலைவிருத்திசெய்தும், தக்ஷிணாயனத்துக்குவந்து கீழிறங்குவதினால் விருச்சிகமுதல் ஐந்துராசிகளில் வேகமாய்நடந்து பகலைச்சுருக்கியும், விஷுவத் என்கிற

பெயரையடைந்து மேஷ துலாராசிகளில் சமமாய்நடப்பதினால் இராப்பகலைச் சமமாக்கியும்வருகிறான் என்றனர். (சு - ம் உ அ.)

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹாலா மதா லஸாயைநமஃ

## பதினைந்தாம் அத்தியாயம்.

## ரவிகமனமாந்தியாதிப்ரகாரம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—இனி சூரியனுடைய நடையைப் பற்றிச் சொல்லுகிறேன்கேட்பீராக. சீக்கிரநடை, மந்தநடை, அதி வேகநடை என நடை மூன்றுவகைப்படும். எல்லாக்கிரகங்களுக்கும் மூன்றுஸ்தானங்களுண்டு. அவை ஜரத்கவமென்னும் மத்தியஸ்தானம், ஐராவதம் என்னும் உத்தரஸ்தானம், வைஸ்வாநரம் என்னும் தக்ஷிணஸ்தானம் என்பவைகளாம். அஸ்வனி பரணி கிருத்திகை இம்மூன்றும் நாகவீதி என்றும், உரோகணி மிருகசீரிஷம் திருவாதிரை இம்மூன்றும் கஜவீதி என்றும், புனர்ப்பூசம் பூசம் ஆயிலியம் இம்மூன்றும் அயிராவதிவீதியென்றும், இம்மூன்றுவீதியும் உத்தரமார்க்கமென்றும், மகம் பூர்வபல்குனி உத்தரபல்குனி இம்மூன்றும் ருஷபவீதி என்றும், அஸ்தம் சித்திரை சுவாதி இம்மூன்றும் கோவீதி என்றும், விசாகம் அனுஷம் கேட்டை இம்மூன்றும் ஜாரத்கவிவீதி என்றும், இம்மூன்றும் மத்திமமார்க்கம் ன்எறும், மூலம் பூராடம் உத்திராடம் இம்மூன்றும் அஜவீதி என்றும், திருவோணம் அவிட்டம் சதயம் இம்மூன்றும் மார்க்கிவீதி என்றும், பூரட்டாதி உத்திரட்டாதி ரேவதி இம்மூன்றும் வைஸ்வானரி என்றும், இம்மூன்றும் தக்ஷிணமார்க்கமென்றும் சொல்லப்படும்.

சூரியன் உத்தராயணத்தை யடைந்து நுகத்தடியின் கயிற்றை இழுத்துப் பிடிப்பதாகிய ஆரோகணத்தால் ரதத்தின் நடை மந்தமாய்ப் பகல்விருத்தியடைந்தும் இரவுசுருங்கியும், தக்ஷிணாயனத்தை யடைந்து மண்டலத்திற்குவெளியேசென்று கயிற்றைத்தளரவிடுவதாகிய அபரோகணத்தால் நடைவேகமாய்ப் பகல்குறைந்தும் இரவு

விருத்தியடைந்தும், கயிற்றைஇழுக்காமலும் தளரவிடாமலும் மண்டலத்தின்மத்தியில் செலுத்தும்பொழுது நடைசமமாய் இரவும் பகலும் சமத்தையடைந்தும் வருகின்றன. துருவன் தன்னிடத்திள்ளகயிற்றை எப்பொழுது இழுத்துப்பிடிக்கின்றானோ அப்பொழுது சூரியன் மண்டலத்தினுள்ளும், எப்பொழுதுதளரவிடுகின்றானோ அப்பொழுதுபுறம்பும் சுற்றிவருகின்றான்.

மேருபர்வதத்தின்கிழக்கில் தேவதானிகா என்னும் இந்திரபட்டணமும், தெற்கில் சம்யமம் என்னும் யமபட்டணமும், மேற்கில் நிம்லோசனி என்னும் வருணபட்டணமும், வடக்கில் விபாவரி என்னும் குபேரபட்டணமும் இருக்கின்றன. சூரியன் தேவதானிகாபட்டணத்தில்வரும்போது உதயகாலமும், சம்யமபட்டணத்தில்வரும்போது மத்தியானகாலமும், நிம்லோசனிபட்டணத்தில்வரும்போது அஸ்தமனகாலமும், விபாவரிபட்டணத்தில்வரும்போது அர்த்தராத்திரிகாலமும் ஆகும். இக்காலவேற்றுமைகள் ஜனங்கள் அவ்வக்காலமறிந்து சஞ்சரிப்பதற்கு உண்டாயிருக்கின்றனவேயன்றி சூரியன் எப்பொழுதும் இருப்பவனாதலால் அவனுக்கு உதயாஸ்தமனாதிகள் கிடையாது. அச்சூரியன் மேருபர்வதத்தை எப்பொழுதும் சுற்றிக்கொண்டுவருவதால் ஒருபக்கம்உதயமும் ஒருபக்கம் அஸ்தமனமும் ஆகின்றானென்றும், இப்படியே சகலதிக்குகளிலும் மூலைகளிலும் ஆகின்றானென்றும், யாருக்கு எவ்விடத்தில் காணப்படுகின்றானோ அவ்விடத்தில் உதயமானானென்றும், எவ்விடத்தில் மறைகின்றானோ அவ்விடத்தில் அஸ்தமானமானானென்றும் சொல்லப்படுகிறான். இந்திரன் முதலானவர்களுடைய எதிரில் இருந்துகொண்டு சூரியன் மூன்றுபட்டணத்தில் சம்பந்திக்கிறான். விகரணஸ்தானத்திலிருந்துகொண்டு இரண்டுவிகரணஸ்தானங்களையும், மூன்றுமூலைகளையும், இரண்டு பட்டணங்களையும் சம்பந்திக்கிறான்.

எல்லாத்வீபவருஷங்களுக்கும் மேருமலை வடக்கிலிருக்கிறது. எவ்விடத்தில் சூரியன்காணப்படுகின்றானோ அங்குள்ளவர் அந்தத்திக்கை கிழக்கென்றுசொல்லுவர். சூரியன்முகமாய் நின்று உதயமாகிறானென்று சொல்லுவோருக்கு மேருபர்வதம் இடப்பாகத்திலிருக்கின்றது. சூரியன் இந்திரபட்டணத்திலிருந்து ஐம்பது விநாடிக்குள் இரண்டரைகோடியே பன்னிரண்டரைலக்ஷத்து இர

ண்டாயிரம்யோசனை தாண்டி யமபட்டணத்தை அடைகிறான். இவ்வாறே மேற்கு வடக்கு கிழக்கு திக்குகளை மேற்கண்டகாலத்துக்குள் அவ்வளவுதூரம் தாண்டிவருகிறான். ஆகாயத்துக்கு ரத்னம்போலிருக்கிற காலசக்கரமாகிய சூரியன் சுற்றிவருவது காலத்தைத் தெரியப்படுத்துவதற்கேயாம். அவ்வாறே சந்திரனும் நக்ஷத்திரம் முதலான சகலகிரகங்களும் வரிசைக்கிரமமாக சூரியனுடனே திரிந்து உதயாஸ்தமனங்களை யடைகின்றன. இவ்வாறு சூரியன்ரதமானது ஒருமுகூர்த்தத்துக்குள் முப்பத்துநான்குலக்ஷத்து எண்ணூறுயோசனை தூரம் சுற்றுகின்றது. சூரியனதுகாலசக்கரம் ஆகாயத்தில் செல்லுகின்றது. அந்தரதத்திற்கு ஒரேசக்கரம் பன்னிரண்டு இலைகள் மூன்றுளுவாய் ஆறுவட்டை இவைகளையெல்லாம் சேர்த்து ஒருவருஷமென்று பண்டிதர்கள் சொல்லுகின்றார்கள். முப்பத்தாறுலக்ஷம்யோசனை உயரமும் அதில் நான்கிலொருபாகம் அகலமுமுள்ள சூரியனது ரதத்தில் சாரதியாக ஏற்படுத்திய அருணனால் கட்டப்பட்டஏழுகுதிரைகள் உலகக்ஷேமத்தின்பொருட்டு அந்த ரதத்தை இழுத்துக்கொண்டுபோகின்றன. வாலகில்யரென்னும்அறுபதினாயிரம் ருஷிகள் வேதவாக்கியங்களினால் சூரியன்முன்னின்று தோத்திரஞ்செய்வதன்றி வேறுருஷிகளும் கந்தர்வர்களும் அப்சரஸ்திரீகளும் சர்ப்பங்களும் ராக்ஷசர்களும் தேவர்களும் அச்சூரியனைத் துதிக்கின்றனர். அந்தச்சூரியன் ஒன்பதுகோடியே லக்ஷத்துஐம்பத்திரண்டாயிரம் யோசனை சுற்றளவும் இரண்டுகுரோசம் விஸ்தாரமும் உள்ள பூமண்டலத்தை ஒருக்ஷணத்துக்குள் சுற்றிவருகின்றான் என்றனர். (௬ - ம்.௪௫)

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸகார ரூபாயைநமஃ

## பதினாறும் அத்தியாயம்.

## சோமாதிகளுடைய கமன ஸ்தானாதிகள்.

---

நாராயணர் கூறுகின்றார்:—ஓநாரதரே! இனி சந்திரன்முதலிய கிரகங்கள்செல்லும் விசித்திரமான கதிகளைச் சொல்லுகிறேன்.

குலாலன்சுழற்றுகின்ற சக்கரத்தில்தங்கிய புழுமுதலிய வேறு ஜன்மங்கள் அச்சக்கரஞ்சுழலும்போது அச்சுழற்சி அவைகளுக்கும்

உண்டாவதுபோல் நவக்கிரகசக்கரத்தில் பொருந்திச்சுழல்கின்ற மனிதர்களுக்கு சுபாசுபமாகியபலன்கள் மாறிமாறிஉண்டாகின்றன. ஓநாரதரே! இராசிக்கூட்டத்தினாலும் காலசக்கரத்தினாலும் மேருபர்வதத்தை எப்பொழுதும் பிரதக்ஷணமாகச் சுற்றிவரும் சூரியன் முதலிய கிரகங்கள் நக்ஷத்திரங்களின் மத்தியில் திரிகின்றதனாலும் வேறுவேறுராசிகளை யடைகின்றதனாலும் அந்தக்கிரகங்களுடைய நடைகள் வேறுபோல்காணப்படுகின்றன.

ஆதிபுருஷனும் உலகத்தைச் சிருஷ்டிக்கின்றவனும் அதற்காதாரமாயும் உள்ள நாராயணன் ஆன்மாக்களுக்குக் கர்மசுத்தியுண்டாதற்பொருட்டு தனது ஆன்மாவைச் சூரியன்முதலிய கிரகசொரூபியாகப் பரிணமிக்கச்செய்து திரிந்துகொண்டிருக்கின்றான் என்று வேதங்களாலும் வித்துவான்களாலும் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ஆகலான் வசந்தருது முதலிய ஆறு ருதுக்கிளில் நாராயணர் காலரூபியாய் அந்தருதுக்களுக்குரிய குணங்களைப் பிரகாசப்படுத்துகின்றார். இவரை மாநுடர்கள் வேதங்களாலும் வருணாஸ்ரமங்களாலும் கர்மானுஷ்டானங்களாலும் யோகமார்க்கத்தினாலும் பக்திசிரத்தையோடு வழிபட்டு மேன்மையடைகின்றனர்.

அந்த நாராயணர் ஆகாயம் பூமி அந்தரம் என்னும் மூன்றிடங்களில் காலசக்கரத்தையடைந்து பன்னிரண்டுஇராசிகளால் பன்னிரண்டு மாதங்களாகப்பிரித்து அம்மாதங்கள் கூடியது ஓர்வருடமென்றும், இரண்டுபக்ஷங்கூடியது ஓர்மாதமென்றும், பகலும்இரவுங் கூடியது ஓர்நாள்என்றும், இரண்டேகால் நக்ஷத்திரங்கூடியது ஒரு ராசி என்றும், இரண்டுமாதங்கூடியது ஒரு ருது என்றும், சூரியன் ஆகாயமார்க்கத்தில் வலம் இடமாக வருதலாகிய உத்தராயண தக்ஷிணாயனங்களை இரண் டயனங்களென்றும் சொல்லப்படும் அங்கங்களாக்கினர்.

சூரியன் ஆகாயத்தில் சஞ்சரிப்பதனால் உண்டாகும் காலமுழுவதையும் தனக்குள் அடக்கிக்கொண்டிருப்பதனால் வத்சரமென்றும், அது சம்வத்சரம் பரிவத்சரம் இதாவத்சரம் அநுவத்சரம் இத்வத்சரம் என ஐந்துவகையாமென்றும், அந்தவகை சூரியனுடைய மந்தநடை சீக்கிரநடை சமநடைகளால் உண்டாகுமென்றுங்கூறுவர். இதுவரையில் சூரியனுடைய கமனாதிகளைக்கூறினேன். இனி சந்திரன்முதலியோருடைய கமனாதிகளைக்கூறுகின்றேன்.

சந்திரன் சூரியனுடையகாந்தியினுல் சூரியனுக்கு லக்ஷம்யோசனை உயரத்திலிருந்துகொண்டு சூரியனுடைய ஒருவருடபலனை இரண்டுபக்ஷங்கூடிய ஒருமாதத்தில் கொடுக்கின்றுன். வேகமான கதியுள்ளசந்திரன் நக்ஷத்திரசக்கரத்தையடைந்து இரண்டேகால் நக்ஷத்திரத்தால் தினபலனையும் வருஷபலனையுங் காட்டிக்கொண்டு சஞ்சரிக்கின்றுன். அச்சந்திரன் பூரணகலைகளுடன் கூடியிருக்குங் காலத்தில் தேவர்களுக்கும், க்ஷீணகலைகளுடன் கூடியிருக்குங்காலத்தில் பிதுர்க்களுக்கும் சந்தோஷத்தைவிளைவித்து, கிருஷ்ணபக்ஷத்தில் இருளையும், சுக்லபக்ஷத்தில் பிரகாசத்தையுங் காட்டி எல்லாப் பிராணிகளுக்கும் பிராணனுகவிருக்கின்றுன். இவன் ஒவ்வொரு நக்ஷத்திரத்தையும் முப்பது முகூர்த்தகாலம் வரையில் அனுபவிக்கிறுன். அன்றியும் மனேமயனும் அன்னமயனும் அமிர்தமயனும் அமிர்தத்துக்கு ஆகரனும் அமிர்தமயமானகாந்தியுள்ளவனும், பதினறு கலைகளையுடையவனும் தேவர்கள் பிதுர்க்கள் மானுடர்கள் ஸ்தாவரங்கள் முதலியயாவர்க்கும் தனது தாரையால் சுகத்தையுண்டுபண்ணுகின்றவனும் இருத்தலால் சர்வமயன் என்று சொல்லப்படுகிறுன். இந்தச் சந்திரன் மூன்றுலக்ஷம்யோசனை தூரத்திலுள்ள நக்ஷத்திர சக்கரத்தில் மேருபர்வதத்தைப் பிரதக்ஷிணமாக ஈஸ்வரனுல் சேர்க்கப்பட்ட அபஜித்து நக்ஷத்திரத்தோடு இருபத்தெட்டு நக்ஷத்திரங்களையடைகிறுன்.

இதற்குமேல் உலகத்திற்கு மிக்க அனுகூலத்தையும் சுகத்தையும் உண்டாக்குகின்றவனும் மழையினுடையதடையை நிவிர்த்தி செய்கின்றவனும் தீவரம் மந்தம் சமம் என்னும்மூன்றுநடையினையுடையவனும் உள்ள சுக்கிரன் சூரியனுக்கு இரண்டுலக்ஷம் யோசனைக்குமேல் இருக்கின்றுன்.

இம்மண்டலத்திற்குமேல் புதன் இரண்டுலக்ஷம்யோசனை உயரத்தில் சுக்கிரனைப்போலவே முன்சொன்ன மூன்றுநடையோடுங் கூடி சுற்றிக்கொண்டிருக்கின்றுன். இவன் எப்பொழுது சூரியனை விட்டுப் பிரிகின்றுனே அப்பொழுது பெருங்காற்று இடி மழை முதலான பயத்தை உண்டாக்குவன்.

இப்புதனுக்குமேல் இரண்டுலக்ஷம் யோசனை உயரத்தில் அங்காரகன் ஒவ்வொருராசியில் மும்மூன்றுபக்ஷம் வசிக்கின்றுன். பன்

ளிரண்டுவருடம்வரையில் வக்கரிக்காமலிருந்தால் கிரகங்களின்அசுபத்தை அனேகமாய்த் தெரியப்படுத்துவான்.

இதற்குமேல் இரண்டுலக்ஷம்யோசனை உயரத்தில் பிரகஸ்பதி ஒவ்வொருராசியில் பன்னிரண்டுமாதம் சஞ்சரிக்கின்றார். இவர் வக்கரிக்காமலிருப்பாரானல் பிராமணர்களுக்கு அனுகூலமாம்.

இதற்குமேல் இரண்டுயோசனை உயரத்தில் கோரரூபியான சநி பகவான் ஒவ்வொருராசியில் முப்பதுமாசம் சஞ்சரிக்கின்றான். சூரியன்புத்திரனை இவன் கிரகங்களுக்குள் அசுபனென்று காலம் அறிந்தவர்களால் சொல்லப்படுகிறான்.

இதற்குமேல் பதினொருலக்ஷம்யோசனை உயரத்தில் சப்தருஷி மண்டலம் இருக்கின்றது. அதில் உலகங்களுக்கெல்லாம் க்ஷேமத்தைவிரும்புகின்றவர்களான ஏழுருஷிகளும் ஆகாயத்தில் பிரதக்ஷணமாகச்சுற்றுகின்றார்கள் என்றனர். (சு - ம் ௩எ.)

பதினாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வக்ஞாயைநமஃ

## பதினேழாம் அத்தியாயம்.

## துருவமண்டலஸ்தானம்.

---

நாராயணர்கூறுகின்றார்:—சப்தருஷிமண்டலத்துக்குமேல் பதின்மூன்றுலக்ஷம்யோசனை உயரத்திலுள்ள விஷ்ணுபதத்தில் மகாபாகவதனும் ஐஸ்வர்யவானும் யாவராலும் நமஸ்கரிக்கப்பட்டவனும் உத்தானபாதனுடைய புத்திரனும் இந்திரன் அக்னி காசிபர் தருமன் இவர்களோடு வாசஞ்செய்பவனும் கற்பாந்தபரியந்தம் ஜீவித்திருக்கின்றவனும் உள்ள துருவன் அதிவேகமாய்ச் சுழலுகின்ற சகலஜோதிர் கணங்களுக்கும் நவக்கிரக நக்ஷத்திரங்களுக்கும் ஆதார ஸ்தம்பம்போல் ஈஸ்வரனல் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றான்.

மேழியில் கட்டப்பட்டு பிணையடிக்கும் பசுக்களைப்போல் காலசக்கரத்தில் எல்லாக்கிரகங்களும் வரிசையாய்க் கட்டுப்பட்டவைகளாய் டேகைமுதலானபக்ஷிகள் ஆகாயத்தில் உலாவுதல்போல் கற்

பாந்தபரியந்தம் கர்மத்தைச் சாரதியாக்கி பிரகிருதிபுருஷனுடைய சம்பந்தத்தால் பூமியில்விழாமல் துருவனைச்சுற்றி வருகின்றன. அந்தச்சக்கரம் சிசுமாரசொரூபமாயும் சோதிரூபமாயும் கீழ்நோக்கிய பார்வையுடையதாயும் குண்டலம்போல் விருத்தாகாரமாயும் வலப்பக்கமாய்ச் சுழல்வதாயும் உள்ளது. இதனைச் சிலர் பகவானுடைய யோககர்மத்தில் உபயோகப் படுத்துகின்றனர்.

இந்தச்சக்கரத்தின் வாலடியில் துருவனும், வால்நடுவில் பிரமனும், வால்நுனியில் அக்னி இந்திரன் இயமன் தாதாவிதாதா இவர்களும், இடுப்பில் சப்தருஷிகளும், வலப்பக்கத்தில் உத்தராயணநக்ஷத்திரங்களும்,இடப்பக்கத்தில் தக்ஷணாயனநக்ஷத்திரங்களும் தாபிக்கப்பட்டிருக்கின்றன. அஜவீதியினுடைய பின்பாகத்தின் வலப்பக்கத்தில் புனர்வசு புஷ்யமும், இடப்பக்கத்தில் திருவோணம்அவிட்டமும், பின்கால்களின் வலப்பக்கத்தில் ஆருத்திராவும், இடப்பக்கத்தில் ஆயில்யமும், சக்கரத்தின் வலப்பக்கத்தில் அபஜித்தும், இடப்பக்கத்தில் உத்திராடமும், வலக்கண்ணில் சிராவணமும், இடக்கண்ணில் பூர்வாஷாடமும், வலக்காதில் அவிட்டமும், இடக்காதில் மூலமும், இடப்பக்கத்திலிருக்கின்ற வளைந்த ஸ்தானத்தில் மகம் முதலான எட்டு உத்தராயண நக்ஷத்திரங்களும், வலப்பக்கத்திலிருக்கின்ற வளைந்த ஸ்தானத்தில் மிருகசீரிஷ முதலிய எட்டு நக்ஷத்திரங்களும், கழுத்தின்வலப்பக்கத்தில் சததாரையும், இடப்பக்கத்தில் ஜேஷ்டாதாரையும், அது என்னும் மேல்நரம்பில் அகஸ்தியமுனிவரும், கீழ்நரம்பில் இயமனும், முகத்தில் அங்காரகனும், உபஸ்தானத்தில் சனியும், முசுப்பின்மேல் பிரகஸ்பதியும், மார்பில் சூரியனும், இருதயத்தில் நாராயணரும், மனசில்சந்திரனும், ஸ்தனங்களில் அஸ்வனிதேவதைகளும், நாபியில்சுக்கிரனும், பிராண அபானஸ்தானங்களில் புதனும், கண்டத்துக்குள் இராகுகேதுக்களும், எல்லாரோமத் துவாரங்களில் எல்லாநக்ஷத்திரங்களும் தாபிக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வகைத்தான சிசுமாரசக்கரமானது விஷ்ணுமூர்த்தியினுடைய சர்வதேகசொரூபமான சரீரம். இச்சரீரத்தை முனிவர்கள் நாடோறும் சந்தியாகாலங்களில் பரிசுத்தர்களாயும் மவுனமாயும் தியானிக்கின்றார்கள். ஆகாயத்தை நோக்கினவர்களாய் "நமோ ஜோதிர்லோகாய காலாய நிமிஷாம்பதயே மஹா புருஷாயா

பிதீமஹீ" என்னும் மந்திரத்தினல் ஜோதிசக்கரத்தை மூன்று காலத்திலும் ஜபித்துப் பூஜித்தால் பாவங்களெல்லாம்போம். கிரகநக்ஷத்திரமுதலியவற்றை ஸ்தாபித்துள்ள இந்தத்தெய்வசக்கரத்தை முக்காலத்திலும் நமஸ்கரித்தால் அதுவரையிலுள்ள பாவங்களெல்லாம் நீங்கிவிடும் என்றனர். (சு - ம் உகூ.)

பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வேஶ்வர்யைநமஃ

## பதினெட்டாம் அத்தியாயம்.

## இராகுமண்டல ஸ்தானம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—சூரியமூர்த்திக்குக்கீழ் பதினாயிரம் யோசனை தூரத்தில் ராகுமண்டலம் இருக்கின்றது. நக்ஷத்திரம் போல் சஞ்சரிக்கின்ற சிம்ஹிகாபுத்திரனை ராகு என்பவன் நக்ஷத்திரங்களோடுசேரத்தகாதவனாயிருந்தபோதிலும்விஷ்ணுவின் அனுக்கிரகத்தினல் ஆகாயத்தில் சஞ்சரிப்பதையும் அமரத்தன்மையையும்அடைந்துபௌர்ணமியில் சந்திரனைப் பதின்மூவாயிரயோசனைவிஸ்தாரமுள்ளவனாகவும்,அமாவாசையில் சூரியன்காந்தியை ஆயிரம்சூரியனளவுள்ளவனாகவும் தூரத்திலிருந்து மறைத்து தன்வயிரத்தை வெளிப்படுத்துகின்றவனாகின்றான். இச்செய்தியை விஷ்ணுமூர்த்தி அறிந்து அக்னி சுவாலைகளால் சூழப்பட்ட சுதரிசனம் என்னும் சக்கராயுதத்தை ஏவ, அதனைக்காணும் ராகு ஒருமுகூர்த்தகாலம் பயந்தவனாய் சூரியசந்திரர்களை விட்டுத்திரும்புகின்றான். இதனை உலகில் உபராகம் என்று சொல்லுகின்றனர்.

அதன்கீழ் புண்ணியசீலர்களான சித்தர் சாரணர் வித்தியாதரர் இவர்களுக்குப் பதினாயிரம்யோசனை விசாலமுள்ள உலகங்களிருக்கின்றன. அவைகளின் கீழ் யக்ஷர் ராக்ஷசர் பிரேதங்கள் பூதங்கள் இவர்களுக்கும் உத்தமமான ஸ்தானங்களிருக்கின்றன. ஆகாயத்தில் எவ்வளவு தூரம் வாயு சஞ்சரிக்கின்றதோ அவ்வளவுதூரம் அந்தரிக்ஷமென்றும், மேகங்கள் சஞ்சரிக்கும் ஸ்தானபரியந்தம் அந்தராக்ஷணமென்றும், அதற்குக்கீழ் நூறுயோசனைபரியந்தம் கரு

டன் பேடைகை அன்னம் ராஜாக்கள் இவர்கள் சஞ்சரிக்கத்தக்கவிடம் பூமி என்றும் பெயர் பெறும்.

ஓ தேவருஷியே! பூமியின்கீழ் நூறுயோசனைவிசால முள்ள ஏழுபிலத்துவாரங்க ளிருக்கின்றன. அதற்குள் பதினாயிரம் யோசனைவிசாலமுள்ள அதலம் விதலம் சுதலம் தராதலம் மகாதலம் ரசாதலம் பாதாளம் என்னும் எழுலோகங்கள் ஒன்றின்கீழ் ஒன்றாக அமைந்துகிடக்கின்றன. அங்கு மாயையில்வல்ல மயனால் நிர்மிக்கப்பட்ட தேவர்களுக்குங் கிடைத்தற்கரிய அழகானபட்டணங்களும் சுகத்தை மிகுதியாகக் கொடுக்கும் விசித்திரமான கிருகங்களும் கோபுரங்களும் சபைகளும் உத்தியான வனங்களும் அவ்விடங்களில் சுரர் அசுரர் நாகர் இவரெல்லாம் தத்தம் மனைவிகளுடனும் உல்லாசமா யிருப்பர். மாடப்புறு மைநா முதலிய பக்ஷிக்கூட்டங்கள் தத்தம் பேடைகளுடன் மகிழ்ந்திருக்கும். பலவர்க்கங்களாலும் புஷ்பவகைகளாலும் மனத்துக்குச் சந்தோஷத்தைத்தரும் பெரியதோட்டங்களும் ஸ்திரீகள் கிரீடிக்கத்தக்க கிரீடாஸ்தானங்களும் நானாவிதமானபக்ஷிகள் உலாவிக்கொண்டிருக்கும் தடாகங்களும் மச்ச முதலான ஜலசரங்களால் அலங்காரமாய்க்காணப்படும் நீர்நிறைந்துள்ள மடுக்களும் குட்டைகளும் ஆம்பல் கருநெய்தல் செங்குவளை முதலிய மலர்கள் நெருங்கியிருக்கும்ஓடைகளும் பஞ்சேந்திரியங்களுக்கு இன்பத்தையுண்டுபண்ணப்பட்ட நானாவிதமான மானத சரசுகளும் தேவர்களுடையசம்பத்தைக் கீழ்ப்படுத்திவிளங்குகின்றன.

இவ்வாறுநிர்மிக்கப்பட்டிருக்கும் அவ்விடங்களில் தயித்தியர்களும் தானவர்களும் நாகர்களும் பலசாலிகளாய் மனைவிமக்கள் பந்துக்கள் நட்பாளர்கள் வேலைக்காரர்கள் முதலானவர்களோடு தங்களுடையகிருகங்களில் சந்தோஷத்தோடுகூடினவர்களாய் ஈஸ்வரனுடைய அனுக்கிரகத்தால் தடையில்லாத மாயையோடு காமமுதலானவற்றை யுள்ளவர்களாயும், ருதுக்காலங்களில்உண்டாகும் சுகங்களோடுகூடினவர்களாயும், உத்தியானவனங்களில் கிரீடிக்கின்றவர்களாயும், சுவர்க்கத்தைக்காட்டிலும் அதிகமான காமபோகஐஸ்வர்ய சுகசம்பத்துக்களை அனுபவிக்கின்றவர்களாயும் வாசஞ்செய்துகொண்டிருக்கின்றனர்.

அவ்விடங்களில் இராப்பகல் எப்பொழுதும் பயமேகிடையாது. ஏனெனில் அங்குள்ள சர்ப்பசிரேஷ்டங்களுடைய தலைகளிலிருக்கும் இரத்னகாந்திகளால் இருள்நீங்கிவிடுகின்றது. அவ்விடத்திலிருப்பவர்களுக்கு ரசாயனங்களாலும், அன்னபானாதிகளாலும் ஸ்நானங்களாலும் நோயும் கிழத்தன்மையும் நரையும் நிறம் மாறுதலும் வேர்வையும் துர்க்கந்தமும் சந்தோஷமில்லாதிருப்பதும் கிடையாவாம். விஷ்ணுமூர்த்தியினுடைய தேஜோமயமான சுதரிசனமாகிய சக்கரத்தினால் மிருத்யுபயமுமில்லை. அந்தச்சக்கராயுதம் வெளிப்படும்பொழுது அதைப்பார்க்கின்ற அசுரஸ்திரீகளுடைய கர்ப்பங்கலங்கிப்போம் என்றனர். (சு - ம். ௩௪)

பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வ மங்களாயைநம:

## பத்தோன்பதாம் அத்தியாயம்.

## அதலாதி லோகத்ரய வர்ணம்.

---

### க. அதலம்.

நாராயணர்கூறுகின்றார்:—ஓநாரதரே! அதலத்தில்மயன்புத்திரனான பலன் பிரசித்தனாய் சர்வப்பிரயோசனத்தையும் கொடுக்கவல்ல தொண்ணூற்றாறுமாயைகளைச் சிருட்டித்தான். மாயாவித்தையில் விருப்பமுள்ள அனேகர் அவைகளை உபயோகப்படுத்திக்கொண்டிருக்கின்றனர். பலசாலியான அவன் கொட்டாவிவிடும்பொழுது உலகினரை மோகிக்கச்செய்யவல்ல பும்சலி சுவைரணி காமனி என்னும் மூன்றுஸ்திரீகள் வெளியில்வருவர். அவர்கள் பிலவழியாகப் பிரவேசிக்கின்றவரை ரகசியத்தில் ஆடகமென்னும் ரசாயனத்தினால் மிகுந்தமுயற்சியோடு சுவாதீனம்செய்துகொண்டு தங்களுடையவிலாசமான பார்வையாலும், அன்போடுபொருந்திய புன்சிரிப்பாலும், ஆலிங்கனத்தாலும், வினோதமான சொற்களாலும் சந்தோஷத்தை விளைவித்து கிரீடித்துக்கொண்டிருப்பர். அப்பொழுது அவர்களை அனுபவிக்கும்புருஷர்கள் நாம்தான் ஈஸ்வரன், நாம்

தான் சித்தன், நமக்குப்பதிநாயிரம் யானைபலம் இருக்கின்றதென்று மதம் பிடித்தவர்கள்போல் தம்மைத்தாமேபுகழ்வர்.

## ௨ - விதலம்.

விதலத்தில் ஆடகேஸ்வரர் தனதுபிரமதகணங்களால் சூழப்பட்டவராயும் பிரமனால் சிருட்டிக்கப்பட்ட சிருட்டிகளை விருத்திசெய்கின்றவராயும் தேவர்களால் பூஜிக்கப்பட்டவராயும் இருக்கின்றார். அவ்விடத்தில் பார்வதிபரமேஸ்வரருடைய வீரியம் ஆடகமென்னும் நதியாகப் பெருகி ஓடுகின்றது. அதில் உண்டாகின்ற ஆடகம் என்னும் சிறந்தபொன்னை தயித்தியஸ்திரீகள் பூஷணங்களாக்கி எப்பொழுதுந் தரித்துக்கொண்டிருக்கின்றார்கள்.

## ௩ - சுதலம்.

சுதலத்தில் பலிச்சக்கிரவர்த்தி நல்லகீர்த்தியுடனும் இந்திராதியரினும் சிறந்த சம்பத்துடனும் விஷ்ணுவைப் பக்தியோடுபூஜித்துக்கொண்டும் இருக்கின்றனன். விரோசனன் புத்திரனான அவனிடம் திருமால் இந்திரனுக்குப் பிரீதியை யுண்டாக்கும் பொருட்டு வஞ்சனையான எண்ணத்தோடு வாமனராய்வந்து அவனது சரீரந் தவிர மற்றசம்பத்துக்களையும் திரிவிக்ரமரூபங்கொண்டு அவனால் ஆளப்பட்ட மூவுலகினையும் ஆக்ரமித்துப் பின் அவனை வருணபாசங்களாற்கட்டி மலையின்குகைபோன்ற இப்பிலத்தில்விட்டு. சுகமாய்வாழ்ந்திருக்கச்செய்து தானும் துவாரபாலகராயிருந்தனர். இருக்குங்காலத்தில் அங்கு இராவணன்வர அவனைத் தனதுகாற் கடைவிரலால் தூக்கிஎறிய அவன் பதினாயிரம்யோசனைதூரம் பிலத்திற்குவெளியே வீழ்ந்தனன்.

ஓ நாரதரே! பலிக்கு விஷ்ணுமூர்த்தி தான் காவலாளியாயிருக்கும் சிறப்பைக்கொடுத்தும் வருணபாசத்தாற்கட்டியிருத்தியதற்குக் காரணம்யாதெனின்! தன்னை பக்திசெய்துபெற்றசெல்வங்களையேதான்பெறத்தகும் பயனாகவெண்ணி மகிழ்ந்திருந்தனனேயன்றி கர்மபந்தங்களை நிவிர்த்திசெய்யும் வகையை எண்ணினானில்லை. அதனால்அவனதுசெல்வத்தை வஞ்சனையால்கிரகித்து காவலுட்படுத்தினர். செல்வத்தின் உண்மையையறிந்த முனிவர்கள் சாங்கியயோக சாதனங்களால் கர்மபந்தங்களை நிவிர்த்திசெய்கின்றனர். நாமும்கர்மநிவிர்த்தியைத் தேடாமையால் சர்வதுக்கத்துக்கும் காரணமாயும் பரமாத்மா

வின் தியானத்தைத் தடுப்பதாயும் இருக்கின்ற மாயாமயமான போகஐஸ்வர்யத்தை வெளிப்படுத்தி அவைகளில் நம்மைமோகப்படுத்துகிறார். கர்மபந்த நிவிர்த்தியுடையவன் பக்தியில்லாதவனாய் நாமத்தை மாத்திரம் யுச்சரிப்பானாயினும் அவன் கர்மபந்தங்களையுதறி பகவானுக்கு ஆளாகின்றனன். பிரகலாதன் தனது பிதாமுதலிய ஐஸ்வர்யங்களைமறந்து விஷ்ணுவினுடைய தாசத்தன்மையை விரும்பினானாகலான் அவனது மகிமை மூவுலகினும் பிரசித்தி பெற்றிருக்கின்றதன்றோ அதனையறிவீர் என்றனர். (சு - ம் ௩௨)

பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வ கர்த்ரை நமஃ

# இருபதாம் அத்தியாயம்.

## தலா தலாதி லோகசதுஷ்டய வர்ணனம்.

---

### ச - தலாதலம்.

நாராயணர் கூறுகின்றார்:—அதலத்திற்குக்கீழ் தலாதலத்தில் திரிபுராதிபதியாய் மயனென்றுபிரசித்திபெற்ற ராக்ஷசன் அத்திரிபுரத்தைச் சங்கரர் தகனம்செய்த காலத்தில் அவருடைய அனுக்கிரகத்தினால் அரசாக்ஷிசெய்து கொண்டிருந்தனன். மாயை அறிந்தவர்களுக்கெல்லாம் குருவும் மாயையில் சமர்த்தனுமான அந்த மயன், தங்களுடைய காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளவேண்டுமென்கிற எண்ணமுடைய கோரரூபிகளான அசுரர்களால் பூஜிக்கப்படுகிறான்.

### ரு - ரசாதலம்.

ரசாதலத்தில் காத்திரவேயர்களென்னும் சர்ப்பங்கள் மிக்க கோபமுள்ளவைகளாயும் அநேகம் சிரசுகளுடையனவாயும் பிராஹ்மணர்களைப் பிரதானமாக உடையனவாயும் இருக்கின்றன. அவைகளில் குகன் தக்ஷன் சுவேணன் காலேயன் என்னும் நான்கும் பிரதானமானசாதிகள். இவைகள் நீண்டசரீரமும் மகாபலமும் மகாகுரூரமும் உள்ளன. ஆயினும் கருடனிடத்துள்ள பயத்தினால் வெளி

யேபோவதின்றி இவ்வுலகில் பிரவேசித்துத் தனது மனைவி மக்கள் சிநேகருடன் அதிகமதத்தோடு கிரீடித்துக்கொண் டிருக்கின்றன.

## ௬ - மகாதலம்.

மகாதலத்தில் நிவாதகவசர்கள், காலகேயர்களென்று பிரசித்தியடைந்திருக்கின்ற ராக்ஷசர்கள் தேவர்களுக்கு விரோதிகளாய் ஆகாயத்திற்பறந்துசென்று அங்கிருந்தவண்ணம் மகாசாகசமான காரியங்களைச்செய்கின்றவர். அவர்கள் இந்திரனுடைய தூதியான சரமயினது மந்திரரூபமான வாக்கினால் ஓர்சமயம் அபஜயமடைந்து அடிக்கப்பட்டவர்களாய் இங்கு வசிக்கின்றனர்.

## ௭ - பாதாளம்.

பாதாளத்தில் வாசுகி சங்கன் குளிகன் சுவேதன் தனஞ்சயன் மகாசங்கன் திருதாஷ்டன் சங்கசூடன் கம்பலாஸ்வதரன் தேவோபதத்தகன் முதலான நாகலோகாதிபதிகளாயுள்ள பாம்புகள் மிகுந்த கோபமும் நீண்டசரீரமும் அதிகமானவிஷமும் ஐந்து ஏழு பத்து நூறு ஆயிரமாகப் படமும் ஒளிவீசும் ரத்தினங்களை முடிகளிலும் உள்ளவைகளாய் இருக்கின்றன. அவைகளுடைய ரத்தினகாந்திகளால் அங்கு சூழ்ந்திருக்கும் இருள் நாசமடைகின்றது. இவ்வுலகில் மூலஸ்தானத்தில் முப்பதினாயிரம்யோசனை விசாலமுள்ள இடத்தில் தாமசீஎன்னும் பகவானுடைய கலையானது அநந்தைஎன்னும் பெயருள்ளதாய் சகலதேவர்களாலும் பூஜிக்கப்படுகின்றது. நாமென்னும் அகங்காரத்திற்கு அந்தத்தாமசத்தையே லக்ஷணமாகச்சொல்லப்பட்டிருக்கிறது. பார்க்கின்றவர்களுடைய நேத்திரங்களை ஒரு க்ஷணத்தில் இழுத்துவிடுகிறது. இந்தலோகமெல்லாம் ஆயிரம் சிரசுள்ள ஆதிசேஷனால் தாங்கப்பட்டிருக்கிறது.

சங்கர்ஷணரென்னும் ருத்திரபகவான் பதினொருகணங்களுடன் கூடினவராய் முக்கண்ணுள்ளவராய் திரிசூலத்தைஎடுத்துக்கொண்டு மஹாபூதங்களையெல்லாம் நாசம்செய்கின்றவராய் எழுந்திருந்தார். அவருடையதிருவடித்தாமரைகளின் சிவந்தநககாந்தியினால் மேலானசர்ப்பங்களெல்லாம் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. அந்தநாகர்களெல்லாம் பக்தியோகத்தோடு சத்துவகுணமுடையவராய் அந்தசங்கர்ஷணமூர்த்தியை நமஸ்கரித்துக்கொண்டு தங்கள் தங்கள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருப்பார்.

அவர்களுடைய இரண்டுதொடைகளும் காதுகளில் அணிந்திருக்கும் குண்டலங்களிலுள்ள மணிகளின்ஒளியினுல் அழகுபெற்றிருக்கும். ஆதிசேஷனுடைய புத்திரிகளும் அழகான சரீரகாந்தியும் வெண்மையும் மிருதுவும் மனோகரமுமுடைய சரீரிகளாயும் நிர்மலராயும் நீண்டகைகளுடையவராயும் அங்கும் இங்கும் நாகர்களுடன் உலாவிக்கொண்டு சந்தனம் அகில் குங்குமப்பூ முதலியவற்றுல் பரிமளிக்கின்றவராயும் சங்கர்ஷணருடைய சம்பந்தத்தினுல் காமவேகமும் இனிமையான புன்சிரிப்பும் நாணமும் உடையவராயும் உலகினரைப்பார்ப்பர். இவ்வகைத்தான சர்ப்பக்கூட்டங்களோடு அளவிறந்த பலமும் கீர்த்தியும் நற்குணமும் உடையஆதிசேஷன் அவ்விடத்தில் வீற்றிருப்பன். அவன் உலகக்ஷேமத்தை எண்ணி கோபவேகத்தையடக்கி சத்துவகுணமுடையவனுய் சுராசுரர்களாலும் சித்தவித்யாதர கந்தர்வராலும் முனிவராலும் சர்ப்பங்களாலும் போற்றப்பட்டவனுய் யாவரையு நல்ல நோக்கத்தோடு பார்க்கின்றவனுய் தேவர்களை இனியசொல்லால் திருப்தி செய்வதுமன்றி வைஜயந்தி என்னுங் கொடிமரத்தைத் தரித்துக்கொண்டும் நல்லதுளபமாலை வண்டுகள் ரீங்காரஞ் செய்யும் மணங்கமழும் புஷ்பமாலை நீலவஸ்திரம் குண்டல முதலியவற்றுல் அலங்காரமுடையனுய் கலப்பையின் முதுகில் கையை ஊன்றிக்கொண்டு இந்திரனுடைய யானை பொன்மயமான ஆயுதத்தைத் தரித்திருப்பதுபோல் அலாயுதத்தை ஏந்தி கம்பீரமான லீலாவினோதத்துடன் சாத்வீக குணமுடையவர்களால் சோபனம்பாட இருப்பன் என்றனர். (சு - ம் ௬௭௨)

இருபதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வதாத்ரைநமஃ

## இருபத்தோன்றும் அத்தியாயம்.

## ஆதிசேஷஸ்துதி, நரகாதிஸ்வரூபம்.

---

நாராயணர் கூறுகின்றூர்:—பிரஹ்மபுத்திரனுன சநாதனர்ஆதிசேஷனது விசேடங்களை எண்ணி அவனைப்பிரஹ்ம ஸ்வரூபமாக அறிந்து உபாசித்து ஓ ஆதிசேஷனே! உனது இச்சையே சத்வ

ரஜோ தமோ குணங்கள் உற்பத்தி நாசங்களடைதற்குக் காரணமாகின்றன. உனது உருவமானது அழிவில்லாததாய் அமிர்தமயமாயிருக்கின்றது. பரமாத்மசொரூபமான உன்னை உலகில் அறிந்தவர்யாவர்? சத்துவகுணமானது எவனுடைய கிருபையினால் நிலைபெற்றிருக்கின்றதோ! சதசத்ரூபமான இவ்வுலகம் எவனிடத்தில் சம்பந்தப்பட்டிருக்கின்றதோ! சிம்ஹரூபத்தினிடத்தில் பக்தனை உத்தேசித்து எந்தப் பகவானுடைய லீலை வெளிப்பட்டதோ! அந்தப்பகவானையுடையவனாகிய உன்னை நமஸ்கரிக்கின்றேன். எவனுடைய நாமத்தைவியாதிமுதலியவற்றால் துன்பப்பட்டேனும் கபடத்தினாலேனும் நினையாமல் உச்சரித்தாலும் கேட்டாலும் அவர்களுடைய பாபங்களெல்லாம் நாசத்தை யடைகின்றன. அந்தப்பகவானாகிய உன்னைவிட்டு மோக்ஷத்தையடைய வேண்டியவன் எவனை ஆஸ்ரயிப்பான். எவன் மலை நதி கடல் முதலியவற்றோடு கூடியிருக்கும் இம்மலைபோன்ற பூகோளத்தை ஓரணுவைப்போல்முடியில் தாங்கியிருக்கும் அவனாகிய உனது பராக்கிரமத்தை ஒருவன் ஆயிரம் நாவுடையனாய்ச் சொல்ல எண்ணினும் முடியுமோ! இப்படிப்பட்ட மகிமையையும் பராக்கிரமத்தையும் உடையநீ உலகக்ஷேமத்தின் பொருட்டு பூமியை முடியில் தாங்கியிருக்கின்றனை என்று துதிக்கின்றனர். ஓ நாரதரே! இனி புண்ணிய பாபானுபவங்களுக்குக் காரணம் எதுவோ அதனையும், நரகத்தின் நாமங்களையும், அதனையனுபவித்தற்குரியார் இவரென்பதையும் கூறுகின்றேன்.

சம்சாரபந்தமுடைய ஆன்மாக்களாகிய அரசர் மாநுடர் ஏனையோர் அவரொழிந்த மிருகமுதலிய பக்ஷிகள் செய்யப்படும் கர்மபேதங்களே புண்ணியபாவானுபவங்கட்குக்காரணம். அவற்றையனுபவிப்பவர் அரசர் முதலாயினரே என்று நாராயணர்கூற நாரதர், ஐயா! எல்லாம் செய்பவர் பகவானாயிற்றே, அவர் கஷ்டம் சுகம் என்று இரண்டுபேதமாகச்செய்வானேன் என்றுவினவ. ஓ நாரதரே! பகவான் அவரவர் செய்யும் கர்மங்கட்குரிய பலன்களைவகுத்துச் செய்பவரேயன்றி கர்மங்களைச் செய்பவராகார். ஆகவே ஆன்மாக்கள் சிலர் சத்துவகுணசம்பந்த முடையவராயும், சிலர் ரஜோகுண சம்பந்தமுடையவராயும் சிலர் தமோகுண சம்பந்தமுடையவராயும் கர்மங்களைச் செய்வதனால் சத்துவகுணசம்பந்தமாகச்செய்யப்படும் கர்மாக்களுக்கு எப்பொழுதும் சுகமும், ரஜோகுண சம்பந்தமாகச்

செய்யப்படும் கர்மாக்களுக்கு எப்பொழுதும் துக்கமும், தமோ குணசம்பந்தமாகச் செய்யப்படும் கர்மாக்களுக்கு எப்பொழுதும் துக்கமுமபகுத்தறியும்அறிவின்மையுமாகிய இரண்டும் உண்டாகின்றன. இவற்றின் பேதங்களால் ஆன்மாக்களுடைய அநுபவங்கள் ஆயிரம்முகமாக சுகமேயாகவும் துக்கமேயாகவும் இரண்டுமேயாகவும் வருகின்றன இம்முக்குணசம்பந்தம் உயிர்களுக் குண்டாவதற்கு மூலகாரணமாயுள்ளது அஞ்ஞானமேயாம். இனி நரகாதிகளையும் அந்தநரகங்கள் வருவதற்கான செய்கைகளையும் கூறுகின்றேன்.

மூன்றுலோகங்களுக்கு நடுவிலும் தென்திக்கிலும் பூமியின் கீழும் அதலலோகத்தின்மேலும் அக்னிஷ்வாத்தா முதலானபிதுர்க்கணங்களும் பிதுர்க்களும் இருந்து தமது கோத்திரத்தில் வருகின்றவர்களுக்குசீக்கிரத்தில் க்ஷேமம் உண்டாகவேண்டுமென்று கோருகின்றவர்களாய் தியானசமாதியிலிருப்பார்கள். யமதருமன்தன்னிடத்தில் தனது கிங்கிலியர்களால் கொண்டுவரப்பட்ட உயிர்களைநோக்கி அவரவர்களியற்றிய கர்மாக்களின் வேற்றுமைகளை விசாரித்துத் தனதுகர்த்தாவாகியபகவான்நியமித்திருக்கும்விதிகளையறிந்து அவரவர்க்குச்செய்யவேண்டியதண்டனைகளைத் தூதர்களிடத்தில்சொல்லி அதுபோல்செய்யக் கட்டளையிடுவான். தண்டனைக்குரியநரகங்கள் சிலர்இருபத்தொன்றென்றும், சிலர் இருபத்தெட்டென்றும் கூறுவர். இருபத்தெட்டாவன:—தாமிஸ்ரம் அந்ததாமிஸ்ரம் ரௌரவம் மகாரவுரவம் கும்பீபாகம் காலசூத்ரம் அசிபத்திரவனம் பன்றிமுகம்அந்தகூபம் கிரிமிபோஜனம் சந்தம்சம் வஜ்ரகண்டகம் சான்மலீ வைதரணீ பூயோதம் பிராணரோதம் விஸசனம் லாலாபக்ஷம் சாரமேயாதனம் அவீசி அயஃபானம் க்ஷாரகர்த்தமம் ரக்ஷோகணம் சூலப்புரோதம் தந்தசூகம் வடாரோதம் பர்யாவர்த்தனகம் சூசீமுகம் என்பனவாம். இந்தநரகங்களில் எதையாருக்குவிதிக்கின்றானோ அதை அவர்கள் அநுபவிக்கும்படி யமகிங்கரர் செய்வரென்றனர். (சு - ம். உஅ)

இருபத்தொன்றும் அத்தியாயம் முற்றிற்று.

———

உ

ஸர்வஹந்த்ரைநம:

# இருபத்திரண்டாம் அத்தியாயம்.

## பாதஞகாரக பாதகவர்ணனம்.



நாரதர் கூறுகின்றார்:—நாராயணரே! நீர் முன்னேகூறியபடி நரகபேதங்களைக் கேட்டேன். இனி அந்தநரகவேதனையும் அது வருதற்கு உயிர்கள் செய்வனவற்றையுங் கேட்கவிரும்புகின்றேன் என்ன நாராயணர் கூறுகின்றார்.

### க - தாமிஸ்ரம்.

பிறன்பொருளையும் மனைவியையும் சிசுவையும் எவன்கொள்ளையடிக்கின்றானோ அவனைக் காலதூதர் காலபாசத்தாற்கட்டி மகாசங்கடத்திற்குக் காரணமான தாமிஸ்ர நரகத்திற்றள்ளுவர். பின்னர் தண்டாயுதத்தால் அடித்துமிரட்டி எழுந்திருக்குந்தோறும் அதனிற்றள்ளுவர் அதனால் மூர்ச்சித்துக் கிடப்பன்.

### உ - அந்ததாமிஸ்ரம்.

பர்த்தாவை வஞ்சித்து உண்டமனைவி, மனைவியை வஞ்சித்து உண்டபர்த்தா இவர்கள் யமகிங்கரர்செய்யும் வேதனைகளால் வேரற்றமரம்போல் வாடி உலர்ந்து கண்ணிழந்து அந்த தாமிஸ்ரம் என்னும் நரகில் தள்ளப்படுவார்கள். அந்தகர்க்கிடமாயிருத்தலால், அது அப்பெயர்பெற்றது.

### ௩ - ரௌரவம்.

தன்னுடையதல்லாத வீடு தனம் முதலியவற்றைத் தன்னுடையதென்று சொல்வன்மையால் கிரகித்துக்கொண்டு தன்குடும்பத்தை ரக்ஷித்து பிறர்குடும்பத்தையழிக்கும் பூதத்துரோகி எவனோ அவன்மரணகாலத்தில் யாதொருபொருளுமற்று கொடியவரும் அஞ்சத்தக்க ரௌரவத்தில் தள்ளப்பட்டு இவனால் பொருளிழக்கப்பெற்றவர் சர்ப்பத்தினும் கொடியவிஷமுள்ள ருரு என்னும்மிருக

வடிவ மெடுத்து அவனை ஹிம்சிப்பார்கள். அதனால் அது ரௌ ரவம் எனப் பெயர்பெற்றது.

ச - மகாரௌரவம்.

ருரு என்னும் அக்கொடிய மிருகங்கள் தூரத்திலிருந்து துன்பப்படுத்துவதேயல்லாமல் பின் அவனைச் சூழ்ந்துகொண்டு வெளியேவிடாமல் துன்பப்படுத்தும் அதனால் அதை மகாரவுரவம் என்று பெரியோர் சொல்லுவர்.

ரு - கும்பீபாகம்.

மகாகுரூரனாய் பசுபக்ஷி முதலான ஜந்துக்களைக்கொன்றுசமை த்து எவன் உண்ணுகின்றானோ அவனை யமபடர்கள் எண்ணெயிற் காய்ச்சி கும்பீபாகத்தில் தள்ளிவிடுவார்கள். அவன் பசுக்களு டைய ரோமங்கள் எவ்வளவுண்டோ அவ்வளவு ஆயிரங்காலம் அதி லாழ்ந்துகிடப்பான். கும்பித்தீயில் பாகப்படும் பதார்த்தம் போல் இவனைப்பாகப்படுத்துவதால் அது அப்பெயர் பெற்றது.

சூ - காலசூத்திரம்.

தாய்தந்தை அந்தணர் இவர்களை ஆதரணை செய்யாமல் எவன் நீக்கிவிடுகின்றானோ அவனைக்காலதூதர்கள் காலசூத்திரத்தில்தள்ளு வர். அக்னி சூரியர்கள் தகிப்பர். அதனால்பசிதாகமுதலியவற்றால் பீடிக்கப்பட்டு உள்ளும்புறம்பும் தாபமுடையவராய் சிலசமயம் இருந்தும் சிலசமயம்கிடந்தும் சிலசமயம்நின்றும் சிலசமயம்புரண் டும் சிலசமயம் ஓடியும் வருந்துவர். சூரியன் காலத்தைக்காட்டும் சூத்திரமாயிருத்தலால் அவனால் கொளுத்தப்படும் நரகமும் அப் பெயர் பெற்றது.

எ - அசிபத்திரம்.

தனதுசாஸ்திரவழியைவிட்டு எவன் யாதொருகாரணமும்அறி யாமல் பாஷண்டமதங்களையடைகின்றானோ அவன் யமபடர்களால் அசிபத்திரவனத்தில்தள்ளப்பட்டும் அசிபத்திரத்தாற்செய்தசாட்டி யினால் அடிக்கப்பட்டும் அங்கும்இங்கும் ஓடும்போதுகற்களால்காலி டரப்பட்டும் அதன்பின் அந்தஅசிபத்திரமாகிய கத்தியினால் வெட் டப்பட்டும் மறுபடியும் அந்தக்கத்தியின் இருபக்கத்துமுள்ள கூர் மையினால் அறுக்கப்பட்டும் இவ்வாறு சரீரமுற்றும் காயமுள்ளவ னாய் ஆஹா இறந்துபோயினேன் என்று மூர்ச்சித்து விழுந்து மிக

வும் வேதனையடைந்து மீளவும் எழுந்து எழுந்து இரடிஇரடி விழுவான். இப்பொழுது சொல்லிவந்த வேதனைகளைப்போல் பாஷண்டமதங்கள் எந்தமார்க்கத்தாலும் இன்பஞ்செய்யவறியாது துன்பமே செய்வனவாகலான் அந்தநரகம் அப்பெயர்பெற்றது.

அ - பன்றிமுகம்.

எந்த அரசன் பிராஹ்மணனைச் சரீரதண்டனையும் ஏனையோரை அதர்மமாகச் சிக்ஷையும் செய்கின்றானோ அவனைக் காலதூதர் பன்றிமுகம்போன்ற நரகில் தள்ளுவர். அதில் அவனுடைய கைகால்களை முறித்து அடித்து கரும்புபோல் ஆலையில்நெருக்குவர். அதனால் அவன் தீனனாய்ச்சோர்ந்து மூர்ச்சித்து வீழ்ந்துகிடப்பன். செய்வதை அறிந்து செய்யாமல் செய்யாதனவற்றைச் செய்தானாகலின் உண்பதையுண்ணாமல் உண்ணப்படாதனவற்றை யுண்ணும் பன்றிப்பெயர்பெற்ற அந்நரகம் தண்டனைக்கிடமாயிற்று.

கூ - அந்தகூபம்.

எவன் கீர்த்தியோடிருக்கின்ற பிராஹ்மணனைக் கொலைசெய்கின்றானோ, எவன் பிராஹ்மணனை ரகசியமாய்க் கொலைசெய்கின்றானோ, எவன் கடவுள்நியமனந்தவறாமல் ஜீவிக்கின்றவனைத் துரோகஞ்செய்கின்றானோ இவர்களை யெல்லாம் அந்தகூபத்தில் தள்ளுவர். அதில் அவர்கள் குரூரமானபசுக்கள் மிருகங்கள் பக்ஷிகள் பாம்புகள் கொசுக்கள் மூட்டுப்பூச்சிகள் ஈக்கள் தேள்கள் முதலியவற்றால் மிகவும்பீடிக்கப்பட்டுத் தபித்துச் சுழன்றுகொண்டிருப்பர்.

க0 - கிரிமிபோஜனம்.

எவன் தேவதாபூஜை அதிதிபூஜைமுதலிய பஞ்சயஞ்ஞங்களைச் செய்யாமல் போஜனம் செய்கின்றானோ அவனை லக்ஷம் யோசனைவிசாலமுள்ள கிரிமிபோஜன நரகிற்றள்ளுவர். அதில் அவன் புழுரூபமெடுத்து பயங்கரமான அக்குண்டத்தில் வாழும்புழுக்களால் புசிக்கப்படுவான்.

கக - அக்னிகுண்டம்.

எவன் பிராஹ்மணனுடையதாவது, வேறு எவனுடையதாவது பொன் இரத்தினமுதலியவற்றைப் பலாத்காரத்தால் அபகரி

க்கின்றானே அவனை எழுகிறைற் செய்த அக்னிகுண்டத்தில் தள்ளி வாட்டிக்காய்ச்சுவர்.

கஉ - வஜ்ரகண்டகம்.

சேரக்கூடாதஸ்திரீயைச் சேர்ந்தவனையும், சேரக்கூடாத புருஷனைச்சேர்ந்தவளையும் ஜாட்டியினால்அடித்து நன்றாய்க் காய்ச்சியிருக்கும் எழுகு ஸ்தம்பத்தைத் தழுவியிருக்கும்படிச் செய்வர்.

கங - சான்மலீ.

உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் வேற்றுமை எண்ணாது எல்லாஸ்திரீகளையும் எவன்சேருகின்றானோ அவனைச்சான்மலி நரகிற்றள்ளி வஜ்ரகண்டகமென்னும் முட்களால் கொத்திக் கொத்தித் துன்பப்படுத்துவர்.

கச - வைதரணி.

எந்த அரசாக்ஷியில் அரசரானாலும் பாஷண்டரானாலும் சாஸ்திரதருமத்துக்குக் கேடுசெய்வாராயின் அவர்களை வைதணி நரகிற்றள்ளுவர். சலமயமாயிருக்கும். அதில் தள்ளப்பட்ட அவர்கள் அதில்வசிக்கும் கொடியஜல ஜெந்துக்களால் சரீரமுற்றும் கடிக்கப்பட்டாலும் இறவாதவர்களாய்த் தங்கள் கர்மபலத்துக்கீடாய் வெளிப்படும்படியான மலமூத்திரங்களாலும் புண்களினின்றுங் கசியும் புண்ணீர் உதிரங் களாலும், தலைமயிர் எலும்பு நகம் மாம்சம் கொழுப்பு சீ முதலியவைகளாலும் நிறைந்துள்ள ஆற்றில் மொத்துண்டு மஹாசங்கடத்தை அனுபவிப்பர்.

கரு - பூயோதம்.

ஆசாரத்தையும் நாணத்தையும்விட்டு தாழ்ந்தகுலத்து ஸ்திரீயை எவன் சங்கமஞ் செய்கின்றானோ அவனும், ஆசாரத்தைவிட்டு பசுபக்ஷிகள் போல் எவன் உலாவி ஜீவிக்கின்றானோ அவனும், மலம் மூத்திரம் சிலேத்துமம் உதிரம் இவை நிறைந்துள்ள நரகில் தள்ளப்பட்டவர்களாய் அவைகளையே மாறிமாறிப் புசிப்பவராயிருப்பர்.

கசு - பிராணரோதம்.

எந்தப்பிராஹ்மணன் நாய் கழுதைமுதலான ஈனஜந்துக்களுக்குத் தலைவனாயிருந்து நாடோறும் வேட்டையாடுகின்றானோ, எவர்

கள் மிருகங்களைக்கொலைசெய்கின்றார்களோ அவர்களை யமபடர் கள் பாணங்களாலடித்து வருந்தும்படிச்செய்வர்.

கஎ - வைசசி.

எவர்கள் டம்பநிமித்தமாய் பசுக்களைக்கொன்று யாகங்களைச் செய்கின்றார்களோ அந்தஅதர்மர்களை வைசசி நரகத்தில் தள்ளி குரூரமான ஜாட்டியினால் வீசியடிப்பார்.

கஅ - லாலாபக்ஷம்.

எவன் காமமோகிதனாய் தன்மனைவியைத் தனதுவீரியத்தைக் குடிக்கச்செய்கின்றானோ அவனை இந்திரியகுண்டத்தில் தள்ளி அதி லாழ்த்தி அதனையே ஆகாரமாக உண்ணச் செய்வர்.

கக - சாரமேயாதனம்.

எந்தக் கள்வர்கள் வீடுமுதலானவற்றில் நெருப்பைவைக்கிறார் களோ, எவர்கள் விஷத்தை யுண்ணும்படி கொடுக்கின்றார்களோ, எவர்கள் கூட்டங்கூட்டமாய் பிரஜைகளைக் கொல்லுகின்றார்களோ எந்த அரசர்கள் ராஜாங்கத்தைப் பாழாக்குகின்றார்களோ அவர்க ளை நாயுணவைத்தின்னும்படிச் செய்வதல்லாமல் மகாகுரூரமான இருபதுக்குமேற்பட்ட நாய்களால் கடித்துத்தின்னச்செய்வார்கள். எழுநூறு நாய்களால் கடிக்கப்படும் நரகத்திற்கு சாரமேயாதனம் என்றுபெயர்.

இனி அவீசிமுதலான நரகங்களைக் கூறுகிறேன் என்றனர். (சு - ம் ருஉ௦.)

இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸநாதன்யைநமः

இருபத்துமூன்றும் அத்தியாயம்.

இதுவுமது.

---

உ௦ - அவீசி.

நாராயணர் கூறுகின்றார்:—ஓதேவருஷியே! எந்தமனிதர்கள், ஒருவர்க்கு ஒருபொருளைத் தானஞ்செய்யும்போதும், பிரீதியாகக்

கொடுக்கும்போதும்,சாக்ஷிசொல்லும்போதும் தன்பெயரைச்சொல் லுகின்றார்களோ அந்தப் பாவபுத்தி யுடையவர்களை அவீசிஎன்னும் கொடியநரகத்தில் நூறுயோசனை உயரமுள்ள மலையினுச்சியிலிருந்து விழும்படி யமபடர்கள் தள்ளுவர். அப்படிவீழும்பொழுது அந்த நரகிடமெல்லாம் நீரலைபோல் கண்ணுக்குத் தோன்றும். அந்த அலை தோற்றமாத்திரமாகையால் சரீரம்பொடிப்பொடியாய்ப்போம். போனாலும் உயிர்போவதில்லை. பொடியாய்க்கிடக்கும் அவர்களைக் காலதூதர்களெடுத்துக்கட்டி மீளவும் அந்நரகத்தில்தள்ளுவர்.

### ௨௧ - பரிபாதனம்.

பிரஹ்மக்ஷத்திரிய வைசியரானாலும் வேறு எந்தச்சாதிய ரானாலும் சோமபான சுராபானங்களைச் செய்வாராயின் அவர் களைப் பரிபாதனநரகில் தள்ளி நெருப்பிற்காய்ச்சி உருகியிருக்கும் எழுகிரும்பைக் குடிக்கச்செய்வர்.

### ௨௨ - க்ஷாரகர்த்தமம்.

எந்த அதமன் தன்னையே புகழ்ந்துசொல்லிக்கொண்டு பிறப் பிலும் தவத்திலும் வருணத்திலும் ஆஸ்ரமத்திலும் ஆசாரத் திலும் உயர்ந்திருக்கின்றவர்களை மதிக்காமல் அவமதிப்பானாயின் அவனை க்ஷாரகர்த்தம நரகிற்றள்ளி தலைகீழாகக் கிடத்திப் பல துன் பத்தை அநுபவிக்கச்செய்வர்.

### ௨௩ - ரக்ஷோகணம்.

எவர்கள் மனிதனைப் பசுவைப்போற்கட்டி நரமேதயாகஞ் செய்கின்றார்களோ அவர்களையும், ஸ்திரீகளானாலும் புருஷர்களா னாலும் நரபசுவைப் புசிப்பார்களாயின் அவர்களையும் யமலோகத் தில் நரபசுவாகிய அவர்களே முன்னின்று எங்களைக்கொன்றவர்கள் நீங்களல்லவா என்று சொல்லிக்கத்தியினாலறுத்து அவர்களுதிரத் தைக் குடித்துக் கூத்தாடுவார்கள்.

இவர்களைப்போலவே மாம்சபக்ஷணஞ் செய்கின்றவர்களும், புருஷனைக் கொன்று பக்ஷிக்கின்றவர்களும் அந்தந்தமாம்சத்துக் குரியமிருகாதிகளாலும் புருஷர்களாலும் கொல்லப்பட்டுத் தின்ன ப்படுவார்கள்.

### உச - சூலப்ரோதம்.

எவர்கள் ஆரண்ணியத்திலாவது, கிராமத்திலாவது யாதொரு தீங்கும்செய்யாதவர்களைக் கொலைசெய்கின்றார்களோ, எவர்கள் பிறருக்குத் தங்களிடத்தில் நம்பிக்கையையுண்டாக்கிப் பின்னர் கொலைசெய்கின்றார்களோ, எவர்கள் சூலத்தினாலாவது, யந்திரக் கயிற்றினாலாவது, தங்களைக் கொலைசெய்துகொள்ளுகின்றார்களோ இவரெல்லாம் சூலப்புரோத நரகில் தள்ளப்பட்டு சூலமுதலானவைகளில் கோர்க்கப்பட்டவர்களாய், பசிதாகங்களால் மிகவும் பீடிக்கப்பட்டவர்களாய், கூர்மையான மூக்குள்ள கழுகு கொக்கு முதலானவைகளால் அங்குமிங்கும் ஓடித்திரிந்து அலைபவர்களாய், அப்பொழுது நேரிடும் பிராணிகளையும் இம்சைப்படுத்துகின்ற சுபாவமுள்ளவர்களாய், தாங்கள் முன்செய்ததீயகர்மங்களை நினைத்துவருந்துகின்றவர்களாய்,சகலதுன்பங்களையும் அனுபவிப்பர்.

### உரு - தந்தசூகம்.

சர்ப்பமுதலான துஷ்டஜந்துக்களும், தேள்முதலான விஷப் பூச்சிக்களும், ஐந்துமுகம் ஏழுமுகம் உள்ள குரூரஜந்துக்களும் சூழ்ந்திருந்து அதில்வீழ்பவரைப் பக்ஷித்துக்கொண்டிருக்கும்.

### உகூ - வடாரோகம்.

குரூரபுத்தியுடைய எந்தமனிதர்கள் மலைமுழைகளிலும், பள்ளங்களிலும் கூண்டுமுதலியவைகளிலும் வளைகளிலும் இருக்கின்ற ஜந்துக்களை உபத்திரவப் படுத்துகின்றார்களோ அவர்களை அம்மலைமுழை முதலான வற்றைப்போலிருக்கின்ற நரகங்களிற்றள்ளி விஷத்தினாலும் நெருப்பினாலும் புகையினாலும் வருத்துவர்.

### உஎ - பிரியாவர்த்தனகம்

எவன் போஜனகாலத்தில் வந்திருக்கும் அதிதிகளைப் பார்த்துப் பொறாதவனாய் இவர்களைக் கொளுத்தவேண்டுமென்று லோபத்தினால் எண்ணுகின்றானோ அவனுடையகண்களைக் காக்கை கழுகு முதலான குரூரஜந்துக்களால் பிடுங்கிக்கொத்திப் பாதைப்படுத்தும்படிச் செய்வர். அவைகள் தாமேயும் வந்து துன்பப் படுத்தும்.

### உஅ - சூசீமுகம்.

எவர்கள் நாம் திரவியத்தையடைந்திருக்கும் செல்வவான்களாயிருக்கின்றோமென்று கர்வங்கொண்டிருக்கின்றார்களோ, எவர்கள்

பிறரைநோக்கி பணத்திற்குச் செலவு வருகின்றதென்று எண்ணி மனத்தில்வெறுப்பையும் முகத்தில்சுளிப்பையும் காட்டி சந்தோஷத்தை யடையாமலிருக்கின்றார்களோ, எவர்கள் பூதம்போல் பணத்தைக்காக்கின்றார்களோ இவர்களையெல்லாம் யமபடர்கள் சூசீமுகமென்னும் நரகில் தள்ளி எண்ணமுடியாத துன்பத்தைச்செய்வர். எவர்கள் பணத்தைக் கொடுப்பதாக வாங்கிப் பின்கொடுக்காமல் மோசம்செய்கின்றாரோ அவர்களைக் கயிற்றினாற் கட்டி நெருக்கி எல்லா அவயவங்களையும் துன்பப்படுத்துவர்.

இப்போது என்னால் சொல்லப்பட்டனவும் சொல்லப்படாதனவுமான அநேகவிதமான பாவபேதங்களுக்குத்தக்கபடி நரகபேதங்களும் அவைகளில் அனுபவிக்கப்படும் துன்பப்பேதங்களும் உள்ளன. ஓநாரதரே! பாபாத்மாக்களை யாதனை செய்வதான அந்தநரகபூமியை ஆயிரம்தேவவருஷம் நாவெடுத்துச்சொன்னாலும் முடியாது. ஏனெனில் அதர்மங்களைச் செய்கின்றமனிதர்களும் அவர்கள் அடையும் நரகஸ்தானங்களும் அநேகமிருக்கின்றன.

இவர்களைப்போலவே தர்மங்களில் ஆவலுள்ள புண்ணியசீலர்களும் அவரடையத்தக்க புண்ணியானுபவகதிகளும் உள்ளனவென்றறிவீராக. ஆகலான் ஒவ்வொருவரும் பாவகர்மங்களுக்குப்பயந்து குலதர்மாதிகளைத் தவறாது அனுஷ்டிக்கவேண்டும். எவர்கள் தேவி பூஜையைச்செய்கின்றார்களோ அவர்கள் ஓர்காலத்தும் நரகங்களையடையமாட்டார்கள். தேவியானவள் தன்னைப்பூஜிக்கின்றவர்களை சம்சாரசாகரத்தினின்றும் கரையேற்றுகின்றனள். (சு-ம்-௩௧.)

இருபத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வா நவத்யாயைநமஃ

## இருபத்துநான்காம் அத்தியாயம்.

## தேவ்யாராதனக்கிரமம்.

---

நாரதர்ஓபகவானே! தேவிபூஜையினுடைய லக்ஷணம் எப்படிப்பட்டது? எந்தவிதிப்படி பூஜிக்கத்தக்கவள்? அந்த ஆராதனை

யின்கிரமம் எப்படி? முன்னுள்ள பெரியோர்களால் எந்த ஆராதனை க்கிரமமாக தேவி பூஜிக்கப்பட்டாள்? தேவியானவள் எந்தவுபாயத்தினால் நரகத்தில் வீழாவண்ணம் ஆன்மாக்களை ரக்ஷிக்கின்றாள்? என்று வினவ நாராயணர் கூறுகின்றார்:—ஓ தேவருஷியே! நீர் மனோசலனமற்றுக்கேட்பீராக. எந்த ஆராதனைக்கிரமத்தினால் தேவி சந்தோஷத்தையடைகின்றாளோ அந்தவிதிக்கிரமத்தை, சுதர்மத்தைப் பாதுகாக்கின்ற விஷயத்தில் எப்படி உறுதியாகச்சொல்லப்பட்டிருக்கின்றதோ அப்படி காக்கும்படி சொல்லப்பட்டிருக்கின்றது. நீங்காதுவருகின்ற சம்சாரதுக்கத்தைப் போக்கவேண்டியவர்கள் தேவியைப் பூஜிப்பார்களாயின் அந்த கோரமான சங்கட்டத்தினின்றும் நீங்குவர்.

சுக்லபக்ஷம் பிரதமைமுதல் பூரணைவரையில் சொல்லப்பட்டிருக்கும் பலனைவிரும்புவோர் அந்தந்தத்திதிகளில் தேவிக்குப் பிரீதியுண்டாகும் வண்ணம்பூஜையும் அந்தணர்களுக்கு அந்தந்தத்திரவியதானமும் பின்வருமாறு செய்து பூரணையில் ஹோமமுஞ் செய்தல்வேண்டும். அவ்வோமத்தால் சகலஅரிஷ்டநிவிர்த்தியும் உண்டாகும்.

ஒவ்வொருமாதங்களிலும் சுக்லபக்ஷதிருதியையில் இலுப்பைமரத்தையடைந்து மாதபூஜா நைவேத்தியங்களை பின்வருமாறு மாதக்கிரமமாகச்செய்து, மங்களா வைஷ்ணவீ மாயா காலராத்திரீ துரத்யயா, மஹாமாயா மாதங்கி காளீ கமலவாசிநீ, சிவாசஹஸ்ர சரணு சர்வமங்களரூபிணீ! இந்தநாமங்களால் தேவியை அந்தமதூகமரத்தடியில் பூஜித்து அந்தவிருக்ஷத்தில் தேவியாகிய மஹேஸ்வரி இருப்பவளாகத் தியானித்து தோத்திரம் செய்யவேண்டும். அப்படிச்செய்தால் சர்வகாமசித்தியும் விரதபூர்த்தியும் உண்டாகும். தாமரைமலர்போல் திருக்கண்களை யுடையவளே! உனக்கு நமஸ்காரம். சகத்தைத் தரித்திருக்கின்றவளே! உனக்கு நமஸ்காரம். மஹேஸ்வரீ! மஹாதேவி! மஹாமங்கள மூர்த்யை! பரமா! பாபஹந்திரீ! (பாபங்களை நாசஞ்செய்கின்றவளே)பரமார்க்கப்ரதாயினீ! பரமேஸ்வரீ! பிரஜோத்பத்தி! பரப்பிரஹ்மஸ்வரூபிணீ! மததாத்ரீ (மதத்தைக் கொடுக்கின்றவளே) மதோன்மத்தா! மாநகம்யா! மஹோந்நதா! மநஸ்விநீ! முநித்யேயா! மார்த்தாண்டசஹசாரிணீ! (சூரியனுடன் சஞ்சரிக்கின்றவளே) ஜயலோகேஸ்வரீ! பிராஜ்ஞே! (எல்லாமறிந்த

அ

வளே) பிரளயாம்புத சந்நிபே! (பிரளயகாலமேகத்துக்குச் சமான மானவளே) மகாமோக நிவிர்த்தியின்பொருட்டு சுராசுரர்களால் பூஜிக்கப்பட் டிருக்கின்றவளே! யமலோகபாவகர்த்திரீ! யமலோக மில்லாமல் செய்கின்றவளே) யமபூஜ்யா! யமாக்ரஜா! (இயமனுக் குத்தலைவியே) யமநிக்ரஹரூபா! (இயமனைச்சிக்ஷிக்கின்ற ரூபமுள் ளவளே) யஜநீ! (யாகஞ்செய்யத்தக்கவளே) உனக்கு நமஸ்காரம். எல்லாவுயிர்களிடத்தும் சமமான பாவனையுடையவளே! சர்வேசி! சர்வசங்கவிவர்ஜிதா! சங்கநாசகரீ! காம்யரூபா! காருண்யவிக்ரஹா! கங்காலக்ரூரா! காமாக்ஷீ! மீனாக்ஷீ! மர்மபேதினீ! மாதுர்யரூபா! சீலா! மதுரஸ்வரபூஜிதா! மஹாமந்திரவதீ! மந்திரகம்யா மந்திரப்ரியங்கரீ! மநுஷ்யமானஸகமா! (மனிதர்களுடைய மனசில் வாசஞ்செய்கின்ற வளே) மன்மதாரி! ப்ரியங்கரீ! அரசு ஆல் வேம்பு மா விளா இலங் கை பலா எருக்கு கரீரம் முதலான பாலுள்ள விருக்ஷசொரூபிணீ! துக்தவல்லியில் வாசஞ்செய்கின்றவளே! தயனீயே! (தயையைச் செய்யத்தக்கவளே) தயாதிகே! தாக்ஷண்ய கருணாரூபே! ஜயஸர் வஜ்ஞவல்லபே! என்று தோத்திரஞ்செய்யவேண்டும்.

தேவிக்குப்பிரீதிகரமான * இந்தத்தோத்திரத்தை மாநுடன் நாடோறும் பக்தியுடன் செய்துவருவானாயின் அவனுக்கு ஜன்ம

---

* நமஃ புஷ்கரநேத்திராயை ஜகத்தாத்ர்யை நமோஸ்துதே
மஹேஶ்வர்யை மகாதேவ்யை மஹமங்கள மூர்த்தயே.

பரமா பாபஹந்திரீச பரமார்க்க ப்ரதாயிநீ
பரமேஶ்வரீ ப்ரஜோத்பத்திஃ பரப்ரஹ்மஸ்வரூபிணீ.

மததாத்ரீ மதோன்மத்தா மானகம்யா மஹோந்நதா
மநஸ்விநீ முநித்யேயா மார்த்தாண்ட சஹசாரிணீ.

ஜய லோகேஶ்வரீ பிராக்ஞே பிரளயாம்புத சந்நிபே
மஹாமோஹ விநாசார்த்தம் பூஜிதாஸி சுராசுரைஃ.

யமலோகா பாவகர்த்திரீ யமபூஜ்யா யமாக்ரஜா
யமநிக்ரஹ ரூபாச யஜநீயே நமோநமஃ.

சமஸ்வபாவா சர்வேசீ சர்வசங்க விவர்ஜிதா
சங்கநாச கரீகாம்யரூபா காருண்ய விக்ரஹா.

வியாதியும் பயமும் சத்ருபீடையும் நேரிடாது. அன்றியும் தருமார்த்த காமமோக்ஷங்களை விரும்பினோர்க்கு அவைகளும், பிராஹ்மணர்களுக்கு வேதசம்பத்தும், க்ஷத்திரியர்களுக்கு விஜயமும், வைசியர்களுக்கு தனதானியங்களும், சூத்திரர்களுக்கு சுகாதிக்கியமும் உண்டாகும். சிரார்த்தகாலத்தில் படனஞ்செய்தால் பிதுர்க்களுக்கு ஒருகல்பபரியந்தம் திருப்தியுண்டாகும். தேவபூஜ்யமான தேவி ஆராதனத்தை எவன் பக்தியுடன் செய்கின்றானோ அவன் தேவியினுலகை யடைகிறான்.

தேவி பூஜையானது இம்மையில் சர்வ காமபலத்தையுங் கொடுத்து சர்வபாபத்தையும்போக்கி மரணகாலத்தில் நிர்மலமான அறிவையுங்கொடுக்கும். தேவிபூஜகன் தேவியினது பிரசாத மகிமையினால் தேவியைப்போல் தேவிபக்தர்களால்எவ்விடத்தும் பூஜிக்கப்பட்டும், மானம் தனம் முதலியவற்றில் நிறம்பப்பெற்றும் நமக்கு நரகம் உண்டாகுமோ என்னும் பயம் கனவிலும் இல்லாமல் அற்றும் புத்திர பவுத்திராதிகள் விருத்தியடையக்கண்டும் மஹாமாயா ஸ்வரூபிணியான அத்தேவியினிடத்தில் மறவாதபக்தி மேன்மேலுண்டாக மகிழ்ந்தும் வாழ்வன். இவ்வளவு மகிமையும் மங்களகரமான மதூக பூஜை ஒன்றினாலேயே உண்டாகத்தக்கதென் றறிவாயாக.

எவன் இந்த மதூகபூஜையின் மகிமையை நன்றாயறிந்து செய்கின்றானோ அவன் அரோகதிடகாத்திரனாய் வாழ்வான்.

---

கங்காலக்ரூரா காமாக்ஷீ மீனாக்ஷீ மர்மபேதிநீ
மாதுர்யரூப சீலாச மதுரஸ்வர பூஜிதா:.

மஹாமந்திர வதீமந்திர கம்யாமந்திர ப்ரியங்கரீ
மநுஷ்ய மானஸகமா மன்மதாரீப்ரீயங்கரீ.

அஸ்வத்த வடநிம்பாம்ர கபித்த பதரீகதே
பநஸார்க்க கரீராதி க்ஷீரவிருக்ஷ ஸ்வரூபிணீ.

துக்தவல்லீ நிவாஸார்ஹே தயநீயே தயாதிகே
தாக்ஷண்ய கருணாரூபே ஜயசர்வக்ஞ வல்லபே.

## திதி பூஜை.

| | |
|---|---|
| க. பி - நெய் | ரோகநிவிர்த்தி |
| உ. து - சர்க்கரை | ஆயுள்விருத்தி |
| ந. தி - பால் | சர்வதுக்கநிவிர்த்தி |
| ச. ச - பக்ஷணம் | விக்கினநிவிர்த்தி |
| ரு. ப - வாழைக்கனி | புத்திசூக்ஷ்மம் |
| சு. சஷ் - தேன் | தேககாந்தி |
| எ. சப் - வெல்லம் | சோகநிவிர்த்தி |
| அ. அ - தேங்காய் | தாபநிவிர்த்தி |
| கூ. ந - நெற்பொரி | இகலோகசுகம் |
| கo. த - கறுப்பு எள் | யமலோகபயநிவிர்த்தி |
| கக. ஏ - தயிர் | தேவியாதிக்யம் |
| கஉ. து - அவல் | தேவியினிடத்து இன்பம் |
| கந. தி - கடலை | சந்ததிப்பெருக்கம் |
| கச. ச - சத்துமா | சிவபெருமானுக்குப் பிரியனுந்தன் [மை. |
| கரு. பௌ - பாயசம் | பிதுர்க்களைக் கரையேற்றுதல் |

இதுபோலவே வார நக்ஷத்ர யோக கரண பூஜைகளையும் செய்தல் வேண்டும்.

---

## வார பூஜை.

க. ஞா - பாயசான்னம்
உ. தி - பால்
ந. செ - வாழைக்கனி
ச. பு - வெண்ணெய்
ரு. வி - சர்க்கரை
சு. வெ - வெள்ளைசர்க்கரை
எ. ச - பசுவின்நெய்

---

## நக்ஷத்திர பூஜை.

க. அ - நெய்
உ. ப - எள்
ந. கி - சர்க்கரை
ச. ரோ - தயிர்
ரு. மி - பால்
சு. தி - கிலாடம்
எ. பு - தயிரேடு
அ. பூ - மோதகம்

கூ. ஆ - பேணி [ந்தநெய்)
கo. ம - கிருதமண்டகம்(தோய்
கக. பூ - கம்சாரம்
கஉ. உ - வடபத்திரம் (பூரி)
கங. அ - கிருதபூரம் (அல்வா)
கச. சி - வடை
கரு. சு - கோகரசகம்
கசா. வி - பூர்ணயம் [கிழங்கு)
கஎ. அ - மதுசூரணம்(வள்ளிக்
கஅ. கே - வெல்லம்
ககூ. மூ - அவல்
உo. பூ - திராக்ஷி
உக. உ - கர்ச்சூரி
உஉ. தி - ராசகம்
உங. அ - அப்பம்
உச. சு - நவநீதம்
உரு. பூ - பயிறு
உசா. உ - மோதகம்
உஎ. ரே - மாதுளம்பழம்

---

## * யோக பூஜை.

க. வி - வெல்லம்
உ. பி - தேன்
ங. ஆ - நெய்
ச. சௌ - பால்
ரு. சோ - தயிர்
சா. அ - மோர்
எ. சு - அப்பம்
அ. தி - நவநீதம்
கூ. சூ - வெள்ளரிக்காய்
கo. க - கலியாணபூசனிக்காய்
கக. வி - மோதகம்
கஉ. து - பலாப்பழம்
கங. வி - வாழைப்பழம்
கச. அ - ஜம்புநாவற்கனி
கரு. வ - மாம்பழம்
கசா. சி - எள்
கஎ. வி - நாரத்தை
கஅ. வ - மாதுளம்பழம்
ககூ. ப - இலந்தைப்பழம்
உo. சி - நெல்லிக்கனி
உக. சி - பாயசம்
உஉ. சா - அவல்
உங. சு - கடலை
உச. சு - தேங்காய்
உரு. பி - எலிமிச்சம்பழம்
உசா. ஐ - கசேரு [ஷம்)
உஎ. வை - சூரணம்(கிழங்குவிசே

---

* விஷ்கம்பம் பிரீதி ஆயுஷ்மான் சௌபாக்யம் சோபனம் அதிகண்டம் சுதர்மம் திருதி சூலம் கண்டம் விருத்தி துருவம் வியாகாதம் அரிஷணம் வச்சிரம் சித்தி விதிபாதம் வரியான் பரிகம் சிவம் சித்தம் சாத்தியம் சுபம் சுப்பிரம் பிரமம் ஐந்திரம் வைதிருதி.

## * கரண பூஜை

| | |
|---|---|
| க. ப - கம்சாரம் | எ. ப - கிருதபூரம் (அல்வா) |
| உ. பா - மண்டகம் (பாலேடு) | அ. சகு - எள் |
| ௩. கௌ - பேணி | கூ. சது - தயிர் |
| ச. தை - மோதகம் | க0. நா - நெய் |
| ௫. க - பூரி | கக. கி . தேன் |
| சு. வ - லட்டு | |

## மாத பூஜை.

| | |
|---|---|
| க. சி - ஐந்துவிதமான பக்ஷயம் | எ. அற் - பரமான்னம் |
| உ. வை - வெல்லம் | அ. கா - பால் |
| ௩. ஆனி - தேன் | கூ. மா - பேணி |
| ச. ஆடி - வெண்ணெய் | க0. தை - தயிரேடு |
| ௫. ஆவ - தயிர் | கக. மாசி - பசுவின்நெய் |
| சு. புர - சர்க்கரை | கஉ. பங் - தேங்காய் |

இனி நாமத்தைச்சொன்னாலும் பூஜாசொரூபத்தைப் பார்த்தாலும் உலகங்களுக்கெல்லாம் ஆனந்தத்தை யுண்டாக்குவதும் குதூஹலத்தையும் முக்திகிரமத்தையும் விளைவிக்கத்தக்க மகிமையைக் கொடுப்பதுமான பிரகிருதி பஞ்சகபூஜையை இனி சொல்லுகிறேன் முனிவரே கேட்பீராக என்றனர். (சு - ம். சுகூ)

உச - ம் அத்தியாம் தேவிஆராதனை முற்றிற்று.

எட்டாவது ஸ்கந்தம் முற்றிற்று.

ஆக அத்யாயம் உச - க்குச் சுலோகம் (அசO)

---

* பவம் பாலவம் கௌலவம் தைதுலை கரசி வணசி பத்திரை சகுனி சதுஷ்பாதம் நாவகம் கிமஸ்துக்கினம்.

உ

திரிபுரசுந்தர்யை நமஃ

# தேவீபாகவதம்.

## அட்டவணை.

## ஒன்பதாம் ஸ்கந்தம்



---

உ

ஸர்வாங்கசுந்தர்யைநமஃ

# தேவீ பாகவதம்.

## ஒன்பதாம் ஸ்கந்தம்.

### முதல் அத்தியாயம்.

### பஞ்ச சக்தி வர்ணனம்.

---

ஆத்ருத காஞ்சீநிலயாம் ஆத்யா மாரூட யௌவநாடோபாம்
ஆகம வதம்ஸகலிகா மாநந்தா த்வைத கந்தளீம் வந்தே.

நாராயணர் கூறுகின்றார் :—கணேசமூர்த்திக்குத் தாயாகிய துர்க்காதேவி ராதை லக்ஷ்மி சரஸ்வதி சாவித்திரி இவ்வைவரும் ஐந்துவிதமான பிரகிருதிகள் என்று சொல்லப்படுவர் என்று கூற, நாரதர் ஓ முநிசிரேஷ்டரே! அந்தஐவரும், யாவரால் உண்டுபண்ணப் பட்டவர்கள்? அவர்கள்யார்? அவர்கள் இலக்கணமென்ன? அவர்கள் எந்தசம்பந்தத்தால் ஐவரென் றெண்ணப்பட்டார்கள்? இவ்வைவரும் யாவராலும் தியானித்து வழிபடத்தக்கவர்களாக விருக்கின்றபடியால் இவர்கள் சரித்திரமும் இவர்கள் பூஜாவிதியும் இவர்களுடைய குணவிசேஷங்களும், இவர்களால் விரும்பப்பட்டனவும், இவர்களுடைய அவதார க்ஷேத்திரங்களும் ஆகிய இவையிற்றை விரிவாகச் சொல்லியருள வேண்டுமென்று கேட்டனர்.

ஓ குழந்தாய்! இவர்கள் பிரகிருதி என்னும் பெயருடையவர்கள்; ஆதலால் அப்பெயரின் பதலக்ஷணத்தை எவன் சொல்லவல்லவனுவன்? அங்ஙனங் கூடாதாயினும் நான்கேட்டிருக்கும் வண்ணம் ஒருவாறு கூறுகின்றேன்.

ப்ர என்பது எழுச்சி என்னும் பொருளையும், கிருதி என்பது சிருட்டி என்னும் பொருளையும் உணர்த்துவன வாகலின் சிருட்டியில் மனவெழுச்சியுடையவர் என்றும், ப்ர என்பது சத்துவகுணந்

தையும், கிரு என்பது ரஜோகுணத்தையும், தி என்பது தமோகுணத்தையும் உணர்த்துவன வாகலின் திரிகுணாத்மகமாகிய சத்தியோடுகூடிச் சிருட்டிப்பதில் இவர்கள் முதற்சத்திகளா யிருப்பவர் என்றும், ப்ர என்பது முதல் என்னும் பொருளையும், கிருதி என்பது சிருட்டி என்னும்பொருளையும் உணர்துவன வாகலின் சிருட்டியின் ஆதியிலுள்ளவர் என்றும் பொருள்படும்.

இவ்வாறு ஐவகைப்பட்ட பிரகிருதியாகிய சக்தி பரமாத்மாவாகிய பிரமத்தோடு கலந்திருக்கும் சித்சத்தியாம். ஆதலின் சிருட்டிகாலத்தில் வலப்பாகம் ஆணுருவாயும், இடப்பாகம் பெண்ணுருவாயும், காணப்பட்டு விளங்குகின்றாள். ஆண் பெண்ணென இரண்டுருவமாகக் காணப்படினும் யோகீந்திரர்கள் பரமாத்மா எப்படியோ அப்படி சக்தி என்றறிந்தவராகலின் அதனை இரண்டுருவாகக்காணுமல்*அக்னியில் சூடுபோல் நித்தியமாயும் அழிவில்லாததாயுமுள்ள ஒன்றான பிரமசொரூபமாக வுணர்ந்து சர்வம் பிரமமயமென்று கூறுவர். இரண்டுருவாகக் காணப்பட்டதில் மூலப்பிரகிருதி (பெண்ணுரு) வான ஈஸ்வரி,* கிருஷ்ண (ஆணுருவானபுருஷரைத் தோற்றுவிக்கவேண்டு மென்கிற விருப்பத்தினால் தற்செயலாய்ச் சுயேச்சையாகப்பிரிந்து தோன்றினாள். தோன்றிய அம்மூலப்பிரகிருதியின் ஆக்ஞையினால் ஐவகைப்பட்ட சிருட்டிகளுண்டாயின. * கிருஷ்ணர் - சிவரூபம்.

க - வது, துர்க்காதேவி.

பிரார்த்திக்கும் பக்தர்களுக்கு அநுக்கிரகிக்கிறவளாயும் கணேசஜனனியாயும் சிவப்பிரியையுமான துர்க்காதேவி விஷ்ணு மாயையாயும் பூரணபிரமசொரூபிணியாயும் பிரமாதி தேவர்களாலும் முநிவர்களாலும் மநுக்களாலும் துதிக்கப்பட்டவளாயும் சகல வஸ்துவையும் ஆக்ரமித்துக்கொண்டிருக்கிறவளாயும் கீர்த்தி யஸஸு மங்களம் சுகம் மோக்ஷம் முதலானவைகளைக் கொடுக்கின்றவளாயும் சோகம் பீடை முதலானவைகளை நாசஞ் செய்கிறவளாயும் தன்னைச் சரணடைந்தவர்களையும் தீனர்களையும் ரக்ஷிக்கின்றவளாயும் தேஜோரூபிணியாயும் தேஜசுக்கு அதிஷ்டான தேவதையாயும் சர்வசக்தி சொரூபிணியாயும் சக்திகளுக்கு ஈஸ்வரியாயும்

* அக்னி சூடு என்றிரண்டாகச் சொல்லப்பட்டினும் வேறு பிரித்துக் காணக்கூடாமல் அக்னிஎன்று ஒன்றாகவேகாணப்படுமாறு போலென்க

சித்தேஸ்வரியாயும் சித்தியைக்கொடுக்கின்றவளாயும் புத்தி நித்திரை பசி தாகம் காந்தி சோம்பல் தயை கவனம் ஜாதி பொறுமை பிரமை ஞானம் துஷ்டி புஷ்டி லக்ஷ்மி தைரியம் மாயை ஆகிய சக்திசொரூபிணியாயும் பரமாத்மாவான *கிருஷ்ணரை யடைந்திருக்கிறவளாயும் நாராயணியாயுந் தோன்றினள். இவளுடைய குண விசேடங்கள் அளவில்லன. அவைகளில் சிலவற்றை வேதங்களில் கூறியுள்ளன. * சிவபெருமான்.

உ - வது இலக்ஷ்மிதேவி.

சுத்த சத்வ சொரூபிணியாயும் சர்வ சம்பத் சொரூபிணியாயும் அச்சம்பத்துகளுக்கு அதிஷ்டானதேவதையாயும் மனோஹரையாயும் காந்தி சாந்தி தாந்தி சொரூபிணியாயும் சுசீலையாயும் சர்வமங்கள சொரூபிணியாயும் லோபம் மோகம் காமம் ரோஷம் மதம் அகங்காரம் இவர்களைவர்ஜித்தவளாயும்இந்திரியநிக்கிரகையாயும் பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவளாயும் விஷ்ணுபகவானது பிரேமைக்குப் பாத்திரியாயும் அவரது பிராணனுக்குச் சமானமானவளாயும் அவரிடம் இனிமையாய்ப் பேசுகின்ற பதிவிரதையாயும் சர்வபல சொரூபிணியாயும் ஜீவனோபாய ரூபிணியாயும் வைகுண்டத்தில் பர்த்தாவுடன் வசிக்கின்ற லக்ஷ்மியாயும் சுவர்க்கத்தில் சுவர்க்கலக்ஷ்மி இராஜனிடத்தில் ராஜலக்ஷ்மி கிருகஸ்தருடைய கிருகங்களில் கிருகலக்ஷ்மி சர்வப்பிராணிகளிடத்தில் விரும்பும் சோபாலக்ஷ்மி புண்ணியர்களிடத்தில் பிரீதி லக்ஷ்மி க்ஷத்திரியரிடத்தில் கீர்த்தி லக்ஷ்மி வைசியரிடத்தில் வர்த்தக லக்ஷ்மி பாவிகளிடத்தில் கலகலக்ஷ்மி வேதோக்தரான பெரியோர்களிடத்தில் தயா லக்ஷ்மி என வழங்கப்பட்டவளாயும் இருக்கிறாள்.

௩ - வது சரஸ்வதி தேவி.

எல்லாராலும் சம்மதித்துப் பூஜித்து வணங்கப்படும் மூன்றுவது தேவியைக் கூறுகின்றேன். வாக்கு புத்தி வித்தை ஞானம் என்னும் இவைகளை அதிஷ்டித்திருப்பவளும் சர்வவித்தியா சொரூபிணியுமாகிய சரஸ்வதி தேவி தன்னை யுபாசிக்கின்றகவீஸ்வரர்களுடைய புத்திஸ்வரூபிணியாயும் (அவர்கள்பாடும்) கவி ஸ்வரூபிணியாயும் (அக்கவிகளுள் அமைந்துள்ள யுக்தி ஸ்வரூபிணியாயும் (அந்தயுக்தியி லமைந்துள்ள) நுண்ணிய அர்த்த ஸ்வரூபிணியா

யும் அவ்வர்த்தத்தை மறவாதிருக்கச் செய்யவல்ல சிந்தனு ஸ்வரூபிணியாயும் (அவர்களால் தாபிக்கப்பட்ட) அநேக பிரகாரமான சித்தாந்த பேதஸ்வரூபிணியாயும் (அவ்வச்சித்தாந்த பேதங்களை அர்த்த விசாரங்களால் விளக்கத்தக்க) விசார ஸ்வரூபிணியாயும் (அவ்விசாரமுகத்தில் எடுத்துக் காட்டும்) வாக்கியபோத ஸ்வரூபிணியாயும் (அவ்வாக்கிய போதங்களால்) சர்வசந்தேகங்களையும் நாசஞ் செய்யவல்ல நாசகாரணியாயும் (அந்நாசத்தால் தெளியப்படும்) விசாரகாரணியாயும் (அவ்விசாரம் ஈதெனக்காட்டும்) கிரந்தகாரணியாயும் (அக்கிரந்தங்களை அறியச்செய்யவல்ல) சக்தி ஸ்வரூபிணியாயும் இவையேயன்றிச் சர்வ சங்கீத ஸ்வரூபிணியாயும் (அவ்வச்சங்கீதங்கட் கியைந்த) தாளபேத காரண ஸ்வரூபிணியாயும் (அதற் கியைந்த) விஷய க்யான ஸ்வரூபிணியாயும் அதற்கமைந்த கவித்வஸ்வரூபிணியாயும் (இவைகளால் ஆனந்திக்கும்) பிரபஞ்ச ஸ்வரூபிணியாயும் இவையேயன்றி வாக்யார்த்த வாதசொரூபிணியாயும் (அவ்வாக்யார்த்தங்களா லடையும்) சாந்தசொரூபிணியாயும் சகலவித்யாசொரூபிணியுந் தானே என்பது தோன்ற எப்போதும் வீணாபுத்தகதாரணியாயும் (இங்ஙனங் கூறிவந்த வித்யாசம்பந்தங்களால் உண்டாகத்தக்க ஆத்ம பிரயோஜனமாகிய) சுத்தசத்துவ சொரூபிணியாயும் சுசீலையாயும் விஷ்ணுவுக்கும் லக்ஷ்மிக்கும் இனிப்பானவளாயும் பச்சை கற்பூரம் சந்தனம் முல்லை மலர் சந்திரன் ஆம்பல் வெண்டாமரை இவைகளுக்குச் சமானமான நிறமுள்ளவளாயும் கிருஷ்ண பரமாத்மாவை இரத்தினமாலையால் பூஜிக்கின்றவளாயும் தபோரூபையாயும் தபஸ்விகளுக்குப் பலனைக்கொடுக்கின்றவளாயும் சித்தி வித்தை சொரூபிணியாயிருந்து அவைகளைக் கொடுக்கின்றவளாயும் இருப்பள். இந்தத்தேவியின் உபாசனையில்லாத அந்தணர்கள் வாக்கின் பிரயோஜனமாகிய வித்தியாபிரகாசமில்லாமல் உயிரிழந்த பிணம்போல் அசைவற்றிருமல் நடைப்பிணமாயுலாவுவராவர். வேதத்தில் கூறப்பட்டுள்ள ஜகதம்பிகையான சரஸ்வதி தேவியினுடைய மகிமைகளில் சிலவற்றைக் கூறினேன்.

௪ - வது சாவித்திரி தேவி.

பிராஹ்மணுதி நான்குவருணம் வேதாங்கங்கள் சந்தஸு சந்தியாவந்தனமந்திரம் தந்திரசாத்திரங்கள் இவைகட்குத் தாயாயும், பிராமணசாதி சொரூபிணியாயும் ஜபசொரூபிணியாயும் தபோரூபிணி

யாயும் அவைகளாலுண்டாகும் பிரஹ்மதேஜோரூபிணியாயும், அத னாலுண்டாகும் பவித்திர சொரூபிணியாயும் அவர்களால்செய்யப் படும் சமஸ்கார சொரூபிணியாயும், சாவித்தி காரியத்திரி சொரூ பிணியாயும் அவற்றை அநுட்டிக்கும் பிராமணப் பிரியையாயும் தீர்த்த ஸ்வரூபிணியாயும் அத்தீர்த்த ஸ்பரிசமாத்திரத்தில் சுத் தஞ்செய்கின்ற விருப்பமுள்ளவளாயும் சுத்த ஸ்படிகம்போல் பிர காசிக்கின்ற நிர்மலமான சுத்த சத்துவ ஸ்வரூபிணியாயும் அதனால் விளையத்தக்க பரமானந்த சொரூபிணியாயும் அச்சொரூபத்தை அநாதியாயுள்ளவளாயும் பரப்ரஹ்ம சொரூபிணியாயும் நிர்வாண பதத்தைக் கொடுக்கின்றவளாயும் அதனையடையப்பெற்ற பிரம ஞானிகளுடைய பிரமதேஜோமய ரூபிணியாயும் அந்தச் சக்திக்கு அதிஷ்டான தேவதையாயும் இருப்பள். அத்தேவியினுடைய பாத ரேணுவால் உலகமெல்லாம் பரிசுத்தமாகின்றது.

## ௫ - வது ராதாதேவி.

பஞ்சப்பிராணன்களுக்கும் ஆதிதேவியாயும் பஞ்சப்பிராண சொரூபிணியாயும் பிராணனிலும் மிக்கபிரீதிசொரூபிணியாயும் எல் லா தேவிகளிடத்திலுமுள்ள சுந்தர சொரூபிணியாயும் எல்லாரிட த்திலுமுள்ள சப்பத் சொரூபிணியாயும் எல்லாதேகத்திலு முள்ள வாமபாகசொரூபிணியாயும் குணத்தினாலும் தேஜஸினாலும் நிறைந் திருக்கின்ற கவுரவஸ்வரூபிணியாயும் பராபரங்களுக்குச் சாரபூதை யாயும் அவைகளுக்கு ஆதியாயும் அநாதியாயும் பரமானந்த ஸ்வரூ பிணியாயும் புண்ணியவதியாயும் பூஜிக்கத்தக்கவளாயும் யாவராலும் பூஜிக்கப்பட்டவளாயும்ராஜக்கிரீடைக்கு அதிதேவதையாயும்பகவா னுடைய ராசக்கிரீடாமண்டபத்திலிருக்கிறவளாயும் ராசக்கிரீடை யால்அலங்கரிக்கப்பட்டவளாயும்ராஜக்ரீடைக்குஈஸ்வரியாயும்மஹா ரகஸ்யையாயும் ராஜஸ்தானத்திலும் கோலோகத்திலும் வசிக்கின்ற வளாயும் கோபிகாவேஷத்தைத்தரிக்கின்றவளாயும் பரம ஆஹ்லாத சொரூபிணியாயும் அளவில்லாத சந்தோஷ சொரூபிணியாயும் நிர்க்குணியாயும் நிராகாரையாயும் புண்ணியபாப சம்பந்தமில்லாத வளாயும் நிரீஹையாயும் நிரஹங்காரையாயும் நிராசையுள்ளவளா யும் பக்தாநுக்கிரக காரணியாயும் வேதமார்க்கத்தால் தியானித்து அறியத்தக்கவளாயும் தேவர்களாலும் முநிசிரேஷ்டர்களாலும் ஞானநோக்கால் நோக்கப்பட்டவளாயும் நெருப்பினால் சுத்தமான

வஸ்திரத்தைத் தரித்தவளாயும் நாநாவிதமான அலங்காரத்தால் அலங்கரிக்கப்பட்டவளாயும் கோடி சந்திரன் உதித்தாற்போற் பிரகாசிக்கின்ற திருமேனியையுடையவளாயும் சர்வகாந்தியையுமுடைய திவ்யசரீரமுள்ளவளாயும் கிருஷ்ணமூர்த்தியினிடத்தில் மிக்கபக்தியுள்ளவளாயும் சர்வசம்பத்தையுங்கொடுக்கின்றவளாயும் இடபரூபமான வராகஅவதார ரூபிணியாகவிருக்கின்ற தேவியினுடைய பாததாமரையின் சம்பந்த விசேடத்தினால் பூமிதேவியைப் பரிசுத்தஞ்செய்கின்றவளாயும் புதியமேகத்திற் பிரகாசிக்கின்ற மின்னல் போல் பகவானுடையமார்பில் ஸ்திரீரத்னமாய் விளங்குகின்றவளாயும் பூர்வம் பிரமன் தனது ஆத்மசுத்தியின்பொருட்டு அறுபதினாயிரம் வருடம் அரியதவம்புரிந்தும் கனவிலுங் காண்பதற்கரிதான பாதபத்மத்தையுடையவளாயும் பின்னர் அப்பிரமன் பூலோகத்தில் தவம்புரிய இரக்கமுற்று பிருந்தாவனந்தோறும் தன்னைக்காணும்படிச் செய்தவளாயும் இருக்கின்றாள்.

(இதுவரையில்) பரிபூரணமானஐந்து வித்யாதேவிகளின் வரலாற்றின் மகிமைகளைக் கூறினேன். பிரதான அம்சரூபங்களாகவும் கலாரூபங்களாகவும் அக்கலையின் அநேகத்தில் ஒருபாகமாகவும் அத்தேவிகளிடத்திலிருந்து ஒவ்வொரு பிரபஞ்சத்திலுள்ள தேவிகளும் சாதாரணஸ்திரீகளும் பிறந்தனர். இனி அவர்களுள் பிரதான அம்சரூபங்களைக் கூறுகின்றேன் கேட்பீராக.

உலகினையெல்லாம் பரிசுத்தஞ்செய்கின்ற கங்காதேவி—பிரகிருதிதேவியின் பிரதான அம்சசொரூபிணியாயும், விஷ்ணுவினுடைய சரீரத்திலிருந்து ஜலரூபியாகப்பிறந்தவளாயும், பாவிகளது பாவமாகிறகாட்டை ஜ்வலித்துக்கொளுத்துகிற அக்னிபோன்றவளாயும், ஸ்நானபானங்களால் சுகமாகப் பரிசிக்கத்தக்கவளாயும், மோக்ஷத்தைக் கொடுக்கின்றவளாயும், கோலோகத்திற்குச் சுகமாக ஏறுகின்றபடிபோன்றவளாயும், சுத்தமானநதிகளுக்குள் சிறந்தவளாயும், ஈஸ்வரனுடையசடையாகிய மேருவில் முத்துப்போல் பிரகாசிக்கின்றவளாயும், பரதகண்டத்தில் தவம்புரிவோர்க்கு அத் தவசித்தியைக்கொடுக்கின்றவளாயும் இருக்கின்றவளாகும்.

சந்திரனைப்போலும் வெண்டாமரையைப் போலும் பால் போலும் பிரகாசிக்கின்றசுத்ததத்வ சொரூபிணியாயும், நிர்மலையாயும், நிரஹங்காரையாயும், பதிவிரதையாயும், நாராயணருக்குப் பிரியை

யாயு மிருக்கின்ற துளசிதேவி—பிரகிருதிதேவியின் பிரதான அம்ச சொரூபிணியாயும், பத்திரரூபிணியாயும், விஷ்ணுவினிடம் பிரிய முள்ளவளாயும், விஷ்ணுபூஷணசொரூபிணியாயும், அவருடைய பாதத்திலிருப்பவளாயும், தவம் சங்கல்பம் பூஜைமுதலானவைகளை யுண்டுசெய்கின்றவளாயும், புஷ்பங்களுக்குள் சிறந்த புஷ்பரூபி ணியாயும், எப்போதும் புண்ணியத்தைக் கொடுக்கின்றவளாயும், தெரிசனத்தினாலும் பரிசனத்தினாலும் தக்ஷணத்தில் முக்தியைக் கொடுப்பவளாயும், கலியுகத்திலுண்டாகும் பாவத்துக்கு உலர்ந்த கட்டையைக்கொளுத்தும் அக்னிபோன்றவளாயும், பூதேவியைத் தன்பாதபரிசமாத்திரத்தில் பரிசுத்தஞ்செய்கின்றவளாயும், பெரி யோர்கள் செய்யும் தவம் தெரிசனத்தினாலும் பரிசத்தினாலும் சித்தி யாதற்குத் தீர்த்த சொரூபிணியாயும், சகலகர்மங்களும் விணாகாது பிரயோஜனமடையச் செய்கின்றவளாயும், பாரதவருடத்தில் மோ காமிகளுக்கு மோக்ஷத்தையும் போககாமிகளுக்குப் போகத்தையும் கொடுக்கின்ற கற்பவிருக்ஷம்போன்றவளாயும் இருக்கின்றவளாம்.

பாரதவருடத்தி லிருக்கின்றவர்களைச் சந்தோஷிக்கச்செய்ய பிரகிருதிதேவியின் பிரதானஅம்சரூபிணியாயும், பரதேவதையாயும் உள்ள மனஸாதேவி—சங்கரருக்குப்பிரியசிஷ்யையாயும், மஹா ஜ் ஞானசொரூபிணியாயும், அனந்தன் சகோதரியாயும், நாகங்களால் பூஜிக்கப்பட்டவளாயும், நாகேஸ்வரியாயும், நாகமாதாவாயும், நாகவாகினியாயும், நாகேந்திரகணங்களோடு கூடியிருப்பவளாயும், நாகபூஷணபூஷிதையாயும், நாகங்களால் நமஸ்கரிக்கப்பட்டவளா யும், நாகசயனியாயும், சித்தயோகினியாயும், சுந்தரியாயும், இவை போலவே விஷ்ணுரூபிணியாயும், அவ்விஷ்ணுவினதுபக்தி பூஜை பாராயணம் இவற்றைஉடையவளாயும், தவஞ்செய்கின்றவளாயும், தபோரூபிணியாயும், தபோபலத்தைக்கொடுக்கின்றவளாயும் மூன்று லக்ஷம் தேவ வருஷம் வரை ஹரியைக்குறித்துத் தவஞ்செய்தவளா யும், ருஷிகளினும் ஸ்திரீகளிலும் சிறந்த கீர்த்தியடைந்தவளாயும், சர்வமந்திராதிதேவதையாயும், பிரஹ்மதேஜஸினால்ஜ்வலித்துக்கொ ண்டிருப்பவளாயும், பரப்பிரமசொரூபிணியாயும், பரப்பிரமத்தைத் தியானிப்பதில் ஆவலுள்ளவளாயும், கிருஷ்ணருடைய அம்சமான ஜரத்காருமுனிவருடைய பத்தினியாயும், பதிவிரதையாயும், ருஷிசி ரேஷ்டரான ஆஸ்திகமுனிவருக்குத்தாயாகியும்இருக்கின்றவளாகும்.

பிரகிருதிதேவியின் பிரதானஅம்சரூபிணியான தேவசேனை யாயும், மாத்ருகாகணங்களில் பூஜிக்கப்பட்டவளாயுமுள்ள சஷ்டி தேவி—பிரகிருதியின் ஆருவதுஅம்சமாகத்தோன்றினவளாயும், மூவுலகிலுள்ளார்க்கும் புத்திர பௌத்திராதி சம்பத்துகளைக் கொடுத்துக் காக்கும் சம்பத்சொரூபிணியாயும், சிசுக்களிடத்தில் விருத்தரூபிணியாகிய யோகினிவடிவா யிருப்பவளாயும், அதனுல் உலகில் இடைவிடாது சிசுக்களை உத்தேசித்து ஒருவருடம் பூஜிக்கப்படுகின்றவளாயும், பிரசவக்கிரகத்தி லிருக்கும்போதே ஆருவது தினத்திலும், இருபத்தோராம்தினத்திலும், மங்களத்தை உத்தேசித்துப் பூஜிக்கப்படுகின்றவளாயும், நித்தியமாயுள்ள இஷ்டகாமங்களைக் கொடுக்கத்தக்க தயாரூபிணியாயும், சிரேஷ்டமான மாத்ருவாயும், ஜலத்திலும் பூமியிலும் ஆகாயத்திலும்சிசுக்களுக்கு யாதொரு ஆபத்தும் வாராவண்ணம் காக்கும் ரக்ஷணகாரணியாயும் இருக்கின்றவளாம்.

பிரகிருதிதேவியின் முகத்தினின்றும்தோன்றி எப்போதும் சர்வமங்களத்தைக்கொடுக்கிற மங்களசண்டிகை — சிருட்டிகாலத்தில் மங்களசொரூபிணியாயும் சங்காரகாலத்தில் கோபரூபிணியாயும் இருத்தலினுல் மங்களசண்டிகையென்று பண்டிதர்களால் சொல்லப்பட்டனள். அவள் ஒவ்வொரு உலகங்களிலும் மங்களவாரந்தோறும் பூஜிக்கப்படுகின்றவளாயும் புத்திரன் பௌத்திரன் தனம் ஐஸ்வர்யம் கீர்த்தி முதலியவைகளை அதிசுலபத்தில் சந்தோஷித்து ஸ்திரீகளுக்கெல்லாம் கொடுக்கின்றவளாயும் இருக்கின்றவளாம்.

கோபங்கொண்டு சகலப்பிரபஞ்சத்தையும் ஒரு க்ஷணத்தில் சங்கரிக்கும் காளி—பிரகிருதியாகிய துர்க்கையின் முகத்தினின்று பாதி அம்சமாக சும்பநிசும்பர்களின் யுத்தத்தில் தோன்றினவளாயும் தாமரைமலர்போன்ற கண்ணுள்ளவளாயும் தேஜஸினுலும் குணத்தினுலும் துர்க்காதேவிக்குச் சமானமானவளாயும் கோடி சூரியர்களுக்குச் சமானமாகப் பிரகாசிக்கின்ற சரீரமுள்ளவளாயும் சகலசத்திகளுள் பிரதானையாயும் மிக்க பலிஷ்டையாயும் சர்வசித்திகரையாயும் கிருஷ்ணரிடத்தில் பக்தியுள்ளவளாயும் அவருக்குச் சமானமான தேஜஸு விக்ரமகுணங்கள் பாவனைகள் நிறம் முதலியவற்றை யுடையவளாயும் நிஸ்வாசமாத்திரத்தில் சகலப்பிரமாண்டங்

களையும் அழிக்கத்தக்க மகா சக்தியையுடையவளாயும் அசுரயுத்தத்தை ஓர் கிரீடையாகச்செய்து தனது மகிமையை உலகினர் அறியச்செய்கின்றவளாயும் தர்மார்த்தகாமமோக்ஷங்களை அபேக்ஷிக்கின்றவர்களால் ஆராதிக்கப்பட்டவளாயும் இருக்கின்றவளாம்.

பிரமனுதிதேவர்களாலும் முனிவர்களாலும் மாநுடராலும் தோத்திரஞ் செய்யப்பட்ட சுந்தரியான பூதேவி—பிரகிருதிதேவியின் பிரதான அம்சங்களாற் பிறந்தவளாயும் எல்லாவற்றிற்கும் ஆதாரமானவளாயும் சகலமான ஒஷதிரூபிணியாயும் ரத்னங்களுக்கு இருப்பிடமாயும் ரத்னகர்ப்பிணியாயும் சமுத்திரங்களுக்கெல்லாம் ஆதாரமானவளாயும் ஜனங்களாலும் அரசர்களாலும் பூஜித்துத் துதிக்கப்பட்டவளாயும் யாவருக்கும் ஜீவனோபாயரூபிணியாயும் சர்வசம்பத்தையுந்தருகின்றவளாயும் இருக்கிறவளாம்.

ஒ முனிசிரேஷ்டரே! இனி, எந்தத்தேவிகளைவிட்டு தாவரஜங்கமரூபமாகவிருக்கின்ற இந்தப்பிரபஞ்சமெல்லாம் வேறு ஆதரவில்லாமலிருக்கின்றதோ; அந்தப்பிரகிருதிதேவியின் கலையினுற்றோன்றிய கலாதேவிகளையும், அவர்கள் எவர்களுக்குப் பத்தினிகளாகவிருக்கின்றார்களோ அவர்களையுங் கூறுகின்றேன்.

சுவாஹாதேவி - அக்னிபத்தினி; இவளில்லாவிடில் ஓமஞ்செய்யும் அவிசைத் தேவர்கள்பெற வல்லமையுள்ளவராகார். தக்ஷணுதேவியும் தீக்ஷாதேவியும் - யக்ஞபத்தினிகள்; இவர்கள் பூஜிக்கப்படாவிடில் பிரபஞ்சத்தில் எல்லாக்கருமமும் வீணுகும். தர்ப்பணகாலத்தில் உச்சரிக்கும் சுவதாதேவி - பிதுர்க்கள் பத்தினி; இவள் இல்லாவிடில் பிதுர்க்கள் பூஜை வீணுகும். சுவஸ்திதேவி - வாயுபத்தினி; இவள் தானம் வாங்கும்போதும் கொடுக்கும்போதும் பூஜிக்கப்படுகின்றாள். புஷ்டி - கணேசபத்தினி; இவளில்லாவிடில் எல்லோரும் க்ஷீணித்துவிடுவர். துஷ்டி - ஆதிசேஷபத்தினி; இவளில்லாவிடில் எல்லோருஞ் சந்தோஷமடையார். சம்பத்து-ஈசானபத்தினி; இவளில்லாவிடில் தாரித்திரத்தையடைவர். திருதி—கபிலபத்தினி; இவளில்லாவிடில் தைரியமடையார். சதி - சத்தியபத்தினி; இவளில்லாவிடில் பந்துக்களுள்ளவராகார். தயையும் பதிவிரதையும் - மோகபத்தினி; இவர்களில்லாவிடில் எல்லோரும் யாதொருபயனையும் அடையார். பிரதிஷ்டை - புண்ணியபத்தினி;

இவள் பூஜிக்கப்படாவிடில், மனிதர்கள் உயிரோடிருப்பினும் மரண மடைந்தாரோடொப்பர். இவள்மனிதர்களுக்குப் புண்ணியத்தைக் கொடுக்கின்றவள். சம்சித்தியும் கீர்த்தியும் - சுகர்மத்துக்குப்பத்தினிகள்.; இவர்கள் புண்ணியவான்களால் பூஜிக்கப்படாவிடில் லோகமெல்லாம் கீர்த்தியற்றுவிடும். கிரியை - உத்யோகபத்நினி ; இவள் எல்லாராலும் பூஜிக்கப்படுகிறாள். இவளில்லாவிடில் உலகம் சோம்பலையடையும். மித்தியாதேவி - அதர்மபத்தினி ; இவள் சகலதுஷ்டர்களாலும் பூஜிக்கப்படுகிறாள். இவளில்லாவிடில் உலகம் பாழாய்விடும். இவள்கிருதயுகத்தில் காணப்படாதவளாயும், திரேதா யுகத்தில் சூக்ஷ்மரூபிணியாயும், துவாபரத்தில் பாதியுருவமுள்ளவளாயும், கலியில் பூரணவுருவமுள்ளவளாயும், தனது பலத்தினால் எவ்விடத்தும் வியாபித்து தனது சகோதரனை கபடனோடு வீடுகள்தோறுந் திரிந்துலாவிக்கொண்டிருப்பள். சாந்தியும் லச்சையும் - சுசீலைக்குப்பத்தினிகள்; இவர்கள் எல்லோராலும் பூஜிக்கப்படுகிறார்கள். இவர்களில்லாவிடில் உலகம் பித்தம் பிடித்தது போலாகும். புத்தியும் மேதையும் திரிதியும் - தியான பத்தினிகள்; இம்மூவரும் இல்லாவிடில் உலகம் அறிவில்லாமல் சித்தப்பிரமை பிடித்ததுபோல் ஆகிவிடும். காந்தி - தருமபத்தினி; இவளில்லாவிடில் பிரபஞ்சரூபமான பரமாத்மாவுக்கு ஆதாரமில்லை. சோபாசொரூபமான லக்ஷ்மீ-மதிபத்தினி; இவள் ஸ்திரீரூபமாயும் சரீர ரூபமாயும் தான்யாதிரூபமாயும் கவுரவிக்கப்பட்டுப் பூஜிக்கப்படுகின்றாள். காலாக்கினிதேவியும் சித்தயோகினியாகிய நித்திராதேவியும்-உருத்திர பத்தினிகள்; இவர்கள் உலகமுற்றும் வியாபிக்கின்றனர்; சந்தி இரவு பகல் என்னுமூவரும் - காலத்துக்குப்பத்தினிகள்; இவர்களில்லாவிடில்நான்முகனும் கணக்கிடமுடியாது. பசியும் தாகமும். - லோபபத்தினிகள்; இவர்கள் எல்லோரிடத்தும் வியாபித்து கவலையுற்றவராக்கி அவர்களால் மரியாதையுடன் புகழப்பட்டிருப்பர். பிரபையும் (வெளிச்சமும்) தாஹிகையும் (கொளுத்தலும்) தேஜஸின் பத்தினிகள்; இவர்களில்லாமல் பிரமனுஞ் சிருட்டிக்கவல்லவனல்லன். காலகன்னி என்னும் மிருத்யுவும் ஜரையும்-ஜ்வரத்துக்குப்பத்தினிகள்;இவர்களில்லாவிடில்பிரமனால்சிருட்டிக்கப்பட்டஉலகங்கள் நெருங்கி இறந்துவிடும். நித்திராபுத்திரிகளானதாந்தரையும் (சோம்பல்) பிரீதியும்-சுகத்திற்குமனைவிகள்; இவர்கள் உலகமுற்றும் வியா

பித்திருக்கின்றனர். சிரத்தையும் பக்தியும் வைராக்கியத்துக்குப் பத்தினிகள்; இவர்கள் ஜீவன்முக்தர்களிடம் ஆக்ரமித்திருப்பவர். தேவமாதாவான அதிதி, பசுக்களுக்குத்தாயானகாமதேனு, அசுரமாதாவானதிதி கர்த்துரு வினதை தநு என்பவர்களும் இவர்களேயன்றி சந்திரபத்தினியான ரோகணி, சூர்ய பத்தியானின ஸம்க்ஞா, மநுபத்தினியான சதரூபை, இந்திரபத்தினியான சசி, குருபத்னியான தாரை, வசிட்டபத்தினியானஅருந்ததி, கௌதமபத்தினியான அகலிகை, அத்திரிபத்தினியான அநுசூயை, கர்த்தம பிரஜாபதி பத்தினியான தேவஹூதி, தக்ஷபத்தினியான பிரசூதி, பிதுர்க்களுடைய மானசீக புத்திரியான மேனகை, அகஸ்திய பத்தினியான லோபாமுத்திரை, குபேரபத்தினியான குந்தி, வருணபத்தினியான பிரசித்தி, வாயுபத்தினியான விந்தியா, தமயந்தி, யசோதை, தேவகி, காந்தாரி, திரௌபதை, சௌப்பியா, சத்தியவதி, விருஷபனுக்குப்புத்திரியாயும் ராதைக்குத்தாயாயுமுள்ளகுலோத்வஹா,மந்தோதரி, கௌசலை, சுபத்திரை, கௌரவி, ரேவதி, சத்தியபாமா, காளிந்தி, லக்ஷ்மணு,ஜாம்பவதி, அக்னிஜிதி, மித்திரவிந்தை, லக்ஷ்மணா, ருக்மணி, சீதை, காளி பரிமளகந்தி, உஷை,அவளுடைய சகியான சித்திரலேகை, பிரபாவதி, பாநுமதி, மாயாவதி, ரேணுகை, பலராமர்தாயான ரோகணி, கிருஷ்ணனுக்குச் சகோதரியான ஏகதந்தை, துர்க்கைமுதலியோரும் பிரகிருதியின் கலையாயுள்ளவர்கள்.

கிராமதேவிகளெல்லோரும் பிரகிருதிதேவியின் கலாம்சத்திற் பிறந்தவர்கள். பிரபஞ்சத்திலுள்ள ஸ்திரிகளெல்லாம்அந்தக்கலையின் அம்சாம்சத்திற்பிறந்தவர்கள். ஆகையினால் ஸ்திரீகளை அவமானஞ்செய்தால் பிரகிருதிதேவியை அவமானஞ்செய்ததாகும். புத்திரிபுத்திரனைப்பெற்ற பிராமணஸ்திரியையும்,எட்டுவயதுடையபிராமணகன்னிகையையும் வஸ்திர புஷ்ப சந்தனங்களால் பூஜித்தால் பிரகிருதிதேவியைப் பூஜித்ததாகும்.நல்லொழுக்கமுள்ள பதிவிரதைகள் உத்தமஸ்திரீகள் ஆகிய இவர்கள் பிரகிருதியின் சத்வாம்சத்திலும், புருஷர்களால் அநுபவிக்கத் தகுந்தவர்களாயும் சுவாதீனர்களாயும் வீட்டுக்காரியங்களில் ஆவலுள்ளவர்களாயுமுள்ளவர் மத்திமஸ்திரீகள் இவர்கள் ரஜோகுணத்திலும், அறியப்படாத குலமும் பயங்கரமான முகமும் குலத்தை நாசஞ்செய்யும் துஷ்டத்தனமும் ஒருவர் சுவாதீனமில்லாமலும் கலகத்தில் ஆவலும் விபசா

ரத்தனமுமுள்ள பூலோகஸ்திரீகளும் சுவர்க்கத்திலுள்ள அப்சரஸ் திரீகளும் அதமஸ்திரீகள் இவர்கள் தாமதகுணத்திலும் பிறந்த வர்களாம்.

இவ்வாறு பிரகிருதிதேவியின் அம்சங்களெல்லாவற்றையும் வர்ணித்தேன். அவர்களெல்லாம் புண்ணியக்ஷேத்திரமாகிய பரதகண்டத்தில் சுரதன் என்பவனுல் பூஜிக்கப்பட்டார்கள். இராவணவதஞ் செய்யும்போது ராமசந்திரரால் மகாவருத்தத்தை நிவர்த்தி செய்கிறவளான துர்க்காதேவி பூஜிக்கப்பட்டாள். மூன்றுலோகத்தாராலும் வணங்கப்படும் தக்ஷபுத்திரியான சதிதேவி பூஜிக்கப்பட்டு தகப்பனிடத்துள்ள கோபத்தால் அக்கினிப்பிரவேசமாகிஇமாசலபத்தினியாகிய மேனகையிடந்தோன்றி ஈஸ்வரனை மணந்தனள். கணேசர் கிருஷ்ண மூர்த்தியின் கலாம்ச மாகவும் ஸ்கந்தர் விஷ்ணுகலாம்சமாகவும் தோன்றி பிறகு பார்வதிக்குப் புத்திரராயினர். இலக்குமிதேவி மங்களபூபனுலும் சாவித்திரி அஸ்வபதியாலும் சரஸ்வதி பிரமனுலும் முதலில் பூஜிக்கப்பட்டு பிறகு முனிவர்களாலும் தேவர்களாலும் மூவுலகத்தும்பூஜிக்கப்பட்டார்கள். ராதாதேவியைகோலோகத்தில் ராசமண்டலத்தில் கார்த்திகைமாதபூரணையில் பரமாத்மாவான கிருஷ்ணமூர்த்தி முதலில்பூஜித்தனர். பிறகு அவருடைய உத்தரவினுல் கோபிகாஸ்திரீகள் கோபர்கள் சிறியபெண்கள் பிள்ளைகள் கோகூட்டங்கள் பிரமனுதிதேவர்கள் முனிவர்கள் பக்தியோடு புஷ்பங்களாலும் தூபங்களாலும் பூஜித்துத் தோத்தரித்தனர். சங்கரரால் ஆக்ஞாபிக்கப்பட்ட சுயக்ஞை என்பவள் பாரதவருஷத்தில் புண்ணிய க்ஷேத்திரங்களில் பூஜிக்கப்பட்டு பிறகு மூவுலகத்தாராலும் புஷ்ப தூபதீப நைவேத்தியங்களாற் பூஜிக்கப்பட்டுவருகிறுள். அவ்வாறே பிரகிருதிதேவியின் கலையினுற்றோன்றியவரும் கிராமதேவிகளும் கிராமங்களிலும் நகரங்களிலும் பூஜிக்கப்படுகிறுர்கள். ஓ நாரத முனிவரே! நீர்கேட்ட பிரகிருதி தேவிகளின் வரலாறுகளை சாஸ்திரங்களிற் கூறியுள்ள லக்ஷணப்படி கூறினேன். இன்னும் எதனைக்கேட்க விரும்புகின்றனை யென்றனர். (சு - ம் - கருஅ.)

முதலாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸர்வ சாக்ஷிண்யை நமஃ

# இரண்டாம் அத்தியாயம்.

## பஞ்ச ப்ரகிருதியாதி உற்பத்தி.

நாரதர் ஓபிரபுவே! எல்லாத்தேவிகளின்சரிதம் சுருக்கமாகக்கேட்டேன். ஆயினும் பிறருக்கு நான்போதிக்குமாறு எனது ஞாபகத்தில் நிற்கும்வண்ணம் விரிவாய்க்கூறவேண்டும். சிருட்டிக்கு ஆதியிலிருக்கின்றதேவி சிருட்டியின்பொருட்டு எப்படி ஆவிர்ப்பவித்து எப்படி தான் ஐந்துவிதமாகப் பிரிந்தாள். எந்த எந்ததேவி அம்சமாகவும், எந்த எந்ததேவி கலையாகவும், எந்த எந்ததேவி திரிகுணாத்மகமாகவும் தோன்றினார்களோ அவர்களது அவதாரம் தியானம் பூஜை கவசம் தோத்திரம் ஐஸ்வர்யம் சௌக்கியம் மங்களம் இவைகளைச் சம்பிரதாயமாக விரித்துச்சொல்ல யான் கேட்கவேண்டுமென்னும் இச்சையுடையவனாக விருக்கின்றேன் என்றுபிரார்த்திக்க நாராயணர் கூறுகின்றார்.

பரமாத்மா ஆகாயம் காலம் திக்கு பிரபஞ்சபூகோளம் கோலோகம் வைகுண்டம் இவைகள் நித்தியமாக விருக்கின்றன. இவைகளைப்போலவே பரப்பிரமத்தின்லீலையாய் அதனிடத்தில் ஐக்கியமாகவிருக்கும் பிரகிருதியும் நித்தியமாகவிருக்கிறது. எவ்வாறெனின், தாமரைமலரில் காந்திபோலும். அக்னியில் சுடுகைபோலும். சந்திரனிடத்தில் நிலவைப்போலும், சூரியனிடத்தில் வெயில்போலும் பிரகிருதி எப்போதும் அபின்னையாயிருக்கிறாள். குண்டலாதிகளைப் பொன்னையன்றித் தட்டானும், கடாதிகளை மண்ணையன்றிக் குயவனும் எவ்வாறு செய்யார்களோ அவ்வாறு ஜகத்சிருட்டியை அப்பிரகிருதியையன்றி மகேஸ்வரரும் செய்யார். சர்வசக்திசொரூபமாக விருக்கின்ற அப்பிரகிருதியின் சம்பந்தத்தினாற்றான் பரமபுருஷன் சக்திமானென்று சொல்லப்படுகின்றான்.சக்திஎன்பது ஐஸ்வர்யம் பராக்கிரமம் என்னும் இரண்டு பொருளுடையது. அவ்விரண்டையுமே தமதுருவமாகக்கொண்டு அந்தப்பிரகிருதி ஐஸ்வர்யரூபமாயும் பராக்கிரமரூபமாயுமிருந்து அவ்விரண்டையுந்தருதலால்

பிரகிருதி சக்திஎன்று சொல்லப்படும். பகம் என்னுஞ்சொல் ஞானம் சமர்த்தி சம்பத்து யசசு பலம் என்னும் பொருளையுடையது. ஆதலால் பகரூபமானசக்தி அப்பிரகிருதியேயாகலின் பகவதி என்றுஞ் சொல்லப்படுகிருள். அப்பகவதியோடு பரமாத்மா கூடியிருத்தலின் பகவானெனப்படுகின்ருர். அதனுல் அப்பகவான் தனதிச்சையால் உருவமுள்ளவராயும் உருவமில்லாதவராயு மிருக்கிருர். அவரை யோகிகள் தேஜோரூபராயும் உருவமில்லாதவராயும் தியானித்து பரப்பிரஹ்மமென்றும் பரமாத்மாவென்றும் ஈஸ்வரரென்றும் துதித்து யாவராலும் அவர்காணக்கூடாதவரென்றும், யாவையும் அவர் காண்பவரென்றும், சர்வஞ்ஞரென்றும், சர்வகாரணரென்றும், எல்லாவற்றையுங் கொடுக்கின்றவரென்றும், சர்வசொரூபி என்றும் வழிபடுகின்றனர். இவ்வாறு வைஷ்ணவர் தியானிப்பதில்லை.

அவர்கொள்கையாதெனின், பிரகாசமுள்ள வஸ்துஇல்லாமல் பிரகாசம் என்பது ஏது எனமறுத்து, பிரமதேஜசுள்ளவஸ்து தேஜோமயமண்டலத்திலிருக்கிறது. அது தன்னிச்சைவழி யிருப்பதாயும் சர்வரூபமாயும் சர்வகாரணகாரணமாயும் மிகுந்தசுந்தரமாயும் மனோகரமாயும் சுந்தரமானவடிவமுடைய குழந்தையாயும் எப்பொருளினுஞ் சிறந்த காந்தியுள்ளதாயும் எல்லாவற்றினுஞ் சிறந்ததாயும் புதியநீர்கொண்ட மேகம்போல் பிரகாசமுள்ள கறுத்தமேனியுள்ளதாயும்சரத்காலமத்யானத்தில் மலர்ந்திருக்கும் தாமரைக்கூட்டத்தைப்பழிக்கின்ற நேத்திரமுடையதாயும் முத்துக்களின் காந்தியைப்பழிக்கின்ற மனோகரமான பல்வரிசையுடையதாயும் சிரம் மயில்தோகையின் இறகினுலும் மல்லிகைமாலைகளாலும் நிறைந்திருக்கிறதாயும் அழகானநாசியுள்ளதாயும் பக்தாநுக்ரஹமான புன்சிரிப்புள்ளதாயும் சுவலிக்கின்ற அக்கினியைப்போல் பிரகாசிக்கின்ற பொன்மயமான வஸ்திரத்தால் விளங்குவதாயும் புள்ளாங்குழலேந்திய இரண்டுகையுள்ளதாயும் ரத்னபூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டதாயும் சர்வலோகத்திற்கும் ஆதாரமாயும் பிரபுவாயும் சர்வசக்தியோடுகூடியதாயும் சகலஐஸ்வர்யத்தையுங் கொடுப்பதாயும் சர்வசுதந்தரமாயும் சர்வமங்களகரமாயும் அகண்டபரிபூரணமாயும் சித்தியாயும் சித்தேசமாயும் சித்திகாரகமாயும் உள்ளநித்தியமான பரப்பிரமமென்றுதியானிக்கிருர்கள். ஜனனம் மரணம் கிழத்தனம்

நோய் சோகம் பயம் இவைகளைப்போக்கும் அப்பிரஹ்மத்தினுடைய இமைகொட்டுங்காலம் பிரமனுக்குப் பூரணவயதாமென்றும் இத்தன்மையுடையவஸ்துவே பரபிரஹ்மமென்றும் பரமாத்மாவென்றும் கிருஷ்ணமூர்த்திஎன்றும் சொல்லப்படுமென்றும், கிருஷ்ண என்பதில் கிருஷி என்பது பரப்பிரமபக்தி எனவும், ண என்பது அடிமைத்தன்மை எனவும் பொருள்படுதலால் அவ்விரண்டையுங் கொடுக்கும் அதற்கு கிருஷ்ணனென்று பெயர்வந்ததென்பர்.

இனிச் சித்தாந்தத்தைச் சொல்லுகின்றேன். பிரமமானபிரபு சிருட்டிக்கவேண்டு மென்னும் இச்சை தனது உள்ளத்திற்கொண்டு சங்கற்பிக்க அவ்விச்சையின் அம்சமான காலதத்வபிரேரேபத்தால் சித்சக்தியாய் அச்சக்தி ஒன்றுனே ஆதியில் சிருட்டித்தனர். எவ்வாறெனில்; தனதிச்சாமயமான இச்சாசக்தியினுல் பிரபு வலப்பாகம் புருஷரூபமாகவும் இடப்பாகம் ஸ்திரீரூபமாகவும் இரண்டுருக் கொண்டனர்: பின்னர் காமத்துக்கு ஆதாரரூபமான ஸ்திரீவுருவத்தை மகாகாமியாய்ப் பார்த்தனர். அவரால் பார்க்கப்பட்ட பெண்ணுருவுடையவள் அழகிய தாமரைமலர்போன்ற அழகையும் சந்திரமண்டலத்தை நிந்திக்கின்ற பிருஷ்டபாகத்தையும், வாழைமரத்தைப்பழிக்கின்ற மிக அழகான தொடைகளையும், அழகிய வில்வக்கனிபோன்ற ஸ்தனங்களையும், புஷ்பத்தினுல் அலங்கரிக்கப்பட்ட லளிதையான சுருங்கிய இடையினையும், மனத்தைக் கவரத்தக்க சுந்தரத்தையும், சாந்தமான உருவத்தையும், புன்சிரிப்பையும் கடைக்கண்பார்வையையும் உடையவளாயும், வன்னிசுத்தமாயும் சுகமாயுமுள்ள வஸ்திர மணிந்த இடையுடையவளாயும், இரத்னுபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாயும், சகோரப்பக்ஷியைப்போல் கோடிசந்திரனுதித்தாற்போன்ற கிருஷ்ணமூர்த்தியினது திருமுகத்தைப் பார்க்கின்ற கண்களுடையவளாயும், நெற்றிநடுவில் சந்தனப்பொட்டும் அதனடுவில் கஸ்தூரிப்பொட்டும் அதனடுவில் சிந்தூரப்பொட்டும் தரித்தவளாயும், மாலதிபுஷ்பத்தினுல்அலங்கரிக்கப்பட்டுள்ள மடிப்புள்ளகூந்தலுடையவளாயும், சிரேஷ்டமான ரத்னத்தை நடுநாயகமாகவுடையமுத்தாரமணிந்தவளாயும்,பர்த்தாவை விரும்புகின்றவளாயும், சந்திரனுதித்தாற்போன்றபிரகாசமுள்ளவளாயும், சந்தோஷத்தினுல்பூரித்தவுருவமுள்ளவளாயும், யானை அன்னம் இவைகளின் கர்வத்தையடக்கும்நடையினையுடையவளாயும்இருந்தனள்.

அவளை சிருங்காரரசம் ஒருருவுகொண்டதுபோல் சிருட்டித்தொழிற்குப் பிரபுவான கிருஷ்ணமூர்த்தி சிருட்டிஸ்தானத்தில் பிரமனது ஒருதினமளவும் சிருட்டியில் ஆவலுள்ளவராய்க் கிரீடித்து சம்போகித்து அதனுல் சிரமமடைந்தவராய் நித்தியானந்தசொரூபிணியானதேவியினிடத்தில் சுபமானகாலத்தில் வீரியத்தைவிட்டனர். அந்தவீரியதேஜஸினுல் சிரமப்பட்ட தேவியினது சரீரத்திலிருந்து வியர்வையும் நிஸ்வாசமும் உண்டாயிற்று. அந்தவியர்வைமுழுவதையும் பூகோளம் கிரகித்துக்கொண்டது. பெருமூச்சியானநிஸ்வாஸக்காற்ருனது சராசரமான சர்வப்பிராணிகளும் ஜீவிப்பதற்கு ஆதரவாய்விட்டது. அவ்வாயுவினுடைய இடப்பக்கத்திலிருந்து பிராணபத்தினி யுண்டாயினுள். அவளுடைய புத்திரர்களாகிய பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என்பவர்கள் பிராணிகளுக்குப் பஞ்சப்பிராணனென்று சொல்லப்படுகின்றனர். தருமரூபமானஜலத்திற்கு அதிபதியான வருணன் இடப்பக்கத்தில் வாருணன்சக்தியான வாருணி தோன்றினுள். கிருஷ்ணருக்குப் பிராணசொரூபியான சித்சக்தி பிரமதேஜஸினுல் ஜ்வலித்துக்கொண்டு பிராணனைக்காட்டிலும் அதிகபிரிய முள்ளவளாயும், தினந்தோறும் அவரிடத்தில் சம்பந்தமுள்ளவளாயும், அவரது மார்பில் வாசமுள்ளவளாயும், நூறுமன்வந்தரமிருந்து பிறகு பிரபஞ்சத்திற்கெல்லாம் ஆதாரமான பொன்போற்பிரகாசிக்கின்ற குழந்தையைப் பெற்று தயவில்லாமல் பிரமாண்டகோளஜலத்தி லெறிந்தனள். அதனைப்பார்த்த கிருஷ்ணமூர்த்தி ஓ கடினசுபாவமும் கோப சுபாவமுமுள்ளவளே! நீ எதனுல் இப்பிள்ளையை எறிந்தனையோ அதனுல் நீயும் உன்னம்சமாகப் பிறக்கிற தேவதாஸ்திரீகளும் பிள்ளையின்றி நித்ய யௌவனமுள்ளவளாவீரென்று சபித்தனர்.

இவ்வாறிருக்கையில் அத்தேவியின் நாக்குநுனியில் விரைவாக ஓர் கன்னிகை மனோகரமான வெண்மையுருவமுள்ளவளாயும், வெள்ளைவஸ்திர முடையவளாயும், வீணையையும் புத்தகத்தையும் தரித்துக்கொண்டிருப்பவளாயும் ரத்னபூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாயுந் தோன்றினுள். சிலகாலங்கழிந்தபின் அத்தேவி வலப்பாகம்ராதையாகவும் இடப்பாகம்லக்ஷ்மியாகவும் பிரிந்தாள். அவ்வாறே கிருஷ்ணமூர்த்தியும் வலப்பாகம் இரண்டுகையுள்ளபுருஷனுகவும் இடப்பாகம் நான்குகையுள்ள புருஷனுகவும் பிரிந்த

னர். பிறகு கிருஷ்ணமூர்த்தி வாக்தேவியையும் ராதை இலக்ஷ்மிதேவியையும் நான்குகையுள்ள நாராயணனுக்குப் பத்தினிகளாகவிருக்கவேண்டுமென்றனர். அவ்வாறே இருவரும் நாராயணனோடு வைகுண்டத்தில் போயிருந்தனர். இவர்கள் பிள்ளையில்லால் இருப்பதையுணர்ந்த நாராயணர் தனது அங்கத்திலிருந்து நான்குகையுள்ளவர்களாயும் தேஜஸ் வடிவு குணம் உருவம் இவைகளால் விஷ்ணுவுக்குச்சமானர்களாயுமுள்ள கூட்டங்களைப்பிறப்பித்தனர். அவ்வாறே லக்ஷ்மிதேவி தனதுசரீரத்தினின்றும் கோடிகோடிதாசிகளைப்பிறப்பித்தனள். ஓமுநிவரே! கோலோகத்தில்பிரபுவான கிருஷ்ணருடைய ரோமகூபத்திலிருந்து அநேககோபர்கள் வயசு தேஜஸ்ரூபம் குணம் பலம் பராக்கிரமம் இவைகளால் தனக்குச்சமானமானவர்களாயும், பிராணனுக்குச் சமானமான பிரியமுள்ளவர்களாயும் பிறந்தனர் ராதையின் ரோமகூபத்திலிருந்து அநேககோபிகன்னிகைகள் ராதைக்குச் சமானமானவர்களாயும் ராதைக்குப் பணிவிடை செய்கின்றவர்களாயும் பிரியமாய்ப் பேசுகின்றவர்களாயும் ரத்னபூஷண முதலானவைகளால் அலங்கரிக்கப்பட்டவர்களாயும் பிறந்தார்கள். இவர்களெல்லாம் நித்தியயௌவன முள்ளவர்களாய் முன்சாபத்தினுல் பிள்ளையில்லாதவராகவே யிருந்தனர்.

இவ்வாறிருக்கையில் நாராயணியாயும் ஈசானியாயும் துர்க்காதேவியாயும் அனுதியான விஷ்ணுமாயையாயும் கிருஷ்ணசக்தியாகியதேவி தோன்றினள். அந்தத்தேவி கிருஷ்ணனுடைய புத்தியை ஆக்கிரமித்துக்கொண்டிருப்பவளாயும் தேவிகளுக்கெல்லாம் பீஜரூபமாயும் மூலப்பிரகிருதியாயும் பரிபூரணையாயும் தேஜோரூபிணியாயும்உருக்கிவிட்ட பொன்போன்றகாந்தியுள்ளவளாயும் உதயகாலசூரியன்போல் பிரகாசிக்கின்றவளாயும் மூன்றுகண்ணையும் புன்சிரிப்பையும் உடையவளாயும் நானுவிதமானஆயுதங்களைத் தரித்துக்கொண்டிருக்கிற ஆயிரங்கையுள்ளவளாயும் பிரகாசிக்கும்வஸ்திரத்தைத் தரித்தவளாயும் இரத்தின பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாயும் இவளுடைய அம்சாம்ச கலையினுலே பிறந்தசகலஸ்திரீகளிடத்திலும் ஜனங்களெல்லாம் மோகித்திருக்கச்செய்யும் மாயையுள்ளவளாயும் சகலசம்பத்தையுங் கொடுக்கின்றவளாயும் கிருகத்தில்வசிக்கிறகாமிகளுக்குச்சகலகோரிக்கைகளையுங் கொடுக்கின்றவளாயும் கிருஷ்ணபக்தியைக் கொடுக்கின்றவளாயும் வைஷ்ண

வர்களுக்கு வைஷ்ணவியாயும் முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தையும் சுகிகளுக்கு சுகத்தையும் கொடுக்கின்றவளாயும் சுவர்க்கத்தில் சுவர்க்கலக்ஷ்மியாயும் கிருகத்தில் கிருகலக்ஷ்மியாயும் தபசிகளிடத்தில் தபசியாயும் ராஜாக்களிடத்தில் சம்பத்சொரூபிணியாயும் அக்னியில் உஷ்ணமாயும் சூரியனிடத்தில் வெயிலாயும் சந்திரனிடத்தில் நிலவாயும் தாமரையிடத்தில் சோபையாயும் இருக்கும் ஸ்வரூபிணியாயும் பரமாத்மாவான கிருஷ்ணமூர்த்தியினிடத்தில் சர்வசக்தி சொரூபமாயும் இருக்கிறாள்.

எந்தத்தேவியினால் ஆத்மா சக்தியுள்ளதாகவிருக்கின்றதோ எந்தத் தேவியினால் லோகமெல்லாம் சக்தியுள்ளதாகவிருக்கின்றதோ, எந்தத்தேவியில்லாவிட்டால் எல்லாலோகமும் இறந்தது போலத் தோன்றுமோ, எந்தத்தேவி சம்சாரமானவிருக்ஷத்திற்கு வித்தாகவிருக்கின்றாளோ, எந்தத்தேவி ஸ்திதிரூபமாயும் புத்திரூபமாயும் பலரூபமாயும் இருக்கின்றாளோ, எந்தத்தேவி பசி தாகம் தயை நித்திரை சோம்பல் பொறுமை தைரியம் சாந்தி வெட்கம் துஷ்டி புஷ்டி பிரமை காந்திமுதலான உருவங்கொண்டிருக்கின்றாளோ, அந்த ராதிகாதேவியானவள் சர்வேஸ்வரனானபகவானைத் தோத்திரஞ்செய்து அவனுக்கெதிரில்நின்றனள். பகவான் அவளுக்கு ரத்தினமயமான சிம்ஹாசனங்கொடுத்தனர்.

இவ்வாறிருக்கையில் பகவானுடைய நாபிக்கமலத்திலிருந்து கமண்டலந் தரித்தவராயும், சம்பத்சொரூபராயும், ஞானிகளுக்குள் சிரேஷ்டமானதபசியாயும், பிரமதேஜஸினால் சுவலிக்கின்றவராயும், நான்கு முகங்களினால் துதிக்கின்றவராயும் உள்ள பிரமனும் நூறுசந்திரன் உதித்தாற்போல ஒளியுள்ளவளாயும், மிக்க அழகாயும், நெருப்பைப்போல் சுவலிக்கின்றவளாயும், ரத்னபூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாயும், ரத்னசிம்மாசனத்திலிருக்கின்ற பகவதியைத் துதிக்கின்றவளாயும் உள்ள ஓர்தேவியும் தோன்றினர்.

அப்போது கிருஷ்ணமூர்த்தி இடப்பாகம் மகாதேவரூபமாகவும், வலப்பாகம் கோபிகளுக்குப்பர்த்தாவான கிருஷ்ணபகவானாகவும் இரண்டுருக்கொண்டனர். அவைகளில்மகாதேவர்—சுத்தஸ்படிகம்போல் பிரகாசிக்கின்றவராயும், கோடிசூரியன் உதித்தாற்போல் காந்தியுள்ளவராயும், திரிசூலந்தரித்தவராயும், புலித்தோலை

யுடையாகவுள்ளவராயும், உருக்கிவிட்டபொன்போன்றசடையுடையவராயும், பஸ்மத்தினுற் பூசப்பட்ட சரீரமுள்ளவராயும், புன்சிரிப்போடுகூடினவராயும் சந்திரனைச் சிரசிலுள்ளவராயும், திகம்பரராயும், சர்வபூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவராயும், நீலகண்டராயும், வலக்கையில் ரத்னமாலைதரித்து ஐந்து முகங்களால் அநாதியானபரப்பிரமத்தை விளக்குகின்றவராயும், சர்வகாரணகாரணராயும், சத்தியசொரூபராயும், எல்லாமங்களத்திற்கும் மங்களமாயும ஜன்மம் மிருத்யு கிழத்தனம் வியாதி சோகம் பயம் இவைகளை நீக்குகின்றவராயும், கிருஷ்ணமூர்த்தியாயும், மிருத்யுவுக்கு மிருத்யுவாயுமிருக்கிற பரமாத்மாவான ஈஸ்வரனை ஜபித்து ரத்னசிம்ஹாசனத்தில் வீற்றிருந்தனர். (சு-ம். அஅ.)

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வாத்மிகாயைநமஃ

## மூன்றாம் அத்தியாயம்.

## * கிருஷ்ண சிருஷ்ட தேவதா வ்யவஸ்திதி.

நாராயணர் கூறுகின்றார்:—முன்ஜலத்தில்விடப்பட்ட குழந்தையானது ஒருபிரமனது வயதளவுகாலம் ஜலத்திலிருந்து காலாந்தரத்தில் இரண்டுருக்கொண்டது. அதன்மத்தியில் நூறுகோடி சூரியன் உதித்தாற்போல் காந்தியுள்ளகுழந்தையாயும் பசியினுல் பீடிக்கப்பட்டு சிறிதுகாலம் அழுதுகொண்டிருப்பதாயும் ஜலத்தில் தாக்குதலில்லாததாயும் அநேகப்பிரமாண்டங்களுக்குப் பிரபுவாகப் போகிறதாயும் நாதனில்லாததாயும் ஆகாயத்தைப்பார்க்கிறதாயும் சிறியதினுஞ்சிறியதாயும் பெரியதினும்பெரியதாயும் கிருஷ்ணமூர்த்தியினது தேஜசில் பதினறில் ஓர் அம்சமாயும் உலகுக்கெல்லாம் ஆதாரமாயுமுள்ள மஹாவிராட் என்னும் பகவானும் இரண்டாவதுரூபமான மகாவிஷ்ணுபகவானும் தனித்தனி தங்களது ரோமகூபங்களில் சகலமானபிரபஞ்சங்களையும் சிருட்டித்தனர். அவர்களாற்சிருட்டிக்கப்பட்ட திரிமூர்த்திகளும் பிரபஞ்சங்களும் எண்ண முடியா.

---

* கிருஷ்ணனல் சிருட்டிக்கப்பட்ட தேவதைகளின் ஏற்பாடு.

ஒவ்வொரு பிரமாண்டத்திலும் ஒவ்வொரு பிரம விஷ்ணு ருத்திரர் இருக்கிறார்கள். பிரமலோகம்வரையில்எண்ணப்பட்டமேலேழுலோகமும் பாதளம் அந்தமாக எண்ணப்பட்ட கீழேழுலோகமுங் கூடியுள்ளது ஒருபிரமாண்டம் என்றுபெயர். அதற்குமேல் வைகுண்டம் அதற்குமேல் ஐம்பதுகோடியோசனை தூரத்தில் நித்தியமாயும் சத்தியசொரூபமாயும் உள்ளது கோலோகம். தாவரஜங்கம பேதங்களோடும் நால்வகைப்பட்ட வருணபேதங்களோடும் சர்ப்பமுதலாகச் சொல்லப்பட்ட ஊர்வனவாதி பேதங்களோடும் நாற்பத்தொன்பது தீவுகளோடும் பருவதங்களோடும் ஏழு சமுத்திரங்களோடும் கூடியிருக்கிறது பூலோகம். இப்பூவுலகிற்கு மேல் புவர்லோகம் சுவர்லோகம் ஜனலோகம் தபோலோகம் சத்தியலோகம் பிரமலோகம் இருக்கின்றன; அவைகளும் அவைகளிலடங்கியுள்ள பிரபஞ்சங்களும் நாசமடையும். கோலோகமும் வைகுண்டமும் எக்காலத்தும் அழிவில்லாமல் நித்தியமாயிருக்கும். தேவியின் ரோமகூபம் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு அண்டம் இருக்கின்றது. இப்பிரமாண்டங்களின் கணக்கை கிருஷ்ணமூர்த்தியினாலும் கணக்கிட முடியாது. ஆகவே மற்றுயாவரால் முடியுமென்றுகூறலாம். ஒவ்வொருபிரமாண்டத்திலும் திரிமூர்த்திகளும் முக்கோடி தேவர்களும் திக்பாலகர்களும் நவக்கிரகங்களும் நக்ஷத்திரங்களும் இருக்கின்றன.

பிறகுமஹாவிராட்புருஷன் ஆகாயத்தைஅடிக்கடிபார்த்து தன்னைத்தவிர வேறொருவருமில்லாமையால் மிக்கசிந்தையுடையவராய் கண்ணீர்விட்டுப் பின் ஞானத்தாற்றெளிந்து கறுத்ததிருமேனியையும் இரண்டுதிருக்கரத்தையும் பொன்னுடையையுமுடையவராய் பக்தானுக்கிரககாரணராய் அநாதியான பரப்பிரஹ்மசொரூபராய்ப் பரமபுருஷராய்ப் புள்ளாங்குழலோடும் தோன்றிய கிருஷ்ணபகவானைப்பார்த்துச் சிரித்தார். சிரித்த குழந்தையைத் தந்தையான பரமேஸ்வரன்பார்த்து நீ என்னைப்போல் ஞானமுடையவனும் பசி தாகம் கிழத்தனம் ரோகம் சோகம் மரணமுதலியனவும் யாதொரு கோரிக்கையும் இல்லாதவனும் யாவருக்கும் வரத்தைக் கொடுக்கின்றவனும் அநேகபிரமாண்டங்களுக்கு ஆதாரமாயும் சிருட்டிக்கு லயம்வருமளவும் இருப்பாயென்று கூறி அவனுடைய காதில் சிரேஷ்டமான பிரணவத்தை முதலிலும் அக்னிபத்தினியின் நாமத்தை ஈற்றிலும் சதுர்த்தியந்தமான

கிருஷ்ணன் என்பதை நடுவிலுமுள்ள விக்கினங்களை யெல்லாம் போக்கும் சடாக்ஷர மந்திரத்தை மூன்றுதரம் உபதேசித்து எல்லாவுலகங்களிலும் வைஷ்ணவர்கள் என்ன நிவேதனஞ்செய்கின்றார்களோ அதிற் பதினாறில்ஒருபாகம் உனக்கும் பதினைந்தில் ஒருபாகம் மஹாவிஷ்ணுவுக்குங் கொடுக்கவேண்டும். கிருஷ்ணமூர்த்தி நிர்க்குணராயும் பரிபூரணராயுமுள்ளவ ராதலால் நிவேதனத்தினால் அவர் திருப்தியடைவது ஒன்றுமில்லை. அவருக்குச்செய்யும் நிவேதனமெல்லாம் லக்ஷ்மிநாதனான விராட்டுக்கேயாகும் என்று கூறி மறுபடியும் அந்தவிபு யாது வேண்டுமென்று வினவினர்.

அதற்கு விராட்புருஷன் கிருஷ்ணமூர்த்தியான பரமேஸ்வரனைப்பார்த்து உன்மலரடியில் சலனமற்றபக்தி நான் பிழைத்திருக்குங் காலம்பெரிதாயிருந்தாலும் சிறிதாயிருந்தாலும் அக்காலம் வரையில் எனக்கு நீங்காதிருத்தல் வேண்டும். இவ்வுலகில் உனது பக்தியிருக்கின்றவன்றான் ஜீவன்முக்தனாய் வாழ்கின்ற புகழுடையவனாவன். அஃதில்லாதவன் பிழைத்திருந்தாலும் பிணமெனப்பட்டு இகழுடையவனாவன். உனதுபக்தியில்லாதவனுக்கு ஜபம் தபம் யக்ஞம் பூஜை விரதம் உபவாசம் புண்ணியம் தீர்த்தயாத்திரை முதலியவைகளால் வரும் பிரயோஜனம் ஒன்றுமில்லை. அவனுடையபிழைப்பு வீணே. ஏனெனில் எந்தப்பரமாத்மாவினால் பிழைத்திருக்கின்றானோ அந்தப்பரமாத்மாவாகிய கிருஷ்ணனையறியாதிருக்கின்றானல்லவா (எனவே ஜபமுதலியசெய்கைகளை யறிந்து அவற்றிற்குரிய பலனைக்கொடுப்பவன் பகவானென்றறியாமையினாலென்க.) எவ்வளவுகாலம் ஆத்மா சரீரத்திலிருக்கின்றதோ அவ்வளவு காலம் சக்தியோடுகூடியிருக்கின்றான். அந்த ஆத்மாசரீரத்தைவிட்டால் சக்திகளெல்லாம் நீங்கிவிடுகின்றன. ஆதலால் நீர் பிரகிருதிசக்திக்கு மேலான சர்வாத்மாவாக விருந்து (பிறரதுஇச்சையின் வழி நில்லாது) உமது இச்சைக்குட்படும் யாவற்றிற்கும் ஆதியாயும் அநாதியான பிரமதேஜஸாயும் இருக்கிறீரென்று துதித்தனர்.

அதனைக்கேட்டகிருஷ்ணபகவான் விராட்புருஷனைப்பார்த்து நீ என்னைப்போல் எண்ணிறந்தகாலம் இருந்து எண்ணிறந்தபிரம்மாக்களுக்குப் பிரபுவாய் ஒவ்வொருஅண்டத்திலும் அம்சத்தினால் சிறியவிராட் புருஷனாய் வாழக்கடவாய். உன்னால் பிறக்கப்போ

கிற பிரமா பிரபஞ்சத்தையெல்லாம் சிருட்டிப்பன். அவன்நெற்றி யிலிருந்து பதினொரு உருத்திரர்கள் சிவரூபிகளாகத்தோன்றி அவ ருள் காலாக்னிருத்திரர் சகலப்பிரபஞ்சத்தையும் சங்கரிப்பர். விஷ் ணுவும் எனது சிறியஅம்சமாகப்பிறந்து என்பக்தியுள்ளவராய் ரக்ஷி க்கப்போகின்றார். நீ எனதுவரப்பிரசாதத்தினால் நாடேறும் என் னையும் என்மார்பிலிருக்கும் மனோகரையான உன்தாயையும் நிச்சல புத்தியுடன் பார்ப்பாயாக. இனி என்னிடம்போகின்றேன். இங்கு நீநிற்பாயென்றுகூறி பிரமனைப்பார்த்து ஓகுழந்தாய்! சிருட்டிநிமித் தம் விராட்புருஷனது நாபிக்கமலத்தில் நீபிறக்கக்கடவாயென்றும், உருத்திரரைப்பார்த்து ஓ குழந்தாய்! நீபிரமனது நெற்றியில்தோன் றக்கடவாயென்றும் ஆக்ஞாபித்துமறைந்தனர். மகாவிராட்புரு ஷருடைய ரோமகூபத்தினின்றும் பிரமாண்ட கோளக சலத்தில் அவரம்சமாக சிறிய விராட்புருடர் கரியராயும் யௌவனரூபராயும் பீதாம்பர தாரியாயும் ஜலமயமான படுக்கையிற்படுத்தவராயும் புன் சிரிப்புள்ளவராயும் தோன்றினர். அவரது நாபிக்கமலத்தில் பிரமன் தோன்றி ஒருலக்ஷம் யுகம்வரையில் தான்பிறந்த அக்கமலமுழுவ தும் சஞ்சரித்தும் நுனியையறியாது மிக்கசிந்தையோடு தன்னிட த்தை யடைந்து பகவானைத் தியானித்து அத்தியானத்தின் திவ்ய நேத்திரத்தினால் சிறியவிராட்புருஷனையும் அவருடைய ரோமகூபத் தில் பிரமாண்டத்தையும் கோலோகத்தில்கோபர் கோபிகைகளோடு கிருஷ்ணமூர்த்தியையும் பார்த்துத் துதித்து அனுக்கிரகம்பெற்று சிருட்டிக்கு ஆரம்பித்தனர். பிரமனது மனதிலிருந்து சனகன் முத லான புத்திரர்கள்பிறந்தார்கள் அதற்குப்பின் பதினொரு உருத்திரர் கள் பிறந்தார்கள். சின்னவிராட்டின் இடதுபக்கத்திலிருந்து லோ கத்தையெல்லாம் ரக்ஷிக்கும் நான்குகையுள்ள விஷ்ணுபகவான் பிற ந்து சுவேத த்வீபத்தில் வாசஞ்செய்தார். பிரமாவானவர் சுவர்க்க த்தையும் மனிதர்களையும் பாதளத்தையும் தாவரசங்கமங்களையும் சிருட்டித்தனர். இவ்வாறுசின்னவிராட்டினுடைய ஒவ்வொருரோம கூபத்திலும் ஒவ்வொரு அண்டங்களிருக்கின்றது. அவ்வண்டங்கள் தோறும் திரிமூர்த்திகளுமிருக்கின்றார்கள். இதுவரையில் கிருஷ்ண பகவானுடைய கீர்த்தனஞ்சொன்னேன். இனிஎதனைக்கேட்கவிரும் புகின்றனை யென்றனர். (சு - ம் - சுஉ)

மூன்றும் அத்யாயம் முற்றிற்று.

---

ஸர்வசௌக்ய தாத்ரைநம:

## நான்காம் அத்தியாயம்.

## சரஸ்வதிபூஜாகவசாதி.

நாரதர் நாராயணரைவினவுகின்றார்;— அமுதம்போன்ற சகல சரித்திரமும் முன் தேவரீர்கிருபையால் சொல்லக்கேட்டேன். இப்பொழுது பிரகிருதிசக்திகளுக்குள் எந்தத்தேவியினுடையபூஜை மண்ணுலகில் எந்தமாநுடரால் நடத்தப்போகின்றது? எவரால் எந்தத்தேவிபூஜிக்கப்பட்டாள்? எவரால் எந்தத்தேவி தோத்திரஞ்செய்யப்பட்டாள்? எந்தெந்தத்தேவிகளால் எவரெவருக்கு வரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளையும் இவர்களுடையசரித்திரங்களையும் நன்றாகச் சொல்லவேண்டு மென்றனர்.

நாராயணர்கூறுகின்றார்:— முற்கூறிய துர்க்கையாதி ஐவகைப்பட்டசக்திகளுடைய அம்சரூபமாகவும் கலாரூபமாகவும் காளி வசுந்தரை கங்கை சஷ்டி மங்களசண்டிகை துளசி நித்திரை ஸ்வதா ஸ்வாஹா தக்ஷிணா என்பவர்தோன்றினர். இவர்களுடைய பூஜை பிரசித்தமாகவும், பிரபாவம் ஆச்சரியகரமாகவும், அமிர்தம்போன்ற சரிதம் செவிக்கினிமையான மங்களங்களுக்கெல்லாம் காரணமாகவும், புண்ணியகரமாகவும் உள்ளன. இவர்களுள் துர்க்கை ராதை என்பவர்களுடைய சரிதம் மிகப்பெரிதாயும் விரிவாயும் உள்ளதாகலான் அதனைப் பின்னர் கூறுகின்றேன். இப்பொழுது மற்றையவர்களுடைய சரித்திரங்களையும் ஆன்மாக்களுடைய கன்மப்பிரிவுகளையுங் கூறலாமென்றெண்ணி அவற்றுள் முன்னர் எவளது அநுக்கிரகத்தால் மூடன் பண்டிதனாகின்றானோ அச்சரஸ்வதி தேவியினது சரிதத்தைச் சுருக்கமாகக் கூறுகின்றேன் கேட்பீராக.

சரஸ்வதிதேவி பரப்பிரஹ்மசொரூபமாகிய கிருஷ்ணமூர்த்தியினுடைய பத்தினியான ராதையின் திருமுகத்தினின்றுந் தோன்றி அப்பொழுதே கிருஷ்ணமூர்த்தியை நாயகனாக வேண்டுமென்று விரும்ப, அவர் காமரூபிணியாயும் சர்வலோகமாதாவாயுமுள்ள அவ

ஞுடைய எண்ணத்தையறிந்து அக்கலாதேவியைப்பார்த்து எனது அம்சபூதனும், நான்குகையுள்ளவனும், யௌவனத்தோடுகூடிய சுந்தரனும், சர்வகுண சம்பன்னனும், எனக்குச் சமானமானவனும், காமமுள்ளஸ்திரீகளின் காமத்தைப் பூர்த்திசெய்கின்றவனும், கோடிமன்மதவடிவுள்ளவனும், லீலாலங்கிருதனும் நாராயணனொருவ னிருக்கின்றான். அவனை நீபர்த்தாவாக அடையக்கடவாய். ஓ சுந்தரீ! என்னைப் பர்த்தாவாகக்கொண்டு நீ இங்கிருக்கவிரும்புவாயாகில் நான் தனித்திருப்பவனல்லன். என்னுடன் ராதாதேவி யிருக்கின்றாள். அவள் தேஜஸ்ஸு உருவம் குணமுதலியவற்றால் எனக்குச்சமானமானவளாயும் என் பிராணனுக்கு அதிஷ்டான தேவதையாயும் இருக்கின்றமையால் உனக்குக்ஷேமந்தான் எப்படியுண்டாகும். ஏனெனில் எவனுவது யாவரினும் பலவானுக விருப்பின் அவன் மற்றொருவனைக் காக்கவல்லவனுவன். அவன் பலத்தில் குறைந்திருப்பின் வேறொருவனைசத்துருபயத்தினின்றும்நீக்கிஎப்படிகாக்கவல்லவனுவன். அஃதேபோல் நான் சர்வத்துக்கும் பிரபுவும்,சர்வத்தையும்சிக்ஷிக்கும் சிக்ஷகனுமாயிருப்பினும் அந்தராதாவை அடக்கியாளும் வன்மையுள்ளவனல்லன். ஏனெனில் அவள் என்பிராணனுக்கு அதிஷ்டான தேவதையான மகாசக்தியாயிருத்தலின் நான்எப்படி அவளினுஞ் சிறந்த பலமுள்ளவனுவன். ஆகவே நானெப்படி அவளைவிட்டு உனக்குச் சுகத்தைக்கொடுப்பேன். இதனால் பிராணனினும் புத்திரன் பிரியனுகலின் நாராயணனை நீ பர்த்தாவாகக் கொள்வாயென்றேன்.

நீ என்னுணைகடவாமல் அவனிடம்போவையாயின் உனக்கு நீண்டகாலம் சுகமும் சந்தோஷமும் உண்டாகும். அந்தநாராயணனும் லக்ஷ்மிதேவியை யுடைத்தானவனுயிருக்கும் பொழுது எனக்கு எப்படிச் சுகமுண்டாகுமென்று கேட்பாயாயின் அவள் லோபம் மோகம் காமம் குரோதம் மானம் இம்சை முதலியகுணங்கள் இல்லாதவளாயிருத்தலினுலும், தேஜஸு ரூபம் குணம் இவற்றில் உனக்குச்சமானமானவளா யிருத்தலினுலும் உனக்குச்சுகமுண்டாவதிற் சந்தேகமில்லை. ஆகலின் உனதுகாலப்போக்கு மிகப்பிரீதியோடும் சந்தோஷத்தோடும் போகும். ஓ பெண்ணே! அந்தநாராயணனும் உங்களிருவரிடத்தும் சமமானகவுரவத்தை வகித்திருப்பன். இவ்வண்ணமாக வாழும் வாழ்வேயன்றி எல்லாப் பிரபஞ்சத்திலும்

மிக்ககவுரவத்தோடுகூடியபூஜையையும்நீ அடையப்பெறுவாய். அந்த நாள் எந்தநாளெனின் மாசிமாதம் சுக்லபக்ஷம் பஞ்சமியும், வித்யா ரம்பகாலமுமாம். பூஜிப்பவர்கள் யாவரெனின் மநுக்கள் மாநுடர் தேவர் முனிவர் முமுக்ஷுக்கள் வசுக்கள் யோகீஸ்வரர் சித்தர் நரகர் கந்தர்வர் ராக்ஷசர்முதலியோர். இவர்களெல்லாம் கற்பந் தோறும் ஜிதேந்திரியர்களாகவும் நியமமுள்ளவர்களாகவும் கண்ணு வசாகையில் சொல்லியபடி கடத்திலாவது புஸ்தகத்திலாவது உன் னுருவை ஆவாகித்து தியானித்துத் தோத்திரஞ்செய்வர். வாசனை யுள்ளசந்தனத்தினுல் பூசப்பட்ட சுவர்னகுடிகைகளை பக்தியோடு சோடசோபசாரத்துடன் பூஜித்து கண்டத்திலாவது வலக்கரத்தி லாவது கவசமாக அணிந்துகொள்வர். வித்வான்கள் பூஜாகாலந்தோ றும்பூஜித்து உன்புகழைப் பாடுவார்கள் என்று அவள்மனங்களிக்கு மாறு சொல்லி மிகுந்த சிறப்புடன் வைகுண்டத்துக்கனுப்ப, அவ ளும் மகிழ்ந்துசென்று சுகமுற்று யாவராலும் பூஜிக்கப்பட்டு வருகி ன்றனள் என்றனர்.

நாரதர் நாராயணரைப்பார்த்து வேதவித்துக்களில் சிரேஷ்ட மானவரே! அந்தவாக்தேவியை நாடோறும் பூஜிக்கத்தக்க பூஜாவி தானம் கவசம் தியானம் பூஜைக்குறியநிவேதனம் புஷ்பம் சந்தனம் முதலியவற்றை எனக்கு இப்போதேசொல்லவேண்டும். ஏனெ னில் அவையெல்லாம் வேதவிதியாயிருக்கின்றபடியினுலும், என் னெண்ணம் இவையாவும் எப்போதுகேட்கப்போகின்றேமென்று எண்ணுகின்ற படியினுலும் நான் கேட்க மிக்க ஆவலுள்ளவனுக விருக்கின்றேன் என்றுபிரார்த்தித்தனர்.

நாராயணர் அவரதுஆவலுக்கும் பிரார்த்தனைக்கும் இரங்கிக் கூறுகின்றுர், ஓநாரதரே! கண்ணுவசாகையில்சொல்லப்பட்ட பத் ததிப்பிரகாரம் ஜகன்மாதாவானசரஸ்வதிதேவியின் பூஜாவிதியைச் சொல்லுகிறேன்கேளும். மாசிமாத சுக்லபக்ஷ பஞ்சமிதிதியிலும் வித்யாரம்பதினத்திலும் முற்பகலில் பரிசுத்தனுய் நித்தியகர்மாநு ஷ்டானங்களை முடித்துக்கொண்டு கண்ணுவசாகையின் விதிப்படி யாவது, ஆகமவிதிப்படியாவது, கணேசமூர்த்தியை முன்னர்பூஜி த்து, பக்தியோடுகடத்தைத்தாபித்து அதில் இஷ்டதேவதையான சரஸ்வதிதேவியைச் சொல்லப்போகிற தியானப்படி தியானித்து

ஆவாகித்து கடத்திலிருப்பவளாகக் கண்டு மறுபடியும் சோட சோபசாரத்தால் பூஜித்தல்வேண்டும். இனிவேதத்திலும் தேவிஆ கமத்திலும் சொல்லப்பட்டிருக்கும் பூஜாவிதிப்படி உபயோகப்ப டும் நைவேத்தியங்களுள் சிலவற்றையும் அலங்கரிக்கவேண்டிய சந் தனுதிகளையும் நான்கேட்டிருக்கிறபடி சொல்லுகின்றேன்.

நவநீதம் தயிர் பால் பொரி எள் லட்டு கரும்பு கருப்பஞ்சாறு வெண்பாகு வெல்லம் மது சுவஸ்திகம் சர்க்கரை பிளவுபடாத வெ ண்மையான தானியஅக்ஷதை அதனுலுண்டான அவில் வெண் மையானமோதகம் நெய்யும் உப்புங்கலந்த வெண்பொங்கல் நெய் கலந்த தினை கோதுமை சுவஸ்திகம் இவைகளின் மா வாழைப் பழ த்தையுரித்துப்பிசைந்து செய்கிறபலகாரம் பரமான்னம் நெய்யோடு கலந்த சுத்தான்னம் தேங்காய் இளநீர் கசேரு வெட்டிவேர் பக்கு வமான வாழைப்பழம் வில்வப்பழம் இலந்தைப்பழம் அவ்வக்காலங் களில் உண்டாகும் வெண்மையானபழங்களும், நறுமணங்கமழும் வெண்மையான புஷ்பம் வெண்மையானசந்தனம் புதியவெண்மை யான வஸ்திரம் வெண்மையானபுஷ்பமாலை அழகானசங்கு முத்தா பரணங்களுமாம்.

இனி வேதத்திற் கூறப்பட்டு யாவராலும் புகழப்பட்ட சரஸ்வ திதேவியின் அநுக்கிரகம் கிடைக்கப்பெற்று புத்திப்பிரமை நிவர்த் தியாகும் தியானத்தைக் கூறுகின்றேன். வெண்ணிறமுடையவ ளாயும், புன்சிரிப்புடையவளாயும், சந்துஷ்டியாயும் புஷ்டியாயும் இருக்கிற திருமேனியுடையவளாயும், நெருப்பினுற் சுத்தமான வஸ் திரமுள்ளவளாயும், வீணை புத்தகம் இவைகளைத் தரித்தவளாயும், சிரேஷ்டமான இரத்தினபூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவளா யும், திரிமூர்த்திமுதலான தேவகணங்களால் நன்றாகப் பூஜிக்கப் பட்டவளாயும், முனிசிரேஷ்டர்களால் நமஸ்கரிக்கப்பட்டவளாயும் இருக்கிற சரஸ்வதிதேவியைப் பக்தியோடு நமஸ்கரிக்கின்றேனென் னுந் தியானத்தைச் சொல்லி மூலமந்திரத்தினுல் தியானித்து அதனுலேயே அர்க்கியபாத்ய ஆசமனுதிகள் கொடுத்து கவசத்தை த்துதித்து சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்க வேண்டும். ஓ முனிவரே! எவர்களிடம் இந்தத்தேவி இஷ்டமாகவிருக்கின்றுளோ அவர்களு டைய நித்தியவேலை நித்யமாகவே முடிந்துவிடுகிறது. வித்யாரம்ப

த்திலும் வருஷகால முடிவிலும் பஞ்சமிதினத்திலும் யாவராலும் உபயோகப்படுத்துகிற மூலமந்திரமும், வேதத்தில் சொல்லப்படு கிற அஷ்டாக்ஷரமும், எவர்களுக்கு எந்தமந்திரம் உபதேசமோ அம்மந்திரமும் தியானத்துக்கு உரியன. லக்ஷ்மி மாயை இவர்க ளுடைய பீஜாக்ஷரங்களை முதலிலும், சதுர்த்தியந்தமான சரஸ்வ திபதம் நடுவிலும், அக்கினிபத்தினியைக் குறிக்கிற பதம் ஈற்றிலு முள்ள மந்திரம் பக்தர்களுக்குக் கற்பக விருக்ஷமாக விருக்கிறது.

முற்காலத்தில் இம்மந்திரத்தை பாரதவருஷத்தில் கங்கைக்க ரையிலுள்ள புண்ணிய க்ஷேத்திரத்தில் நாராயணர் வால்மீக ருக்கும், பதரிகாச்சிரமத்தில் பிரமன் பிருகுமுநிவருக்கும், அவர் புஷ்கரத்வீபத்தில் சூர்யபர்வத்தில் சுக்ரருக்கும், சந்திரபர்வதத்தில் மரீசி பிரகஸ்பதிக்கும், பாற்கடலில் ஜரத்காருமுநிவர் ஆஸ்திகருக் கும், மேருபர்வதத்தில் விபண்டகர் ருஷ்யசிருங்கருக்கும்,உருத்திர மூர்த்தி கணாதமுநிவருக்கும் கௌதமருக்கும்; சூரியன் யாக்ஞவல் கருக்கும் காத்தியாயனருக்கும், பலி அரசாளும் சுதலலோகத்தில் ஆதிசேடன் பாணினிக்கும் பரத்வாஜருக்கும் சாகடாயனருக்கும் உபதேசித்தனர். நான்குலக்ஷம் ஜபம்செய்கின்றவன் மந்திரசித்தி யடைந்து அதனால் பிரகஸ்பதிக்குச் சமானனாய் விடுவான்.

முன் கந்தமாதன பர்வதத்தில் பிருகுமுநிவர் பிரமனைநோக்கி பிரமக்யானத்தை நன்றாயறிந்தவர்களுக்குள் சிரேஷ்டமானவரே! எல்லாமறிந்தவரே! யாவற்றையும் படைத்தவரே! யாவற்றிற்கும் பிரபுவானவரே! சகலபிரபஞ்சத்தையும் ஜயிப்பதற்காக எனக்கு சரஸ்வதியின் கவசத்தையும், அயாதையாமமென்னும் மந்திரங்க ளுடைய சமூகங்களையும் உபதேசஞ் செய்யும் என்று பிரார்த்தி க்க பிரமதேவன் பிருகுமுநிவரைப்பார்த்து ஓ குழந்தாய்! வேதத் துக்குள் சாரமானதாய் வேதத்திற் கூறப்பட்டதாய் வேதத்தினாற் பூஜிக்கப்பட்டதாய் ரகசியமானதாய் கற்பகவிருக்ஷம்போல் காமத் தைத் தருகிறதாய் ஒருநாளுங்கேட்டறியாத ஆச்சரியகரமான மந் திரங்களோடு கூடினகவசத்தைக் கோலோகத்தில் கிருஷ்ணபக வான் எனக்குபதேசித்தனர். சுக்கிராசாரி அக்கவசத்தைத்தரி த்துத் தானவர்களுக்குள் கவுரவத்தையடைந்தனர். பிரகஸ்பதி

அக்கவசத்தைப்படித்துப் புத்திமானாயினர். வால்மீகிமுநிவர் அக்க வசத்தைப்படித்தும் தரித்தும் கவிசிரேஷ்டராயினர். சுவாயம்புமநு அதனைத்தரித்து யாவராலும்பூஜிக்கப்பட்டவராயினர். அதுபோலவே கணாதர் கௌதமர் கண்ணுவர் பாணினி சாகடாயனர் தக்ஷன் காத்தியாயனர் சாதாதபர் சம்வத்தர் வசிட்டர் பராசரர் யாக்ஞவல்கர் இவர்கள் கிரந்தகர்த்தாக்களாயினர். ருஷியசிருங்கர் பரத்வாசர் ஆஸ்திகர் தேவலர் ஜைகிஷவ்யர் யயாதி இவர்கள் எல்லோராலும் பூஜிக்கப்பட்டனர். வியாசர் வேதப்பிரிவுகளையும் புராணங்கள் எல்லாவற்றையும் லீலையாகச் செய்பவராயினர். இந்தக்கவசத்திற்கு ருஷி - பிரஜாபதி, சந்தஸ் - பிரஹதி, தேவதை - சாரதாம்பிகை, விநியோகம் - எல்லா தத்துவங்களையறிவதிலும் எல்லாபுருஷார்த்தங்களைச் சாதிப்பதிலும் நானாவிதமான கவிகளைப்பாடுவதிலுமாம் என்றுசொல்லப்பட்டிருக்கிறது.

## கவசம்.

சரஸ்வதி சிரசைக்காக்க, வாக்தேவி நெற்றியைக்காக்க, சரஸ்வதி காதுகளைக்காக்க, பகவதியான சரஸ்வதி நேத்திரங்களைக் காக்க, வாக்வாதினி நாசியைக்காக்க, வித்யாதிஷ்டான தேவதை உதட்டினைக்காக்க, பிராஹ்மி பல்வரிசைகளைக்காக்க, ஐம் என்னும் ஏகாக்ஷரமந்திரம் கண்டத்தைக்காக்க, ஹ்ரீம் என்னும் அக்ஷரம் கழுத்தைக்காக்க, ஸ்ரீம் என்னும் அக்ஷரம் புஜங்களைக்காக்க, வித்யாதிஷ்டாத்ம தேவதை மார்பினைக்காக்க, வித்யாசொரூபிணி நாபியைக்காக்க,வாணி கரங்களைக்காக்க,சர்வாக்ஷரசொரூபிணி பாதங்களைக்காக்க, வாக்கதிஷ்டானதேவதை எல்லாவற்றையுங்காக்க,சர்வகண்டவாசினி கிழக்குதிக்கிற்காக்க,சர்வநாவுகளிலும்வசிக்கின்றவள் அக்கினிதிக்கிற்காக்க, சிரேஷ்டமாயும் சரஸ்வதி ரூபியாயுமிருக்கிற மந்திரராஜ தேவதை தென்திக்கிற்காக்க, மூன்றக்ஷர சொரூபிணி நைருதிதிக்கிற்காக்க, ஜிஹ்வாக்ரவாசினி மேற்குதிக்கிற்காக்க, சர்வாம்பிகாதேவீ வாயுதிக்கிற்காக்க, கத்தியவாசினி வடக்குதிக்கிற்காக்க, சர்வசாஸ்திரவாசினி ஈசானதிக்கிற்காக்க, சர்வபூஜிதா ஊர்த்துவத்திற்காக்க, புத்தகவாசினி அதோதிக்கிற்காக்க, கிரந்த பீஜசொரூபிணி சர்வதிக்கிலுங்காக்க என்றுபதேசித்தனன்.

ஓபிரமருஷியே! சகலபிரபஞ்சத்தையும் வெல்லவல்ல பிரஹ்மரூபமான இக்கவசத்தை முற்காலத்தில் கந்தமாதனபர்வதத்தில்

தருமரிடம் நான்கேட்டேன். யான் உன்னிடம் பிரீதியுள்ளவனு தலின் அதை இப்பொழுது உனக்குக்கூறினேன். நீ எவனுக் குஞ் சொல்லக்கூடாது புத்திமான் ஆசிரியரை வஸ்திரம் சந்தனம் புஷ்பமுதாலனவைகளால் அலங்கரித்துத் தண்டாகாரமாக நமஸ்க ரித்து இக்கவசத்தை உபதேசம் செய்யப்பெறவேண்டும். இதனை ஐந்துலக்ஷம் ஜபித்தால் சித்தியாகும்; அச்சித்தியினுல் சரஸ் வதியின்அனுக்கிரகமுண்டாய் பிரகஸ்பதிக்குச்சமானமான புத்தி யும், பேசுவதில்சாமர்த்தியமும், கவிசிரேஷ்டத்வமும், மூன்றுலகை யும் வெல்லும்படியான பராக்கிரமுங் கிடைக்கும். (சு - ம். கூக)

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

சர்வ விமோஹிந்யைநம:

## ஐந்தாவது அத்தியாயம்.

## சரஸ்வதிதோத்திரம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—இனி கோரிக்கைகளைக் கொடுக்கிற சரஸ்வதிதோத்திரத்தைக் கூறுகின்றேன். இது யாக்ஞவல்கியமுனி வரால் செய்யப்பட்டது. ஏனெனின்! அம்முனிவர் குருசாபத்தினுல் சகலவித்தைகளையுமறந்து துக்கமுடையவராய் சூரியனையடைந்து சோகத்துடன் அழுது துதித்தனர். அவர் அவருக்கு வேத வேதா ந்தங்களைப் படிப்பித்து இவை உன்மனதில் ஸ்திரமாக நிற்பதற்கு சரஸ்வதிதேவியைத் துதிப்பாயென்று கூறிமறைந்தனர். அவ்வாறே யாக்ஞ வல்கியமுனிவர் ஸ்நானஞ்செய்து பக்தியோடு தலைவணங்கி லோகமாதாவே! புத்திபலமில்லாத என்னைநோக்கித் தயவுசெய்வாய். குருசாபத்தினுல் கவனமற்று வருத்தப்படுகிறேன். கியானத்தையும் கவனத்தையும், வித்தையையும், சீடர்களுக்குப் போதிக்கும் சக்தி யையும்,கிரந்தஞ்செய்யும்படியானசக்தியையும், ஸ்திரமானவனையும் நற்குணமுள்ளவனையு முள்ள சிஷ்யனையும் பண்டிதருடைய சபை யில்விசாரஞ்செய்யும்போது புதிதுபுதிதாய்த் தோன்றுகின்ற புத்தி யையும் எனக்குக்கொடுப்பாய். தெய்வத்தின் ஆக்ஞையினுல் எல்

லாம் மறந்துவிட்டது. எல்லாவற்றையும் புதிதாக வுண்டாகச்செ
ய்வாய். எப்படி தேவதை பஸ்மத்தில் முளையையுண்டாகச்செய்
கிறதோ அப்படி என்னிடத்தில் வித்தியாமுளையை யுண்டாகச்செ
ய்வாய். பிரமசொரூபிணியாயும் அநாதியான பரஞ்சோதி சொரூ
பிணியாயும் இருக்கிற சரஸ்வதி தேவியே! உனக்கு நமஸ்காரம்.
சர்வவித்தைக்கும் அதிதேவதையான சரஸ்வதிதேவியே! உனக்கு
நமஸ்காரம். விசர்க்கம்(ஃ)பிந்து(ㅇ)மாத்திரை(காலம்)இம்மூன்றிலும்
எந்தத்தேவதை அதிஷ்டித்திருக்கிறாளோ அந்த சரஸ்வதிதேவி
யாகிய உனக்கு நமஸ்காரம். எந்தத்தேவி வியாக்கியான ரூபமாக
விருக்கின்றாளோ வியாக்கியானத்தை அதிட்டித்துக் கொண்டிருக்
கிறாளோ எந்தச்சக்தியில்லாமல் கணிதசாஸ்திரக்காரன் எண்ணிக்
கையைச்செய்ய வல்லவனல்லனோ அந்தசதுஸ்ஸஷ்டிகலா ரூபிணி
யாயும் சங்கியாரூபிணியாயும் இருக்கும் சரஸ்வதிதேவியாகிய உன
க்கு அடிக்கடி நமஸ்காரம். சந்தேகத்தை நிவர்த்திசெய்யும் சித்
தாந்தரூபிணியான உனக்கு நமஸ்காரம். கியாபக சக்தியாயும்
ஞானசக்தியாயும் புத்திசக்தியாயும் பிரதிபாசக்தியாயும் கற்பனைசக்
தியாயும் இருக்கும் உனக்கு நமஸ்காரம். சனற்குமாரர் பிரமனை
ஞானார்த்தங்கேட்க அவர் சித்தாந்தஞ் சொல்ல வல்லமையற்று
ஊமையைப்போன்றிருக்க கிருஷ்ணருடைய அநுக்கிரகத்தினால்உன்
னைத்துதித்து உனது கிருபையால் உத்தமமான சித்தாந்தங்கூறி
னார். ஓர்காலத்தில் ஆதிசேடனைப்பூமிதேவி ஞானத்தைக்கேட்க
அவர் ஊமையைப்போல் மௌனியாய்மிகப்பயந்து காசிபரையடை
ந்து அவருடைய ஆக்ஞையால் சரஸ்வதியாகிய உன்னைத்துதித்து
அறியாமையனைத்தும் நீக்கவல்ல நிர்மலமான சித்தாந்தஞ் செய்
தார். வியாசர் வால்மீகிமுநிவரைப் புராணசூத்திரத்தைக் கேட்க
அவரும் மௌனமாயிருந்து பிறகு சரஸ்வதி தேவியாகிய உன்னை
நினைத்துத்துதித்து உனதுவரப்பிரசாதத்தால்சித்தாந்தஞ்செய்தார்.
அந்தநிர்மலமான ஞானத்தையும்,அறியாமையைப்போக்கும் புராண
சூத்திரத்தையு அவர்பால்கேட்டு சரஸ்வதி தேவியாகிய உன்னை
யறிந்து நூறுவருஷம் புஷ்கரத்வீபத்தில் தியானித்து வரமடைந்து
கவிசிரேஷ்டராய் வேதவிபாகத்தையும் புராணங்களையுஞ் செய்தார்.
ஓர்சமயம் மஹேந்திரன் மகேஸ்வரரைத் தத்வஜ்ஞானங்கேட்க
அவர்ஓர்க்ஷணகாலம் தேவியாகிய உன்னைநினைத்து உபதேசித்தனர்.

மகேந்திரன் பிரகஸ்பதியை சப்தசாத்திரங்கேட்க அவர் புஷ்கர த்வீபத்தில் ஆயிரம் திவ்யவருஷம் உன்னைத்தியானித்து வரமடைந்து அதன் அர்த்தத்தை உபதேசித்தனர். இப்போதும் உபதேசஞ்செய்துகொள்ளும் சீடனும் செய்யும் குருவும் தேவியாகிய உன்னைத்துதித்து வாசிக்க ஆரம்பிக்கிறார்கள். ஓதேவியே! நீ பூஜித்து தோத்திரஞ் செய்யப்பட்டவளாயும், வாக்குசம்பத்தைக் கொடுக்கின்றவளாயும் இருக்கின்றனை. தேவாசுரர்களாலும் திரிமூர்த்திகளாலும் துதிக்கப்படுகின்றனை. ஆயிரமுகமுள்ளவனும் ஐந்துமுகமுள்ளவனும் நான்குமுகமுள்ளவனும் தோத்திரஞ் செய்யக்கூடாத உன்னை ஒருமுகமுள்ள யான் எவ்வாறு துதிப்பேன் என்றுகூறி அடிக்கடி அழுதுகொண்டு ஆகாரமில்லாதவராய் நமஸ்கரித்தனர்.

தேஜோரூபிணியானதேவி சந்துஷ்டியடைந்து அவரைநோக்கி நல்ல கவிசிரேஷ்டனாவாய் என்று ஆசிபுகன்று வைகுண்டமடைந்தனள். இத்துதியை எவன் படிக்கின்றானோ அவன் நல்லகவிசிரேஷ்டனாயும் பேசுவதில் சமர்த்தனாயும் பிரகஸ்பதிக்குச் சமானமானவனாயும் ஆகின்றான். மூடனாயினும் துஷ்டனாயினும் ஒருவருடம் படித்தால் பண்டிதனாயும் புத்திமானாயும் கவீஸ்வரனாயு மாகின்றான் என்றனர். (௬ - ம் கூஉ.)

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

சர்வாதாராயைநமஃ

## ஆறாம் அத்தியாயம்.

## லக்ஷ்மி கங்கா சரஸ்வதீநாம் சாபாஜ் ஜன்ம ப்ராப்தி.

---

ஸ்ரீ நாராயணர் சரஸ்வதிதேவி கங்காதேவியினால் சாபமடைந்து பாரதவருடத்தில் நதியாக அவதரித்தாளென்று கூற, நாரதர் பூஜிக்கத்தகுந்த அவர்களுக்கு உண்டாகக் கூடாத சண்டை என்ன காரணத்தினாலுண்டாயிற்றென்றுவினவ நாராயணர் கூறுகின்றார்:—

ஓநாரதரே! சரஸ்வதி கங்கை லக்ஷ்மிஎன்னு முத்தேவிகளும் விஷ்ணுமூர்த்திக்கு மனைவிகள். இவர்களிடத்தில் அவர் சமமான

பிரீதியுள்ளவராய் வேற்றுமையின்றிச் சமீபத்தில்எப்போதும் இரு க்கின்றவர். ஓர்காலத்தில் கங்கையானவள் சிரிப்புடனும் ஆசையுட னும் வேண்டுகோளுக்கிசையுங் கருத்துடனும் அடிக்கடி விஷ்ணு மூர்த்தியினுடைய முகத்தைப்பார்க்க, அவரும் க்ஷணகாலம் அவ ளுடைய முகத்தைப்பார்த்துச் சிரித்தனர். இருவரும் இவ்வாறு சிரிப்புட னிருப்பதைப் பார்த்திருந்த ஏனைய இருவரில் சத்வகுண முடைய லக்ஷ்மிமன்பொறுத சரஸ்வதியைப்பார்த்துச் சிரித்துத் தூண்டினாள்; தூண்டவும் அவளுள்ளத்தில் உண்டாகிய அடங்கா த்கோபம் அதிகரித்து செவந்தமுகத்தையும் செவந்தகண்களையும் அடிக்கடி அதிகமாகத் துடிக்கும் அதரத்தையுமுடையவளாய் மன் மத வேகத்தால் சலிக்கப்பட்டுத் தன்கணவனைப் பார்த்து சாது வானபுருஷன் தருமசீலனும் உத்தமனும் யோக்யனும் இருப் பானாகில் மனைவிகளிடத்தில் சமமானபுத்தியை யுடையவனாக விரு த்தல்வேண்டும். உமக்குஅழகுதொழிந்துமிக்கஅழகுள்ள கங்கையிட த்தில் ஆசையும் சுககாரணமான கியானமும் அதிகமாக இருக்கி றது. லக்ஷ்மியினிடத்திலும் அப்படியே யிருக்கிறது. என்னிடஞ் சிறிதுமில்லை. லக்ஷ்மி கங்கையிடம் பிரீதியுள்ளவளா யிருத்தலின் கோபமின்றிப் பார்த்துக்கொண்டிருக்கிறாள். பாக்கியமில்லாதயான் இங்கு இருப்பதனால் யாதுபயன்? எவள் புருஷனுடைய பிரீதியி னால் வஞ்சிக்கப்படுகின்றாளோ அவளது ஜீவனம் பிரயோஜனமில்லா தது. இவ்வண்ணம் எனக்கு மனோகஷ்டத்தையுண்டாக்கிய உம் மைச் சத்வகுணமுடையவரென்று எவர்கள் சொல்லுகின்றார்களோ அவர்கள் புத்தியில்லாதவர்களும் வேதமறியாதவர்களும் உமது வஞ்சகுணத்தையறியாதவர்களும் ஆவரென்று கூறினள்.

இவ்வார்த்தைகளைக்கேட்ட விஷ்ணுமூர்த்தி அவளைப்பார்த்து மனதில் ஆலோசனையுடையவராய் அவ்விடம் விட்டுவெளியே போ யினர். சரஸ்வதிதேவி கோபமேற்கொண்டு சிறிதும் அஞ்சாமலும் வாய் கூசாமலும் கங்கையைப்பார்த்து ஓ வெட்கமில்லாதவளே! ஒழுக்கமற்ற காமத்தில் மிகுந்தவளே! நாயகன்முன் ஏன் கர் வத்தையடைகின்றாய் அவரிடம் அதிகமாக உன் சௌபாக்கியத் தை யறிவிக்க விரும்புகின்றனையோ இப்போதே அவரெதிரில் உன் னை மானபங்கஞ் செய்கின்றேன். உனக்கே புருஷனாக விருக்கின்ற என்னுதன் என்னையென்ன செய்யக்கூடும். என்றுகூறிக்கொண்டே

அவள் கூந்தலைப்பிடித்திழுக்கமுயன்றனள். அப்போது இலக்ஷ்மி தேவி இடையே நின்று தடுக்க மிக்கபலசாலியும் பதிவிரதையுமான சரஸ்வதியானவள் அந்த லக்ஷ்மிதேவியைச் செடியாகவும் நதியாகவும் போகும்படிச் சபித்தனள்.

இவ்விபரீதத்தையடைந்தலக்ஷ்மி ஒன்றும் பேசாமலும் பிரதிசாபமிடாமலும் கோபித்துக்கொள்ளாமலும் சரஸ்வதியின் கையைப்பிடித்துக்கொண்டே விசனப்பட்டனள். அதைக் கெம்பீரத்தையும் துடிக்கும் அதரத்தையுமுடையவளான கங்காதேவி பார்த்து ஓ லக்ஷ்மீ! மிக்க குரூரமான இந்தசரஸ்வதியின் கையைவிட்டுவிடுவாய். அவள் துஷ்டசுபாவமுள்ளவளாயும் அளவுகடந்து பேசுகின்றவளாயும் தூஷிக்கின்றவளாயும் எப்போதும் கலகத்தில் பிரீதியுள்ளவளாயு மிருக்கின்றாள். இவளுக்கு எவ்வளவு யோக்யதையும் சக்தியுமிருக்கின்றனவோ அவையெல்லாம் என்னிடங் காட்டிப் பலா பலங்களை அறிந்து கொள்ள இருக்கிறாள், இதனால் எங்களிருவருடைய மகிமையையும் சௌரியத்தையும் இனி எல்லோரும் அறிந்து கொள்வாராக. ஓ லக்ஷ்மிதேவீ! உன்னைச் சபித்த இச்சரஸ்வதி நதிரூபத்தைப் பெற்று பாபிகளாகிய மனிதர்களை யடைந்து அவர்களுடைய பாபங்களை யெல்லாம் கலியில் கிரகிக்கப்போகின்றாள். இதில் சந்தேகமில்லை என்று சபித்தனள்.

அதனைக்கேட்ட சரஸ்வதிதேவி கங்காதேவியைப்பார்த்து நீயும் நதிரூபமாய்ப் பூலோகத்தையடைந்து பாபிகளுடைய பாபங்களை யடையக்கடவாய் என்று சபித்தனள். அச்சமயத்தில் விஷ்ணுமூர்த்தி நான்கு கையுள்ள பரிசாரகர்களோடு வந்து சரஸ்வதியின் கையைப்பிடித்து மார்பிலணைத்துக்கொண்டு அவள் கோபந்தணியுமாறு பழமையான அநேகஞானங்களைச் சொல்லிப் பிறகு சண்டையையும் அதனுடைய மூலகாரணத்தையுங் கேட்டு லக்ஷ்மிதேவியைப்பார்த்து உன்னுடைய கலையினால் பூலோகத்தில் தருமத்துவஜருடைய கிருகத்தில் தாய் உதரத்திற் பிறக்காமல் அவருக்குக் கன்னிகையாயிருந்து தெய்வ கதியாய் நேரிட்டசாபத்தினால் என்னுடைய அம்சமான சங்கசூடனுக்கு மனைவியாகவிருந்து பிறகு எனக்குப்பத்தினியாகவருவாய். சரஸ்வதிதேவியின் சாபத்தால்பாரதவருஷத்தில் துளசிஎன்னும் செடியாகவும், பத்மாவதிஎன்னும் நதி

ரூபமாகவும் ஆகக்கடவாய். ஓ கங்காதேவியே! நீயும் பகீரத ஞல் பாரதவருஷத்தில் சகலருடைய பாபத்தையும் நாசஞ்செய்கிற பாகீரதி யென்னும் நதியாகி என்னம்சபூதனை சமுத்திரராஜனுக்கும் என்கலையினுற் பிறக்கும் சந்தனுமகாராஜனுக்கும் மனைவியாக விருப்பாய். இதுவேயுமன்றி சபத்தினிகளாகிய உங்கள் மூவரிடத்தும் உண்டாகிய கலகத்தினுல் அடையவேண்டிய பிரயோஜனத்தையும் அடையப்போகின்றீர்கள். அதுயாதெனின்! ஓசரஸ்வதி! நீபிரம லோகத்தில் பிரமனுக்குப் பத்தினியாவாய். ஓ கங்கா! நீ சிவபெருமானுடைய இடத்தையடைவாய். ஓலக்ஷ்மீ! நீமாத்திரம் இவ்விடத்திலிருக்கக்கடவாய். ஏனெனில் நீ சாந்தையாயும் கோபமில்லாதவளாயும் பக்தியுள்ளவளாயும் சத்வசொரூபிணியாயும் மிக்கபதிவிரதையாயும் நல்லொழுக்கமுள்ளவளாயும் தர்மத்தை யநுஷ்டிக்கின்றவளாயும் இருப்பதால் என்னிடத்திலேயே வசிக்கத்தகுந்தவளாயிருக்கின்றனை. உன்னுடைய அம்சத்தினுல் பிறக்கின்றவர்களும் தர்மிஷ்டராயும்பதிவிரதைகளாயும் மிக்கசாந்தமான உருவமும் நல்லொழுக்கமும் உள்ளவர்களாயும் எவ்வுலகத்தாராலும் கவுரவிக்கத் தக்கவர்களாயும் இருப்பார்கள். ஓ லக்ஷ்மியே! உலகில்மூன்றுபத்தினிகளையும் மூன்றுவேலைக்காரர்களையும் பந்துக்களில் மூன்று பேரையும் உடையவர்களுக்குச் சுகமுண்டாகாது. அஃதேபோல் பல பத்தினிகளாக விருக்கப்பெற்றூர்க்கு இடம் ஒன்றுயிருப்பின் அது நன்மையைத்தராது. எவன் வீட்டில் ஸ்திரீ புருஷனைப்போலவும், புருஷன் ஸ்திரீக்குச்சுவாதீனனுகவும் இருப்பாராஞல் அவ்விருவருடைய ஜன்மம் வீணுகுவது மன்றி அடிக்கடி கலகமுண்டாகும். வாக்கினுலும் பெண்குறியினுலும் துஷ்டையாயிருக்கின்றவளைப்பத்தினியாகப் பெறுவானுயின் அவன் காடுபோய்ச்சேர வேண்டும். அவனுக்கு அப்பெருங்காடே சலம் பலம் முதலானவைகள். மேன்மையானதாகவும் சுகமானதாகவும் கிடைக்கக்கூடுமான வீட்டைக்காட்டிலும் சுலபமான இடமாகவிருக்கும். துஷ்டையின் சமீபத்தில் வசிப்பதைப் பார்க்கிலும் அக்கினி புலி பாம்பு இவைகளின் சமீபத்தில் வசித்தல் மிக்கசுகமாம். துஷ்ட ஸ்திரீகள் முகத்தாற் காட்டும் கடூரமானது வியாதி விஷம் இவைகளின் கொடூரங்களைக்காட்டிலும் மிக்க கஷ்டமும் சகிக்கக்கூடாததுமாம். ஸ்திரீயினுல் ஆளப்பட்ட புருஷனுக்கு சாம்பராய்ப் போகுமளவும் பரிசுத்த முண்டாகாது.

பகலில் செய்யத்தக்க சத்கருமங்களெல்லாம் பிரயோஜனப்படாது. இகலோக பரலோகங்களில் நிந்தையொழிய வேறொருசுகமும் விளையாது. புகழால் வரும் நல்லபெயரும் பராக்கிரமும் இல்லாமல் எவன் ஜீவிக்கின்றானோ அவன் வாழ்கின்றவனல்லன்; இறந்தவனாவன். ஒருபத்தினியோடு வாழ்பவன் சுகத்தையும் வெகுபத்தினியுடன் வாழ்பவன் அசுகத்தையும் அடைவான். ஆதலால் நான் முற்கூறியபடி நீங்கள் மூவரும் அவ்விடங்களை அடைவீர்களாக. எவனுக்குப் பத்தினி தன்சுவாதீனமாயும் சொற்படி கேட்கின்றவளாயும் நல்ல ஆசாரமுள்ளவளாயும் நல்லபதிவிரதையாயும் இருக்கின்றாளோ அவனுக்கு சுவர்க்கமும் மோக்ஷமும் வேறில்லை, அவளிருக்குமிடமேயாம். அவன்தான் முத்தன்; பரிசுத்தன், சுசி. எவன் விபசாரிக்குப் பர்த்தாவாக விருக்கின்றானோ அவன் அசுசிக்கும் சகல துன்பத்திற்கும் இடமாயுள்ளவன். அவன் பிழைத்திருந்தாலும் இறந்தவன்தான் என்றனர். (சு - ம். சுஎது.)

ஆறும் அத்தியாயம்

கங்கைமுதலிய மூவருக்கும்சாபத்தால் பிறப்புண்டாதல்முற்றிற்று.

---

உ

ஸர்வ கதாயைநமஃ

## ஏழாம் அத்தியாயம்.

## விஷ்ணுபக்த லக்ஷணாதிகதனம்.

---

நாராயணர் கூறுகின்றனர்:—ஓ நாரதரே! இவ்வாறு விஷ்ணுமூர்த்தி ஆக்ஞாபித்தவுடன் தேவிகளெல்லாம் மிக்கதுக்கத்தோடு ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு புலம்பி நாயகனைப்பார்த்து நடுங்கிக் கண்ணீர்விட்டுக்கொண்டே சொல்லுகின்றனர்:—அவர்களில் சரஸ்வதி ஓ சுவாமி! ஜன்மமுதற்கொண்டு துக்கத்தைக்கொடுப்பதான சாபமுடிவைக் கூறவில்லையே அதனைக்கூறும். நல்லபர்த்தாவினால் ஸ்திரீகள் விடப்பட்டால் அவர்கள் எங்ஙனம் ஜீவிப்பார்கள்? பரதவருடத்தில் யோகத்தினால் சரீரத்தை விடப்போகிறேன். என்

னைக்காக்கத்தகுந்தவர் நீரன்றோ வென்றாள். கங்கைலோகநாயகரே! என்ன குற்றத்தினால் என்னை விட்டுவிடப்போகிறீர்! நான் என் தேசுத்தை விடுகின்றேன். தோஷமில்லாத ஸ்திரீயை இம்சித்தால் அதனால் வரும் பலனை நீரடையக்கடவீர். எவன் தோஷமில்லாத ஸ்திரீயை விடுகின்றானோ அவன் சர்வேஸ்வரனாயிருந்தாலும் கோரமான நரகையடைகிறான் என்றனள். லக்ஷ்மி ஓபிரபுவே! சத்வகுணமுடைய உமக்குக் கோபம் ஏன் உண்டாயிற்று. இந்த இரண்டுமனைவிகளும் உமக்குத் தகுந்தவர்கள். அவர்களிடம் நீர்இரக்க முடையவராயிரும். நான் சரஸ்வதியின் சாபத்தால் பாரதவருடம் போய்ச்சேருவேனானால் எவ்வளவு காலம் அங்கிருப்பேன் உமது தெரிசனம் எப்போது கிடைக்கும். பூவுலகில் நதிரூபமாய் நான்செல்லும் போது ஸநானஞ்செய்பவர் என்னிடம் பாபத்தைக் கொடுக்கப்போகின்றார்கள். அவைகளை நான் எவ்வாறு போக்கிக்கொள்ளுவேன். என்கலையினால் தருமத்துவஜருக்குப் பெண்ணாகி துளசிரூபத்தையடைந்து உம்மால் அதிஷ்டிக்கப்பட்ட விருக்ஷமாகப் போகிறேன். கருணைக்கடலே! நீர் என்னை எப்பொழுது திருவுளம்பற்றுவீர் அதனைச் சொல்லும். என்னைப்போல் சரஸ்வதியும் சாபத்தினால் பாரத வருடத்தை யடைவாளாயின் அவள் அச்சாபத்தினின்றும் நீங்கி உம்மைவந்தடைவாள். சரஸ்வதி பிரமாவின் வீட்டிற்கும் கங்கை ஈஸ்வரருடைய இடத்திற்கும் போகவுத்தரவு செய்தீர் அவ்வார்த்தையை நீக்கிவிடவேண்டும். என்று கூறி பர்த்தாவின் பாதத்தைப்பிடித்துக்கொண்டு நமஸ்கரித்தனள். பிறகு தன் கூந்தலால் அவர் பாதங்களைச் சுற்றிக்கொண்டு அதிகமாக அழுதாள்.

அப்பொழுது விஷ்ணுமூர்த்தி லக்ஷ்மியைப்பார்த்து ஓ கமலலோசனீ! உனது வேண்டுகோளும் எனது வார்த்தையுந் தவறாமல் நடப்பிக்கிறேன். சரஸ்வதி சாபத்தின்படி ஒருகலையினால் நதிரூபமாகவும் என்சொற்படி பாதிகலையினால் பிரமன்வீட்டிலும் என்வீட்டிலும் வசிக்கக்கடவள். அஃதேபோல் கங்காதேவியும் பகீரதனால் பூமியையடைந்து மூவுலகினையும் பரிசுத்தஞ்செய்ய அப்பூமியினும் எல்லோருக்குங் கிடைத்தற்கரிய சந்திரமௌளியினுடைய சிரசிலும் எனது வீட்டிலும் அடையக்கடவள். அதனால் இயற்கையாகவே சுத்தமுள்ள கங்கை ஈஸ்வரனுடைய சடையிற் சேர்வதால் மிக்கபரிசுத்தையாவள். நீ உனதுகலையினுடைய கலாம் சாம்சத்தினால் பா

ரதவருஷத்தில் பத்மாவதி என்னும் நதியாகவும், துளசிவிருக்ஷமாக வும் ஆகக்கடவாய். நீங்கள் மூவரும் கலியில் ஐயாயிரவருடங்கழி யுமானால் நதிரூபத்திலிருந்து என்வீடுவந்து சேருவீர்கள். உலகில் யாவரிடத்துண்டா யிருக்கும்சம்பத்துக்கும் விபத்தேதான்காரணம். விபத்தில்லாமல் சம்பத்து எவர்களுக்குண்டாகிறது? நதிரூபமான உங்களுக்கு நேரிடும் பாபங்களெல்லாம் எனது மந்திரத்தையுபாசி க்கும் சத்புருடர்செய்யும் ஸ்நானதெரிசன பரிசங்களால் நசித்துவி டும். பூமியைப் பரிசுத்தஞ்செய்வதற்காகவே எனதுமந்திரோபாசனை செய்யும் பக்தர்கள் வசிக்கின்றார்கள். ஆதலால் பூவுலகிலுள்ள தீர்த் தங்களெல்லாம் அவர்களுடைய பரிசதெரிசனங்களால் பரிசுத்தம டைகின்றன. எவ்விடத்தில் அவர்கள் வசிக்கின்றார்களோ அவ்விட மும் எந்தத்தீர்த்தத்தினால் பாதபிரக்ஷாளனஞ்செய்கின்றார்களோ அந்தத்தீர்த்தமும் பரிசுத்தமாகின்றதென்பதிற்சந்தேகமில்லை ஸ்தி ரீஹத்தி கோஹத்தி பிரமஹத்தி குருதாரகமனம் நன்றிமறத்தல் இவைகளைச்செய்தவர்களும் ஏகாதசிவிரதத்தையும் சந்திவந்தனத் தையும் விட்டவனும் தெய்வமில்லை என்கிற நாஸ்திகனும் மானுடக் கொலைசெய்கிறவனும் கத்தியினால்ஜீவிப்பவனும் எருதின்மேல்ஏறுகி ன்றவனும் நம்பவைத்து கழுத்தை வெட்டுகின்றவனும் சினேகனைக் கொலைசெய்கின்றவனும், பொய்சாட்சி சொல்பவனும் புதைத்து வைத்ததைக் களவாடுகின்றவனும் அதி உக்கிரமாகப் பேசுகின்றவ னும் எல்லோரையும் தூஷிக்கின்றவனும் பரஸ்திரீயைப் புணருகின் றவனும் விபசாரியினுடைய புத்திரனும் அவளுக்குக் கணவனாக இருப்பவனும் சூத்திரனுக்குச் சமையல் செய்கின்றவனும் எப்போ தும் கூலிக்குத் தேவபூசை செய்கின்றவனும் கிராமபுரோகிதனும் தீக்ஷையில்லாதவனும். தாய் தந்தை மனைவி சகோதரர் புத்திரர் புத்திரிகள் குருவின்குலம் உடன்பிறந்தவள் கண்ணில்லாத பந்துக் கள் மாமி மாமன்மார் ஆகிய இவர்கள் வருத்தப்படும்போது எவன் காப்பாற்றாம லிருக்கின்றானோ அவனும் அரசமரத்தை நாசஞ்செய் கின்றவனும் எனது பக்தர்களை நிந்திக்கின்றவனும் சூத்திர அன்ன த்தை யுண்கிறபிராமணனும் தேவதிரவியத்தையும் அந்தணர் சொத் ததை அபகரிக்கின்றவனும் திராக்ஷை பஞ்சலோகஉப்பு முதலான ரசத்தை விற்பனைசெய்கின்றவனும் பெண்ணை விக்கிரயஞ் செய்கின் றவனும் சூத்திரர்கள் பிணத்தைக் கொளுத்துகின்றவனும் தேவபத்

தி இல்லாதவனும் மகா அகங்காரத்தோடு கூடினவனும். தன்னைத் தான் புகழ்ந்துகொள்ளுகின்றவனும் துஷ்டனும் சாதுக்களை நிந்திக்கின்றவனும் எனது பக்தனைத் தெரிசிப்பதினாலும் பரிசிப்பதினாலும் பரிசுத்தராகின்றனரென்று கூற, இலக்குமிதேவிஎந்த முக்தரைத் தெரிசிப்பதினால் பரிசுத்தமாவரோ எந்தப்பக்தருடைய பாததூள்களாலும் பாதங்களை அலம்புஞ்சலத்தினாலும் பூமிபரிசுத்தம் ஆகின்றதோ அவர்களையறியுங் குறிப்பைச்சொல்லும். சலரூபமான தீர்த்தங்களும் மண் கல் ரூபமான தேவதைகளும் காலக்கிரமமாகச் சுத்திசெய்யுந் தன்மையுடையன. பக்தர்களோ ஒருக்ஷணத்தில் சுத்தஞ்செய்யுந்தன்மை யுடையவரல்லவா என்று வினவினள்.

விஷ்ணுமூர்த்தி புன்சிரிப்புடன் அவைகளைக்கேட்டு பக்தருடையகுறி வேத புராணங்களிலும் மறைந்திருக்கிறது. ஓலக்ஷ்மீ! புண்ணியரூபமாயும் பாபத்தை நாசஞ் செய்வதாயும் சுகத்தையும் பரமபக்தியையும் மோக்ஷத்தையுங் கொடுக்கிறதாயு முள்ள சாரமான ரகசியத்தைக் கவனமாகக் கேட்பாய். துஷ்டர்களுக்குச் சொல்லக்கூடாத இதனை என்பிராணனுக்குச் சமமான உனக்குக் கூறுகின்றேன்.

குருமுகத்திலிருந்து பகவானது மந்திரமானது எவன்காதில் விழுகிறதோ அந்த உத்தமனை வேதங்கள் பரிசுத்தன் என்று கூறுகின்றன. பகவத் பக்தியுடையவன் எந்தக்குலத்தில்பிறந்திருக்கினும் அவனது முன்னோர்கள் நூறு தலைமுறைபரியந்தம் நரகத்திலிருப்பவராயினும் மோக்ஷமடைகிறார்கள். எந்த ஜந்துவாவது எவ்விடத்திலாவது பகவானது பக்தஜன்மமடையப் பெறின் அவைகள் உயிருள்ளகாலம் வரையில் சீவன் முக்திநிலையையடைந்து அந்தியத்தில் பரமபதத்தை யடைகிறது. எனது பக்தியுள்ளவன் மனிதனாயினும் தேவன்தான். எவன் எனது குணங்களுள்ளவனும்அக்குணத்திற்குத் தகுந்த ஜீவனமுள்ளவனும் எப்பொழுதும் எனது கதைகளைக் கேட்கின்றவனும் எனதுகுணத்தைக் கேட்டமாத்திரத்தில் ரோமங்கள் சிலிர்சிலிர்க்கின்றவனும் ஆனந்தத்தால் வாக்குக்குழறுகின்றவனும் ஆனந்தக் கண்ணீர் விடுகின்றவனும் மெய்மறக்கின்றவனும் ஆகின்றானோ அவன் சாயுச்சியமுதலிய புருஷார்த்தங்களையும் பிரமத்தன்மையையும் அமரத்தன்மையையும் இந்திரத்தன்மை

யையும் மநுவாகவும்பிரமனாகவும் பிறக்கவேண்டுமென்பதையும்துர்ல பமான சுவர்க்கத்தையும் கனவிலும் விரும்பான். அப்படிபட்டபக் தர்கள் பாரதவருஷத்தில் திரிந்துகொண்டிருக்கிறார்கள். பக்தனுகுஞ் ஜன்மம்கிடைத்தல் துர்பலம். அவர்கள் எனது குணத்தைக்கேட் பதினாலும் செவிக்கின்பமான கானங்களினாலும் தினம் சந்தோஷத் தோடுகூடியிருந்து பூமியைப் பரிசுத்தஞ்செய்து முடிவில் எனது ஸ்தானத்தையடைகிறார்கள். இவ்வாறுபக்தர்களது குறிப்பைக்கூ றினவுடன் மூன்றுதேவிகளும் அவ்விஷ்ணுபகவானது ஆக்ஞையின் படி நடந்தார்கள் என்றனர். (சு - ம். ருசத.)

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வா வகுண வர்ஜிதாயை நம:

## எட்டாம் அத்தியாயம்.

## * கங்காதீனும் பாரதவருஷேஜன்மப்ராப்தி.

---

நாராயணர் கூறுகின்றார்:—சரஸ்வதிதேவி விஷ்ணுவினிடத்தி லும் கங்கையின் சாபத்தினால் நதிரூபமாக பாரதவருஷத்திலும் பிரமனுக்கு மனைவியாக பிரமலோகத்திலும் வசித்தனள். ஓ நாரதரே அவள் பாரதவருஷத்தில் வந்தபடியால் பாரதி என்றும் பிரஹ்மா வுக்கு பத்தினியானதால் பிராம்ஹி என்றும் வாக்குக்கெல்லாம் தே வியானபடியால் வாணி என்றும் பாவிகளுடைய பாவங்களைக் கொளுத்தும் அக்கினியைப்போல் மஞ்சள் நிறமுள்ள நதியாக யாவரும் எளிதிற் காணவந்தமையால் சரஸ்வதி என்றும் அழைக்கப்படுகின்றாள். கங்கை சர ஸ்வதியின் சாபத்தினால் நதிரூபமாயினள். அவள் பகீரதனால் வரவழைக்கப் பட்டபடியினால் பாகீரதி என்று சொல் லப்பட்டாள். பூதேவியின்பிரார்த்தனையால் கடூரமாக வரும் அப் பாகீரதியைச் சிவபெருமான் சிரசில்தரித்தனர். லக்ஷ்மிதேவி சர ஸ்வதியின் சாபத்தினால்பாரதவருஷத்தில்பத்மாவதி நதிரூபமாகவும்

* கங்கைமுதலிய மூவரும் பரதகண்டத்தில் பிறப்படைதல்.

தர்மத்துவஜரிடத்தில் பெண்ணாகவும் பரிசுத்தஞ் செய்கிற துளசி விருக்ஷமாகவும் ஒவ்வொரு கலையினால் தோன்றினள். இம்மூவரும் கலியுகத்தில் ஐயாயிரம்வருடம் சென்றபின்னர் நதிரூபத்தைவிட்டு வைகுண்டத்தை யடையப்போகின்றனர். அவர்களோடு காசியும் பிருந்தாவனமுந்தவிர எந்தப்புண்ணிய தீர்த்தங்களும் போம். சக்தி சிவசொரூபங்களும் சாளக்கிராமமும் ஜகந்நாதமும் பதினாயிரம் வருடத்துக்குமேல் பரமபதத்தையடையும். முன்சென்ற தீர்த்தங்களோடு சாதுசங்கம் சிரார்த்தம் தர்ப்பணம் வேதோக்தமான கர்மங்கள் தேவபூஜை தேவநாமம் தேவகீர்த்தனை வேதம் சாஸ்திரம் சத்புருஷர் சத்தியம் தருமம் கிராமதேவதை விரதம் தவம் உபவாசம் முதலானபுண்ணியங்களும் நசித்துப்போம். கபட ஆசாரமுள்ளவர்களாயும் கோணவழியுள்ளவர்களாயும் துளசியில்லாத பூஜையுள்ளவர்களாயும் துஷ்டர்களாயும் குரூரர்களாயும் டாம்பீகர்களாயும் மகா அலங்காரத்தோடு கூடினவர்களாயும் திருடர்களாயும் கொலைசெய்கின்றவர்களாயும் சொத்துக்களுக்கு இவன் எஜமானன் என்கிற பேதந்தவிர ஸ்திரீகளுக்கு இந்தப் புருஷன் எஜமானன் என்கிற தருமத்தை விட்டவர்களாயும் இஷ்டம்போல் விவாகஞ்செய்கின்றவர்களாயும் புருஷர்களெல்லாம் ஸ்திரீகளுக்கு சுவாதீனர்களாயும் வீடுகள்தோறும் விபசாரத்தினாலும் மிரட்டுதலினாலும் தூஷிப்பதினாலும் தண்டிப்பதினாலும் தங்கள் பர்த்தாக்களைப் பாதிக்கின்றவர்களாயும் வீட்டிற்குத் தாமே எஜமானிகளாயும் புருஷன் வீட்டிற்கு வேலைக்காரனாயும் பிள்ளைக்குத் தந்தைகள் வேலைக்காரர்களாயும் மனையாட்டி சம்பந்தமானவரும் அபிமான ஸ்திரீ சம்பந்தமானவரும் பந்துக்கள் வீட்டிற்கு அதிகாரிகளாயும் வித்யா சம்பந்தமான பந்துக்களுடன் சம்பாஷணை யேனும் இல்லாதவர்களாயும் பந்துக்களும் மற்றையரும் பழக்கத்தினளவாக முறைமை பாராட்டுகின்றவர்களாயும் புருஷர்கள் ஸ்திரீகளின் ஆக்கினையை மீறி ஒருதொழிலையேனும் நடத்தவல்லமை யற்றவர்களாயும் நான்கு வருணத்தவரும் தத்தம் ஆசாரங்களையும் சாஸ்திரங்களையும் விடுத்து துருக்கருடைய ஆசாரத்தையும் சாஸ்திரத்தையும் கைக்கொள்ளுகின்றவர்களாயும் சூத்திரர்களுக்கு அந்தணர்முதலிய மூவரும் சமையல் முதலிய வேலைக்காரராயும் சரீரத்தைக் கஷ்டப்படுத்தியோடுந்தொழிலுடையவராயும்ருஷபத்திலேற்றித்திரிகின்றவர்க

ளாயும் எல்லாஜனங்களும் சத்தியமில்லாதவர்களாயும் இருப்பார்கள். சந்தியாவந்தனமும் யக்ஞ சூத்திரமும் நசித்துப்போகும். பூமி பயிரையும் மரங்கள் பலத்தையும் ஸ்திரீகள் பிள்ளைகளையும் பசுக்கள் பாலையும் பால் நெய்யையும் தம்பதிகள் பிரீதியையும் கிருகஸ்தர்கள் சத்தியத்தையும் ராஜாக்கள் பராக்கிரமத்தையும் அதிகமாகவுடையவராகார். சனங்கள் வரிகட்ட சக்தியற்றும் பெரியநதிகள் நடபாவி குளம் ஜலமில்லாமலும் நான்குவருணங்களும் தருமமும் புண்ணியமு மில்லாமலும் இருக்கும். இலக்ஷத்தில் ஒருவனாவது புண்ணியவானாக இருக்கமாட்டான். புருஷர்களும் ஸ்திரீகளும் குழந்தைகளும் கெட்டநடத்தையையும் விகாரமான உருவங்களையும் விகாரமான வார்த்தைகளையும் உடையவர்களாயிருப்பர். சிலபட்டணங்களுள்ளும் கிராமங்களுள்ளும் சிலவற்றில் மனிதர்களேயில்லாமலும் சிலவற்றில் சில மனிதர்களும் சிலவற்றில் வீடுகள் நஷ்டமாயும் சிலவற்றில் வீடுகளும் சிலவற்றில் பில் முளைத்துக் காடுசூழ்ந்தும் இருக்கும். அரண்ணியவாசிகள் கப்பத்தினால் பீடிக்கப்படுவர். குளம் ஏரி ஆறுகள் பயிரிடும் இடங்களாகும். உயர்ந்த வம்சத்திற் பிறந்தவர் தாழ்வடைவர். பொய்யர்களும் துஷ்டர்களும் சூதர்களும் அதிகராவர். விளைநிலமெல்லாம் விளைவில்லாமலும், மிகஅற்பர்கள் உயர்ந்தவர்களாயும், பொருளுள்ளவர்களாயும் இருப்பர். தெய்வபக்தியுள்ளவர் நாஸ்திகராயும் நகரத்திலுள்ளவர் தயையின்றி இம்சிக்கின்றவராயும் மாநுடரைக் கொலைசெய்கின்றவராயு மிருப்பர். ஸ்திரீகளும் புருஷர்களும் குள்ளராகவும் வியாதியுள்ளவராகவும் ஆயுள் குறைந்தவராகவும் எவ்வனமில்லாதவர்களாகவும் பதினாறுவயதில் நரைத்தவர்களாகவும் இருபதுவயதில் கிழத்தன்மை அதிகரித்தவர்களாகவும் எட்டுவயதுபெண் ருதுவடைந்து பிள்ளைகளைப் பிரதிவருஷத்திலும் பிரசவிக்கின்றவர்களாகவும் பதினாறுவயதில் கிழவிகளாகவும் போவார்கள். பிள்ளைப்பேறுடையவர்கள் சிலராகவும் மலடிகள் பலராகவுமிருப்பர். நான்கு வருணத்தவரும் கன்னிகையை விக்கிரயஞ் செய்வார்கள். பெண் சகோதரி மருமகள் தாய் மனைவி மருமகள் இவர்கள் விபசாரத்தொழிலால் கொண்டுவரப்பட்ட அன்னத்தைப் புசிக்கப்போகிறார்கள். விஷ்ணு நாமங்களை விக்கிரயஞ் செய்வார்கள். கீர்த்தியுண்டாக வேண்டுமென்று பலர்முன் ஏற்போருக்குத் தானங்கொடுத்துப் பின் அவர்க

ளிடத்தில் அவைகளை அபகரிப்பர். தேவாலயங்களும் பிராமணர்க ளும் ஆசிரியரும் தன்னுலாவது பிறராலாவது செல்வமுடையவரா யிருப்பின் சாத்தியப்படுமானல் பிடுங்கிக்கொள்வர். சிலர் கன்னிகை யையும் சிலர் மாமியையும் சிலர் மருமகளையும் சிலர் சாதிபார்க்கா மல் எல்லாஸ்திரீகளையும் சிலர் சிறியதாயார் உடன்பிறந்தாள் தமை யன்பெண்சாதி இவர்களையும் புணரத்தகாதஸ்திரீகளையும்புணருவா ர்கள். இவ்வாறே வீடுகள்தோறும் தன்சொந்தத்தாயைவிட்டு மற்ற வர்களிடத்தில் மனம்போனபடியே புணருவார்கள். புருஷனுக்கும் இவள்தான் ஸ்திரீஎன்றும், ஸ்திரீக்கு இவன்தான் புருஷன்என்றும் நியமமில்லாமற்போகும். சனங்களுக்கும் கிராமங்களுக்கும் இன்ன இன்ன வஸ்துக்கள்தான் உரித்தானவை என்கிற நியமமும் இல்லா மற்போகும். எல்லோரும் பொய் களவு பேராசை கொலை முதலிய வைகளை யுடையவராவர். நான்குவருணத்தவரும் பாபிஷ்டர்களா வர். திராக்ஷை லோகம் ரஸவஸ்துக்கள் முதலியவற்றை விக்கிரயஞ் செய்வர். பிராமணர் எருதின்மேலேறுவர். சூத்திர சவத்தைத் தக னஞ்செய்வர். சூத்திரான்னத்தைப் புசிப்பர். சூத்திரஸ்திரிகளைப் புணருவர். அமாவாசைராத்திரியில் புசிப்பர். சந்தி சௌசம் யக்ஞ சூத்திரம் பஞ்சயக்ஞம் இவைகளைக் கைவிடுவர். விபசாரியும் தூமக் காரியும் சமையல் செய்கின்றவராவர். அன்னத்துக்கும் அல்குலுக் கும் பிரமசரியாதி ஆச்சிரமங்கட்கும் விதித்த நியமங்கள் இல்லாமற் போம். இவ்வாறுகப்போகும் அந்தணர்களேயன்றி ஏனையோரும் துருக்கராவர். மரங்களெல்லாம் ஒருகை யளவுள்ளனவாகும். மனித ர்களெல்லாம் ஒரு கட்டைவிர லளவுள்ளவராவார். கலியுகமுடிவில் யஸஸ் என்கிற பிராமணனுக்கு நாராயணும்சமாக கற்கி என்னும் மகாபலமுள்ள பிள்ளைபிறந்து நீண்டவாளினல் உயர்ந்தகுதிரைமே லேறி மூன்றிராத்திரிக்குள் துருக்கர் எல்லோரையும் வெட்டி மறை யப்போகிறர். பூமி அரசனில்லாமல் திருடர்களால் பீடிக்கப்படும். பிறகு மேகமானது ஆறுநாள்வரையில் ஒருகம்பத்தினளவாக நீர்த் தாரைகளைப்பெய்து பூமியில் சனம் வீடு மரம் இல்லாமற்செ ய்துவிடும். ஓமுநிவரே! அதன்பின்னர் பன்னிருசூரியர் உதித்து பூமி யை உலர்த்திவிடுவர். கலியுகமும் முடியும். பிறகு கிருதயுகம்பிறந்து தபசு சத்வகுணம் ஆச்சிரமம் ஆகிய இவைகளோடுகூடின தருமம் பூரணமாய்நடக்கும். அப்போது பிராமணர் தவம் தருமசிந்தனை

வேதவுணர்ச்சி முதலியவற்றையுடையவராகவும், வீடுகள்தோறும் ஸ்திரீகள் தருமத்தினின்றுந் தவறாத பதிவிரதைகளாகவும், ராஜாக்களெல்லாம் க்ஷத்திரியராகவும், பராக்கிரமம் தருமவழியே செங்கோன் செலுத்துமுறைமை புண்ணியத்தில்ஆசை பிராமணவிசுவாசம் இவற்றை யுடையவராகவும், வைசியர் வாணிபத்தில் ஆவலும் புண்ணியத்தில் ஆசக்தியும் சூத்திரர் புண்ணியம் தருமம் இவற்றில் ஆவலும் மேல்வருணத்தவருக்கு வேண்டியவற்றைச் செய்வதில் ஊக்கமும் உடையவராயிருப்பர். இந்த நான்குவருணத்தவரும் தேவியினிடத்தில் பக்தியும் தேவிமந்திரத்தில் ஆசக்தியும் உள்ளவர்களாய் தேவியைத் தியானித்துக்கொண்டிருப்பர். புருஷர் ருதுகாலசங்கமஞ்செய்வர். சுருதி ஸ்மிருதி புராணங்களை ஆராய்ந்தறிவர். அதர்மத்தின் லேசங்கூட இல்லாமல் தருமம் பூரணமாகவும், திரேதாயுகத்தில் முக்காலாகவும் துவாபரத்தில் அரையாகவும் கலியுகமுதலில் காலாகவும் முடிவில் சூனியமாகவும் நடக்கும்.

வாரங்கள் ஏழாகவும் திதிகள் பதினைந்தாகவும் மாதம் பன்னிரண்டாகவும் ருதுக்கள் ஆறாகவும் பக்ஷம் இரண்டாகவும் அயனம் இரண்டாகவும் நான்குயாமம் ஒருராத்திரியாகவும் அப்படியே ஒருபகலாகவும் இரவும்பகலும் கூடியதினம் முப்பது ஒருமாதமாகவும் கணக்குபேதத்தால் வருஷம் ஐந்தாகவும் இருக்கின்றன. இவ்வாறு யுகங்கள் வந்துபோய்க்கொண்டே யிருக்கும். மனிதர்களுக்கு ஒருவருடம் தேவர்களுக்கு ஒருதினம். மனிதர்களுக்கு முன்னூற்றறுபதுயுகம் கழிந்தால் தேவர்களுக்கு ஒருயுகம். எழுபத்தொரு தேவயுகம் ஒருமன்வந்தரம். அது இந்திரனுடைய காலத்துக்குச் சமமாகும். இருபத்தெட்டு இந்திரர்காலங்கழிந்தால் பிரமனுக்கு ஓர்நாளாகும். நூற்றெட்டுவயதானால் பிரமனுக்கு ஆயுள்முடிந்துவிடும். அப்போது பிராகிருத பிரளயமுண்டாகின்றது; பூமி சலத்தினால் மூடப்படும். மும்மூர்த்திகளும் மஹாருஷிகளும் சகலஞானிகளும் சத்யரூபமான சிதாத்மாவில் ஐக்கியமாகின்றனர். பிரகிருதியும் சிதாத்மாவில் இலயமடையுங்காலம் தேவிக்கு ஒரு இமை கொட்டுங்காலமாம். இவ்வாறு அளவில்லாத பிரமாண்டங்கள் லயித்துப்போகின்றன. மறுபடி தேவி சிருட்டிக்கிரமத்தால் ஒருநிமிஷகாலத்துக்குள் சிருட்டித்துவிடுகிறாள். இப்படி சிருஷ்டி லயம் கற்பங்கள் எத்தனையோ நடந்துவிட்டன. இதன்கணக்கையும் பிரமாண்டங்களின் கணக்கையும்

எவனறிவான். எல்லாவற்றிற்கும் ஈஸ்வரன் பரமாத்மா ஒருவனே. சச்சிதானந்த ரூபத்தைத் தரிக்கிற பரமாத்மாவின் அம்சந்தான் பிரமனாதி சகலதேவர்களும். க்ஷுத்விராட்-மகாவிராட் புருஷனுடைய அம்சம்; அவர் பரமாத்மாவின் அம்சமே. பிரகிருதிஎல்லாம் க்ஷுத்விராட் அம்சம். பிரகிருதியிலிருந்து அர்த்தநாரீஸ்வரர்தோன்றினர். கோலோகத்தில் இரண்டுகையுள்ளவராயும் வைகுண்டத்தில் நான்குகை யுள்ளவராயுமுள்ள கிருஷ்ணனும் நாராயணனும் அப்பிரகிருதிரூபந்தான். பிரமன்முதல் துரும்பு பரியந்தமுள்ள சகலசிருட்டியும் பிரகிருதி சம்பந்தம். இதன்சம்பந்தமான சகலமும் நசித்துப்போகும். இவ்வாறு சிருட்டிக்குக்காரணமாயும் சத்யமாயும் நித்தியமாயும் அநாதியாயும் தனதிச்சைப்படி நடக்கிறதாயுமிருக்கிற நிர்க்குணமான பரப்பிரமம் பிரகிருதிக்குமேற்பட்டது. அப்பிரமத்துக்கு ஒருபேதமும் உருவமுங் கிடையாது. அப்படியிருந்தும் பக்தர்களுக்கு அநுக்கிரகஞ்செய்யும் எண்ணத்தினாலேயே சர்வத்தையுஞ் சிருட்டித்து சங்கரிக்கிறார். அப்பிரமத்தின் தபசினாலும் ஞானத்தினாலும் எவற்றிற்கும் பிரபுவாய் சம்பத்துடையவராய், எல்லாமறிந்தவராய், சகலசொரூபியாய், சகலலோகத்திலும்வியாபியாய், சர்வத்தையும் ரக்ஷிப்பவராய், சகலசம்பத்தையுங் கொடுக்கிறவராய் இருத்தலாகிய ஆறுகுணங்களையும் விஷ்ணுமூர்த்தி உடையவராயினர். அதனால் பகவான் என்று யாவராலும்அழைக்கப்பட்டவராய் சகலத்துக்கும் பிரபுவாயிருக்கிறார். அவரைப்போலவே அப்பரப்பிரமத்தினுடைய பக்தியினாலும் சேவையினாலும் மகாமாயா சொரூபிணியான பிரகிருதிதேவி சர்வசக்திக்கும் ஈஸ்வரியென்றும், சச்சிதானந்தசொரூபிணியான பகவதி என்றுஞ்சொல்லப்படுகிறாள். அவளுடைய சேவையினாலும் தபசினாலும் சாவித்திரிதேவியும் வேதமாதாவாயும் அதற்குஅதிஷ்டான தேவதையாயும் பிராமணர்களால் பூஜிக்கத்தகுந்தவளாயும் இருக்கிறாள். சர்வவித்தைகளுக்கும் அதிஷ்டான தேவதையான சரஸ்வதிதேவியும் அவளுடைய தியானசேவைகளினால் பண்டிதர்களால் பூஜிக்கப்பட்டிருக்கிறாள். அப்படியே சர்வகிராமங்களுக்கும் அதிபதிகளாயுள்ள கிராமதேவிகளும் பூஜிப்பவர்களுக்கு சர்வசம்பத்தையும் கொடுக்கின்றவர்களாகவும் தோத்திரஞ் செய்கின்றவர்களுக்குச் சகல அரிஷ்டங்களையும் நீக்குகின்றவர்களாகவும் இருக்கின்றனர். கிருஷ்ண னிடப்பாகத்திலுண்டாகி அவ

ருக்கு அதிட்டானியாய் அவரதுபிராணனேக்காட்டிலும் பிரியையா யிருக்கிற ராதிகை அச்சக்திசேவையினல் யாவரினுஞ்சிறந்த மேன் மை சௌந்தர்யம் சௌபாக்கியம் மானம் கௌரவம் முதலியவற் றை யுடையவளாய் கிருஷ்ணனுடைய வக்ஷஸ்தலவாசினியாய் அவ ருக்குப்பத்தினியாய் ஆயினள். அவள் முன்பு சதசிருங்கமென்னும் பர்வதத்தில் ஆயிரந்தேவவருடம் புருடனே அடைவதற்காகத் தவம் புரிந்து மகாதேவியின் அநுக்கிரகங் கிடைக்கப்பெற்ருள். அப்போ து கிருஷ்ணமூர்த்தி தன்மார்பில் அமர்த்தித் தன்னேப்போல் ஸ்திர மாகவும் தன்னிடம் பக்தியுள்ளவளாகவும் சௌரியம் மேன்மை பி ரீதி கௌரவம் இவைகளில் தன்னிலுஞ் சிறந்தவளாகவும், தனது பிரீதிக்குப் பாத்திரையாகவும், எல்லாமனேவிகளுள் உயர்ந்தவளாக வும், தன்ருற் பூசிக்கப்பட்டவளாகவும் இருத்தி என்பிராணனுக் குச் சமானமானவளே! எப்போதும் உன் சுவாதீனமாக விருக்கின் றேன் என்றனர்.

எந்தெந்தத் தேவிகள் மகாதேவியைக்குறித்து எவ்வளவு தப ஞ்செய்தார்களோ அவ்வளவான கௌரவத்தை யடைந்தார்கள். துர்க்காதேவி ஆயிரம்தேவவருடம் இமாலயத்திலும், சரஸ்வதிதேவி லக்ஷம்தேவவருடம் கந்தமாதன பர்வதத்திலும், இலக்குமி புஷ்க ரத்திலும், சாவித்திரி அறுபதினுயிரந் தேவவருடம் மலயத்திலும் தவங்கிடந்துயாவராலும் பூஜித்து வணங்கப்பட்டு எல்லாவற்றையுங் கொடுக்கும் வன்மையை யடைந்தனர். திரிமூர்த்திகள் நூறுமந் வந்தரம் தவம்புரிந்து தங்கள்தொழிலில் வல்லவரானுர்கள். கிரு ஷ்ணன் பத்து மந்வந்தரம் தவம்புரிந்து கோலோகமடைந்து சுகமு ற்றனர். தருமன் பத்துமன்வந்தரம் தவம்புரிந்து சகலருக்கும் பிரா ணபூதனுய் ஆதாரனுய் பூஜிக்கத் தக்கவனுனன். இவ்வாறு சகல தேவரும் முனிவரும் மநுக்களும் பிராமணர்களும் தேவியைக்குறித் துச்செய்யும் தபசினுலேயே கவுரவமடைந்தனரென்று வேதங் கூறியவாறு எடுத்துச்சொல்லும் புராணத்தை நான் ஆசிரியரிடங் கேட்டவண்ணங் கூறினேனென்றனர். (சு - ம் ககo)

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

சர்வாருணையை நமஃ

# ஒன்பதாம் அத்தியாயம்.

## வசுதோற்பத்தி.

நாரதர், பிரமன்முதலிய சகலதோற்றங்களும் ஜலதத்துவத்தில் ஒடுங்குங்காலமே பிரளயகாலமெனவும், அக்காலம் தேவிதனது கண்ணிமைகொட்டும் அளவுக்குள்ளெனவுங் கேட்டுள்ளேன்; அப்பொழுது இப்பூமி எந்தஜலத்தில் எங்கே மறைந்திருந்து சிருட்டிகாலத்தில் எப்படி உற்பத்தியாகின்றாள் என்றனர்.

நாராயணர் கூறுகின்றார்:—இவ்வுலகம் சிருட்டியாகுந்தோறும் சலத்தில் மறைந்திருக்கும் பூமிதான் முன்னுண்டாகின்றது. இதனை மேதினி என்பர். அதற்குக்காரணம் மதுகைடபர்களைத் திருமால் கொல்லத் தொடங்குங்கால் இப்பூமி ஜலத்தில் மறைந்து கிடந்ததென்றும், அதனைக்கண்ட அவர்கள் நமக்கு மரணமில்லையென்று மகிழ்ந்து கிடக்கும் அச்சமயத்தில் பூமி வெளிப்படத் திருமால்அவர்களைக் கொல்லும்பொழுது அவர்கள் உடம்பிலுள்ள மேதை பூமியிற்கலந்ததென்றும், அதனால் பூமிக்குமேதினி எனப் பெயர்வந்ததது என்றும்கூறுவர். இது எனக்குடன்பாடில்லை. எனக்குத் தருமர்சொல்லியிருக்கின்றார்.அதாவது இப்பூமிசலத்திலிருக்கு மகாவிராட்புருஷனுடைய சரீரமெல்லாம் வியாபித்து ரோமகூபங்கடோறும்நிறைந்திருந்து வெகுகாலங்கழிந்தபின்னர் வெளிப்படுகின்றாளென்றும், இது பலமுறையென்றும், இதுபோலவே சலத்தால் மறைபட்டு வெளிப்படுவதென்றும் கூறினர். இத்தகையபூமி சப்தத்வீபங்கள் சப்தசமுத்திரங்கள் புண்ணியதீர்த்தங்கள் மேலுங்கீழுமுள்ள உலகங்கள் இமயமுதலிய அரியபெரிய பர்வதங்கள் தேவர்கள் நவக்கிரகங்கள் முதலியயாவும் தங்கியிருப்பதற்கு ஆதாரமாயுள்ளசிறப்புடைத்தானதென்றும், இவளை இரணியாக்கதன் கவர்ந்து பாதாளத்தில் கொண்டுபோய்வைத்தபோது விஷ்ணுமூர்த்தி வராஹரூபங்கொண்டு பாதாளத்திற்சென்று தாமரைப்பொகுட்டைப்போல் மேலே மிதக்கும்படி கொண்டுவர பிரமாதிதேவர்களெல்லாம் மகிழ்ந்

தனரென்றும், அச்சமயத்தில் தனது திவ்யசொரூபத்தோடு மகா சுந்தரவதியாய் அவள்நிற்க வராஹ வுருவங் கொண்ட திருமால்அவளைக்கண்டு காமாந்தகராய்த் தனதுருவெடுத்து ரதிகலையில் சமர்த்தர்களான இருவரும் தத்தம் நிலைமறந்து காமரசநிலையி லாழ்ந்து இரவுபகல் தோன்றாமல் ஒருவருடங்கிரீடித்தனரென்றும், கடேசன் என்னும் பிள்ளையைப் பெற்றனரென்றும், பின் தெளிவுற்று தமது முன்னுருவும் முன்னிலையும் மனதுக்குத்தோன்ற வராஹவுருக்கொண்டு தம்மால் கிரீடிக்கப்பட்ட அவளும் பூமிதேவியென் றுணர்ந்து மகிழ்ந்து அவளுக்கு வஸ்திராபரணாதிகளும் உண்பனவாகிய சுவையோடுகூடிய உணவாதிகளையும் மிகுந்த வுபசாரத்தோடுங் கொடுத்து அவளைப்பார்த்து நீ எனக்கு ஸ்ரீதேவியைப்போலும் ஓர் மனையாட்டியாயினாய் என்று கூறினாரென்றும், பின்னர் அவளைப் பார்த்து ஓ பூதேவீ! சகலத்துக்கும் ஆதாரமாயிருந்து முநிவர்களாலும் மநுக்களாலும் தேவதானவசித்தர்களாலும் பூஜிக்கப்படுவாயென்றும், தானஞ்செய்யுந்தினத்திலும் பிரயாணகாலத்திலும் வித்தை கிரகம் நடபாவி குளம் முதலானவற்றை ஆரம்பஞ்செய்யுங்காலங்களிலும் விவசாயத்திலும் பூஜிக்கப்படுவாய் என்றும், எந்த மூடர்கள் இக்காலங்களில் உன்னைப் பூஜைசெய்கிறதில்லையோ அவர்கள் நரகினை யடையக்கடவர் என்றும் அநுக்கிரகஞ்செய்தனர்.

அதனைக்கேட்ட வசுதாதேவி ஓபகவானே! உமது ஆஞ்ஜையினால் வராகரூபியாய் தாவரசங்கமங்களோடு எல்லாவுலகங்களையும் ஓர்விளையாட்டாகத் தாங்குகின்றேன். முத்து சிப்பி சிவலிங்கம் தேவி விஷ்ணுபிம்பங்கள் சங்கம் தீபம் யந்திரம் யஜ்ஞசூத்திரம் ஜபமாலை புஸ்தகம் துளசி புஷ்பம் புஷ்பமாலை மாணிக்கம் வச்சிரம் பொன் கோரோசனம் சந்தனம் தீர்த்தம் சாளக்கிராமம் இவைகளை ஆசனமில்லாமல் வைப்பாராயின் அவைகளைத் தாங்க வல்லமையற்று நான்மிகவும் வருந்துவேன் என்றாள். பகவான் ஓ சுந்தரீ! எந்தமூடர்கள் நீசொல்லியவைகளை ஆசனத்தில் வைக்காமல் உன்னிடம் வைக்கின்றார்களோ அவர்கள் நூறுதேவவருடம் காலசூத்திரம் என்னும் நரகினையடையக்கடவர் என்றார்.

இவரது ஆஜ்ஞையினால் வசுதாதேவியைக் கண்ணுவசாகையிலுள்ள (ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் கிலீம் வசுதாயை ஸ்வாஹா) என்

கிற மந்திரத்தினுலும், வெண்டாமரையைப்போல்நிறமும் சரத்காலசந்திரன்போல் முகமும் சந்தனத்தினுற்றேயப்பட்ட சர்வாங்கமும் உள்ளவளாயும், இரத்தினுபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு அவைகளுக்கு ஆதாரமாயிருக்கின்றவளாயும், இரத்தினத்தைக்கர்ப்பத்தில் உடையவளாயும், இரத்னுகரத்தோடு கூடினவளாயும், நெருப்பினுல் சுத்தமானவஸ்திரத்தை அணிந்தவளாயும், புன்சிரிப்புடையவளாயும், பூஜிக்கத்தக்கவளாயும் இருக்கின்ற பூமிதேவியே! உன்னை நமஸ்கரிக்கின்றேன் என்கிற தியானத்தினுலும் ஜலத்தைக்கொடுக்கிறவளே! ஜலசொரூபியா யிருக்கின்றவளே! ஜலத்துக்கெல்லாம் ஆதாரமாயிருக்கின்றவளே! சலம் போல் பரிசுத்தஞ் செய்கின்றவளே! யக்ஞவராஹ ரூபியான பகவானுக்குப் பத்னியே! ஜயத்தைக் கொடுப்பாய். ஜயத்தை யுண்டு பண்ணுகின்றவளே! மங்களங்களுக்கெல்லாம் ஆதாரமானவளே! மாங்கல்யரூபமாக விருக்கின்றவளே! மங்களத்தைக் கொடுக்கின்றவளே! மங்களத்துக்குப் பிரபுவானவளே! சம்சாரத்தில் மங்களத்தை எனக்குக்கொடுப்பாய், சர்வத்துக்கும் ஆதாரமானவளே! எல்லாமறிந்தவளே! சர்வசக்தியோடு கூடினவளே! சர்வகாமத்தையுங் கொடுக்கின்றவளே! சம்சாரத்தில் எனக்கு சகல இஷ்டத்தையுங் கொடுப்பாய். புண்ணியரூபியாயிருக்கின்றவளே! புண்ணியத்துக்குப் பீஜரூபமாயுள்ளவளே! அனுதியானவளே! புண்ணியத்துக்கு ஆச்ரயமானவளே! புண்ணியவான்களுக்கு ஸ்தானமானவளே! புண்ணியத்தைக் கொடுக்கின்றவளே! சகலபயிருக்கும் இருப்பிட மாயுள்ளவளே! சகலபலத்தையுங் கொடுக்கிறவளே! காலத்தில் சகலபயிர்களையும் ஹரிக்கின்றவளே! சகலமான பயிர்வடிவங்களாக இருக்கின்றவளே! ஓ பூதேவியே! அரசர்களுக்குச் சகல தனரூபியாகவும் முக்கியஸ்தானமாகவும் இருப்பதோடு சுகத்தையும் பூமியையும் கொடுக்கின்றவளே! எனக்குப் பூமியைக்கொடுப்பாய் என்கிற தோத்திரத்தினுலும் முதலில் வாரஹனும் பிறகு மலரோனும் மநுக்களும் முனிவர்களும் மானுடர்களும் பூஜித்தனர்.

இத்தோத்திரத்தை எவன்காலையில் படிக்கின்ருனே அவன் கோடிசன்மம் பலவானுகவும் ராஜாதி ராஜனுகவும் பிறப்பான். ஒருதரம்படித்தமாத்திரத்தில் தானமாகக்கொடுத்த பூமியை வாங்கியதனுலுண்டாகும் பாபம்போய் பூதானங்கொடுத்த பலன் கிடைக்

கும். அன்றியும் கிணறுவெட்டுதல் பூமியை அபகரித்தல் பூமியில் வீரியத்தைவிடுதல் தீபத்தைப் பூமியில் வைத்தல் முதலியபாபங்கள் நீங்கி நூறுஅஸ்வமேத பலனை அடையலாமென்பதிற் சந்தேகமில்லை என்றனர். (சு - ம் - சுரு.)

ஒன்பதாம் அத்தியாய முற்றிற்று.

---

உ

ஸர்வ மாதாயைநமஃ

## பத்தாம் அத்தியாயம்.

## * தராபராதே நரகப்ராப்தி.

---

நாரதர் பூதானத்தா லுண்டாகும் புண்ணியத்தையும் பூதானத்தை அபகரித்தல் முதலிய குற்றங்களால் நேரிடும் பாபங்களையும் அதனால் நேரிடும் நரகங்களையும் அக்குற்றங்களை யொழிக்கும் சாந்திகளையும் விரிவாக உரைத்தருள வேண்டுமென்று வினவ நாராயணர் கூறுகின்றார்:—

பூதானம் மிகச்சிறந்தது. வேதகர்மங்களைவிடாமல் அநுட்டித்துவரும் சத்பிராமணனுக்குத் தனக்குள்ளபூமியில் சாணளவாயினும் தானஞ்செய்பவன் சிவலோகத்தையும், எல்லாப்பயிர்களும் விளைந்திருக்கும் பூமியைத் தானஞ்செய்பவன் அப்பூமியில் எவ்வளவு அணுக்களுண்டோ அவ்வளவுகாலம் விஷ்ணுலோகத்தையும், கிராமம் பூமி தான்யம் இவைகளைத் தானஞ்செய்பவன் தேவிலோகத்தையும், இவ்வகையான தானங்களைப் புகழ்கின்றவன் தன்குலத்தோடு வைகுண்டத்தையும் அடைகின்றனர். தானுவது பிறராவது தானஞ்செய்ததும் பிராமணவிருத்தியால் சம்பாதித்ததுமான பூமியை அபகரிக்கின்றவன் சந்திரசூரியருள்ளளவும் காலசூத்திரநரகத்தை யடைவதுமன்றி அவனது புத்திரபௌத்திராதியரும் பூமி சம்பத்தும் சந்ததியும் அற்று மகாதரித்திரதசை யநுபவித்து கோரமானநரகங்களையும் அடைகின்றனர். பசுக்களது வழியையடைத்துப் பயிரிடுகின்றவன் நூறுதிவ்யவருஷம் கும்பி

---

* பூமிதேவிக்குக் குற்றஞ் செய்தால் வரும் நரகம்.

பாகத்தையும் மாட்டுமெந்தையிருக்கும் இடத்தையும் தடாகத்தை யும் பயிரிடும்பூமியாக்கிப் பயிரிடுகின்றவன் பதினான்கு இந்திரர் ஆயுள்பரியந்தம் அசிபத்திரவனத்தையும், அம்புவாசியால் பூமி யைவெட்டுவோன் நான்குயுகம் கிருமிதம்சமென்னும் நரகத்தையும், இதரருடைய கிணறு புஷ்கரணி சிதலமாகமறைந்திருக்க அதனை உத்தாரணஞ்செய்யாமல் வேறுகிணறு முதலியவற்றை உண்டாக்கு வோர்கள் அவற்றாலுண்டாகும் புண்ணியத்தை சிதலமான கிணறு வெட்டினவனுக்குக் கொடுத்துவிட்டுப்பதினான்கு இந்திரர் ஆயுள்வ ரையில் தப்தகுண்டத்தையும் அடைகிறார்கள். ஐந்துபிடிமண் வெ ளியேயெடுத்துவீசாமல் பிறன்கிணற்றில் ஸ்நானஞ்செய்கின்றவன் ஸ்நானபலனையுமிழந்து நரகினையுமடைவன். காமமிகுதியினால் பூமி யில் வீரியத்தைவிட்டவன் அந்தப்பூமியினுடைய தூள்ஒன்றுக்கு ஒருவருஷகாலம் ரௌரவத்தையடைவன். பிறனது தடாகத்தில் சேற்றையெடுத்து வெளியிலிடுகின்றவன் சேற்றின் துளி ஒன்று க்கு ஒருவருஷம் பிரமலோகத்தை அடைவன். சிரார்த்தஞ்செய் யும் பூமியின் சொந்தக்காரனுக்குப் பணங்கொடாது பிதுர்க்களுக் குப்பிண்டமிட்டவன் நரகினை அடைவன். பூமியில் தீபம்வைப்ப வன் ஏழுசன்மங் குடியனாயும் புத்தகத்தைவைப்பவன் சன்மாந்தி ரத்தில் குஷ்டரோகியாயும் முத்துமுதலிய ரத்னங்களையும் பொன் னையும்வைப்பவன் ஏழுபிறப்பு குருடனாயும், சிவலிங்கம் தேவியின் பதுமை இவைகளைவைப்பவன் நூறுமன்வந்தரம் புழுக்களைத்தின்ப வனாயும் பிறப்பன். சங்கு யந்திரம் புஷ்பம் துளசி முதலியவைகளை யும் ஜபமாலை புஷ்பமாலை கற்பூரம் கோரோசனம் சந்தனக்கட்டை ருத்திராக்ஷம் தர்ப்பை முதலியவைகளையும் பூமியில் வைக்கின்ற வர் மன்வந்தரகாலம்வரையில் நரகினையடைவர். யக்ஞசூத்திரத்தை யும் புத்தகத்தையும் வைப்பவர் இந்தசன்மத்தில் பிரமஹத் திசெய்த பாவத்தையடைவதுமன்றி சன்மாந்திரத்திலும் பிரமயோ னியில் பிறக்கார். யாகஞ்செய்ததனால் உண்டாகிய உஷ்ணத்தைப் பாலினால் நனைக்காதவன் ஏழுசன்மம் கொதிக்குப்பூமியை யடை ந்து தபிப்பான். பூகம்பகாலத்திலும் கிரஹணகாலத்திலும் பூமியை வெட்டுகின்றவன் மகாபாபியாய் அங்கஹீனனாய்ப் பிறப்பான்.

இப்பூதேவி எல்லோருக்கும் ஸ்தானமாயிருத்தலால் பூமியென் றும், காசியபருக்குச்சம்பந்தமுள்ளவளாகையால்காஸ்யபிஎன்றும்

சகலவிஸ்வத்தையும் தாங்குவதனுல் விஸ்வம்பரையென்றும், அளவில்லாத ரூபமுடையவளாகையால் அனந்தையென்றும், பிருதுசக்கிரவர்த்தியின் புத்திரியாயும் விசாலமாய்ப் பெருத்திருப்பதினுலும் பிருதிவி என்றுஞ் சொல்லப்படுகிருள் என்றனர். (சு - ம். ௩௦.)

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

சர்வாபரணபூஷிதாயைநமஃ

## பதிஞேராம் அத்தியாயம்.

## கங்கோற் பத்தி வர்ணனம்.

---

நாரதர், கங்கை சரஸ்வதியின் சாபத்தினுல் பூவுலகில் எந்தயுகத்தில் எவனுல் பிரார்த்திக்கப்பட்டு எவனது ஆக்ஞையால் எப்படி அவதரித்தாள் என்று நாராயணரைக்கேட்க அவர் கூறுகின்றூர்:—

இராஜாக்களுக்கெல்லாம் பிரபுவாயும் ஸ்ரீமானுயும் சூரியவம்சத்திற் பிறந்தவனுயுமுள்ள சகரன் - வைதர்ப்பி, சைப்பியை என்னும் இரண்டு மனைவியருடன் வாழுங்காலத்தில் ஸைப்பியைக்கு அஸமஞ்சனென்பவன்பிறந்தான். வைதர்ப்பி பிள்ளைவேண்டுமென்றுசங்கரரைப் பூசிக்க அவரது அநுக்கிரகத்தால் கர்ப்ப முண்டாகி நூறு வருடஞ் சென்றபின்னர் மாம்ச பிண்டத்தைப் பெற்றனள். அதனைக் கண்டு சம்புவைத்தியானித்து அடிக்கடியழ, அவர் பிராமணரூபமாகவந்து அப்பிண்டத்தை அறுபதினுயிரம் பாகமாகச் செய்ய அவைகளெல்லாம் பிள்ளைகளாய்விட்டன. சூரியகாந்தி போன்ற தேகமுள்ளவர்களான அவர்கள் கபிலமுநிவருடைய சாபத்தால் பஸ்மமாய்விட்டனர். அதைக்கேட்ட அஸமஞ்சன் அழுது நெருங்கினவனத்தில் லக்ஷம்வருடம் கங்கையைக் கொண்டுவரும்பொருட்டுத் தவம்புரிந்தும் அவனெண்ணம் முடியாமல் மரணமடைந்தனன். அவனைப்போலவே அவன் புத்திரனுன அம்சுமான் லக்ஷம்வருடம் தவம்புரிந்து மரித்தான். அவன் புத்திரனுகிய பகீரதன் லக்ஷம்வருடந் தவம்புரிந்து கிருஷ்ணபகவானைத் தியானித்து அடிக்கடிநமஸ்கரித்து வம்சத்

தைக் கரையேற்றும் வரத்தை அடைந்தான். பிறகு அந்தகிருஷ்ணமூர்த்தி கங்கையைப்பார்த்து ஓ சுரேஸ்வரீ! இப்போது நீ சரஸ்வதிசாபத்தினால் சீக்கிரமாகப் பரதவருஷத்துக்குப்போய் சகரருடைய புத்திரர்களையெல்லாம் உன்சம்பந்தமான காற்றினால் பரிசுத்த மாக்குவாய். அவர்கள் சன்மாந்திரத்தில் செய்திருந்த பாபங்களொழிந்து எனதுபரிசாரகர்களாய் ஒரு துன்பமுமின்றி என் சமீபத்தில் வாழ்வார்கள் என்று சொல்லி, ஓகங்கே! நீ பூலோகத்தில் அளவிறந்த மகிமையோடு பூஜிக்கப்படுவாயென்று அவைகளைக்கூறுகின்றார். கோடிசன்மங்களில் மனிதர்களாற் செய்யப்பட்ட பாபங்களெல்லாம் உனதுகாற்றின் பரிசத்தால் நசிக்கும். தெரிசனத்தைப் பார்க்கிலும் உனது பரிசம் பத்துப்பங்கு புண்ணியத்தைக் கொடுக்கும். சாதாரணதினத்தில் மௌசல ஸ்நானமாத்திரத்தில் பிரமகத்தி முதலானதும் அநேககோடி ஜன்மங்களிற் செய்ததும் புத்திபூர்வகமாகச் செய்தது மான பாவங்கள் நசித்துவிடுகிறதென்று வேதத்திற் கூறியுள்ளன. புண்ணியதினத்தில் ஸ்நானஞ் செய்வதனு லுண்டாகும் பலனை வேதங்களாலுஞ் சொல்லமுடியாமையால் தங்கள்சக்திக்குத் தக்கவாறு சொல்லுகின்றன. திரிமூர்த்திகளும் தேவர்களும் முழுவதும் சொல்லமுடியாதொழிந்தனர். ஓ கங்காதேவியே! சாமான்யதினத்தில் சங்கல்பஞ்செய்து ஸ்நானஞ் செய்வதனாலுண்டாகும் புண்ணியம் மௌசலஸ்நானத்தைக்காட்டிலும் பதின்மடங்கதிகம். சூரியசங்கிரமணகாலங்களிலும் அமாவாசையிலும் செய்யும் சங்கல்ப ஸ்நானபலன் சாதாரணதினத்திற் செய்யும் சங்கல்ப ஸ்நானபலனைக்காட்டிலுஞ் சிறந்தது. தக்ஷிணாயனஸ்நானபலன் இரண்டுபங்கதிகம். அதனைக்காட்டிலும் பதின்மடங்கதிகம் உத்தராயண புண்ணியகாலத்திற் செய்யும்ஸ்நானம். சாதுர்மாஸ்யபௌர்ணமாவாசையில்செய்யும்ஸ்நானபலனுக்கு அளவேயில்லை அக்ஷயமாம். உத்தராயணகாலத்திற்செய்யும் புண்ணியத்துக்குச் சமமென்று வேதத்திற் கூறியிருக்கின்றது. மேற்குறித்த தினங்களில் ஸ்நானத்தை முன்னிட்டுச்செய்யும் தானம் சாதாரணதினத்திற் செய்யும் புண்ணியபலனைக்காட்டிலும் நூறுமடங்கதிகம். மந்வந்திராதிகளிலும் மாகமாத சுக்லபக்ஷசப்தமியிலும் பீமாஷ்டமியிலும் அசோகாஷ்டமியிலும் நவமியிலும் நந்தாதிதிகளிலும் செய்தால் மேற்கூறியபலனுக்கு இரண்டுபங் கதிகமாம்.

அவைகள் உனக்கும் துர்லபமானவை. தசராவிலும் தசராதசமியி லும் செய்தால் யுகாதியிற்செய்த பலனும் வாருணியில் செய்தால் நந்தாதிதிப்பலனும் மகத்பூர்வத்தில் செய்தால் மேற்கூறியபலனைக் காட்டிலும் நான்குபங்கு புண்ணியமும் துவிமகத் பூர்வத்தில் அத னைக்காட்டிலும் நான்குபங்கு புண்ணியமும் கிடைக்கும். சாதாரண நாளிற்செய்யும் ஸ்நானத்தைக்காட்டிலும் கோடிபங்கதிகம் சந்திரகி ரகணகாலத்தில் செய்யும் ஸ்நானம். அதனைக்காட்டிலும் பதின் மட ங்கதிகம் சூரியகிரகணகாலத்திற்செய்யும் ஸ்நானம். அதனைக்காட் டிலும் நூறுபங்கதிகம் அர்த்தோதயகால ஸ்நானம் என்றுகூறினர்.

கங்காதேவி ஓபிரபுவே! சரஸ்வதி சாபத்தாலும் பகீரதன் தப சினாலும் உமது ஆக்ஞையினாலும் பாரதவருடத்தை நான் அடைவே னால் பாபிகள் என்னிடம் ஸ்நானஞ்செய்து அளவில்லாதபாபங்க ளைக் கொடுக்கப்போகிறார்கள். அவைகள் என்ன உபாயத்தினால் நசிக் குமோ அதனையும், பாரதவருடத்தில் எவ்வளவுகாலமிருந்து பரம பதத்தை வந்தடைவேனோ அதனையும், எனக்கென்னென்ன அபே க்ஷைகளுண்டோ அவைகளை அறிந்து அதற்கேற்றவைகளையும் கூறியருளவேண்டுமென்ன, விஷ்ணுபகவான் கூறுகின்றார்.

ஓ ஈஸ்வரியே! உனதுகோரிக்கைகளை நானறிந்தவன்தான். சல ரூபமாக விருக்கின்ற உனக்கு லவணசமுத்திரம் கணவனாகும். அக் கடல் என்னம்சம்; நீலக்ஷ்மி அம்சம். உலகில் மகாசமர்த்தனானபுரு ஷன் சமர்த்தியானஸ்திரீயோடு சேருவது மிக்ககுணமுள்ளது. பார தவருஷத்தில் சரஸ்வதி நதி முதலிய நதிகளைக்காட்டிலும் நீ ஒருத் தியே சௌந்தர்யமுள்ளவளா யிருப்பதினால் புணர்ச்சிகாலத்தில் சமுத்திரராஜனுக்கு இனிப்பாகவிருப்பாய். ஓ தேவேஸ்வரீ! இதுமு தல் கலியுகத்தில் ஐயாயிரம்வருஷம் சரஸ்வதிசாபத்தால் பரதவரு டத்திலிருப்பாய். நீ தினந்தோறும் சமுத்திரராஜனோடு ரகசியத்தில் ரசிக்கப்போகின்றாய். சிருங்கார சமர்த்தியான நீ அவனுடைய புண ர்ச்சி விசேடத்தால் நீ சந்தோஷமடையப்போகிறாய் பாரதவருஷ த்தி லிருக்கிற ஜனங்களெல்லாம் பகீரதனால் செய்யப்பட்ட தோத் திரத்தினால் உன்னைத் துதித்துப் பூசிப்பார்கள். கண்ணுவசாகையில் சொல்லியவிதிப்படி எவன் உன்னை தோத்திரஞ்செய்து துதிக்கின் றானோ அவன் அஸ்வமேதபலனை யடைகிறான். எவன் நூறுயோஜ

லை தூரத்திலிருந்து கய்கை கங்கையென்று உன்லை ஸ்மரிக்கின்றுனோ அவன் சகலபாபங்களினின்றும் விடுபட்டு எனது லோகத்தை யடைகின்றான். ஆயிரம்பாபிகள் ஸ்நானம் செய்வதனாலுண்டாகும் பாபம் பிரகிருதி தேவியின் பக்திமான்களுடைய பரிசத்தாலும், ஆயிரம்பாவிகளது பரிசபாபம் பிரகிருதிதேவியின் மந்திரத்தை உச்சரிப்பவன் செய்யும் ஸ்நானத்தாலும் நசித்துப்போம். இவ்வாறு பாபங்களையெல்லாம் ஒழித்துவிட்டு சிறந்தசரஸ்வதி நதிமுதலிய நதிகளோடு ஒன்றாக பாரதவருஷத்தில் வசித்துப் பின்னர் வரப்போகின்றனை. எங்கு உனது குணகீர்த்தனங்களைச் செய்கின்றார்களோ அவர்கள்தான் பரிசுத்தர்கள். உனதுரேணு ஸ்பரிசமாத்திரத்தில் பாபி பரிசுத்தனாவான். உனது நீர்த்துளிகள் எத்தலை மனிதன் மேல் படுகிறதோ அவர்கள் அவ்வளவுகாலம் தேவலோகத்தில் வசிப்பார்கள். எவர்கள் புத்திபூர்வகமான பக்தியோடு எனதுநாமத்தை ஸ்மரித்துக்கொண்டு உன்னிடம் மரிக்கின்றார்களோ அவர்கள் எனதுலோகத்தையடைந்து பரிசாரகர்களால் பிராகிருதிகம் என்னும் அநேக பிரமபிரளயத்தைப் பார்ப்பார்கள். அனேக புண்ணியத்தைச் செய்தவனுடைய பிரேதசரீரமானது உன்னிடம் விழும். அந்தப் புண்ணியத்தால் அவனை வைகுண்டமடைவித்து பின்சுககர்மங்களை யநுபவிக்கும் சரீரத்தைத்தந்து அது முடிந்தவுடன் சாரூப்பியத்தையுங் கொடுத்து எனது சபையில் சேர்ந்தவனாகச் செய்துகொள்வேன். அஞ்ஞானியானவன் உன்சலசம்பந்தத்தால் பிராணனைவிடுவானாயின் அவனுக்கு சாலோக்கியங்கொடுத்து சபையிற்சேர்த்துக்கொள்ளுகிறேன். வேறெவ்விடத்திலாவது உன்னை நினைத்துக்கொண்டே மரணமடைவோனை பிரமவயதுபரியந்தம் சாலோகத்தையும் அநேகபிராகிருத லயபரியந்தம் சாரூபத்தையுங்கொடுத்து சிறந்தரத்னங்களிழைத்த வாகனங்களிலேற்றி பரிசாரகர்களோடு கோலோகத்தை யடைவித்து எனக்குச் சமமான உருவமுள்ளவனாக்குவேன். என்மந்திரத்தை உபாசிக்கின்றவர்கள் பரிசுத்தமானவிடத்திலிருந்தாலும் அபரிசுத்தமான விடத்திலிருந்தாலும் அதனால் குறைவும் விசேஷமுமில்லை. என்மந்திரத்தை யுபாசித்து என் நிவேதனத்தை புசித்துவருபவன் லீலையாக மூவுலகத்தையும் பரிசுத்தஞ்செய்ய வல்லமை யுள்ளவனல்லவா? எனது பக்தர்களுடைய பந்துக்களும் எவ்விடங்களில் ஜ்ஞானபூர்வகமாய்த் தியானிக்கின்றவர்களும்

ரத்னவிமானமூர்ந்து துர்லபமான கோலோகத்தை யடைவார்கள். எங்கெங்கே விடத்தில் என்பக்தர்களின்சம்பந்த முண்டாகின்றதோ அவ்விடத்தி லிருப்பவர்களெல்லாம் ஜீவன் முக்தர்களாய் விடுகிறார்கள். என்று கங்கையைப்பார்த்துக்கூறி பிறகு பாகீரதனைப்பார்த்து நீ கங்காதேவியைத்துதித்து பக்தியோடு பூசையும் செய்யென்று ஆக்ஞாபிக்க அவ்வாறே பகீரதன் பூசித்து பக்தியோடு கவுதமரால் கூறியுள்ள தியானத்தினாலும் தோத்திரத்தினாலும் அடிக்கடி பரமாத்மாவான கிருஷ்ணபகவானை நமஸ்கரித்தான். பிறகு யாவரும் தங்களிடத்துக்குச் சென்றார்கள் என்றனர். நாரதர் எந்தப் பூஜாக்கிரமத்தினால் எந்தத் தோத்திரத்தினால் கங்காதேவியைப் பூசித்தானோ அவைகளைக் கூறியருளுமென்ன நாராயணர் கூறுகின்றார்.

நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்து, கணேசன் சூரியன் வன்னி விஷ்ணு சிவன் தேவி இவர்களைப் பூசித்து பிறகு இஷ்டதேவதையைப் பூசிப்பதற்கு அதிகாரியாக வேண்டும். கணேசரை விக்னங்களை நாசஞ் செய்வதற்கும், சூரியனை ஆரோக்கியத்திற்கும், அக்னியைப் பரிசுத்தத்திற்கும், விஷ்ணுவை சம்பத்துக்கும், சிவனை ஞானத்திற்கும், தேவியை மோக்ஷத்திற்கும் பூசித்தால் கெடுதிநேரிடாமல் தியானம் முடியும் என்றனர்.　　(சு-எரு.)

பதினொன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ககாரார்த் தாயைநமஃ

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

## கங்கா ஸ்வரூபாதி.

---

நாராயணர்! சகலபாபத்தையும் போக்கும்படியான கண்ணுவசாகையி லுள்ள கங்காநதியான தியானத்தை நாரதரே கேட்பீராக என்று கூறுகின்றார்.

(தியானம்) வெண்டாமரைபோல் நிறமுள்ளவளாகவும், பாபங்களை நசிப்பிக்கின்றவளாகவும், கிருஷ்ணருடைய சரீரத்தில் தோன்றி அவருக்குச் சமானமானவளாகவும், பதிவிரதையாகவும்,

வன்னிசுத்தமான வஸ்திரங்களாலும் ரத்ன பூஷணங்களாலும் அல ங்கரிக்கப் பட்டவளாகவும், நூறுசரத்கால சந்திரனைப்போல் பிர காசிக்கின்றவளாகவும், புன்சிரிப் புள்ளவளாகவும், எப்போதும்விள ங்கும் யௌவன முள்ளவளாகவும், நாராயணருடைய பிரியமு ள்ளவளாகவும், சாந்தையாகவும், சௌபாக்யத்தொடு கூடினவளா கவும், மாலதி புஷ்பமுள்ள கூந்தலுள்ளவளாகவும், சிந்தூரப்பொ ட்டினால் மனோகரையாகவும், சந்தனப்பொட்டோடு கூடியிருக் கிற நானாவிதமான கஸ்தூரிப்பொட்டை நெற்றியிலணிந்தவளாக வும், பக்குவமாய்ப்பழுத்த கோவைக்கனிபோன்ற அதரமுடையவ ளாகவும், முத்து வரிசைபோன்ற பல்வரிசையினால் பிரகாசிக்கின்ற முகமுள்ளவளாகவும், கடாக்ஷத்தோடு கூடின மனோகரமான நேத் ரமுள்ளவளாகவும், கடினமாயும் பில்வப்பழம்போன்ற ஸ்தனங்களு ள்ளவளாகவும், மென்மையான இடையுள்ளவளாகவும், வாழைமரத் தை நிந்திக்கிற தொடையுள்ளவளாகவும், பாதுகையோடு கூடிய தா மரைமலர் போன்ற திருவடியுள்ளவளாகவும், குங்குமப்பூச்சும் மரு தாணிப்பற்றும் உடையவளாகவும், இந்திரன்முடியிலுள்ள மந்தார புஷ்பத்தினுடைய ரசத்தினால் செவந்தபாத முள்ளவளாகவும், தேவர்களாலும் முனிவர்களாலும் சித்தர்களாலும் கொடுக்கப்படும் அர்க்கியத்தை ஏற்பவளாகவும், தபஸ்விகளுடைய சிரசாகிறவண்டுக் கூட்டங்களோடு கூடினவளாகவும், முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத் தையும் காமிகளுக்கு சர்வசுகத்தையும் பக்தர்களுக்கு அநுக்கிரகத் துடன் வரத்தையும் கொடுப்பதில் சிறந்தவளாகவும், விஷ்ணுபத (வியாபகஸ்தான) த்தில் தோன்றினவளாகவும் விஷ்ணுபதியென் னும் பெயருள்ளவளாகவும் இருக்கின்ற கங்காதேவியை நமஸ்கரி க்கின்றேன்.

இந்தத்தியானத்தினால் கங்காதேவியைத்தியானித்து ஆசனம் பாத்யம் அர்க்கியம் ஸ்நாநீயம் அநுலேபனம் தூபம் தீபம் நைவேத் தியம் தாம்பூலம் சீதளசலம் வஸ்திரம் பூஷணம் மால்யம் கந்தம் ஆசமனீயம் அழகாயும் மிருதுவாயுமுள்ள படுக்கை ஆகிய பதினாறு உபசாரங்களைச் செய்தபின்பு தோத்திரமும் நமஸ்காரமும் செய் தல்வேண்டும்.

(தோத்திரம்)பாபத்தைநசித்துப் புண்ணியத்தை விருத்திசெய்ய வல்ல சிவபிரானுடைய சங்கீதத்தில் மோகமடைந்தவளாயும், கிரு

ஷ்ணமூர்த்தியினுடைய அங்கத்திலும், ராதாதேவியினது சரீரத்தி லும் சலரூபமாகப் பிறந்தவளாயும் இருக்கின்ற கங்காதேவிக்கு நமஸ்காரம். ராதாதேவியிடமிருந்து எந்தத்தேவியினது ஜனனம் சிருட்டிக்கப்பட்டு ராசாமண்டலத்திலும் சிவசங்கர சந்நிதானத்தி லும் பூலோகத்திலும் உண்டாயிருக்கிறதோ அந்த கங்காதேவியை நமஸ்கரிக்கிறேன். கோபாலர்களாலும் கோபிகா ஸ்திரீகளா லும் செய்யப்பட்ட சுபமான ராதாமகோத்ஸவ தினமாகிய கார்த் திகை பௌர்ணமியில் எந்தத்தேவி உற்பத்தியானளோ அந்த கங்காதேவிக்கு நமஸ்காரம். கோடியோஜனைவிஸ்தாரமும் கோடி யோசனை ஆழமும் லக்ஷம்கோடியோஜனை நீளமுமுள்ளவளாய் கோ லோகத்தைச் சூழ்ந்துகொண்டிருக்கிற கங்காதேவிக்கு நமஸ்காரம். அறுபதுலக்ஷம் யோசனை அகலமும் அதற்கு நான்குபங் கதிகங் கொண்ட நீளமுமாக எந்தத்தேவி வைகுண்டத்தில் நிறைந்திருக் கின்றனளோ அந்தகங்காதேவிக்கு நமஸ்காரம். முப்பதுலக்ஷம்யோ சனைவிஸ்தாரமும் அதற்குஐந்துகொண்ட நீளமுமுள்ளவளாகஎந் தத்தேவி பிரமனுலகிலிருக்கின்றாளோ * * * முப்பதுலக்ஷம் யோ ஜனை அகலமும் அதற்குநான்கு கொண்ட நீளமுமுள்ளவளாக சிவ லோகத்தில் * * * லக்ஷம்யோஜனை அகலமும் அதற்கேழுகொண்ட நீளமுமாக துருவமண்டலத்தில் எந்தத்தேவி * * * லக்ஷம்யோஜனை அகலமும் அதற் கைந்துகொண்டநீளமுமாக சந்திரமண்டலத்தில் * * * அறுபதினாயிரம்யோஜனை அகலமும் அதற்குப் பத்துகொ ண்டநீளமுமாக சூர்யமண்டலத்தில் * * * லக்ஷம் யோஜனை அகல மும் அதற்குஐந்து கொண்டநீளமுமாகத்தபோலோகத்தில் * * * ஆயிரம் யோஜனை அகலமும் அதற்குப் பத்துகொண்ட நீளமுமாக சனர்லோகத்தில் * * * பத்துலக்ஷம் யோசனை அகலமும் ஐம்பது லக்ஷம் யோசனை நீளமுமாக மகர்லோகத்தில் * * * ஆயிரம்யோ ஜனை அகலமும் லக்ஷம்யோஜனை நீளமுமாக கைலாயத்தில் * * * நூறுயோஜனை அகலமும் ஆயிரம்யோஜனை நீளமுமாக மந்தாகினி என்னும் பெயருடன் இந்திரலோகத்தில் * * * பத்துயோஜனை அகலமும் நூறுயோஜனை நீளமுமாக போகவதிஎன்னும் பெய ரோடு பாதாளத்தில் * * * இரண்டுமையில் அகலமும் அதற்குக் குறைவாயும் அளகநந்தை என்னும் பெயரோடு பூமியில் கிருதயுக த்தில் பால்போலும், திரேதாயுகத்தில் சந்திரன்போலும் துவாபரத்

அ

தில் சந்தனம்போலும், கலியில் சலம்போலும் * * * சுவர்க்கத்தில் எப்போதும் பால்நிறம்போலும் * * * எதன் திவலைபட்ட மாத்திரத்தில் பாபிகளுடைய பிரமஹத்தியாதி பாவங்கள் நீங்கிக்கியானசம்பத்துண்டாகிறதோ அந்த கங்காதேவிக்கு நமஸ்காரம்.

இவ்வாறு பாபத்தைப் போக்கிப் புண்ணியத்தை யுண்டாக்குவதான கங்கையின் தோத்திரசம்பந்தமான இருபத்தொரு சுலோகங்கள் சொல்லப்பட்டன. இதனை எவனொருவன் சுரேஸ்வரியைப் பக்தியோடு பூஜித்துத் துதிக்கின்றானோ அவன் பிரதிதினம் அஸ்வமேதபலனை யடைகிறானென்பதில் சந்தேகமில்லை. மனைவி புத்திரன் கீர்த்தி இவையில்லாதவன் அவ்வவற்றையும் அடைந்து கங்காஸ்நானபலனையும் அடைகிறான். ரோகி அரோகியாகின்றான். பந்திக்கப்படுகிறவன் கட்டினின்றும் விடுபடுகின்றான். மூர்க்கன் பண்டிதனாகின்றான். துற்சொற்பனமெல்லாம் சுபமாய்விடும். பகீரதன் இந்தத் தோத்திரத்தினால் கங்கையைச் சகரபுத்திரா ளிறந்தவிடத்துக்குக் கொண்டுபோயினாள் அவர்கள்மீது அந்த காங்காதீர்த்தக் காற்று பட்டமாத்திரத்தில் பரமபதமடைந்தனர்.

பகீரதனால் கொண்டுவரப்பட்டமையால் பாகீரதியென்று பெயர்பெற்றது. இவ்வாறு புண்ணியத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கின்ற கங்கையின் உபாக்யானம் சொல்லப்பட்டது. மறுபடி என்னகேட்க விரும்புகின்றனை என்று வினவ நாரதர் உலகைப் பரிசுத்தஞ்செய்கிற கங்கை எங்கு எக்காரணத்தால் எப்படி திரிபதகை என்று பெயர்பெற்றனள்? அவ்விடமிருப்பவர் யாவர்? அவர்கள் என்னசெய்தார்கள்? எனக்கு இவற்றை விஸ்தாரமாகச்சொல்லவேண்டுமென்று வினவ நாராயணர் கூறுகின்றார்:—

கார்த்திகை பௌர்ணமியில் ராதைக்கு மஹோத்ஸவம் நடந்தது. அப்போது கிருஷ்ணன் அவளைப்பூசிக்க பிரமாமுதலானவர்களும் சவுனகாதிருஷிகளும் ஆராதித்து சந்தோஷமடைந்திருந்தனர். அவ்வாறிருக்கும் காலத்தில் கிருஷ்ணனால் கட்டளையிடப்பட்ட சரஸ்வதி சுந்தரதாளத்தோடு வீணையினால் மனோகரமாகப் பாடினாள். பிரமன் சந்தோஷமடைந்து சிரேஷ்டமான ரத்னஹாரத்தையும், ருத்திரமூர்த்தி துர்லபமான மணியையும், கிருஷ்ணன் கவுஸ்துவ மணியையும், ராதை விலையில்லாத ரத்னஹாரத்தையும்

நாராயணர் மனோகரமான மாலையையும்,லக்ஷ்மி விலையில்லாத ரத்னகாதோலையையும், விஷ்ணு மாயையும் துர்க்கையும் நாராயணியும் மூலப்பிரகிருதியும் பகவதியும் ஈசானியமானவர்கள் பிரமபக்தியையும் தர்ம புத்தியையும், யமன் கீர்த்தியையும்,வன்னி வன்னிசுத்தமான வஸ்திரத்தையும் வாயு மணிநூபுரங்களையும் கொடுத்தார்கள்.

இவ்வாறிருக்கப் பிரமாவினால் பிரார்த்திக்கப்பட்ட உருத்திரமூர்த்தியானவர் ராதோல்லாசத்தோடு கூடின சங்கீதத்தைப்பாட சகலதேவர்களும் சித்திரம்போல் மூர்ச்சித்து வருத்தப்பட்டு தெளிந்து எங்கும்சலமயமாகவும் கிருஷ்ணனும் ராதாவும் இல்லாமையாகவும் இருப்பதைக் கண்டனர். எல்லாக்கோபர்களும் கோபிகளும் தேவர்களும் அழுதனர். ராதா கிருஷ்ணன் சலமாய்விட்டார்களென்று பிரமன் தியானத்தினலறிந்தனன். பிறகு பிரமன் முதலிய தேவர்களெல்லாம் பரமேஸ்வரனைக்குறித்து உம்முடைய திருவுருவை காட்டும். அதுவன்றோ நாங்கள் விரும்புவதென்று சொல்லும்பொழுது மதுரமாயும் தெளிவாயும் யாவரும்கேட்கும்படி அசரீரி கூறுகின்றது."நான் சர்வாத்மாவாயுள்ளவன்.இந்தச்சக்திபக்தானுக்கிரககாரணமான சரீரமுள்ளவள். எங்களிருவருடையசரீரங்களால் உங்களுக் காகவேண்டியவை யாவை? மநுக்களும் மாநுடர்களும் முனிவர்களும் வைணவர்களும் எங்களுடைய மந்திரோச்சாரணையால் பரிசுத்தமெய்தி எங்களது பதத்தையடைவர். எங்களைப் பார்க்க விரும்புவீர்களாயின் சம்புவானவர் தேவசபையில் விஷ்ணுமாயையோடுகூடி எல்லாப்பலனையும் கொடுக்கவல்ல அபூர்வமான மந்திரங்களையும், தோத்திரங்களையும், தியானசுலோகங்களையும், பூஜாவிதிக்கிரமங்களையும், கவசங்களையும், உத்தமசாஸ்திரங்களையும், வேதாங்கங்களையும், வேதசாரத்தையும், சிருட்டித்து குருவாயிருந்து காப்பாற்றுகின்றேனென்று திடமானபிரதிக்ஞை செய்வாராஞல் உங்களெண்ணம் நிறைவேறும். எவர்கள் பக்தியில்லாதவர்களோ அவர்கள் என்விஷயமான தோத்திராதிகளைச்செய்யார். அவைகளை அநுட்டித்து உபாசிப்பவர் நூற்றிலொருவர்,ஆயிரத்திலொருவரேயாம். என்மந்திரத்தினல் பரிசுத்தமானவர் என்னுடைய லோகத்தை அடைவர். கோலோகத்தில் வசிப்பவரெல்லாம் மந்திர உபாசனைகளால் வந்தவரேயன்றி வேறல்லர். இம் மந்திரோபாசனை யில்லாவிட்டால் பிரமாண்டமெல்லாம் பிரயோஜனமற்றதாகும். சிருட்டி

தோறும் மானுடர்களை ஐந்துவிதமாகச்சிருட்டித்து சிலரைச்சுவர்க்கத்திலும்,சிலரைப் பூமியிலும், வசிக்கச்செய்வாய்." என்றுகூறியது.

அதனைக்கேட்ட பிரமன் ஈஸ்வரரிடஞ்சொல்ல ஞானேசனுகிய சிவபெருமான் கேட்டு எவன் கங்காசலத்தைக் கையிலெடுத்துப் பொய் சொல்லுகின்றனே அவன் பிரமாவுக்கு வயது எவ்வளவோ அவ்வளவுகாலம் காலசூத்திர நரகையடைவன் என்று கங்காசலத்தைக் கையிலெடுத்து அசரீரி கூறியவண்ணம் பிரதிக்ஞை செய்ய கிருஷ்ணமூர்த்தி ராதையோடும் ஆவிர்ப்பவித்தனர். அவரைத் தேவர்கள்பார்த்துப் பரமானந்தமெய்தி மீண்டும் உற்சவஞ் செய்தனர். பின்னர் சம்புவானவர் ரகசியமானதாயும் துர்லபமானதாயு முள்ள முத்திதீபமென்னும் நூலொன்றியற்றினர்.

சலரூபமாய் கோலோகத்தில் வசிக்கிறவளாயும் ராதாகிருஷ்ணர்களிடம் பிறந்தவளாயும் புக்திமுக்தியைக் கொடுக்கின்றவளாயும் கிருஷ்ணசொரூபிணியாயுமுள்ள அந்தகங்கை பரமாத்மாவினுல் அங்கங்குந் தாபிக்கப்பட்டு பிரமாண்டத்தில் எங்கும் பூஜிக்கப்படுகின்றுள் என்றனர். (சு - ம் எசு)

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காலஹந்திரைநமஃ

## பதின்மூன்றும் அத்தியாயம்.

## கங்கா வைகுண்ட கமனம்.

---

நாரதர், ஓ சுரேஸ்வரரே! ஐயாயிரவருடம் கலியில்கழியும்போது அந்தகங்கை எவ்விடத்திற்குப்போனுள்? அதை எனக்குச் சொல்லவேண்டுமென்று வினவ, நாராயணர் சரஸ்வதிசாபத்தினுல் பாரதவருஷத்தையடைந்த கங்கை, சாபமுடிவில் வைகுண்டத்தையடைந்தனள். அவ்வாறே சரஸ்வதியும் பத்மாவதியும் வைகுண்டமடைந்தனர். விஷ்ணுவுக்கு கங்கை சரஸ்வதி இலக்குமி துளசி என்று நான்குமனைவிகள் என்றனர். நாரதர் எக்காரணத்தினுல்

அந்த கங்காதேவி விஷ்ணுபாதத்தி லுண்டானவளென்றும், பிரமன் கமண்டலத்தி லுண்டானவளென்றும், சிவபெருமானுக்குப் பிரியமானவளென்றும், நாராயணனுக்குப் பிரியமானவளென்றும், சொல்லப்படுகிறாள் என்றுவினவ நாராயணர் கூறுகின்றார்:—

முன்காலத்தில் கோலோகத்தில் ராதாகிருஷ்ணருடைய சரீரத்திலிருந்து சலரூபமாகவுண்டான கங்கை ரதாகிருஷ்ணும்சமாயும், ஜலத்துக் கதிதேவதையாயும் எவ்விதத்தும் உவமை சொல்லுவதற்கரிய சர்வாங்க சுந்தரமுடையவளாயும் காமத்தோடு கூடினவளாயும் கிருஷ்ணனுடைய சமீபத்தில்வந்து நாணமுடையவளாய் வஸ்திரத்தினுல் முகத்தைமறைத்துக்கொண்டு கண்களால் அவரது முகத்தை இமைகொட்டாமல் பார்த்து அவரது சௌந்தரிய விசேடத்தினுல் மயங்கி மோகங்கொண்டு புணர்ச்சியி லாவலுள்ளவளாய் ரோமங்கள் சிலிர்சிலுக்க மூர்ச்சித்தனள். அச்சமயத்தில் அங்கு ராதிகாதேவி, சண்பகமலர்போன்ற மேனியும் யானைநடைபோன்ற நடையும் உடைவளாய் விலையில்லாத ரத்னங்களா லிழைக்கப்பட்ட நானுவிதபூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாய் இரண்டுபீதாம்பரங்களை இணைத்துத்தரித்தவளாய் சிந்தூரம் சந்தனம் கஸ்தூரிகளால் இடப்பட்ட மூன்றுபொட்டுடையவளாய் பரிமள மிக்க பாரிஜாதமலர்நிறைந்த கூந்தலுடையவளாய் கோடிசந்திரர் ஏககாலத்தில் தோன்றினுற்போல் தோன்றி, மென்மையும் சிகப்பும்வாய்ந்துகிருஷ்ணமூர்த்தியினுல் கொடுக்கப்படும் அர்க்கியசலத்தை ஏற்றுமுள்ள பாதாம்புஜங்களை அடிக்கடி பையப்பையவைத்து, சிறந்த ரத்ன விமானத்தினின்றும் இறங்கி,ருஷிகளும் ஸ்திரீகளும் இருபக்கத்தும் சாமரைவீசவும்,முப்பதுகோடி கோபிகாஸ்திரீகள் சூழ்ந்துவரவும், கோபத்தோடு கண்சிவந்து உதடுதுடிக்க கிருஷ்ணமூர்த்தியினுடைய சமீபத்தி லிருக்கின்ற சிங்காதனத்தில் வீற்றிருந்தனள். அத்தேவியைக் கிருஷ்ணன்பார்த்து சடுதியில் எழுந்து இனியவார்த்தைகளால் இனிப்புண்டாகப்பேசிப் புன்சிரிப்போடும் புகழ்ந்துகொண்டிருக்க, அங்கிருந்த கோபிகளும் மிகவும்பயந்து வணங்கிய கழுத்துடன் பக்தியோடு துதித்தனர். கங்கையானவள் சீக்கிரமா யெழுந்து குசலப்ரஶ்னஞ்செய்து தாழ்ந்த இடத்தில் நின்று பயந்தவளாய் உலர்ந்தநெஞ்சும் தாடையும் உதடுமுள்ளவளாய் கிருஷ்ணனுடைய பாதத்தில் தியானத்துடன் சரணமடைந்து துதித்தாள். கிரு

ஷ்ணமூர்த்தி அவளுக்கு அபயங்கொடுக்க நிம்மதியான மனமுடையவளாயினள்.

பிறகு கோபத்துடனிருக்கும் ராதேஸ்வரியை இமைகொட்டாது கங்கைபார்த்து மனவாட்டத்தோடு நிற்க,ராதை சாந்தையாய்ப்புன்சிரிப்புடன் ஜகதீசனைப்பார்த்து ஓ ஜகதீசனே! உன் முககமலத்தையும் உன்னழகையும் புன்சிரிப்போடு கண்டு மூர்ச்சையடைந்து வஸ்திரத்தினால் முகத்தை மறைத்துக்கொண்டு உன்னை அடிக்கடி பார்க்கும் இவள்யார்? நீரும் அவளைப் பார்த்துக் காமுகராய்ப் புன்சிரிப்புட னிருக்கின்றீர். நானிருக்கும் போதே இப்படிப்பட்ட துர்நடத்தையை அடிக்கடி செய்து வருகின்றீர். நான் உம்மிடம் வைத்த பிரீதியினால் பொறுமை யடைகிறேன். ஸ்திரீசாதிகள் இளகிய மனமுடையவரென்றும், அல்பத்துக்கெல்லாம் ஆசைப்படுகின்றவர்களென்றும் சொல்வது மெய்யே. ஓ பிரபுவே! இனி நீர் மோகித்திருக்கும் மனைவியை அழைத்துக்கொண்டு இக்கோலோகத்தை விட்டுப் போகாதிருப்பீராயின் உமக்கு நன்மையுண்டாகாது. நீர் முன்னர் சந்தனவனத்தில் விரஜையோடு கூடியிருக்கும் போது நான் பார்த்தேன். அப்போது தோழிகளுடைய வசனத்தால் பொறுமையடைந்திருக்க என்வரவையறிந்து மறைந்து விட்டீர்.

அந்த விரஜையோ கோடியோசனை விசாலமும் நான்குகோடியோசனை நீளமுமுள்ள நதிரூபமாய் விட்டாள். அவளும் இப்போது இங்கு வந்திருக்கிறாள். நான் அந்தப்புரத்துக்குப் போம்போது நீர் விரஜை விரஜை யென்று கூச்சலிட்டுக் கொண்டு அழுதீர். அவ்விரஜை சலரூபத்தைவிட்டு அலங்காரத்தோடு கூடினவளாய்உன்னிடம் வர நீர் கூடிக்கலந்தீர். ஓர்கால் சண்பகவனத்தில் சோபையென்னும் கோபியோடு கூடினீர். அப்போதும் நான் காண என் சப்தத்தைக் கேட்டு மறைந்துவிட்டீர். அவள் சந்திர மண்டலத்தை யடைந்து சந்திரகாந்தியாய் விட்டாள். நீர்மனவருத்தமுற்று அவளிடத்தில் வைத்த ஆசையால் அவளுடைய காந்தியை வேறு வேறாகப் பிரித்து ரத்தினம் பொன் மணி ஸ்திரீகளுடைய முகம் அரசன் தளிர் பத்திரம் புஷ்பம் பழம் பயிர் ராஜகிருகம் தேவகிருகம் கோட்டை முதலியவற்றிற் கலந்திருக்கும்படிச் செய்து அவைகளைக்கண்டு மகிழ்ந்தீர். ஓர்காலத்தில் பிருந்தாவனத்தில் பிரபையென்னும் கோபியோடு கூடியிருந்தீர். அப்போதும் பார்த்தேன். நீர் என்வரவையறி

ந்து நீர் மறைந்து விட்டீர். அவள் சூரியமண்டலம்போய் தேஜோ ரூபமாய்விட்டாள். அப்போதும் நீர் அவளுடைய தேஜஸைக் கண் ணிடத்திலும் அக்கினி யிடத்திலும் யக்ஷர் கிம்புருடர் புருஷ சிரேஷ்டர்கள் வைணவர்கள் சர்ப்பங்கள் பிராமணர்கள் முனிவர் கள் தபஸ்விகள் சௌந்தர்யமுள்ள ஸ்திரீகள் கீர்த்தியுள்ளவர்கள் இவர்களிடத்திலும் கலந்திருக்கும்படிச் செய்தும் பார்த்தும் ஆசை யடங்காது வருத்தப்பட்டீர். ஓர்காலத்தில் ராசாமண்டலத்தில் வசந்த காலத்தில் ரத்னகிருகத்தில் சாந்தியென்னும் கோபிகைக்கு ரத்ன தீபங்களோடு கூடிய புஷ்பப்படுக்கையில் நீர் சந்தனம் ரத்னா பரணமுதலியவற்றை கொடுக்கவும், அவள் உமக்குத் தாம்பூலமுங் கொடுக்கத்தரித்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில் நான்வர என்சப்த த்தைக்கேட்டுமறைந்தீர். அவள் உன்னிடம்மறைந்துசத்குணசொரூ பியாயினள். நீர் வருத்தத்தோடு அவளை ஆரண்யம் இலக்ஷ்மி இய மன் மந்திரோபாசனை செய்கின்றவர்கள் தபஸ்விகள் தர்மிஷ்டர் கள் இவர்களிடத்துச்சிறிது சிறிதாய் வசிக்கும்படிச்செய்தீர். ஓர்கா லத்தில் க்ஷமை யென்னும் கோபியுடனிருந்தீர். அதையும் நான் காண நீர் என்வரவையறிந்து அந்தப்புரத்திற் சென்று அவளோடு கூட சந்தனப் பூச்சுகளாலும் புஷ்பத்தினாலும் அலங்கரிக்கப்பட்ட படுக்கையில் மெய்மறந்து இருவருக்கும் உண்டாகிய புதிய சங்கம த்தினால் தூங்கி விட்டீர்கள். நான் உங்களிருவரையும் எழுப்பி னேன். அதனை மறந்திருப்பீர்;எண்ணிப்பாரும். எழுந்தபின்னர் நீர் அணிந்திருந்த பீதாம்பரம் முரளிவனமாலை கவுஸ்துவமணி இரத் னகுண்டலம் இவையெல்லாம் பிடுங்கிக்கொண்டேன். தோழியினு டைய வார்த்தையினால் மீண்டும் கொடுத்து விட்டேன். அப்பொ ழுது நீர் மிகவும் பயந்து கிருஷ்ணவர்ணத்தையடைந்து வெட்கத் துடன் ஒதுங்கினீர். க்ஷமையும் தேகத்தைவிட்டு பூமியோடு கல ந்து சிறந்தகுண முடையவளானாள். நீர் அழுதுகொண்டே விஷ்ணு வைணவர் தார்மிகர்கள் தருமம் துர்ப்பலர் தபஸ்விகள் தேவர்கள் பண்டிதர் இவர்களுக்கும் பிரித்துக்கொடுத்தீர். உம் முடைய குணத்தையும் செய்கையையும் நானறிவேன் என்று சொ ல்லிவெட்கத்தோடு தலைவணங்கியிருக்கும் கங்கையைப்பார்த்தனள். அதையறிந்த கங்கையானவள் சலத்தில்மறைந்தனள். ராதை அந்நீரைப்பானஞ்செய்து கொப்பளிக்கயத்தனித்தாள். கங்கை கிரு

ஷ்ணன்பாதத்தைச் சரணமடைந்துமறைந்தனள். ராதை அக்கங்கையைக்காணுமல் எங்குந்தேட சலாதாரமுள்ள இடமெல்லாம் சலமின்றியும் சலசெந்துக்கள் இறந்திருப்பதையும் பார்த்தனள். திரிமூர்த்திகள் முதலிய தேவர்களும் ஆதிசேடன் முதலிய நாக லோகவாசிகளும் மநுக்கள் முநிவர்முதலிய பூலோகவாசிகளும் நெஞ்சுலர்ந்தவர்களாய் கோலோகமடைந்து பிரகிருதிபரமாயும் ராதையின் வக்ஷஸ்தலத்திலிருக்கிறவருமான பகவானை நமஸ்கரித்துத் துதித்து ஒருவரையொருவர் பார்த்து யாவரும் பிரமனைநோக்கி நமது அபிப்பிராயத்தைப்பிரபுவுக்குத்தெரிவித்திராவென்றுசொல்ல பிரமன் திருமால் உருத்திரருடன் பகவானைச் சமீபித்துப்பார்க்க, அவர் அநேகராகத்தெரிய மதிமயங்கி இவருள் எவர்சேவிக்கத்தக்கவர். எவர்சேவகர் என்று நிரூபிக்கச் சக்தியற்றவரு யிருக்கும் அப்பொழுதே ஒருக்ஷணகாலம் தேஜோமயமாயும், ஒருக்ஷணகாலம் உருவமுள்ளவராயும், ஒருக்ஷணம் ராதையோடும், ஒருக்ஷணம் தனித்தும், ஒருக்ஷணம் ராதாரூபத்தைத் தான்தரித்தும், தன்னுருவத்தை ராதைதரித்தும், இருக்கக்கண்டு அந்தப்பகவான் இந்தப் புருஷரூபமா இந்தஸ்திரீவுருவமா என்றுதியானிக்கவும் சக்தியற்று, ஞானதிருஷ்டியினுல் ஹ்ருதயகமலத்தி லிருக்கிற கிருஷ்ணனைத் தியானித்துப்பக்தியோடுதுதித்தனர். அப்போதுராதையின்வக்ஷஸ்தலத்திலிருக்கிற கிருஷ்ணர் தெரிசனமாயினர். அவர் பிரமன் முதலியோரது அபிப்பிராயத்தையறிந்து நீங்களனைவரும் சுகமா? உங்கட்கு அடிக்கடி சுபமுண்டாகுகவென் றாசீர்வதித்து ராதையினுடைய பயத்தால் என்பாதத்தில் மறைந்திருக்கிற கங்கைவெளிப்படின் அவளை வாயிலுண்டுமிழ ராதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாள். அவளை உங்களிடம் கொடுத்துவிடுகிறேன். அவளைப்பயமில்லாமல் இருக்கச்செய்யுங்க ளென்றனர். அவ்வார்த்தையைக் கேட்ட பிரமன் ராதாதேவியை நோக்கி வேதவாக்கியங்களால் துதித்து கங்கை ராசமண்டலத்தில் உங்களிருவரிடமிருந்து தோன்றினவளல்லவா? முன் உருத்திரர் பாடியவீணுஸ்வரத்தால் மெய்மறந்து போனபோது உங்களிடத்திில்சலரூபமாக வெளிப்பட்டவளல்லவா? ஆகையால் இவள் கிருஷ்ணருடைய அம்சமாயிருக்கின்ற உன் பெண்ணல்லவா? இந்த கங்கை எந்தெந்தலோகத்தில் எந்தெந்த பெயருட னிருப்பினும் உன்பெண்ணேயாம். ஆகையால் அவள்

உனதுமந்திரத்தைக் கிரகித்துப் பூசிக்கக்கடவள் என்றுகூற, ராதை புன்சிரிப்புடன் சமாதானமடைந்தனள். உடனே கங்கை கிருஷ்ண மூர்த்தியினுடைய காலின்சுட்டைவிரலி லிருந்து வெளிவந்தனள். பிரமன் அந்தகங்காசலத்தில் சிறிது எடுத்து தன் கமண்டலத்தில் அடைத்துக்கொண்டு. ராதிகாதேவியினது மந்திர பூஜா ஸ்தோத் திர கவசாதிகளையும் சாமவேதத்தில் கூறப்பட்டுள்ள புரச்சர்யாதி களையும் உபதேசிக்க, அவைகளை கங்கை அநுஷ்டித்து விஷ்ணு லோகமடைந்தனள். ஆதலால் இலக்குமி சரஸ்வதி கங்கை துளசி இந்த நால்வரும் விஷ்ணுபத்தினிகள்.

ஓ பிரமனே! இப்பொழுது சலப்பிரளயகாலம். தேவர் முனிவர் முதலான யாவரும் என்னைக்காண இங்குவந்திருக்கின்றபடியால் அழியாதிருக்கின்றனர். எத்தனையோ பிரஹ்மவிஷ்ணுக்கள் என்னி டத்தில் இலயத்தை யடைந்திருக்கின்றனர். நானேபிரமனைப்பிர பஞ்சங்களைச் சிருட்டித்திருக்கிறேன். இங்கு பிரளயகாலங்கள் என்றுசொல்லப்படுவதாகிய காலக்கிரமங்கள் கிடையாது. இன்னும் அனேகப்பிரளயங்கள் வரப்போகின்றன. இனி நீ எல்லாவுலகங் களையும் சிருட்டிசெய்யக்கடவாய். கங்கை உன்னிடம் நான்சொன் னபடியே வருவாள். என்றனர். (சு - ம். கஙசு)

பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காமேஸ்வரியைநமஃ

## பதினான்காம் அத்தியாயம்.

### * கங்காவிஷ்ணுவோஸ் ஸம்பந்த காரணம்.

---

நாரதர், கங்கை வைகுண்டம் போனளென்று கூறினீரே யல் லாமல் மனைவியான விஷயத்தைக் கூறினீரல்லை என்று நாராயண ரைக்கேட்க, அவர் கூறுகின்றார்.

ஓ நாரதரே! கங்கை வைகுண்டம் போனபோது பிரமனும் அங்கு சென்று வைகுண்டநாதரை நமஸ்கரித்து, இதோ வந்தி

* கங்கைக்கும் விஷ்ணுவுக்கும் சம்பந்தகாரணங் கூறல்.

ருக்கின்ற கங்காதேவியைப் பார்த்திரா! என்று அவளைப்பற்றி கோலோகத்தில் நடந்தவைகளை விரிவாகக்கூறி இவள் மிகவும் ரசிகமுடையவள். நீரும் எங்களிலுஞ்சிறந்த ரசக்ஞர். ஆகையால் இவளை அழைத்துவந்தேன். காந்தர்வ விவாகத்தினுல் மனைவியாகக் கொள்ளவேண்டும். இவள் உமக்கு வலிதிற் கிடைத்தவள். தானே கிடைத்த கன்னிகையை ஒருவன் கொள்ளாமற் போவானாயின் அவனிடம் இலக்குமி கோபங்கொண்டு நீங்குவாள். ஏனெனில் எல்லாஸ்திரீகளும் பிரகிருதியின் கலாம்சங்களாதலால் பண்டிதனாயுள்ளவன் அவமானஞ் செய்யான். ஆகையால் இவளை எவ்விதத்தும் தள்ளக்கூடாதென்று கூற அவர் காந்தர்வவிவாகத்தால் அவள்கையைப்பிடித்துக் கொண்டு சந்தோஷத்துடன் கிரீடித்தனர்.

அதனைக்கண்ட சரஸ்வதிதேவி துக்கமடைந்தும் இலக்குமியினுல் தூண்டப்பட்டும் நாடோறும் பொறுமைகொண்டும் சாபத்துக்கிடஞ்செய்து கொண்டனர் என்றனர். நாரதர் துளசியோடு நான்கு பத்தினிகளென்றீரே அவள் வரலாற்றைக் கூறவேண்டுமென்றனர். (சு - ம் - உ௩.)

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காமிதார்த்தாயைநமஃ

## பதினைந்தாம் அத்தியாயம்.

## * பிரஹ்மாதிகளும் வைகுண்ட கமனுதி.

---

நாராயணர் கூறுகின்றார்:—தக்ஷஸாவர்ணி என்னும் மநு விஷ்ணுபக்தனும் அவருடைய அம்சபூதனுமிருந்தான். அவன் புத்திரன் பிரமஸாவர்ணி, அவன்மகன் தர்மசாவர்ணி, அவன்மகன் உருத்திர ஸாவர்ணி, அவன்மகன் தேவசாவர்ணி, அவன்மகன் இந்திரசாவர்ணி, அவன்மகன் விருஷபத் துவஜன். சிவபெருமானிடம் பக்தியுள்ளவன். இவனுக்கு முற்பட்டவர்கள் விஷ்ணுபக்தர்கள். மூன்றுதேவயுகம் இவனது ஆச்சிரமத்தில் சிவபெருமான் வசித்திருந்தனர். இவனிடம் சிவபெருமானுர் மிக்கபிரியமுள்ளவர். இவன்

* பிரமன் முதலானவர்கள் வைகுண்டமடைதல் முதலானவை.

நாராயணன் இலக்குமி தேவி சரஸ்வதி தேவி முதலானவர்களை மனத்திலும் நினைத்தவனல்லன். தன்னுடைய ஆஞைதயில் சகல தேவர்களுடையபூஜைகளையும் நிறுத்திவிட்டான். புரட்டாசிமாதத் தில் வரும் மகாலக்ஷ்மியின் பூஜையையும் மாகமாதத்தில்வரும் சரஸ்வதிபூஜையையும் விஷ்ணுபூஜையையும் யக்ஞத்தையும் ஒரு பொருளாக மதிக்காமலும் செய்யாமலும் இருந்தான். சூரியன் அவனிடத்தில் கோபமுடையவனுப் சிவபெருமான் அவனுக்குக் காரணமாயிருக்கின்ருரென்பதையும் எண்ணுமல் சம்பத்தில்லாத வனுகக் கடவதென்று சபித்தனன்.

அதுகண்டபகவானுகிய சங்கரர்சூரியனைச்சூலாயுதத்தால்துறந்த அவன் பிரமலோகமடைந்து பிரமன்முதலானவர்களோடு வைகுண் டஞ்சென்று நாராயணரைச் சரணடைந்து துதித்துத்தாங்கள்வந்த காரணத்தைக் கூற, அவர் அபயந்தந்து இனிச்சங்கரரால் பயமுண் டாகாது. அந்தப்பகவான் சர்வேஸ்வரர். பக்தர்களுக்குச் சுவா தீனமாயிருக்கின்றவர், பக்தர்களுக்கு ஆத்மாவாயிருக்கின்றவர். பக் தப்பிரியர், எனக்குப்பிராணனைக்காட்டிலும் பிரியமானவர், பிரமாண் டத்தில் அவரைக்காட்டிலும் தேஜஸ்விகிடையாது. அந்தமகாதே வர் லீலையாகவே கோடிசூரியரையும் கோடிபிரமரையும் சிருட்டிக்க வல்லமையுள்ளவர். அவருக்கு அசாத்தியமானகாரியம் உலகத்தில் ஒன்றுங் கிடையாது. நான்அவருடையகல்யாணகுணத்தைச்சிந்தித் துக்கொண் டிருக்கிறேன். சிவன் மங்களத்துக்கு அதிஷ்டானமா யிருக்கிறபடியால் சிவனென்று கூறுகின்ருர்கள். என்று சொல்லும் பொழுது சூலஹஸ்தராய்ஈஸ்வரர் விருஷபத்தினின்றுமிறங்கி அங் குள்ள சுகாசனத்தில் வீற்றிருந்து யாவராலும் பூஜிக்கப்பட்டிருந் தனர். அவரை விஷ்ணுமூர்த்தி தேவரீர் கோபத்தோடும் இங்கு வந்தகாரணம் யாதோஎன்றனர். சங்கரர் என்பக்தனுகிய விருஷ பத்துவஜனைச் சூரியன் சபித்தான், அவனிங்குவந்திருக்கிறபடியி ஞல் அவனைக்கொல்ல வந்தேனென்ருர். என்பக்தனை சூரியனு டையசாபம் என்னசெய்யும். இவன்சாபம் போகத்தக்க செல்வத் தைப் போக்குமேயன்றி போதலையறியாது எனதுபக்தியைப் போக் குமா. என்பக்தர்களுக்குச் செல்வமிருந்தாலென்! இல்லாதொழிந் தாலென்! செல்வத்தை அவர்களே வெறுக்கின்ருர்கள். அதனைக் கொடுவென்று என்னைக்கேட்பதுமில்லை என்றுசொல்லவும், விஷ்ணு

வானவர் தேவரீர் கூறியது உண்மையே,தேவரீருடைய பக்தனுக்கு ஆயுள்முடிந்து,தேவரீருடையபதமடைந்தான், இனி அச்சூரியனைக் கொல்வதனு லென்னபயன், க்ஷமிக்கவேண்டுமென்ன அவர்வேண்டு கோளின்படியே கோபந்தணிந்து சென்றனர். நாரதரே! பின்னர் அந்த விஷ்ணுமூர்த்தி தேவர்களைப்பார்த்து அவன்புத்திரன் ரதத் துவஜனும் அரசாண்டு மரணமடைந்தான். அவன்புத்திரன் தருமத் துவஜன் குசத்துவஜனென்னு மிருவர் செல்வத்தில் ஆசையுடைவர் களாய் என்னுடைய பக்தர்களாய் இலக்குமியைக்குறித்துத்தவம்புரி ய அவள் அவர்களுக்குப் புத்திரியாகப்பிறந்து சகலசம்பத்தையும் உண்டாக்க அவர்கள் அடைவார்கள் என்றுகூறியாவருக்கும் விடை கொடுத்து அந்தப்புரஞ்சென்றனர் என்றார் (சு - ம் டுகஅ)

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காம ஸஞ்சீவிந்யை நம:

## பதினாறும் அத்தியாயம்.

### * குசத்வஜ க்ரஹே மஹாலக்ஷ்மிஜன்ம ப்ராப்தி:.

---

நாராயணர் கூறுகின்றார்:—முற்கூறிய அவ்விருவரும் உக்கிர மான தபசினால் இலக்குமியைப்பூஜித்துத் தங்கள் இஷ்டப்படி வெவ்வேறு வரம்பெற்று மிக்கபிரபுவாயும் புண்ணியவான்களா யும் புத்திரவான்களாயுமிருந்தனர். குசத்துவஜன் பத்தினியான மாலாவதி இலக்ஷ்மி அம்சமான புத்திரியைப்பெற்றாள். அவள் சிறிதுநேரம் சென்றபின் ஞானவதியாய் வேதசப்தத்தை ஸ்பஷ்ட மா யுச்சரித்துக்கொண்டுசூதிகாகிருகத்தைவிட்டு வெளியே வந் தாள் பிறந்தபோதே வேதத்வனிசெய்தபடியால் அவளைப்பண்டிதர் வேதவதி என்றழைத்தனர் அப்பெண் ஸ்நானஞ்செய்து தவஞ்செய் யக்காட்டிற்குப் போகும்பொழுதுபந்துக்கள்தடுத்தும் சென்று புஷ்கரக்ஷேத்திரத்தில்ஒருமந்வந்தரம் லீலையாக உக்ரமான தவம்புரி ந்தனள். அவ்வாறுபுரிந்தும் தேகம் இளைக்காமலும் வருந்தாமலும் யௌவனவதியாயுமிருந்தாள். அப்பொழுது அசரீரி ஓ பெண்ணே!

---

* குசத்துவஜர் கிருகத்தில் இலக்குமி அவதரித்தல்.

உனக்கு மறுசன்மத்தில் விஷ்ணு பர்த்தாவாகவருவர் என்றுசொல்லிற்று. அதனைக்கேட்டுச் சந்தோஷித்து பின்னரும் கந்தமாதன பர்வதத்தில் நீண்டகாலமிருந்து தவம்புரிந்து பிறகு ஓர்க்ஷணகாலம் சிரமபரிகாரமாக சும்மா இருந்தனள். அப்போது இராவணன் அவளெதிரேவர அவனுக்கு அதி ருசியான பழமும் அதிசீதளமானஜலமும் கொடுத்தாள். அப்பாபிஷ்டன் புசித்து உட்கார்ந்து நீயாரென்று கேட்டு அவளது பெருத்தபிருஷ்டபாகத்தையும் தனத்தையும் மற்ற அவயவங்களையுங்கண்டு மோகித்து அவளைக்கிரீடிக்க முயன்றான். அப்பதிவிரதை கோபங்கொண்டு அவனைக் கைகால் திரும்பவொட்டாது தம்பிக்கச்செய்துவிட்டனள். அவன் ஊமையாய் மனத்தினால் இலக்ஷ்மியைத் துதிக்க லக்ஷ்மிதேவி மனமிரங்கி முன்போல் செய்துவிட்டனள். அதைக்கண்டவேதவதி நீ என்விஷயமாய் பந்துக்களோடு மரணமடைவாயென்று கூறித்தேகத்தைவிட்டனள். இராவணன் அச்சரீரத்தைக் கங்கையிலிட்டு என்னவேலை செய்தேனென்றழுதுகொண்டே தன்னிடம் போயினான். அந்த இலக்ஷ்மி காலாந்தரத்தில் ஜனகமகாராஜனுக்குப் புத்திரியாகப்பிறந்து சீதையென்னும் பெயரோடு அழகான இராமனைப் புருடனாகப் பெற்று அநேககாலங் கிரீடித்திருந்தனள். அவர் பிதுர்வாக்கியத்தைப் பரிபாலிக்கக் காட்டிற்குப்புறப்படும்போதுசீதையும் இலக்குமணனும்வர, அவர்களோடு ஆரணிய சஞ்சாரஞ்செய்து கடற்கரையில் வந்தனர்.

அப்போது அக்கினிதேவன் பிராமணவுருவத்தோடு வந்து வருந்தும் இராமனைப்பார்த்து வருந்தி ஓ பகவானே! சீதையை அபகரித்துக்கொண்டு போகுங்காலஞ் சமீபித்திருக்கிறது. தெய்வச் செயலைத்தடைசெய்யமுடியாது. தெய்வத்தைக்காட்டிலும் பலமானது வேறுகிடையாது. லோகமாதாவான தேவியை என்னிடம் வைத்துவிடுவாய். நான் சாயாதேவியை உனக்குக்கொடுக்கிறேன். நீ அவளை வைத்துக்கொள். இராவணன் செய்தி எல்லாம் முடிந்த பின் உன்னிடம்விடுகிறேன். நான் தேவர்களால் அனுப்பப்பட்ட அக்கினிதேவன் என்றுசொல்லவும், இராமர் இச்செய்தியை இலக்குமணருக்குத் தெரிவிக்கவில்லை. அக்கினிதேவன் சொல்லியதுபோல் மாயையால் சீதையைக்கற்பித்து இராமருக்குக்கொடுத்து விட்டு சீதையை அவரிடம் பெற்றுக்கொண்டு போம்போது ஓ ராமரே! இந்தரகஸ்யத்தை ஒருவருக்கும் சொல்லவேண்டாமென்று கூறிப்போனான். இந்

தச்செய்தி இலக்குமணருக்கே தெரியாதென்றால் வேறெவர்க்குத் தெரியும். இஃதிப்படியிருக்கப் பொன்மானைப்பார்த்து சீதையினது வேண்டுகோளை முடிக்க ஸ்ரீராமர் சீதையை இலக்குமணருடைய காவலில்வைத்துவிட்டு மானின் பின்சென்று அடிக்க அது இலக்ஷ்மணா என்று கூச்சலிட்டு இறந்து விமானமூர்ந்து வைகுண்டமடைந்து துவாரபாலகருள் ஒருவனுப்விட்டது. சீதை இலக்குமணரை இராமரிடம் அனுப்ப அச்சமயத்தில் இராவணன் சீதையை இலங்கைக்குக் கொண்டுபோய்விட்டான். இராமரும் இலக்குமணனைப்பார்த்து சீதையைத் தேடிக்காணுமல் அழுதுகொண்டு காவிரிக்கரையிலிருக்கும்போது சீதையின் இருப்பையறிந்து வானரர்களைச் சகாயமாய்ச்சேர்த்துக்கொண்டு சமுத்திரத்தில் பாலங்கட்டி இலங்கையையடைந்து இராவணனைக்கொன்று சீதையைமீட்டு அவளை அக்கினி பரீக்ஷைசெய்யும்போது அக்கினிதேவன் தான்வைத்திருந்த சீதையை வெளிவரும்படிச்செய்தான். அப்பொழுது சாயாதேவி அக்கினியையும் இராமனையும்பார்த்து யான்போகும்வழிஎன்னவென்று கேட்க, நீ புஷ்கரத்துக்குச்சென்று தவம்புரிந்து சுவர்க்கலக்ஷ்மியாக ஆவாய் என்று உத்தரவுகொடுக்க, அவள் மூன்றுலக்ஷம்தேவவருடம் தவஞ்செய்து சுவர்க்க லக்ஷ்மியாயினள். பிறகு அவள் நீண்டகாலங்கழித்து யக்ஞகுண்டத்திற்பிறந்துபாண்டவர்களுக்குப் பத்தினியாயினுள். கிருதயுகத்தில் வேதவதியாயும் திரேதாயுகத்தில் சீதையாயும், துவாபரத்தில் திரௌபதையாயும் இருந்தபடியால் திரிகாயணியென்று பெயர்பெற்றுள் என்றனர். நாரதர் அவள் ஐந்து புருஷரைக் கொள்வதற்குக்காரணம் என்னையோ என்று வினவினர். நாராயணர் கூறுகின்றார்:—சாயாதேவி சங்கரரைக்குறித்துத் தவங்கிடந்து காமமுடையவளாய் சங்கரர் பிரத்யக்ஷமானபொழுது எனக்குப் பர்த்தா கொடு கொடு என்று ஐந்துதரம் கேட்டாள். சிவபெருமான் அவள் பிரார்த்தனையைக் கேட்டுப் பெண்ணே! நீ விரும்பியவண்ணம் உனக்கு ஐந்துபுருஷர்கள் வரப்போகின்றார்கள். என்று வரங்கொடுத்து மறைந்தனர். அதனுல் பஞ்சபாண்டவர்களுக்குப் பத்தினியாயினுள். இவள் செய்தி யிவ்வணமிருக்க, இராமர் விபீஷணனுக்கு இலங்கையைப் பட்டங்கட்டி சீதையோடு அயோத்திக்குச்சென்று பதினோராயிரம்வருடம் அரசாண்டு வைகுண்டம் போனுர். லக்ஷ்மி அம்சமான வேதவதி லக்ஷ்மியிடம் சேர்ந்த

னள். ஓ நாரதரே! வேதவதியினுடைய சரித்திரத்தைச்சொன்னேன். இனி தருமத்துவஜரின் பெண்ணினுடைய சரித்திரத்தைக் கூறுகின்றேனென்றனர். (சு - சூரு)

பதினாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

கல்யாணை நமஃ

## பதினேழாம் அத்தியாயம்.

## வேதவதிதுளஸ்யுபாக்கியானம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—தருமத்துவஜருடைய பத்தினியாகிய மாதவியென்பவள் அரசனோடு கந்தமாதனத்தில் புஷ்பசயனத்தில் சந்தனப்பூச்சுடன் மலர்மணங்கமழும் சந்தனக்காற்று வீச ரமித்திருந்தாள். இருவரும் சுரதக்கிரீடையில் அதிகரித்தவர்களாய் திருப்திபற்று நூறுதேவவருடம் இரவுபகல் தெரியாதுஇருந்தனர். ஓர்நாள் அரசன் அரசாக்ஷியைநினைத்துஅவளை விட்டுப்போயினன். அவள்மாத்திரம் திருப்தியடையாமல் நூறுவருடம் கர்ப்பமாயிருந்து கார்த்திகைபௌர்ணமி சுக்கிரவாரத்தில் சுபமுகூர்த்தத்தில் ஓர்பெண்ணைப்பெற்றாள் அப்பெண்குழந்தை இலக்குமியாகையால் எல்லா அவயவங்களும் சுந்தரத்திற்சிறந்து அழகாய் விளங்கிற்று. அவ்வாறு ஒருவிதத்தினாலும் ஒப்புசொல்வதற் கில்லாமலிருந்தபடியால் துளசி எனப்பெயர்பெற்றனள். அஃதாவது துள என்றால்—ஈடு-சி, என்றால் இல்லாதது என்பதுபொருள். பின்னர் அப்பெண் தவஞ்செய்யவெண்ணி பதரிவனஞ்சென்று மனதை நாராயணர் பர்த்தாவாகவேண்டுமென்னும் சங்கற்பத்தில் நிறுத்தி ஒருவஸ்துவையும் பாராமல் ஒரேகாலில் நின்று மழையில் நனைந்தும், வெயிலில் காய்ந்தும் பஞ்சாக்கினிமத்தியி னின்று கொளுத்தப்பட்டும் இருபதினாயிரம்வருடம் சலத்தையும் பழத்தையும், முப்பதினாயிரம்வருடம் இலைகளையும், நாற்பதினாயிரவருடம் வாயுவையும் புசித்துப், பதினாயிரம் வருடம் நிராகாரமாய்த் தவம்புரிந்தாள். அவளுக்குப் பிரமன் பிரத்யக்ஷமாய் ஓ துளசியே! உனக்கு ஹரியி

டம் பக்திவேண்டுமா? தாசத்தன்மை வேண்டுமா? அமரத்தன்மை வேண்டுமா? என்று கேட்க, துளசி நீர் எல்லாமறிந்தவராகையால் நான் வெட்கமடைய வேண்டுவதில்லை. நான் கோலோகத்தில் கோபிகாஸ்திரீயாய் கிருஷ்ணனுக்கு இஷ்டையாயும் கிங்கரியாயும் தோழியாயும் மனைவியாயுமிருந்தேன், அவருடைய சம்போகத்தில் திருப்தியடையாமல் மோகமடைந்திருந்த என்னை ராதைபார்த்து கோவிந்தனைமிரட்டி நீ மாநுடயோனியை யடையக் கடவாயென்று சபிக்க பகவான் என்னை நோக்கி பூமியில் நீ தவங்கிடத்து பிரமாவின்வரத்தால் என் அம்சமும் நான்கு கையுமுள்ள புருஷனை அடைவாயென்று சொல்லிமறைந்தனர். நான் இவ்வுலகில் சன்மமடைந்தேன் ஆகையால் பகவானைப் பர்த்தாவாக வரங்கொடுப்பாயென்றனள். பிரமன் அவ்வார்த்தையைக் கேட்டு கிருஷ்ணன் சரீரத்திலிருந்து பிறந்த சுதர்மனென்கிற கோபாலன் முற்காலத்தில் உன்னைப்போலவே உன்னைப்பார்த்து மோகமடைந்து அக்காமத்தைப் பூர்த்திசெய்து கொள்ள வல்லமையற்றவனாயினன். அப்போதுராதைபார்த்துகோபித்துஉன்னைச்சபித்ததுபோல்சபித்தாள். அதனால் பூலோகத்தில் தநுவம்சத்தில் சங்கசூடனென்னும் பெயருள்ளவனாய்ப் பிறந்திருக்கிறான். அவனுக்குப் பூர்வஜன்மவாசனை தெரியும். நீயும் பூர்வஜன்ம வாசனை யுள்ளவளாகையால் நீ அவனுக்குப் பத்தினியாகக் கடவாய், பிறகு நாராயணனைப் பர்த்தாவாக அடைவாய். நீ விருக்ஷரூபமாகப் பிறக்கப்போகிறாய். நீ எல்லா புஷ்பகளினுஞ்சிறந்தவளாயும் விஷ்ணுவுக்குப்பிராணனிலும் பிரியையாயும் இருக்கப்போகிறாய். நீ இல்லாமல் பூசித்தால் சகலதேவர்களுடைய பூசனையும் வீணாகும். பிருந்தாவனத்தில் பிருந்தாவனி என்னும்பெயருடனிருப்பாய். கோபாலர்களும் கோபிகாஸ்திரிகளும் உன்னால்கிருஷ்ணனைப் பூஜிக்கப்போகிறார்கள். விருக்ஷத்துக்கு அதிஷ்டானரூபியாய் கிருஷ்ணனோடெப்போதும் கிரீடிக்கப்போகிறாய் என்றனுக்கிரகஞ் செய்தனர். எனக்குஇரண்டுகரமுடைய கிருஷ்ணனிடமிருக்கிற ஆசை நான்குகரமுள்ளநாராயணனிட மில்லை. ஆனால் பகவான் ஆஜ்ஞையினால் இப்போது சதுர்புஜனைக் கோருகின்றேன். உன் கருணையால் துர்லபமான கிருஷ்ணனைப் பர்த்தாவாகவடைந்து என்கோரிக்கையை நிறைவேற்றிக் கொள்வேன். ராதாவினிடமிருந் துண்டான என்பயத்தை நீக்கிவிடும் என்றாள். பிரமன்

பதினாறு அக்ஷரமுள்ள ராதிகாமந்திரத்தை யுபதேசிக்கிறேன், அதனால் நீ அவளுக்குப் பிராணனுக்குச் சமானமானவ ளாகப்போகிறாய். உங்களிருவருக்கும் இருக்கும் சிருங்காரரசத்தை அவ ளறிய மாட்டாள். கிருஷ்ணனுக்கும் அவளிடமிருக்கும் பிரீதி யுன்னிடமிருக்கும் என்று கூறி ராதாமந்திரத்தையும் பூஜாவிதியையும் கவசத்தையும் புரஸ்சரணவிதியையும் உபதேசித்து ஆசீர்வதித்துப் போயினர். துளசி பிரமனுடைய வரத்தினால் இலக்குமியைப்போல் சகலசித்தியையடைந்து சகலலோகத்துக்கும் துர்லபமான போகத்தை விஷ்ணுவோ டனுபவித்துத் தவத்தினு லடைந்த சிரமமொழிந்து சுகமான ஆகாரங்களையு முண்டு சந்துஷ்டையாய் புஷ்பசயனத்தில் படுத்தாள் என்றனர். (சு - ம் - சுஅ)

பதினேழாம் அத்யாயம் முற்றிற்று.

---

உ

கடிந ஸ்தனமண்டலாயை நமஃ

## பதினெட்டாம் அத்தியாயம்.

## * துளஸீசங்கசூடயோஸ்ஸம்வாதம்.

---

நாராயணர்கூறுகின்றார்:—இரதியைப்போல் யௌவனமுள்ளவளாய் சயனித்திருக்கையில் மன்மதன் அவள்மீது பஞ்சபாணங்களையும்விட சிறிதுநேரம் மூர்ச்சித்தாள். ஒருக்ஷணம் பயத்தையும், ஒருக்ஷணம் சோம்பலையும், ஒருக்ஷணம் தாபத்தையும், ஒருக்ஷணம் சுகத்தையும், ஒருக்ஷணம் தெளிவையும், ஒருக்ஷணம் கலகத்தையும் அடைந்து படுக்கைவிலிருந் தெழுந்து வெளியே திரிவாள். மறுபடி படுப்பாள். புஷ்பத்தாலும் சந்தனத்தாலும் செய்யப்பட்ட படுக்கை முள்ளினாற்செய்ததுபோலும், வீடு குகைபோலும், வஸ்திரம் அக்கினிபோலும், சிந்தூரப்பொட்டு காயம்போலும் அவளுக்காய் விட்டது. அப்படியிருக்கும் அவள்கனவில் அழகும் யௌவனமும் புன்சிரிப்பும் உடையவனும் இரசிகனும் சந்தனப்பூச்சுடன் இரத்தினத்தினால் அலங்கரிக்கப்பட்டவனும் மாலைதரித்தவனும் ஒரு புருஷன் தோன்றி தன் முகமலரை முத்தமிடுகிறவனும் சுரத

---

* துளசிக்கும் சங்கசூடனுக்கும் சம்வாதம்.

கதையைச் சொல்லுகிறவனும் வெகு இனிப்பாய்ப் பேசுகின்றவ வனும் படுக்கையில் தன்னேடு இரமித்தவனும் மறுபடியும் கட்டிக்கொண்டு பேசுகிறவனும் போகின்றவனும் வருகின்ற வனும் இருந்தான். அவனைப்பார்த்து ஓ பிராணநாதனே! எங் குப் போகின்றீர் போகவேண்டாம் நில்லும் என்றுகூறினள். மறு படி நித்திரைதெளிந்து அடிக்கடி அழுதுகொண் டிருந்தாள். அப் பொழுது சங்கசூடனென்கிற அந்தயோகி ஜைகிஷவ்யரிடமிருந்து கிருஷ்ணமந்திரத்தைப் பெற்று புஷ்கரத்தில் சித்திசெய்துகொண்டு கவசத்தைக் கழுத்தில் தரித்துப் பிரமனது வரத்தால் கோரிக்கை நிறைவேறப்பெற்று பதரிகாவனம் வந்தான். அழகிலும் அலங் காரவிசேடங்களிலும் சிறந்திருக்கின்ற சங்கசூடனைத் துளசிபார் த்துத் தன்முகத்தை வஸ்திரத்தினல் மூடிக் கொண்டும் புன்சிரிப் போடு அடிக்கடி பார்த்துக்கொண்டும் புதுபுருஷ சங்கம இச்சை யால் தலைவணங்கியுமிருந்தாள். அந்தஸ்திரீயை சங்கசூடன் பார்த்து அவள் சமீபத்தில் உட்கார்ந்து நீயார்! யாருடையபெண்! ஸ்திரீ களுக்குள் கௌரவிக்கத் தக்கவளாயிருக்கின்றய். உன்னடிமை யான எனக்குப் பதில்சொல்லுவா பென்றன். அவள் அவ்வார்த் தையைக்கேட்டு காமத்தோடும் புன்சிரிப்போடும் முகத்தைவளைத் துக்கொண்டு நான் தருமத்துவஜருடையபெண்; காட்டில் தவஞ்செ ய்கிறேன். நீர் யார்? வந்தபடிபோய்விடும். நற்குலத்திற் பிறந்தவள் தனியே யிருக்கும்போது நற்குலத்திற்பிறந்தவன் நீயாரென்று கேட்கக்கூடாதென்று வேதத்தில் கேள்விப்பட்டிருக்கிறேன். மிக்க காமியும் நல்லகுலத்திற் பிறவாதவனும் தருமசாஸ்திர விசாரணை யும் வேதாந்தசிரவணமும் இல்லாதவன்தான் அந்தஸ்திரீயை இச்சி ப்பான். மேலுக்கு அழகுள்ளவளாயும் உள்ளே மதப்பிடித்தவளா யும் புருஷனுக்கு யமரூபியாயும், அமிர்தத்தை வாக்குநுனியில்வை த்து உள்ளே விஷகும்பம்போலிருக்கிறவளாயும், கத்தியின்கறுக்குப் போன்றமனத்தோடு மேலுக்கு இனிப்பாய்ப் பேசுகிறவளாயும், தன் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ள எப்பொழுதும்ஆவலுள்ளவளா யும், தன்காரிய முடியுமளவும் பர்த்தாசொற்படி கேட்கிறவளாயும், காரியமில்லாதசமயத்தில் தூஷிக்கிறவளாயும், மனதில் பாபகாரியத் தையே வைத்திருப்பவளாயும் இருக்கின்ற ஸ்திரீகளுடைய சரித்தி ரங்களை வேதபுராணங்கள் தூஷிக்கின்றன. அவர்களை யார் நம்பு வார்கள். அவர்களுக்கு யார் இஷ்டமானவர்கள்! யார் இஷ்டமில்

லாதவர்கள்! அவர்கள் அப்போ தப்போதும் புதிதுபுதிதாய்ப் பர்த்தாக்களைத் தேடுவார்கள். அழகானபுருஷனைப்பார்த்து மனதிலிச்சிப்பார்கள். வெளியில் பதிவிரதாதருமமுடையவர்போல் பிரகடனஞ்செய்வார். அவரெல்லாம் மிக்ககாமமுள்ளவர்களாயும் மன்மதனுக்கு ஸ்தானமாயுமிருப்பவராகும் அநேகர்மனதுக்குள் மைதுன இச்சையுடையவர்களாய் இரகஸ்யத்தில் தனக்கிஷ்டமானபுருடனைப் பார்த்துச் சிரிக்கின்றவர்களாயுமிருப்பர். நான்குபேர் பார்க்கும்போது வெட்கமுடையவராயும், மைதுனம் நேரிடாமற்போனால் கோபத்தோடு சண்டையிடுகின்றவராயும், அதிகமைதுனம் நடக்கும்போது மிக்க சந்தோஷ முடையவராயும், அல்பமைதுனத்தால் துக்கமடைகிறவராயும், நல்லருசியான அன்னத்தையும் சயனத்தையும் கோருகின்றவராயும், சுந்தரனையும் சிருங்கார ரசமறிந்தவனையும் அழகாயும் யுவாவாயும் குணசாலியாயு மிருக்கிற புருஷனை இடைவிடாமல் எப்போதும் கோருவார்கள். பிள்ளையைக்காட்டிலும் அதிக சிநேகத்தை சம்போகமறிந்த புருஷனிடத்தில் வைப்பார்கள். கிழபுருஷனையும் மைதுனஞ்செய்ய வல்லமை யில்லாதவனையும் அடிக்கடி கலகஞ்செய்து கோபத்தோடு சண்டைக் கிழுப்பார்கள். சர்ப்பம் எலியை விழுங்குவதுபோல் வாக்வசனத்தினால் புருடனைப் பட்சிப்பார்கள். அசாத்தியமான வேலையைச் செய்கின்றவராயும் சர்வதோஷத்துக்கும் ஸ்தானமாக இருக்கின்றவராயும் பிரமவிஷ்ணுக்களால் சாதிக்கத்தகாத மோகமுடையவராயும் தபோமார்க்கத்துக்குத் காப்பாளாயும் மோக்ஷத் துவாரத்துக்குக் கதவாயும் பக்தியைத் தூரத்தில் ஒதுக்கினவராயும் சர்வமாயைக்கும் பாண்டமாயும் சம்சாரமாகிற ஜெயிலில் வருகின்றவருக்கு விலங்குபோன்றவராயும் இந்திரசால சொரூபிகளா யிருக்கின்றவராயும் பொய்மையே உருக்கொண்டுவந்தாற் போன்றவராயும் வெளிக்கழகா யிருக்கின்றவராயும் உள்ளே விகாரமான அங்கமுள்ளவராயும் நோய்க்கிடஞ்செய்யும் மலசலங்களுக்கு ஆதாரமா யிருக்கின்றவராயும் துர்க்கந்தத்தோடு கூடினவராயும் இருப்பர். இவரெல்லாம் பிரமனால் சிருட்டிக்கப்பட்டிருப்பினும் முமுக்ஷுக்களுக்கு விஷமா யிருப்பர், அவர்கள்கண்ணாலும்பாரார், நினைவாலும் நினையார் என்றனள். இதனைக் கேட்ட சங்கசூடன்சிரித்து கூறப்பட்டவையெல்லாம் பொய்யல்ல; சில உண்மையாயும் சில பொய்மையாயு மிருக்கின்றன. நானும் சில கூறுகின்றேன் கேட்பாயாக.

பிரமன் எல்லாவுயிர்களையும் மோகிக்கச் செய்யும் படியான ஸ்திரீரூபத்தைக் கொண்டாடத் தக்கதாகவும், தூஷிக்கத்தக்கதாக வும்சிருட்டித்திருக்கிறார். இலக்குமி சரஸ்வதி ராதிகா துர்க்கா சாவித்திரி இவர்கள் அம்சத்தால் சிலஸ்திரீகள் சிருட்டிக்கப்பட்டார்கள். இவர்களெல்லாம் உண்மையான ஸ்திரீகளென்று சொல்லப்படுவர். அவர்கள் சிலாகிக்கத் தகுந்தவராயும் சர்வமங்களத்தையும் கொடுக்கத் தகுந்தவராயும் இருப்பவர். சதரூபை தேவஹூதி சுவதா சுவாஹா தக்ஷிணை சாயாவதி ரோகிணி வாருணி சசி குபேரபத்தினி அதிதி திதி லோபாமுத்திரை அநுசூயை கோடபி அகலிகை அருந்ததி மேனை தாரை மண்டோதரி தமயந்தி கங்கை சமனஸா புஷ்டி துஷ்டி ஸ்மிருதி மேதா கலிகா வசுந்தரை ஷஷ்டி மங்களசண்டி தருமகாமினி சுவஸ்தி சிரத்தா சாந்தி காந்தி க்ஷாந்தி நித்திரா தந்திரா க்ஷுத் (பசி) பிபாஸா(தாகம்)சந்தியா இராத்திரி திவா சம்பத்து த்ருதி கீர்த்தி கிருபா சோபா பிரபா சிவா இன்னும் இவர்போன்றவரும் தெய்வத்தன்மையுடைய உத்தமஸ்திரீகளென்று புகழப்படுவர். விபசாரிரூபமாய் எந்த எந்த ஸ்திரீ ரூபங்களிருக்கின்றனவோ அவை புகழப்படாதவை. எந்தஎந்த ஸ்திரீரூபம் சத்வப்பிரதானமாக விருக்கின்றனவோ அவை மிகவும் கொண்டாடத்தக்கவை. அவையெல்லாம் சகலலோகத்துக்கும் பதிவிரதா ரூபங்களென்றும் பிரமாவினால் சிருட்டிக்கப்பட்ட உண்மையான ரூபமென்றுஞ் சொல்லப்படும். ஸ்திரீரூபம் தமோ ரூபமென்றும் இரஜோரூபமென்றும் இருவகைப்படும். இரஜோ அம்சத்திற் பிறந்தவர்கள் போகத்திலாசை உள்ளவர்களாகையால் மத்திமஸ்திரீகளென்றும் அவர்கள் புருஷரைச் சம்போகத்தினால் சுவாதீனஞ்செய்து கொள்வரென்றும், எப்போதும் தங்கள் காரியத்திலேயே சாக்கிரதையாயிருப்பரென்றும், மகாகபடமுள்ளவர்களாயும் மோகத்தைச் செய்கிறவர்களாயும் தருமத்தைச் செய்யாதவர்களாயும் பதிவிரதா தருமத்தைக்செய்யாது அத்தருமத்தை இழந்தவர்களாயுமிருப்பரென்றும், தமோகுண அம்சத்திற் பிறந்த ஸ்திரீகள் ஒருவருக்கும் அடங்காதவர்களென்றும் அவர்கள் அதமஸ்திரீகளென்றும் சொல்லப்படுவார்கள். நல்லகுலத்திற் பிறந்தவனும் பண்டிதனும் பரஸ்திரீயை நீயாரென்றுகேட்கமாட்டார்கள். சலமற்றவிடத்திலும் சனமற்றவிடத்திலும் ரகஸ்யத்திலும் பரஸ்திரீயைக்கேட்கக் கூடாதென்று சொல்லிப் பின் பிரமாவின் ஆக்ஞையால் நான் உன்

னிடம் வந்தேன். காந்தர்வவிவாகத்தால் உன்னைக் கொள்ளப்போகின்றேன். நான் மநுவம்சத்திற்பிறந்த சங்கசூடனென்னும்அரசன் என்று தன்பூர்வஜன்மத்தையும் அவளுடைய பூர்வ ஜன்மத்தையும் கூறி நான் உன்னை ஆசைப்பட்டிருக்கிறேன். இனிஉனக்கு ராதிகையினுடையபயம்வேண்டாம் என்றனன்.

இவ்வாறு சொல்லக்கேட்ட துளசி புன்சிரிப்புடன் இப்படிப்பட்ட புருஷனே புகழத்தக்கவன். இப்படிப்பட்ட புருஷனை அடையப் பிரபஞ்சத்தில் விரும்புகின்றனர் என்று உள்ளத்துள்ளே மகிழ்ந்து பின்னர் அரசனைப்பார்த்து, இப்போது நாமிருவரும் செய்த விசாரத்தால் நானும் உன்னைச் செயித்ததாகவும், நீரும் என்னைச் செயித்ததாகவுஞ் சொல்லலாம். அதாவது இருவருடையசெய்திகளையும் அறிந்தோம். எவன் ஸ்திரீயினல் செயிக்கப்படுகிறானோ அவன் அசுத்தனும் நிந்திக்கப்பட்டவனுமாவன்; அவனைப் பிதுர்க்கள் தேவர்கள் மநுக்கள் மாநுடர் தாய் தந்தை சகோதரர்கள் நிந்திக்கின்றார்கள். சுத்தமுள்ளபிராமணன் ஜனன மரணத் தீட்டுகளைப் பத்து தினத்திலும், அரசன் பன்னிரண்டு தினத்திலும் வைசியன் பதினைந்து தினத்திலும், சூத்திரன் ஒருமாதத்திலுஞ் சங்கரசாதி தாயின்சாதியை அநுசரித்தும் சுத்தியடைகின்றனர். ஸ்திரீயினல் ஜயிக்கப்பட்டவன் சிதா தகனகாலத்தில் சுத்தியடைவானேயன்றி அவனிருக்குங்காலத்தில் சுத்தியடையான். அவன் கொடுக்கும் பிண்டதர்ப்பணுதிகளைப்பிதுர்க்கள் இனிப்பாகக்கொள்ளார். தேவர்களும் பூசையை ஏற்றுக்கொள்ளார். ஒருவன் ஞானம் தவம் ஜபம் ஹோமம் பூசை வித்தை யசஸ் முதலானவைகளையுடையவனுயிருப்பினும் அவைகளால் அவனுக்கு என்னபிரயோஜனம். வித்தை பிரபாவம் ஞானம் இவைகளையறிந்த உன்னைப் பரிக்ஷித்தேன். ஸ்திரீ புருஷனைப் பரிக்ஷித்தே தனக்குப்புருஷனுக வரிக்க வேண்டும். குணமில்லாதவனுயும் விருத்தனுயும் அஞ்ஞானியாயும் தரித்திரனுயு மூர்க்கனுயும் ரோகியாயும் குத்ஸிதனுயும் அதிகோபமுள்ளவனுயும் மிக்க துர்முகனுயும் நொண்டியாயும் அங்கஹீனனுயும் குருடனுயும் செவிடனுயும் சடனுயும் ஊமையாயும் நபும்ஸகனுயும் பாபியாயும் இருக்கின்ற வரனுக்கு எவன் பெண்ணைக்கொடுக்கின்றானே அவன் பிரமஹத்திபாவத்தை யடைகிறான். சாந்தனுயும் குணவானுயும் பண்டிதனுயும் சாதுவாயுமிருக்கின்ற வரனுக்குக்

கொடுக்கின்றவன் பத்துயக்ஞபலனை யடைகிறான், எவன் கன்னிகையை ரக்ஷித்து விக்ரயஞ்செய்கின்றானோ அவன் கும்பீபாகமடைந்து கன்னிகையின் மலசலத்தைப் புசித்தவனாய் பதினான்கு இந்திர பட்டம் வரையில் புழுக்களாலும் ஈக்களாலும் பிடுங்கித் தின்னப் படுவான். கடைசியில் பூமியிற்பிறந்து வியாதியோடுகூடிய சன்மமடைந்து மாம்சத்தைச் சுமந்து விற்றுக்கொண்டு திரிவான் என்றனள்.

அப்போது பிரமன் ஓ சங்கசூடனே! பேசிக்கொண்டிருப்பானேன். இவளைக் கந்தர்வவிவாகத்தால் விவாகஞ்செய்துகொள். நீ புருஷசிரேஷ்டன். இவள் ஸ்திரீரத்தினம். சமர்த்தனான புருஷன் சமர்த்தையோடுகூடுவது குணம். தடையில்லாமல் நேர்ந்தசுகத்தைஎவன் விடுவான். எவன்விரோதமில்லாமல் வரும் சுகத்தைவிடுகின்றானோ அவன் மிருகத்துக்குச்சமானமாவன். அதில் சம்சயமில்லை. ஓ பதிவிரதையே! தேவதானவர்களை நாசஞ்செய்யவல்ல மகாகுணசாலியாயும் அழகனுமான புருஷனை எதற்காக நீபரிக்ஷிக்கின்றாய். விஷ்ணுவிடத்தில் இலக்குமி, கிருஷ்ணனிடத்தில் இராதகை, என்னிடம் சாவித்திரி, சிவனிடத்தில் சிவை, வராஹனிடத்தில் பூதேவி, யாகத்தில் தக்ஷிணை, அத்திரியிடத்தில் அநுசூயை, நளனிடத்தில் தமயந்தி, சந்திரனிடத்தில் ரோகணி, மன்மதனிடத்தில் ரதி, காசிபரிடத்தில் அதிதி, வசிட்டரிடத்தில் அருந்ததி, கௌதமரிடத்தில் அகலிகை, கர்த்தமரிடத்தில் தேவஹூதி, பிரஹஸ்பதிஇடத்தில் தாரை, மநுவிடத்தில் சதருபை, அக்னியிடத்தில் சுவாஹா, இந்திரனிடத்தில் சசி, கணேசரிடத்தில் புஷ்டி, ஸ்கந்தரிடத்தில் தேவசேனை, தருமனிடத்தில் சதி இவர்களெல்லாம் எப்படி சௌபாக்கியமுள்ளவர்களோ அப்படி நீ இச்சங்கசூடனிடத்தில் சௌபாக்கியமுள்ளவளாயும் பிரியமுள்ளவளாயும் இருப்பாய். இச்சுந்தர புருஷனோடுகூடி எந்தெந்தஸ்தானங்களில் கிரீடிக்கவேண்டுமோ அந்தந்த ஸ்தானங்களில் கிரீடித்திருப்பாய். பிறகு கோலோகத்தில் கிருஷ்ணனை அடையப்போகிறாய். சங்கசூடன்மரித்தபிறகு வைகுண்டத்தில் சதுர்ப்புஜனையும் அடைவாயென்றனர். (சு - ம். க00தூ.)

பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

கலபோரவேகமஃ

# பதினொன்பதாம் அத்தியாயம்.

## துளஸீ சங்கசூடயோர் விவாஹம்.

நாராயணர் கூறுகின்றார்:—இவ்வண்ணம் பிரமன்கூறிச் சென்ற பின்னர் அரசன் அவளை விவாகம்செய்துகொண்டான். சொர்க்கத்தில் துந்துபிவாத்தியம் கோஷித்தது. புஷ்பவருடம் பொழிந்தது. அவன் அவளோடுகிரீடித்துமகாமோகிதர்களாய்சம்போக சுகசமுத்திரத்தில் மூழ்கினவர்களாய் ஒருவிதமான செந்துக்களும் சஞ்சரிக்காத ஆரணியத்திலும் பூந்தோட்டத்திலும் நதிதீரங்களிலும் புஷ்ப சந்தனப் படுக்கையிலும் இருந்து,வித்தைஅறுபத்து நான் கென்று சொல்வதுபோல் ஸ்திரீசுகமும் அறுபத்து நான்குவிதமென்று காம நூலில் கூறியுள்ளபடி அவைகளையெல்லாம் அநுபவித்தும் திருப்தியுண்டாகாவண்ணம் பர்த்தாமனதை கிரீடையா லிழுத்துவிட்டாள். அவனும் காமரசசுபாவ அறிந்தவனாகையால் நாயகியின் மனத்தைக் கிரகித்து விட்டான். ஓ நாரதரே! அவர்களுடைய லீலாவினோதங்களை முற்றுங்கூற முடியாது ஆயினும் சில கூறுகின்றேன்.

அவனது மார்பிலணிந் திருக்கும் சந்தனத்தோடு நெற்றியிலிருக்கும் திலகம் இவள் நெற்றியி லழுந்தவும், அவளது நெற்றியிலிருக்கும் சிந்துரத்தோடு பதரிகாபத்திரம் போல் அவனிடத்தில் அழுந்தவும் இரண்டுருவமாகக் காண முடியாமல் ஓருருவமாகவே யிருப்பர். அவளுடைய தனங்களில் இவனுடைய நகக்குறிகளும் இவனுடைய இடதுபக்கத்தின் விலாப்புறத்தில் அவளுடைய அஸ்தத்தோடு ஆபரணமுத்திரைகளும் இவளுடைய உதட்டில் அவனது பற்குறிகளும் அவனது இரண்டு கன்னங்களில் இவளது பற்குறிகளும் இருக்கக் கண்டு மகிழ்வார்கள். சுரதக்கிரீடை தெரிந்த அவ்விருவரும் ஆலிங்கனமும் சும்பனமும் அங்கமர்த்தனமும் ஒருவருக்கொருவர் மாறிமாறிச் செய்வர். அவ்வாடலை நிறுத்தி இருவருமெழுந்து தமக்கிஷ்டமான அலங்காரங்களைச் செய்துகொண்டு குங்குமப்பூ திலகத்தை அவளுக்குஇவன் வைப்பான். அவள் இவனுக்குச் சந்தனம் பூசி பரிமளமுள்ள தாம்பூலத்தைக்

கொடுப்பாள். வன்னிசுத்தமான இரண்டு வஸ்திரங்களையும் பாரிசாத புஷ்பமாலைகளையும் விரல்களில் இரத்தினமோதிரங்களையும் அணிந்துகொண்டு அவனெதிரில் நின்று உனக்கு நான்தாசி என்றுசொல்லிபரமபக்தியோடு நமஸ்கரித்துப்புன்சிரிப்போடுஇமைகொட்டாது அவனைப் பிரீதியோடு மார்பின்மேலேற்றி அணைத்துக்கொண்டு வஸ்திரத்தினால் மூடப்பட்டிருக்கிற முகமலரையும் கண்ணையும் உதட்டையும் சும்பனஞ் செய்வாள். அதனால் இவன் மிகவும் மகிழ்ந்தவனாய் அவளுக்கு வருணனிடமிருந்து கொண்டுவந்த இரண்டு வஸ்திரங்களையும் மூன்றுலோகத்தும் துர்லபமான இரத்னாபரணங்களையும் சுவாஹாதேவிதரித்திருந்த இரண்டு கால் தண்டைகளையும் சாயாதேவியின் தோள்வளைகளையும் ரோகணியின் குண்டலங்களையும் இரதியின் மோதிரங்களையும் கைவளைகளையும் விஸ்வகர்மாவினால் கொடுக்கப்பட்ட விசித்திரமான சங்கையும் நெற்றிப்பொட்டையும் படுக்கையையும் பூஷணங்களையுங் கொடுத்துச் சிரித்து மங்களப்பிரதமான பூஷணங்களில் சிலவற்றை அவளுக்கணிந்து தலையிலும் கன்னத்திலும் நெற்றியிலும் சிலபொட்டுகளிட்டு சந்தனத்தால் சந்திரரேகைபோல் மூன்றுரேகை நெற்றியிலிழுத்து அதற்குச் சுற்றிலும் குங்குமப்பூவால் சித்திரமான வேலைசெய்து நடுவே தீபம்போல் சிந்தூரத்தாலெழுதி பாதங்களிலும் கை கால்களிலும் மருதாணிப்பொட்டிட்டு காலைத் தன்மார்பில் வைத்துக்கொண்டு ஓ தேவியே! உனக்கு நான் தாசனென்று சொல்வான். தபோவனத்தை விட்டு வேறு இடத்தை யடைந்து மலையம் மேரு இமையம் கந்தமாதனம் முதலிய பர்வதங்களிலும் வேறு அழகான இடங்களிலும் புஷ்பத்தோட்டங்களிலும் தேவவுத்தியான வனங்களிலும் குகைகளிலும் துங்கபத்திரை முதலிய நதிநதங்களிலும் குளிர்ந்த காற்றுள்ள விடங்களிலும் மணற்குன்றுகளிலும் விசித்திரமான சந்தனக்காட்டிலும் சண்பகம் தாழை முல்லை மல்லிகைக ளடர்ந்த இடத்திலும் ஆம்பல் தாமரைகளுள்ள குளங்களிலும் கற்பகவிருக்ஷ வனங்களிலும் சனமில்லாத நல்ல பூமியிலும் கிரீடித் திருந்தனர்.

அப்படியிருந்தும் இருவருக்கும் திருப்தியுண்டாகாமல் ஓமத்தில் நெய்யைவிட்டால் அக்னி அதிகரிப்பதுபோல் காமம் அதிகரித்தது. மேற்கூறிய இடங்களை யெல்லாம் விட்டு அவளோடு தன்னைச்

சிரமம்வந்து கிரீடித்து நானாவிதமான சுகத்தை யநுபவித்துக் கொண்டு ராக்ஷசர்கள் பிசாசங்கள் கந்தர்வர்கள் யாவரையும் உள்ளடக்கி ஒருமன்வந்திரம் அரசாண்டுவந்தனன். யாகாதிகளும் தருமங்களும் உலகிலில்லாதபடியினால் தேவர்களெல்லாம் யாசகர்களைப் போல் திரிந்து மகாவருத்தத்தோடு பிரமனையடைந்து சங்கசூடன் வரலாற்றைக்கூறியழுதார்கள். அப்போது பிரமன் தேவர்களோடு வைகுண்டஞ்சென்று முதல் துவாரமுதல் பன்னிரண்டு துவாரங்களிலுமுள்ள துவாரபாலகர்களிடங்கூற அவர்களால்உள்ளேசென்று ஆயிரம்யோசனை விஸ்தார முள்ள சபையில் விஷ்ணு மூர்த்தியைத் தெரிசித்துத் தாம்வந்த செய்தியைக்கூறினர். அவர் ஓ பிரமனே! நீகூறியவையாவும் நானறிவேன். அவன் கிருஷ்ணமூர்த்தியினுடைய பரமபக்தனான கோபாலன். அவருடன் அவனிருக்கும்போது ராதை மிரட்டினாள். அவர் வாய் மூடியிருந்தார். அதனைக்கண்ட சுதர்மன் அவள்மீது கோபித்து அவரெதிரில் அவளைமிரட்ட அவள் இலக்குமிமுதலான தோழிகளைப்பார்த்து அவனை வெளியேதுரத்த உத்தரவுசெய்தாள். அதனையறிந்த சுதர்மன் நான்மிரட்டவில்லை என்று சொல்லியும் அவனிடத்துக் கோபங்கொண்டவளாய்த் தள்ளிவிட்டார்கள். இவ்வுண்மையறியாத ராதை இலக்குமிமுதலான தோழிகளை சுதர்மன் அடித்தானென்று கேட்டு மகாகோபங்கொண்டவளாய் நீ இராக்ஷஸயோனியை யடைவாயென்றுசபிக்க, தூஷித்துக்கொண்டும் கிருஷ்ண மூர்த்தியை நமஸ்கரித்துக்கொண்டும் அழுதுகொண்டும் போயினான். அவனைராதைகண்டு கருணையால் ஓ சுதர்மனே! நீ போகவேண்டாமென்று தடுத்தும் அவன்போக, அடாகுழந்தாய்! எங்குப்போகின்றாய் போகவேண்டாமென்று அவன்பின்சென்றாள். கோபர்களும்கோபிகளும் கண்ணீர்விட்டனர். கிருஷ்ணர் அவர்களைப்பார்த்து நீங்கள் அவனைத்தடுக்கவேண்டாம். ஒருக்ஷணத்துக்குள் சாபத்தை அனுபவித்தொழித்து இங்குவருவான் என்றுகூறி சுதர்மனைப்பார்த்து நீபோய்வாயென்றார். ஆனால் கோலோகத்தில் ஒருக்ஷணகாலம் பூலோகத்தில் ஒரு மன்வந்தரமாம். அவன் யோகமாயையறிந்தவன், பலசாலி, நீசூலாயுத்தத்தை வாங்கிக்கொண்டு பூலோகம் போய்வருவாய். சிவனார் இருக்கின்றார்; அவனைச்சங்கரிப்பார். அவன்கழுத்தில் மந்திரகவசத்தைத் தரித்திருக்கிறான். அதனால் எப்பொழுதும் ஜயத்தை யடைகின்றான். அவனை இம்சிக்க ஒருவராலும் முடியாது. ஆனால்

உன்பத்தினிக்கு எப்பொழுது பதிவிரதாபங்கம்நேரிடுமோ அப்பொழுது உனக்கு மரணம் என்று அவனுக்கு வரங்கொடுத்திருக்கின்றனே.ஓபிரமனே! அவ்வரத்தின்படி நான்முடித்துவிடப்போகிறேன். எப்படியென்றால் நான் பிராஹ்மண வுருக்கொண்டு அவன் பத்தினியிடத்தில் வீரியத்தைவிடப்போகிறேன். உடனே அவள் மரணமடைந்து பிறகு மனைவியாவாள் என்று விடை கொடுத்தனர். எல்லாரும் பாரத வருஷத்தையடைந்தார்கள். (சு - ம் - கூச)

பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

கலாநாத முக்யைநமஃ

## இருபதாம் அத்தியாயம்.

## சங்கசூடேன இந்திராதீனும் யுத்தம்.*

---

நாராயணர் கூறுகின்றார்:—வைகுண்டத்தில் விஷ்ணுமூர்த்தி இராக்கதர்களை உருத்திரமூர்த்தி சங்கரிப்பாரென்று கூறியதை உறுதியாகப்பிடித்து பிரமன் தேவர்களுடன் பூலோகத்தில் சந்திரபாகாநதிக்கரையிலுள்ள ஆலமரத்தடியில்வந்து உருத்திரமூர்த்தியைத் தியானித்தனன். அவரும் அங்குவந்தனர். அவரிடத்தில் சங்கசூடன் செய்திகளையும் அவனைப்பற்றி விஷ்ணுசொல்லி விடுத்ததையும், விடாதுசொல்லி தேவரீர் அந்த சங்கசூடனை எவ்விதமாய்ச் சங்கரிக்கவேண்டுமோ அவ்விதத்தைத் தேடவேண்டுமென்று சொல்லிப் பிரார்த்தித்துத் தன்னிடம்போய்ச் சேர்ந்தனன்.

உருத்திரமூர்த்தி சித்ரரதனென்னும் புஷ்பதந்தனுகிய ஓர்கந்தர்வனை யழைத்து நீ சீக்கிரமாகச் சங்கசூடனிடத்தில் தூதாகப் போவாயென்று ஆக்ஞாபித்தனர். அவன் அப்படியே அவனது நகரடைந்து பார்க்கும்போது அது இந்திரலோகத்தையும் குபேரபட்டணத்தையும் கீழ்ப்படுத்தி எல்லாவற்றிலுமேம்பட்டு ஐந்து யோசனை அகலமும், பத்துயோசனை நீளமும் உள்ளதாய் ஸ்படிகக் கல்லினுற் செய்யப்பட்டதாய் ஏழு அகழிகளால் சூழப்பட்டதாய்

---

* சங்கசூடனுக்கும் இந்திராதியருக்கும் யுத்தம்.

இரத்னமயமாய்ப் பிரகாசிக்கின்றதாய் நூறுநூறு வீதிகளாற் சூழ்ந்ததாயிருக்கும் அதன்மத்தியில் அரசனுடைய ஆலயத்தைக் கண்டான்.

அந்தக் கிருகமானது சத்துருக்களுக்கு நெருப்பைப்போல் கொதித்து அவர்கள் உள்ளேபோவதற்கு ஒருவிதத்துங் கூடாமல் தடுத்தும், ஏனையோர்க்கு அதிசுலபமாய்ச் செல்லவிடுத்துமுள்ள நான்கு அகழிகளாற் சூழப்பட்டும் இரத்தின சிகரங்களோடு பன்னிரண்டு துவாரங்களால் பிரகாசிக்கப்பட்டும் அவைகள் மகாவீரர்களான காவற்காரர்களால் நிரம்பப்பெற்றும் இருப்பதைக்கண்டு உள்ளேசென்று, அங்கு அதிபயங்கர ரூபியாய் சூலாயுதத்தையேந்தி காவலாளியாருக்கின்ற பிங்களாக்ஷனென்பவனைக் கண்டு தன்வரவைக் கூறினன். அவன் உள்ளேவிட்டான். அங்குள்ள துவாரபாலகனைக்கண்டு நான்யுத்தத்தைத் தெரிவிக்கவந்த உருத்திர தூதன். நீ உள்ளேசென்று அரசனுக்குத் தெரிவிப்பாய் தாமதஞ் செய்யவேண்டா மென்று கூறினன். அவனப்படியேசென்று அரசனுக்குத் தெரிவித்து அவனுக்ஞையைப்பெற்று தூதனிடம்வந்து நீஉள்ளே போகலாமென்று சொல்ல தூதனும் உள்ளேசென்று முந்நூறுகோடி அசுரர்கள் சூழ்ந்து சேவித்துநிற்ப பொற்குடைபிடிக்க சாமரைகள் அசைக்க சிங்காதனத்தில் வீற்றிருக்கும் சங்கசூடனைக்கண்டு கூறுகின்றான்:—

ஓ அரசனே! நான்சிவதூதன்; புஷ்பதந்தனென்னும் பெயருடையவன். தேவர்கட்கு இராஜ்யத்தையும் அவர்களது அதிகாரத்தையும் கொடுத்துவிடு; அல்லது அவர்களுடன்யுத்தஞ்செய். இது நிச்சயம். உருத்திரமூர்த்தி சந்திரபாகா நதிக்கரையில் ஆலமரத்தடியில் இருக்கிறார். நான் அவரிடம் என்னசொல்வது அதனைக் கூறுவாயென்றான். அவ்வார்த்தையைக் கேட்ட சங்கசூடன் சிரித்து விடியற்காலம் நான் வருகிறேன். நீபோவாயென்ன உருத்திரரிடஞ்சென்று சங்கசூடன் வார்த்தையைக் கூறினன். அவ்வாறிருக்கையில் குமாரசுவாமி வீரபத்திரர் ஆகிய புத்திரர்களும், நந்தி மகாகாளர் சுபத்திரன் விசாலாக்ஷன் பாணன் பிங்களாக்ஷன் விகம்பனன் விரூபன் விகுர்தி மணிபத்திரன் பாஸ்கலன் கபிலாக்ஷியன் தீர்க்கதமிஷ்டன் விகடன் தாம்பரலோசனன் முதலிய மஹா சிவகணத்தலைவர்களும், காலகண்டன் பலீபத்திரன் காலஜிஹ்

மன் குடீசரன் பலோன்மத்தன் ரணஸ்லாகி துர்ஜயன் துர்க்கமன் ஆகிய அஷ்டபைரவர்களும், ஏகாதசஉருத்திரர்களும் அஷ்டவசுக்களும் இந்திரனும் பன்னிரண்டு சூரியரும் சந்திரனும் விஸ்வகர்மாவும் அஸ்வனிதேவதைகளும் காமதேனுவும் உக்ரதமிஷ்டனும் உக்ரசண்டனும்,கோடரனும் கைடபனும் மூன்றுகோடியோகினிகளுடன் பயங்கரமான பத்திரகாளியும், பூதப் பிரேதபிசாசுகளும் கூஷ்மாண்டவ ரென்னும் பிரமராக்ஷதர்களும் வேதாளங்களும் இராக்ஷசர்களும் யக்ஷர்களும் கின்னரர்களும் வந்து மஹாதேவரை நமஸ்கரித்துப் பக்கத்தில் நின்றனர். இவரிங்ஙனமிருக்க, சங்கசூடன் உள்ளேபோய் துளசிக்கு யுத்தசமாசாரத்தைச் சொல்ல அவள் நெஞ்சுலர்ந்து அவனைப்பார்த்து ஹேபிராண பந்துவே! நாதனே! என்மார்பின்மேல் ஒருக்ஷணமிருப்பாய். என்பிராணனுக்கு முக்கிய தேவனே! என்னுடைய பிராணனை ஒருக்ஷணம் காப்பாற்றுவாய். நான் மனதில் நினைத்தசுகத்தை யனுபவிக்கக் கண்களால் உன்னைப் பார்த்துக்கொண்டே யிருக்கிறேன். என்மனம் அலைகிறது, பிராணன் ஆடிக்கொண்டே யிருக்கிறது. இன்று விடியற்காலம் ஒரு துற்சுவப்பனம் கண்டேன். அதன்படியே சொல்லக்கேட்டேன் என்று அவள்சொல்ல அரசன் அதனால் வருத்தப்படாமல் ஸ்நானஞ்செய்து சாப்பிட்டு உண்மையாயும் நன்மையாயும் தகுதியாயுமுள்ள சிலவார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினான்:—

சுகமும் துக்கமும் பயமும் சோகமும் காலசம்பந்தத்தால் உண்டாகின்றது. எவ்வாறெனின்! ஓர் மரமானது தோன்றுவதும் பின் தளிர்ப்பதும் கிளைகளாகப்பிரிவதும் பூ அரும்புவதும் மலர்வதும் காய்ப்பதும் பழுப்பதும் பின் உலர்ந்துபோவதும் காலத்தாலன்றி ஆகின்றதா? இதுபோலவே பிரவஞ்சமும் காலதத்துவத்தினாலேயே தோன்றி நின்றழிகின்றன. திரிமூர்த்திகளும் காலத்தைக் கொண்டே தத்தம் தொழில்களைச் செய்கின்றார்களே யன்றி காலத்தை விட்டுத் தாங்களே கர்த்தாக்களென்று அவைகளைச் செய்வதில்லை. ஏனெனில் செய்யமுடியாது. அத்தத்துவமோ பிரகிருதியாகிய பராசக்தியினுடைய இச்சா சக்தியினால் நிர்மிக்கப்பட்டது. காலதத்துவாதீதமாயுள்ளவர் பராசக்தியும் அவள் நாயகனாகிய விஸ்வாத்மாவான பரமேஸ்வரனுமேயாம். அவர்கள் காலதத்துவத்தை நியமித்து அதன்வழியாக அந்தந்த உயிர்களைக் கொண்டே அந்தந்த உயிர்களை உண்டாக்கியும் அப்படியே ரக்ஷித்தும் அப்படியே அழித்தும்

வரச்செய்கின்றுர். அவர்களைச் சரணமடைவாய். உயிர்களேயன்றிப் பஞ்சபூதங்களும் இந்திராதி திக்பாலகர்களும் சூரிய சந்திராதிகிருகங்களும் அந்தந்தகால அளவின்படியே தத்தம் தொழில்களைச் செய்து வருகின்றனர். இவ்வாறு காலதத்துவத்தாற் செய்விக்கின்ற அவர்களேபந்துக்களன்றி மற்றையராகார். ஏனையோரை நினைப்பது அறியாமையேயாம். நீ அவர்களையே பந்துக்களாகநினைப்பாய்.நீயார் நான்யார் நம்மிருவரையுங்கூட்டியது காலதத்துவமேயன்றே.அது இப்போதும் நம்மைப் பிரிக்க வந்தது. எல்லாம் காலவயத்ததென்றறிந்தபண்டிதர் எதற்கும் அஞ்சவும் அஞ்சார். வருந்தவும் வருந்தார். இனி நீ நாராயணனை அடையுங்காலம் வந்துவிட்டது. அவர் பதரிகாச்சிரமத்துக்கு வரப்போகின்றுர். நீயும் அவருக்கு மனைவியாகப் போகிறுய். பின் நானும் என்சாபமொழிந்து அங்கு வரப்போகின்றேன். இதில் சந்தேகமில்லை. என்ன பயமிருக்கின்றது என்று அவளைத்தேற்றி சந்தனம் பூசி பூச்சூட்டி அவளுடன் அன்றிராத்திரி புஷ்பசயனத்தில் முன்போல் கிரீடித்து இரவைப்போக்கி உதயகாலத்தில் எழுந்திருந்தான். அவள் பழையபடியே அழத்தலைப்பட்டு ஆகாரத்தைவிட்டு சோகங்கொண்டாள். சங்கசூடன் தன்மார்பில் அவளை அணைத்துக்கொண்டு முன்போல் சிலதத்துவ ஞானங்களை அவள்மனந் தெளியும் வண்ணஞ்சொல்லியும் சிலதிருருட்டாந்தங்களைக் காட்டியும் சமாதானப்படுத்தி அவளுக்கு ஆசையுள்ள கிரீடையில் இறங்கி அவளுக் குண்டாகவேண்டிய இன்பரசங்களையெல்லாம் உண்டாக்கித் தானும் அதனுல் மகிழ்ந்தவனுய் அர்த்தநாரீஸ்வரரைப்போல் ஒரே சரீரிகளாய் பிரிவற்ற ஆனந்தத்தில் மயங்கி அவளுக்கு இவன் பிராணனுய், இவளுக்கு அவள் பிராணனுய் சுரதலீலையில் தோல்வியற்று வெற்றியுடையவர்களாகவே யிருந்தனர் என்றனர். (சு - ம் - ௨அ)

இருபதாம்அத்தியாயம் முற்றிற்று.

---

௨

கச ஜிதாம் புதாயைநமః

## இருபத்தோன்றும் அத்தியாயம்.

## சங்கசூடமஹேஸ்வரயுத்தம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—கிருஷ்ணமூர்த்தியினிடம் பக்தியுள்ள சங்கசூடன், மறுநாள் மங்களகரமான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஆன்னிகத்தை முடித்து இஷ்டதேவதா நமஸ்காரஞ்செய்து நெய் தேன் பொரி இவைகளோடு பொன்மணி வஸ்திரம் முதலியவற்றை பிராமணர்களுக்கு நித்தியம் தானங்கொடுப்பதுபோல் கொடுத்து, உயர்ந்த இரத்தினங்களாலும், முத்துக்களாலும், செய்யப்பட்ட ஆபரணங்களை யாத்திரா மங்கள நிமித்தம் ஆசாரியருக்குத் தானமாகக் கொடுத்து, பின்னர் பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் செய்து, யானை குதிரை முதலியவற்றையும், வறுமையுடைய அந்தணர்களுக்குஇரத்தினங்கள் ஆயிரம் பாத்திரங்கள் இரண்டுலக்ஷம் பட்டணங்கள் நூறுகோடி கிராமங்கள் இவற்றை மனக்களிப்புடன் தானங்கொடுத்து, சதுரங்க சேனைகளோடு இராஜ்ய சம்பத்தை மகன்வசமாக்கி, தன் மனைவியையும் பாதுகாத்து வரும்படி நியமித்து, யாவருக்கும் சொல்லவேண்டுவன வெல்லாம் சொல்லி, அதன்பின்னர் யுத்தத்தில் முயற்சியுள்ளவனாய், தூதர்களால் அளவிறந்த சேனைகள் லக்ஷம் குதிரைகள் லக்ஷம் யானைகள் பதினாயிரம் ரதங்கள் மூன்று கோடி வில்லாட்கள் மூன்றுகோடி கவசமுள்ளவர்கள் மூன்றுகோடி சூலதாரிகள் ஆகிய இவர்களைக் கூட்டிக்கொண்டு யுத்தசாஸ்திரத்தில் வல்ல ஒருமஹாரதனை மூன்றுலக்ஷம் அக்ஷோணிக்குச் சேனாதிபதியாக்கி, முப்பதுகோடி அக்ஷோணி சேனைகளை மூலபலமாக வைத்து, நாராயணரைத் தியானித்து பாசறையினின்றும் வெளியேவந்து, இரத்தின விமானத்தின்மே லேறி பெரியோர்களை யெல்லாம் நமஸ்காரஞ்செய்துபுறப்பட்டு இந்தப்பரதகண்டத்தில்மேற்கு சமுத்திரத்திற்குக் கிழக்கிலும், மலையபர்வதத்துக்கு மேற்கிலும், ஸ்ரீசைலத்துக்கு வடக்கிலும், கந்தமாதன பர்வதத்துக்கு தெற்கிலும், ஐந்துயோசனை அகலமும், ஐந்நூறுயோசனை நீளமு முள்ளதாயும், ஸ்படிகம்போல் பிரகாசிக்கின்றதாயும் எப்பொழுதும் அழி

வில்லாமல் சலப்பெருக் குடையதாயும், லவணசமுத்திரத்திற்குப் பிரியையாயுமுள்ள மனைவியாயும்சகல சௌபாக்கிய முடையதாயும் இமாலயத்திலிருந்து புறப்பட்டு சரயுநதியோடு கலந்ததாயும், கோமதிநதியை இடப்பாகத்தில் உடையதாயும், மேற்குசமுத்திரசங்கம முடையதாயு முள்ள சிறந்தபத்திரா நதியால் சூழப்பட்டதாய் மனோகரமாய் பிரகாசிக்கின்ற அந்த நதிக்கரையை வந்தடைந்து, அங்கு சித்தாஸ்ரமமாய் சித்தக்ஷேத்திரமாயுள்ள ஆலமரத்தடியில் கோடிசூரியப் பிரகாசராய், யோகாசனராய், புன்னகையோடு சுத்தஸ்படிகம்போல் பிரகாசிக்கின்றவராய், பிரமதேஜோரூபராய் திரிசூலதாரியாய், பக்தமிருத்யுஹரராய், சாந்தசொரூபராய், கவுரீகாந்தராய் மனோஹரராய், தவபலப் பிரதராய், சர்வசம்பத்தாரராய், எளிதில் சந்தோஷிக்கின்ற எளிய கருணையாளராய், மலர்ந்த திருமுகமுள்ளவராய், பக்தானுக்ரஹகாதராய், விஸ்வநாதராய், விஸ்வபீஜராய், விஸ்வரூபராய், விஸ்வத்தைத் தோற்றுவிக்கின்றவராய், விஸ்வரக்ஷகராய், விஸ்வசங்காரராய், விஸ்வதரராய், காரணகாரணராய், நரகார்ணவதாரணராய், ஜ்ஞானப்ரதராய், ஜ்ஞானபீஜராய், ஜ்ஞானானந்தராய், வீற்றிருக்கின்ற பரமேஸ்வரரைக் கண்டமாத்திரத்தில் விமானத்தை விட்டிறங்கி பக்தியோடு நான்பெறவேண்டிய பேறெல்லாம்பெற்றவனாயினேன் என்று தலையால் தண்டாகாரமாக வணங்கி, அதன்பின்னர் இடப்பாகத்திலிருந்த பத்ரகாளியையும் ஸ்கந்தரையும் நமஸ்காரம் செய்தனன். அம்மூவரும் அவனை ஆசீர்வதித்தனர். நந்தீஸ்வரர் முதலான கணங்களெல்லாம் வந்து அவனோடுகலந்து ஒருவரையொருவர் ஆலிங்கனஞ்செய்து மகிழ்ந்தனர். சங்கசூடன் யாவர்க்கும் இனியமொழிகூறி சிவபெருமான் அருகே நின்றனன்.

அப்பொழுது மஹாதேவர் அவனைப்பார்த்து ஓ அரசனே! நீ பெரிய சம்பிரதாயத்தில் வந்தவன், உன்னுடைய வம்சத்துக்கு முதலாயிருந்தவன் சிருட்டிகர்த்தாவாகிய பிரஹ்மாவினுடைய புத்திரனான மரீசி, அவன்மகன் கஸ்யபன், அந்த கஸ்யபனுக்கு பதின்மூன்றுபத்தினிகள். அவருள் தநுஎன்பவளுக்கு நாற்பதுபிள்ளைகள், அவருள் ஒருவன் விப்ரஜித் என்பவன், அவன் மகன் தம்பன், அவன்மகன் நீ, அவர்களும் நீயும் பராக்கிரமத்திலும் தவத்திலும் மந்திரசித்தியிலும் சகலஐஸ்வர்யத்திலும் சமா

ணமில்லாதவர்கள். உன்னுடைய வம்சத்தவருடைய பெருமை உல கமெல்லாம் பரவவந்த நீ கோலோகத்திலிருந்து வந்தகாரணம் உன க்கேதெரியும். பூர்வஜன்ம பரம்பரையும் இனி வரப்போகிற எதிர் காலச் செய்தியும் அறியும் படியான அனுக்கிரகத்தைப் பெற்றிருக் கின்றவன். அவையெல்லாம் நானெடுத்துச் சொல்லவேண்டிய தில் லை. எந்தலோகத்திலும் நீ விரும்பத்தக்கது ஒன்றுமில்லை. ஆகை யால் தேவர்களுடைய இராஜ்யத்தால் உனக்காகவேண்டியதென்ன அதை அவர்களுக்குக் கொடுத்துவிடுவாயாக. உனக்கு அதனினுஞ் சிறந்தவுலகங்கள் எத்தனையோ இருக்கின்றன. அவைகளை நீ சுக மாக ஆண்டுகொண்டிருப்பாய். தேவர்களெல்லாம் அவர்களுடைய ஸ்தானங்களில் வாழும்படிச்செய்வாய். எந்தப்பிராணிகளுக்கும் இம்சையும் செய்யவேண்டாம். இம்சைசெய்வதே பிரஹ்மஹத்தி என்று சொல்லப்படும். ஏனெனில் எல்லாவுயிர்களிடத்தும் பிரஹ்ம சொரூபமான பரமேஸ்வரனை நான் நிறைந்திருத்தலால் என்க. பிரஹ்மஹத்தி என்று சொல்லப் படுவதாகிய அது, இந்தப் பிர ஹ்மத்தி பதினறில் ஒருபங்குக்குக்கூட இணையாகாது. பிராணிகளை விரோதஞ் செய்துகொள்வதும், இம்சைசெய்வதும் எதற்காக வென்று நீயோசித்துபார்ப்பாய். பிறர்செல்வத்தை விரும்பி யேயன்றி வேறில்லை. அச்செல்வமோ ஒருவரிடத்திலாவது நிலை பெற்றிருப்ப துண்டோ, முன்னிருந்த துண்டோ, முன்னிருந்தது மில்லை, இப்போதிருப்பதுமில்லை. இரண்டு காலத்தும் நிலையற்ற தன்மையே வெளிப்படுதலால் இனிப் பின்வருவோர் நிலைபெற்றி ருக்குமென் றெண்ணிப் பிறருக்கு இம்சைசெய்வது அறிவின்மை யோ! அறிவுடைமையோ! நீயே ஆராய்ந்து பார்ப்பாய். வறுமைக் குக் காரணம் பிறர் செல்வத்தை விரும்புதலேயாம் அதனை யொ ழிப்பாராயின் யாவரும் எப்பொழுதும் செல்வமுடையவரே! செல் வமில்லாதவர் உலகில் ஒருவரும் இரார். செல்வத்தோடு சிருட்டி யேயன்றி அது இல்லாமல் சிருட்டியாவதில்லை. இஃதுண்மை இதனையறிவோர் சிலர், அறியாதவர் பலர். மற்றொருண்மை கூறு கிறேன்:—பிரமனும் ஒரே நிலையாக தன்னுடைய அதிகார செல் வத்தை அனுபவிக்கின்றானா? இல்லையே. எத்தனையோ தடவை சிருட்டி செய்வதற்குத் தெரியாமல் மயங்குகின்றான். அப்போ தப்போதும் பிரகிருதிதேவியாகிய பராசத்தியின் கிருபையினால் அம்மயக்கந்தெளிந்து சிருட்டிக்கத்தொடங்குவான். அப்படியே

தான் செய்யும் இரக்ஷகத்தொழிலும் தடுமாறித் தடுமாறி நடந்து வருகின்றது. சந்திரனும் கலைதேய்ந்தும் வளர்கின்றதுமாகக் காணப் படுகின்றானேயன்றி சோடசகலையோடு பிரகாசிக்கின்ற காலத்தும் ஒருநிலையாக இருந்தானில்லை. கிரஹணகாலங்களில் மறைபடுகின் றான். சூரியனும் காலையில் மந்தவொளியாயும், நடுப்பகலில் கடுகடுத் துச்சுடும் ஒளியாயும், அந்தியில் அவ்விரண்டுமென்றி ஒளியைப் போலும் காணப்படுகின்றான். கிரஹணகாலங்களில் அம்மூவகையு மின்றி ஓர் பொன்பில்லை மாத்திரமாய்ப் பிரகாசிக்கின்றான். குன்றா திருப்பதாகிய தருமமும் கிருதயுகத்தில் பூர்ணமாயும் திரேதாயுகத் தில் காற்பங்கு குறைந்தும்,துவாபரயுகத்தில் அரைப்பங்கு குறைந் தும், கலியின் ஆரம்பத்தில் முக்காற்பங்கு குறைந்தும், இருப்பா யுள்ள மற்றைக் காற்பங்கும் வருடந்தோறும் குறைந்து முடிவில் சந்திரனுக் கொருகலைபோல் தருமம் என்னும் சொல்வாசனையோ டிருக்கும். இவ்வாறாகவே சராசரமாயிருக்கின்ற ஒவ்வொன்றை யும் பார்க்குமளவில் ஒன்றேனும் ஒருதன்மையா யிருப்பதில்லை. இதனை ஒவ்வொருவரும் அறியலாம். செல்வத்தில் வாழ்ந்த இந்திர னும், தன்னுடைய செல்வம் போதாமல் தேவசெல்வத்தை விரும் பியபலியும், சுதலலோகத்தில் என்ன செல்வத்தோடு இப்போது இருக்கின்றார்கள்! அவனும்வாழ்ந்தானில்லை,இவனும்பெற்று ஒழிக் காதிருந்தானில்லை. இன்னும்எவ்வளவென்று சொல்லுவேன். ஈஸ் வரனும் பிரஹ்மசொரூபமாயும் பரமாத்மாவாயும் இருக்கின்ற நானொருவனே காலவேற்றுமையில்லாமல் ஒரு நிலையாயுள்ளேன். அதனால் பிரபஞ்சம் லயமாகுந்தோறும் பார்த்துக்கொண்டேயிருக் கின்றேன். இன்னமும் பார்க்கப்போகின்றேன். நான் ஒருதொழி லுஞ் செய்யாதவன்.எவனொருவன் எனது நாமவைபவகுணானுபவங் களைக் கீர்த்தனஞ் செய்கின்றானோ அவனைத்தான் சத்ரூபி புருஷ ரூபி ஆத்மா ஜீவன் நானுரூபமாயிருக்கின்ற பரமாத்மா என்று சொல்லப்படும். காலரூபமாயிருக்கின்ற மிருத்யுவும் கருடனைக்கண் ட பாம்பைப்போல் அவனைக்கண்டவுடன் ஓடுவான். அவன்தான் ஜன்மம் ரோகம் பயம் ஜரை இவையெல்லாம் இல்லாதவன்; பிரஹ் மாவினால் சிருட்டியும் திருமாலால் ரக்ஷகமும் உருத்திரனால் சங் காரமும் செய்யப்படாதவன். ஓ அரசனே! நீயும் அவனைப்போ லாவாயென்றுகூற சங்கசூடன் சொல்லிவந்தன வெல்லாமும் மவுனி

யாயும் மிகவிநயத்துடனும் இனிப்பாயுங் கேட்டு அந்தப்பரமேஶ்வரரை அடிக்கடி புகழ்ந்துபின்னர் தான் சிலசொல்லத்தொடங்கினன்.

ஓ கடவுளே! தேவரீரால் யாது சொல்லப்பட்டதோ அது வேறுவகையாய் எக்காலத்தும் மாறாது. ஆயினும், பலியினிடத்தில் திருமால் வஞ்சனையாகச் சென்று அவனுடைய ஐஶ்வர்யங்களைக் கிரஹித்துக்கொண்டு அவனைக்காலால் சுதலத்தி லழுத்திவிட்டார். நான் பின் அங்கிருந்த செல்வங்களையெல்லாம் கொண்டுவந்தேன். என்னைப்போல் கொண்டுவர விஷ்ணுவினாலும் முடியாது. இரண்யன் இரண்யாக்ஷன் தேவர்களுடைய வஞ்சனையால் பிராதாவினல் கொல்லப்பட்டார்கள். சமுத்திரமதனஞ்செய்யும்போது மோகினியாய் திருமால்வந்து எங்களினத்தவரை மயக்கி அமிர்தகலசத்தை அபகரித்து எங்களை வஞ்சித்தார். இதுபோலும் எங்களினத்தில் வந்த ஒவ்வொருவரையும் தேவர்கள் மாறிமாறி வஞ்சித்துக்கெடுத்த விஷயத்தை நானிப்பொழுது சொல்லுவதென்றால் முடியுமோ. தேவர்களிடத்தில் எங்களினத்தவருக்குத் துவேஷமுண்டாய் இம்சைசெய்வதற்குக் காரணம் அவர்கள் செய்யும் வஞ்சனைச்செயலேயாகும். கர்மபலத்துக்கீடாய் இருவருக்கும் ஜயாபஜயங்க ளுண்டாகின்றன. அவைகள்மாறிமாறிவரினும் அவர்கள் செய்யும் வஞ்சனையும், இவர்கள் செய்யும் இம்சையும் உள்ளத்தில் மாறியதில்லை. தேவர்களுடைய வஞ்சனையைப் பிரகிருதிதேவியே யறிவாள். அதனை நினைக்குந்தோறும் என்னெஞ்சம் பதைக்கின்றது. தேவரீருக்கோ இவையெல்லாம் ஓர் கிரீடையாகும். ஓ! ஸ்வாமின் தேவர்களுக்கு ஐஶ்வர்யம் வருவது அவர்கள் செய்யும் வஞ்சனையாலுமன்று, அசுரர்களுக்கும் வருவது இவர்கள்செய்யும் யுத்தத்தினாலுமன்று. எவரிடத்துப் பிரகிருதிதேவியின் கிருபை எதுவரையிலிருக்கின்றதோ அவர்களிடத்தில் அதுவரையிலிருக்கின்றது. இதுவரையில் சொல்லி வந்தவையெல்லாம் எங்களிருவருக்கும் என்று முள்ள வழக்கு. தேவரீரோ எங்களுக்கெல்லாம் வேண்டுந்தோறும் செல்வத்தைக் கொடுத்துவந்தவரேயன்றி எங்களிடத்துள்ள செல்வத்தை அபகரிக்க வேண்டுமென்று எண்ணியதுமில்லை; வஞ்சனைச் செயலைச் செய்ததுமில்லை. அங்ஙனமிருக்க இப்பொழுது தேவரீர் இங்குவந்து என்னிடம் தூதனையனுப்பி யுத்தத்திற்கு யழைத்தகாரணம் யாதோ தெரியவில்லை. ஆயினும் தேவரீரும் வந்துவிட்டீர், நானும் வந்து விட்

டேன். இனி யுத்தஞ்செய்யாமற்போவது தேவரீருக்கு அழகுமல்ல எனக்கு மேன்மையுமல்ல. நாமிருவரும் யுத்தஞ் செய்யாமற் போவோமானல் நம்மை உலகத்தார் பிரயோஜனமற்றவரென்று பழிப்பர். ஆனல் எங்களிடத்தில் நீர்பந்து என்கிற முறைமையில்லாமல் கடவுள் என்கிற முறைமையுடையவர். கடவுளாயிருக்கின்ற நீர் என்னேடு யுத்தஞ்செய்வதற்கு லஜ்ஜையுண்டாகும். எனக்கும் உம்மிடத்தில் கடவுளென்கிற கியாபகமிருந்தால் யுத்தம்செய்வது எப்படியென்று எனக்கோர் யோசனை யுண்டாயிருக்கிறது. ஆகையினல் நான் கடவுளென்கிற கியாபகத்தை உம்மிடத்தில் விட்டு விடவேண்டும். நீரும் என்னைப் பந்து வெண்றெண்ணி யுத்தஞ்செய்ய ஆரம்பிக்கவேண்டும் என்றான். ஆனல் யுத்தத்தில்பிரயோஜகர் நீரன்று; நானேஎன்பதில் ஐயமில்லை. ஆகவே ஜயாபஜயத்தைப்பற்றியகீர்த்தி அபகீர்த்திகள் எனக்கே யாமன்றி உமக்கொன்று மில்லைஎன்றான்.

இவையெல்லாங் கேட்ட முக்கண்ணர் அவன் சொல்லி வந்தவைகளுக்குத் தகுதியாயும் உசிதமாயுமுள்ளவைகளைக் கூறுகின்றார்:—ஓ அரசனே! நீ சொல்லிவந்தவை யெல்லாம் மிகவும் வியப்புடைத்தானதே. உன்னுடைய வம்சம் பிரஹ்மவம்சமேயன்றி வேறில்லையே!அந்தப்பிரஹ்ம சப்தத்திற்கு நான் உரித்தானவனல்லவா! ஆகவே,வம்சத்திற்குக் கர்த்தாவாகியநான் யுத்தஞ்செய்வதற்கு லஜ்ஜை யடையவேண்டிய காரணம் ஏது!இந்த ஞாயங்கருதியே முன்நான் திரிபுரர் முதலியவரோடும், தேவி சும்ப நிசும்பர் முதலானவர்களோடும் யுத்தம் செய்திருக்கின்றோம். மதுகைடபர் இரணியன் இரணியாக்ஷன் முதலானவரோடு விஷ்ணுமுதலான தேவர்கள் யுத்தஞ்செய்தது, நீ கூறியபடி தாயாதிமுறையைக் கொண்டுதான். நான்யுத்தஞ் செய்யவந்த காரணத்தைச் சொல்லிவிட்டேனகையால் உன்னேடு போர்செய்வதில் எனக்கு லஜ்ஜை இல்லை என்பதை நன்றாய்த்தெரிந்துகொள். அன்றியும் நீஎல்லாரினும் மிகச்சிறந்தவன் என்று சொல்லிச் சும்மாயிருந்தனர். இவர் ஆன்மக்களுடைய குறிப்பறிந்து எதுவுஞ் செய்கின்றவராதலால் அப்போதும் அவன்குறிப்பைநோக்கி யிருந்தனர். சங்கசூடன் சங்கரர் ஆலமரத்தடியிலிருந்து சொன்ன குறிப்புணர்ந்து மந்திரிகளுடன் அதிவேகமாய் அப்பொழுதே எழுந்திருந்தனன் என்றார். (சு - ம். அஉ)

இருபத்தொன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

௨

கடாக்ஷஸ்யந்திகருணையைநமஃ

## இருபத்திரண்டாம் அத்தியாயம்.

### நாரத நாராயண சம்வாதம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—எழுந்திருந்த சங்கசூடன் சிவபெருமானை நமஸ்கரித்து மந்திரிகளோடு விமானத்திலேறித் தன்னுடையசேனைகளைத் தூண்டினன். இருவரும்யுத்தத்துக்கு ஆரம்பஞ்செய்யவே சேனாதிபதிமுதலிய யாவரும் முறையே யுத்தஞ்செய்யத் தலைப்பட்டனர். எவ்வாறெனில் மஹேந்திரன் விருஷபர்வனோடும், சூரியன் விப்ரசித்தியோடும், சந்திரன் தம்பனோடும், யமன் காலேஸ்வரனோடும், அக்னி கோகர்னனோடும், குபேரன் காலகேயனோடும் விஸ்வகர்மா மயனோடும், மிருத்யுபயங்கரன் சங்காரமயனோடும், வருணன் விகங்கணனோடும், வாயு சஞ்சலனோடும், புதன் த்ருதபிரஷ்டனோடும், சநி ரக்தாக்ஷனோடும், சயந்தன் இரத்னசாரனோடும், வசுக்கள் வர்ச்சோகணங்களோடும், அஸ்வனிதேவதை தீப்திமானோடும், நளகூபரன் தூம்பரனோடும், தர்மன் துரந்தரனோடும், மங்களன் உசாக்ஷனோடும், பாநு சோபாகரனோடும், மன்மதன் பிடரனோடும், விஸ்வன் சபலாசனோடும், ஏகாதசருத்திரர் மஹாபயங்கராளென்னும் பதினொருவரோடும், மகாமாரி உக்ரசண்டன் முதலானவர்களோடும், நந்திதேவர் முதலியோர் இராக்கதக்கூட்டங்களோடும், பிரளயகாலத்திலும் மிக்கபயங்கரமான யுத்தத்தைச்செய்தனர். இவ்வாறு இரண்டுசேனைகளும் ஒருவரோடொருவர் யுத்தம்புரிய, சம்பு வடமூலத்தில் காலியாசுதனோடும், சங்கசூடன் சிங்காதனத்தில் அனேக அசுரர்களோடும் வீற்றிருந்தனர். சங்கரருடைய சேனைகளும் தேவர்களும் அசுரர்களால் தோற்கப்பட்டு காயப்பட் டோடினர். அதைக்கண்டமுருகர் கோபித்து தேவர்களுக் கபயங்கொடுத்து தமது தேஜஸினால் கணங்களுக்குச் சாந்திசெய்து வன்மையுண்டாக்கி தானொருவராகவே யுத்தம்புரிந்து நூறுஅக்குரோணியை ஒருக்ஷணத்தில்கொன்றனர். காளி அசுரர்களை நாசஞ்செய்து உக்கிரங்கொண்டு ராக்ஷஸரக்தத்தை உருஞ்சியும், பத்து லக்ஷம் நூறுலக்ஷம் கோடிகோடியாய் யானைகளை ஒருகையினாலெடுத்து

முகத்தில் வைத்து வாயிலிட்டுத் தின்றுந் திரிவாள். ஓ முனிவரே! ஸ்கந்தரது பாணசமூகங்களால் அடிபட்டுப் பயந்தவர்களாய் தான வர்களோடிப்போயினர். அதுகண்ட விருஷபர்வன் விப்ரசித்து தம் பன் விகங்கணன் முதலியயாவரும் முருகரோடு யுத்தம் புரிந்தனர். மகாமாரியும் இளையாது யுத்தஞ்செய்தனள். இராக்கதர்கள் கந்த ரது சக்தியாயுத்தத்தால் மனக்கலக்கமுள்ளவர்களா யோடினர். சுவர்க்கத்திலிருந்து புஷ்பவருடம் பொழிந்தது. அரசன் விமான மூர்ந்து இடைவிடாமல் மழைபொழிவதுபோல் பாணங்களைப்பொ ழிய எங்கும் அந்தகாரமும், பாணம் ஒன்றோடொன்று உராய் வதினல் நெருப்பும் உண்டாயிற்று. நந்தீசர் முதலியோரும் தேவர் களும் ஓடிப்போனர்கள். போர்க்களத்தில் கார்த்திகேய ரொருவரே நின்றார். அரசனே ஓயாமல் ஒருவராலும் தடைசெய்யக்கூடாததா யும் பயங்கரமானதாயும் இருக்கும் பர்வதமாரியையும் சர்ப்பமாரி யையும் சிலாமாரியையும் மரமாரியையும் பொழிந்தான். அதனல் இடைவிடாத பனியினல்மறைபடும் சூரியன்போல் மறைபட்டிருந் தனர். அவரது தனுசையறுத்து ரதத்தைப் பொடிபடுத்தி மயூரத் தை அலைத்து சக்தியாயுதத்தையும் விடாமற்றடுத்தான். முருகர் அவனது வெற்றிப்பாட்டைக்கண்டு வேறொருதனுசையெடுத்து மற் றொரு இரதத்தின்மீதேறி அஸ்திர சஸ்திரங்களையெடுத்து அளவில் லாத யுத்தஞ் செய்யத்தொடங்கி தம்மைமறைந்திருந்த திவ்யாஸ்தி ரங்களையும் சர்ப்பங்களையும் மரங்களையும் மலைகளையும் இந்திராஸ்தி ரத்தாலறுத்துமேகாஸ்திரத்தினற்நெருப்பைத்தணிவித்து அவனது தேரையும் மிகமுயற்சியுள்ள சாரதியையும்கிரீடத்தையும் நாசப்படு த்திஅரசன்மார்பில் வெண்மையான காந்தியுள்ள சக்தியாயுதத்தை யெறிந்தனர். அரசன் மூர்ச்சித்துப் பின்பு எழுந்து வேறுதேரேறி தனுசைப் பிடித்து மாயையினல் மழைபோல் அஸ்திரங்களைப்பொ ழிந்து ஸ்கந்தரை மறுபடியும் மறைத்துச் சக்தியாயுதத்தை விடுத் தான். அது மார்பிற்றுக்குவதற்குமுன் காளிகாதேவி விரைந்தோடி வந்து அவரை மார்பிலணைத்து எடுத்துக்கொண்டு குமார னருமை யறியாத அந்தப்பாவியின்முன் இருக்கலாமா என்று சிவனரிடங் கொண்டுபோனள். சிவனர் மகிழ்ந்து அக்காளியினது அன்புக்குமகி ழ்ந்து ஓகாளீ! என் குமாரனிடம் நீஅன்புள்ளவளா யிருந்தபடியால் இவனுடனிருந்து யுத்தஞ்செய்வாயென் றனுப்பினர். நந்திகேசர் முதலானவரும் பின்றொடர்ந்தனர். எல்லாத்தேவர்களும் கந்தர்வ

கின்னர ராக்ஷசர்களும் அநேகவாத்தியங்களும் பின்றொடர்ந்தன. காளியும் யுத்தகளத்தையடைந்து சிங்கநாதஞ்செய்ய அதனால் அசுரரெல்லாம் மூர்ச்சித்தனர். அடிக்கடி அட்டகாசஞ்செய்தாள், தேன்மத்யத்தைக்குடித்துக் கூத்தாடினாள். பயங்கரமான கோரப் பல்லுடன் தடியும் கோடகியையுந் தாங்கினவராயும் மதுபானஞ் செய்பவராயும் யோகினி டாகினி கணங்களும்வந்துசூழ்ந்தன. சங்க சூடனும் காளியைப்பார்த்து அதிசீக்கரம்வந்து இராக்கதர்கள் பயப்படாவண்ணம் அபயந்தந்து போருக்காரம்பித்தனன். காளியும் பிரளயாக்கினிக்குச்சமானமான நெருப்பைப்பொழிந்தாள். அதை அரசன் மேகாஸ்திரத்தினால் அணைத்துவிட்டான். காளி வருணாஸ் திரத்தைப் பிரயோகித்தாள். தானவன் காந்தர்வாஸ்திரத்தினாலறு த்தான். காளி அக்கினிபோல் சுவலிக்கும் மஹேஸ்வர அஸ்திரத் தைவிட்டாள். அரசன் சதாசிவாஸ்திரத்தாலறுத்துத் தள்ளினான். காளி மந்திரபூர்வமாய் மகாவீரபத்திரா ஸ்திரத்தை விட்டாள். அதைக்கண்ட அரசன் இரதம்விட்டிறங்கி தண்டம்போல் வீழ்ந்து நமஸ்கரித்தான். பிரளய காலாக்னிபோன்ற அது ஆகாயத்திலே போய்விட்டது. பின்னர் காளி பிரமாஸ்திரத்தை மந்திரபூர்வமாக விட தானும் அதைவிட்டுத் தடுத்தான். காளியானவள் திவ்யாஸ்தி ரங்களெல்லாம்விட அரசனும் அவைகளையே விட்டுத்தடுத்தான். பின்னர் ஒருயோசனை நீளமுள்ள சத்தியை முயற்சியோடு எறிய அவன் அதனை அஸ்திரங்களால் ஒடித்தனன். தேவிகோபங்கொ ண்டுமஹாபாசுபதாஸ்திரத்தை யெடுத்துவிடும்போது அசரீரி இத னால் அரசனுக்கு மிருத்யு இல்லை அவனுடைய பத்தினிக்கு எவ்வளவு காலம் பதிவிரதாதர்ம மிருக்கின்றதோ அதுவரையில் அவனுக்கு மரணமில்லையென்று பிரமன்வரங்கொடுத்திருக்கிறானென்று கூற, காளி அவனைவிடாமல் லீலையாகப் பசியினால் லக்ஷம்இராக்கதர்களை விழுங்கி சங்கசூடனையும் விழுங்க ஓடினாள். அவன் பாணங் களால் தடுத்துவிட்டான். பின்பு சொலிக்கும் கத்தியை வீச அத னையும் அஸ்திரங்களாலறுத்துவிட்டான். பின் ஒரேவிழுங்காய் விழுங்கிவிடுகிறேனென்று வோட மகாசித்தனான அரசன் ஓர்பேரு ருவங்கொண்டான். காளி கோபங்கொண்டு வேகமுள்ள முஷ்டியி னால் தேரையும் சாரதியையும் நாசப்படுத்தி சூலத்தையெறிந்தாள். அவன் அதை இடக்கரத்தால் பிடித்துக்கொண்டான். தேவியான வள் முஷ்டியால் கோபத்தோடு அடித்தாள். அவன் மூர்ச்சையடை

ந்து பிறகு எழுந்திருந்து தேவியோடு கைசண்டையிட்டு தேவிவஸ்திரத்தைப் பராக்கிரமத்தினு லறுத்துவிட்டான். மாத்ருபக்தியினுல் பின்பாணம்விடவில்லை. தேவி கோபங்கொண்டவளாய் அசுரனையெடுத்துச் சுழற்றிச் சுழற்றி மேலெடுத்து வீச அவன் அங்கிருந்து குதித்து ஓடிவந்து பத்திரகாளியை நமஸ்கரித்து விமானத்திலேறியிருந்தனன். காளி பசியினுல் ராக்ஷசருடையரக்தங்களைத் குடித்தும் மாம்சங்களைத்தின்றுகொண்டும் சங்கரரிடஞ்சென்று யுத்தசமாசாரம் கூறி இப்போது லக்ஷம்பேர்தான் மிகுந்திருக்கிறுர்கள் அவர்கள் நான் சாப்பிடும்போது சிந்திப்போனவர்கள் என்றுசொல்ல அவர் சிரித்தனர். ஓ மகாதேவரே! அவனையுங்கொல்ல பாசுபதமெடுத்தபோது அசரீரி தடுத்துவிட்டது. அவனும் மகாஞானியானபடியால் என்மீது பாணம்விடவில்லையென்றுள் என்றனர். (சு-ம். எரு)

இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

கபாலி ப்ராண நாயிகாயைநமஃ

## இருபத்துமூன்றும் அத்தியாயம்.

## மஹேஸகாளி ஸ்கந்தாதிகளும் சங்கசூடேன மஹாயுத்தகதனம்.

---

நாராயணர் கூறுகின்றுர்:—ஞான சொரூபரான சிவனுர்கேட்டுத் தன்கணங்களோடு யுத்தத்துக்குச்செல்ல சங்கசூடன் இவரைப்பார்த்து விமானம்விட்டிறங்கிப் பரமபக்தியோடு தண்டாகாரமாய்வீழ்ந்து நமஸ்கரித்து மறுபடியும் இரதத்தின்மீதேறி தனுசைவளைத்து நூறுவருஷம் இருவரும் யுத்தஞ்செய்தனர். இருவரும் தோல்வி வெற்றி யடையவில்லை. பகவானும் அரசனும் ஆயுதத்தை வைத்துவிட்டு சங்கசூடன் இரதத்தின்மீதும் சிவனுர்விருஷபத்தின் மீதும் சுகமாயிருந்தனர். சிவனுர் யுத்தத்தில் இறந்துபோனவரையெல்லாம் உயிர்பெற்றெழும்படிச்செய்தனர். இவ்வாறிருக்கையில் ஓர் விருத்தாப்பியமுள்ள கிழப்பிராமணன் பசியினுல் யுத்தபூமிக்கு வந்து அரசனைப்பார்த்து எனக்குப் பிக்ஷைகொடுக்கவேண்டும் நீ சகலசம்பத்தையுங் கொடுக்கத்தகுந்தவன். நானேஅதிகமான ஆசை

யில்லாதவன். ஓர் பொருளில்மாத்திரம் ஆசையுடையவன் என்மனதி லிருக்கும் அக்கோரிக்கையை மாத்திரம் நீ நிறைவேற்றவேண்டும். நான் கொடுக்கிறேனென்று சத்தியஞ் செய்து கொடுப்பையானல் பிறகுசொல்லுகிறேன் என்றான். அரசன் அப்படியே ஆகட்டுமெ ன்று மலர்ந்தமுகத்தோடும் சத்தியத்தோடும் சத்தியஞ்செய்ய, எனக்கு உனது மந்திரகவசம் வேண்டுமென்று வஞ்சனையாகக் கூறி னான். அரசன் சொற்றவறாமல் கொடுக்க அவன் வாங்கிக்கொண்டு பின்னர் சங்கசூடனுருவைத்தாங்கி துளசியிடஞ்சென்று புணர்ந்து போயினன். சம்புவும் சங்கசூடனும் வருங்காரணத்தை யறிந்தவரா கையால் யுத்தம் முடியவேண்டிய முறைப்படி சங்கசூடன் போருக் காரம்பித்தான். சம்புவானவர் அவனைச் சங்கரிக்க பிரளயாக்கினி போலும் தடைசெய்யக்கூடாததாய் செயிக்கக்கூடாததாய் சத் துருக்களை நாசஞ்செய்யவல்லதாய் கிரீஷ்மகால சூரியனைப்போல் பிரகாசிக்கின்றதாய் ஆயிரம் வில்நீளமும் நூறுமுழம் பருமனு முள்ளதாய் பிராணனோடு கூடினதாய் பிரஹ்மரூபமாய் நித்யமான தாய் வாக்கினாற் சொல்லக்கூடாததாய் பிரமாண்டத்தைச்சங்கரிக்க வல்லமையுள்ளதாயிருக்கிற பெரியசூலாயுதத்தை ஓர் விளையாட் டாக எடுத்துச் சுழற்றி சங்கசூடன்மே லெறிந்தனர். அரசன் தன் கையிலிருந்தவில்லை எறிந்துவிட்டு வணங்கித் தனது இஷ்டதெய் வத்தைத் தியானித்திருந்தனன். சூலமும் சுழன்று அரசன் மேல் வீழ்ந்து அவனைப் பஸ்மம்செய்தது. உடனே அவன் திவ்யரூபங் கொண்டு கோலோகத்திலிருந்துவந்த இரத்னவிமானத்திலேறி கோ லோகஞ் சென்று ராதாகிருஷ்ணனுடைய பாதங்களைப் பக்தியோடு நமஸ்கரித்தான். அவ்விருவர்களும் சுதர்மனைப்பார்த்து மலர்ந்தமுக முள்ளவர்களாய்ப் பிரீதியினால் மார்பிலணைத்துக்கொண்டனர். பின் சூலாயுதம் விட்டவரிடம்சென்றது. சங்கசூடனுடைய எலும்புகள் பூவுலகில் சங்குவடிவங்களாயின. அவை தேவார்ச்சனைக்குப் பரிசு த்தமானவைகள். சங்குசலமானது தேவர்களுக்குமிகவும் பிரீதி யைக் கொடுக்கின்றது. சிவனார் தவிர மற்றத்தேவர்களுக்குப் புண் ணியதீர்த்தம்போல் பரிசுத்தமாயிருக்கிறது. சங்குசப்தம் எங் குண்டாயிருக்கிறதோ அங்கு இலக்குமிதேவி வாசமாயிருக்கிறாள். சங்குதீர்த்தத்தால் ஸ்நானஞ்செய்கின்றவன் சர்வதீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தவனாகின்றான். சங்கு எங்கிருக்கின்றதோ அங்கு இலக்குமிதேவியும் இருக்கின்றாள். அமங்கலங்களெல்லாம் தூரத்

தில் விலகிப்போம். எவ்விடத்தில் சங்கம் இல்லையோ அவ்விடத்தில் இலக்குமி பயந்தவளாய் கோபங்கொண்டு வேறிடத்துக்குச் செல்கின்றாள். சிவனார் அரசனைச் சங்கரித்துச் சந்தோஷத்தோடு விருஷபாரூடராய்க் கணங்களாற் சூழப்பட்டவராய்ச் சிவலோகஞ்சென்றனர். தேவர்களெல்லாம் பிரஹ்மானந்தமடைந்தனர். சுவர்க்கத்தில் துந்துபிமுழங்கிற்று. கந்தர்வ கின்னரர்கள் பாடினர். இருடிகள் போற்றினர். ஆகாயத்தில் புஷ்பவருஷம் வருஷித்தது. (சு-ம் ௩0)

இருபத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காருண்ய விக்ரஹாயை நமः

## இருபத்துநான்காம் அத்தியாயம்.

## துளசி சங்கம வர்ணனுதி.

---

நாரதர், எந்தரூபத்தினல் துளசியிடம் விஷ்ணுகர்ப்பாதானஞ் செய்தார் என்றுவினவ நாராயணர் கூறுகின்றார்:—பகவான் சங்கசூடனிடம் கவசத்தைப்பெற்று அவனுருக்கொண்டு சேனைகள்சூழ ஜயபேரிமுழங்கப் போயினர். துளசி அம்முழக்கத்தைக்கேட்டு மிக்கஅன்போடு பலகணிவழியில் நாயகன்வரவைப் பார்த்துக்கொண்டே அந்தணர்களுக்கும் பிக்ஷுக்களுக்கும் அங்கஹீனர்களுக்கும் தானங்கொடுப்பித்தும், சிறைச்சாலையி லிருப்பவரை விடுவித்தும் இருந்தனள். மாயாசங்கசூடனும் நகரிற்பிரவேசித்து தன்னரண்மனைக்குள்ளே போக, துளசி எதிர்கொண்டு பர்த்தாவைப் பார்த்து சந்தோஷத்தோடு பாதப்ரக்ஷாளனஞ் செய்து நமஸ்கரித்து இரத்தின சிங்காதனத்தில் வீற்றிருக்கச்செய்து காமாபேக்ஷையுள்ளவளாய் கற்பூரமுதலிய வாசனைகள் சேர்ந்த தாம்பூலத்தைக் கொடுத்து, இப்போது யுத்தத்திற் சென்று திரும்பிவந்தபடியினல் எனது ஜன்மமும் பிழைப்பும் சபலமாய்விட்டது. ஓ! பிரபுவே! சகலப்பிரவஞ்சங்களையும் சங்கரிப்பவரான சங்கரரிடம் உமக்கு எப்படி ஜயமுண்டாயிற்று என்றுகேட்க, விஷ்ணு சிரித்து ஓ மனைவியே! எங்களிருவருக்கும் ஒருவருடம் பூரணமான யுத்தமுண்டாயிற்று. அவர்களெல்லாம் இறந்தனர். பிரமன் எங்கள் இருவரிடம்

பிரீதியுடையவனுய் என்னை வேண்டியவாறே தேவர்களுக்கு இராஜ்யத்தைக்கொடுத்து வந்துவிட்டேன். சிவனூர் தன்னிடம் போய்ச்சேர்ந்தனரென்றுகூறி, அவளுடன்சுகபோகத்தை யனுபவிக்கும்போது அத்துளசி தன்னுயகனுடைய செயலுக்கு மாருக எல்லாக் கிரீடைகளுமிருப்பதால் சந்தேகங்கொண்டு அவரைப்பார்த்து நீயார்! அதனைச்சொல். நான் உன்னுடைய சுகத்தை அநுபவித்து என்பதிவிரதா தருமத்தைப் போக்கடித்துக்கொண்டேன். அது மிகவுந் தூரத்திலோடிப்போயிற்று. இவ்வா றென்னைக் கெடுத்தவுன்னைச் சபிக்கிறேனென்று சொன்னுள். அவ்வார்த்தையைக்கேட்ட விஷ்ணு சாபத்துக்கஞ்சி தனது நீலமேகம்போலும் பிரகாசிக்கும் உண்மைத் திருவுருவைக்காட்ட அவள் அவ்வுருவைக்கண்டு மிகவும் மனங்கூசி மூர்ச்சையடைந்து பின்னர்தெளிந்து ஓ விஷ்ணுவே! நீ என்ன காரியஞ்செய்தாய்! உன்னிடம் தயையென்பது சிறிதுமில்லாமற்போயிற்று. சலிப்பில்லாத எனது கற்பைச்சலிக்கும்படிச்செய்து என்னை வஞ்சித்து விட்டனை, என்னுடைய பதிவிரதா தருமத்தை அறியாமற்போயினை உனக்கறிவில்லை. உனது நெஞ்சம் என்னைக்கெடுக்கும் விஷயத்தில் வன்மைபெற்றிருந்தபடியால் கல்லாகக்கடவாய். எவர்கள் உன்னைச் சாதுவாகச்சொல்லுகின்றூர்களோ அவர்கள் பிரமையடைந்தவர்க ளென்பதிற் சந்தேகமில்லை. நீ தேவர்கள் பொருட்டு இப்படிச் செய்தேனென்பாய். அவர்களுக்கு நன்மையைத் தேட எண்ணியதுபோல் எனக்கு எண்ணினையா! கற்புப்போனுல் மீண்டும் வருமா!மற்றவையெல்லாம் போகலாம் வரலாம். இந்தஅருமைகளில் ஒன்றேனும் எண்ணு தொழிந்தனையே! என்று வருந்தும்பொழுது அந்த விஷ்ணு அவளுக்கு உண்மையைச் சொல்லத்தொடங்கினுர். அஃதாவது ஓ பெண்ணே! பாரதவருஷத்தில் என்னைப்பற்றி நீ நீண்டகாலம்வரையில் தவஞ்செய்தாய், சங்கசூடனும் உனக்காகத் தவஞ்செய்தான். அதனுல் அவன் உன்னை விவாகஞ்செய்துகொண்டு சுகித்தான். நீ என்னைக்குறித்துச் செய்த தவத்துக்குப் பலன் கொடுக்கும் சமயம்வந்துவிட்டது. அதனுல் நானும் வந்துவிட்டேன். நீ இந்தச்சரீரத்தை விட்டு திவ்யதேகமெடுத்து என்னுடன் ரமிக்கப்போகின்றுய். உன்னுடம்பு பரதகண்டத்தில் கண்டகி என்னும் புண்ணிய நதியாய் மனிதர்களைப் பரிசுத்தஞ்செய்யும். உன்னுடைய ரோமங்கள் விருக்ஷங்களிற்சிறந்த துளசி என்னும் புண்ணிய விருக்ஷமாய் மூன்றுலகினும், கோவுலகினும், விரஜாநதிதீரம்,

ராதாமண்டலம், பிருந்தாவனம், பாண்டீரம்,சண்பகவனம், சந்தன வனம், மாதவி தாழை முல்லை மல்லிகை மாலதி இவைகள் நிறைந் துள்ளவனம் ஆகிய இடங்களிலும் நிறைந்திருக்கும். அத்துளசி யின் மகிமையை இன்னமும் சொல்லுகிறேன். அவைகளைக்கேட்டு பதிவிரதா பங்கத்தைநான்செய்தேனென்றும் நீ அப்படியே ஆனு யென்றும் கவலைப்படும் மனக்கவலையை விடுவாயாக.

புண்ணியக்ஷேத்திரங்களில் துளசிச்செடி யிருக்குமாயின் அத னடியில் நான்முதல் எல்லாத்தேவர்களும் குடியிருப்போம். அத னடியிற் றங்கும்சலம் சகலபுண்ணியதீர்த்தமென்று சொல்லப்படும். அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவருக்கு சகலதீர்த்தபல னுண்டா கும். எனக்கு ஆயிரம்பாற்குடங்களால் ஸ்நானஞ்செய்வித்தால் எவ்வளவு திருப்தி யுண்டாகுமோ அவ்வளவு திருப்தி துளசிதீர்த்த அபிஷேகத்தால் உண்டாகும். எவர்கள் துளசிதீர்த்தத்தை மரண காலத்தில் பானஞ்செய்கின்றுர்களோ அவர்கள் சர்வபாவத்தினி ன்றும் விடுபட்டு விஷ்ணுலோகப் பிராப்தராய் அங்குள்ளவரால் பூஜிக்கப்படுவார். தீர்த்தங்களில் பிராணனை விடத்துணிந்தவன் கையிலாவது உடம்பிலாவது வைத்துக்கொண்டு விடுவானுயின் அவ னும் விஷ்ணுபதத்தையடைவான். துளசி தீர்த்தத்தைப் பானம் பண்ணினவரும் துளசிக்கட்டையை மணிபோலாக்கி மாலையாகத் தரித்துக்கொண்டவரும் லக்ஷம் அஸ்வமேத பலனையடைவர். துளசி யைக் கையிலெடுத்துக்கொண்டு எதைச்செய்கிறேனென்று எவன் பிரமாணஞ் செய்கிறுனே அதைச் செய்யானுயின் அவன் கால சூத்திர நரகினையடைகிறுன். துளசிமரத்தடியில் பொய்ச் சத்தியம் செய்பவன் பதினன்கு இந்திரர்வரையில் கும்பிபாகத்தை யடைவன். பவுர்ணமி அமாவாசை துவாதசி மாதப்பிறப்பு நடுப் பகல் இரவு இரண்டுசந்திக்காலங்கள் தீட்டுக்காலங்கள் அசுசியா யிருக்குங் காலங்கள் எண்ணெயிட்டுக் கொண்டிருக்குங்காலம் இக் காலங்களில் துளசியை எடுத்தால் என்னுடையதலையை அறுத்தவ ராவர். துளசி மூன்றுநாளைக்கு உபயோகப்படும். எடுத்துவைத்த அந்தத்துளசி சிராத்தம் விரதம் பிரதிஷ்டை தேவதார்ச்சனை முத லியகாலங்களிலும் தானகாலங்களிலும் சுத்தமானதென்று கொள் ளத்தகும். பூமியிலாவது சலத்திலாவது வீழ்ந்திருந்தாலும் அத னைச் சலத்தாற் சுத்திசெய்து உபயோகித்துக்கொள்ளலாம்.

ஓ துளசி என்னும் பேருடையாய்! நீ துளசிச்செடி யாவதா லுண்டாகும் விசேஷங்களெல்லாங் கேட்டனையன்றோ. இதுபோ லும் உனது ரூபமாகிய நதியும் சமுத்திர ராஜனுக்குப் பத்தினியா கப்போகின்றது. நீ கோலோகத்துக்குப் போய் கிருஷ்ணமூர்த்தி யோடு கிரீடித்துக்கொண் டிருக்கப்போகின்றாய். என்னைக்கல்லாகச் சபித்தனையல்லவா! அதனால் கண்டகிநதிக்கரையில் மலையாகப்போ கின்றேன். அந்தக்கல்லை கோரப்பற்களோடுகூடிய கொடியகீடங்கள் கோடிகோடியாய் வந்து துளைத்துத் துவாரமாக்கி உள்ளேசென்று தங்களுடைய கோரப்பற்களால் குக்குடாண்டம்போல் அனேக மாகக் கொத்திக்கொத்தித் திரட்டி அவற்றுள் ஒவ்வொன்றை சக் கரமுதலிய அடையாளங்கள் உள்ளனவாகக் கொந்திக் கொந்தி என்னுடைய அவதாரமூர்த்தங்களென்றுசொல்லும்படிச்செய்யும். அவற்றுள் ஒரு துவராத்துள் நாலுசக்கரமும் மேலேவனமாலையும் அனேகவிசித்திரமாகக் காணப்படும்ரதாகாரமும் நீர்கொண்டமேகம் போல்நிறமுமுள்ளது லக்ஷ்மிநாராயணரென்றும், வனமாலையில்லா மல்மற்றவையுள்ளன லக்ஷ்மிஜனார்த்தனர் என்றும், இரண்டுதுவா ரத்துள் நான்கு சக்கரமும் வனமாலையில்லாமல் ரதாகாரமாகவும் செய்யப்பட்டுள்ளது ரகுநாதரென்றும், மிகச்சிறியதாய் இரண்டு சக்கரமாத்திரம் உள்ளது வாமனரென்றும், மிகச்சிறிதாய் வனமாலை யோடு இரண்டு சக்கிரமுள்ளது ஸ்ரீதரரென்றும், இதுமனிதர்களுக் குச் சம்பத்தைக் கொடுப்பெதன்றும், பெரிதாகவும் விருத்தாகார மாகவும்இரண்டுசக்கரமாத்திரமாகவுமுள்ளது தாமோதரரென்றும், நீளமும் மிகப்பெரிதும் மிகச்சிறிதுமில்லாமல் மத்திமமாயும், ஏழு சக்கரமும் சரத்பூஷணத்தோடு கூடியுமுள்ளது ராஜராஜேஸ்வர ரென்றும், அது ராஜசம்பத்தைக் கொடுப்பதென்றும், மத்தியமமா யும் விருத்தாகாரமாயும் இரண்டு சக்கரத்தோடு அம்பறாத்தூணி யும் பாணஅடியும் உடைத்தாயுமுள்ளது ரணராமரென்றும், பதி னன்கு சக்கரத்தோடு பெரியதாயும் நீர்கொண்டமேகம்போன்றதா யுமுள்ளது ஆதிசேஷரென்றும், அது புருஷார்த்தத்தைக் கொடுப் பதென்றும், சக்ராகாரமாயும் இரண்டுசக்கரத்தோடும் கோஷ்பதத் தோடுமேககாந்தியும் மத்திமமாகவுமுள்ளது மதுசூதனரென்றும், ஒருசக்கரமுள்ளதுசதர்சனரென்றும்,மறைபட்ட சக்கரமாய்த்தோ ன்றுகிறது கதாதரரென்றும், இரண்டுசக்கரத்தோடும் ஹயக்ரீவரூப மாகக்காணப்படுவது ஹயக்கிரீவரென்றும், இரண்டுசக்கரமும் திறர்

தவாயும் பயங்கரரூபமும் உள்ளது நரசிங்கரென்றும், அது வைராக்கியத்தைக் கொடுக்குமென்றும், இரண்டுசக்கரமும் பெரியவாயும் வனமாலையுமுள்ளது லக்ஷ்மி நரசிஹ்மரென்றும், இது கிருகஸ்தர்களுக்குச் சுகங்கொடுப்பதென்றும், துவாரமுகப்பில் இரண்டுசக்கரமும் சமமான ஆகாரமும் பிரகாசமுமுள்ளது வாசுதேவரென்றும், அது சகலகாமபலத்தையும் கொடுப்பதென்றும், சூக்ஷ்மமானசக்கரமும் ஒருரந்தரத்துக்குள் அநேகரந்தரமும் நீர்கொண்ட மேகம்போலுமுள்ளது பிரத்யுமனரென்றும், அது கிருகஸ்தர்களுக்குச் சுகங்கொடுப்பதென்றும், துவாரமத்தியில் இரண்டுசக்கரமும் புருஷ்டபாகம்பெருத்தும் உள்ளது சங்கரஷணமூர்த்தி என்றும், அது மனிதர்களுக்குச் சுகங்கொடுப்பதென்றும், விருத்தகாரமாயும் அழகுள்ள செம்பட்டுநிறமாயும் உள்ளது அநிருத்தரென்றும், அது கிரகஸ்தர்களுக்கு சுகங்கொடுப்பதென்றுஞ் சொல்லப்படும். இந்த சாளக்கிராமங்களில் லக்ஷ்மியோடு விஷ்ணுவானவர் சாந்நித்தியமாயிருப்பர். பூஜைசெய்வோருக்கு சாளக்கிராமம் சத்ராகாரமாயிருந்தால் அது ராஜ்யத்தையும், விருத்தமாயிருந்தால் அது மகாசம்பத்தையும், சகடம்போலிருந்தால் அது துக்கத்தையும், சூல நுனி போலிருந்தாலும மூர்த்திபின்னப்பட்டிருந்தாலும் அவைமரணத்தையும், விகாரமுகமாயின் தரித்திரத்தையும், பிங்களவர்ணமாயிருந்தால் அது ஹானியையும், சக்கரம் பிளவுபட்டிருந்தால் அது வியாதியையும் உண்டாக்கும்.

சாளக்கிராமங்கள் உற்பத்திக்கிடமாயிருக்கும் அம்மலையின் கற்கள் ஒன்றோடொன்று கூடிப்புணர்ந்து கிரீடித்துக்கொண்டிருக்கும். அருகிலுள்ள கண்டகிநதியில் வீழ்கின்றகற்கள் சாளக்கிராமங்களாய் உலகினருக்குப் பூஜாயோக்கியமாகின்றன. அவை சூரியதாபத்தினல் பிங்களநிறமாயும் பெரிதாயும் ஆகின்றன.

இந்தச் சாளச்கிராமபூஜை யுடையோர்க்கு அதன் சம்பந்தமான தீர்த்தஸ்பரிசமே சகலதீர்த்தஸ்நானமென்றும், அந்தப்பூஜை செய்வதே சகலயாகமும் செய்வதாமென்றும், யாகதீக்ஷை பெற்றதாமென்றும், விரதங்களாலும் தவங்களாலும் வேதபாராயணங்களாலும் உண்டாகும் புண்ணியமாமென்றும், அதன் அபிஷேகதீர்த்த பானமே தேவானுக்கிரகத்தை யடைவிக்குமென்றும், அவனுடைய ஸ்பரிசத்தைத் தீர்த்தங்களெல்லாம் விரும்

பும்படிச் செய்யுமென்றும், பரிசுத்தமான சீவன்முத்த னுக்கு மென்றும், விஷ்ணுபதத்தை யடையச்செய்து அவர் அதிகார த்தையுஞ் செய்யச்செய்யுமென்றும், செய்திருந்த பாவங்களெல் லாம் கருடனைக்கண்ட பாம்பைப்போல் நடுங்கும்படிச் செய்யு மென்றும், அவனது அந்த ஜன்மம்வரையிலுள்ள லக்ஷம் பிதுர்க் களைக் கரையேற்றச் செய்யுமென்றும், அவனுடையபாததூளி பூதேவியையும் புனிதமாக்குமென்றும், அத்தூளிபட்டவனையும் விஷ்ணுபாதத்தில்ஐக்கியஞ்செய்யுமென்றும், சாளக்கிராமத்தைவை த்துக்கொண்டு பொய்சொல்லுகிறவன் லக்ஷ மன் வந்தரம்வரையில் அசிபத்திரவனமென்னும் நரகத்தை யடைவானென்றும், சாளக்கி ராமத்தின்மே லிருக்கும் துளசியை எடுக்கிறவன் ஜன்மாந்தரத்தில் ஸ்திரீயைப் பிரிவானென்றும், சங்கத்திலிருக்குந் துளசியை எடுக்கி றவனுக்கு ஏழுசன்மம் வரையில் மனையாட்டி வந்து வந்து இறப்பா ளென்றும், சங்கத்தையும் துளசியையும் சாளக்கிராமத்தையும் ஒன்றாகவைத்துப் பூஜிப்பவன் மஹாஜ்ஞானியாய் விஷ்ணுவுக்குப் பிரியனாய்விடுகிறான் என்றும் சொல்லப்படும். ஓ பெண்ணே! நம் மிருவருக்கும் சாபத்தாலுண்டாகும் வடிவங்களால் உலகிற்குவரும் நன்மைதீமைகளைச் சொன்னேன்.

ஓ துளசீ! நல்லபுருஷனோடு ஒருநாள் சுகமனுபவித்த ஸ்திரீ யானவள் அவனைவிட்டுப் பிரிவதென்றால் அவளுக்கு எவ்வளவோ துக்கமும் கஷ்டமும் உண்டாகின்றன. ஒருமன்வந்தரம்வரையில் அளவில்லாத சுகத்தையனுபவிப்பதற் குரியனாயிருந்த அவனிறந்து விட்டானென்றால் உனக்குண்டாகும் கஷ்டத்துக் களவேது என்று சொல்லிக்கொண் டிருக்கும்பொழுதே துளசி தேகத்தைவிட்டு திவ் யரூபத்தோடும் விஷ்ணுமூர்த்தியினுடைய வக்ஷஸ்தலத்தில் வசித் திருக்கும் வாழ்வுபெற் றுய்ந்தனள். சங்கசூடனாய் வந்த நாராயண ரும் தம்மிடம்போயினார். ஓ நாரதரே! துளசி விஷ்ணுவுக்குப்பத் தினியான காரணங்கூறினேன் என்றார். (சு - ம். கoஉ)

இருபத்துநான்காம் அத்யாயம் முற்றிற்று.

---

காந் தாயை நமஃ

# இருபத்தைந்தாம் அத்தியாயம்.

## துளசி பூஜாவிதானம்.

நாரதர், துளசியானவள் வைகுண்டத்திற் சென்றபின்னர் அங்கு நடந்தவிசேஷங்களேயும், அவளுடைய பூஜா ஸ்தோத்திரங்களேயும், அவளேப்பூசித்தவர் இன்னர் என்பதையும் அறியவிரும்புகிறேனென்ன, நாராயணர் கூறுகின்றூர்:—துளசி திவ்யசுந்தரரூபியாய் வைகுண்டம்போனபோது அங்கிருந்த லக்ஷ்மி கங்கை சரஸ்வதி என்னுமூவரும் கண்டனர். அவருள் இருவர் பொருமையற்றிருந்தனர். சரஸ்வதி அவளுடைய ரூபலாவண்ய சவுந்தரியங்களேக்கண்டு பொருதவளாய் பகவான் சமீபத்திலிருந்தும் அவரையும் எண்ணுமல் கோபங்கொண்டு கையால்அடித்தனள். துளசி நாணமுற்றவளாய் அங்கிருந்த பகவானுக்குந்தெரியாமல் மறைந்து பூலோகத்தில் துளசிவனத்தில் வந்திருந்தனள். ஹரியானவர் அவளதுபிரிவாற்ருது சரஸ்வதிக்கு மனங்குளிருமாறு சரசசல்லாபத்துடன் துளசியினது நன்மைகளேக்கூறி அவளிடம் விடைபெற்று, துளசிவனம்போய் "லக்ஷ்மீ மாயா காமவாணீ பீஜபூர்வம் தசாக்ஷரம் - பிருந்தாவனேதி ஜேந்தஞ்ச வன்னிஜாயம்தமேவசஃ" இப்படிக்கூட்டப்பட்ட மந்திரத்தினுல் சந்தனபுஷ்பங்களேக்கொண்டு பூஜித்து தூபமும் நெய்த்தீபமுங்காட்டி நைவேத்தியாதி வுபசாரங்கள் செய்து "பிருந்தையென்பதும ரங்கள் நெருங்கி அடர்ந்திருப்பதற்குப்பொருளாகலின் பண்டிதர்கள் என்மனேவியாகிய துளசி ஓரிடத்தில் நெருங்கியிருக்கின்ற துளசிவனத்தில் இருந்தபடியினுல் அவளேப் பிருந்தையென்று சொல்லுகிறுர்கள். அவளே நான்பஜிக்கின்றேன். முற்காலத்தில் எந்தத்தேவி பிருந்தாவனந்தோறும் இருந்ததனுல் பிருந்தாவநீ என்று பெயர்பெற்றுளோ அவளே நான் பஜிக்கின்றேன். எவள் சகல பிரபஞ்சத்திலும் பூஜிக்கப்பட்டு விஸ்வபூஜிதை என்று பெயர் பெற்றுளோ அவளே நான் பஜிக்கின்றேன். அளவில்லாத பிரபஞ்சம் உன்னுல் பரிசுத்தஞ் செய்யப்பட்டமையால் விஸ்வபாவனி என்று பெயர்பெற்றவுன்னே நான் விரகத்தால் நினேக்

கின்றேன். புஷ்பங்களில் பிரியமுள்ளதேவர்களும் அவைகளால் சந்தோஷத்தை யடையாமல் உன்னால் சந்தோஷமடைகின்ற படியால் புஷ்பசாரை என்றுபெயர்பெற்றனே, ஆதலால் எனக்கும் நீ சந்தோஷத்தைக் கொடுக்கவேண்டுமென்று உன்னை விரும்புகின்றேன். அடைந்தமாத்திரத்தில் ஆனந்தத்தை யுண்டாக்குந் தன்மையால் நந்தினி என்று பெயர்பெற்ற துளசியே! உன்னால் நானும் ஆனந்தத்தையடைய நினைக்கின்றேன். எவ்வுலகத்திலும் உனக்குச் சமானமான ஸ்திரீகளில்லாதபடியினால் துளசிஎனப் பெயர்பெற்ற உன்னை நானும் சரணடைகின்றேன். கிருஷ்ணமூர்த்தி உன்னால் உருக்கொண்டு ஜீவிக்கின்றபடியால் கிருஷ்ணஜீவினி என்றுபெயர்பெற்றிருக்கின்றனை யாதலால் நானும் உன்னால் ஜீவிக்க உன்னைப்புகழ்ந்து போற்றுகின்றேன்" என்று அவளைப்போற்றிப்புகழ்ந்து "உன்னைக்காணாமல் நான்வருந்துகின்றேன். நான் காணும்படி நீவருவாயாக"வென்று அவளுடைய மந்திரத்தை யுச்சரித்தனர். துளசி சந்தோஷித்தவளாய் வெளிப்பட்டுவந்து ஹரியைவணங்கினள். அவர்மகிழ்ந்தவராய் யாவராலும் புகழும் பூஜையும்தோத்திரமும் அவளுக்குண்டாகுமாறு பலஆசிகள்கூறி அவளை யழைத்துக்கொண்டு தன்னிடம் போயினர். அங்குப்போனவுடன், ஹரி சரஸ்வதியினுடைய அனுமதியைப்பெற்று பின் அவளழைக்க வந்தவளாகையால் சரஸ்வதிதேவி கோபம் ஒழிந்தவளாய் எதிரேவந்து அவள்கையைப்பற்றியிழுத்துக்கொண்டுபோய் தன்பக்கலில் உட்கார வைத்துக்கொண்டாள். அப்படியே லக்ஷ்மியும் கங்கையும் இழுத்திழுத்து தங்கள் தங்கள் பக்கங்களில் வைத்துக்கொண்டு பின்னர் யாவரும் ஒன்றாய் அந்தப்புரம்போய் சுகமாய் வாழ்ந்தனர்.

நாரதரே! இவ்வண்ணம் அந்தஹரி புகழ்ந்து போற்றியபடியினால்தான், துளசிவனத்தில் மறைந்திருந்த அந்தத்துளசி சரஸ்வதியினால் அடிபட்ட அவமானத்தையும் துக்கத்தையும் மறந்து அவரடியில் வீழ்ந்து நமஸ்கரிக்கத்தக்கவளாயினள். காண்போமென்று வந்த இவரும் காணப்பெற்றார். அவர்புகழ்ந்த * பிருந்தா, பிருந்தாவநீ, விஸ்வபூஜிதா, விஷ்வபாவநீ, புஷ்ப சாரா, நந்தனீ, துளசீ, கிருஷ்

* பிருந்தா பிருந்தாவநீ விஸ்வபூஜிதா விஸ்வபாவநீ, புஷ்பஸாரா நந்தநீச-துலசி கிருஷ்ணஜீவநீ: ஏதந் நாமாஷ்டகஞ் சைவ ஸ்தோத்ரம் நாமார்த்த ஸம்யுதம், ய படேந்தாஞ்சஸம்பூஜ்ய ஸோஸ்வமேத பலம் லபேத்.

ணஜீவினீ இந்த எட்டுநாமங்களும் காரண நாமங்களாகையால் இதனைப் படனஞ்செய்வோர்அஸ்வமேதபலனை யடைவர். இவளுடைய ஸ்தோத்திரம் கண்ணுவசாகையிற் கூறப்பட்டிருக்கின்றது.

துளசி பூஜைக்குத் துளசிவிருக்ஷமே முக்கிய ரூபமானது. ஆவாகனாதிகள் அதிற்செய்யாமலே ஏனைய சந்தன புஷ்பதூப தீப நைவேத்யாதி வுபசாரங்கள் செய்யலாம். அவள் புஷ்பசாரமாயும் பதிவிரதையாயும் எல்லாவற்றையும் பரிசுத்தஞ் செய்கின்றவளாயும் மனோஹரமாயும் செய்யும் பாபங்களைக் கொளுத்துகின்ற அக்னிஜ்வாலையாயும் உள்ளவளென்று சாத்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றபடியினாலும் அவளுடைய பூஜைக்கு ஆவாகனம் வேண்டியதில்லை. பூஜித்தபின்னர் அந்தப் பத்திரத்தை சிரசில் வைத்துக்கொள்ளவேண்டும். அது சர்வகாமபலத்தையும் சீவன் முக்தியையும் விதேகமுக்தியையும் கொடுக்கும். முன்னேசொல்லிய தோத்திரத்தையும் பூஜையையும் கார்த்திகை மாசம் பௌர்ணமி அவள் ஜன்மதினமாகையால் அன்றுசெய்வாராயின் அவரவர்குறை தீர்ந்து இஷ்டகாமங்களைப் பெறுவர் என்றனர். (சு - ம். சச)

இருபத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காந்தி தூத ஜபா வல்யைநமஃ

## இருபத்தாறும் அத்தியாயம்.

## சாவித்திரி பூஜாவிதி.

---

நாரதர், வேதமாதாவான சாவித்திரி பிறந்த காரணமென்னை? யாரால் பூஜிக்கப்பட்டாள்?என்றுவினவ நாராயணர்கூறுகின்றார்:— ஓ முனிவரே! சாவித்திரிதேவி பிரமனாலும் வேதகணங்களாலும்பண்டித கணங்களாலும் பாரதவருஷத்தில்அஸ்வபதி என்னும் அரசனாலும் பின்னர் நான்கு வருணத்தாராலும் பூஜிக்கப்பட்டாள். இவருள் அஸ்வபதி என்னும் அரசன் பத்திரதேசத்தில் பகைவர்பலத்தையும் மித்திரர்களது துக்கத்தையும் நாசஞ்செய்கின்ற வல்லமையுள்ளவனா யிருந்தனன். அவனது மனைவியாகிய மாலதி என்பவள்

வசிட்ட ருபதேசத்தால் சாவித்திரி தேவியினது ஆராதனத்தைப் பக்தியோடுசெய்தும் அந்தத்தேவி பிரத்யக்ஷ மாகாமையால் மனக் கவலேயுடன் மனேவந்து சேர்ந்தனள். கணவன் அது கண்டு அத் தேவியைத் தான் பூசிக்கவெண்ணி புஷ்கரக்ஷேத்திரத்தில் நூறுவ ருடம் தவம்புரிந்துவந்தனன். அவனும் அத்தேவியைக்காணது மன வருத்த மடைந்திருக்கும்போது லக்ஷம் காயத்திரிஜபம் செய்யும் படி அசரீரிவாக் குண்டாயிற்று. அச்சமயத்தில் பராசர முனிவர்வர அவரைஅரசன்வணங்கினின்றனன். முனிவ ரரசனேப்பார்த்துகாயத் திரியை ஒருதரம் ஜபித்தால் இராப்பகல் செய்த பாவமும், நூறு தரஞ்செபித்தால் ஒருமாதஞ் செய்த பாபமும், ஒருலக்ஷஞ் செபித் தால் இந்தச்செென்மத்திற் செய்த பாபமும், பத்துலக்ஷம் செபித் தால் வேறு சென்மத்திற் செய்தபாபமும்போம். பிராமண ரிவ்வாறு பத்துத்தரஞ்செபித்தால் முக்தியுண்டாகும். இந்தஜபத்தைத் தீர்த் தத்திலாவது தேவாலயத்திலாவது கிழக்குமுகமாக வுட்கார்ந்து உடம்பை அசைக்காது வணங்குந்தலேயோடும் கையைப் பாம்பின் படம்போலும்வைத்துக்கொண்டு அநாமிகையின் மத்ய ரேகையிலி ருந்து கீழ்முகமாய் வலமாகத் தர்ச்சனி அடிரேகைவரையில்செய்ய வேண்டும். இவ்வாறன்றி வெண்டாமரைக் கொட்டையினுலாவது ஸ்படிகத்தினுலாவது ஜபமாலேயாகச் செய்து கொண்டு அதனேக் கோரோசனத்தாற்பூசி அரசிலேயிலாவது தாமரையிலேயிலாவது வை த்து நூறு உருகாயத்திரியை ஜபித்துபஞ்சகவ்யத்தினுலாவதுகங்கா தீர்த்தத்தினுலாவது அபிஷேகித்துப்பூஜித்து அந்தமாலேயை எடு த்து காயத்திரியை பத்துலக்ஷம் ஜபித்தால் சாவித்திரிதேவி பிரத் தியக்ஷமாவாள். மூன்று ஜன்மத்திற் செய்த பாவமும் ஒழியும்.

ஓ அரசனே!சந்திசெய்யாதவன் சர்வகர்மத்திலும் அருகனல் லன். அதனேச்செய்யாமற் போனல் பகலிற்செய்தசந்திகர்மபலனேக் கொடுக்காது. எவன் காலேமாலேகளிற் சந்தியைச் செய்யவில்லேயோ அவன் சூத்திரன்போல் பிராமணகர்மத்திலிருந்து வெளியேதள்ளத் தக்கவனுவன். எவன் பிழைத்திருக்கும் வரையில் மூன்று சந்திக ளேயும் செய்கின்றனே அவன் தேஜஸினுலும் தவத்தினுலும் சூரி யனுக்குச்சமானமாவன். எவன் சந்தியால் சுத்தமானவனே அவன் தான் சிவன் முக்தன் தேஜஸுள்ளவன். அவன் சம்பந்தமாத்திரத் தில் தீர்த்தங்களும், அவன் பாததூளியினுல் பூமியும் சுத்தமாய்

விடும். அவனுடைய பாபங்கள் கருடனைவிட்டுச் சர்ப்பங்கள் நீங்குவதுபோல் விலகுகின்றன. சந்தியைவிட்டவனிடம் பிதுர்க்கள் பிண்டத்தையும் தேவர்கள் பூசையையும் பெற்றுக்கொள்ளார். மூலப்பிரகிருதிக்குப்பக்தனுகாதவனும்,அதன் மந்திரத்தை ஜபிக்காதவனும், அத்தேவி உற்சவத்தைச் செய்யாதவனும், முச்சந்திகளைச்செய்யாதவனும், ஏகாதசிவிரத மில்லாதவனும், பகவானுக்கு நிவேதனஞ் செய்யாமல் புசிக்கிறவனும், விருஷபத்தின்மே லேறுகின்றவனும், சூத்திரான்னத்தைப்புசிக்கின்றவனும்,சூத்திரசவத்தைக்கொளுத்துகிறவனும், சூத்திரஸ்திரீக்குப் பர்த்தாவானவனும், சூத்திரனுக்குச் சமையல்செய்கின்றவனும், அவனிடமிருந்து தானம்வாங்குகின்றவனும், அவனுக்கு யாகஞ் செய்கின்றவனும், கத்தியினுல் சீவிக்கின்றவனும், கன்னிகையையும் ஹரிநாமத்தையும் வித்தையையும் விற்பவனும், பிள்ளையும் பர்த்தாவும் இல்லாதவளது அன்னத்தைப் புசிக்கிறவனும், ருதுஸ்நானஞ்செய்தபெண் அன்னத்தைப் புசிப்பவனும், வட்டியில் சீவிப்பவனும், சூர்யோதயகாலத்தில் தூங்குகின்றவனும், மச்சம் சாப்பிடுகின்றவனும், பூசைமுதலியவைகளை விட்டிருக்கிறவனும் விஷமில்லாத பாம்புக்குச் சமானமானவன் என்று கூறிப் பின் சாவித்திரிதேவியினது ஜபமுதலியவைகளை உபதேசித்து அரசனை இஷ்டசித்தியாம்படி ஆசீர்வதித்து பராசரமுனிவர் தன்னுச்சிரமத்துக்குப் போயினர்.

ஓ நாரதரே! இவ்விரதத்தை ஜேஷ்டகிருஷ்ண திரயோதசியாகிய சுத்தகாலத்தில் ஆரம்பித்து சதுர்த்தசியில் பக்தியோடு பதினுன்குவருஷம் பதினுன்கு வகைப்பட்டபழங்களோடு பதினுன்கு வகைப்பட்ட நிவேதனங்களை விதிப்படிச் சமர்ப்பிக்கவேண்டும். எவ்வாறெனின், பிராமணமுகமாக முன்னர் கணேசனையும் தினேச (சூரிய) னையும் வன்னியையும் விஷ்ணுவையும் சிவனையும் சிவையையும் பூசித்துப் பின்னர் தேங்காய் மாவிலையுடன்கூடிய மங்களமான கடத்தைத்தாபித்து சாவித்திரிதேவியை (தியானம்) "உருக்கிவிட்ட பொன்னிறமுள்ளவளாயும், பிரமதேஜஸினுல் சொலிக்கின்றவளாயும்,கிரீஷ்மகால (ஆனி ஆடி) மத்யானத்தி லிருக்கும் ஆயிரஞ்சூரிய காந்தியைப்போலு முள்ளவளாயும், புன்னகையரும்பும் பிரசன்ன முகமுள்ளவளாயும், இரத்தின பூஷணங்களால் பூஷிக்கப்பட்டவளாயும், வன்னிசுத்தமான வஸ்திரதாரியாயும், பக்தானுக்கிரக சரீர

முடையவளாயும், சுகத்தையும் முக்தியையுங் கொடுக்கிறவளாயும், சாந்தையாயும், காந்தையாயும், பிரமபத்தினியாயும், சர்வசம்பத் சொரூபிணியாயும், சர்வசம்பத்தைக் கொடுக்கிறவளாயும்,வேதத்து க்கு அதிஷ்டானதேவதையாயும்,வேதசாஸ்திர சொரூபிணியாயும், வேதபீஜசொரூபிணியாயும் இருக்கிற அந்தச்சாவித்திரியைப் பஜிக் கின்றேன்'' என்கிற தியானத்தினால் தியானித்து நைவேத்தியத் தைக்கொடுத்துத் தன்சிரசில் கையைவைத்துக்கொண்டு மறுபடி யும் தியானித்து கடத்தில் ஆசனம் பாத்தியம் அர்க்கியம் ஸ்நாநீயம் அனுலேபனம் தூபம் தீபம் நைவேத்தியம்தாம்பூலம் குளிர்ந்தசலம் வஸ்திரம் பூஷணம் மாலை கந்தம் ஆசமனீயம்மனோகரமானபடுக் கை என்னும் சோடசோபசாரத்துடன் வேதோக்தமந்திரபூர்வகமா கப்பூசித்துத் துதித்து விதிப்படி நமஸ்கரிக்கவேண்டும். கடத்தில் பூஜிப்பதேயன்றி தாருவினாலாவது பொன்னினாலாவது பிம்பங்களை யமைத்தும் பூஜிக்கலாம். அதுவும்மிக்கபுண்ணியத்தைக்கொடுக்கும். பரிசுத்தமான சலமும் பாத்ய சலமும் அறுகும் புஷ்பமும் சேர்ந்த அர்க்கியசலமும் சங்குசல அபிஷேகமும் புண்ணியத்தையும் பிரீதி யையும்,சுகந்தமான கந்தோதக அபிஷேகம் ஸ்நேகத்தையும் பரிமள த்தையும், கந்தத்திரவியம் பிரீதியையும் திவ்யகந்தத்தையுங் கொடு க்கும். ஓ தேவியே! என்னால் கொடுக்கப்பட்ட ஸ்நாநீயமும் கந்தோ தகஸ்நானமும், சர்வமங்களரூபமாயும் சர்வமங்களத்தையும் புண் ணியத்தையும் கொடுக்கிறதாயும் நல்லபரிமளத்தோடு கூடியதாயும் சுகத்தைக்கொடுப்பதாயுமுள்ள தூபமும், ஜகத்தைப்பார்ப்பதற்குக் காந்தியை யுண்டுசெய்து அந்தகாரத்தை நாசஞ்செய்கிறதாயுமு ள்ளதீபமும், பசியைப்போக்கிச் சந்துஷ்டியையும் வலியையும் இன் பத்தையும் செய்யவல்ல ருசியோடுகூடிய நைவேத்தியமும் அங்கீ கரித்தல் வேண்டும். கற்பூரமுதலியவற்றால் பரிமளிப்பதாயும் ரம்ய மாயும் துஷ்டியையும் புஷ்டியையும் செய்வதாயுமிருக்கிற சிறந்த தாம்பூலமும்,மிகவும்குளிர்ந்து தாகநாசத்தைச்செய்கிறதாயும் உலக த்துக்கெல்லாம் பிராணரூபமாயுமிருக்கிற குளிர்ந்தசலமும், சபைக் கும் தேகத்துக்கும் அழகையும் பிரகாசத்தையும் உண்டுசெய்வதா யும் பஞ்சியினாலும் பூச்சியினாலும் உண்டானதாயு முள்ளவஸ்திர மும், பொன்னாற்செய்யப்பட்டதாயும் புண்ணியம் ஐஸ்வர்யம்இவை யிற்றைக் கொடுக்கிறதாயுமிருக்கிற இரத்தினபூஷணங்களும், பல வித விருக்ஷங்களில் பலவிதரூபமாகவுள்ள பழவர்க்கங்களும், சர்வ

மங்களரூபமாயும் சர்வமங்களத்துக்கெல்லாம் மங்களமாயும் அதிக காந்தியோடு கூடினதாயும் பிரீதியைக் கொடுக்கிறதாயுமுள்ள பல விதமான புஷ்பமாலைகளும், புண்ணியத்தைக்கொடுக்கும் பரிமள முள்ள கந்தமும், பால்ய சோபையை விருத்திசெய்கிற அழகிய சிந்தூரமும், சுத்தமான கிரந்தியோடுகூடிய புண்ணியமான நூலினால் செய்யப்பட்டதாயும் வேதமந்திரத்தால் பரிசுத்தஞ்செய்யப்பட்டதாயு மிருக்கிற யக்ஞோபவீதமும் ஆகிய இவைகளையெல்லாம் அங்கீகரித்தல் வேண்டுமென்று மூலமந்திரத்தினால் கொடுத்துத் துதிக்கவேண்டும். விரதத்தில் பிராமணனுக்குத் தக்ஷிணைகொடுக்க வேண்டும். இலக்குமிமாயாகாம பீஜங்களைப் பூர்வத்திலும் சதுர்த்தியந்தமான சாவித்திரியை நடுவிலும் சுவாஹ என்பதை அந்தத்திலும் உள்ளதை அஷ்டாக்ஷரமந்திர மென்கின்றனர். மத்யான்னத்தில் சொல்லப்படும் சாவித்திரிதோத்திரம் சர்வகாமபலத்தையுங்கொடுக்கும். அது பிராமணனுக்கு ஜீவனரூபமாயும் கோலோகத்தில் கிருஷ்ணனால் பிரமனுக்குக் கொடுக்கப்பட்டதாயுமுள்ளது. கிருஷ்ணன் ஆக்ஞையால் பிரமன் அதைத்துதிக்க சாவித்திரி சந்தோஷித்து அவனைப்பர்த்தாவாக இச்சித்து சத்தியவுலகில் பிரமனோடிருக்கிறாள். அத்தோத்திரத்தைக் கேட்பீராக. ஓ சச்சிதானந்த ரூபையே! மூலப்பிரகிருதி ரூபிணியே! இரண்யகர்ப்ப ரூபணியே! பிரசன்னமாகக்கடவாய். தேவஸ்வரூபிணியே! பரமானந்த ரூபிணியே! நித்தியையானவளே! நித்யமான புருஷனுக்குப் பத்தினியானவளே! நித்யானந்தசொரூபிணி யாயிருக்கின்றவளே! பிராமண சாதி சொரூபமாக விருக்கின்றவளே! சுவலிக்கும் அக்னிபோன்றவளே! அவர்களாற்கூறப்படும் சகலமந்திரரூபமாக இருக்கின்றவளே! பராத்பரமானவளே! மோக்ஷத்தையும் பிரமதேஜசையும் கொடுக்கிறவளே! பிரசன்னமாகக்கடவாய். மனோவாக்குக் காயங்களினால் செய்யப்படும் பாவங்களெல்லாம் உன்னை ஸ்மரித்தமாத்திரத்தில் பஸ்மமாய்விடும் என்றுகூறி, பிரமஹ்மா அச்சபையில் நிற்கும் போது சாவித்திரி மகிழ்ந்து பிரமனுலகடைந்தனள். இத்துதியை அஸ்வபதிதுதித்து தன்மனோபீஷ்டத்தை யடைந்தான். எவன் சந்தியாவந்தனத்தின்பின் இதனை வாசிக்கின்றானோ அவன் நான்குவேதங்களையும்படித்தபலனை அடைகிறான் என்றனர். (சு - ம். அஎ௨)

இருபத்தாறும் அத்யாயம் முற்றிற்று.

---

உ

கலா லாபாயைநமஃ.

## இருபத்தேழாம் அத்தியாயம்.

## * அஸ்வபதௌஸாவித்திரிஜன்மாதிஃ.

நாராயணர் கூறுகின்றார்:—அஸ்வபதியானவன் இந்தத்துதியால் பூஜிக்க தேவி,பிள்ளையைப்பார்த்து சொல்வதுபோல் அரசனை அன்புடன்நோக்கி ஓ மகாராஜனே! உன்பத்தினி பெண்ணையும், நீ புத்திரனையும் பெறப்பிரார்த்திக்கின்றீர்கள். அவ்வபீஷ்டம் காலக்கிரமமாக உண்டாகுமெனச் சொல்லி பிரமனுலகடைந்தாள். அரசன்வீட்டுக்குப்போனபின் சிலகாலங்கழித்து ஓர்பெண்பிறந்தது. அதற்குச் சாவித்திரிஎனப் பெயரிட்டான். அக்குழந்தை சுக்லபக்ஷசந்திரன்போல் வளர்ந்து யௌவனமடைந்து சத்யசந்தனும் குணவானுமுள்ள த்யுமத்சேனன்புத்திரனாகிய சத்தியசேனனைப் பர்த்தாவாகக் கோரினள். அவளெண்ணப்படியே அரசன் சுவர்ன பூஷிதையாய் விவாகஞ்செய்துவைத்தனன். சத்தியசேனனும், சந்தோஷமாய்த் தன்வீடுசேர்ந்து ஒருவருஷங்கழித்துத் தன்தகப்பன் ஆக்ஞையால் கட்டைவெட்டிவரவும் பழம்பரித்துவரவும் காட்டுக்குப்போக சாவித்திரியும் தெய்வவசமாய் கூடவேசென்றாள். சத்யசேனன் தற்செயலாய் மரத்திலிருந்து வீழ்ந்துயிர்துறக்க, அவனையமன் அங்குஷ்டஅளவான சரீரமுள்ளவனைக் கட்டிக்கொண்டு போக,சாவித்திரியும் பின்னேபோயினள். சாதுக்களுக்குள் சிறந்த யமன் தன்பின்வரும் சாவித்திரியைப் பார்த்து ஓ சாவித்திரீ! மனுஷ்யதேகத்தோடு எங்குவருகின்றனை! வரவிருப்பமிருந்தால் தேகத்தைவிட்டுவருவாய். மநுடன் பஞ்சபூதசரீரத்தோடு என்லோகத்தை அடைய வல்லமையுள்ளவனல்லன். இந்தத்தேகம் எனதுலோகத்தில் எப்போதும் அழியுந்தன்மையுடையது. ஓ பதிவிரதையே! உன்பர்த்தாவுக்கு ஆயுள்முடிந்துவிட்டது. அவன் தான்செய்த கர்மத்தையனுபவிக்க இப்போது என்லோகத்துக்கு வருகிறான். எந்தவுயிர்களும் கர்மத்தினாலுண்டாகி கர்மத்தினாலேயே நசித்துப்போகின்றன. சுகம் துக்கம் பயம் சோகம் முதலியனவெல்லாம் கர்மத்தினாலேயே அடைவிக்கப்படுகின்றன. கர்மத்தினால் தான் இந்தி

* அஸ்வபதியிடம் சாவித்திரி ஜென்மமடைதல்.

ராதி சரீரங்களைப் பெறுவதுமாம். எவன் ஈஶ்வரனுக்கு அடிமை யாகின்றானோ அவன் இப்பிறப்பினின்றும் விடுபடுகின்றான். இது நிச்சயம். உயர்ந்த பிராஹ்மணாதி சாதித்தன்மைகளும், இழிந்தசாதித்தன்மைகளும், சராசராதி சரீரத்தன்மைகளும், இராஜபோகாதிகளும், சகலசித்திகளும், சிவசாரூபாதி பதப்பிராப்திகளும், அவரவர்செய்யும் கர்மபேதங்களால் அடையப்படுவனவேயாம். இதில் ஐயமில்லை என்றுசொல்லுகின்றார் பெரியோர் என்று இயமன் கூறினான் என்றனர். (சு - ம். உரு)

இருபத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

கம்பு கட்யை நமঃ

## இருபத்தேட்டாம் அத்தியாயம்.

## * தர்மராஜம்பிரதிஸாவித்திரீகிருதஅத்யாத்மபிரஸ்நঃ

---

நாராயணர் கூறுகின்றார்:—சாவித்திரி இயமன் வார்த்தையைக் கேட்டுபரமபக்தியோடு அவனைப்பார்த்து கர்மம் என்றால் என்னை? எதனால் அது உண்டாகின்றது? அக்கர்மத்துக்கு ஏது எது? தேகியார்? தேகம் எது? எவன் கர்மத்தைச்செய்விக்கிறவன்? தியானம் என்றால் என்னை? புத்திஎன்றால் என்னை? பிராணிகளுக்குப் பிராணன்எது? இந்திரியங்கள் எது? அவைகளின் இலக்கணங்களென்னை?தேவதைகள்யார்?போக்தாயார்?புசிப்பிக்கின்றவன்யார்?புசிக்கின்றவன்யார்?போகமாவதென்?னைபிராயச்சித்தமாவதென்னை?சீவன்யார்? பரமாத்மாயார்? இவைகளையெல்லாம் நீர் நன்றாகத் தெரிவிக்கத்தக்கவரா யிருக்கின்றீர் என்றாள். தருமராஜன் கூறுகின்றான்:—வேதத்தில் எந்தக்கருமம் சொல்லப்பட்டதோ அதுதான் சிறந்த சுபகரமான கருமம். வேதாங்கீகாரமல்லாத அவைதிககர்மங்கள் அசுபகரமான கருமமாம். சங்கற்பமற்றதான பூஜை கர்மத்தை நசிப்பித்துப் பரமபக்தியை யுண்டாக்கும். அதனையுடையவன் கருமபலத்தை யனுபவிக்கிறதில்லை. அவனுக்குச் சுகதுக்கரூபமான

* இயமனைப்பார்த்து சாவித்திரி கூறியஆத்மவித்தை ப்ரஶ்னை.

சம்சார சம்பந்தமு முண்டாகிறதில்லை. எவன் பிரஹ்மபக்தியுடை யவனே அவன் ஜன்மம் மிருத்யு ஜரைவியாதி சோகம் பயம் இவை களற்ற முக்தனென்று வேதங் கூறுகின்றது. ஓ பதிவிரதையே! வேதத்தினுற் கூறப்பட்டதும் சகலருக்குஞ் சம்மதமானதுமான பக்திநிர்வாண பக்தி எனவும்,விஷ்ணுரூபபக்தி எனவும் இருவகை. அவற்றுள் வைணவர்கள் உருவபத்தியையும்பிரஹ்ம வித்துக்களும் யோகிகளும் நிர்வாணபக்தியையும் விரும்புகின்றனர். பரமாத்மா வாகிய பிரகிருதியானவள் கர்மத்தை விளைவிக்கும் பீஜரூபமா யும் எப்பொழுதும் அந்தக்கர்மபலத்தைக் கொடுக்கின்றவளாயும் கருமரூபமாகிய சூத்திரங்களைக் கைப்பற்றிக்கொண்டு பின் தான் அந்த கர்மரூபிணியாய் அவ்வக்கர்மத்துக்குத் தக்க சராசரமாகிய சரீரங்களைப் பஞ்சபூதங்களாலாக்கி அச்சரீர சம்பந்தங்களால்ஆன் மாக்களுக்குண்டாகும் அறிவின்பேதத்தால் அநுபவிக்கவேண்டிய கர்மங்களை அனுபவிக்கும் வண்ணஞ் செய்து அவ்வனுபவதிசை யில் கர்மானுபவ நீக்கமுடையவர்களை முத்தியிலும் அஃதுடையவ ர்களை மீண்டும் பிறப்பிலுஞ் சேர்ப்பிக்கின்முள். எங்ஙனமெனின், பெத்தான்மாக்களைப் பஞ்சபூதகாரியமாயும் பஞ்சவாயுக்களாலும் பஞ்சதன்மாத்திரைகளாலும் பஞ்சேந்திரியங்களாலும் இயங்கப்ப ட்டு அனுபவிக்கப்படும் கருவியாயும் வாயுவாலும் பிராணனாலும் வன்மை மென்மை பெற்றுள்ள சரீரவாசிகளாகச் செய்துப் பின் சரீர நீக்கத்தில் இவ்வுலகினின்றும் வேறுபடுத்தி சூரியமண்டல வாயுமண்டல முதலிய இடங்களில் வசிக்கச்செய்து பின் பிறந்து பிறந்து இறந்து இறந்து வரும்படியாகவும் முத்தான்மாக்களை மீண் டும் பிறத்தற் கேதுவாகிய பதங்களில் தங்கச்செய்யாது பரமவியா பகமாயும் நிர்க்குணபரப்பிரஹ்மமாயும் சர்வகாரண காரணராயும் இருக்கின்ற பிரஹ்மசொரூபத்தோடு ஒன்றுய்க் கலக்கும்படியாயுஞ் செய்கின்முள். இவ்வுண்மை யறிந்தவர் ஞானிகளாய் மோக்ஷசுகத் தையும், அறியாதார் அஞ்ஞானிகளாய்ப் பிறவித்துன்பத்தையும் அநுபவிக்கின்றன ரென்றறியக்கடவா யென்றனன். இவையெல் லாங் கேட்ட சாவித்திரி, ஓ ஐயா! நான்கேட்கவேண்டியவை சிலவுள வாகலின் பர்த்தாவையும் ஞானக்கடலாகிய உம்மையும் விட்டு நான் எவ்விடத்திற்குப்போவேன். இது நிச்சயம். நான் எந்தெந்தக்கேள் வியைக் கேட்கின்றேனே அவைகட்கெல்லாம் நீர் உத்தரவுசொல்ல வேண்டும். ஜீவர்கள் எந்தெந்தக் கரும பேதத்தினுல் யோனி பேதங்

களையும் சுவர்க்க நரகங்களையும் மேலான குருபக்தியையு மடைகின்றனர்? எந்தெந்தக் கர்மத்தினால் யோகிகளாயும் ரோகிகளாயும் ஆகின்றனர்? எந்தக்கர்மத்தினால் தீர்க்காயுளையும் அற்பாயுளையும் துக்கத்தையும் சுகத்தையும் அடைகின்றனர்? எந்தெந்தக்கர்மத்தினால் அங்கஹீனம் குருடுசெவிடு கைகால்முடம் புத்திப்பிரமம் பேராசை சோரத்தனம் முதலியவற்றை யடைகின்றனர்? எந்தெந்தக்கர்மத்தினால் சித்தியும் சாலோகமுதலிய பதவிகளும் பிரஹ்மத்துவமும் தபஸ்வித்தன்மையும் சுவர்க்க முதலியசுகமும் வைகுண்டமும் கோலோகமும் பெறுகின்றனர்? நரகம் எத்தனை விதம்? என்னென்னபெயருள்ளவை? யார் யார் எந்தெந்த நரகினையடைந்து அவைகளில் எவ்வளவுகாலம் இருக்கின்றனர்? எந்தக்கன்மத்தினால் வியாதியுண்டாகின்றது? ஓ தருமரே! நான் விரும்பின வெல்லாம் கேட்டேன். அவைகட்கு விடைகூறவேண்டும் என்றுவினவினள் என்றனர். (சு-ம். ௬0௯)

இருபத்தெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

கர நிர்ஜித பல்லவாயை நமஃ

## இருபத்தோன்பதாம் அத்தியாயம்.

## *தர்மராஜம்பிரதி சாவித்திரீகிருததான தர்மாதிபிரஸ்நः

---

நாராயணர் கூறுகின்றார்:—தருமராஜன் சாவித்திரியின் வார்த்தையைக்கேட்டு ஆச்சரியமடைந்து சிரித்து ஓகுழந்தையே! அரசன் தவத்தினாலும் சாவித்திரியின்வரத்தாலும் அத்தேவியின் ஓரம்சமாய்ப்பிறந்தவளாகையால் நீ பன்னிரு வயதுள்ளவளாயினும் உனது ஞானமானது பெரியஞானிகளுடைய ஞானத்தினும் சிறந்திருக்கிறது. விஷ்ணுவின் மார்பிலிருக்கும் இலக்குமியைப்போலும், சிவபெருமானது சரீரத்திலிருக்கும் பார்வதியைப்போலும், மற்றைய கற்புடைய ஸ்திரீகளைப்போலும் சௌபாக்யவதியாய் சத்யவானிடத்திலிருப்பாய். இன்னமும் உனக்குவேண்டிய வரங்களைக்கேட்பா.

---

* சாவித்திரி தருமராஜனைப்பார்த்துச் செய்யும் தானதர்ம பிரஸ்னை.

யென்ன, சாவித்திரி எனக்கு நூறு அவுரசபுத்திரர்களும் என் தந்தைக்கு நூறுபிள்ளைகளும் என்மாமனுருக்குக் கண்களும் இராஜ்யலாபமு முண்டாகவேண்டும். லக்ஷம்வருடம் கழிந்தபின்னர் எனது நாயகனேடு நான் பரமபதத்தை யடையவேண்டுமென்றனள். ஒ பெண்ணே! இப்போது நீவேண்டியவையன்றி உன்மனதிலுள்ள யாவையும் அடைவாயென்ருன்.

அவள் மகிழ்ந்து, கர்மவேற்றுமைகளும், அவை தோன்றுமிடமும், அவற்றைச்செய்வோர் இவரென்பதும், அனுபவிப்போர் இவரென்பதும், ஈஸ்வரன் இவ்வுலகினைப் பரிபாலித்து வருகிற முறைமையினையும் கேட்க விரும்புகின்றேன் என்றுவினவ இயமன், ஓ நல்லாய்! கர்மம், சுபம் அசுபம் என இருவகைப்படும். அவைதோன்றுதற் கிடமாக இருப்பதோடு அவற்றின் சேடங்களையும் அனுபவிக்கும் இடமாகவுமிருப்பது இப்பரதகண்டமேயாம். ஏனைய வுலகமெல்லாம் அவை தோன்றுவதற்கு இடமாகா; அவற்றைப்பெருக்கமாக அநுபவித்தற்கு இடங்களாம். அவற்றைச்செய்வோரும் அனுபவிப்போரும் சுரர் தைத்தியர் கந்தர்வர் தானவர் ராக்ஷசர்மனிதர்முதலியவர்களாம். கர்மங்கள் தோன்றுமிடத்தில் தோற்றுவிப்பதும், அவற்றைச் செய்வோரைச் செய்விப்பதும், செய்தவற்றை அனுபவிக்கச்செய்வதும் அவ்வனுபுவத்தைமாருது அவ்வவ்விடங்களில் அனுபவிக்கச் செய்வதுமே ஈஸ்வரன் பரிபாலிக்கின்ற முறைமையாம் என்று கூறிப் பின்னரும் சொல்லுகின்ருன். அறிவுடையாளே! இதனுல் கர்மங்களைச் செய்கின்ற சீவர்களே அந்தக் கர்மானுபவங்களைத்தாங்களேவகுத்து எண்ணியஇடங்களில் அனுபவிக்க அறியாரென்றும் எல்லாம் செய்வோன் ஈஸ்வரனென்றும், சீவர்களோ பரதகண்டத்தில் சுபாசுப கர்மங்களைச் செய்வதும் அக்கர்மானுபவங்களை சுவர்க்கநரகங்களில் மாறிமாறிச்சுழன்று ஓயாது அனுபவிப்பவருமாக விருப்பரென்றும், இவ்வகையாய் சுவர்க்க நரகங்களில் மொத்துண்டுழலச்செய்யும் சுபாசுபகர்மங்களை நிர்மூலம்செய்வது முற்கூறியுள்ள நிர்வாணபக்தி பிரகிருதி பக்தி என்னும் இரண்டுமேயாமென்றும் அறியக்கடவாய்.

இவ்வாறு அலைகின்ற ஆன்மாக்கள் சுகமுற்று இன்பமடையும் வண்ணம் தர்மகர்ம புண்ணியபாவ பலப் பிரயோஜனங்களை எடுத்துக்காட்டுவது புராணங்களும் ஸ்மிருதிகளுமேயாம். அவற்றுள்

பரதகண்டம் ஒன்றே தருமமுதலியவை செய்தற்குரிய இடமென வும், அவை செய்தற்கு வருணாஸ்ரமாதிகள் எல்லே எனவும் வகுக் கப்பட்டுள்ளன. வருணம் நான்கனுள் பிராஹ்மணஜாதியான்மாநுட சாதிகளுக்குள் சிறந்தவனென்றும், அதற்குக்காரணம் சாத்திரங்க ளில் சொல்லப்பட்டதருமங்களை விடாமற்செய்யும் யோக்கியனு கலினென்றும்,அவர்களில் சகாமன் நிஷ்காமன் என இருவகையின ரென்றும், அவருள் நிஷ்காமனுன பிரஹ்மனிஷ்டன் மிகச் சிறந்த வனென்றும், சகாமன் செய்யும் கர்மத்துக்குரியபலனை விரும்பு கின்றவன் என்றும், அப்பலனை யடையத்தக்கவன் என்றும் சொல் லப்படும்.நிஷ்காமன்-பலனைவிரும்பி எந்தக்கருமத்தையும் செய்யாது செய்யுங்கடமையாகச் செய்கின்றவன். அவன் தேகம் நீங்கும்பொ ழுது யாதொருதுன்பத்தையும் அடையான், மீண்டும் பிறக்கான். பிரமபதத்தையடைவான். சகாமர்கள் - அந்த அந்த கர்மத்துக்கு ரிய பதங்களையடைந்து மீண்டும் பரதகண்டத்திற்பிறந்து காலக்கிர மத்தால் நிஷ்காமராகின்றனர்.வைணவர்கள் என்றும் சகாமர்களே. அவர்களுக்கு நிர்மலமானபுத்தி யுண்டாவதில்லே. ஸ்வதர்மத்திலும் தீர்த்தயாத்திரையிலும் மேலானதவத்திலும் ஆசையுள்ளவர்கள் பிரமலோகத்தையடைகின்றனர். சத்கர்மத்தில் ஆசையும் பக்தியும் உடையவர் சூரியலோகத்தை யடைகின்றனர். பிரகிருதியாகிய தே வியினிடத்திலும், சிவன் கணபதி முதலாகச் சொல்லப்பட்ட தே வர்களிடத்திலும் எவர்கள் பக்தியைச்செய்கின்றார்களோ அவர்க ளெல்லாம் மணித்வீபமுதலிய அந்தந்த தெய்வங்களுடைய பதவி களையடைகின்றனர். இவர்களெல்லாம் தேவபதங்களையடையினும் மீண்டும் பரதகண்டத்தில்வந்து பிறப்பர். பிறவியெடுத்தல் ஒழி யாது. எப்பொழுது நிஷ்காமசித்தி யுண்டாகின்றதோ அப்பொ ழுது பிறவா நெறியாகிய முக்திசித்திக்கும்.

இனிகாமியத்தை எண்ணிச்செய்வோரடையும்பயனைக் கேட்பா யாக.சுதர்மபரிபாலகர் சுதர்மபரிபாலகனுன பிராஹ்மணனுக்குக்கன் னிகாதானம் செய்தவர்களும், பலரபேக்ஷையுடையவர்களும்பதினு ன்கு இந்திரர்வரையிலும்,பொன் வெள்ளி முதலியவைகளையும்வஸ் திரங்களையும் நெய்முதலியவற்றையும் பிராஹ்மணர்களுக்குத் தா னங்கொடுக்கின்றவர்கள் ஒருமன்வந்திரம்வரையிலும் சந்திரலோக த்தில் வசிப்பர்.பொன் தாம்பிரம் பசு இவற்றைத்தானஞ்செய்வோர்

சூரியனுலகில் பதினாயிரம்வருடம் ரோகமின்றி சுகமாய்வாழ்வர். பூமியையும் விசேஷமாகத்தனத்தையும் தானஞ்செய்வோர் விஷ்ணு லோகத்திலும் ஸ்வேதத்திவீபத்திலும் சந்திரசூரியர்கள் உள்ளவரையில் சுகமாய்வாழ்வர். எவரெவர்கள் எந்தெந்தத் தேவதைகளை யுத்தேசித்துப்பூதானமும் உப்பரிகை முதலியவற்றோடு கூடியகிருகதானமும் கிராமதானமும் செய்கின்றார்களோ அவரவர்கள் அந்தந்தத்தேவதைகளுடைய பதங்களையடைகின்றார்கள். தடாகப்பிரதிஷ்டைசெய்வோன் ஜனலோகத்தில் ஒரு துகள் ஒன்றுக்கு ஒருவருடமாகவாழ்கின்றான். சத்பிராமணனுக்கு ஓர் கன்னிகையைத் தானஞ்செய்தவன் நாலாயிரம் வில்லளவுள்ளதும் அதிற்சிறிது குறைவுள்ளதுமானபத்துநடபாவியைத்தானஞ்செய்தபலனையடைகிறான். தடாகத்தை ஜீர்ணோத்தாரணஞ்செய்தாலும், சேறுமுதலியவற்றை எடுத்தாலும், நூதனமாய்ச் செய்தபலனுண்டாகும். அரசமரத்தைப் பிரதிஷ்டைசெய்தவன் தபோலோகத்தையடைகிறான். நந்தனவனத்தைத் தானஞ்செய்தவன் துருவலோகத்தையடைந்து பதினாயிரம் வருடம்சுகமாய் வாழ்கின்றான். ஆலயத்துக்கு விமானதானஞ் செய்கின்றவன் பரமபதத்தையடைந்து ஒரு மந்வந்தரம் வாழ்கின்றான். சித்திரமமைந்துள்ள விமானதானஞ் செய்கின்றவன் நான்குபங்கதிகமாயும், சிவிகைதானஞ்செய்தால் அதிற்பாதியும், டோலிதானஞ் செய்தால் நூறுமந்வந்தரமும் வாழ்வான். பகவான் உலாப்போதற்குரிய வீதியை மாளிகைகளோடு இருக்கச்செய்கின்றவன் பதினாயிரம் வருடம் இந்திரலோகத்திலிருப்பான். எவரெவர் எந்தெந்த சுகத்தை விரும்புகின்றார்களோ அவரவர் அததற்குரியதிரவியங்களைப் பிராமணர்களையாவது தேவர்களையாவது உத்தேசித்துத் தானங்கள் செய்வராயின் அந்தந்தச்சுகத்தை யடைகின்றனர். செய்யாதவரடையார். அஃதாவது எந்தப்பொருள் வேண்டுமோ அந்தப்பொருளைத் தானங்கொடுத்தால்தான் அப்பொருள் கொடுத்தவனுக்கு வருமென்பதாம். சுவர்க்காதிசுகங்களை யனுபவித்தவன் மீண்டும் பாரதவருடத்தில் பிராஹ்மணனாகவே பிறந்து வீட்டுநெறிகூட முயலுவான்; முயலானாயின் மீண்டுஞ் சுவர்க்கசுகத்தையேயடையப் பேசுவான். க்ஷத்திரியர் முதலானவர்களும் பிரஹ்மசித்தி வேண்டுமானல் பிராஹ்மணராகவே பிறத்தல்வேண்டும். அப்பிறப்பு கூடுதல் அரிது. அது சன்மாந்திரங்களிற்செய்த புண்ணியபலத்தால் வரத்தக்கது. ஓ பதிவிரதையே! இது வரையில் யான் சொல்லிவந்ததால்

புண்ணியபாவங்கள் இரண்டென்றும், அந்தக்கர்மாக்கள்தான் அவரவர்களுக்கு சுகதுக்கங்களைக்கொடுப்பதென்றும், அந்தக்கர்மங்களைச் சீவர்கள் செய்யாமலிருப்பதில்லை என்றும், அஃதோபோல் அந்தக்கருமங்களும் அனுபவத்திற்குவராமல் போவதில்லை என்றும் துக்கானுபவத்தாலுண்டாகும் கஷ்டம் தெய்வசகாயத்தாலும் தீர்த்தஸ்நான விசேஷத்தாலும், ஞானிகளுடைய தேகபரிசத்தாலும் நீங்கிவிடுமென்றும், ஆசாரதருமங்களையும் பிறர்க்கிதலையும் நிராசையையும் விட்டவர்கள் நரகினையடைவாரென்றும் பெரியோர் சொல்லுவர் என்றறிவாயாக என்றனள். (சு-ம். ௭௦௨)

இருபத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

கல்பவல்லீ ஸமேத புஜாயைநமஃ

## முப்பதாம் அத்தியாயம்.

## தான தருமாதி நிரூபணம்.

---

சாவித்திரி, இயமனைநோக்கி தானதருமாதிகளுடைய விசேஷங்களைக்கேட்க விரும்புகின்றேன் என்றுவினவ இயமன் கூறுகின்றான்:—பரதகண்டத்தில் அன்னதானத்தைச் செய்கிறவன் ஓரன்னத்துக்கு ஒரு வருடமாகச் சிவலோகத்தில் வாழ்வான். அன்னதானத்துக்குமேல் தானமென்பது ஒன்று முன்னுமில்லை இப்போதுமில்லை இனியுமில்லை. அத்தானத்துக்கு அந்தணரேயன்றி ஏனைய சாதியாரும் உரியவராவர். இதற்கு யோக்கியர் அயோக்கியரென்பதுமில்லை. காலநியமமும் இல்லை. நல்ல பாலுள்ளபசுவை வேதியருக்குத்தானஞ்செய்கிறவன் கோலோகத்திலும் புண்ணிய தீர்த்தக்கரையில் செய்தவன் அவ்வுலகில் நூறுவருடமும், தேவாலயத்தில்செய்தவன்கோடி வருஷமும்,காமியார்த்தமாய்ச் செய்தவனும், சயனதானஞ்செய்தவனும் சந்திரலோகத்திலும், இரண்டு முகமுடைய பசுவைத்தானஞ்செய்தவன் ஒருவருடம் விஷ்ணுலோகத்திலும்வாழ்வர். வெண்மையான குடையைத் தானஞ்செய்தவன் ஆயிரம் வருடம் வருணலோகத்திலும்,வஸ்திரதானஞ்செய்தவன்பதின

---

* தருமராஜனை சாவித்திரி தானதருமாதிகளை வினுதல்.

யிரம் வருடம் வாயுலோகத்தினும், சாளக்கிராமத்தோடு வஸ்திரதானம்செய்தவன் சூரியசந்திரருள்ளவரையில் வைகுண்டத்திலும்,தீபதானம்செய்தவன் அக்கினிலோகத்திலும்,கஜதானஞ்செய்தவன் இந்திரனோடு அவனது அர்த்தாசனத்திலும், அஸ்வமும் சிவிகையும் தானஞ் செய்தவன் பதினான்கு இந்திரருடைய காலமளவும் வருணலோகத்திலும், நல்ல தோட்டத்தைத் தானஞ்செய்தவன் ஒரு மன்வந்தரமும், வெண்சாமரையைத் தானஞ்செய்தவன் பதினாயிரம்வருடம் வாயுலோகத்திலும் வாழ்வர். தானியத்தையும் இரத்தினத்தையும் தானஞ்செய்தவர்கள் புத்திசூக்ஷுமத்தையும் சிரஞ்சீவித்தன்மையும் அடைவர். ஏற்போரும் வைகுண்டத்தையடைவர். பவுர்ணமியில் டோலோற்சவம் செய்கிறவன் சீவன்முத்தனாய் இவ்வுலகசுகத்தையும் அனுபவித்து தேகாந்தத்தில் பரமபதத்தையும் அடைகிறான்.அந்தவுற்சவத்தை உத்தரபல்குனிநக்ஷத்திரத்தில் செய்தால் இருநூறுமன்வந்தரம் விஷ்ணுபதத்தில் வாழ்வான். தாம்பரபாத்திரத்தில் திலதானம் செய்கிறவன் ஒரு எள்ளுக்கு ஒருவருடம் சிவலோகத்தில் வசித்து, பின்னர் பூலோகம்வந்து உத்தமசாதியிற்பிறந்து சுகியாயும் சிரஞ்சீவியாயு மிருப்பன். பதிவிரதைக்குரிய நற்குணநற்செய்கைகளும், ரூபலாவண்ணிய விசேடங்களும் நிறைந்துள்ள கன்னிகையை சர்வாபரணத்தோடு அவள்போலும் உத்தமகுணம்வாய்ந்துள்ள அந்தணனுக்குத் தானஞ்செய்கின்றவன் பதினான்கு இந்திரர்கள் வரையில் சந்திரலோகத்தில் தேவதாசிகளோடு கூடிக்கலந்து சுகித்தும், பின் கந்தர்வலோகத்தில் ஊர்வசியோடுபதினாயிரம்வருடம் கிரீடித்திருந்தும் அதன்பின் ஆயிரஞ்சன்ம பரியந்தம் நல்ல உத்தம ஸ்திரியோடும் கூடி இல்லறதருமத்தில்வழுவாது வாழ்ந்தும்சுகித்திருப்பன். நல்லமதுரமான கனிகளைத் தானஞ்செய்கிறவன் கனிவொன்றுக்கு ஓர் வருஷமாக இந்திரலோகத்தில் வாழ்ந்து பின் நல்ல மனையாட்டியையும் நன்மக்களையுமடைந்து நற்கனிகள் நிறைந்துள்ள சிருங்கார உத்தியானவனத்தில் வாழ்வன். சாதாரணமான கனிகளைத் தானஞ்செய்கிறவன் சுவர்க்கத்தில் நீண்டகாலம் வாழ்ந்து பரதகண்டத்தில் பிறக்கின்றான். நானாவிதமான பலவர்க்கங்களாலும் பல திரவியங்களாலும் நிறைவித்து கிருஹதானஞ் செய்கின்றவன் நூறுமன்வந்திரம்வரையில் சுவர்க்கத்தில் வசித்துப் பின் பரதகண்டத்திற் பிறந்து மஹாதான புருஷனாக வாழ்வான். நல்ல விளைநிலத்தைப்

புண்ணிய க்ஷேத்திரவாசிக்குத் தானஞ்செய்கிறவன் நூறுமந்வந்தரம் வைகுண்டத்தில் வாழ்ந்து பின் பரதகண்டத்தில்வந்து சக்கரவர்த்தியாகின்றான். அவனைப் பூமிதேவியும் நூறுசன்மம் வரையில் அரசனாகவேவைத்து தன்னையாளும்படிச் செய்வாள். சகலபிரயோசனத்தையும் கொடுக்கும் ஓர் கிராமத்தைத் தானஞ்செய்கின்றவன் லக்ஷமந்வந்தரம் வைகுண்டத்தில் வாழ்ந்து, பின் பரதகண்டத்தில் நல்லகுலத்தில் வந்து லக்ஷம் கிராமத்துக் கதிகாரியாகின்றான். அவனைப் பூமிதேவியும் லக்ஷஜன்மம் அப்படியே வாழச்செய்வள். நல்ல ஜனங்களோடும் நல்ல பலவிருக்ஷங்களோடும் நல்ல கொடிவகைகளோடும் நல்ல தாமரைத் தடாகங்களோடும் கூடியுள்ள அரிய நகரத்தைத் தானஞ்செய்கின்றவன் பத்துலக்ஷம் இந்திரர் வரையில் கைலாசத்தில் வாழ்ந்து, பின் பரதகண்டத்தில் இராஜேந்திரனாய்லக்ஷங் கிராமங்களையுடையவனாய் லக்ஷம்வருடம் வாழ்வானென்பதிற் சந்தேகமில்லை. அப்படிப்பட்ட நல்ல நூறுகிராமத்தைத் தானஞ்செய்கின்றவன் கோடிமன்வந்தரம் வைகுண்டத்தில் வசித்துப் பின் பரதகண்டத்தில்வந்து ஜம்புத்தீவீபத்துக் கதிபதியாய் இந்திரசம்பத்துடையவனாய் ராஜராஜாக்களெல்லாம் அடிபணியத்தக்கவனாய் கற்பாந்தபரியந்தம் வாழ்கின்றான். பூமிக்குரிய சர்வாதிகாரத்தோடு பூதானஞ்செய்கின்றவன் அதற்கு நான்கு பங்கதிகமாய்ப்பெறுவான். ஜம்புத் வீபத்தையே நல்ல தபஸ்விக்குத் தானங்கொடுக்கின்றவன் சர்வக்ஷேத்திர வாசபலனையும், சர்வதீர்த்த ஸ்நானபலனையும், சர்வதான பலனையும் அடைகின்றான்; அவனடையாத தொன்றுமில்லை. தேவிபக்தனாகின்றவனுக்கு அம்மையிலும் இம்மையிலும் அடையப்படுவதொன்றில்லை. ஸ்ரீதேவியின் சிறந்த ஸ்தானமாகிய மணித்வீபத்தில் நீங்காது வாசஞ்செய்யப்பெறுவதே அவன்பெறத்தகும் பேறாகும். மீண்டும் பிறப்பதென்பதையறியான். பிரமர்களுடைய இறப்பையெல்லாம் பார்த்துக்கொண்டே யிருப்பன். தேவிமந்திரத்தை யுபாசிக்கின்றவர்களும் பிறவியெடுக்கும் அல்லலைவிட்டு திவ்ய விபூதிமான்களாய் தேவியினது சாரூப்பியமாகிய திவ்யரூபத்தைப் பெற்று அத்தேவியினது பாதசேவையைச் செய்துகொண்டிருப்பர். சேதனாசேதனங்கள் எத்தனைமுறை அழிவெய்தினும் அவர்கள் அழிவெய்தார். கார்த்திகை மாசத்தில் துலாதானஞ் செய்கின்றவர் மூன்றுயுகம் விஷ்ணுபதத்தில் சுகித்திருந்து பின் பூமியிற்பிறந்து ஜிதேந்திரியர்களாய் ஈஸ்வரபக்தியடையவர். அருணோதயகாலத்தில்

கங்கைமத்தியில் ஸ்நானஞ்செய்கின்றவர் அறுபதினாயிரம்வருடம் விஷ்ணுலோகத்திலிருந்து பின் பூவுலகில் நல்ல ஜன்மமடைந்து விஷ்ணுமந்திரத்தை ஜபித்து முன்போல் விஷ்ணுலோகத்தையடைகின்றார். அதுபோல் நித்தியமும் ஸ்நானம் செய்கின்றவர் பரிசுத்தர்களாய் ஒவ்வோரடிக்கு ஒவ்வோர் அஸ்வமேதபலனை யடைகின்றனர். அவரது பாததூளியினால் பூதேவி பரிசுத்தமடைகின்றாள். அவர்கள் சூரியசந்திரர் உள்ளவரையில் பரமபதவாசிகளாய்ப் பின் நற்குலத்திற்பிறந்து ஈஸ்வரபக்தியுடையவராய் சீவன்முக்தர்களாய் ருஷிகளுக்குள் சிறந்த பிரஹ்ம தேஜோரூபராய் சர்வதர்மத்திலும் ஆசையுள்ளவர்களாய் பண்டிதர்களாய் இந்திரிய நிக்ரகர்களாய் வாழ்வர். சூரியன் மீனம் கடகம் இந்தராசிகள் நடுவிலிருக்கும்போது பரிமளமுள்ள நல்லதீர்த்தமாத்திரமாயினும் சுத்தாத்மாக்களுக்குக் கொடுக்கின்றவன் கைலாபத்தில் பதினான்கு இந்திரர்வரையில் வாழ்ந்திருந்து, பின் நல்லகுலத்திற்பிறந்து ரூபவானாய் சுகமுள்ளவனாய் சிவபக்தனாய் வேதவேதாந்தமுணர்ந்தவனாய் வாழ்கின்றவனாவான். வைகாசிமாசத்தில் மா தானஞ் செய்கின்றவர் அந்தமாவின் ஒருதுளுக்கு ஒருவருடமாகச்சிவலோகத்திலிருந்து பின் பூலோகத்தில்வந்து சிவபக்தியுடையவனாய்பண்டிதனாய் புத்திரபாக்கியமுடையவனாய் சீமானாய் பூமிமானாய் வாழ்கின்றவனாவான். சித்திரையிலாவது மாகமாசத்திலாவது சங்கரனைப் பூசித்து கையில் பிரம்பெடுத்துக்கொண்டு பக்தியோடு இரவும் பகலும் ஒருமாதமாவது அதிற்பாதியாவது பத்துநாளாவது ஏழுநாளாவது இரண்டுநாளாவது நிருத்தஞ்செய்கின்றவன் சிவலோகத்தில் வசிப்பன். ஸ்ரீராமநவமியை அனுஷ்டிக்கின்றவன் ஏழுமன்வந்தரம் விஷ்ணுலோகத்திலிருந்து பின்பிறந்து இராமபக்தனாய் செல்வவானாய் வாழ்கின்றவனாவான். பிரகிருதிதேவிக்கு சரத்காலசம்பந்தமான பூஜையை எருமை வெள்ளாடு முதலான நைவேத்தியங்களாலும் தூபதீப நிருத்தகீதாதி உபசாரங்களாலும் பலவிதமான மங்களத்தையுஞ் செய்கின்றவன் சிவலோகத்தில் ஏழுமன்வந்தரம் சுகமடைந்து மீண்டும் பிறந்து நிர்மலமானபுத்தியையும் நிகரற்றசம்பத்தையும் புத்திரபௌத்திராதி விருத்தியையுமடைவதுமன்றி யானைகுதிரைகளோடு கூடினவனாய் ராஜாக்களுக்கெல்லாம் பிரபுவாய் மகாபிரபாவத்தோடு வாழ்வான். ஒருவருஷம் பிரதிசுக்லாஷ்டமியிலும் பாரதவருடத்தில் புண்ணியக்ஷேத்திரத்தில்சோடசோபசாரத்

துடன் மகாலக்ஷ்மியைப் பூசிக்கின்றவன் கோலோகத்தில் பதினான்கு இந்திரர்வரையில் வசித்துநற்குலத்திற்பிறந்து ராஜாராஜேஸ்வரனாவன். கார்த்திகைபூரணையில் ராசமண்டலஞ்செய்து நூறுகோபர்களையும் நூறுகோபிகைகளையுங் கூட்டி மண்ணிலாவது கல்லிலாவது ராதாகிருஷ்ணரை எழுதி சோடசோபசாரத்துடன் பக்தியோடு பாரதவருடத்தில் பூசிப்பவன் பிரமனாயுள்பரியந்தம் கோலோகத்தில் வசித்துப் பின் பாரதவருடத்தில்வந்து கிருஷ்ணபக்தனாய் கிருஷ்ணமந்திரத்தைப்பெற்று கோலோகமடைந்து கிருஷ்ணசாரூபத்தையடைந்து கணங்களுக்கதிபதியாவான். அவனுக்குப் பிறப்புண்டாகாது. சுக்லகிருஷ்ண பக்ஷ ஏகாதசியில் விஷ்ணுவைக்குறித்து ஆராதிக்கின்றவன் வைகுண்டத்தில் பிரமனாயுள்வரையில் வசித்துப் பின் பிறந்து கிருஷ்ணபக்தனாய் தேகத்தைவிட்டு கோலோகத்தையடைகிறான். பாத்திரபத சுக்லபக்ஷ துவாதசியில் இந்திரனை வுபாசிக்கின்றவன் அறுபதினாயிரம் வருடம் இந்திரலோகத்தில் சுகித்திருப்பன். ஆதிவாரத்திலும் மாதசங்கிரமணத்திலும் சுக்லபக்ஷ சப்தமியிலும் சூரியனைக்குறித்து அவிசான்னம் உபயோகிக்கின்றவன் சூரியலோகத்தில் பதினான்கு இந்திரர் வரையிலிருந்து பின் பிறந்து அரோகியாய்ச் சம்பத்துடன் வாழ்வான். ஜேஷ்டமாத கிருஷ்ண சதுர்த்தசியில் சாவித்திரியைப் பூசிப்பவன் ஏழுமன்வந்தரம் பிரமலோகத்திலிருந்து பின் பூமியில்வந்து அளவில்லாத பராக்கிரமமும் ஆயுளும் ஞானமும் சம்பத்தும் உள்ளவனாகின்றான். மாகமாத சுக்ல பஞ்சமியில் சரஸ்வதியை சோடசோபசாரத்துடன் பூசிப்பவன் மணித்வீபத்தில் பிரமனாயுள் வரையில் பூஜ்யனாயிருந்து பின்புசக்ரேஸ்வரனாகப் பூமியில் வாழ்வான். பசு பொன் முதலானவைகளைத் தானஞ் செய்கின்றவன் பசுவின்ரோமம் ஒன்றுக்கு இரண்டு வருடமாக விஷ்ணுலோகத்திலிருந்து பின் பிறந்து புத்திர மித்திர களத்திர சம்பத்திற் குறைவற்றவனாய் ராஜராஜேஸ்வரனாய் வாழ்வன். பரிசுத்தமான மிருஷ்டான்னத்தைக் கொடுக்கின்றவன் அவனது ரோமம் ஒன்றுக்கு ஒரு வருஷமாக விஷ்ணு லோகத்திலிருந்து பின் சுகமுள்ளவனாயும் தானஞ் செய்கின்றவனாயும் சிரஞ்சீவியாயும் சம்பத்துள்ளவனாயும் நிகரற்றபராக்கிரமமுள்ளவனாயும் பிறந்தனுபவிப்பன். ஹரிநாமத்தைக்கூறுகின்றவன் நாமம் ஒன்றுக்கு ஒருவருடம் விஷ்ணுலோகத்தில் வசித்துப் பின் இவ்வுலகிற் பிறந்து சுகமுற்றவனாய் தான்யவானாயிருப்பன். அதனை

நாராயண க்ஷேத்திரத்திலிருந்துகூறின் கோடிபங்கு அதிகமும் கோடிஉரு ஜபிப்பின் சர்வபாப நிவர்த்தியும் ஜீவன்முக்தியும் விஷ்ணு சாரூபமும் வைகுண்டவாழ்வு முண்டாகும். பார்த்திபலிங்கத்தை மரணபரியந்தம் பூசிப்பவன் சிவலோகத்தில் ஒரு தூளுக்கு ஒரு வருடமாகவிருந்து, பின் பிறந்து இராஜராஜேந்திரனுவன். சாளக்கிராமசிலையைப் பூஜித்து அதன் தீர்த்தத்தைப் பானஞ்செய்கின்றவன் வைகுண்டத்தில் நூறுபிரமன் வரையிலிருந்து பின்பிறந்து ஹரிபக்தனாய் கிருஷ்ணலோகஞ் சென்றிருப்பன். எல்லாவிரதங்களையும் தபசுகளையும் செய்தவன் வைகுண்டபதத்தில் பதினன்கு இந்திரர்வரையில் சுகமுள்ளவனுயிருந்து பின் பாரதவருஷத்தில் ராஜேந்திரனாய்ப்பிறந்து முக்தனுவான். சகலதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து பிரதக்ஷிணஞ் செய்கின்றவன் மோக்ஷமடைகின்றான். அவன் மீண்டும் பிறப்பதில்லை. பாரதவருஷத்தில் அஸ்வமேதஞ் செய்கின்றவன் குதிரையின் ரோமம் ஒன்றுக்கு ஒரு வருஷமாக இந்திரன் அர்த்தாசனத்தில் வீற்றிருப்பன். ராஜசூய யாகத்தினல் நான்குபங்குபலன் கிடைக்கும், தேவியஜ்ஞம் எல்லா யாகங்களினுஞ்சிறந்தது. அதற்குச் சமானமானது மூவுலகிலுங்கிடையாது. அதனைத் திரிபுரசங்காரசமயத்தில் பிரம விஷ்ணு உருத்திரர்கள் செய்தார்கள். தக்ஷனும் இந்த யாகத்தைச் செய்து தக்ஷபிரஜாபதியாய் தானெண்ணியவாறே யாவுமடையும் ஆற்றலுடையவனுய் தேவியைத் தன்மகளென் றழைக்கும் பாக்கியம் பெற்றனன். இவ்வாறே தர்மராஜன் கஸ்யபர் ஆதிசேடன் கர்த்தமப்பிரஜாபதி சுவாயம்புமநு பிரியவிரதன் சனற்குமாரர் கபிலர்முதலிய யாவரும் செய்தனர். தேவியாகம் ஒன்றைச்செய்தால் ஆயிரம் ராஜசூயயாக பலனையடைகிறான். தேவியக்ஞத்தைப்போல் அதிகபலனைத் தரத்தக்கது ஒன்றேனுங்கிடையாது. ஆகையால் இதைச்செய்தவன் நூறுவருடம் சிரஞ்சீவியாய்ச் சீவித்து சீவன்முக்தனாய் ஞானப்பிரகாசனாய் வாழ்வன். தேவர்களில் மஹாதேவரும், ருஷிகளில் நாரதரும், சாஸ்திரங்களில் வேதமும், நான்கு வர்ணங்களில் பிராமணவர்ணமும், புண்ணியதீர்த்தங்களில் கங்கையும், பரிசுத்தவஸ்துக்களில் விபூதியும், விரதங்களுக்குள் ஏகாதசியும், புஷ்பங்களுக்குள் துளசியும், நக்ஷத்திரங்களுக்குள் சந்திரனும், பக்ஷிகளில் கருடனும், ஸ்திரீகளுக்குள் பிரகிருதி ராதை வாணி பூமி இவர்களும் கரணங்களுக்குள் மனமும், பிரஜாபதிகளுக்குள் பிரமனும், பிரஜை

களுக்குள் அரசனும், வனங்களுக்குள் பிருந்தாவனமும், வருஷங்க ளுக்குள் பாரதவருஷமும்சம்பத்துகளுக்குள் இலக்குமியும்,வித்வா ன்களுக்குள் சரஸ்வதியும்,பதிவிரதைகளுக்குள் துர்க்கையும்,சௌ பாக்கியவதிகளுக்குள் ராதிகையும் எப்படி சிறந்தவோர்களோ அப் படி சர்வயக்ஞத்திலும் தேவியக்ஞம் சிறந்ததாம். நூறு அஸ்வமே தத்தால் இந்திரபதமும் ஆயிரம் அஸ்வமேதத்தால் விஷ்ணுபத முங் கிடைக்கிறது. அப்படியே பிருதிவி என்பவன் ஆயிரம் அஸ்வ மேதஞ்செய்து வைகுண்டமடைந்தனன். தேவியினது பதம் சகல விரதங்களேயும் தபங்களேயும் வேதசிரவணங்களேயும் பூ பிரதக்ஷ ணங்களேயும் செய்து முற்றுப் பெற்றவர்க்கே கிடைக்கும். தேவியி னது பாதகமலபூசையே வேதபுராண ஹிதிகாசங்களின் சாரமான தாகும். அதனல் தேவிவர்ணனேயும் தியானமும் நாமமும் குணகீர் த்தனமும் தோத்திரமும் ஸ்மரணமும் சேவிப்பதும் ஜபமும் பா தோதகபானமும் நைவேத்யபக்ஷணமும் பிரதிதினமும் செய்வதில் யாவரும் ஆசையாயும் சர்வசம்மதமாயும் இஷ்டமாயுமிருக்கின்ற னர்.ஆகையால் நீ அந்தநிர்க்குணமான பரப்பிரகிருதிரூபமாகவிருக்கி ன்ற பரப்பிரமரூபிணியைப் பிரதிதினமும் சேவிப்பாய். ஓ குழந் தையே! இனி நீ உன்பர்த்தாவைப்பெற்று வீட்டிற்சென்று சுகமாக வாழக்கடவாய். மனிதர்களுடைய கர்மவிபாகத்தை உனக்குக்கூறி னேன். யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதாயும் விரும்பப்பட்ட தாயும் உள்ள கர்மவேற்றுமைகளை யறிகின்றவர்களுக்குத் தத்வக் ஞானம் உண்டாகுமென் றறிவாயாக என்றனர். (சு-ம். க௬சு.)

முப்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

கஸ்தூரி திலகோஜ்வலாயை நமஃ

## முப்பத்தோன்றாம் அத்தியாயம்.

## * சாவித்திரியோ யமகிருததேவீமூல மந்திராதிதானம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—இயமனிடம் சாவித்திரி தேவிசங்கீர்த் தனத்தைக்கேட்டுக் கண்ணீரரும்பி புளகாங்கிதங்கொண்டு ஒருவார்

---

* சாவித்திரிக்கு இயமன் மூலமந்திரமுதலானவைகளை உபதேசித்தல்.

த்தை சொல்லுகின்றாள். ஓதருமராஜனே! சக்தியின் உத்கீர்த்தனம் யாவரையும் உத்தரிக்குச்செய்யுங் காரணமாயுள்ளது. கேட்போரு க்கும் சொல்வோருக்கும் பிறப்பிறப்புமுதலிய யாவும்நீங்கும். தா னவர் சித்தர் தபஸ்விகளாலும் செய்யப்பட்டது அதுவேயாம். வேதவாக்கியங்களால் புகழ்வதுவும் அவளதுசேவையேயெனப்படும். அதுவேதான் தவமும் யோகமும் அவற்றாலடையும் பதமுமாம். மோக்ஷமும் அமரத்துவமும் சர்வசித்தியும் ஆகிய இவையெல்லா மும் சக்தி கீர்த்தனஞ்செய்யும் சேவகனுடைய ஒருகலைக்குச் சமா னமாகாது. ஆகலான் அத்தேவியினது கீர்த்தனவிதியைக் கூறும். ஓ தருமராஜரே! மனிதர்களது சுபகர்மத்தைக்கூறியதுபோல் அசுப கர்மத்தையுங் கூறவேண்டுமென்று பிரார்த்தித்து யமாஷ்டகத்தால் அவனைத் தோத்திரஞ்செய்கிறாள்.

முன் சூரியன் தபசினால் தர்மத்தையாராதித்து உம்மைப் பெற்றதனால் தருமராஜனெனப் பெற்ற உம்மை நமஸ்கரிக்கின் றேன். சர்வசாக்ஷியாயிருக்கின்ற உமக்குச் சர்வப் பிராணிகளி டத்திலும் சமத்துவம் இருக்கின்றதனால் சமனெனப் பெயர் பெற்ற உம்மை நமஸ்கரிக்கிறேன். பிரபஞ்சத்தில் சர்வப்பிராணிக ளுக்கும் நாசமுண்டாக்குவதனால் இயமனென்று பெயர்பெற்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். காலத்துக்குத்தக்கவாறு சர்வப்பிராணி களையும் நாசஞ்செய்கின்றபடியால் கிருதாந்தகனெனப் பெயர்பெ ற்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். பாபிகளைச்சுத்திசெய்யத் தண்டா யுதத்தைத் தரித்திருக்கிறபடியால் தண்டதரனெனப் பெயர்பெற்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். தபஸ்வியாயும் பிரமநிஷ்டராயும் ஜிதேந்திரியராயும் சீவர்களுக்குக் கர்மபலத்தைக் கொடுக்கின்றவ ராயும் இருக்கின்றபடியால் இயமனெனப் பெயர்பெற்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். உம்முடைய ஆத்மாவையே தோட்டமாகவு டைத்தானவராயும் சர்வக்ஞராயும் பாபிகளுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கின்றவராயும் புண்ணியமித்திரராயும் இருப்பதால் புண் ணிய மித்திரனெனப் பெயர்பெற்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். பிரமாவின் அம்சத்தாலும் பிரமதேஜசினாலும் பிரகாசித்து பிரஹ் மத்தைத் தியானிக்கின்ற ஈசராகிய உம்மை நமஸ்கரிக்கின்றேன்.

ஓ முனிவரே! இந்த அஷ்டகத்தை பிராதக்காலத்தில் படிக் கின்றவனுக்கு இயமபயம் போவதோடு சகலபாபங்களும் போம்.

மகாபாபியானவன் இதனைப்படிப்பானாயின் அப்பாவத்தா லனுபவிக்கப்படும் தேகதண்டனையாதிகளும் அவனுக்கு இயமனால் செய்யப்படா என்றார். (சு - ம். கள,உ)

முப்பத்தொன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹகா ரார்த்தாயை நமஃ

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்.

## நானுவித நரககுண்டஸ்வரூபம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—பிறகு தருமராஜன் மாயாபீஜமான மகாமந்திரத்தை விதிப்படி உபதேசித்து ஓபெண்ணே! ஆன்மகோடிகள்செய்யும் புண்ணியபாவ கர்மங்களுக்குத் தக்கவாறு சுவர்க்க நரகங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவற்றுள் புண்ணிய பேதங்கள் எத்தனையுண்டோ அத்தனைவிதமாக சுவர்க்கலோக சுகானுபவபேதங்களும், பாவபேதங்கள் எத்தனையுண்டோ அத்தனைவிதமாகத்துக்கானுபவநரகபேதங்களும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. ஆகலான் புண்ணியகர்மாவையே செய்தவர் நரகினையும், அஃதேபோல் பாபகர்மாவைச் செய்தவர் சுவர்க்கத்தையும் அடையார். இரண்டையுஞ்செய்தவர் அந்தந்தக்கர்மாக்களின்பலாபலத்துக்குத் தக்கபடி முன்பின்னாக இரண்டையும் அடைகின்றனர். இப்பேதங்களை இவ்வுலகிலுங் காணலாம். சிலர் பிறந்தநாள்தொட்டு இறக்குமளவும் சுகத்தையே அனுபவித்தும், சிலர்துக்கத்தையே அனுபவித்தும், சிலர் முன்னே சுகத்தையும், சிலர் பின்னே துக்கத்தையும், சிலர் முன்னேதுக்கத்தையும், பின்னே சுகத்தையும் அனுபவித்தும் வருகின்றனர். சுவர்க்கநரகங்களாகச் சொல்லப்பட்ட அவ்விடங்களைப்போலவே இங்கும் சுகத்தையே கொடுக்கின்ற இடங்களும் துக்கத்தையே கொடுக்கின்ற இடங்களும், அப்படியே ஊர்வன நீர்வாழ்வன விலங்கு பறவைகள் முதலிய சரீரபேதங்களும் காணப்படுகின்றன. அச்சரீரங்கள் துன்பஞ்செய்வனவாயும், செய்யாதனவாயும், துக்கத்தை யனுபவிப்பனவாயும், சுகத்தையனுபவிப்பன

வாயும், தாவரங்களும் உபயோகப்படத்தக்கவையாயும், படாதவை யாயும் இருக்கின்றன. இவையெல்லாம் சுவர்க்க நரகானுபவங்கள் உண்டென்றறிதற்கு அமைக்கப்பட்டுள்ள அடையாளங்களேயாகு ம். அன்றியும் சுவர்க்க நரக அனுபவ விசேஷங்களை அனுபவிப்பா ரும் இங்குளராகலின் அவர்களுக்காகவும் அமைக்கப்பட்டுள்ளன வென்றும் அறிவாயாக.

இனி, புராணபேதங்களால் நாமபேதப்பட்டிருக்கின்ற நரகங் களின் பெயர்களைக் கூறுகின்றேன் கேட்பாயாக. வன்னிகுண்டம் தப்தகுண்டம் க்ஷார (உப்பு) குண்டம் மலகுண்டம் மூத்திரகுண் டம் சிலேஷ்மகுண்டம் விஷகுண்டம் தூஷிகா (கண்மல) குண் டம் வஸா (சிலைநீர்க்)குண்டம் சுக்லகுண்டம் ஸ்ருக் (இரக்த) குண் டம் அஸ்ரு (கண்ணீர்க்) குண்டம் காத்ரமல (தேகஅழுக்குக்)குண் டம் கர்னவிட் (காதுகுரும்பி) குண்டம் மஜ்ஜாகுண்டம் மாம்சகுண் டம் நககுண்டம் லோமகுண்டம்கேசகுண்டம் அஸ்திகுண்டம் தப்த தாம்பிரகுண்டம் லோககுண்டம் சர்மகுண்டம் நன்ருய்க்காய்ச்சின கட்குண்டம் முட்குண்டம் விஷநீர்க்குண்டம் விஷகுண்டம் காய் ச்சின எண்ணெய்குண்டம் இடித்துக்கொண்டேயிருக்கும் உலக் கைக்குண்டம் புழுக்குண்டம் பூய (ஆவியோடுகூடின அவிந்த)குண் டம் சர்ப்பகுண்டம் கொசுகுகுண்டம் பயங்கரமான விஷகுண்டம் வச்சிர தம்ஷ்டிரகுண்டம் தேள்குண்டம் சர(பாண)குண்டம் சூலகு ண்டம் பயங்கரமான கத்திகுண்டம் கோளகுண்டம் முதலைகுண் டம் காககுண்டம் மந்தானகுண்டம் பீஜகுண்டம் வச்சிரகுண்டம் தப்தபாஷாண குண்டம் தீக்ஷ்ணபாஷாண குண்டம் லாலா (சொள்) குண்டம் மஷீகுண்டம் சூர்னகுண்டம் சக்கரகுண்டம் வக்கிரகுண் டம் கூர்மகுண்டம் மகோல்பனம் ஜ்வாலாகுண்டம் பஸ்மகுண்டம் தப்த (கொளுத்துங்) குண்டம் தப்தசூசி (காய்ச்சியிருக்கும் ஊசி) அசிபத்திரவனம் க்ஷுரதாரம்(கத்திகறுக்கு) ஆட்டுமுகம் கோகாமு கம் நக்ரமுகம் (முதலை) கஜதம்சம் (யானைக்கடி) கோமுகம் கும்பீ பாகம் காலசூத்திரம் மத்சியோதம் கிருமிகந்துகம் பாம்ஸுபோச் யம் (தூளியைச்சாப்பிடுதல்) பாசவேஷ்டம் (கயிற்றால்கட்டிப்போ டல்) சூலப்ரோதம் (சூலத்தில்கோர்த்தல்) பிரகம்பனம் (அசைத்த ல்) உல்காமுகம் (கொள்ளிக்கட்டை) அந்தகூபம் வேதனம்(குத்தல்) தாடனம் (அடித்தல்) ஜாலரந்திரம் (ஜன்னல்சந்து) தேகசூர்னம்

(தேகத்தைப்பொடிப்படுத்தல்) தலனம் (பிளத்தல்) சோஷணம் (வற்றச்செய்தல்) கஷம் (தேய்த்தல்) சூர்ப்பம் (முறம்) ஜ்வாலாமுகம் தூமாந்தம் (புகையிருட்டு) நாகவேஷ்டனம் (பாம்புசுற்றிக்கொள்ளுதல்) இவ்வகைத்தாய் துக்கிதர்களுக்குத் துக்கத்தையும்கிலேசத்தையும் கோரமானபயங்கரத்தையும் இழிவையும்கொடுக்கத்தக்க நரகங்கள்எண்பத்தாறுள்ளன. பதிவிரதையானஓ சாவித்திரீ! இவைகள் பாபிகளுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கின்ற வர்களாயும் மதமத்தர்களாயும் பயங்கரர்களாயும் தண்டபாச கதாசூல ஹஸ்தர்களாயும் குரூரர்களாயும் தமோகுண முடையவர்களாயும் தயையற்றவர்களாயும் தேஜஸுள்ளவர்களாயும் பயமற்றவர்களாயும் செவந்தும் பச்சையாயுமுள்ள கண்ணுடையவர்களாயும் யோகத்தோடும் சித்தியோடும் கூடினவர்களாயும் பலவித ரூபத்தைத் தரித்தவர்களாயும் எல்லாத்தொழில்களேயும் அஞ்சாது செய்கின்ற பாபிகளால் மரணகாலத்திற் காணப்பட்டவர்களாயும், தன்கர்மத்திலேயே பிரீதியுள்ளவர்களாயும் சாக்தர்களாலும் சௌரர்களாலும் காணுபத்தியர்களாலும் புண்ணியஞ்செய்தவர்களாலும் சித்தர்களாலும்யோகிகளாலும் சுதந்தரமற்றவர்களாலும் காணத்தகாதவர்களாயும், பலவான்களாலும் பயமற்றவர்களாலும் சுவப்பனத்தில் காணப்படுகிறவர்களாயு மிருக்கிற படர்களாலும் பதினுயிரம் கிங்கரகூட்டங்களாலும் எப்போதும் ரக்ஷிக்கப்படுகின்றனவாயும் இருக்கின்றன. இனி எவரெவர்கள் எதிலெதில் வசிக்கவேண்டுமோ அதனேயுங் கேட்பாயாக என்றனர். (சு - ம். உஅ)

முப்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஹம்ஸ கத்யை நமஃ

## முப்பத்துமூன்றும் அத்தியாயம்.

## * நரககுண்ட பதந யோக்ய பாபலக்ஷணம்.

---

தருமராஜன் கூறுகின்றார்:—ஈஸ்வரசேவையில் பிரீதியுள்ளவனும், சுத்தமானவனும் யோகசித்தனும், விரதமுள்ளவனும், தபஸ்

* நரககுண்டத்தில் வாழத்தக்க பாபிகளின் இலக்கணம்.

வியும், பிரமசாரியும், நரகினையடையார் இதுநிச்சயம். இளைத்திருக்கும் பந்துக்களைக் சுடுசொல்லால் சுடுகின்றவன் வன்னிகுண்டத்தில் அவன் தேகரோமம் எவ்வளவோ அவ்வளவு வருஷகாலமிருந்து பின் பாபிகளா லுயிருடன் கொளுத்தப்படும்மிருகசென்மத்தை மூன்றுதரம் அடைகின்முன். பசிதாகத்தால் மிகவும் வருத்தப்பட்டுத் தன்வீட்டுக்குவந்த பிராமணனைப் புசிப்பிக்காதவன் துக்கத்தைச்செய்கிற தப்தகுண்டத்தில் தன்ரோமத்துக்கு ஒருவருடமளவாக நீர்வரண்ட இடத்தில் நெருப்பினல் கொளுத்தப்பட்ட இடத்தில் ஏழுசன்மம் பக்ஷியாகப்பிறக்கின்முன்.ஞாயிற்றுக்கிழமை மாதப்பிறப்பு அமாவாசை சிரார்த்ததினம் இக்காலங்களில் வஸ்திரங்களுக்கு அழுக்குப்போக உப்பைச்சேர்க்கின்றவன் க்ஷாரகுண்டத்தில் நூலுக்கு ஒருவருடமாக இருந்து பின் ஏழுசன்மம் வரையில் வண்ணுனகப்பிறக்கின்முன். மூலப்பிரகிருதியையும் வேதசாஸ்திரபுராணுதிகளையும் பிரம விஷ்ணு சிவ பார்வதி சரஸ்வதி முதலியவர்களையும் நிந்திக்கின்றவர்கள் பயங்கரமான மேற்கூறியகுண்டத்தில் அநேக கர்பகாலமிருந்து பின் சர்ப்பயோநியை யடைகிறுர்கள். தேவி நிந்தாபராதமான குற்றத்துக்குப் பிராயச்சித்தம் கிடையாது. ஒருவன் தானேயல்லாமல் தன்னுலும் பிறராலும் உண்டாக்கப்பட்ட விருத்திகளை அவர்களுக்குப் பயன்படுத்தாமல் ஒருவனே அபகரிக்கின்றவன் அறுபதினுயிரம்வருடம் மலகுண்டத்தில் மலத்தைச் சாப்பிட்டுக்கொண்டே யிருந்து பின்மலத்தில் புழுத்த புழுவாகின்முன். ஜீர்ணமான தடாகத்தைப்புதுக்காது நூதனமாகத்தடாகமெடுப்பவன் மூத்திரகுண்டத்தையடைந்து வெட்டுமெண் தூளிக்கு ஒருவருஷம் அதனையேயுண்டு நூறுவருடம் விருஷபமாய்ப் பிறக்கின்முன். பக்ஷயபோஜ்யத்தோடு கூடின அன்னத்தை உண்பவருடனிருந்துண்ணுமல் ஒருவனுப்ப் புசிக்கிறவன் சிலேஷ்மகுண்டத்திலிருந்து நூறுவருடம் அதனையே புசித்துப் பாரதவருடத்தில் நூறுவருடம் பிரேதமாயிருந்து சிலேஷ்மத்தையும் மூத்திரத்தையும் சிலத்தண்ணீரையும் புசித்துப் பிறகு சுத்தியாவான். தாய்தந்தை குரு பத்தினி பிள்ளை பெண் நாதனற்றவன் இவர்களைப் போஷிக்காதவன் விஷ(கர)குண்டத்திலிருந்து அதை நூறுவருடம் புசித்து பின்நூறுவருடம் பூதயோனியையடைந்து பிறகு சுத்தியாகின்முன். அதிதியை பார்த்து கண்ணைக் கோணல்செய்கின்றபாபியினுற்கொடுக்கப்படும் தர்ப்பணசலத்தைத் தேவர்களும்பிதுர்க்களும்

கிரகியார். பிரஹ்மஹத்திமுதலான பாபங்களைச் செய்கின்றவர்கள் தூஷிகாகுண்டத்திலிருந்து நூறுவருடம் அதனையேபுசித்துப் பின் நூறுவருடம் பூதயோனியையடைந்து பின்பு சுத்தியாகிறார். பிராமணனுக்குத் திரவியங்கொடுத்து மறுபடியும்வாங்கி மற்றொருவருக்குக் கொடுக்கின்றவன் வஸாகுண்டத்தில் நூறுவருடமிருந்து அதனையேபுசித்துப் பாரதத்தில் ஏழுதரம் ஒணானகப்பிறந்து பின் குரூரனும் அற்பாயுளுடையவனும் தரித்திரனும் பிறப்பான். புருஷனை ஸ்திரீயாவது ஸ்திரீயைப் புருஷனாவது சுக்கிலத்தைக் குடிக்கும்படிச் செய்கின்றவர்கள் சுக்லகுண்டத்திலிருந்து நூறுவருடம் அதனையேகுடித்து நூறுவருடம் புழுவாய்ப்பிறந்து பின்சுத்தியாகின்றனர். குருவையும் பிராமணனையும் இரக்தம் வரும்படி அடிக்கிறவன் இரக்தகுண்டத்தில்வீழ்ந்து நூறுவருஷம்அதனையேகுடித்துப் பின் பாரதத்தில் ஏழுதரம்புலிஜன்மமடைந்துபுனிதனாகின்றான். பகவானது சங்கீர்த்தனஞ்செய்தும் நிருத்தஞ்செய்தும் பகவானது குணத்தைப் பாடியும் இருக்கிற பக்தனைப்பார்த்துக் கண்ணீர்வரச் சிரிக்கின்றவன் கண்ணீர்க்குண்டத்திலிருந்து நூறுவருடம் அதனையே உண்டு மூன்றுசன்மம் சண்டாளனாய்ப் பிறந்து சுத்தனாகின்றான். சிநேகனிடம் பிரதிதினம் விரோதிக்கின்றவன் தேகத்தி லுண்டாகும் அழுக்குக்குண்டத்தில் நூறுவருட மிருந்து மூன்றுசன்மம் கழுதையாயும் நரியாயும் பிறந்து சுத்தனாகின்றான். செவிடனைப் பரிகசிக்கின்றவன் காதுகுறும்பிகுண்டத்தில் நூறுவருடம் அதனையேபுசித்துப் பின் ஏழுசன்மம் தரித்திரனும் ஏழுசன்மம் அங்கஹீனனும் பிறக்கின்றான். உலோபத்தினால் தன்னை ரக்ஷித்துக் கொள்வதற்காக ஒருவன் சீவனத்தைக் கெடுக்கின்றவன் மஜ்ஜாகுண்டத்தில் லக்ஷம்வருடம் அதனைப்புசித்துப் பின் ஏழுவருஷம் முயலாகவும் ஏழுவருடம் மீனாகவும் மூன்றுவருடம் பன்றியாகவும் ஏழுவருடம் கோழியாகவும் பிறந்து பின் மான் முதலான ஜன்மங்களையுமடைந்து சுத்தியடைகின்றான். தன்கன்னிகையைக் காப்பாற்றித் திரவியாபேக்ஷையினால் விற்பனைசெய்கின்ற மூடன் மாம்சகுண்டத்தில் கன்னிகையின் ரோமத்துக்கொருவருடமாக அதனையே புசித்து நூறு வருடமிருந்து எனது தூதர்கள் அடிக்கும் அடியைப்பெற்று பூமியில்பிறந்து இரக்தமாம்சங்களைத் தலையிற் சுமந்து அதினின்றும் பெருகும் ரத்தத்தைப் பசியினால் நக்கி பிறகு அறுபதினாயிரம் கன்னிகைகளின் மலத்திற் புழுவாயும் ஏழுசன்மம் வேட

ளுயும் மூன்றுசன்மம் பன்றியாயும் ஏழுசன்மம் கோழியாயும் ஏழு சன்மம் தவளையாயும் ஏழுசன்மம் அட்டையாயும் ஏழுசன்மம் காக்கையாயும் பிறந்து சுத்தியடைவான். விரதம் சிரார்த்த முதலிய புண்ணியதினங்களில் சங்கமஞ்செய்கின்றவனும், க்ஷவரகர்மஞ்செய்துகொள்ளுகின்றவனும், சர்வகர்மத்திலும்அசுத்தனுயிருக்கின்றவனும், இவரெல்லாம் நகம்லோம (ரோம) ம் நிறைந்துள்ள குண்டங்களிலிருந்து பாவஞ்செய்கிற தினம்ஒன்றுக்கு ஒருதேவமானவருஷம் அவைகளையேதின்பவராய்த்தடியினலடிக்கப்படுவர். மயிரோடுகூடிய மண்ணினற்செய்த பார்த்திபலிங்கத்தைப் பூசிக்கின்றவன் லிங்கத்தின் தூள்ஒன்றுக்குஒருவருஷமாககேசகுண்டத்திலிருந்து கடைசியில் சிவபெருமானுடைய கோபத்தால் துருக்கனுய்ப்பிறந்து நூறு வருடத்துக்குமேல் இராக்கத சன்மமடைந்து சுத்தியாகின்றுன். பிதுர்க்களுக்கு விஷ்ணுபாதத்தில் பிண்டங் கொடுக்கா திருக்கின்றவன் ரோமத்துக்கு ஒருவருடமாக அஸ்திகுண்டத்திலிருந்து பின்பு நாயாய் ஏழுதரம்பிறந்து எலும்பைக்கடித்துத்தின்று, பிறகு மகா தரித்திரனுய்ப்பிறந்து தேகசுத்தி யடைகின்றுன். கர்ப்பிணியான ஸ்திரீயை அநுபவிக்கின்றவன் தகிக்கப்பட்ட தாம்பரகுண்டத்தில் நூறுவருஷமிருக்கின்றுன். பிள்ளையும்பர்த்தாவுமில்லாதவள்ருதுஸ்நானஞ்செய்தவள் இவர்களிடம் அன்னம் புசிக்கின்றவன் லோககுண்டத்தில் நூறுவருடமிருந்து வண்ணுனுகவும் பின் ஏழுசன்மம் காக்கையாகவும் இரணமுள்ளவனுகவும் தரித்திரனுகவும் பிறந்து சுத்தியாகின்றுன். *தேவதிரவியத்தை †தோல்கையினுல்தொடுகின்றவன் நூறுவருடம் சர்மகுண்டத்தி லிருக்கின்றுன். சூத்திரனுல் உத்தரவுகொடுக்கப்பட்டவனுய்ச் சூத்திரான்னத்தைப் புசிக்கின்றவன் நூறுவருடம் நன்ருய்க் காய்ச்சப்பட்ட கள்குண்டத்திலிருந்து, பிறகு ஏழுசன்மம் சூத்திர சிரார்த்தான்னத்தைப் புசிக்கின்றவனுகப்பிறந்து சுத்தனுகின்றுன். வாக்கினுல் துஷ்டனுய்க் கொடுமையாய்ப் பேசுகின்றவனும் பிரபுவை அடிக்கின்றவனும் தீக்ஷணமான முட்குண்டத்தில் அதனையே தின்பவனுய் இவனடித்த அடியினும் நான்குபங் கதிகமாக என்றூதரால் அடிக்கப்பட்டவனுய், பிறகு சிரேஷ்டமான குதிரைசென்மமெடுத்துச் சுத்தியாகின்றுர். பிழைத்திருக்கும் மானுடனைக்கொல்லுகின்றவன் விஷகுண்டமடை

*சந்தனபுஷ்பபழமுதலானவை. †தன்தேகமுதலியவைகளைத்தொட்டகை.

ந்து அதனையேஆயிரம்வருடமுண்டு பிறகு மானுடனைக்கொல்லுஞ் சுபாவமுடையவனும் இரணமுடையவனும்நூறுசன்மமடைந்து பிறகு ஏழுசன்மம் குஷ்டரோக முள்ளவனாவன். பசுவையாவது எருதையாவது பாரதவருடத்தில் தானாவது வேலைக்காரனைக் கொண்டாவது தடியினால் அடிக்கின்றவன் நான்குயுகம்வரையில் நன்றாய்க்காய்ச்சப்பட்ட தைலகுண்டத்தில் அம்மாடுகளின்ரோமத்துக்கொருவருடமாகஇருந்து எருதாய்ப்பிறப்பான். பிராணிகளைக்குந்தாயுதத்தாலாவது நெருப்பினாற்காய்ச்சிய லோகத்தினாலாவது கொல்லுகின்றவன் குந்த குண்டத்தில் பதினாயிரவருடமிருந்து பின் நல்லயோனியையடைந்து வியாதியுடையவனாகக்கஷ்டப்பட்டுச் சுத்தமாகின்றான். வீணாக மாம்சத்தைத் தின்னும் பிராமணனும் ஈஸ்வர நிவேதனமாகாத அன்னத்தைப் புசிப்பவனும் கிருமிகுண்டத்தையடைந்து, தன்ரோமம் எவ்வளவோ அவ்வளவுகாலம் அதனையே புசித்து,மூன்றுசன்மம் துருக்கனாகப்பிறந்துப் பின் பிராமணனாகப் பிறக்கின்றார். சூத்திரனுக்கு யாகஞ்செய்விக்கின்றவனும்,சூத்திரான்னத்தைப் புசிக்கின்றவனும், சூத்திரசவத்தைக் கொளுத்துகின்றவனும்பூயகுண்டத்தில்தங்கள்ரோமம் எவ்வளவோ அவ்வளவுவருடகாலமிருந்து அதனையேபுசித்து யமதூதர்களால் அடிக்கப்பட்டவர்களாய்,பின்பு ஏழுசன்மம் சூத்திரராயும் மகாரோகிகளாயும்தரித்திரர்களாயும்செவிடராயும் ஊமையாயும்பிறக்கின்றார்கள். சிரசில்பத்மமிருக்கிறசர்ப்பத்தைக் கொல்லுகின்றவன் தன்ரோமம் எவ்வளவோ அவ்வளவு வருடகாலம் சர்ப்பகுண்டத்தில் சர்ப்பங்களினால் கடிக்கப்பட்டும் யமதூதர்களால் அடிக்கப்பட்டும் சர்ப்பத்தின் மலத்தைப் புசிக்கிறவனாயிருந்து பின் சர்ப்பமாய்ப்பிறந்து பிறகு அசுரனாயும் சர்ப்பத்தினால் கடிபடுகின்றவனாயும் அற்பாயுள்களில் கஷ்டமான மரணத்தை அடைகின்றவனாயுமிருப்பன். தெய்வத்தினால் கொடுக்கப்பட்ட விருத்தியைக்கொண்டு சீவிக்கின்றவர்களையும் சுவல்பசெந்துக்களைக் கொல்லுகின்றவர்களையும் அவர்களால் எத்தனை செந்துக்கள் மரணமடைந்தனவோ அவ்வளவுகாலம் தம்சகுண்டத்தும் கொசுகுகுண்டத்தும் அவைகளால் புசிக்கப்பட்டவராய் ஆகாரமில்லாதவராய் யமதூதர்களால் கைகால்கள் கட்டப்பட்டு அடிக்கப்பட்டவராய்ப் பிறகு அற்பசெந்துக்களாகவும் துருக்கராகவும் அங்கங் குறைவுள்ளவராகவும் பிறந்து சுத்தராகின்றார். தேனீக்களைக்கொன்று தேனைப்புசிக்கின்றமூடன், விஷகுண்டத்தில் ஒருசீவனுக்

கொருவருடமாக விஷத்தைத்தின்று விஷத்தினுல்கொளுத்தப்பட்டு யமதூதர்களால் அடிக்கப்பட்டு பிறகு ௬ சன்மமடைந்து பின் சுத்தனுகின்றுன். தண்டனைக் குரியவனல்லாதவனைத் தண்டிக்கின்றவனும், பிராஹ்மணனைத் தண்டிக்கின்றவனும், வச்சிர தம்ஷ்டிரமென்னும்புழுக்குண்டத்தையடைந்து ரோமத்துக்கொருவருடமாகப்புழுக்களால் கடிபட்டவனுய் கூவுகின்றவனுய் யமதூதரா லடிக்கப்பட்டு அழுகின்றவனுய், பிறகு ஏழுதரம்பன்றிசன்மமடைந்து, பின் மூன்றுசன்மம் காக்கையாய்ப்பிறந்து சுத்தமாகின்றுன். பணத்திலுள்ள ஆசையினுல் பிரஜைகளைத் தண்டிக்கின்ற அரசன் தேள்குண்டத்தில் தண்டனையடைந்த மனிதர்களுடைய ரோமம் எவ்வளவோ அவ்வளவுகாலம் இருந்து ஏழுசன்மம் தேளாகவும் பின்பு அங்கஹீனனுகவும் வியாதியுள்ளவனுகவும் பிறந்து சுத்தனுகின்றுன். ஆயுதங்களை எடுத்து இதரர்களைத் துறத்துகின்ற பிராமணன், சந்தியாவந்தனஞ் செய்யாதிருக்கின்றவன், ஈஸ்வரபக்தியில்லாதிருக்கின்றவன், தங்கள் ரோம அளவுகாலம் சராதி குண்டங்களிலிருந்து யமதூதர்களால் அடிக்கடி அடிக்கப்பட்டு சுத்தருகின்றார்கள். சனங்களை இருட்டறையில் இருத்துகின்ற அரசன் சேற்றுேடும் காய்ச்சப்பட்டசலத்தோடும் இருளோடும் தீக்ஷ்ண்யமான பற்களுள்ள புழுக்களோடும் கூடிய கோளகுண்டத்தையடைந்து, தண்டிக்கப்பட்டவனுடைய ரோமத்துக்கு ஒருவருடமாக வசித்துப் புழுக்களால் கடிக்கப்பட்டவனுய்ப் பின்பு வேலைக்காரனுகப் பிறந்து, கிரமமாய்ச் சுத்தியடைகிறுன். முதலை முதலானவைகளைக் கொல்லுகின்றவன் முதலைமுள்ளுக்கொருவருடமாக முதலை குண்டத்திலிருந்து பின் முதலையாகப்பிறந்து சுத்தியடைகின்றுன். பரஸ்திரீயினுடைய மார்பையும் சுரோணிதபாகத்தையும் தனத்தையும் முகத்தையும் பார்க்கின்றவனும், புண்ணியக்ஷேத்திரத்தில் காமத்தினுல் காமமுள்ளஸ்திரீயைப் பார்க்கின்றவனும், காககுண்டத்தில் வசித்து காக்கைகளால் பிடுங்கப்பட்டகண்களையுடையவராய் தமதுரோமத்துக்கொருவருடமாகவசித்துப் பின்பு மூன்றுசன்மம் கொளுத்தப்பட்டவராவர். தேவர்களுடையதும் பிராமணர்களுடையதுமான சுவர்னத்தைத் திருடுகின்றவன் மந்தான குண்டத்தில் ரோமத்துக்கொருவருடம் வசித்து தூதர்களா லடிக்கப்பட்டவனுய் மத்தினுல் குத்தப்பட்டவனுய் தன் மலத்தையே புசிக்கின்றவனுய் பின் மூன்று சன்மம் குருடனுயும் ஏழுசன்மம் தரித்திரனுயும் மகாகுரூரனுயும் பாபிஷ்டனுயும்பிறந்து

பின் தட்டானும் சொர்னத்தை விற்பனைசெய்கின்றவனும் பிறப்பான். தாம்பரத்தையாவது வேறுலோகத்தையாவது திருடுகிறவன் தன்ரோமத்துக் கொருவருடமாக பீஜகுண்டத்தில் வசித்துப் பீஜமலத்தைப்புசித்து யமதூதர்களா லடிக்கப்பட்டு சுத்தியாகின்றான். தேவ விக்கிரகங்களையும் தேவதிரவியத்தையும் அபகரிக்கின்றவன் தாண்டமுடியாத வச்சிரகுண்டத்தில் ரோமத்துக் கொருவருடமாக வசித்துக் கொளுத்தப்பட்ட தேகமுடையவனாய் ஆகாரமில்லாதவனாய்யமதூதர்களாலடிக்கப்பட்டுக்கூச்சலிடுகின்றவனாய்ப் பின்பு சுத்தியாகின்றான். பிராமணர்தனத்தையும் பால் தயிர் நெய் முதலியவைகளையும் வஸ்திரங்களையும் திருடுகின்றவன் பாஷாணகுண்டத்தில் தன்ரோமத்துக்கொருவருடம்வசித்து மூன்றுசன்மம் வெள்ளைரூபமுடையவனாயும் ஒரு சன்மம் வெள்ளைக்குறி யுடையவனாயும் பிறகு வெள்ளைப் பக்ஷியாயும்பிறந்து பின் ரக்தவிகாரமுள்ளவனாயும் சூலைரோகமுள்ளவனாயும் பின் ஏழுசன்மம் அற்பாயுளுள்ளவனாயும் பிறந்து சுத்தியடைகிறான். வெள்ளிமயமாயும் வெண்கலமயமாயும் இருக்கும் பாத்திரத்தைத் திருடுகிறவன் தீக்ஷண்யமான பாஷாணகுண்டத்தில் ரோமத்துக் கொருவருடம் வசித்து ஏழுசன்மம் குதிரையாயும் அதிகமான அவயவமுள்ள பாதரோகியாயும் பிறந்து சுத்தியாவன். விபசாரி அன்னத்தைப் புசிப்பவன் அவளுடைய சீவனத்தினால் சீவிக்கின்றவன் உரோமத்துக் கொருவருடம் சொள்ளுகுண்டத்தில் வசித்து யமதூதர்களால் அடிக்கப்பட்டவராய் துக்கமடைந்து கண்ரோகமும் சூலைநோயு முடையவராய்ப் பின் சுத்தமடைகின்றனர். மிலேச்சனிடம் தொழில்செய்கின்றவனும் மசிசீவியும் உருக்கிவிட்ட ஈயகுண்டத்தில் ரோமத்தினளவாக வசித்து யமதண்டனையோடு அதையேயுண்டு வசித்துப் பின் மூன்றுசன்மம் கறுப்புப்பசுவாயும் மூன்றுசன்மம் கறுப்பு ஆடாயும் பின் பனைமரமாயும் பிறந்து சுத்தியடைகின்றனர். தேவர்களுடையதும் பிராமணர்களுடையதுமான தான்யம் பழம் தாம்பூலம் ஆசனம் படுக்கை முதலியவைகளைத் திருடுகின்றவன் சூர்ணகுண்டத்தையடைந்து நூறுவருடம்வசித்து யமதூதராலடிக்கப்பட்டும் பின் ஆடாகவும், ஏழுசன்மம் கோழியாகவும், பின் குரங்காகவும், பின் காசவியாதி யுள்ளவனாகவும், பின் வம்சஹீனனாகவும், தரித்திரனாகவும், அற்பாயுளுடையவனாகவும் பிறந்து சுத்தியாகின்றான். பிராமணர்களுக்குச் சக்கிராங்கிதஞ் செய்கிறவனும் ஹத்தியினால் திரவியத்தைச் சம்பாதிக்கிறவ

னும் நூறுவருடம் சக்கரகுண்டத்தில் வசித்து யமதண்டனையடைந்து மூன்றுசன்மம் வாணியராகவும் பின் வியாதியுள்ளவராகவும் ரோகமுள்ளவராகவும் பிறந்து சுத்தியடைகின்றூர்கள். பசுவினிடத்தும்பிராமணரிடத்தும்வக்ரத்தன்மையை காட்டுகின்றவன்வக்ரகுண்டத்தில் நூறுயுகமிருந்து பிறகு ஏழுசன்மம் வக்ரமான அங்கமுள்ளவனும் தரித்திரனும் வம்சமற்றவனும் பாரியை யற்றவனும் பிறந்து சுத்தியடைகின்றூன். கூர்மமாம்சத்தைப் புசிக்கிறபிராமணன் கூர்ம குண்டத்தில் நூறுவருடம் அவைகளால் கடிக்கப்பட்டு பின் மூன்றுசன்மம் ஆமையாகவும் பூனையாகவும் பன்றியாகவும் மயிலாகவும் பிறந்து சுசியாகின்றூன். பிராமணனது தயிர் நெய் திருடுகின்றவன் ஜ்வாலாகுண்டத்தையும்,பஸ்மகுண்டத்தையும் அடைந்து நூறுவருடமிருந்து எண்ணெயினுல் காய்ச்சப்படுகிறவனுய் ஏழு சன்மம் மீனுகவும், எலியாகவும் பிறந்து பிறகு சுத்தமடைகின்றூன். சுகந்த தைலத்தையாவது நெல்லிக்காயையாவது வேறெந்தவாசனை திரவியத்தையாவது புண்ணியக்ஷேத்திரமான பாரதவருஷத்தில் திருடுகின்றவன் தக்த (காய்ச்சிய) குண்டத்தில் இராப்பகலுந் தன்மயிருக்கொருவருஷங் கொளுத்தப்பட்டு ஏழுசன்மம் மூஞ்செலியாயும், மூன்றுசன்மம் கஸ்தூரிமிருகமாயும், ஏழுசன்மம் புழுகுபூனையாயும் பிறந்து பிறகு மனிதனுவான். பாரதவருஷத்தில் தகப்பனுர் காலமுதலாக அனுபவித்துவரும் பூமியைத் தன்பலத்தினுலாவது கபடத்தினுலாவது இம்சையினுலாவது அபகரிப்பவன் தக்த சூசி (காய்ச்சியஊசி) குண்டத்தில் இராப்பகலுந் தபிக்கின்றவனுய் காய்ச்சிய எண்ணெயில் விழுந்த ஜீவன் துடிப்பதுபோல் துடித்து ஆகாரமற்றவனுய்க் கூவிக்கொண்டு யமதூதர்களால் அடிக்கப்பட்டு அறுபதினுயிரவருடம் மலப்புழுவாயிருந்து பின் பூமியில் தரித்திரனுகப் பிறந்து துன்பமனுபவித்து மீண்டும் அந்தச் சூசிகுண்டத்திலேயே ஏழு மன்வந்தர பரியந்திரம் தபிக்கப்பட்டவனு யிருந்து பிறகு பூமியற்ற தரித்திரனுய்ப்பிறந்து துன்பத்தையனுபவித்து சுத்தனுய் பிறகு தன்னுடைய ஜன்மத்தையடைந்து சுயதர்மத்தைச் செய்யத் தொடங்குவான். கர்மாநுபவ தேகமுள்ளவர் எவ்வளவு இம்சையடைந்தாலும் நசிப்பதேயில்லை. (சு - ம். கஉஎ)

முப்பத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹாடகேசுவரனே ஜ்வலாயைநமஃ

## முப்பத்துநான்காம் அத்தியாயம்.

## அவசிஷ்ட நரககுண்ட பதனயோக்ய பாபலக்ஷணம்.*

---

தருமராஜன் கூறுகின்றான்:—தயையற்றவனுய் ஜீவனைக்கத்தியினால் துண்டிக்கின்றவனும் பணஆசையினால் மநுஷ்யனைக் கொல்லுகின்றவனும் அசிபத்ர (கத்திபோன்றஇலையுள்ள) வனத்தில் பதினான்குஇந்திரர்பரியந்தம்வசிப்பான். அந்தப்பாபிகளுக்குள்எவர்கள் பிராமஹ்ணனைக் கொன்றார்களோ அவர்கள் நூறுமநவந்தரம்வரையில் மேற்சொன்ன அசிபத்திரவனத்தில் கத்தியினுடைய கறுக்கினால் எப்பொழுதும் வெட்டப்பட்டவராய் ஆகாரமற்றவர்களாய் எமதூதர்களா லடிக்கப்பட்டவராய் நூறுஜென்மம் புழுகுபூனையாயும், நூறுஜன்மம் பன்றியாயும், ஏழுஜன்மம் கோழியாயும், ஏழுஜன்மம் நரியாயும், ஏழுஜன்மம் புலியாயும், மூன்றுஜன்மம் செந்நாயாயும், ஏழுஜன்மம் தவளையாயும்பிறந்து தூதர்களால் அடிக்கப்பட்டவராய், கடாவாய்ப்பிறந்து சுத்தியடைகின்றனர். பட்டணத்தையாவது கிராமத்தையாவது கொளுத்துகின்றவன் க்ஷுரதாரமென்னும் (கத்திகறுக்கு) குண்டத்தில் விழுந்து மூன்றுயுகபரியந்தம் பாபத்தை யனுபவித்துப் பிறகு கொள்ளிவாய்ப் பிசாசாகப் பிறந்து உலகமெல்லாம் அலைந்து திரிந்து பிறகு ஏழுஜன்மம் மலத்தைப்புசிக்கும் ஜெந்துவாகவும் ஏழுஜன்மம் புழுவாகவும் மகாசூலை நோயுடையவனுகவும் ஏழுஜன்மம் குஷ்டரோக முடையவனுகவும் பிறந்து பின்னர் சுத்தியாவான். பிறனொருவன்காதில் முகத்தை வைத்துப் பிறநிந்தைசெய்கின்றவனும் பிறரது தோஷத்தை வெளியிடுவதிற் சந்தோஷமுடையவனும் தேவதைகளையும் பிராமணர்களையும் நிந்திக்கிறவனும் சூசிமுக (ஊசிநுனி) குண்டத்தில் மூன்றுயுகபரியந்தம் வசித்துப் பிறகு தேளாயும் பாம்பாயும் ஏழுசன்மம் வச்சிரகிரீடப் புழுவாயும் ஏழுசன்மம் பஸ்மகீடப்புழுவாயும் பின் பெருவியாதியுள்ளவராயும் பிறந்து சுத்தியடைகின்றார். கிருகஸ்தர் வீட்டில் ஆடுமாடுகளையாயினும் ஏனைய வஸ்துக்களையாயினும் திரு

---

* மிகுந்த நரககுண்டங்களில் விழத்தகுந்தபாபிகளின் குறிப்பு.

டுகின்றவன் கோகாமுகத்தில் மூன்றுயுகம் தூதர்களா லடிக்கப்பட்டுப் பின் ஏழுசன்மம் வியாதியோடுகூடின பசுவாகவும் மூன்றுசன்மம் ஆடாகவும், மூன்றுசன்மம் செம்மறியாடாகவும் நித்யதரித்திரனுகவும் பந்து பாரியை இல்லாதவனுகவும்மனஸ்தாபமுள்ளவனுகவும்பிறந்து சுத்தனுகின்ருன். சாதாரணதிரவியத்தைத்திருடுகின்றவன் நக்ரமுகநரகினையடைந்து மூன்றுவருடமிருந்து ஏழுசன்மம் ரோகமுள்ளபசுவாகவும் பின் மகாரோகமுள்ள மநிதனுகவும் பிறந்து சுத்தியாகின்ருன். பசு யானை குதிரை மரம் இவைகளைக் கொல்லுகின்றவன் மூன்றுயுகம் கஜதம்சம் என்னும்நரகில் தூதரால்அங்குசத்தாலடிக்கப்பட்டு மூன்றுசன்மம் யானை குதிரையாயும்பின் துருக்கனுயும்பிறந்து சுத்தியாகின்ருன். சலத்தை அருந்தும்பசுவைத் தடைசெய்பவன் கோமுகாகார (கோமுகத்தின்ஆகார) முள்ளதாயும் புழுகுடன்காய்ச்சப்பட்ட சலமுள்ள நரகத்தையடைந்து ஒரு மன்வந்தரம் தபிக்கப்பட்டு பசுமா டில்லாதவனுகவும் தரித்திரனுகவும் ஏழுசன்மம் பறையனுகவும் பிறந்து பின் சுத்தியடைகின்ருன். கோஹத்தி பிரமஹத்திக்குச் சமானமான பாபங்களைச்செய்கின்றவன் புணரக்கூடாதஸ்திரீயைப் புணருகின்றவன் ஸ்திரீஹத்தி செய்கின்றவன் பிச்சையெடுப்போனைக் கொல்லுகின்றவன் கர்ப்பத்தைச்சிதைக்கின்றவன் பதினன்கு இந்திரபதம்வரையிலும் கும்பீபாகத்தில் வசித்து தூதரா லடிக்கப்பட்டு நெருப்பிலும் முள்ளிலும் காய்ச்சப்பட்ட எண்ணெயிலும் கொதிக்கும் சலத்திலும் இருப்பிலும் தாம்பரத்திலும் ஒவ்வொரு க்ஷணகாலமிருந்து ஆயிரம்சன்மம் கழுதையாகவும் நூறுசன்மம் பன்றியாகவும் ஏழுசன்மம் காக்கையாகவும் ஏழுசன்மம் சர்ப்பமாகவும் அறுபதினுயிரவருடம் புழுவாகவும் பலசன்மம் குஷ்டரோகிகளாகவும் தரித்திரராகவும் பிறப்பார்.

சாவித்திரிவினவுகின்ருள்:—பிரமஹத்திக்கும் கோஹத்திக்கும் சமமானபாவங்களெவை? எந்தஸ்திரீ மாநுடரால் அடையத் தகாதவள்? எவன் சந்தியைவிட்டவன்? அதீக்ஷிதனனபுருஷன் யார்? தீர்த்தப்பிரதிக்கிரகஞ் செய்யும் பிராமணன்யார்? கிராமயாஜியார்? விப்பிரன்யார்? தேவலகன்யார்? சூத்திரர்களுக்குச் சமையல்செய்கின்றவனும் அவர்களை மதிக்கின்றவனும் சூத்திரஸ்திரீக்குப் பர்த்தாவாகின்றவனும் ஆகிய இவர்களுடைய அடையாளங்கள் எவை? இவைகளை விரித்துச்சொல்லுவீ ரென்ருள். பரப்பிரஹ்மத்தினிடத்

தும் அவருடைய வேறு அர்ச்சாபிம்பத்தினிடத்தும் சிவம் சிவலிங்கம் சூரியன் சூரியகாந்தக்கல் கணபதி துர்க்காதேவி இவர்களிடத்தும் குரு இஷ்டதேவதை தாய் இவர்களிடத்தும், பிரஹ்மஞானிகளிடத்தும் விப்ரபாததீர்த்தம் சாளக்கிராம தீர்த்தங்களிடத்தும், சிவ விஷ்ணு நைவேத்தியங்களிடத்தும், சர்வேசனிடத்தும் சர்வேசரான கிருஷ்ணமூர்த்தியிடத்தும், சர்வகாரணத்துக்கும் காரணமாயும் யாவருக்கும் முற்பிறந்தவராயும் சகலதேவர்களுக்குந் தலைவராயும் சர்வாந்தர்யாமியாயும் மாயையால் அநேக ரூபமுள்ளவராயும் நிர்க்குணராயும் ஏகரூபராயும் இருக்குங் கடவுளிடத்தும், சக்தி பக்தர்களிடத்தும் சக்திசாஸ்திரங்களிடத்தும் பேதபுத்தி செய்கின்றவரும், வேதப்பிரதிபாத்யமான பிதுர்க்கர்மங்களையும் தேவதா பூசைகளையும் விடுகின்றவரும், பரிசுத்தமான வஸ்துக்களில் பரிசுத்தமாயும் ஞானானந்த ஸ்வரூபியாயும் அநாதியாயும் தேவர்களுக்கெல்லாம் பிரபுவாயும் இருக்கின்ற ஈஸ்வரனைப் பூஜிக்காதவரும், நிந்திக்கின்றவரும், சர்வகாரண ரூபிணியாயும் காரணப்பிரஹ்ம ஸ்வரூபிணியாயும் சர்வசக்தி சொரூபிணியாயும் யாவருக்கும் மாதாவாயும் இருக்கும் பிரகிருதிமகாதேவியை நிந்திக்கின்றவரும்,கிருஷ்ணசென்மாஷ்டமி ஸ்ரீராமநவமிமஹாசிவாரத்திரி ஏகாதசிஞாயிற்றுக்கிழமை பஞ்சபருவம் இவைகளில் விரதானுஷ்டானங்களை விட்ட சண்டாளராகிய மகாபாபிகளும், அம்புவாசியால் பூமியை வெட்டுவோரும் ஜலத்தில் சௌசமுதலியவற்றைச் செய்வோரும் குரு தாய் தந்தை பதிவிரதையான மனைவி பிள்ளை பெண் இவர்களைப் போஷிக்காதிருக்கின்றவரும், கலியாணமாகாதவரும், பிள்ளையின் முகத்தைப் பாராதவரும் ஈஸ்வரபக்தி யில்லாதவரும், ஈஸ்வரபூசை செய்யாதவரும், ஈஸ்வரருக்குநிவேதனமாகாத அன்னத்தைப் புசிப்பவரும், ஈஸ்வரபக்தியைச்செய்யாதவரும், புண்ணியமான பார்த்திபலிங்கபூஜை செய்யாதவரும், பிரஹ்மஹத்தி செய்தவனுக்கு ஒப்பாவர். பசி எடுத்தவனை நிவாரணஞ்செய்தவனும், பசுமத்தியிலும் பிராமண மத்தியிலும் போகின்றவனும், எருதின்மீது ஏறுகின்றவனும், கோவுக்கு எச்சிலைக்கொடுக்கின்றவனும், அதனைத் தடியா லடிக்கின்றவனும், காலாலுதைக்கின்றவனும், எருதின்மேலேறுகின்றவனைப் புசிப்பிக்கின்றவனும், எருதின்மேலேறுகின்றவனது அன்னத்தைப் புசிக்கின்றவனும், சூத்திரனுக்கு யாகஞ் செய்விக்கின்றவனும், அவனுடைய அன்னத்தைப் புசிக்கின்றவனும், நெருப்பில் பாதங்களைக் கா

ய்ச்சுகின்றவனும் காலை அலம்பாமல் வீட்டில் நுழைகின்றவனும், எண்ணெயுள்ளகாலோடு புசிக்கின்றவனும், காலில் எண்ணெய்பூசிக் கொண்டு சயனிக்கின்றவனும், சூரியோதயத்தில் புசிக்கின்றவனும், பிள்ளையும் பர்த்தாவும் இல்லாதவளது அன்னத்தைப் புசிக்கின்றவனும், மூன்றுசந்திகளை அநுட்டிக்காம லிருக்கின்றவனும், பர்த்தா விடத்திலும் தேவதை யிடத்திலும் பேதத்தை நினைக்கின்ற ஸ்திரீயும், குரூரமானவார்த்தையோடு பர்த்தாவையடிக்கிறவளும், பசுக்கள் வருவதற்கு வழியில்லாமல் பயிரிடுகின்றவனும், தடாகத்தைக் கெடுத்துப் பயிரிடுகின்றவனும், கோட்டையில் பயிரிடுகின்றவனும், கோவதைசெய்ததற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ளாதவனும், பாதுகாப்பதற்குப் புத்திரனில்லாமையாலாவது அஞ்ஞானத்தினாலாவது கோவை மாற்றிவிடுகின்றவனும், பசுவைப்படைத்து அரசனாலும் தெய்வத்தாலும் வரும் ஆபத்துக்காலங்களில் அதனைக்காவாது துன்பத்தைச் செய்கின்றவனும், தேவபிம்பங்களையும் பிராணிகளையும் அக்னி ஜலம் நைவேத்தியம் புஷ்பம் அன்னம் இவைகளைத் தாண்டுகின்றவனும், ஸர்வன்நாஸ்திஎன்று வாதிக்கின்றவனும் வஞ்சிக்கின்றவனும், பொய்மையை உண்மையென்று வாதிக்கின்றவனும், வஞ்சிக்கின்றவனும், அந்தணர்களையும் குருவையும் துவேஷிக்கின்றவனும், தெய்வரூபமான பிம்பங்களையும், குருவையும், பதிவிரதையையும் கண்டவுடன் நமஸ்காரஞ் செய்யாதிருக்கின்றவனும், நமஸ்கரிக்கின்றவனுக்கு ஆசீர்வாதஞ் செய்யாத பிராஹ்மணனும், வித்தியார்த்திக்கு வித்யாதானஞ் செய்யாதிருக்கின்றவனும் கோஹத்திசெய்தவர்க்குச் சமானமானவரென் றறிவாயாக.

அன்றியும் மனிதர்கள், தங்கள் தங்கள் வருணத்துக்குரிய ஸ்திரீகளை அடையவேண்டுமென்று வேதவித்துக்களாலும் வேதங்களாலும் நியமனஞ்செய்திருக்க அதையெண்ணாது மாறிச்செய்வதும், சூத்திரர்கள் பிராஹ்மணஸ்திரீகளையும், பிராஹ்மணர்கள் சூத்திரஸ்திரீகளையும் அடையக்கூடாதென்று நியமனஞ்செய்திருக்க அதைஎண்ணாது அதைச்செய்வதும், செய்யக்கூடா தென்பவற்றைச் செய்வதும் கோஹத்திசெய்த பாவத்தைக் கொடுக்குமென்றும் பெரியோர்கூறுவர். சூத்திரன் பிராமணஸ்திரீயை யடைந்தாலும் பிராமணஸ்திரீ சூத்திரனையடைந்தாலும் நூறுபிரமஹத்திபலனையடைந்து இருவரும் கும்பீபாகத்தையடைவர். சூத்திரஸ்திரீ

யைப் பிரஏஹ்மணனடைவானாகில் அவன் சூத்திரனே என்றும், அவன் பிராமணனானாலும் பறையனிலும் நீசனாகக் கருதப்படுகிறானென்றும், பிதுர்க்களுக்கும் மற்றையதேவர்கட்கும் அவன்கொடுக்கும்பிண்டம் விஷ்டைக்கு (அமேத்தியத்துக்குச்)சமமானதென்றும் அவன்செய்யும் தர்ப்பணம் மூத்திரத்துக்குச் சமானமென்றும், அவனாற் கொடுக்கப்பட்டவை யெல்லாம் பிதுர்க்களையும் தேவர்களையும் அடைவதில்லையென்றும், கோடிஜன்மமாய்த் தேவதார்ச்சனையாலும் தபசினாலும் சம்பாதிக்கப்பட்ட புண்ணியமானது சூத்திரஸ்திரீயினிடம் வைத்தமோகத்தினால் நசித்தேபோகின்றதென்றுஞ் சொல்லுவர். இதிற்சம்சயமில்லை. சுராபானஞ்செய்த பிராமணன் மலத்தைப் புசித்தவனாவானென்றும், சூத்திரனு மாவானென்றும், தப்தமுத்திரையினாலும், தப்தசூலத்தினாலும் கொளுத்தப்பட்ட தேகத்தையுடையவனும், ஏகாதசியில் புசிக்கின்றவனும், கும்பீபாகத்தை யடைவானென்றும், குருபத்தினி ராஜபத்தினி மாற்றாந்தாய் மகள் மருமகள் மாமி கர்ப்பஸ்திரீ உடன்பிறந்தாள் சகோதரன்பத்தினி மாமன்பெண்சாதி தகப்பனைப்பெற்றபாட்டி தாயைப்பெற்றபாட்டி அவளுடையசகோதரிகள் பிதாக்களுடையகன்னிகை சிஷ்யை சிஷ்யன்பத்தினி பிள்ளையினுடைய பெண்சாதி, சகோதரபுத்திரனுடையமனைவி இவர்களெல்லாம் அடையத்தகாதவரென்று பிரமதேவர் கூறுகின்றபடியால் அவர்களைக்கூடுகின்றவனும், நூறுபிரம்ஹத்தியின் பலனை யடைவாரென்று வேதங்களில் கூறப்பட்டிருக்கின்றன. இவரெல்லாம் ஒருகர்மத்துக்கும் அருகரல்லர். தொடத்தகுந்தவருமல்லர். உலகத்தாராலும் வேதத்தாலும் நிந்திக்கப்படுவர். சிறிதேனும் கடத்தற்கரிதான கும்பீபாகத்தில் வீழ்வார். எந்தப்பிராஹ்மணன் சந்தியை அசுத்தமாகச் செய்கின்றானோ, அல்லது செய்யாமலே விடுகின்றானோ, அவன் சந்தியாஹீனனென்று சொல்லப்படுகின்றான். வைஷ்ணவம் சைவம் சாக்கியம் சௌரம் காணபத்திய முதலிய சமயிகளை அகங்காரத்தினால் சிறப்புச் செய்யாதவர்களும் மந்திரத்தை யகங்காரத்தினால் கிரகிக்காதவர்களும் அதீக்ஷிதர்களென்று சொல்லப்படுகின்றனர். பிரவாகத்தில் நாலுமுழம்வரையில் எல்லையாகவைத்துக்கொண்டு நாராயணர் வசிக்கின்றபடியால் அந்தநாராயண க்ஷேத்திரத்தில் இறந்துபோகின்றவன் விஷ்ணுபதமடைகின்றான். காசி பதரிகாஸ்ரமம் கங்கை சமுத்திரத்தோடு சேருமிடம் புஷ்கரம் ஹரிஹரக்ஷேத்திரம் பிரபாசம் காமரூபஸ்தலம்

ஹரித்துவாரம் கேதாரம் மாத்ருபுரம் சரஸ்வதி நதிதீரம் பிருந்தா வனம் கோதாவிரி கௌசிகிநதி திரிவேணி இமாசலம் ஆகியஇந்தத் தீர்த்தங்களிலும் ஏனைய தீர்த்தகட்டங்களிலும் ஆசையினல் தானம் வாங்கிக்கொள்பவன் கும்பீபாகத்தை யடைகின்ருன். சூத்திரனிடம் ஊழியஞ்செய்கின்றவனும் யாகஞ்செய்கின்றவனும் கிராமபுரோகித னும் கிராமயாஜியும் தேவதையினுல் ஜீவிக்கின்றவனும் தேவலகனும் சூத்ரபாகத்தினுல் சாப்பிடுகின்றவனும் சூபகாரன் என்றுசொல்லப் படுவான். சந்தி யஞ்ஜம் பூஜனம் இவைகளற்றவர் பிரமத்தன் பதித னெனப்படுவார். ஓ நல்லபெண்ணே! சூத்திரஸ்திரீ சம்பந்தம் செய் தவனுடைய குறிகளைக்கூறினேன். குலட்டை முதலானவரது பாப த்தை இனிக் கூறுகின்றேன் என்றனர். [சு - ம். கூகத)

முப்பத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹாரஹாரி குச பேசகாயைநம:

## முப்பதைந்தாம் அத்தியாயம்.

## இதுவுமது.

---

தருமராஜன் கூறுகின்ருன்:—கர்மநாசம் தேவசேவை அன்றி யில் உண்டாகாது. சுத்தகர்மத்தினுல் சுத்தமான சுவர்க்காதிபல னும், குத்ஸிதமான கர்மத்தினுல் நரகமு முண்டாகின்றன. ஓ பதி விரதையே! பும்ஸலி அன்னத்தைப் புசிக்கின்றவனும், இதரஸ்திரீ யை அடைகின்றவனும், காலசூத்திரநரகில் நூறுவருஷமிருந்துபின் பிறந்து ரோகியாய் அந்தக்கருமத்தையனுபவித்துசுத்தராகின்றனர். கணவன் ஒருவனோடிருப்பவள் பதிவிரதையென்றும், இருவரோ டிருப்பவள் குலடைஎன்றும்,மூவரோடிருப்பவள் தர்ஷணிஎன்றும், நால்வரோ டிருப்பவள் பும்சலிஎன்றும், ஐவரோடும் அறுவரோ டும் இருப்பவள் வேசிஎன்றும்,எழுவரோடும் எண்மரோடும் இருப் பவள் புங்கிஎன்றும், அதற்குமேற்பட்டவரோடு இருப்பவள்மஹா வேசிஎன்றுஞ் சொல்லப்படுவர்.பதிவிரதைதவிர மற்றவர்களையடை ந்தவன் மச்யோதநரகினையும், இங்ஙனங்கூறிவந்த முறைப்படி குல

டைமுதலிய ஸ்திரீகளை அநுபவிக்கின்றவர் முறையே நூறு நானூறு அறுநூறு எண்ணூறு ஆயிரம் பதிணாயிரம் வருஷங்களாக கும்பீபாகத்தில்வீழ்ந்து யமதூதர்களால் கொடுமையான வேதனையையடைகின்றனர். அவ்வாறனுபவிப்பதுமன்றி குலடையையடைந்தவன் தித்திரிபக்ஷியாகவும், தர்ஷணியை யடைந்தவன் காக்கையாகவும், பும்சலியை யடைந்தவன் கோகிலமாகவும், வேசியையடைந்தவன் செந்நாயாகவும், புங்கியையடைந்தவன் பன்றியாகவும், ஏழுசன்மம்வரையில் பிறந்துவருவர். மகாவேசியை யடைந்தவன் இலவம்பஞ்சுமரமாகவும் பிறக்கின்றான். சந்திரசூரிய கிரஹண காலங்களில் புசிக்கின்றவன் அன்னத்துக்கு ஒருவருஷமாக கிருமிகந்துகம் என்னும்நரகிற்கிடந்து பூமியில் வயிற்றுநோயுள்ள பிராமணனாயும், குன்மவியாதியுள்ளவனாயும், குருடனாயும், பல்லில்லாதவனாயும் பிறந்து பாபநிவர்த்தியடைகின்றான். ஒருவனுக்கு வாயினால்கொடுக்கிறேனென்று சொன்ன கன்னிகையை மற்றொருவனுக்குக் கொடுக்கின்றவனும், அவளைப்பெற்றுக்கொண்டவனும், பாம்ஸகுண்டத்தில்வீழ்ந்து அதையேபுசித்து நூறுவருடம்யமதூதர்களால்அடிக்கப்படுவார். பக்தியோடு பார்த்திபலிங்கத்தைப் பூசிக்காத பிராமணன் எமதூதராலடிபட்டு சரசைஎன்னும் நரகில்வசித்து சிவனதுகோபத்தினால் சூலப்புரோதமென்னும் நரகினையடைந்து அதில்நூறுவருஷங்கிடந்து ஏழுசன்மம் துஷ்டமிருகங்களாகவும், அதன்பின் ஏழுசன்மம் கூலிக்குச்செய்யும் தேவபூஜகனாகவும் பிறந்து சுத்தியடைகின்றான். பிராமணனைமிரட்டி அடங்கச்செய்கின்றவனும், பயத்தினால் நடுங்கச்செய்கின்றவனும், பிரகம்பனமென்னும் நரகில் ஒருரோமத்துக் கொருவருடமாக வசிப்பர். பர்த்தாவை மிக்ககோபத்தோடு பார்க்கின்றவளும் கடுமையாய்ப்பேசுகின்றவளும், உல்காமுகநரகத்தில் ஒருரோமத்துக் கொருவருடமாக இருந்துஎமதுகிங்கரர்களால் வாயில் கொள்ளிக்கட்டை வைக்கப்பட்டும் தலையில் தடியினாலடிக்கப்பட்டும் பெருந்துன்பத்தை அநுபவித்து ஏழுசன்மம்வரையில் அமங்கலியாய்ப் போதலாகிய வைதவ்யத்தையடைந்து வியாதியோடிருந்து பின்சுத்தியாகின்றனர். சூத்திரனை அநுபவிக்கும் பிராமணஸ்திரீயானவள் நன்றாய்க் காய்ச்சப்பட்ட சவுசலத்தை யுடைத்தானதாயும், இருளடைந்ததாயும் இருக்கும் அந்தகூபம் என்னும் கிணற்றில்கிடந்து இரவும்பகலும் அதிலுள்ள நீரைக்குடித்து தூதராலடிக்கப்பட்டு இவ்வண்ணம் பதினான்கு இந்திரர்வரையில் அநு

பவித்து, பின் ஆயிரஞ்சன்மம் பெண்காக்கையாகவும், பின் நூறு நூறுகப் பெண்பன்றியாகவும், பெண் நரியாகவும், பெட்டைக்கோழியாகவும், அதன்பின் எவ்வேழுசன்மம் பெட்டைப்புறுவாகவும், பெண்குறங்காகவும், அதன்பின் சண்டாளஸ்திரீயாகவும், வண்ணாத்தியாயும் க்ஷயரோகமுள்ளவளாகவும், பும்சலியாகவும்,குஷ்டரோகமுள்ளவளாகவும், பின் வாணிச்சியாகவும் பிறந்து சுத்தியாவாள். வேசி-வேதனம் என்னும் நரகிலும், புங்கி - தண்ட தாடனம் என்னும் நரகிலும், மஹாவேசி-சாலாந்தர மென்னும் நரகினும், குலடை-தேகசூர்னத்திலும், தன்னிஷ்டப்படி நடக்கின்றவ ளென்னும் சுவைரிணி-தனனமென்னும் நரகினும், தர்ஷணி-சோஷனம் என்னும் நரகினும் கிடந்து, தூதர்களா லடிக்கப்பட்டு ஒருமன்வந்தரம் வரையில் மலமூத்திரங்களையுண்டு, பின்லக்ஷம் வருஷம் மலப்புழுக்களாய்ப்பிறந்து சுத்தியடைவர். நான்குவருணத்தவரும் தத்தமக்குரியவருணத்திலேயே பரஸ்திரீகளைக்கூடினவர் கஷம்என்னுநரகிற்றள்ளப்பட்டு, பன்னிரண்டுவருடம் அந்நீரைக்குடித்துப் பின்னர் சுத்தியாவார்கள். இதுபோலவே ஸ்திரீகளும் தத்தம்வருணத்தில் பரபுருஷரை விரும்புவார்களாயின் அவர்களும் அந்தக்கதியையே யடைவார்கள். க்ஷத்திரிய வைசியர் பிராஹ்மண ஸ்திரீயை விரும்புவார்களாயின் அவர்கள் தாயைப்புணர்ந்தபாபிகளைப்போலாகிப்பதினான்கு இந்திரர்வரையில் சூர்ப்பநரகிற்கிடந்து, சூர்ப்பாகாரமான புழுக்களால் கடிக்கப்பட்டு, காய்ச்சியமூத்திரத்தைக் குடித்து என் தூதரால் அடிக்கப்பட்டு, துன்பமடைந்து பின் எழுஜன்மம் பன்றியாயும், எழுஜன்மம் சூத்திரராயும் பிறந்து சுத்தியாவர். கையில் துளசியைவைத்துக்கொண்டு பிரதிஜ்ஞைசெய்ததைத் தவறிப் பொய்ச்சத்தியம் செய்கின்றவனும், கங்காசலத்தையாவது, தேவதாபிம்பத்தையாவது தேவதா சிலையையாவது கையில்வைத்துக்கொண்டு பிரதிஜ்ஞைசெய்தபடி செய்யாது விட்டவனும்,வலக்கை பிராஹ்மணன் பசுநெருப்பு இவைகளைத்தொட்டும் தேவாலயத்திலிருந்தும் பிரதிஜ்ஞை செய்ததைக் காப்பாற்றுதவரும், மித்திரத்துரோகிகளும், நன்றி மறந்தவர்களும், நம்பியிருந்தவரைக் கொல்லுகின்றவரும், ஜ்வாலாமுகி என்னும் நரகிற் பதினான்கு இந்திரர் வரையிற் கிடந்து நெருப்புத்தழலால் கொளுத்தப்பட்டு தூதராலடிக்கப்படுவர். துளசியைத்தொட்டுச் சபதஞ்செய்து அதைத்தவறினவர் எழுசன்மம் சண்டாளராகவும், அஃதேபோல் கங்கையைத்தொ

ட்டுத்தவறினவர் ஐந்துஜன்மம் துருக்கராகவும், தேவசிலையைத்தொ ட்டுத்தவறினவர் ஏழுஜன்மம் மலப்புழுவாகவும், தேவபிம்பத்தைத் தொட்டுத் தவறினவர் ஏழுஜன்மம் பிரமரகிருமியாகவும், வலக்கை யைத்தொட்டுத் தவறினவர் ஏழுஜன்மம் சர்ப்பமாகவும், தேவால யத்தில் சத்தியத்தைச் சொல்லித் தவறினவர் ஏழுசன்மம் கூலிக்கு த்தேவபூஜை செய்கிறவராகவும், பிராமணன் முதலானவர்களைத் தொட்டுத் தவறினவர் ஏழுஜன்மம் புலியாகவும், மூன்றுசன்மம் செவிடாகவும், ஊமையாகவும், பந்துக்கள்பரம்பரையும் வம்சபரம் பரையும் அற்றவராகவும் பிறந்து சுத்தராகின்றார். மித்திரத் துரோ கஞ்செய்தவன் கீரிப்பிள்ளையாகவும், நன்றிமறந்தவன் முட்செடி யாகவும், விசுவாசமுடையவனைக் கொன்றவன் ஏழுசன்மம் புலியா கவும், பொய்சாக்ஷி சொன்னவன் ஏழுசன்மம் தவளையாகவும் பிற ந்து சுத்தமடைகின்றனர்.

நித்தியகன்மத்தைவிட்டவன் தனதுகுலத்தில் முன்னேழுசந்த திகளையும், பின்னேழுசந்ததிகளையும் கெடுக்கின்றவனும் சடத்தன் மையனுய்க் காணப்படும் பிராஹ்மணனும் வேதவாக்கியங்களில் நம் பிக்கையற்றவனும் விரதாதிகளை விட்டவனும் சத்புருஷர்களுடைய சொற்களை நிந்திக்கின்றவனும் வீணுகச்சிரித்துக்கொண் டிருக்கின்ற வனும் பிறரைக்காரணமில்லாமல் தூஷிக்கின்றவனும்உலகிற்றடுமா றி த்திரிந்து பின் தூமாந்தநரகில் நூறுவருஷம்வீழ்ந்து கிடந்து அங்கு புகையைத்தின்று மறுபடி நூறுஜன்மம் மீன்முதலான ஜலசெந் துக்களாகப் பிறந்து சுத்தியடைவான். தேவப்பிராமணனைப் பரிகசி க்கின்றவன் தன்குலத்திலிருந்த பத்து சன்மம் முன்னோர்களையும் பத்துசன்மம் பின்னோர்களையும் நரகிற் றள்ளினவனும் தானும் புகையினு லிருளடைந்த முற்கூறிய நரகத்தையடைந்து புகையினு ல்பீடிக்கப்பட்டவனும் அதனையே புசிக்கிறவனும் நானூறுவருஷ ம் வசித்து ஏழுசன்மம் எலியாய்ப்பிறந்து பலவித பக்ஷி புழு விரு க்ஷ மிருகங்களாகவும் பிறந்து பின் மனிதனுகப்பிறக்கின்றான். பிரா மணனுகப்பிறந்து சோதிடத்தினுலும் வைத்தியத்தினுலும் அரக்கு முதலியலோகங்களையும் பழரசங்களையும்விற்பதினுலும் சீவிக்கின்ற வன் நாகவேஷ்டநரகில் சர்ப்பங்களால் சுற்றப்பட்டவனும் ரோமத் துக் கொருவருடம் வசித்துப் பின் பக்ஷிகளாய்ப்பிறந்து ஏழு ஏழு சன்மம் கணக்கனுகவும், வைத்தியனுகவும்,இடையனுகவும், வேலைக்

காரணாகவும் பிறந்து பின் சுத்தியாகின்றான். ஓ பதிவிரதையே! பிரசி த்தமாயிருக்கின்ற நரககுண்டங்களையும் அதில்வீழத்தக்க பிரசித்த மான பாபிகளையுங் கூறினேன். இன்னும் பிரசித்தியற்ற அநேகசிறு குண்டங்களுள. அவைகளில் பிரசித்தியற்ற பாபகர்மங்களைச்செய் தவர்கள் வீழ்ந்து துக்கமனுபவித்துப் பலவித சென்மமெடுக்கிறார் கள். வேறு என்னகேட்க விரும்புகின்றனையென்றார். (சு-ம். ருகூ௨.)

முப்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ராகின்யை நம:

## முப்பத்தாறும் அத்தியாயம்.

## * கர்மபந்த நிவர்த்த கோபாயம்.

---

சாவித்திரி வினவுகின்றாள்:—ஓ மஹாநுபாவனே! வேதவேதா ந்தங்களின்கரையறிந்த தருமராஜனே! எதுபுராண இதிகாசங்களின் சாரமாயும், யாவருக்கும் இஷ்டமாயும், கர்மத்தைப் போக்கடிக்கத் தக்கதாயும், புகழத்தக்கதாயும், சுகத்தையும் சர்வாபீஷ்டத்தையும் கொடுக்கத்தக்கதாயும், சர்வமங்களத்தையு முண்டாக்கத் தக்கதா யும் உள்ளதோ, எதனால் மனிதர் பயத்தையும் துக்கத்தையும் கா ணார்களோ, முற்கூறிய நரகங்களில்வீழார்களோ, அவற்றைப் பார்க் கவு மாட்டார்களோ, ஜன்மம் மிருத்யு முதலியன நேரிடாவோ அ வைகளையும், நரககுண்டங்கள் எவ்விதமாக நிர்மிக்கப்பட்டனவோ, பாவிகள் அந்நரகங்களை எவ்விதரூபங்கொண்டு அநுபவிக்கின்றார்க ளோ, இவ்வுலகல் மநிதர் பஸ்மமாகும்போது வேறுலோகத்தை எப்படி யடைகின்றனரோ, அங்கு எந்தச்சரீரத்தால் சுபாசுப கர்ம ங்களை யனுபவிக்கின்றனரோ, நீண்டகாலந் துக்கம் அநுபவித்தும் அது நசிக்கிறதில்லையோ, நரகத்தை அனுபவிக்கும் அத்தேகம் எவ் விதமானதோ அவைகளையும் விரித்துக் கூறவேண்டு மென்று வின வ, தருமராசன் பகவானை ஸ்மரித்து வேதமுதலிய சகலகலைகளிலுஞ்

* கர்மபந்த நிவர்த்திக் குபாயம்.

சொல்லப்பட்டதாயும், பக்திவிருக்ஷத்தை முளைக்கச்செய்வதாயும் கர்மரூபமான விருக்ஷத்தை வெட்டிச்சாய்ப்பதாயும், மோக்ஷலோகத்துக்கேறும் சோபானங்களாயும், சாலோக சாமீப்ய சாரூப்பிய சாஷ்டி முதலானவைகளைக் கொடுப்பதாயும் உள்ளவற்றைக் கூறுகின்றேன். கணேசாதி பஞ்சதேவதாபூஜை, பகவதி நாமசங்கீர்த்தனம், தேவியினிடம் மறவாதபக்தி, புண்ணியதீர்த்த ஸ்நாநம், பகவானது நித்தியபூஜை, திரிசந்தியிலும் செய்யப்படுங் கர்மங்கள், தேவிசேவையில் சிரத்தை, தனதுவருணதருமத்திலும், ஆஶ்ரமதருமத்திலும் தவறுமை, சிவோபாசனை, சிவாதி தேவதா மந்திரோபாசனை, எல்லாத் தெய்வங்களிலுஞ்சிறந்த தேவி மந்திரோபாசனை, தேவதாபூசைகளில் அடிக்கடி மதுபர்க்க நிவேதனஞ்செய்தல் முதலியனவாம். இவற்றை விடாமற்செய்துவருகின்றவர்கள் கிங்கரர்களால் தண்டிக்கப்படார்; எமதுலோகத்தை யடையார். சித்ரகுப்தர்கள் அவர்களுடைய பாவபுண்ணியங்களை எழுதுவதற்கும் அஞ்சுவர். அவர்கள்போகுமிடம் பிரமனுலகத்திற்கு மேம்பட்ட இடம். அவர்களுடைய பரிசமாத்திரத்தில் சகலபாபங்களும் நசித்துப்போம். ஆயிரங்குலத்தைப் பரிசுத்தஞ் செய்யத்தக்கவர்களான அவர்கள்தான் பாக்கியவான்கள். சுடர்விட்டெரிகின்ற நெருப்பில் உலர்ந்தகட்டைகளையும் சருகுகளையும் இட்டால் அவை எப்படிப் போமோ அப்படி அவர்களைப் பார்த்தமாத்திரத்தில் பாவங்களெல்லாம் போம். காமக்குரோதாதிகளெல்லாம் அவர்களைவிட்டு அவற்றையுடையார்பால் போய்ச்சேரும். மிருத்யு பயம் ரோகம் ஜரை சோகம் காலம் அசுபம் சந்தோஷம் முதலியவெல்லாம் அவர்களைக் காணப்பெற்றால் ஒளித்துக்கொள்ளும்.

இனி, தேகத்தினுடைய விவரணத்தைக் கேட்பாயாக. பிருதிவிமுதலிய பஞ்சபூதத்தினின்றும் தேகங் காரியப்பட்டதாகும். பூதங்கள் நாசமுடைத்தானதாகலின் அவற்றின் காரியமாகிய தேகரூபமும் நாசமடையும். ஆகலான் தேகி தேகத்தைவிட்டுப் போமாயின் அது நாசத்தையடைந்து பஸ்மமாய்ப்போகின்றது. பூதசம்பந்தமாயிருக்கிற இந்தத்தூலதேகத்தைவிட்டதேகி அங்குஷ்ட அளவாயுள்ள சூக்குமதேகத்தோடு யமலோகத்தை யடைந்து அங்கு அக்னிமயமாய்ப் பிரகாசிக்கும் யாதனாசரீர வாசியாவான். அச்சரீரத்தின்வன்மையால் அங்குசெய்யப்படும் முன்சொல்லிய தண்டனை

களாலும் நரககுண்ட வேதனைகளாலும் உண்டாகும் சகிக்கூடாத பெருந்துன்பங்க ளெல்லாம் பொறுத்து அனுபவிக்கும்படி யானவனுகின்றான். எவ்வளவு துன்பங்கள் அவைகளா லுண்டானாலும் அநுபவிக்குமேயல்லாமல் அவைகளால் அச்சரீரம் நாசமடைகிறதில்லை. இனி நரககுண்ட லக்ஷணத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக வென்றான். (சு ௦ ம். ௩௩௪.)

முப்பத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹல்ய வர்ஜிதாயைநம:

முப்பத்தேழாம் அத்தியாயம்.

நரககுண்ட லக்ஷணம்.

---

தருமராஜன் கூறுகின்றான்:—பிரளயஆரம்பம்வரையில் நசியாதிருக்க ஈஸ்வரனால் நிர்மிக்கப்பட்ட நரககுண்டங்கள் பூரணசந்திர மண்டலாகாரம்போல் விருத்தாகாரமாயும், ஆழ்ந்த பள்ளமுடையனவாயும், பற்பலபேதமாயுள்ள பாஷாணகற்களால்நெருப்பைப்போல் எரிப்பனவாயும், பாவிகள் பார்த்தமாத்திரத்தில் கிலேசத்தையுண்டுசெய்வனவாயு முள்ளன. அவற்றுள் அக்னிகுண்டம்-இரண்டுமைல்தூரம் விசாலமானதாயும் நூறுமுழம் உயரம் தணலையுடையதாயும் நாற்புறமும் அண்டினவரைக் கொளுத்துகின்றதாயும் பெருஞ்சத்தத்தோடு கூடியிருக்கிற பாபிகளால் நிறம்பினதாயும் அடிக்கிறதூதர்களால் சூழ்ந்து காக்கப்பட்டதாயு மிருக்கிறது. தப்தகுண்டம்-ஒருமைல்விசாலமாயும் காய்ச்சப்பட்ட சலத்தோடும் துஷ்டஜெந்துக்களோடும்திடமான அடியினுலுண்டாகும்கோரமான காகூ என்கிற சப்தத்தோடும் இருக்கின்றது. க்ஷாரகுண்டம்-ஒருமைல்விசாலமாயும் காய்ச்சிய உப்புநீரால் நிறைக்கப்பட்டதாயும் காக்கைகளால் சூழப்பட்டதாயும் தூதர்களால் அடிபட்டு அதனுல் காப்பாற்றுவீர் காப்பாற்றுவீர் என்று கூக்குரலிடுகின்ற பாபிகளால் நிறம்பப்பட்டதாயு முள்ளது. மலகுண்டம்-இரண்டுமைல் விசாலமுள்ளதாயும், துர்க்கந்தத்தோடு கூடியதாயும், தூதர்களால் அடி

பட்டு அதனையேபுசிக்கின்ற குரூரமான பாபிகளோடு அதிலுள்ள புழுக்களால் தின்னப்பட்ட பாவிகளும் நிறம்பினதாயிருக்கின்றது. மூத்திரகுண்டம்-நான்குமைல் விசாலமுள்ளதாயும், காய்ச்சப்பட்ட மூத்திரத்தாலும், கிருமிகளாலும், அக்கிருமிகளால் புசிக்கப்படுகின்றவர்களாய், உலர்ந்ததாடை கண்டம் உடையவர்களாய் தூதர்களா லடிபட்டுக் கூவுகின்றவர்களாயுள்ள பாவிகளாலும் நிறம்பப்பட்டிருக்கின்றது.சிலேஷ்மகுண்டம்-சிலேஷ்மத்தாலும்,புழுக்களாலும், பாபிகளாலும், நிறைந்திருக்கின்றது. விஷகுண்டம்-ஒருமைல் அகலமுள்ளதாயும் விஷத்தையுண்டும் விஷப்பூச்சுகளால் உண்ணப்பட்டும் சர்ப்பம்போன்ற ஆகாரத்தோடு வச்சிரம்போன்ற பற்களுமுள்ள பாபிகளால் நிறம்பப்பட்டதாயு மிருக்கின்றது. நேத்ரமலகுண்டம்-ஒருமைல் அகன்று புழுக்களோடிருக்கின்றது. வஸாகுண்டம்-நான்குமைல் அகன்றுசகிக்கக்கூடாத சிலைநீரால்நிறம்பி அதனையேயுண்கிறபாபிகளால் நிறைந்திருக்கிறது. சுக்லகுண்டம் - ஒருமைல் விசாலமுள்ளதாய் சுக்லத்தோடும்புழுக்களோடும் அப்புழுக்களால் பக்ஷிக்கப்படும் பாவிகளோடும் நிறைந்திருக்கின்றது. இரக்தகுண்டம்-மிகவும் ஆழமான ஓர்நடபாவியாய் இரக்தத்தாலும் அதனைக்குடிக்கும் பாபிகளாலும் நிறைந்திருக்கிறது. கண்ணீர்க் குண்டம்-நான்கு நடபாவி அளவுடன் புழுக்களோடும் அவைகளால் உண்ணப்பட்டு அழுகின்ற பாவிகளோடும் நிறைந்துள்ளது. காத்ரமலகுண்டம்-மனிதசரீரத்தின் மலத்தினாலும், தூதராலடிபட்டு மனக்கவலையுடன் இருக்கின்றவர்களாலும், புழுக்களால் தின்னப்பட்ட பாவிகளாலும் நிறைந்துள்ளது. கர்னமலகுண்டம்-நான்கு நடபாவி அளவுள்ளதாய் கர்னமலத்தினாலும் பெரிய புழுக்களாலும் அப்புழுக்களால் உண்ணப்படுகின்ற பாவிகளாலும்நிறைந்துள்ளது.மஜ்ஜாகுண்டம் - நான்குவாபி அளவினதாய் வெள்ளைமாம்சங்களால் நிறைந்ததாய் துர்க்கந்தத்தோடிருக்கின்றது. மாம்சகுண்டம்-ஒருவாபி அளவுள்ளதாய், இளகிய மாம்சமுடையதாய், அதனையே புசிக்கின்றவர்களாலும், புழுக்களால் புசிக்கப்படுகின்றவர்களாலும், கன்னிகையை விக்ரயஞ்செய்த பாபிகளாலும் நிறைந்திருக்கிறது. நக, லோம, கேச, அஸ்தி, குண்டங்கள் - நான்குவாபி அளவுள்ளவைகளாய் பயங்கரமான தூதர்களால் அடிக்கடி அடிக்கப்படும் பாவிகளால் நிறைந்திருக்கின்றன. தாம்பரகுண்டம்-நான்குமைல் விசாலமுடையதாயும், நன்றாய்ச் சுடர்விட்டெரியும் கொள்ளிக்கட்டைகளை மே

லே யுடைத்தாயும்,லக்ஷங்கணக்கான காய்ச்சிய பிரதுமைகளோடுங் கூடியதாயும், அப்பதுமைக ளொவ்வொன்றையும் தழுவிக்கொண்டு அழுதுகொண்டிருக்கும் பாபிகளையுடைத்தாயு மிருக்கின்றது. லோஹகுண்டம்-நான்குமைல் விஸ்தீரணமுடையதாயும், நன்றாய்க் காய்ச்சப்பட்ட இரும்பை ஆதாரமாகவுடையதாயும், சுவலிக்கும்நெருப்புத்தணலை யுடையதாயும், இருப்புப்பதுமைகளால் தழுவப்பட்டு அழுதுகொண் டிருக்கும் பாவிகளை யுடையதாயும் இருக்கின்றது. சர்மகுண்டமும் தப்த சுராகுண்டமும்-அரைவாபி அளவினவாயும், தூதர்களால் அடிக்கப்பட்டு அவைகளையே புசிக்கும் பாவிகளால் நிறைந்திருக்கின்றன. சான்மலிகுண்டம்-லக்ஷம் புருஷப்பிரமாணம் ஆழமாயும், இரண்டுமைல் அகலமாயும், வில்போலும்வளைந்த கூரிய முட்களால் சூழப்பட்டுப் பிரகாசிப்பதாயும், காயப்பட்டவர்களாயும், தூதர்களால் மரத்தினின்றும் தள்ளப்பட்டு கீழே விழுகின்றவர்களாயும், ஜலங்கொடுப்பீர்களா! ஜலங்கொடுப்பீர்களா! என்று கூவுகின்றவர்களாயும், நெஞ்சுலர்ந்தவர்களாயும், அதிபயத்தினால் மிகநடுங்கினவர்களாயும், தடிகளாற்பிளக்கப்பட்ட தலையுடையவர்களாயும், ஓடுகிறவர்களாயும், காய்ச்சப்பட்ட எண்ணெயைக்குடித்துச் சீவிப்பவர்களாயும் இருக்கிற பாவிகளால் நிரம்பியதாயு மிருக்கிறது. விஷநீர்க்குண்டம் - தக்ஷசர்ப்பங்களுடைய விஷஜலங்களால் நிரம்பப்பட்டதாயும், இரண்டுமைல் அகலமுள்ளதாயும், அவ்விஷ நீரையே குடித்து எனது தூதர்களால் அடிக்கப்பட்ட பாபிகளால் நிறைந்ததாயுமிருக்கின்றது. தைலகுண்டம் காய்ச்சிய எண்ணெய்நிறைந்து தளதளஎன்கிற தணல்களால் சுத்தப்பட்டிருப்பதுமன்றி பயத்தினால் விகாரமாய்க் கூவுகின்றவர்களாயும், தூதர்களா லடிபட்டு ஓடுகின்றவர்களாயும், உள்ள பாபிகளால் நிறைந்திருக்கிறது. குந்தகுண்டம் - இரண்டுமைல் அகலமுள்ளதாயும், காடாந்தகமான இருட்டோடு கூடியதாயும், பயத்தையும் துக்கத்தையும் கொடுப்பதாயும், சூலாகாரமாயும் கூர்மையான நுனிவுள்ளதாயும், இருப்பாயுதங்களால் நிறைந்ததாயும், கத்திமுதலிய ஆயுதங்களால் செய்த படுக்கைரூபமாயும்,பாவிகளால் நிறைந்ததாயும் இருக்கின்றது. கிருமிகுண்டம் - எட்டுமைல் விசாலமுள்ளதாயும், கட்டுத்தரியன் பாம்புபோலும் நீண்டும் பயங்கரமாயும் தீக்ஷணமான பற்களுடையதாயும், விகாரமாயு மிருக்கிற புழுக்களும், தூதர்களால் அடிக்கப்பட்டும், கண்டமும் தாடையும் உலர்ந்துமுள்ள பாபிகளும்

நிறைந்ததாயு மிருக்கின்றது. பூயகுண்டம் - எட்டுமைல் அகலமு ள்ளதாயும், அதனையே பக்ஷிக்கின்ற பாவிகளால் நிறைந்ததாயும் இருக்கின்றது. சர்ப்பகுண்டம் - பனைமரம்அளவுள்ள கோடிகோடி சர்ப்பங்களாற் சுற்றப்பட்ட சரீரமுடையவர்களாயும் அச்சர்ப்பத் தினால் பக்ஷிக்கப்பட்டும் தூதர்களாலடிக்கப்பட்டும் கூவுகின்றவர் களாயுமுள்ள பாபிகளால் நிறைந்திருக்கிறது. மசககுண்டம் தப்த குண்டம் - விஷகுண்டம் - இம்மூன்றும் ஒவ்வொன்றும் அரைகு ரோசம் அளவினையுடையதாய், கொசுகு முதலியவைகளால் நிறை ந்துள்ளதாய் தூதர்கள் கைகால்களைக்கட்டி அடிக்கும் அடியால்பீறி ட்டுவரும் ரத்தவெள்ளத்தால்மூழ்கி ஆஹாஎன்று கூச்சலிடும் பாபி களால்நிறைந்துள்ளன. வச்சிரதம்ஷ்ட்ரவிருச்சிககுண்டங்கள்-அரை வாபி அளவுள்ளனவாய் பாபிகளால்நிறைந்துள்ளன. பாணம் சூலம் கத்திஎன்னு மூன்றுகுண்டங்கள்-ஒவ்வொன்றும் அரைவாபிஅளவு ள்ளதாய் அவ்வவ்வாயுதங்களால் நெருக்கப்பட்டுள்ளதாய் ரத்தமய மான சரீரங்களையுடைய பாவிகளால் நிறைந்துளது. கோளகுண் டம் - அரைவாபி அளவுள்ளதாய் காய்ச்சிய நீரும் பாவிகளைத்தின் னும் புழுக்களும் இருளும் நிறைந்துள்ளது. நக்ரகுண்டம் ஒரு குரோசம் அளவுள்ளதாயும் அநேக முதலைகளால் நிறைந்து துர்க் கந்தமுடையதாயும் பாவிகளுக்குத் துக்கத்தைக் கொடுப்பதாயுமுள் ளது. காககுண்டம் - அரைவாபி அளவுள்ளதாயும் மலமூத்திர சிலேஷ்மங்களாலும் அவைகளைத்தின்பவர்களாயும் காக்கைகளால் குத்தப்பட்டு விகாரமுள்ள சரீரத்தையுடையவர்களாயுமுள்ளபாவி களாலும் நிறைந்துள்ளது. மந்தானகுண்டமும் - பீஜகுண்டமும் - நூறுவில்லளவுள்ளனவாய் அவைகளையேதின்று கூச்சலிடுகின்றபா விகளால் நிறைந்துள்ளன. வச்சிரகுண்டம்-நூறு வில்லளவுள்ளதாய் இருளும் வச்சிரப்பூச்சிகளும் அவைகளால் தின்னப்படும் பாவி களும் நிறைந்துளது. தப்தபாஷாண குண்டம் - இரண்டுவாபி அள வுள்ளதாய்,சிவந்தநெருப்புத்தணலைவீசும் கற்களாலும் அதில்துடிக் கும் பாபிகளாலும் நிறைந்துளது. தீக்ஷ்ணபாஷாணகுண்டம் - கத்தி முனைபோன்று கூர்மையான சுடுங்கற்களாலும் மகாபாபிகளாலும் நிறைந்துளது. லாலாகுண்டம் - ஒருகுரோசம் அளவினையுடையது. மசீகுண்டம் - நூறுவில்லளவுள்ளதாய் காய்ச்சப்பட்டமையாலும் அதில் வீழ்ந்துகிடக்கும் மலைபோலும் கறுத்தபாவிகளாலும் நிறைந் துளது. சூர்னகுண்டம் - ஒருகுரோசம் அளவுள்ளதாய் அதனையே

தின்னும்பாபிகளால்நிறைந்துளது. சக்கரகுண்டம்-குலாலன்சக்கரம் போல் பதினாறுவட்டைகளோடும் அதில் அகப்பட்டுத்துளைபடும் பாவிகளோடும் எப்போதும் சுழன்றுகொண்டேயிருக்கும். வக்ர குண்டம் - இரண்டுகவ்யூதி அளவுள்ளதாய் ஆழ்ந்து அநேகவளை வுள்ள குகைரூபமாய் சுடுநீரும் பாவிகளைத் தின்னும்புழுக்களும் நிறைந்துளது. கூர்மகுண்டம்-பளபளப்பாயும் பயங்கரமாயும் பாவி களைத்தின்று கூச்சலிடுகின்றதாயுமுள்ள அநேக ஆமைகளால் நிறை ந்துளது. ஜ்வாலாகுண்டம் - ஒருகுரோசம் அளவுள்ளதாய் அதில் வீழும் பாபிகள் கிலேசப்பட்டு கூக்குரலிடும் துக்கவோசையால் நிறைந்துளது. பஸ்மகுண்டம் - ஒருகுரோசம் ஆழமும் சுடுசாம்ப லும் அதனையேபுசிக்கும் பாபிகளும் நிறைந்திருக்கப்பெற்றுளது. தக்தகுண்டம்-சுடுகின்றகற்களும் இரும்பும் அதில்நன்றாய்க் காய்ச் சப்பட்டபாவிகளும் நிறைந்ததாயும் ஒருகுரோசம் அளவுள்ளதா யும் இருளோடுகூடியதாயும் பயங்கரமாயும் காத்ரமாயுமுள்ளது. தப்தசூசி-இரண்டுகவ்யூதி அளவுள்ளதாய் நன்றாய்க்காய்ச்சப்பட்ட உப்புநீரையுடையதாயும் இருளடர்ந்ததாயும் ஜலசெந்துக்களையும் அவைகளால் தின்னப்படும் பாவிகளையுமுடையது. அசிபத்திரகுண் டம்- அரைகுரோசம் அளவுள்ளதாய் யானைவணங்கி என்னும் மரத் தினடியிலிருப்பதாய் அதனின்றும் வீழும் இகத்திபோன்ற இலை களால் வருந்துகின்ற பாவிகளாலும் அம்மரத்தின் நுனியினின்றுந் தள்ள காப்பாற்வீர் என்று கூக்குரலிடும் பாவிகளாலும் நிறைந்து ள்ளது. க்ஷுராதாரம் - நூறுவில்லளவுள்ளதாய் கத்திமுனைபோன்ற ஆயுதங்களையுடையதாய் அதில்வீழ்ந்து ரக்தத்தில் மூழ்கினபாவி களையுடையதாயிருக்கின்றது. சூசீமுகம் - ஐந்துவில் அளவுள்ள தாய் ஊசிமுனையுள்ளதாய்மிக்ககிலேசத்தைக் கொடுப்பதாயுள்ளது. கோகாமுகம்-இருபதுவில்லளவுள்ளதாய் வாயைத்திறந்து கொண் டிருக்கும். கோகா என்னும் ஜந்துக்கள்நிறைந்த கூபரூபமாய் மகா கிலேசத்தைக்கொடுப்பதா யுள்ளது. நக்ரமுகம் - பதினாறு வில்லள வுள்ளது. கசதம்சம் - நூறுவில்லளவுள்ளது. கோமுகம் - முப்பது வில்லளவுள்ளது. கும்பீபாகம் - இரண்டுகவ்யூதி அளவுள்ளதாய், காலசக்கிரத்தோடு கூடியதாய், சட்டிபோன்றதாய், லக்ஷம்புருஷப் பிரமாணம் ஆழமும், அகலமுமுள்ளதாய், மற்றக்குண்டங்களினும் நான்குமடங்கு அதிகமான துன்பத்தைக்கொடுப்பதாய், எல்லாகுண் டங்களினும் பெரியதாயுள்ளது. காலசூத்திரகுண்டம் - தூதர்களால்

கட்டப்பட்டு அதில் தள்ளப்பட்டு மூர்ச்சித்து பிரக்ஞைதப்பாவண்ணம் மீண்டுமீண்டும் எடுக்கப்பட்டும் தள்ளப்பட்டும் கிலேசமுள்ள பாவிகளால் நிறைந்துள்ளது. மச்யோதம்-ஒருகூப அளவுள்ள ஆழமும், இருபத்துநான்கு கிணற்றகலமுமுள்ளதாய், ஜெந்துக்களால் தின்னப்பட்டு மிகுந்தவர்களையுடைத்தானதாய், தொட்டமாத்திரத்தில் எல்லா வியாதிகளையும் உண்டாக்கும் சுட்ட நீருடையதாயுள்ளது. கிருமிகந்துகம்-நூறுவில்லளவுள்ளதாய் அருந்துதம் என்னும்பெயருடையதாய்,பாவிகளைப்பட்சிக்கிற புழுக்களோடும் ஆஹா என்னும் சத்தத்தோடுங் கூடியுள்ளது. பாம்சுபோச்யம்-நூறுவில்லளவுள்ளதாய் உமித்தழல்போன்ற வறுத்தமணலாலும், அதைப் புசிக்கிறபாவிகளாலும் நிறைந்துளது. பாசவேஷ்டம்-ஒருகுரோசம் அளவுள்ளதாய், பாபிகள் வீழ்ந்தமாத்திரத்தில் கட்டுப்படுத்துவதாயுள்ளது. சூலப்புரோதம்-இருபதுவில்லளவுள்ளதாய், சூலைநோயையுண்டாக்குவதா யுள்ளது. பிரகம்பனம் - அரைகுரோசம் அளவுள்ளதாய், பனிஜலத்தினாலும், அதில்வீழ்ந்து நடுங்குஞ்சரீரமுள்ள பாவிகளாலும் நிறைந்துளது. உல்காமுகம் - இருபதுவில்லளவுள்ள தாய், பாவிகளின் முகத்தை அநேககொள்ளிக்கட்டையால் சுடுவதாயுள்ளது. அந்தகூபம் - லக்ஷம்புருஷப்பிரமாண நீளமும், அகலமும், நூறுவில்லளவு ஆழமுமுள்ளதாய் ஒருவருக்கொருவர்தெரிந்துக்கொள்ளக் கூடாத மிக்க இருளோடு கூடியதாய் புழுக்களால் தின்னப்படும் பாவிகளால் நிறைந்துள்ளது. வேதனம் இருபதுவில்லளவுள்ளதாய், நானாவித ஆயுதங்களால் அடிபடுகிறபாவிகளால் நிறைந்துள்ளது. தாடனம்-பதினாறு வில்லளவுள்ளதாய், தண்டத்தினால் அடிபடுகிற பாவிகளால் நிறைந்துளது. ஜாலரந்தரம் - இருபதுவில்லளவுள்ளதாய், மீன் வலையில் அகப்படுவதுபோல் அகப்பட்டுவருந்தும் பாவிகளோடுகூடியது. தேகசூரணம் - இருபதுவில் அகலமும், கோடிபுருஷப்பிரமாணம் ஆழமுமுள்ளதாய்,இருளோடு கூடியதாய், சரீரத்தைப்பொடிபடுத்துவதா யுள்ளது. தலனம் - பதினாறுவில்லளவுள்ளதாய், தூதர்களால் பிளந்தெறியப்படுகின்றபாவிகளால் நிறைந்துளது. சோஷணம் - முப்பது வில்லளவுள்ளதாய், நூறுபுருஷப்பிரமாண ஆழமுள்ளதாய் இருட்டோடும் வறுத்தமணலோடும் கூடியதாயுள்ளது. கஷம் - நூறுவில்லளவுள்ளதாய், நானாவிதமான சர்மங்களையுடையதாய் அதையே புசிக்கிற பாவிகளால் நிறைந்துளது. சூர்ப்பம் - பன்னிரண்டு வில்லளவுள்ளதாய் வறு

த்த இருப்புப்பொடியோடு கூடியதாய் தூதர்களால் அடிக்கப்படும் பாவிகள் நிறைந்துளது. ஜ்வாலாமுகம்-இருபது வில்லளவுள்ளதாய் உள்ளும் புறம்பும் நெருப்பைவீசுவதாய் வீழ்ந்தமாத்திரத்தில்மூர்ச் சையடையச் செய்வதாயுள்ளது. தூமாந்தம் - அரைவாபி அளவு ள்ளதாய் நூறுவில்லளவு ஆழமுள்ளதாய் இடிந்திருக்கிறதாய்புகை யோடுகூடியதாயிருக்கிறது. நாகவேஷ்ணம் - நூறுவில்லளவுள்ள தாய் நாகங்கள் நிறைந்ததாயுள்ளது. பாபிகளில்லாத நரகங்களும் இனி வரும்பாபிகளுக்கு இடமில்லாத நரகங்களுமில்லை. ஓ சாவித் திரீ! எண்பத்தாறு நரககுண்டங்களின் லக்ஷணத்தைக் கூறினேனெ ன்றனன். (சு - ம். ககஅ௭.)

முப்பத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹரித் பதி சமா ராத்யா யைநமஃ

## முப்பத்தேட்டாம் அத்தியாயம்.

## * தேவீபக்தி உத்கர்ஷம்.

---

சாவித்திரிகூறுகின்றாள்:—சாரத்துக்கெல்லாம் சாரமானதேவி பக்தியை எனக்குக்கொடும். அது புருஷர்களடையவேண்டிய முத் திமார்க்கத்துக்குப் பீஜமாயும், சாரமாகியமுத்திக்குக்காரணமாயும், நரகார்ணவத்தைத் தாண்டச்செய்வதாயும், சர்வாரிஷ்டத்தையும் நசிக்கப்பண்ணுவதாயும், கருமவிருக்ஷத்தை யறுப்பதாயும், நாடோ றும் செய்கிறபாவங்களை அரிப்பதாயும் இருப்பதால் எனக்குக் கொடுமென்கிறேன். ஓ தருமரே! தேவியினது பக்தி சேவையை விருத்திசெய்யுஞ் சாதனமென்று சொல்லுவதால் அதன் லக்ஷண மென்னை! அது எத்தனைவகைப்படும்! அந்தப்பக்திக்கு விரோதமான செய்கைகளைக் கண்டிக்கவேண்டிய கண்டனங்களெவை! அவைக ளையும் சொல்லவேண்டும். ஏனென்றால் பிரஹ்மாவினால் ஸ்திரீஜாதி யானது தத்துவஜ்ஞானமில்லாமல் சிருட்டிக்கப்பட்டிருப்பதலால் எனக்கு அச்சாரமான ஜ்ஞானத்தை அவசியமாகச் சொல்லவேண்

* தேவி பக்தியினுடைய உயர்வு.

டும். தானம் யஜ்ஞம் விரதம் தவம் தீர்த்தயாத்திரை முதலியவற்றைச் செய்வதனால் வரும்புண்ணியமானது அஞ்ஞானிக்கு உபதேசஞ்செய்கிற புண்ணியத்தில்வரும் பதினாறுபங்கில் ஓர்பங்கினுக்கும் ஈடாகமாட்டாது. ஓ ஐயா! தந்தையைக் காட்டிலும் தாயையும், தாயைக்காட்டிலும் ஞானோபதேசஞ்செய்கிறகுருவையும் நூறுபங்கதிகமாகச்சிறப்பிக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றபடியால் நீர்நான் எனக்குத்தெய்வமென்றாள். தருமன்கூறுகின்றான்:—ஓ சாவித்திரீ!நீ முன்கேட்டவரங்களைக் கொடுத்தேன்.இப்போது கேட்பவன் கூறுபவன் பிரஸ்னைசெய்பவன் ஆகிய இவர்களுடைய குலத்தை உத்தரிக்கச்செய்வதான தேவியினது குணகீர்த்தனங்களையுங் கேட்க விரும்புகின்றாய். உனக்கு அத்தேவியினிடத்தில் மேன்மேலும்பக்தியுண்டாகுக. நீதேவியினது குணகீர்த்தனங்களை ஆயிரமுகமுடைய ஆதிசேஷனாலும் ஐந்துமுகமுடைய மிருத்யுஞ்சயராலும் ஆறுமுகமுடைய முருகனாலும் நான்குமுகமுடைய பிரமனாலும் நான்குவேதங்களாலும் விஷ்ணுமூர்த்தியினாலும்கணேசராலும் யோகீந்திரர்களாலும் சாரபூதமான சாஸ்திரங்களாலும் மற்றும் எவர்களாலும் பதினாறுபங்கில் ஓர்பங்கேனும் சொல்லமுடியா. கலைமகளும் சொல்லச்சத்தியற்று அறிவில்லாத சடம்போலாயினாள். பிரமபுத்திரர்களும் தருமசீலருமான சநத்குமாரர் சநந்தனர் சநாதனர் சநகரென் றெண்ணப்பட்டவரும் கபிலரும் சூரியமூர்த்தியும் எடுத்துச்சொல்லச் சத்தியற்றவராய் அசக்தராயினர்.இவரெல்லாம் இவ்வாறாயினாரென்றால் நானொருவனோ சொல்லவல்லனாவேன். பிரமனாதி மும்மூர்த்திகளும் தேவியினது பாதாம்புஜங்களைத் தியானிக்கின்றார்களே யல்லாமல் அவளது குணானுபவங்களைச் சொல்லத் துணிந்தாரல்லர். தேவியினது குணானுபவங்களைச் சொல்லச்சக்தியற்று அவளை யாரொருவர் தியானிக்கின்றார்களோ அவர்களுக்குச் சாத்தியமாகாத பொருள் ஒன்றுங்கிடையாது; தியானஞ்செய்யாதவர்கள் யாரோ அவர்களுக்குத்தான் ஒருபொருளுஞ் சாத்தியமாகமாட்டாது. இதனை வேதவித்துக்களாகிய பிரமஞானிகள் சிறிதறிவார்கள். அவர்களினும் பிரமதேவர் அவரினும்கணேசர் அவரினும் ஞானகுருவாகிய ஸ்கந்தமூர்த்தி அவரினுஞ் சர்வஜ்ஞரான சம்பு அதிகமாயறிவார். அச்சம்பு தருமருக்கும் அவர் சூரியமூர்த்திக்கும் உபதேசித்தனர். என்தந்தையாகிய அவர் தேவியைப்பூசித்து தவத்தின் பலத்தையடைந்தார். ஓசாவித்திரீ! பூர்வத்தில் நான் நகர

த்தைவிட்டு விஷயங்களில் ஆசையற்று வைராக்கியத்தை மேற்கொண்டு தவஞ்செய்யத்தொடங்க என்தந்தை நீவினவிய தேவியினது குணகீர்த்தனங்களைக் கூறினர். அவைகளைக்கூறுகின்றேன்:—

தேவியானவள் தன் குணவிசேஷங்களைத் தானேயறியாள். (எனவே அறிவிக்கத்தக்கவளாகிய அவளே அறிவிக்கத்தொடங்குவாளாயின் அதுஅவளுக்கும் அடங்காதென்றபடி) இங்ஙனமான அருமையுடைத்தாயின் அவளது குணகீர்த்தனங்களை வேறுயாவரறிய வல்லுனராவர். ஆகாயத்தை யளக்கத்தொடங்கினால் அது இவ்வளவென்று அளக்கமுடியுமோ அதுபோல் தேவியினுடைய குணகீர்த்தனங்களை மனம் அளக்கத்துணியினு முடியாதென்க. இவ்வரியபெரிய தன்மையையுடைய சக்தியானவள், சர்வாத்மாவாயும் சர்வபகவானுயும் சர்வகாரணகாரணராயும் சர்வேஸ்வரராயும் சர்வாத்ய (முதல்வ) ராயும் சர்வவித்தாயும் சர்வபரிபாலகராயும் நித்யரூபியாயும் நித்யதேகியாயும் நித்யானந்தராயும் நிராகிருதராயும் நிரங்குச (தடையில்லாதவ) ராயும் நிராசங்கராயும் நிர்க்குணராயும் நிராமயராயும் நிர்லிப்த (கர்மபந்தமில்லாதவ) ராயும் சர்வசாக்ஷியாயும் சர்வாதாரராயும் பராத்பரராயுமிருக்கின்ற சர்வேஸ்வரருக்கு மாயாவிசிஷ்ட பிரகிருதி சத்தியாயிருக்கின்றாள். அங்ஙனம் சத்தியாயிருப்பதுமன்றி அந்த சர்வேஸ்வரனுன புருஷனுகவு மிருக்கின்றாள். எதுபோலெனின் அக்னியும் அவ்வக்னிக்குவேறாகத் தனித்து நில்லாத உஷ்ணசக்திபோலும் புருஷனும் பிரகிருதியுமாகப்பேதமின்றியிருக்கின்றனள். அந்தப் பிரகிருதி சத்திதான் சச்சிதானந்தரூபையான மகாமாயை. உருவம்போல் காணக்கூடாத சச்சிதானந்தத் தன்மையுடைய அச்சத்தி பக்தானுக்கிரக காரணார்த்தமாய் உருவங்கொண்டிருக்கின்றாள். ஓ சுந்தரமுள்ளவளே! அனுக்கிரககாரணியாயிருக்கின்ற அந்தச்சத்தியானவள் முதலில் ராதாரூபமான ஓர் அழகிய ஸ்திரீயையும் கிருஷ்ணரூபமான ஓர்புருஷனையும் சிருஷ்டித்தாள். அந்தப்பகவானைப் பக்தர்கள்தியானித்து வழிபடுகின்றனர்.

அந்த ராதாகாந்தனைப் படைத்தவளாகிய அந்தத்தேவியினது ஆஜ்ஞாபயத்தினால் பிரமதேவன் எல்லாவுயிர்களையும்படைத்து அவரவர் கன்மானு சாரத்தை யனுசரித்து அவரவர் அனுபவிக்கவேண்டியவற்றை அவரவர்தலையி லெழுதிவிடுகிறான். விஷ்ணுமூர்த்தியானவர் அவரவர்செய்யும் தவமுதலிய செயல்களுக்குரிய பலன்

களைத் தேவியினது உத்திரவைப்பெற்றுக் கொடுத்துவருகின்றார். அதுபோலவே காலாக்னிருத்திரரும் சங்காரத்தொழிலைச் செய்து வருகின்றார். மிருத்யுஞ்சயனாகிய சிவபெருமான் பரமானந்தயுக்தனாய்ப் பக்திவைராக்யத்தோடுகூடிய யோகியைப்போலிருந்து யோகிகளுக்கு ஞானானுக்ரகத்தைச் செய்யும் பிரபுவாயிருக்கின்றார். வாயுதேவன் அதிவேகமாய்ச் சுழன்றும், சூரியன் எப்பொழுதும் தாபத்தைச்செய்தும், இந்திரன் மழையைப்பெய்வித்தும், மிருத்யு எல்லாவுயிர்களிடத்தும்பிரவேசித்தும், அக்னி எல்லாவற்றையுந் தஹித்தும், வருணன் சீதளத்தைச்செய்தும், திக்பாலகர்கள் திக்குகளைக்காத்தும் வருகின்றனர். ராசிசக்கிரமும் கிரகங்களும் சுழன்றும், விருக்ஷங்களெல்லாம் புஷ்பபலத்தைக் கொடுத்தும் காலதத்துவமானது வெவ்வேறுபேதபட்டும் வருகின்றன. சலத்திலும் பூமியிலுமுள்ள உயிர்கள் ஜீவித்தும் யுத்தமுகத்தாலும் விஷங்களாலும் காலாகாலங்களில் மரித்தும் வருகின்றன. பர்வதமுதலியவைகளோடுகூடி கடலால் சூழப்பட்டுள்ள இப்பூமி அனந்தனாலும் அதன்கீழ்கூர்மத்தாலும் அதன்கீழ் ஜலத்தாலும் வாயுவாலும் அந்தத்தேவியின் ஆக்ஞா பயத்தினாலேயே தாங்கப்பட்டிருக்கிறது. இருபத்தெட்டு இந்திரர்கள் முடிந்தால் பிரமனுக்கு ஓர் இரவும் பகலுமாகிய ஓர்நாளாம். அவ்வாறு முப்பதுநாளாயின் ஒருமாதம், அவ்வாறான இரண்டுமாதம் ஒருருது, பன்னிருமாதம் ஒருவருஷம், அப்படி நூறுவருஷமானால் பிரமனாயுள் முடியும். அவன் முடிவு கிருஷ்ணனுக்கு ஓர்கண்ணிமை கொட்டுங்காலமாம். இது பிராகிருதபிரளயமெனப்படும். அப்பிரளயத்தில் சகலதேவர்களும் சராசரங்களும் பிரமனும் கிருஷ்ணமூர்த்தியினுடைய நாபிக்கமலத்திலும், பாற்கடலிலும் வைகுண்டத்திலுமிருக்கிற சதுர்ப்புஜனான விஷ்ணு இடப்பாகத்திலும், தியானாதீசனான ருத்திரன் ஜ்ஞானத்திலும் லயமடைகின்றனர். நாராயண அம்சமான ஸ்கந்தர் அவர் மார்பிலும் கிருஷ்ணாம்சமான கணேசர் தோளிலும் மறைகின்றனர். துர்க்காதேவியான விஷ்ணுமாயையிடம் சகல்சக்திகளும், அந்தமாயாதேவியும் கிருஷ்ணன்புத்தியிலும் மறைந்து புத்திக்கதிஷ்டான தேவியாகவிருக்கிறாள். லக்ஷ்மியம்சமான யாவரும்கோபிகளும்,தேவஸ்திரீகளும் ராதையிடம் மறைகின்றனர். அந்தராதாதேவி கிருஷ்ணனுடைய பிராணனிலும், சாவித்திரி சரஸ்வதியினிடத்திலும் வசிக்கின்றனர். சர்வவேதங்களும் சாஸ்திரங்களும் சரஸ்வதிதேவியிடம் லயமாகின்

றன. அவள் பரமாத்மாவாகிய கிருஷ்ணமூர்த்தி நாவிலும், கோபா லர் அவர்ரோமத்திலும், யாவருடைய பிராணன்கள் பிராணனிலு ம், அக்னி ஜாடராக்கினியிலும், வருணன் நாநுனியிலும், பக்தர்க ளெல்லாம் பாதாரவிந்தத்திலும், விராட் அம்சமானவர்க ளெல் லாம் உருவத்திலும் ஐக்கியமாகின்றனர். அவரது ரோமகூபங்களில் உலகங்களிருக்கின்றன. இமைகொட்டுங்காலத்தில் கண்ணைத்திற க்கும்போது இவ்வுலகம் சிருட்டியையும், மூடும்போது பிரளயத் தையும் அடைகின்றபடியால் இவ்வளவுபிரமப்பிரளயமானதென்று சொல்லமுடியாது. பூமியின்தூள் எவ்வளவோ அவ்வளவென்று சொல்லமுடியும். அவர் பிரளயத்தில் பிரகிருதிதேவியிடம் லீன மாகின்றார். அப்பிரகிருதியாகிய பராசத்தி ஒருத்தியே சேஷித்திரு க்கின்றாள். நிர்க்குணனென பரமபுருஷன் என்று சொல்லப்படுகின்ற வரும் அவளே. அந்தப்பிரகிருதியே சத்ரூபமாய் ஆதியிலிருந்தா ளென்று வேதவித்துக்களறிந்து சொல்லுகின்றனர். இவ்வாறு அவ் யக்தையாயும் அவ்யாக்ரதையாயும் ஆதியிலும் அந்தத்திலும் இருக் கிற சித்ரூபியான அவள் பெருமையை யாவர் சொல்ல வல்லவ ராவர். ஆகலான் அவளுக்குப் பக்திசெய்வதுதான் சிறந்தது. நான்குவேதங்களிலும் கூறப்பட் டிருக்கிற சாலோக சாமீப சா சாரூப நிர்வாணங்களும் சிறந்ததன்று. ஆகவே பக்தர்கள் அப்பர மாத்மாவின் சேவையையே விரும்புகிறார்களல்லாமல் பிரமத்தன்மை யாவது அமரத்தன்மையாவது திவ்யரூபந் தரிப்பதையாவது சுக மானமோக்ஷத்தையாவது விரும்புகின்றார்களில்லை. ஏனெனில் அவை கள்பரமாத்மாவின் சேவையில்லாதன. பக்தியே அப்பரமாத்மாவின் சேவையை விருத்திசெய்கிறது. இதுதான் முத்தியினாலுண்டாகும் இன்பத்திற்கும் பக்தியினாலுண்டாகும் இன்பத்திற்குமுள்ள பே தம். இனி நிஷேதகண்டனஞ் சொல்லுகிறேன் கேட்பீராக. பக்தி க்கு நிஷேதமானது போகங்களை விரும்பிச்செய்யுங் கர்மங்களே யாம். ஆகலான் அக்கர்மங்களைவிட்டு விபுவாகியபரமாத்மாவினது சேவைசெய்வதே மேலான சுபகருமமும் தத்வஞானமுமாம். இனி நீ உன்பர்த்தாவுடன் உன்னிடத்தை யடைவாயென்று ஆசிகூறி அவள்புருஷனை உயிர்ப்பித்துத் தான் தன்னிடம்போக எத்தனிக் கும்போது சாவித்திரி இயமனது பாதங்களைப் பிடித்துக்கொண்டு பிரிவாற்றாமையால் கூக்குரலிட்டுத் துக்கத்துடனழுதாள். இயமன் அவளழுகையைக்கண்டு மனமிரங்கினவனாய் ஓ சாவித்திரீ! நீபாரத

வருஷத்தில் புண்ணியக்ஷேத்திரத்தில் லக்ஷம்வருஷம் நல்லசுகமநுப வித்து முடிவில் தேவிலோகத்தையடைவாய். நீ உன்வீட்டிற்குப்போ ய் சாவித்திரிவிரதத்தை அநுட்டிக்கக்கடவாய். அதனைப் பதினன் குவருடம் அநுட்டித்தால் ஸ்திரீகளுக்கு மோக்ஷம்சித்திக்கும். அவ் விரததினம் ஜ்ஜேஷ்டமாசம் சுக்லபக்ஷ சதுர்த்தசி. பாத்ரபதமாசம் சுக்லபக்ஷ அஷ்டமிதிதி மகாலக்ஷ்மியின் விரததினம். அது பதினு றுவருடம் செய்யவேண்டியது. எவள் அதனை யனுட்டிக்கிறளோ அவள் விபுவினுடையபாதாரவிந்தத்தையடைவாள். மங்களத்தைக் கொடுக்கிற மங்களசண்டிகையை பிரதிமங்களவாரத்திலும், சஷ்டி தேவியைப் பிரதிசுக்லபக்ஷசஷ்டியிலும், எல்லாசித்தியையுங் கொடு க்கவல்லராதாதேவியை ஆஷாடசங்கிராந்தியிலும், கார்த்திகைமாத சுக்லபக்ஷ அஷ்டமியிலும், துக்கத்தைப்போக்கடிக்கும் துர்க்கா தேவியான பிரகிருதிதேவியைப் பிரதிசுக்லபக்ஷஅஷ்டமியிலும் உப வாசமிருந்து பூஜிக்கவேண்டும். தனத்தையாவது சந்தானத்தையா வது விரும்புகின்றவள் சங்கல்பஞ்செய்துகொண்டு இப்பிரகிருதி தேவியைப் புருஷன்புத்திரனுள்ள பதிவிரதையினிடத்திலாவது யந் திரத்திலாவது பிம்பங்களிலாவது ஆவாகித்து விதிப்படி பூசிப்பாளா யின் விரும்பியவற்றைப்பெற்று இம்மையில் சுகமடைந்து மறுமை யில் தேவியின்பதத்தை யடைவாள். பரமேஸ்வரி எப்பொழுதும் பூஜிக்கத்தக்கவளாயும். எல்லாதேவி ரூபமாயும் இருக்கிறபடியால் எந்தத்தேவியைப் பூஜிக்கினும் அப்பூஜை அவளையே யடைகிறது என்றுகூறி தர்மராஜன்செல்ல சாவித்திரியும் தன்னயகனுடன் தன் னிடம்போய்ச்சேர்ந்து விரதங்களை அநுட்டித்துப் புத்திரர்களைப்பெ ற்று லக்ஷம்வருடம் சுகத்தோடிருந்து முடிவில் புருஷனுடன் தேவி பதத்தை யடைந்தனள். சாவித்திரிதகப்பன் காலக்கிரமமாய்ப் புத் திரனையும் அவள் மாமன் ராஜ்யத்தையும் கண்களையும் அடைந்த னர். சாவித்திரி சூரியனுக்கும் மந்திரங்களுக்கும் அதிஷ்டானதே வதை யாகலின் சாவித்திரிதேவி யெனப் பெயர்பெற்றனள். ஓ நார தரே! சாவித்திரி வரலாறும் சிவகர்மப்பிரிவுகளுங் கேட்டீரன்றே இனி கேட்கவிரும்புகின்றது யாதென்று வினவினர். (சு-ம்.எஙு.)

முப்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹடாத்காரஹதாசுராயை நமஃ

# முப்பத்தோன்பதாம் அத்தியாயம்.

## மகாலக்ஷ்மி உபாக்யானம்.

---

நாரதர், ஓ பிரபுவே! மகாலக்ஷ்மியின் சரித்திரம் யாது? அத்தேவியை யார் பூஜித்தது? எவ்வாறிருந்தாள்? அவளது குண கீர்த்தனமென்ன என்று வினவ, நாராயணர்கூறுகின்றார்:—

சிருஷ்டிக்கு ஆதியில் பரமாத்மாவின் இடதுபாகத்திற்றோன்றிய பெண்ணுருவம்-நிறம் தேஜஸு வயது காந்தி யஸஸு வஸ்திரம் ஆகாரம் பூஷணம் குணம் புன்சிரிப்பு கடாக்ஷம் பிரீதி இனிய வார்த்தை முதலானவற்றில் சமானமுடைத்தாய் வலப்பக்கத்தில் ராதிகாதேவியாயும், இடப்பக்கத்தில் லட்சுமிதேவியாயும், இரண்டுருவங் கொண்டதென்று முதல் அத்தியாயத்தில் கூறியிருக்கிறேனல்லவா, அந்தலட்சுமி மகாலக்ஷ்மியெனப்படுவாள். லட்சுமி என்றால் கருணையுடன் பார்க்கின்றவள் எனப் பொருள்படும். அத்தேவி சுத்ததத்துவ சொரூபிணியாயும், கோபாலர்களாலும் கோபிகைகளாலும் சூழப்பட்டு சதுர்ப்புஜனாகிய விஷ்ணுவுடன் வைகுண்டமடைந்து அவருக்கு நாயகியாயிருந்து சுவர்க்கத்தில் இந்திரசம்பத் ரூபமான சுவர்க்க லட்சுமியாயும், பாதாளத்தில் நாகலட்சுமியாயும், இராஜாக்களிடத்தில் இராஜ்யலட்சுமியாயும், கிருகஸ்தனிடத்தில் கிருகலட்சுமியாயும், யக்ஞத்தில் தக்ஷிணாரூபமாயும், தாமரையில் சோபாரூபையாயும், சந்திரனிடத்தில் சந்திரிகையாயும், சூரியனிடத்தில் காந்தியாயும், பூஷணம் பழம் ரத்னம் ஜலம் அரசன் அரசபத்தினி திவ்யஸ்திரீ கிருகம் சமஸ்தமான பயிர் வஸ்திரம் சுத்தி செய்யப்பட்ட ஸ்தானம் தேவபதுமை அழகானபாத்திரம் மாணிக்கம் முத்துமாலை வச்சிரமணி பால் சந்தனம் மரத்தின்கிளை புதிதான மேகங்கள் முதலானவைகளிடத்தில் வசித்து அதனால் விளையத்தக்க சௌபாக்கியமாயுமிருக்கின்றாள். அத்தேவியை விஷ்ணுமூர்த்தி பாற்கடலில் சித்திரை தை புரட்டாசி முதலிய மாதங்களிலும், மங்கள வாரங்களிலும், பிரமன் புரட்டாசிமாத சுக்லாஷ்டமியிலும், மநு வருஷமுடிவிலும், மகரசங்கராந்தியிலும், மாக

சங்கராந்தியிலும்பூசித்தனர். மஹேந்திரன் கேதரன் நீலன் சுபலன் நளன் துருவன் உத்தானபாதன் பலி காசிபர் தக்ஷன் கர்த்தமன் விவஸ்வன் (சூரியன்) பிரியவிரதன் சந்திரன் குபேரன் வாயு யமன் வன்னி வருணன் முதலானவர்களாலும் மனித சிரேஷ்டர்களாலும் ருஷிகளாலும் சத்புருடர்களாலும் கிருகஸ்தர்களாலும் காந்தர்வர்களாலும் நாகங்களாலும் பூஜிக்கப்பட் டிருக்கின்றனள். இவ்வாறு எல்லாவிடத்திலும் எல்லாராலும் பூஜிக்கப்பட்டு எல்லாசம்பத்துக்கும் அதிஷ்டான தேவதையாயும் சம்பத்ரூபமாயு மிருக்கிறாள் என்றனர். (சு - ம். உஉ)

முப்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹர்ஷ ப்ர தாயை நமஃ

## நாற்பதாம் அத்தியாயம்.

## மஹாலக்ஷ்மி ஜன்மகாரணம்.

---

நாரதர் நாராயணரைநோக்கி இலக்குமிதேவி பாற்கடலில் எவ்வாறு பிறந்தனளென்றுவினவ, நாராயணர் கூறுகின்றார்:— ஓர்காலத்தில் இந்திரன் மதுபானத்தினால் மதித்தவனாய் மிக்ககாமத்தோடு அரம்பையுடன்கூடி காமாந்தகனாய் ஆரணியத்தில் கிரீடித்திருக்கும்போது கைலாயத்தைநோக்கி வருகின்ற தூர்வாசர் அவ்வழியாய்வர இந்திரன் அவரையும் அவருடன்வந்த சிஷ்யர்களையும் நமஸ்கரித்துத் துதிக்கும்போது முநிவர் சிஷ்யருடன் ஆசீர்வதித்து, தமது கையிலுள்ள பரப்பிரம சொரூபமாகிய பகவானது பிரஸாதமாகிய பாரிஜாதமாலையைக் கொடுத்தனர். இந்திரன் அதனையேற்று யானையின் மத்தகத்தின்மீது வீசினன். அதுபட்டமாத்திரத்தில் யானையானது ரூபத்திலும் குணத்திலும் தேஜசிலும் விஷ்ணுவுக்குச் சமானமாய் இந்திரனை விட்டு காட்டுக்குத் தவஞ்செய்யச் சென்றது; அதைப்போகவொட்டாமல் தடுக்க இந்திரன் வல்லமையற்றவனாயினன். தூர்வாசர் அதனைக்கண்டு கோபங்கொண்டு இந்திரனைநோக்கி அடா! நீ சம்பத்தினால் கர்வமடைந்திருக்கின்றனை; அதனால் நான் கொடுத்த புஷ்பமாலையை யானையின்மீதெறிந்தனை. பரமபதியாகிய

பகவானுக்கு நிவேதித்த நைவேத்தியம் பலம் புஷ்பம் சலம் எதுகி டைக்கினும் அப்போதே அவைகளைக் கிரகித்துப் பக்தியுடன் பிர யோஜனப்படுத்திக் கொள்ளாதவன் பிரமஹத்திக்குப் பாத்திரனாய் சம்பத்தழிந்து புத்தியும்மாறி ஸ்தானப்பிரஷ்டத்தையும் அடை வன். பூர்வ புண்ணியத்தால் கிடைக்கும் நிவேதனத்தைப் புசிக்கின் றவன் சீவன்முக்தனாவன். எவன் நிவேதனத்தைப் புசித்து நமஸ்கரி க்கின்றானோ அல்லது துதிக்கின்றானோ அவன் ஈஸ்வரனுக்குச் சமா னமானவனாவன். அவனது பரிசமாத்திரத்தில் தீர்த்தங்களெல்லாம் பரிசுத்தமாகின்றன. ஓ மூடனான இந்திரனே! அவனது பாததூளி யினால் பூமி பரிசுத்தமடைகின்றது. நரககுண்ட பதனயோக்ய பாப லட்சணங்களையுடைய பாபிகளாயினும் நிவேதனத்தை உண்ணப் பெறுவாராயின் சுத்தியாகின்றனர். இத்தகைய ஈஸ்வர பிரசாதமா ன மலர்மாலையை அவமதித்தபடியினால் லட்சுமி உன்னைவிட்டு வை குண்டமடையக் கடவாளாக. என்று சபித்து, ஓ இந்திரனே! ஈஸ்வ ரனுக்கு ஆட்பட்ட நான் உனக்கும் உன்னையொத்த தேவர்களுக் கும் பயப்படமாட்டேன் உங்கட்கே பயப்படாத யான் மற்றவர்களை லட்சியஞ்செய்வேனா? உன் தகப்பனாராகிய காசிபரும் குருவாகிய பிரகஸ்பதியும் என்னை என்னசெய்வார்கள். ஈஸ்வர பிரசாதத்தை யாவர் கிரகித்துப் போற்றுகின்றார்களோ அவர்கள்தான் என்னால் போற்றப்படும் ஐஸ்வரியவான்கள். அவரைப் பூசிப்பதுதான் நலம். நீ என்னால் போற்றப்பட்டவனன்றென்று இகழ்ந்தபொழுது இந் திரன் அவர்பாதத்தில் வீழ்ந்தழுது ஓ முனிவரே! மாயையைப்போக் க வல்லவரே! எனக்குத்தகுந்த சாபங்கொடுத்தீர். நான் இப்போது நஷ்டமான சம்பத்தைக்கேட்கவில்லை; ஞானத்தைக் கேட்கின்றேன். ஐஸ்வர்யம் ஆபத்துக்குக் காரணமாயும் ஞானத்துக்கு ஆவரணமா யும் முக்திமார்க்கத்துக்குத்தாப்பாளாயும் பக்தியைத்தூரத்தில் வில க்குவதாயுமுள்ளது என்பதை இன்றுகண்டேன் என்றுசொல்லவே முனிவர் தேவேந்திரனைநோக்கி சன்மம் மிருத்யு ரோகம் ஜரை சோ கம் இவைகளுக்குப் பீஜமாயிருக்கும் சம்பத்தாகிற இருட்டால் மறைக்கப்பட்ட மனிதன் முக்திமார்க்கத்தைக் காணான். சம்பத்தி னாலும் சுராபானத்தினாலு மதித்தவர்கள் மூடர்களே; இவர்களை ஞானவான்கள் சூழ்ந்திரார். பாவத்துக் கேதுவானவரே சூழ்ந்திரு ப்பர். சம்பத்தால் மதித்தவன் விஷயசுகத்திற் பரவசனாய் மகாகாமி யாய் ராஜஸிகனாய் சத்வமார்க்கத்தைக்காணான். விஷயத்தில் மூடர்

களாயிருப்பவர்கள் ராஜஸர்களென்றும் தாமஸர்களென்றும் இரு விதமாயிருக்கிறார்கள். சாஸ்திரமறியாதவன் தாமஸ விஷயாந்தகன் என்றும் அறிந்தவன் இராஜஸவிஷயாந்தகன் என்றும் சொல்லப் படுவார்கள். சாஸ்திரம் பிரவர்த்திபீஜம் நிவர்த்திபீஜம் என்று இரு வழிகாட்டுகின்றது. மதுவேண்டுமென்று தேனீசஞ்சரிக்கின்றது போல் ஆதியில் ஆத்மாக்கள் பிரவர்த்தி மார்க்கத்தில் சுகம்வேண்டு மென்று சஞ்சரிக்கின்றார்கள். சுக பலம்வருங்காலத்தில் மனதுக்கு ஆயாசம் ஜரை மிருத்யு ஜன்மம் இந்த ரூபமான சங்கடங்கள் நேரிடு கின்றன. நேரினும் ஆன்மாக்கள் கர்மப்படி நானாவிதமான யோனிக ளிற் பிறந்து சந்தோஷமான காரியத்தைச் சாதிக்கிறதுபோல் திரிந் துகொண்டிருக்கின்றனர். இவர்களில் ஆயிரத்தி லொருவனையோ நூற்றிலொருவனையோ கடவுள் தன் கடாக்ஷத்தால் சத்சங்கத்தை யடைவித்து பிறகு தத்வஞானமாகிற ஓடத்திலேற்றி முக்திமார்க் கத்தைக் காண்பிக்கின்றார். அப்பொழுது சீவன் சம்சாரபந்த சாகர த்தைத்தாண்ட தபசிலும் யோகத்திலும் முயலுகின்றான். மகாசுகத் தைக் கொடுக்கிற முக்திமார்க்கத்தை நிர்விக்னமாய்ப் பார்க்கிறான். ஓ இந்திரனே! இவ்வுண்மைகளை நீ உன் குருமுகமாகக் கேட்டதில் லையா? என்று சொல்லிப்போயினர்.

பிறகு இந்திரன் தினம் தினம் வைராக்கிய விருத்தியடைந்த வனாய் ஓர்நாள் அமராவதிக்குச்சென்று அங்குபயங்கரமற்று சொ ல்லமுடியாத உபத்திரவஞ்செய்கின்ற அசுரர்கூட்டம் நெருங்கியிரு ப்பதையும் தன்னுடைய கூட்டத்தார் பந்துக்கள் சூன்யமா யிருப்ப தையும் பார்த்து, மந்தாகினி கரைக்குத் திரும்பிவந்து பரப்பிரமத் தைத் தியானிக்கின்றவராயும் கங்கா நதிக்கரையில் நின்று கிழக்கு முகமாய் சூரியனைப்பார்க்கின்றவராயும் உரோமபுளகாங்கிதத்தோ டும் பரமானந்தத்தோடும் கூடினவராயும் தருமசிரேஷ்டராயும் பந்து வர்க்கங்களிற் சிறந்தவராயும் சகோதரர்களிற் பெரியவராயும் அசுரர் களுக்கு அரிஷ்டரூபராயு மிருக்கிற குருவைப்பார்த்து தூரத்தில் நின்று ஜபமுடிவில் எழுந்த அவரை நமஸ்கரித்து கூக்குரலிட்ட ழுது தனக்குநேர்ந்ததைக்கூறி யழ, பிரகஸ்பதி பகவான் கோபங் கொண்டவராய்ச் சொல்லுகின்றார்.

ஓசுரசிரேஷ்டனே! நீஏன் அழுகின்றனை? நீதியறிந்தவன் விபத்து ண்டான காலத்திலும் பயப்படமாட்டான். ஏனெனில் சம்பத்தும்

விபத்தும் ஸ்திரமானதல்ல. அவை முன்சன்மங்களில் செய்தகர்மத்துக்குத்தக்கபடி நேரிடும், மேலும் சம்பத்தும் விபத்தும் தங்களாலேயே ஜன்மாந்தரத்தில் செய்யப்பட்டவையாம். வண்டிசக்கரமானது உருளும்போது அதன் இலைகள்மாறிமாறி எவ்வாறு உருண்டு வருகின்றனவோ அவ்வாறே நன்மைதீமை மாறிவரும். அவ்விஷயத்தில் அழுகையென்ன? பாரதவருஷத்தில் அநுபவிக்கப்பட்டு வருவதெல்லாம்தன்னுல்செய்யப்பட்டகர்மமல்லவா! அதுசுபமாகவிருந்தாலும், அசுபமாகவிருந்தாலும், கற்பகோடிகாலமானுலும், அனுபவிக்காமல் முடியாது. அவசியமாகத் தாங்கள் செய்தகர்மத்தை அநுபவித்தே தீரவேண்டுமென்று சாமவேதசாகையில் பரமாத்மாவானவர் பிரமனுக்கு உபதேசித்திருக்கின்ருர். கர்மம்செய்கிறவர்களுக்கு கர்மசேஷ மிருக்குமானுல் அதற்குத்தக்கபடி பாரதவருடத்திலாவது வேறிடத்திலாவது சன்மம் கிடைக்கிறது. கர்மத்தினுலேயே பிரமசாபமும் ஆசீர்வாதமும் லட்சுமிவாசமும் தரித்திரமும் அடைகின்றன. கோடிசன்மத்திற்கு முன் செய்தபாபமாயினும் அது பிராணிகளை நிழல்போல் பின்ருெடர்ந்துவருகின்றது அனுபவித்தாலன்றிப் போகாது. அது காலபேதத்தாலும் தேசபேதத்தாலும் பாத்ரபேதத்தாலும் கர்மங்களுக்குக்குறைவும் ஆதிக்யமும் உண்டாகின்றன. வஸ்துக்களின் தானத்தினுலுண்டாகும்புண்யம்அந்தந்தத்தினங்களுக்குத் தக்கவாறு பலத்தைக்கொடுக்கும். சிலதினம் கோடிபலனை அதிகமாகக்கொடுக்கும், காலதேசபாத்திரங்கள் சமமாகவிருந்தால் சமமானபலத்தையும், தேசம்பேதமாயிருக்குமானுல் கோடிபங்கு அதிகமானபலத்தையும், பாத்திரம் சமமாயிருந்தால் சமமானபலத்தையும் பாத்திரம் விசேடமாயிருந்தால் நூறுபங்கு அதிகமானபலத்தையும் கொடுக்கிறது. பயிர்களை விருத்திசெய்கிறவன் மகிமை, க்ஷேத்திரத்தின் மகிமை, தீர்த்தத்தின் மகிமை ஆகிய இவைகளுக்குத்தக்கபடி உலகில் உழவினுலுண்டாகும் பிரயோஜனம் உண்டாகின்றது. சாதாரணதினத்தில் தானஞ்செய்தால் சாதாரணபலத்தைக் கொடுக்கும். அமாவாசையிலும் மாதப்பிறப்பிலுஞ் செய்தால் நூறுபங்குபலன் அதிகமாயும், சாதுர்மாஸ்யபௌர்ணமியில் அளவில்லாத பலனையும் சந்திரகிரகணத்தில் ஒன்றுக்குக் கோடிபங்குபலனையும், சூரியகிரகணத்தில் அதனினும் பத்துபங்கு அதிகமானபலனையும், அக்ஷயம் என்னும் புண்ணியகாலத்தில் அக்ஷயமானபலத்தையுங் கொடுக்கிறது. இவ்வாறு தினத்துக்குத்தக்கபடி புண்யபலன் கிடைக்கிறது.

தானத்தில் எப்படியோ அப்படியே ஸ்நானம் ஜபம் முதலிய புண்ணியகிருத்தியங்களுக்கும் கிடைக்கிறது. இவ்வாறு மநுஷ்யாளுடைய புண்ணியகர்மங்களை யறியவேண்டியது. குயவன் தண்டசக்கரங்களாலும் சுழற்றுவதனாலும் எப்படி கடத்தைச் செய்கின்றானோ அப்படிப் பிரமன் கர்மசூத்திரத்தினால் பலத்தைக்கொடுக்கின்றான். எவருடையஆக்ஞையால் சகலப்பிரபஞ்சமும் சிருட்டியாகின்றதோ அவரை நமஸ்கரியுங்கள். அவர் பிரமனையுஞ் சிருட்டித்தவர். அவர் சகலத்தையும் ரக்ஷிக்கின்றவர், சங்கரிக்கின்றவர். ஆபத்துரூபமான சம்சாரத்தில் பகவானை நினைப்பவன் ஆபத்தில்நின்றும் சம்பத்தையடைகிறான் என்று சங்கரர் கூறுகின்றார் என்று கூறி ஆசீர்வதித்தனர். (சு - ம். கூஉ.)

நாற்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹவிர் போக்த்ரை நமஃ

## நாற்பத்தோன்றாம் அத்தியாயம்.

## இந்திராதீனும் பிரஹ்மலோககமனம்.

---

பின்பு இந்திரன் குருவுடன் பிரமசபைக்குச்சென்று நமஸ்கரித்து நடந்த விருத்தாந்தத்தைச்சொல்ல, பிரமதேவன் தேவராஜனைநோக்கி நீ என்வம்சத்தில் பேரனுக்குப்பிள்ளையாகவும், மகாசமர்த்தனாகவும், பிரகஸ்பதிக்குச் சிஷ்யனாகவும், தேவர்களுக்குப் பிரபுவாகவும் இருக்கின்றாய். என்புத்திரனாகிய தட்சப்பிரஜாபதி உன்தாயின் தந்தையாகவு மிருக்கிறான். மூன்றுகுலமும் எவனுக்குச் சுத்தமாக விருக்கின்றதோ அவனுக்கும், எவன்தாய் பதிவிரதையோ எவன்தந்தை ஜிதேந்திரியனான சுத்தனோ அவனுக்கும், எவனுக்கு மாதாமகனும், தாயுடன்பிறந்தவனும் சுத்தராயிருப்பாரோ அவனுக்கும் அகங்காரம் எவ்வாறிருக்கும். உலகில் மநிதன் தகப்பன் தோஷத்தாலும், தாயைப்பெற்றவன் தோஷத்தாலும், குருதோஷத்தாலும் தோஷமுள்ளவனாகின்றான். சர்வாந்தராத்மாவான பகவான் எல்லாதேகத்திலும் பிரவேசித்திருக்கிறான். அவன் எப்போது வெளி

யேபோகின்றானோ, அப்போது இச்சரீரம் பிணமாய்விடுகிறது. மன சுக்கும் இந்திரியங்களுக்கும் நான்பிரபு, சங்கரன் ஆன்மாவின் ஜ்ஞானரூபன், விஷ்ணுபிராணன், பிரகிருதிதேவி புத்தி, பிரகிருதிதே வியின் கலைகளான சகலசத்திகளும் நித்திரைமுதலான சத்திகள். சரீரத்துள்ளடங்கிய சீவனுக்கு அச்சத்திமயமா யிருக்கின்ற சரீரத் தைப்போகார்த்தமாகக்கொடுக்கப்பட்டது. ஆத்மாவுக்குஈசனானவன் தேகத்தைவிட்டு வெளிப்படும்போது ராஜாவெளிப்பட்டால் மற்றவ ர்களும் வெளிப்படுவதுபோல் பிராணன்முதலானவைகளும் வெளிப் படுகின்றன. அதுபோல் தூர்வாசரால் கொடுக்கப்பட்ட ஈஸ்வரப் பிரஸாதம் உன்னிடம் இருப்பதற்கில்லாமல் எப்போது போய்விட் டதோ அப்போதே லக்ஷ்மியும் அவள் சம்பந்தமான சகலசம் பத்துக்களும் உன்னைவிட்டுப் போய்விட்டன. நீ தெய்வத்தினால் வஞ்சிக்கப்பட்டவனாயினை. தெய்வமோ மிக்கபலமுள்ளது. பாக்ய ஹீனத்தினால் மூடனாயிருப்பவனை எவன் ரக்ஷிக்க வல்லமையுள்ளவ னவன் என்றுகூறி, பிரமன் தேவர்களோடும் பிரகஸ்பதியோடும் வைகுண்டம்போய் லக்ஷ்மிபதியைப்பார்த்துச் சேவித்துத்துதித்து இந்திரன் குறையைக்கூறினன். திருமால்பூஷணம் வாகனம் சோபை காந்திசம்பத்து இவைகளில்லாமலும்பயந்தும் இருக்கிற அவர்களைப் பார்த்து ஓ பிரஹ்மாதிதேவர்களே! நீங்கள் பயப்படவேண்டாம், நா னிருக்க உங்களுக்கென்னகுறை, சகல ஐஸ்வர்யத்தையுங் கொடுக் கிற லக்ஷ்மியைக் கொடுக்கிறேன். ஆனால் இக்காலத்துக்குத் தகுந் ததாயும் நன்மையை யுண்டுசெய்வதாயும் சத்யமாயும் சாரமாயும் முடிவில் சுபத்தைச்செய்வதாயுமுள்ள ஓர் வார்த்தையைக் கூறு கின்றேன் கேளுங்கள்:—அளவில்லாத இப்பிரபஞ்சத்திலுள்ள ஜன ங்களெல்லாம் என் சுவாதீனர்களா யிருக்கின்றார்கள். நான் ஈஸ்வர பக்தர்களுக்குச் சுவாதீனனாயிருக்கின்றேன். ஆகையால் அவர்களுக் குக் கோபம்வரும்படிச் செய்கின்றவருடைய கிருகத்தில் நான்வசி யேன் இதுநிச்சயம். ஆகையால் சங்கரருக்குச் சமானரான தூர்வா சருக்கு நீ கோபம் வரும்படிச்செய்து அவரால் சாபமேற்றிருக்கிற படியால் இலக்குமிநீங்கிவிட்டாள். எவ்விடத்தில் சகலசம்பத்துடன் சிவார்ச்சனையும், பிராமணபோஜனமு மில்லையோ அங்கு இலக்குமி இருக்கமாட்டாள். ஓதேவர்களே! ஈஸ்வரபக்தநிந்தனை எங்கிருக்கின் றதோ அங்கிருந்து மகாலக்ஷ்மிகோபமாய் வந்துவிடுகிறாள். அன் றியும் விரததினங்களில் புசிக்கின்றவன், ஈஸ்வரநாமத்தை விக்ரயஞ்

செய்கின்றவன், தனது கன்னிகையை விக்கிரயஞ் செய்கின்றவன், அதிதியைப் பசியாய்ப்போகச் செய்கின்றவன், பாபிகள்வருகின்ற வீட்டிலிருப்பவன்சூத்திரசிரார்த்தான்னத்தைப்புசிப்பவன்,சூத்திர சம்பந்தமாக எவ்விதகாரியங்களையும் செய்கின்ற பிராமணன், விருஷபத்தை வாகனமாக வைத்திருப்பவன், அசுத்தமனமுடையவன், மகாகுரூரமான நெஞ்சும்ஹிம்சிக்கிறசெயலும் உடையவன், பிராஹ்மணநிந்தனைசெய்கின்றவன், பர்த்தாவும் பிள்ளையுமில்லாத ஸ்திரீ அன்னத்தைப் புசிப்பவன்,திரணத்தை நகத்தினுல் கிள்ளுகின்றவன் பூமியை நகங்களாற் கிறுகின்றவன், சூரியோதயத்தில் போஜனமும் பகலில் நித்திரையும் மைதுனமும் செய்பவன், ஆசாரத்தைக் கை விட்டவன், சூத்திரனிடம் பிரதிக்கிரகம் செய்கின்றவன், தீக்ஷை யில்லாதவன், ஈரக்காலோடும் அரையில் வஸ்திரமில்லாமலும் சயனிக்கின்றவன், அடிக்கடி சிரிப்பும் வீண்வார்த்தையு முடையவன், தலையில் எண்ணையிட்டுக்கொண்டு வேறு உறுப்புகளைத் தொடுகிறவன், தன் சரீரத்தில் வாத்தியமடிக்கிறவன், விரதம் உபவாசமில்லாமலிருப்பவன், சந்தியாவந்தனமின்றி அசுசியாயிருப்பவன், எப்போதும் துவேஷிக்கிறவன், ஜீவஹிம்சை செய்கின்றவன், தயையில்லாமலிருப்பவன்,இவர்களுடையவீட்டிலிருந்து இலக்குமிவிலகிவிடுவாள். அவரவரிடங்களில் அவரவர்களுடைய இஷ்டதேவதா பூஜை கீர்த்தனை பிரசம்சை பக்தபிரசம்சை சங்கத்தொனி பகவான் சேவை தியான முதலானவைகள், சிவலிங்கார்ச்சனம், சிவநாம கீர்த்தனம், துர்க்காதேவி யர்ச்சனை, பிராமணபோஜனம் நடக்கின்றனவோ அவ்விடங்களிலெல்லாம் இலக்குமிவசிப்பாள் என்றுகூறி, இலக்குமியைப்பார்த்து ஈஸ்வரானுக்கிரகத்தால் பாற்கடல்கடைய வருங்காலத்தில் நீ ஒருகலையால் அங்கு பிறக்கவேண்டியதென்று ஆக்ஞாபித்துப் பிரமனைநோக்கி விடைகொடுத்தனர். தேவர்கள் வெகுகாலங்கழித்து ஈஸ்வரானுக்கிரகம்பெற்று பாற்கடலைக்கடைந்து தன்வந்தரி அமிர்தம் உச்சைஸ்ரவம் ஐராவதம் நானாவிதரத்னம் சுதர்சனம் லக்ஷ்மி வனமாலை முதலியன வுண்டாகப்பெற்று மகிழ்ந்தனர். இலக்குமியும் தேவர்களிடம் இந்திரன்காணக் காட்சிகொடுத்து சம்பத்துண்டாகும்படிச்செய்தனள். ஓ நாரதரே! நீர் இன்னமும் என்னகேட்க விரும்புகின்றீ ரென்றுவினவினர். (சு-ம். ௫௬.)

நாற்பத்தொன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

ஹார்த்தசந்தமஸாபஹாயைகமஃ

## நாற்பத்திரண்டாம் அத்தியாயம்.

## இலக்ஷ்மி பூஜாமந்திரஸ்தோத்ரம்.

---

நாரதர் இந்திரன்செய்த இலக்குமியின் பூஜாவிதியும் தோத்திரமுஞ் சொல்லவேண்டுமென்று வினவ நாராயணர் கூறுகின்றார்:— இந்திரன் ஸ்நானஞ்செய்து இரண்டுவஸ்திரந்தரித்து பாற்கடலின் கண்சென்று பஞ்சாயதனபூஜைசெய்து கடத்தைத்தாபித்து அதில் பரமேஸ்வரியான இலக்குமியை ஆவாகித்து, சந்தனத்திற்றோய்ந்த பாரிஜாதபுஷ்பத்தை யெடுத்துக்கொண்டு "சகஸ்ரதளபத்மஹஸ்த கர்ணிகாவாஸிநீம்பராம், சரத்பார்வணகோடீந்து ப்ரபாமுஷ்ட கராம்பராம், ஸ்வதேஜஸா ப்ரஜ்வலந்தீம் சுகத்ருஸ்யாம் மனோஹராம்,ப்ரதப்த காஞ்சனநிபா சோபாமூர்த்திமதீம்ஸதீம், ரத்னபூஷண பூஷாட்யாம் சோபிதாம்பீதவாஸஸீம், ஈஷத்தாஸ்ய ப்ரசன்னாஸ்யாம், சஸ்வத்சு ஸ்திரயௌவனாம் சர்வசம்பத் ப்ரதாத்ரீஞ்ச மகாலக்ஷ்மீம் பஜேசுபாம் என்றுதியானித்துபக்தியோடு ஒவ்வொரு மந்திரத்தினாலும்சோடசோபசாரஞ்செய்து சிறந்தும் உயர்ந்து மிருக்கின்ற நானாவித வஸ்துக்களையும், விலையுயர்ந்த ரத்னத்தையும் ஆசனத்தையும், ஓ மகாலட்சுமியே பெற்றுக்கொள்வாயாக. சுத்தமான இந்த கங்காதீர்த்தத்தைக் கிரகித்துக்கொள்வாயாக. புஷ்பம் சந்தனம் அறுகுமுதலானவற்றோடு கூடியசங்கமத்தியி லிருக்கின்ற அர்க்கியசலத்தையும் கிரகிப்பாயாக. நல்ல சுகந்த புஷ்ப தைலத்தையும் நல்லதேகசுந்தரத்தைக்கொடுக்கின்ற நெல்லிக்கனியையும் அங்கீகரிப்பாய். நல்லபட்டுவஸ்திரத்தையும், பஞ்சுவஸ்திரத்தையும், ரத்னபூஷணத்தையும், சுவர்ன பூஷணத்தையும், நல்ல கந்தத்தோடு கூடிய சந்தனத்தையும் வாங்கிக்கொள்வாயாக. மரத்தினது மெழுக்குப்போன்ற கந்தத்திரவியங்கலந்த தூபத்தையும், உலகத்துக்கு நேத்ரசொரூபமாயும், பரிசுத்தமாயும், இருட்டைப் போக்குகின்றதாயும், சுகத்தைக் கொடுப்பதாயுமுள்ள தீபத்தையும் பெற்றுக்கொள்வாயாக. நானாவித உபகரணங்களோடு கூடியதாயும், நானாவித ஆகாரத்தோடு மிருக்கின்ற நைவேத்தியத்தைப் பெற்றுக்கொள்வாயாக. பிரமஸ்வரூபமாயும், பிராண ரட்சண காரணமாயும்,

துஷ்டியும் புஷ்டியுங்கொடுக்கின்ற அன்னத்தைப் பெற்றுக்கொள்வாயாக. சாலியன்ன சம்பந்தமாயும், நன்ருய்ப் பக்குவமாயும், சர்க்கரை பாலோடு கலந்ததாயும் இருக்கின்ற பரமான்னத்தைப் பெற்றுக்கொள்வாயாக. சர்க்கரைபாலோடு கூடியதாயும் மனோகரமாயும் ருசியாயுமிருக்கின்ற சுவஸ் திகத்தைப் பெற்றுக்கொள்வாயாக. நானுவிதமான பக்குவான்னங்களையும், காமதேனுவின் ஸ்தனத்தில் பெருகியிருக்கிற மநுஷ்யாமிர்தத்தையும் பெற்றுக்கொள்வாயாக. கரும்பிலிருந் துண்டானதாயும், அக்கினியில் பக்குவப்பட்டதாயுமுள்ள வெல்லத்தைக் கிரகிப்பாயாக. யவை கோதுமை இவைகளின் மாவினுண்டானதும், நெய் வெல்லம் கலந்ததுமான க்ஷீரான்னத்தைக் கிரகித்துக்கொள்வாயாக. அரிசிமாவோடுகூடினதாயும் பக்குவமாயும் சுவஸ்திகம் முதலானதோடு கூடியிருக்கின்ற என்னுல்கொடுக்கப்பட்ட நிவேதனத்தைப் பெற்றுக்கொள்வாயாக. குளிர்ச்சியான காற்றைக் கொடுப்பதாயும், ஒடுக்கமான காலத்தில் சுகத்தைக் கொடுப்பதாயுமிருக்கிற விசிறியும், சாமரமும் ஒப்புக்கொள்வாயாக. பச்சைகர்ப்பூர முதலானவைகளால் பரிமளிக்கப்பட்டதாயும், நாவினுடைய அரோசிகத்தைப் போக்குவதாயுமிருக்கிற தாம்பூலத்தைப் பெற்றுக்கொள்வாயாக. நன்ருய்ப் பரிமளம் ஏற்றப்பட்டதாயும், குளிர்ச்சியாயும், தாகத்தைத் தணிக்குஞ் சக்தியுள்ளதாயும், சகலப் பிராணிகளுடைய பிழைப்புக்குக் காரணமாயுமிருக்கிற தீர்த்தத்தைப் பெற்றுக்கொள்வாயாக. தேகத்தின் சௌந்தர்யத்தை விருத்திசெய்வதான பஞ்சியினுலுண்டான வஸ்திரத்தையும் பட்டுவஸ்திரத்தையும் பெற்றுக்கொள்வாயாக. தேகத்துக் கலங்காரஞ்செய்யத்தக்க சுவர்ன பூஷணங்களையும், ரத்னபூஷணங்களையும் பெற்றுக்கொள்வாயாக. சுகத்தையும் சர்வமங்களத்தையுங் கொடுக்கிற கந்தத்தை ஆக்ராணஞ்செய்வாயாக. புண்ணிய தீர்த்தத்திலிருந்து கொண்டுவரப்பட்ட இந்த ஆசமனீய தீர்த்தத்தைப் பெற்றுக் கொள்வாயாக. ரத்னஹாரங்களாலும் வஸ்திரங்களாலும் புஷ்பசந்தனங்களாலும்அலங்கரிக்கப்பட்ட படுக்கையைப் பெற்றுக்கொள்வாயாக. பூமியில் எந்தெந்தவஸ்துக்கள் அபூர்வமாயும் துர்லபமாயுமிருக்கின்றனவோ அவைகளையெல்லாம் பெற்றுக்கொள்வாயாகவென்று மூலமந்திரத்தாற் கொடுத்து விதிப்படி அம்மந்திரத்தைப் பத்துலக்ஷம் செபித்தான். அதனுல் அவனுக்கு மந்திரசித்தியுண்டாயிற்று. பிரமாவினுல் கொடுக்கப்பட்டதாயும் வைதிகசம்பந்தமாயும்

மந்திர ராஜமாயும் பிரசித்தமாயும் கற்பவிருக்ஷமாயும் இருக்கிற சுவாஹா என்பதனோடு கூடியிருக்கிற இம்மந்திரத்தினால் குபேரன் பரமைஸ்வர்ய மடைந்தான். பிரபுவான தக்ஷஸாவர்ணிமநுவும், மங்களனும், சப்ததீபங்களுக்குப் பிரபுவாயிருந்தனர். பிரியவிரதன் உத்தானபாதன் கேதாரன் இவர்கள் சர்வசித்தியு மடைந்தனர். இம்மந்திரத்தால் இந்திரனுக்கு இஷ்டசித்தி யுண்டாகும்போது இலக்குமிதேவி சிறந்த விமான மூர்ந்து சப்தத் வீபத்தோடு கூடின பூமியைத் தனது காந்தியினால் மறைக்கின்றவளாய், வெண்சண்பகப்பூ நிறமுடையவளாய், ரத்னபூஷணங்களால் பூஷிக்கப்பட்டவளாய், பிரசன்னமான முகமுடைவளாய், பக்தாநுக்கிரகத்தில் ஆவலுள்ளவளாய், கோடிசந்திர பிரகாசமுள்ள ரத்னமாலையைத் தரித்தவளாய், வரங்கொடுப்பவளாய் வந்தனள். சர்வலோகத்திற்குந் தாயாயும், சாந்தையாயு மிருக்கின்ற அந்தத்தேவியை இந்திரன்பார்த்து உரோம புளகாங்கிதமுடையவனாய், ஆனந்தபாஷ்பஞ்சொரிந்து கைகூப்பிப் பிரமாவினால் கூறப்பட்ட சிறந்ததோத்திரத்தைச் செய்தனன்.

கமலவாசினியின் பொருட்டு நமஸ்காரம், நாராயண பத்தினியின் பொருட்டு நமஸ்காரம். கிருஷ்ணனுக்குப் பிரியமான மகாலக்ஷ்மியின்பொருட்டு நமஸ்காரம். தாமரைமலர்போன்ற கண்ணையும் முகத்தையுமுடைய தேவியின்பொருட்டு நமஸ்காரம். பத்மாசனத்தில் வீற்றிருக்கின்றவளாயும், பத்மத்தைக் கையிலுள்ளவளாயும், விஷ்ணுவின்பத்னியாயு மிருக்கின்ற உன்பொருட்டு நமஸ்காரம். சர்வசம்பத் சொரூபிணியாயும், சர்வராலும் பூஜிக்கத்தகுந்தவளாயும், ஹரிபக்தியையும் சந்தோஷத்தையும் கொடுக்கிறவளாயும் இருக்கின்ற உன் * * * கிருஷ்ணன்மார்பை வசிக்குமிடமாகவும், கிருஷ்ணனைப் புருஷனாகவுமுடைய உன் * * * சந்திரகாந்த சொரூபிணியான உன் * * * சம்பத்துக் கதிஷ்டான தேவதையாயும், மகாதேவியாயு மிருக்கின்றஉன் * * * விருத்திசொரூபையாயும், விருத்தியைக் கொடுக்கின்றவளாயு மிருக்கின்ற உன் * * * வைகுண்டத்தில் எந்தலக்ஷ்மியுண்டோ பாற்கடலில் எந்தலக்ஷ்மியுண்டோ, இந்திர கிரகத்தில் எந்த சுவர்க்க லக்ஷ்மியுண்டோ நீ அந்தந்தலக்ஷ்மி சொரூபமாயிருக்கின்றவள். ராஜகிருகத்தில் ராஜலக்ஷ்மியாயும், கிருகஸ்தருடைய கிருகத்தில் கிருகலக்ஷ்மியாயும்,

கிருகதேவதையாயும், சமுத்திரத்திற் பிறந்த காமதேனுவாயும், யக்ஞத்துக்குப் பத்தினியான தக்ஷிணையாயும், தேவமாதாவான அதிதியாயும், தாமரைக்குளத்தில் தாமரைப்பூவாயும், அவிசு, ஹோமத்தில் சுவாஹாகாரமாயும், கவ்யஹோமத்தில் சுவதாவாயும், விஷ்ணுஸ்வரூபமாயும், சகலருக்கும் ஆதாரமான பூமி சொரூபமாயும் சுத்ததத்வ சொரூபமாயும், நாராயணனே முக்கியமான ஸ்தானமாகவுள்ளவளாயு மிருக்கின்றாய். கோபம் இம்சை முதலானவைகளால் விடப்பட்டவளாயும், வரத்தைக் கொடுக்கின்றவளாயும், சரஸ்வதி சொரூபமாயும், பரமார்த்தைக் கொடுக்கின்றவளாயும், விஷ்ணுபக்தியைக் கொடுக்கின்றவளாயு மிருக்கின்றாய். நீ இல்லாவிட்டால் உலகம் பஸ்மமாய்விடும். சகலப்பிரபஞ்சமும் மரித்தபிராயமாய்விடும். எல்லோருக்குஞ் சிறந்ததாயாயும், பந்து ரூபியாயும், புருஷார்த்தங்களுக்குக் காரணமாயு மிருக்கின்றாய். குழந்தைக்குத் தாய் எப்படிப் பால்கொடுத்துக் காப்பாற்றுகின்றாளோ, அப்படிச் சகலரையும் ரக்ஷிக்கிறாய். தாயில்லாத குழந்தை தெய்வாதீனமாய்ப் பிழைக்கிறது, நீ யில்லாமல் ஒருவனும் பிழைக்கமாட்டான். இது நிச்சயம். பிரசன்னசொரூபியான நீ என் விஷயத்தில் தயைசெய்வாயாக. ஓதேவியே! என்னுடைய ஸ்தானங்களெல்லாம் சத்ருக்களால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது. அதை நீக்கி எனக்குக்கொடுக்கவேண்டும். உன்னைவிட்டு நான் எப்போது விலகிவிட்டேனோ அதுமுதல் பந்துஹீனனாயும், பிக்ஷுகனாயும், சர்வசம்பத்ஹீனனாயு மிருக்கின்றேன். தேவியே! ஞானத்தையும், தருமத்தையும், சகலசௌபாக்கியத்தையும் எனக்குக்கொடுக்கவேண்டும். பிரபாவத்தையும், பிரதாபத்தையும் சர்வாதிகாரத்தையும், யுத்தத்தில் ஜயத்தையும், ஐஸ்வர்யத்தையும் எனக்குக்கொடுக்கவேண்டும் என்று சகலதேவர்களோடும் துதித்துக் கண்ணீர்பெருக சிரசினால் நமஸ்கரித்தனன். ஏனையதேவரும் தங்கள்வேண்டுகோளின்படி வேண்டிப் போற்றயாவர்க்கும் வரங்கொடுத்து அழகான புஷ்பமாலையை இந்திரனுக்கு அநுக்கிரகித்து மறைந்தனள். தேவர்கள் தங்கள் தங்களிடஞ்சென்றனர். இத்தோத்திரத்தை எவன் முக்காலமும் படிப்பானோ அவன்சகலஅரசர்களுக்குள் பிரபுவாய்,குபேரனுக்குச் சமானமாவன். இத்துதியை ஐந்துலக்ஷம் ஜபித்தால் சித்தியாய்விடும். அப்படிச் சித்தியானவன் ஒருமாதம் ஒழிவின்றிக்கூறுவானானல் மகாசுகியாகவும், சிறந்தராஜாவாகவும் ஆகின்றான். (௬-௭௫)

நாற்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

ஹல்லீ ஹாலஸ்யஸந்துஷ்டாயை நமஃ

## நாற்பத்துமூன்றாம் அத்தியாயம்.

## சுவாஹாசக்திஉபாக்யானம்.

---

நாரதர், ஓ மகானுபவரே! உருவத்தினுலும், குணத்தினுலும், நாராயணருக்குச் சமானமான நாராயணமுனிவரே! தபஸ்விகள் முனிவர்கள் வேதவித்துக்கள் சித்தர்கள் யோகிகள் என்று சொல்லப்பட்டவர்களுள் நீரே சிறந்த முனிவர். இலக்ஷ்மிதேவியினது வரலாற்றை எனக்குக் கூறினீர். இனி ஒருவருக்குந் தெரியாவண்ணம் பாதுகாக்கத்தக்கதும், சகலகாரியத்துக்கும் உபயோகமாகத் தக்கதும் வேதபுராணங்களில் கூறப்பட்டதுமான உபாக்கியானத்தைக் கூறவேண்டும் என்று வினவ நாராயணர், நாரதரே! புராணங்களில் அப்பிரகாசமாயுள்ள வேதோக்த தர்மசம்பந்தமான பல உபாக்யானங்கள் நான் கேட்டிருக்கின்றேன். அவற்றுள் நீர் எதனை விரும்புகின்றீர் என்றனர். நாரதர், சர்வகர்மங்களிலும் செய்யப்பட்ட அவிசு ஹோமங்களில் சுவாஹாதேவியும், பிதுர்ஹோமத்தில் சுவதாதேவியும், தக்ஷிணுதேவி சகலவிடங்களிலும் புகழப்பட்டிருக்கின்றார்கள். இவர்கள் சரித்திரத்தையும், ஜன்மபலத்தையும், பிராதான்யத்தையும் கேட்கவிரும்புகின்றேன் என்றனர். அவ்வார்த்தையை நாராயணர் கேட்டுச்சிரித்துசிருட்டிக்காதியில் சகலதேவர்களும் பிரமலோகத்திற்குப்போய் தங்கள் ஆகாரத்தைப்பற்றி விண்ணப்பிக்க, பிரமன் யஜ்ஞரூபியான விஷ்ணுவைத் தியானித்தனர். அவர் ஒருகலையால் யக்ஞரூபமாக அவதரிக்க அந்தயக்ஞத்தில் பிராமணர்கள் பலவிதமான அவிசைக்கொடுத்தார்கள். கொடுத்தும் அவைகளைத் தேவர்கள் அடையவில்லை. அதனுல் தேவர்கள் மீண்டும் பிரமதேவனுக்கு விண்ணப்பஞ்செய்ய பிரமன் கிருஷ்ணமூர்த்தியைச்சரணமடைந்து அவராக்ஞையால் பிரகிருதிதேவியைப் பிரார்த்திக்க அவள் தனது கலையினுல் சர்வசக்திரூபமாயும், அதிசுந்தரமாயும், கறுத்தநிறமுள்ளவளாயும், மனோகரையாயும், புன்சிரிப்புள்ள முகமுள்ளவளாயும் பக்தாநுக்கிரகையாயும் பிரமனை நோக்கி என்ன வேண்டுமென்றனள். அதற்குப் பிரமதேவன் அக்னிக்குக் கொ

ளுத்துஞ் சக்தி யில்லாமையால் நீ அவனுக்குக் கொளுத்துஞ் சக்தியாகவேண்டும். உன்னுமத்தை உச்சரித்துத் தேவர்களுக்கு அவிசு ஹோமஞ் செய்வார்களாயின் அதை அவர்கள் அடைந்து ஆனந்தமடையும்படிச் செய்யவேண்டும். அக்கினிக்குச் சம்பத்தாகவும், கிருகலக்ஷ்மியாகவும் இருக்கின்ற உன்னைத்தேவரும் மநிதரும் பூஜிப்பார்கள். அதனைக்கேட்ட சுவாஹாதேவி துக்கித்து நான் கிருஷ்ணமூர்த்தியை யடையப்போகின்றேன். அவனைத் தவிரமற்றவர்களையடையக் கனவிலும் எனக்கு இஷ்டமில்லை. நீயும் உருத்திரரும் ஆதிசேடனும் யமனும்மற்றுமுள்ளாரும் செய்துவரும் தொழில்களெல்லாம் அவருடைய கிருபையினாலல்லவா. ஆகலான் நானும் அவரையே சிந்தித்துக்கொண்டிருக்கிறேன் என்றுகூறி பத்மநாபனைக்குறித்து ௧ லக்ஷம் வருஷம் ஒற்றைக்காலில் நின்று தியானித்துத் தவம்புரிந்து கிருஷ்ணமூர்த்தியைத்தெரிசித்து காமத்தினால் மூர்ச்சித்தனள். சர்வக்ஞனான கிருஷ்ணன் அவளபிப்பிராயத்தையறிந்து அவளைக் கையினால் எடுத்துநிறுத்தி நீ வராஹ அவதாரத்தில் உன் அம்சத்தால் என்பத்தினியாகக்கடவாய். அப்போது நீ நக்னிஜிதன் புத்திரியாய்ப்பிறந்து நாக்னிஜிதி என்று பெயருள்ளவளாவாய். இப்போது அக்னிக்குத்தகனசக்தியாயிருந்து அவனுக்குப்பத்னியாகவும் மந்திரங்களுக்கெல்லாம் அங்கமாகவும் பூசிக்கத்தக்கவளாகவும் இருக்கக்கடவாய். உன்னை அக்னி மிக்க விஸ்வாசத்தோடு கௌரவித்துப் பத்னியாக்கிக்கொண்டு உனக்குத் திருப்தியுண்டாகும்படி ரமிப்பானென்றுகூறி மறைந்தனன்.

பிறகு பிரமாவின் உத்தரவின்படி அக்னிதேவர், பயத்துடன் சாமவேதத்தில் கூறியுள்ள தியானத்தினால் ஜகதம்பிகையினைத் தியானித்துத் துதித்து, மந்திரபூர்வகமாய் சுவாஹாதேவியை மணந்து, ஆயிரம் தேவவருடம் ரமித்திருக்க அவள் கருப்பமடைந்து பன்னிரண்டுவருடஞ் சென்றபின்னர் தக்ஷிணாக்னி காருகபத்யம் ஆகவனீயம், என்னும் மூன்று பிள்ளைகளைப் பெற்றனள். ருஷிகளும் முனிவர்களும் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் சுவாஹாஎன்பதையீற்றிலுடைய மந்திரத்தை யுச்சரித்து அவிர்த்தானஞ்செய்தனர். தேவர்களும் அவிசை யடைந்தார்கள். சுவாஹாவோடுகூடின மந்திரங்களெல்லாஞ் சபலமடைந்தன. சுவாஹாவோடு கூடினமந்திரத்தை எவன் உச்சரிக்கின்றானோ அவனுக்குச் சர்வசித்தியுமுண்டாம்.

விஷமில்லாத சர்ப்பம்போலும் வேதமில்லாதபிராமணன்போலும் பர்த்தாசேவையில்லாத ஸ்திரீபோலும் வித்தையில்லாத புருஷன் போலும் பழமுள்ள கிளையில்லாத விருக்ஷம்போலும் சுவாஹா வோடு கூடாத மந்திரமானது நிந்திக்கத்தக்கது; ஹோமஞ்செய்தா லும் பலனுண்டாகாது. சாமவேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதியா னமும், துதியும், பூஜாவிதியுங் கூறுகின்றேன். எல்லாயக்ஞமும் ஆரம் பிக்குஞ் சமயத்தில் கடத்தில் சுவாஹாதேவியைப் பூஜித்துச் செய் தால் பலன்சித்திக்கும். மந்திரத்துக்கு அங்கமாயிருக்கின்றவளாயும் மந்திரசித்தி சொரூபையாயும், சித்தையாயும், சித்திதையாயும் கர்ம பலத்தைக்கொடுக்கின்றவளாயும் தியானித்து மூலமந்திரத்தினால்பா த்ய முதலானவைகளைக் கொடுத்து பூஜிக்கின்றவன் எல்லாபலத்தை யும் மடைவான். இது நிச்சயம். சுவாஹா, வன்னிப்ரியா, வன்னிஜா யா, சந்தோஷகாரணி, சத்தி, கிரியா, காலதாத்ரி, பரிபாககரி, த்ருவா (ஸ்திரமானவள்) நராணும்சதாகதிஃ (மனிதர்களால் சதாசரணமடை கின்றவள்) தாஹிகா (கொளுத்துகிறவள்) தகனக்ஷமா (கொளுத்துவ தில் வல்லமையுடையவள்) சம்சார சாரரூபா, கோரசம்சாரதாரிணீ (கோரமான சம்சாரத்தினின்று கரையேற்றுகின்றவள்) தேவஜீவன ரூபா, தேவபோஷணகாரிணி என்கின்ற இப்பதினாறு நாமங்களையும் எவனொருவன் பக்தியோடு படிப்பானோ அவன் இவ்வுலகிலும் மே லுலகிலும் சர்வசித்தியடைவான். அவனுடைய எல்லாகர்மங்களும் அங்கஹீனமாகமாட்டாது. புத்திரஹீனன் புத்திரனையும் பத்னிஹீ னன் அரம்பைக்குச்சமானமான சுந்தரஸ்திரீயையும் அடைவர் என்றனர். (சு - ம், ௱௪௰௩)

நாற்பத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹம்ஸமந்திரார்த்தரூபிண்யைநமஃ

## நாற்பத்துநான்காம் அத்தியாயம்.

## சுவதா உபாக்யானம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—இனி சுவதா உபாக்யானத்தைக் கூறுகின்றேன் கேட்பீராக. இது பிதுர்க்களுக்குத் திருப்தியையுண் டாக்கும். சிரார்த்த காலத்தில் அதிகமானபலத்தைக் கொடுக்கும்.

பிரமன் சிருட்டிக்காதியில் நான்குசரீரமுள்ள பிதுர்க்களையும், மூன்றுதேஜோரூபமான பிதுர்க்களையும் சிருட்டித்து சுகரூபராயும் மனோகரராயுமுள்ள அவர்களுக்கு ஆகாரமாக சிரார்த்தத்தில்செய்யும் தர்ப்பணத்தையும் ஸ்நானகாலத்திற்செய்யும் தர்ப்பணத்தையும் தேவபூஜை முன்னிட்ட சிரார்த்தத்தையும் கற்பித்தனர். முச்சந்தியிலும் செய்யவேண்டிய ஆன்னிகமாகிய அநுட்டானகர்மங்களை பிராமணன் செய்யவேண்டியதென்று வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கிறபடியால் எந்தப்பிராமணன் தினம் சிரார்த்ததர்ப்பணமும் முச்சந்தியும் பலியும் வேதத்தொனியும் செய்யாமலிருக்கின்றானோ அவன் விஷமில்லாத பாம்புபோல் யாவராலும் அவமதிக்கத் தக்கவனுவான். தேவி சேவையில்லாதவனும், ஈஸ்வரனுக்கு நிவேதிக்காமல் புசிக்கின்றவனும் சாம்பராகும் மரணகாலம்வரையில் சுத்தியடையமாட்டான். அவன் ஒரு கர்மத்துக்கும் உபயோகப்படமாட்டான். பிரமன் பிதுர்க்கள் நிமித்தம் சிரார்த்தாதிகளை நியமித்திருக்கின்றபடியால் பிராமணன் முதலானவரும் அவ்வாறே சிரார்த்தாதிகளைக் கொடுத்துவந்தனர். ஆனால் அதனைப்பிதுர்க்கள் அடையச் சக்தியற்றவர்களாய் பசியடைந்து பிரமனிடம் விண்ணப்பித்தனர். அவர்மான சீகமாக ஓர்மனோகரமான கன்னிகையை உருவம் யௌவனம் நூறுசந்திரனுக்குச் சமானமான காந்தியுள்ள முகம் வித்தை குணம் முதலியவற்றையுள்ளவளாயும், பிரகிருதிதேவியின் அம்சமாயும் பதிவிரதையாயும் வெண்சண்பகப்பூ நிறமும் ரத்னபூஷணாலங்கிரதமும் சுத்தமும் புன்சிரிப்பும் வரமளிக்குஞ்சக்தியும் சுபகரமும் நல்லநடையும் சுவதா என்னும் பெயரும் உள்ளவளாயும், லட்சுமியின் லக்ஷணமுடையவளாயும், நூறு தளமுள்ள தாமரைமலரில் பொருந்திய பாதங்களுடையவளாயும், பிதுர்தேவதைகளுக்குப் பத்நியாயும், தாமரைபோன்ற முகமும், நேத்திரமு முடையவளாயுஞ் சிருட்டித்து அவர்களுக்குக் கொடுத்து சுவதாவோடுகூடின மந்திரத்தைப் பிதுர்க்களைத் திருப்திசெய்ய வேண்டுமென்று பிராமணர்களுக்குரகசியத்தில் உபதேசித்தனர். அவ்வாறே அவர்களும் கிரமப்படிசெய்துவந்தனர். தேவர்களுக்கு சுவாஹாமந்திரமும் பிதுர்க்களுக்கு சுவதாமந்திரமும் சிறந்தன. தக்ஷிணை எல்லா கர்மங்களிலுஞ்சிறந்தது. அஃதில்லாத யாகமும் நாசமாகும். பிதுர்க்கள் தேவர்கள் பிராமணர்கள் முனிவர்கள் மநுக்கள் முதலிய யாவரும் சுவதாதேவியைப்பூசித்துத் துதித்தார்கள். இந்த சுவதாவின் வரலாறு

யாவருக்குஞ் சந்தோஷத்தை விளைவிக்கும். வேறெதைக்கேட்க விரும்புகின்றனை என்றனர். நாரதர் சுவதாதேவியின் பூசாவிதியையும் தியானமும் துதியுங் கேட்கவிரும்புகின்றேன் என்றனர். நாராயணர் ஓ நாரதரே! நீர் கேட்டவைகளெல்லாம் வேதத்தில் கூறப்பட்டிருக்கின்றன. அவை எல்லாமங்களத்தையும் உண்டாக்கும். நீ எல்லா வேதங்களையும் அறிந்திருக்கின்றனை. மீண்டும் ஏன் அதனைக்கேட்க விரும்புகின்றனை. சரத்கால கிருஷ்ணபக்ஷ திரயோதசி மகநக்ஷத்திரத்திலும் சிரார்த்ததினத்திலும் சுவதாதேவியைப் பூசித்துப் பிறகு சிரார்த்தத்துக் காரம்பிக்கவேண்டியது. அகங்காரத்தினல் இத்தேவியைப் பூசிக்காமல் எவன் சிரார்த்தத்துக்கு ஆரம்பிக்கின்ருனே, அவன் சிரார்த்ததர்ப்பண பலன்களையடையமாட்டான். பிரமாவின் மனதிற்பிறந்த கன்னிகையாயும், எப்போதும் ஸ்திரமான யௌவனமுடையவளாயும் பூஜ்யர்களான பிதுர்தேவதைகளுக்கும், சிரார்த்தங்களுக்கும், பலத்தைக்கொடுக்கின்றவளாயுமுள்ள சுவதாதேவியை நமஸ்கரிக்கின்றேன் என்று தியானித்து மங்களமான கலசத்தில்ஆவாகித்து மூலமந்திரத்தால் பாத்யாசமனுதிகளைக் கொடுத்து ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் சுவதா தேவ்யை சுவாஹா என்றுச்சரித்துப் பூசித்து நமஸ்கரிக்கவேண்டுமென்று வேதத்தில் கூறியிருக்கின்றது.

இனி பிரமதேவனுல் கூறப்பட்டதாயும், மனிதர்கள் இச்சிக்கும் சகலசுகத்தைங் கொடுப்பதாயுமுள்ள துதியைக்கூறுகின்றேன் கேட்பீராக. சுவதா என்றுச்சரித்தமாத்திரத்தில் புண்ணியதீர்த்த ஸ்நாநபலமும் சர்வபாப நிவர்த்தியும் வாஜபேயபலமும் உண்டாகும். மூன்றுதரம் உச்சரித்தால் சிரார்த்தம் பலி தர்ப்பணம் இவைகளின் பலமும் உண்டாகும். சிரார்த்ததினத்தில் சுவதாவின் தோத்திரத்தைச் சாவதானமாய்க் கேட்கின்றவன் சிரார்த்தஞ்செய்த பலனையடைகிறான். சந்தேகமில்லை. சுவதா என்று மூன்றுதரம் மூன்றுகாலங்களிலும் உச்சரிக்கின்றவன் பதிவிரதாதருமமும் வணக்கமும் புத்திரப்பேறும் நற்குணங்களும் உடையவளாகிய மனைவியை யடைகிறான். ஓ ஸ்வதாதேவியே! பிதுர்க்களுக்குப் பிராணனுக்குச் சமானமாயிருக்கின்றனை, பிராமணர்களுக்கு ஜீவனரூபியாயிருக்கின்றனை. சிரார்த்தத்துக்கு அதிஷ்டான தேவதையாயிருக்கின்றனை. பலத்தைக் கொடுக்கின்றவளாயிருக்கின்றனை. புண்ணிய ரூபிணியாயிருக்கின்றனை. நித்யையாயும், சத்யரூபிணியாயும்,சிருட்டிகாலத்தில் ஆவிர்ப்பவித்தவளாயும், பிரளயகாலத்தில் மறைகின்றவளா

யும் இருக்கின்றன. ஸ்வஸ்தி: நம: சுவாஹா: சுவதா தக்ஷிணா இம் மந்திரமெல்லாம் வேதத்தில் கர்மபூர்த்திக்காக ஈஸ்வரனால் நிர்மிக்கப் பட்டன. என்று இவ்வாறு சொல்லிமுடிக்கும்போது சுவதாதேவி ஆவிர்ப்பவித்தாள். அவளைப் பிரமன் பிதுரர்களுக்குக்கொடுத்தான். பிறகு சகலரும் தங்களிடஞ்சென்றனர். எவன் இத்துதியைக்கேட் பானோ அவன் சகலதீர்த்தயாத்திராபலத்தையும், தன்மனதிலெண் ணும் கோரிக்கைகளையும் அடைவான். என்றனர். (சு - ம். ருசுஅ)

நாற்பத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹரனோபாதான நிர்முக்தாயைநம:

## நாற்பத்தைந்தாம் அத்தியாயம்.

## தக்ஷிணோபாக்யானம்.

---

நாராயணர் கூறுகின்றார்,—இனி தக்ஷிணாக்யானங் கூறுகின் றேன் கேட்பீராக. முற்காலத்தில் கோலோகத்தில் கிருஷ்ணனுக் குப் பிரியமானவளாயும், ராதாவுக்குச் சமானமானவளாயும், யாவ ராலும் பூஜிக்கத்தக்கவளாயும், மனோகரையாயும், சுந்தரியாயும், நல்லகாந்தியுள்ள பற்கள் வித்தை, குணம், ரூபம், மிருதுவானசாரீ ரம் முதலியவைகளை யுடையவளாயும், மேகலையணிந்தவளாயும், தாமரைமலர்போன்ற கண்ணுள்ளவளாயும், யௌவனமுள்ளவளா யும், சிறிதுபுன்சிரிப்புள்ள முகமுள்ளவளாயும், ரத்னாபரணங்களால் பூஷிக்கப்பட்டவளாயும், வெண்சண்பகப்பூ நிறமுள்ளவளாயும், கோவைப்பழம்போன்ற உதடுள்ளவளாயும், மான்போன்ற கண்ணு டையவளாயும் அன்னநடை யுள்ளவளாயும் காமசாஸ்திரத்தில் சமர்த்தையாயும், சுபாவமாய் ஆசையுள்ளவளாயும், பிறருடைய அபிப்பிராயமறிந்தவளாயும் ரசக்ஞையாயும் ரசிகராசிகளுக்கிருப்பி டமாயும் ரசிகநாயகியாயும் ரஸிகசுகத்தை யறிந்தவளாயுமுள்ள சுசீலை என்னும் ஓர்கோபிராதையின் எதிரில் கிருஷ்ணமூர்த்தியினு டைய மார்பின் வலப்பாகாலத்தில் வசித்திருந்தாள். அப்பொழுது கிருஷ்ணமூர்த்தி கோபிகளுக்குள் சிறந்த ராதையைப் பார்த்து பயந்து தலைகுனிந்துநிற்ப, ராதைகண் சிவந்து உதடுதுடித்து அவர் சமீபத்தில் வருவாளாயினாள். கிருஷ்ணமூர்த்தி அவள்வருகையைக்

கண்டு மறைந்தோடினர். ஓடிப்போகிற கிருஷ்ணமூர்த்தியைச் சுசீலை முதலியவர்கள் பார்த்துப்பயந்து நடுங்கினர். சுதர்மன் முதலான மூன்றுலக்ஷம்கோபர்களும் லக்ஷங்கோடி கோபிகாஸ்திரீகளும் பயந்து கைகூப்பிவணங்கின கழுத்துடையவர்களாய் எங்களை ரக்ஷிப்பாயென்று சரணமடைந்தனர். பரமேஸ்வரியான ராதிகாதேவி சுசீலையைநோக்கி இனி நீ கோலோகத்துக்குள் வருவையாயின் பஸ்மமாகக்கடவையென்று சபித்தனள். பிறகு ராதை அந்தராசக்கிரீடையில் கிருஷ்ணமூர்த்தியை அழைக்கவராமையால் க்ஷணகாலத்தைக் கோடியுகமாகநினைத்து ஓ கிருஷ்ணனே! ஓ பிராணநாதனே! வாரும். என்பிராணனுக்கு அதிஷ்டானதேவனே! நீயில்லாமல் என்பிராணன் போகின்றது. ஸ்திரீயின் கர்வமும் சுகமும் புருஷபாக்கியத்தினால் விருத்தியடைகின்றன. ஆதலால் ஓபகவானே! நான் உன்னை எப்பொழுதும் நமஸ்கரிக்கிறேன். குலஸ்திரீகளுக்குப் புருஷன் தான் பந்து தெய்வம் வழி சம்பத்து முதலியவைகளாம். தருமத்தையும் சுகத்தையும் பிரீதியையும் அரிஷ்டநிவர்த்தியையும் சன்மானத்தையும் கௌரவத்தையும் ஸ்திரீகளுக்குக்கொடுக்கிறவன் பர்த்தாதான். நாயகன்தான் சாராத்சாரமானபிரபு. அவன்தான் பந்துக்களை விருத்திசெய்கிறவன். பந்துக்களுள் பர்த்தாவுக்குச்சமானமான பந்துகிடையாது. பரிக்கிறபடியால் பர்த்தாவென்றும், பரிபாலிக்கிற படியால் பதியென்றும், சரீரத்துக்குப் பிரபுவானபடியால் சுவாமி என்றும், காமத்தைக்கொடுக்கிறபடியால் காந்தனென்றும், சுகத்தை விருத்திசெய்கின்றபடியால் பந்துவென்றும், பிரீதியைக் கொடுக்கின்றபடியால் பிரியன் என்றும், ஐஸ்வர்யத்தைக் கொடுக்கின்றபடியால் ஈசன் என்றும், பிராணனுக்குப் பிரபுவாக இருக்கின்றபடியால் பிராணநாயகனென்றும், ரதியைக் கொடுக்கின்றபடியால் ரமணன் என்றும் சொல்லப்படுகிறான். பர்த்தாவைக்காட்டிலும் பிரியமான பொருள் ஒன்றேனுங் கிடையாது. புத்திரன் பர்த்தா சுக்லத்திலிருந்து பிறந்தபடியால் சுதனாயிருக்கிறான். நல்லகுலஸ்திரீகளுக்கு நூறுபிள்ளைகளிருப்பினும் அவர்களைக்காட்டிலும் பர்த்தாவே பிரியமானவன். நற்குலத்திற் பிறக்காத ஸ்திரீ பர்த்தாவையறிந்துகொள்ளவல்லமையுள்ளவளாகாள் எல்லாப்புண்ணிய தீர்த்தஸ்நானமும், தக்ஷிணையோடுகூடிய எல்லா எக்ஞமும், எல்லாபூபிரதக்ஷணமும், எல்லாத்தபசுகளும், விரதங்களும், உபவாசங்களும், இன்னும் அநேகவிதமான புண்ணியகர்மங்களும், குருசேவை பிரா

மணசேவை வேதசேவை யாதிகளும் கணவன்பாதசேவைக்குப் பதி ஞறில் ஒருபங்குக்குக்கூட சமானமாகாது. குரு சிறந்தபிராமணன் தேவர்கள் இவர்களைக்காட்டிலும் பர்த்தாவே சிறந்தவன். புருஷர் களுக்கு வித்யாதானஞ்செய்தகுரு எப்படிசிறந்தவரோ, அப்படி நல்லகுடியிற்பிறந்த ஸ்திரீகளுக்கு புருஷனேசிறந்தவன். லக்ஷங் கோடி கோபிகாஸ்திரீகளுக்கும், லக்ஷங்கோடி கோபாலர்களுக்கும், அளவில்லாத பிரமாண்டங்களுக்கும், சோலோகப்பிரபுக்களுக்கும், என்கணவனுகிய உனது அநுக்கிரகத்தால் நான் ஈஸ்வரியாயிருக்கி ன்றேன். ஸ்திரீசுபாவமாகையால் நீஇங்கிருக்கின்றாய் என்பதை யறி யாமல் இருக்கிறேன் என்று கூறி கிருஷ்ணமூர்த்தியைப் பக்தியி ஞல் தோத்திரஞ்செய்து நாதனே நாதனே எனக்குத் தெரிசனத் தைக்கொடும். நான் உன் பிரிவால் துக்கப்பட்டுக்கொண்டிருக்கி றேன் என்றழுதாள். பிறகு சுசீலைஎன்கிற தக்ஷிணாதேவி கோலோக த்தைவிட்டுப் பூலோகத்திற்குவந்து நீண்டகாலந் தவம்புரிந்து இலக் குமியின்சரீரத்தில் பிரவேசித்தாள். அக்காலத்தில் தேவர்கள் ஒரு பெரியயாகத்தைச்செய்து அதன்பலனையடையாமற்போயினர். அக் காரணத்தை பிரமனிடஞ்சென்றுகேட்க, அவர் கிருஷ்ணனைத்தியா னிக்கஅவர் மகாலக்ஷ்மிதேகத்திலிருந்து மாநுடலக்ஷ்மியைப்பிரி த்தெடுத்துபிரமாவுக்குத்தக்ஷிணையாகக்கொடுத்தார். பிரமன் அவளை க்கர்மபூர்த்திக்காக யக்ஞமூர்த்திக்குக் கொடுத்தனர். யக்ஞமூர்த்தி அவளுடைய சவுந்தர்யாதிவிசேஷங்களைக்கண்டு மோகித்து மூர்ச் சையடைந்து பிறகு அவளையே விவாகஞ்செய்துகொண்டு மானுட சஞ்சாரமற்ற விடத்தில் நூறுதிவ்யவருடம் கிரீடித்திருந்தனன். அத்தேவி பன்னிரண்டுவருடம் கர்ப்பந்தரித்து சர்வகர்மாக்களுக் கும் பலரூபமான பிள்ளையைப்பெற்றனள். அப்பிள்ளையை யக்ஞஞ் செய்கின்றவர்களுக்கு யக்ஞமூர்த்தி கொடுத்தனர். தேவர்கள் அதனுல் சந்தோஷமும் பரிபூரணமான மனோரதமு முடையவர் களாய்த் தங்களிடம்போய்ச் சேர்ந்தனர். இச்செய்தி தருமரால் நான்கேட்டிருக்கின்றேன். கர்த்தா கர்மத்தைச்செய்துசீக்கிரமாகத் தக்ஷிணையைக் கொடுத்தால் பலனடைவான் என்று வேதத்தில்கூறி யிருக்கிறது. ஒ முனிவரே! கர்த்தா கர்மபூர்த்தியாகும்போது தெரி யாமையாலாவது கர்மவசத்தாலாவது பிராமணர்களுக்குத்தக்ஷிணை யைக் கொடுக்காமலிருந்தால் அக்கர்மம் பலனைக்கொடுப்பதில்லை. ஒருமுகூர்த்தம்கழிந்தால் இரண்டுபங்கும், ஒருஇராத்திரிகழிந்தால்

ஞறுபங்கும், மூன்றுஇராத்திரி கழிந்தால் அதற்கு இரண்டுபங் கும், ஒருமாதங் கழிந்தால் லக்ஷம்பங்கும், ஒருவருஷங்கழிந்தால் மூன்றுகோடிபங்குமாக அந்தக்கர்மபலம் நஷ்டத்தையடைகின் றது. இவ்வாறு பிராமணசொத்தை யபகரித்தவன் ஒருகர்மத்துக் கும் அதிகாரியல்லாதவனும் பின்புதரித்திரனும், வியாதியுள்ள வனும் பிறப்பான். அவன் வீட்டிலிருந்து தாருணமான சாபத் தைக்கொடுத்து இலக்குமி நீங்கிவிடுகின்றாள். அவனால் கொடுக்கப் பட்ட தர்ப்பணம் சிராத்தம் இவைகளைப் பிதுர்க்கள் கிரகிக்கமாட் டார்கள். இவ்வாறே தேவர்கள் பூஜைக்கும் அக்னிஆகுதிக்கும் தா னங்கொடுப்பதற்கும் யாசிப்பதற்கும் யோக்கியனாகான். யஜமான னையிருந்து தக்ஷிணையைக் கொடாதிருக்கிறவனும், யாசித்தும் கொ டாமலிருக்கிறவனும், ஆகியஇருவர்களும் கட்டியகயறு அறுபட்ட யானையைப்போல் கும்பீபாக நரகில்வீழ்ந்து லக்ஷம்வருடம் யமதூ தர்களால் அடிபட்டுவருந்தி, பின்புசண்டாளனும் வியாதியுள்ளவ னும் தரித்திரனும் பிறப்பான். அதுவுமல்லாமல் முன்னேழு பின் னேழு பிதுர்க்களையும் நரகில் தள்ளிவிடுவான்.

ஓநாரதரே! தக்ஷிணையின்மகிமையைக்கூறினேன். இனிஎதனைக் கேட்க விரும்புகின்றீர்? என்று கேட்க நாரதர்! தக்ஷிணையில்லாமல் செய்கிற யக்ஞத்தின் பலனை யார் அடைகிறது? முற்காலத்தில் யக்ஞமூர்த்தியால் செய்யப்பட்ட தக்ஷிணா பூஜாவிதி எப்படி? இவ் விரண்டையும் கூறும் என்று வினவ நாராயணர் கூறுகின்றார்:— தக்ஷிணையில்லாத கர்மத்துக்குப் பலன் ஏது? தக்ஷிணையோடு கூடிய கர்மத்துக்கே பலனுண்டு. தக்ஷிணையில்லாத கர்மம் பலிச்சக்கிர வர்த்தியை யடைகிறது. சந்தேகமில்லை. ஏனெனில் பலிச்சக்கிர வர்த்தியின்பொருட்டு வாமனாவதாரஞ்செய்த பகவான், அவனை நோக்கி யார் தக்ஷிணையில்லாமற் செய்கின்றார்களோ அந்தக் கர்ம மும் வேதமறியாத பிராமணர்களுக்குக் கொடுத்த போஜனமும், சிரத்தையில்லாத தானமும், சூத்திரஸ்திரீயை விவாகஞ்செய்து கொண்ட பிராமணர்களுக்குக் கொடுத்த பூஜாத்திரவியமுதலான தும், அசத்பிராமணனால் செய்யப்பட்டயக்ஞமும் அசுசியானவன் செய்கிறபூஜையும் குருபக்தியில்லாதவனுடைய கருமமும் உன்னை அடையக்கடவது என்றுகூறினர்.

இனி தக்ஷிணாதேவியினுடைய தியானமும், துதியும், பூஜாவி தியும், கண்ணுவசாகையில் கூறியிருக்கிறமுறையே கூறுகின்றேன்.

கர்மத்தில்சமர்த்தையான அத்தக்ஷிணாதேவியை யஜ்ஞமூர்த்தியடைந்து அவளது ரூபத்தினால் மோகித்துத் துதிக்கத்தொடங்கினர்.

முற்காலத்தில் கோலோகத்தில் சிறந்த கோபிகாஸ்திரீயாயும், ராதைக்குச்சமானமாயும், தோழியாயும், கிருஷ்ணனுக்கு இஷ்டமான மனைவியாயுமிருந்தனை. கார்த்திகைபௌர்ணமியில் ராதாமகோற்சவமான ராசக்கிரீடையில் லக்ஷ்மியினுடைய தக்ஷிண புஜத்திலிருந்து பிறந்தனை. அதனால் தக்ஷிணாதேவியென்று பெயரெய்தினை. அதற்குமுன் சுசீலையென்றுபெயர் பெற்றிருந்தனை. ராதாசாபத்தினால் கோலோகத்திலிருந்து வீழ்ந்து என்பாக்யத்தால் என்னிடம் வந்துசேர்ந்தனை. என்னிடம் தயைசெய்து என்னையே பர்த்தாவாகச்செய்துகொள்வாய். கர்மிகளுக்கும் கர்மங்களுக்கும் பலத்தைக் கொடுப்பவளாயிருக்கின்றாய். நீயில்லாமற்போனால் யாவருடைய கர்மமும் விண்தான். மும்மூர்த்திகள் திக்பாலர்கள் முதலான சகலதேவர்களும் நீயிராதகர்மத்துக்குப் பலன்கொடுக்க வல்லமையுடையவர்களல்லர். பிரமன் கர்மரூபியாயும், மஹேஶ்வரன் பலரூபியாயும், விஷ்ணு யஜ்ஞரூபியாயும் இருக்கின்றனர். நீ இம்மூவருக்கும் சாரரூபியா யிருக்கின்றனை. பரப்பிரமசொரூபியாயும்,நிர்க்குணமாயு மிருக்கிற பராசக்தியும்,கிருஷ்ணனும் உன்னை பலத்தைக்கொடுக்கிற சக்தியாகச் செய்திருக்கிறார்கள். ஓ அழகான பெண்ணே! நீ எனக்குச் சன்மங்கள்தோறும் சக்தியாயிருக்கின்றனை. நான் உன்னோடு கூடியிருப்பேனால் சர்வகாரியங்களிலும் வல்லமையுள்ளவனா யிருக்கின்றேன்.

என்றிவ்வாறு துதித்து எதிரேநிற்க, தேவி சந்தோஷத்தோடு அவனையடைந்தாள். இத்துதியை எவனொருவன் ராஜசூயயாகம் வாஜபேயம், கோமேதம், நரமேதம், அஶ்வமேதம், லாங்கல (கலப்பை)யாகம், கீர்த்தியையுண்டுசெய்கிறயாகம், தனத்தைங்கொடுக்கிற யாகம் பூமியைக்கொடுக்கிற யாகம், கஜமேதம், லோகயஜ்ஞம், சொர்னயஜ்ஞம். ரத்னயஜ்ஞம், தாம்பரயஜ்ஞம், சிவயஜ்ஞம், ருத்ரயஜ்ஞம், விஷ்ணுயஜ்ஞம். இந்திரயஜ்ஞம், சத்ருவையிம்சிக்கின்ற வருணயஜ்ஞம் பந்துயஜ்ஞம் கண்டகயஜ்ஞம் சுசியஜ்ஞம், தர்மயஜ்ஞம் பாபத்தைப்போக்குகின்ற யஜ்ஞம் கர்மயஜ்ஞம் பத்ரகம் என்னும் யோனியாகம் ஆகிய இவைகளைத்தொடங்கு

கின்ற காலத்தில் படிப்பானாயின் அவன்கர்மம் தடையில்லாமல் முடியும். இனித்தியானமும்பூஜாவிதியையுங் கூறுகின்றேன். கலசத்தில் லக்ஷ்மியின் வலதுதோளில்லக்ஷ்மியின் கலாசொரூபமாய்ப் பிறந்தவளாயும், சர்வகாரியங்களிலுஞ் சமர்த்தையா யிருக்கின்றவளாயும், விஷ்ணுசக்தி சொரூபிணியாயும், சுத்தியைக்கொடுக்கின்றவளாயும், சுத்திரூபமா யிருக்கின்றவளாயும், சுசீலையென்னும் பெயருள்ளவளாயும் இருக்கின்ற தக்ஷிணாதேவியை நமஸ்கரிக்கின்றேன் என்று தியானித்து மூலமந்திரத்தினால் ஆவாகித்து தாமரைபுட்ப முதலானவைகொண்டு வேதோக்தப்படி ஓம் ஸ்ரீம் க்லீம் ஹ்ரீம் தக்ஷிணாயை சுவாஹா: என்று சமர்த்தனான புருஷன் பூசிக்கவேண்டும். பிரீதியையும் எல்லா கர்மபலன்களையுங் கொடுப்பதாயு முள்ள தக்ஷிணோபாக்யானத்தை எவன் கேட்பானோ அவன்கர்மங்கள் அங்கஹீனமாயிருப்பினும் பூர்ணபலமுள்ளதாய் விடும். புத்திரனில்லாதவன் நல்லபுத்திரனையும் பாரியையில்லாதவன் சிரேஷ்டமான அங்கமுள்ளவளாயும், வணக்கமுள்ளவளாயும், இனிப்பாய்ப்பேசுகின்றவளாயும், பதிவிரதையாயும், சுத்தையாயும், நற்குலத்திற் பிறந்தவளாயும் உள்ளபாரியையடைவான். வித்தையில்லாதவன் வித்தையையும், தனமில்லாதவன் தனத்தையும், பூமியில்லாதவன் பூமியையும் சந்ததியில்லாதவன் சந்ததியையும் அடைவார்கள். சங்கடகாலத்திலும் பந்துவைவிட்டுப் பிரிந்திருக்கும் காலத்திலும், ஆபத்காலத்திலும் எவன் கேட்பானோ அவன் அவ்வச்சங்கடங்களிலிருந்து நீங்கிவிடுவான் இதிற்சம்சயமில்லை. என்றனர். (சு-ம். கூஅ)

நாற்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹர்ஷிண்யைநம:

## நாற்பத்தாறும் அத்தியாயம்.

## சஷ்டிதேவி உபாக்யானம்.

---

நாரதர் கூறுகின்றார்:—அநேகதேவர்களுடைய உபாக்கியானங்களைக் கேட்டேன். அவைபோல் பிரகிருதியின்கலைகளாயுள்ள

ஷஷ்டிதேவி மங்களசண்டிகை மனஸாதேவி இவர்களுற்பத்தியைக் கேட்க விரும்புகின்றேனென்று வினவ நாராயணர் கூறுகின்றார்,— சஷ்டிதேவி பிரகிருதிதேவியின் ஆறாவது அம்சத்திற்பிறந்தவளாகை யால் ஷஷ்டியெனப் பெயர்பெற்றனள். அவள் குழந்தைகளுக்கு அதிஷ்டான தேவதையாய்ப் பக்தர்களுக்குப் புத்திரப் பேற்றைத் தருபவளாய் அப்பாலர்களுக்கு ஆயுளைக்கொடுப்பவளாய் எப்போ தும் சிசுக்கள் பக்கலிலிருந்து ரக்ஷணைசெய்கின்றவளா யிருக்கின் றாள். இவள்தான் ஸ்கந்தருக்குப் பிராணப்பிரியையான தேவசேனை யென்பவள். நான் தருமரிடம் கேட்டவண்ணம் கேட்பவர்களுக்குப் புத்திரோற்பத்தியை யுண்டுசெய்யும் அவளது பூஜாவிதியையும் இதிகாசத்தையுங் கூறுகின்றேன்-

சுவாயம்புமநுவுக்குப் புத்திரனான பிரியவிரதன் யோகீந்திர னாய் விவாகமில்லாமல் தவம்புரிய பிரமதேவன் முயற்சியால் மாலினி என்பவளை விவாகஞ்செய்துகொண்டு நீண்டகாலம் புத்திரப்பே றின்றி வருந்திக் காசிபரால் புத்திரகாமேஷ்டியாகஞ்செய்து அந்த யக்ஞ அவிசை மாலினிக்குக்கொடுத்தான். அவள் அதனைப்புசித்து கருப்பமடைந்து பன்னிரண்டு தேவவருடம் சென்றபின் சுவர்னம் போல் பிரகாசமும், கண்திறந்தும் உயிரிழந்து மிருக்கிற ஓர்பிள்ளை யைப் பெற்றாள். அச்சிசுவை சகலபந்துக்களும் பார்த்து அழுதார் கள். தாய் மூர்ச்சித்தனள். ஓ முனிவரே! அரசன் குழந்தையை மயானத்துக்குக்கொண்டுபோய் மார்பில்வைத்துக்கொண்டு கதறி னன். பின்பு அரசன் அக்குழந்தையை விடாமல் தன்பிராணனை விட முயற்சித்தான். இவ்வாறு புத்திரசோபத்தால் ஞானயோகத் தையும் மறந்து நிற்குஞ்சமயத்தில் ஆகாயத்தில் நிர்மல ஸ்படிகம் போலும் சிரேஷ்டமான ரத்னங்களால் நிர்மிக்கப்பட்டதாயும், தே ஜஸினால் சொலிப்பதாயும், வெண்பட்டினால் சூழப்பட்டதாயும், நானாவித புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதாயும் இருக்கிற விமா னத்தையும், அதில் பார்க்குந்தோறும் பிரீதியை யுண்டுசெய்கின்ற வளாயும், மனோக்யையாயும், வெள்ளைச் சண்பக மலர்போன்ற நிற முள்ளவளாயும், நிலையுள்ள யௌவனமுள்ளவளாயும், புன்சிரிப் புடையவளாயும், அனேககோடி இரத்தினபூஷணங்களால் அலங் கரிக்கப்பட்டவளாயும், கருணைக்கடலாயும், யோகத்தினால் சாதி க்கத்தக்கவளாயும், பக்தர்களுக்கு அநுக்கிரகஞ்செய்வதில் ஆவலு

ள்ளவளாயுமுள்ள தேவியையும் பார்த்து பிரீதியோடு துதித்து குழந்தையைக் கீழேவிட்டுப் பூஜையில் சந்துஷ்டியுடைய தேவியை நோக்கி நீர்யார்? யாருடையபத்நி? யாருடையமகள்? ஸ்ரீகளுக் குள் புண்ணிசாலியாயும் பூசிக்கத்தக்கவளாயு மிருக்கின்றீரென்று கேட்க, தேவசேனை அரசனைப்பார்த்து முன் தேவாசுரர்களுக்குயுத் தம்நடக்கும்போது நான் சேனபதியாயிருந்தமையால் தேவசேனை யென்று பெயர்பெற்றேன். நான்பிரமாவின் மானசீகபுத்திரி என் நாயகன் ஸ்கந்தமூர்த்தி. மாத்ருகைகளில் பிரசித்திபெற்றவள். பிர கிருதியின் ஷஷ்டாம்சத்திற் பிறந்தவளாகையால் ஷஷ்டிதேவி என் றுபெயர் பெற்றுள்ளேன். பிள்ளையில்லாதவர்களுக்குப் பிள்ளையை யும் பத்னியில்லாதவர்களுக்குப் பத்னியையும் தரித்திரர்களுக்குத் தனத்தையுங் கர்மிகளுக்கு அவரவர்கள் கர்மத்தையுங் கொடுக்கிற வள், சுகம் துக்கம் பயம் சோகம் சந்தோஷம் மங்களம் சம்பத்து விபத்து எல்லாம் கர்மத்தினு லுண்டாகிறது. வம்சக்ஷயமும், இறந்தவர் பிழைக்கிறதும், சிரஞ்சீவியாயும், குணவானையும், அங்க ங்குறைந்தவனையும், ஸ்திரீயில்லாதவனையும், ரூபவானையும், தர்மிஷ்ட னையும், ரோகியாயும், வியாதியாளனையும் ஆரோக்யமுள்ளவனையும், இருப்பதெல்லாம் கர்மத்தினாலன்றி வேறில்லை ஆதலால் கர்மம் சிறந்ததென்று சொல்லப்படும்.

ஓநாரதமுநிவரே! இவ்வாறுகூறி குழந்தையையெடுத்து லீலையா கப் பிழைப்புமூட்டினாள். அக்குழந்தை எழுந்து சிரித்தது. அதனை அரசன் பார்த்துக்கொண்டிருக்கும்போது அத்தேவி எடுத்துக்கொ ண்டு ஆகாயத்தில் போகமுயற்சித்தனள். மீண்டும் அரசன் துக்கத் தினால் நெஞ்சுலர்ந்தவனாய்த் துதித்தான். அந்தத்துதியால் சந்தோ ஷமடைந்து தேவி அரசனைநோக்கி வேதத்தில்கூறியிருக்கும் கர்ம த்தை யுபதேசித்தாள். ஓஅரசனே! நீ சுவாயம்புமநுவின் புத்திர னாகையால் மூன்றுலோகத்திலும் பிரசித்திபெற்றவனா யிருக்கின் றாய் என் பூஜையை யாவரையும் செய்ய்ச்செய்து நீயுஞ் செய்வா யானால் உன்குழந்தையைக் கொடுக்கிறேன். குணவானையும், நல்ல பண்டிதனையும், பூர்வசன்ம வுணர்ச்சியுடையவனையும், யோகீந்தரனை யும், நாராயண கலாஸ்வரூபனையும், நூறுயாகஞ் செய்கிறவனையும் க்ஷத்திரியர்களுக்குட் சிறந்தவனையும் அவர்களால் நமஸ்கரிக்கப் பட்டவனையும், மதம்பிடித்த லக்ஷம் யானையின் பலமுள்ளவனையும்,

தனவானும், சுத்தனும் வித்வான்களுக்குப் பிரியவானும்,யோகிகளுக்கும் தபஸ்விகளுக்கும் ஞானிகளுக்கும் சித்தியைக்கொடுக்கின்றவனும், லோகத்தில் கீர்த்தியுள்ளவனும், சகலசம்பத்தையுங் கொடுக்கிறவனும் சுவ்விரதன் என்னும் பெயருள்ளவனும் வாழ்வான் என்றுகூறி குழந்தையைக்கொடுத்தாள். பிரியவிரதனும் பூசைசெய்வதைப்பற்றி ஒப்புக்கொண்டான் தேவியும். ஆசீர்வதித்துத் தன்னிடம்போய்ச் சேர்ந்தாள். அரசனும் மந்திரிகளோடு வீடு வந்து யாவருக்கும் நடந்தசெய்தியைக் கூறினன். யாவரும் அதனைக்கேட்டு மகிழ்ந்தனர். பின்பு அரசனும் தேவியைப்பூசித்து பிராமணர்களுக்குத் தானங்கொடுத்து குழந்தைபிறந்த ஆறும்நாளில் பிரசவ அறையில் தேவியின் பூசைசெய்வித்து இருபத்தொன்றும் நாளில் பாலகர்களுக்குச் செய்யவேண்டிய சுபகிருத்தியங்களைச் செய்வித்து ஒவ்வொரு சுக்லபக்ஷம் சஷ்டியில் உற்சவம் நடத்தினன். இனிக் கௌதமரால் தருமருக்குக்கூறப்பட்ட பூஜாவிதியைக் கூறுகின்றேன்:—கலசத்திலாவது சுவரில் எழுதப்பட்ட சித்திரத்திலாவது புத்திரனைக்கொடுப்பவளாயும், கருணைக்கடலாயும் ஜகன்மாதாவாயும் வெண்சண்பக நிறமுடையவளாயும் ரத்னபூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாயும், பரிசுத்தமானவளாயும், தேவசேனை யென்னும் பெயருள்ளவளாயுமிருக்கிற தேவியை நமஸ்கரிக்கிறோமென்று தியானித்து, ஆவாகித்து தன்சிரசில் புஷ்பத்தைவைத்து மறுபடியும் மூன்றுமந்திரத்தைச் செபித்து பாத்யம் ஆசமனம் அர்க்கியம் கந்தபுஷ்ப தூபதீப நைவேத்யம் அழகானபலங்கள் முதலானவைகளால் பூஜிக்கவேண்டும். ஓம் ஹ்ரீம்ஷஷ்டிதேவ்யை சுவா என்னு மந்திரத்தைத் தன்சக்திக்குத்தக்கபடி செபிக்கவேண்டும். பின்பு சாமவேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் ஸ்தோத்திரத்தினல் துதித்துப் பக்தியோடு நமஸ்கரிக்கவேண்டியது. அஷ்டாக்ஷர மந்திரத்தினல் லக்ஷம் உரு ஜபித்தால் அவன் நல்ல புத்திரனை யடைவான் என்று பிரமன் கூறுகின்றான். புத்திரப் பேற்றையும் அவரவர் விரும்பும் விருப்பங்களையும் தரும் துதி வேதத்தில் மறைந்திருக்கிறது. இதனல் பிரியவிரதன் துதித்து புத்திரனை யடைந்தான். எவன் இத்தோத்திரத்தை ஒருவருடங் கேட்கின்றானோ அவன நீண்டகாலஞ் சீவித்திருக்கும் புத்திரனைப்பெறுவான். எவன் தேவியைப் பூசித்து ஒருவருடம் கேட்கின்றானோ அவன் மனைவி மலடியாயினும் பிரசவிக்கிறாள். அக்குழந்தையானவன் வீர

ணையும் குணவானையும் வித்யாவானையும் யஸஸ்வியாயும் தீர்க்காயுள் உள்ளவனையும் பிறப்பான். வந்தியை மிருதவத்ஸவந்தியை என்னு மவர்கள் ஒருவருடம் கேட்பார்களானால் புத்திரனைப்பெறுவார். குழந்தைக்குரோகம் நேரிட்டிக்கும்போது தாய்தந்தையர் கேட்பார் களானால் ஒருமாதத்துக்குள் ரோகம்நீங்கும் என்றனர். (சு-ம்.எஙு)

நாற்பத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹரிஸோதர்யை நமஃ

## நாற்பத்தேழாம் அத்தியாயம்.

## மங்களசண்டி உபாக்யானம்.

---

நாராயணர் கூறுகின்றார்;— ஓ பிரமபுத்ரரே! இனி வேதப்பிர சித்தமானதும் வித்வாம்சர்களால் அறியப்பட்டதுமான மங்கள சண்டி உபாக்கியானத்தைக் கூறுகின்றேன். எந்தத்தேவி மிக்கசமர் த்தையாயும், மகாகோபமுள்ளவளாயும், கல்யாணகாரியங்களில், மங்களையாயு மிருந்தாளோ அவள் மங்களசண்டியென்று சொல்லப் படுகிறாள். மநுவம்சத்திற்பிறந்து ஏழுத்வீபங்களுக்கும் அரசனை யிருந்த மங்களனென்பவனால் பூஜிக்கத்தக்கவளாய் அவனது இஷ் டத்தைப் பூர்த்திசெய்தபடியால் மங்களசண்டிகையென்று சொல் லப்படுகிறாள். மூர்த்திபேதத்தால் துர்க்காதேவியாயும் மூலபிரகிருதி யாயு மிருக்கிறாள். கருணைக்கடலாயும் ஸ்திரீகளுக்கு இஷ்டதேவ தையாயுமிருக்கிறாள். திரிபுரசங்காரகாலத்தில் விஷ்ணுமுதலான சகலதேவர்களும் திரிபுரஜய முண்டாகும்பொருட்டு சகலத்ரவியங் களாலும் பூஜித்துப் போற்றியபோது மங்களசண்டி துர்க்காஸ்வ ரூபிணியாய் அவர்களைப்பார்த்து நீங்களஞ்சவேண்டாம், உருத்திர மூர்த்தியால் திரிபுரஜயம் உண்டாகுமென்று அநுக்கிரகஞ்செய்து மறைந்தனள். திரிபுரசங்காரமானபின்னர் விஷ்ணுமுதலானவர்கள் அந்த மங்களசண்டிகையை அருக்கியபாத்ய ஆசமனங்களாலும், பரமான்னம் மாப்பண்டங்களாலும், தேன் பால், பலங்களாலும்

திருப்தியாகும்படிச்செய்து பின்னர் நிருத்தகீதவாத்தியங்களாலும், நாமகீர்த்தனங்களாலும், தியானங்களாலும், திருப்திபுண்டாக்கி மேற்கூறிய பூஜைகளுக்கெல்லாம் "ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் சர்வ பூஜ்யே தேவீமங்களசண்டிகே ஹூம் ஹூம் பட்சுவாஹா, என்னும் இருபத்தொரு அக்ஷரங்களா லாகிய மூலமந்திரத்தையே கொண்டு முடித்தனர். சகலகாமத்தையுங் கொடுக்கும் இதனைப் பத்து லக்ஷஞ்ஜபித்தால் மந்திரம் சித்தியாகும். ஓ நாரதரே! வேதத்தி லுள்ள தியானத்தைக் கேட்பாயாக. பதினாறுவயதுள்ளவளாயும் ஸ்திரமான யௌவனமுள்ளவளாயும், கோவைப்பழம்போன்ற அதரமுள்ளவளாயும், அழகான பற்களுள்ளவளாயும், சரத்கால தாமரைபோன்ற முகமுள்ளவளாயும், வெண்சண்பகப்பூ நிறமுள்ள வளாயும், கருநெய்தல்போன்ற கண்ணுள்ளவளாயும், சகலலோகத் தையும் தரிக்கிறவளாயும், சகலருக்கும் சகலசம்பத்தையும் கொடுப் பவளாயும், சம்சார அந்தகாரத்திற்குத் தேஜோரூபமாயும் விளங்கு கின்றதேவியை நமஸ்கரிக்கின்றேன் என்பதாம். ஓமுநிவரே! தோத்தி ரத்தைக்கேட்பாயாக. "ரக்ஷரக்ஷ ஜகன்மாத தேவீமங்களசண்டி கே,ஹாரிகே விபதாம் ராஸே ஹரக்ஷமங்கள காரிகே (உசு) ஹரஷ மங்கள தக்ஷேச ஹரஷமங்கள தாயிகே, சுபேமங்களதக்ஷேச சுபே மங்களசண்டிகே. (உஎ) மங்களே மங்களார்ஹேச சர்வமங்கள மங் களே, சதாம்மங்கள தே தேவி சர்வேஷாம்மங்களாலயே. (உஅ) பூஜ்யேமங்களவாரேச மங்களாபீஷ்டதைவதா, பூஜ்யேமங்கள பூப ஸ்ய மநுவம்ஸஸ்யசந்ததம், (உகூ) மங்களாதிஷ்டாத்ருதேவி மங்க ளானாஞ்சமங்களே, சம்சாரமங்களாதாரே மோக்ஷமங்களதாயி நீ (௩௦) சாரேசமங்களாதாரே பாரேச சர்வமங்களாம், பிரதிமங்கள வாரேச பூஜ்யேமங்க சுகப்ரதே" (௩க) என்றுபிரதிமங்களவாரத்தி லும் மங்கள சண்டிகையைத் துதித்து உருத்திரமூர்த்தி சர்வமங்க ளத்தையும் பெற்றுச்சென்றனர். இவ்வாறே அங்காரகனும் மங்க ளன் என்னும் அரசனும் ஸ்திரீகளும மங்களத்தைவிரும்பும் புரு ஷர்களும் தேவர் முநிவர் மநுக்கள் மனிதர்கள் முதலிய யாவரும் பூஜித்துத் தத்தமக்கு வேண்டியவ மங்களத்தைப்பெற்றனர். இத் துதியைச் சாவதானமாகக் கேட்கின்றவர்களும் புத்திரமித்திராதிக ளோடு மங்களத்தைப்பெறுவர் அமங்களத்தை என்றும்பெறார்.

இனி மனஸாதேவியின் உபாக்கியானத்தைக் கூறுகின்றேன். கா சிபமுநிவரால் மனதால் உற்பத்தியானவளாகலினானும், பரமாத்மா

வான ஈஸ்வரனை மனதால் தியானிக்கின்றவளாகலினாலும் மனஸா தேவி எனப் படுகின்றாள். பரமாத்மாவுக்கு ஸ்தானமாயும் விஷ்ணு சம்பந்தமாயும் சித்தயோகினியாயும் இருக்கிற அவள் மூன்றுயுகம் தவம்புரிந்தபோது பரமாத்மா கட்டைபோலிருக்கிற அவளைப்பார்த்து ஜரத்காரு என்றழைத்து அவள் கோரிக்கையையும் அநுக்கிரகித்தனர். அந்தத்தேவிக்குச் சகலரும் பூசைசெய்யும்படியாகவும் செய்வித்துத் தானும்மேன்மை பாராட்டினர். பின்பு சகலலோகத்தாராலும் பூசிக்கப்பட்டவளாய் ஜகத்கௌரி என்று பிரசித்தியான பெயரையடைந்தனள். சிவசிஷ்யை யானபடியால் சைவை என்றும், விஷ்ணுப் பிரியையானபடியால் வைஷ்ணவி என்றும், பரிக்ஷித்தினுடைய யாகத்தில் சர்ப்பங்களையெல்லாம் ரக்ஷித்தபடியால் நாகேஸ்வரி என்றும், நாகபகினி என்றும்,விஷத்தைப் போக்கடிக்கவல்லமையுள்ளவளாகையால்விஷஹரிஎன்றும்,ஈஸ்வரரிடஞ்சித்தயோகமடைந்தபடியால் சித்தயோகினி என்றும் சொல்லப்படுகிறாள். அந்தத் தேவியை மகாஞானசொரூபமாயும், யோகஸ்வரூபமாயும், மிருதசஞ்சீவினி ஸ்வரூபமாயும், மஹாஞானத்தோடு கூடினவளாயும், பண்டிதர் கூறுகின்றனர். ஆஸ்திகமுநிவருக்குத் தாயானபடியால் ஆஸ்திகமாதாவென்றும், ஜரத்காரு முநிவருக்குப் பிரியையாகையால்ஜரத்காருப்பிரியை என்றுஞ்சொல்லப்படுகிறாள்.ஜரத்காரு ஜகத்கௌரீ மனஸா சித்தயோகிநீ வைஷ்ணவீ நாகபகினீ சைவீநாகேஸ்வரீ ஜரத்காருப்பிரியா ஆஸ்தீகமாதா விஷஹரீ விஸ்வபூஜிதா இப்பன்னிருநாமங்களையும் எவன் பூஜாகாலத்தில் படிப்பானோஅவனுக்கும் அவன் வம்சத்துக்கும் சர்ப்ப பயமில்லை. சர்ப்பமேறியிருக்கும் படுக்கையிலும் பாம்பிருக்கும் வீட்டிலும், போனிலும் பாம்பு சுற்றப்பட்ட சரீரத்திலும் இத்துதியைப் படித்தால் சர்வாபத்தும் நீங்கும் சந்தேகமில்லை. எவன் தினம்படிப்பானோ அவனைப் பார்த்தால் சர்ப்பமெல்லாம் ஓடிப்போகும். பத்துலக்ஷம் செபித்தால் சித்தியாகும். சித்தியானவன் விஷத்தைப்புசிக்க வல்லமையுள்ளவனாவன். சர்ப்பங்களைப் பூஷணமாகப்பூண்டு சர்ப்பத்தின்மேல் ஏறுகின்றவனாவன். சர்ப்பத்தின்மீது படுத்துச் சித்தபுருஷன்போ லிருப்பான். கடைசியில் விஷ்ணுவுடன் கிரீடிப்பான் என்றனர். (சு - ம். ௺அ)

நாற்பத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஹாஹா ஹூஹூ முகஸ் துதாயைநமஃ

# நாற்பத்தேட்டாம் அத்தியாயம்.

## மனஸோபாக்யானம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—ஓ முநிவரே! சாமவேதத்திற் கூறியுள்ள தியானமும், பூஜாவிதியும், என்னிடம்கேட்டுக்கொள்வீர். வெண்சண்பகப்பூ நிறமுள்ளவளாயும், பத்திரபுஷ்பங்களாலலங்கரிக்கப்பட்டவளாயும், வன்னிசுத்தமான வஸ்திரத்தைத் தரிக்கிறவளாயும், சர்ப்பத்தை மாலையாக அணிந்தவளாயும், மகாஞாபகத்தோடு கூடினவளாயும், ஞானிகளுக்குட் சிறந்தவளாயும், சித்தர்களுக்கதிஷ்டானதேவதையாயும், சித்தியுள்ளவளாயும், சித்தியைக்கொடுக்கின்றவளாயு மிருக்கின்ற தேவியை நமஸ்கரிக்கின்றேனென்று தியானித்து நிவேதனங்களாலும், தூபங்களாலும், புஷ்பங்களாலும் வேதோக்தமான மூலமந்திரங்களாலும் பூசித்தல்வேண்டும். ஓ முநிவரே! பக்தர்களுடைய கோரிக்கையைக் கொடுக்கும்படியான "ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் ஐஞ்சமனஸாதேவ்யைசுவாஹா" என்னும் பன்னிரண்டு அக்ஷரமுள்ள இது, கற்பக விருக்ஷம்போல் கேட்டதையெல்லாங் கொடுக்கத்தக்கது. எவனாகிலும் ஐந்துலக்ஷம் உருசெபிப்பானானால் மந்திரசித்தி யுண்டாகும். அவனுக்கு விஷம் அமிர்தத்துக்குச் சமானமாக இருக்கும். அவன் தன்வந்திரிக்குச் சமானனாவன். எவன் ஸ்நானஞ்செய்து ரகஸ்யமான ஸ்தானத்தில் உட்கார்ந்து மிக்கமுயற்சியோடு தேவியைப் பக்தியுடன் பூசிப்பானோ அவன் தன்வந்திரியாய்விடுவன். எவன் பஞ்சமியில் தேவியைத்தியானித்துப் பலியைநடத்துவானோ அவன் தனவானாயும் புத்ரவானாயும் கீர்த்திமானாயு மிருப்பான். முன்னொருகாலத்தில் மனிதர்கள் சர்ப்பபயமுள்ளவர்களாய்க் காசிபரைச்சரணடைய அவர் பிரமனோடுகூடி அநேக மந்திரங்களைச் சிருட்டித்தனர். வேதபீஜங்களுக்குத் தகுந்தாற்போலபிரமன் உத்தரவின்படி தேவியை மனத்தினால் சிருட்டித்தார். அதனால்அவள் மனஸாதேவி என்று சொல்லப்பட்டாள். அத்தேவி கைலாயத்தையடைந்து ஆயிரம் திவ்யவருடம் சந்திரசேகரரைப்பக்தியோடு பூஜித்துச் சேவித்துவந்தாள். அதிசீக்கிரத்தில் சந்

துஷ்டியடைகிற சிவபெருமான் மகிழ்ந்து மஹாஞானத்தைக்கொடுத்து மிகப்பிரீதியோடும் படிப்பித்து அஷ்டாக்ஷரமாகியலக்ஷ்மி மாயா காமபீஜத்தோடு ஜேந்தங்கூடிய கிருஷ்ணமந்திரத்தை உபதேசித்து புரச்சரணக்கிரமத்தையும் பூஜை முதலியவைகளையுங் கற்பித்து புஷ்கரக்ஷேத்திரத்துக்குத் தவம்புரிய அனுப்பினர். அங்கு மூன்றுயுகம் தவம்புரிந்து கிருஷ்ணனைத்தெரிசித்து அவருடைய கருணையினால் சித்தியடைந்தனள். சிறுபெண்ணாகவும் இளைத்தசரீரமுள்ளவளாகவுமிருக்கின்ற அவளைக்கருணைக்கடலான கிருஷ்ணமூர்த்தி பார்த்து வேண்டியவரங்களைக்கொடுத்து ஆதரித்து உருத்திரர் காசிபர் முதலியவர்கள் ஆதரிக்கவும் மநுக்கள் முனிவர் நாகங்கள் மாநுடர்கள் பூசிக்கவும் செய்தனர். பின்பு ஜரத்கால முனிவர்யாசிக்கப்படாதவராய் பிரமாவின் ஆக்ஞையால் விவாகஞ்செய்துகொண்டு நீண்டகாலந் தவம்புரிந்து தபசினால் சிரமமடைந்தவராய் மனைவியின் றொடையில் தலையைவைத்து ஆலமரத்தடியில் ஈஸ்வரனை நினைத்துக்கொண்டுறங்கினர். அப்போது சூரியாஸ்தமனகாலம் நெருங்க பதிவிரதையான அந்த ஸ்திரீ எவனொருவன் நித்யமான சாயங்கால சந்தியைச் செய்யாமலிருக்கின்றானோ அவன் பிரமஹத்தியாதிபாபங்களை யடைகிறானென்றும், எவன் காலை மாலை சந்தியாவந்தனஞ் செய்யாமலிருக்கின்றானோ அவன் அசுசியாய் பிரமஹத்தியாதிபாவங்களுக்குரித்தானவனாகின்றான் என்றும் வேதத்தில் கூறியிருக்கின்றபடியால் நம் புருஷன் பாவத்தை யடைவாரென்று தர்மலோபபயத்தால் எழுப்பிவிட்டனள். ஓ முனிவரே! அவர் எழுந்து மிக்க கோபங்கொண்டு ஓ பெண்ணே! நான் தூங்கும்போது நீ அதனைக்கெடுத்தனை? எந்தஸ்திரீ பர்த்தாவுக்கு அபசாரஞ்செய்கின்றாளோ அவளாற் செய்யப்படும் அநுட்டானம் விரதம் தபசு தானம் எல்லாமும் வீண்தான்; எவள்பர்த்தாவைப் பூசிக்கின்றாளோ அவள் ஈஸ்வரனைப் பூசித்தவளாவள் - பதிவிரதை பூசைக்காகவே பரமாத்மா பர்த்தாரூபங்கொண்டிருக்கிறார். எல்லாதானமும் எல்லாயக்ஞமும் எல்லா தீர்த்தஸ்நானமும் எல்லாவிரதமும் எல்லாதபசும் எல்லாஉபவாசமும் எல்லாதர்மமும்எல்லாப்பூசையும் சத்யமும் புருஷன்பூஜைக்குப் பதினாறிலொருபங்குக் கீடாகாது. எவள்புருடனை விடாது பூசிக்கின்றாளோ அவள்புருஷனோடு பரமபதத்தில் பரமாத்மாவின் பாதத்தையடைகிறாள். பர்த்தாவுக்கு விரோதமான வேலை செய்கின்றவளாயும் இஷ்டமில்லாதவார்த்

தையை இஷ்டம்போல் சொல்லுகிறவளாயும் இருப்பவள் அசுரா குலத்திற் பிறந்தவள்தான். அவள் சந்திர சூரியருள்ளவரையில் கும்பிபாகத்திலிருந்து பிறகு புத்திரனும் பர்த்தாவுமில்லாத சண்டாள ஸ்திரீயாகப் பிறப்பாளென்று கூறவே மனஸாதேவிபயந்து நான் சந்தியாலோப பயத்தினல் நித்திராபங்கஞ்செய்துவிட்டேன்; துஷ்டையான என் விஷயத்தைப் பொறுத்துக்கொள்ளும். சிருங்காரம் ஆகாரம் நித்திரை இவைகளுக்கு எவன் பங்கஞ்செய்வானே அவன் சந்திரசூரியருள்ளவரையில் காலசூத்ர நரகையடைவானென்று கூறிப்பர்த்தாவின் பாதத்தில் வீழ்ந்து பக்தியோடுகதறி அழுதாள். சூரியனைச்சபிக்க முயற்சி செய்கிற அம்முனிவரைச் சூரியன் சந்தியாதேவியோடுவந்து முனிவரைக்கண்டு ஓபிராமணரே! நீர் தேவியைச்சபிப்பது உசிதமல்ல. அஸ்தமன காலத்தைப்பார்த்து தருமலோபபயத்தினல் உம்மை எழுப்பினள். எழுந்தநீர் கோபிக்கச் சரணுக அடைகின்ருள். பிராமணர்களுடைய இருதயம் எப்போதும் நவநீதத்துக்குச் சமானமாகவிருக்கும். அவர்களுக்கு அரைக்ஷணந்தான் கோபமிருக்கும். ஆனல் அதற்குள் லோகமெல்லாம் பஸ்மமாய்விடும். மறுபடியும் லோகத்தைச் சிருட்டிக்கவல்லவன்பிராமணனைக்காட்டிலும் தேஜஸுள்ளவன் ஒருவனுங்கிடையாது. பிராமணர் பிரமாவின் அம்சமாகையால் பிரமதேஜஸினல் சொலித்துக்கொண்டு பரப்பிரம மூர்த்தியைத்தியானித்துக்கொண் டிருப்பாரென்றனர். அதனைக்கேட்ட முனிவர் சந்தோஷித்துத் தன்பிரதிக்ஞையைப் பூர்த்திசெய்ய அழுதுகொண்டிருக்கும் மனஸாதேவியைவிட்டுத்தன்னிடம்போயினர். அவள்மனவருத்தமடைந்து தன் குருவான சம்புவையும், இஷ்டரான பிரமவிஷ்ணுக்களையும் ஜன்மத்தைக்கொடுத்த காசிபரையும் தனக்கு ஆபத்துக்காலமாகிய அக்காலத்தில் நினைக்க எல்லோரும் வந்தனர். அவர்களையெல்லாம் நமஸ்கரித்துத் துதித்து குசலபிரஶ்னை செய்தனள். அச்சமயத்தில் பிரமன் அவள் வார்த்தையைக்கேட்டு விஷ்ணுமூர்த்தியை நமஸ்கரித்து இவளுடைய பர்த்தா புத்திரோற்பத்தி செய்யாமல் எப்படி ஸ்திரீயை விடலாம். ஆகையால் தர்மமாக புத்திரோற் பத்திசெய்ய வேண்டும். எவன் புத்திரோற்பத்திசெய்யாமல் வைராக்யமடைந்து மனைவியை விடுகிருனே, அவன் புண்ணியமெல்லாம் ஜல்லடையில் சலம் ஒழுகுவதுபோலாகுமென்றனர். அதனைக்கேட்ட முனிவர் மந்திர பூர்வகமாக அவள்நாபியைத்தொட்டு ஓ மனசாதேவியே! இந்தக்

கர்ப்பத்தால் உனக்குப்புத்திரன் உண்டாகப் போகின்ருன். அவன் சிறந்தஜிதேந்திரியனுயும், தர்மிஷ்டனுயும், பிராமண சிரேஷ்டனு யும், தேஜஸுள்ளவனுயும், தபஸ்வியாயும், கீர்த்திமானுயும், குண வானுயும். வேதமறிந்தவனுயும், ஞானிகளுக்குள்ளும் யோகிகளுக் குள்ளும் தலைவனுயும், ஈஸ்வரபக்தியுள்ளவனுயு மிருப்பான். அவன் குலத்தைக் கடைத்தேற்றிவிடுவான். அவன் ஜன்ம மாத் திரத்தில் பிதுர்க்கள் நிருத்தனஞ்செய்யப் போகின்ருர்கள். எவள் நல்லொழுக்க முள்ளவளோ அவள்பதிவிரதை. எவள் பிரிய மாய்ப் பேசுகின்றனளோ அவள்தான் பிரியை. எவள் பிள்ளைபெ ற்றவளோ அவள்தான் தர்மிஷ்டை. எவள் குலத்தை ரக்ஷிக்கிரு ளோ அவள்தான் குலஸ்திரீ. ஈஸ்வரபக்தியைக் கொடுக்கிறவன் பந்து. இஷ்டமான சுகத்தைக்கொடுக்கிறவன் பந்துவல்ல. தெய்வ சம்பந்தமான கவசத்தைக் கொடுக்கிறவன்ருன்பிதா, எவள்கர் ப்பவாசத்தைமகனுக்கு நீக்குகின்ருளோ அவள்தான் கர்ப்பத்தைத் தரிக்கிறவள். தயாரூபமானவளும் அவள் தான். சகோதரியும் அவள்தான். யமபயத்தை விடுவிக்கிறவளும் அவள்தான் எவன் பர மாத்மாவின் பக்தியையும், பரமாத்ம மந்திரத்தையும் உபதேசிக்கிரு னே எவன் ஞானத்தைக்கொடுக்கிருனே அவன்தான் குரு. பரமாத் மாவை நினைப்பதுதான் ஞானம். ஆப்பிரஹ்ம ஸ்தம்பபரியந்தமான பிரவஞ்சம் எவனிடத்தில் உற்பத்திநாசம் அடைகிறதோ அவனை யறிவதைக் காட்டிலும் ஞானம் வேறென்னவிருக்கிறது. வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற யக்ஞங்களெல்லாம் ஈஸ்வரசேவையேயாம். தத்வங்களுக்குள் சிவதத்வம் மிகவும் சாரமானது. இதரதத்துவங்க ளெல்லாம் பலமில்லாதவை. என்னுல் உனக்கு ஞானோபதேசம் சொல்லப்பட்டது. எவன் ஞானோபதேசஞ் செய்கின்ருனே அவன் தான்சுவாமி.எவன்ஞானத்தையடைந்தும்சம்சாரபந்தம்விடாமலிரு க்கின்ருனேஅவன் பந்தத்துக்குக்காரணம் ஆகின்ருன். அவன்தான் சத்ரு. ஈஸ்வரபக்தியோடு கூடியஞானத்தை எந்தகுரு வுபதேசஞ் செய்யாமலிருக்கின்ருனே அந்தகுரு சிஷ்யனைச் சங்கரித்தவனுகின் ருன். ஏனெனில் அவன் சம்சாரபந்தத்திலிருந்து விடுவிக்கா திருக் கின்றவனல்லவா?ஜன்மக்கிலேசத்தினின்றும் யமவாதனையினின்றும் விடுவிக்காதிருக்கின்றவன் எப்படி குரு ஆவான். எப்படிதந்தையா வான். எப்படி பந்துஆவான். பரமானந்தரூபமாயும், ஸ்திரமாயுமிரு க்கிற ஈஸ்வரனுடைய இடத்தை எந்தகுருவானவன் காட்டாமலிரு

ப்பானோ அவனெப்படி குருவாகவும் பந்துவாகவு மிருப்பான். ஆத லால் ஓ பதிவிரதையே! நிர்க்குணனும் பரப்பிரமசொரூபியாயும் பக்தர்களைக் கைவிடாதவனுயு மிருக்கிறபரமாத்மாவைச் சரணடை வாய். அந்தப்பரமாத்மாவினுடைய சேவையினால் சகலகர்மங்களும் நசித்துப்போகின்றன. உன்னை நான் ஓர்காரணத்தால் விட்டேன். நான்விட்டேனென்னும் குற்றத்தை நீ பொறுத்துக்கொள்ளவேண் டும். பொறுமையுள்ள பதிவிரதைகளுக்கு சத்வகுண ஆதிக்யத்தி னால் கோபங்கிடையாது. நான் புஷ்கரக்ஷேத்திரத்திற்குச்சென்று தவம்புரியப்போகின்றேன், நீ உன்னிஷ்டப்படி போகலாம். ஆசை யில்லாதவர்களுடைய மனமானது பரமாத்மாவின் பாதாரவிந்தத் தையே சம்பந்தித்திருக்கும் என்றனர். இவ்வாறுகூறிய ஜரத் காருவின் வார்த்தையைக்கேட்டு துக்கபீடிதையான மனஸா தேவி பிராணநாயகனைப் பார்த்துக் கூறுகின்றாள். குருவே! பிர புவே! நான் நித்ராபங்கஞ்செய்ததில் என்னைவிடும்படியான தோஷ மேயில்லை. எங்கு உம்மை நான் நினைப்பேனோ அங்கு நீர் தெரிச னங்கொடுக்கவேண்டும். பந்துக்களைவிட்டுப் பிரிந்திருக்கிறது மகா சங்கடத்தையுண்டுசெய்யும். புத்திரவிரகம் அதைக்காட்டிலும் பெ ரிது. பர்த்தாவைவிட்டுப் பிரிந்திருப்பது பிராணனைவிட்டுப் பிரிந்தி ருப்பதைக்காட்டிலும் பெருந்துக்கம். பதிவிரதா ஸ்திரீகளுக்கு நூறுபிள்ளைகளைக்காட்டிலும் பர்த்தா அதிகமானவர். எல்லாவஸ் துக்களினும் புருஷன் பிரியமானவஸ்து ஆகையால் பிரியனென்று சொல்லப்படுகிறான். புத்திர வான்களுக்குப் பிள்ளைகளிடத்தும், வைஷ்ணவர்களுக்கு விஷ்ணுவினிடத்தும், ஒற்றைக்கண்ணனுக்குக் கண்ணிடத்தும், தாகமெடுத்தவனுக்குச் சலத்தினிடத்தும், பசித்த வர்களுக்கு அன்னத்தினிடத்தும், காமுகர்களுக்கு மைதுனத்தினி டத்தும், திருடர்களுக்குப் பிறர்தனத்தினிடத்தும் குத்ஸிதஸ்திரீ களுக்குப்பரபுருஷர்களிடத்தும், வித்வான்களுக்குச் சாத்திரத்தினி டத்தும், வர்த்தகர்களுக்கு வியாபாரத்தினிடத்தும், மனம் சம்பந் தித்திருப்பதுபோல் பதிவிரதைகளுக்குப் பர்த்தாவினிடத்திலேயே சம்பந்தித்திருக்கும் என்றுசொல்லி பர்த்தாவின் பாதத்தில்வீழ்ந் தாள். கருணைக்கடலான அவர் அவளை மார்பிலணைத்து கண்ணீரி னால் முழுகச்செய்தனர். அவளும் அவருடைய மார்பைக்கண்ணீரி னால் மூழ்கச்செய்தாள். அப்போது அவ்விருவரும் பரமேஸ்வரன் பாதாரவிந்தத்தைத் தியானித்து ஞானத்தினால் சோகம்நீங்கினர்

கள். ஜரத்காருதன்பத்தினியிடம் உத்தரவுபெற்றுக்கொண்டு தவம் புரியச்சென்றனர். மனஸாதேவி மாஹாபக்தியோடு தன் குருவான உருத்திரரிடஞ்சென்றனள். பார்வதிதேவி அவளைப்பார்த்து சமாதானப்படுத்தி இரக்கமுற்று உருத்திரமூர்த்தியும் ஞானோபதேசஞ்செய்து சந்தோஷத்துடன் வாழ்ந்திருக்கும் படிச்செய்தனர். சிலநாள் சென்றபின் ஓர் சுபதினத்தில் சத்புத்திரனைப் பெற்றனள். அந்தப்புத்திரன் கர்ப்பத்திலேயே தாயுடன் ஞானோபதேசமுணர்ந்தவனாதலால் ஞானப்பிரகாசனாய்க் காணப்படுவதைக்கண்டு ஞானிகளும் யோகிகளும் போற்றினர். உருத்திரமூர்த்தியும் அவனுக்கு ஜாதகர்மம் செய்வித்து தானங்களை அளவில்லனவாகக் கொடுப்பித்துப் பின்னர் அங்கங்களோடுகூடிய நான்கு வேதங்களையும் அத்யயனஞ் செய்வித்தனர். அவன் மிருத்யுஞ்சயனே பரனென்னும் ஞானத்திலும் ஆசார்யபக்தியினுஞ் சிறந்தவனாயிருத்தலால் ஒ பார்வதீ இவன் ஆஸ்திகனென்னும் பெயருடையவனாகக்கடவன் என்று ஆக்ஞாபித்தனர். பின்பு சிலநாள் கழிந்து உருத்திர மூர்த்தியிடத்தில் மந்திரோபதேசம்பெற்று புஷ்கரத்துக்குப்போய் மூன்று லக்ஷவருடம் தவங்கிடந்து மறுபடி உருத்திரமூர்த்தியிடம்வந்து சிலகாலம் வசித்து அப்பெருமானிடம் விடைபெற்று மனஸாதேவியோடு காசிபரிடம் வந்தனன். காசிபர் மிகவும் சந்தோஷித்து நூறுலக்ஷம் ரத்னம் பிராமணர்களுக்குத் தானங்கொடுத்து போஜனமுஞ்செய்வித்தான். குழந்தையின் தேஜஸை அதிதியும் திதியும் இன்னும் வேறுஸ்திரீகளும் கண்டு சந்தோஷிக்க வாழ்ந்திருந்தனன். அப்போதுபரிக்ஷித்துமகனான் ஜனமேஜயன் தன்பிதா சர்ப்பத்தால்இறந்தகாரணத்தால் பகைகொண்டு சர்ப்பயாகஞ்செய்யத்தொடங்கினன். அப்போது எல்லாச்சர்ப்பங்களும் அந்த யாகத்தீயில் வந்து வீழ்கின்றபோது பரிக்ஷித்தைக்கொன்ற தக்ஷன் இந்திரனைச் சரணடைந்து அவன்காவலி லிருக்கும்போது அச்செய்தியைப் பிராமணர்கள் அறிந்து இந்திரனோடு தக்ஷனைச் சங்கரிக்க எத்தனித்தார்கள். இந்திரன் முதலானவர்கள் பயந்தவர்களாய் மனஸாதேவியிடம்போய் போற்றினார்கள். அவள் தன்மகனைக்காட்ட அவள் குறிப்புணர்ந்துயாவரும் ஆஸ்திகரை அடைந்து எங்கட்குப் பிராணபிக்ஷை தரவேண்டுமென்று பிரார்த்திக்க, அவர் பிராமணர்களுடைய அபிப்பிராயத்தை அங்கீகரித்து அவர்கள்வேண்டியபடிவரங் கொடுத்து எக்ஞத்தை முடித்து யாவருக்கும் தக்ஷணைகொடுத்து

விடைகொடுத்தனர். இந்திரன் முதலியோர் மனஸா தேவியை யடைந்து பூஜித்துத் துதித்தனர். அப்பூஜாவிதியையும் கூறுகின்றேன் கேட்பாயாக:—

விதிப்படி ஸ்நானஞ்செய்து இரண்டு வஸ்திரந்தரித்துக்கொண்டு அநுட்டானத்தை முடித்து இரத்தினசிங்காதனத்தில் தேவியை வீற்றிருக்கச்செய்து பக்தியோடு ரத்னகும்பத்தில் கங்காசலத்தைக் கொண்டுவந்து அபிடேகித்து வன்னிசுத்தமான வஸ்திரம் சந்தன புஷ்பாதிகளால் அலங்கரித்து அர்க்கியங்கொடுத்து பஞ்சாயதன பூசையைச் செய்து, பின்பு மனஸாதேவியைப் பூசித்து ஸ்ரீமனஸா தேவ்யைஸ்வா: என்னு மந்திரத்தினுல் அர்க்கிய பாத்ய ஆசமனுதிகளைக்கொடுத்து சோடசோபசாரங்களைச் செய்து வாத்யகோஷங் களைச் செய்வித்து புஷ்பங்களைமாரிபோல் புஷ்பாஞ்சலிபுரிந்து புளகாங்கிதங்கொண்டு பதிவிரதைகளில் சிரேஷ்டமான உம்மைத் தோத்திரஞ்செய்யவிரும்புகின்றேன். பராத்பரையான உன்னைத் துதிக்க எனக்கு வல்லமையில்லை வேதத்தில் தோத்திரலக்ஷணகுணத்தை விவரித்துச் சொல்லியிருக்கிறது. பிரகிருதத்தில் அவைகளை எண்ணிச்சொல்லுவதற்கு எனக்குச்சக்தியில்லை. நீ சுத்ததத்வ சொரூபையாயிருக்கின்றவள். கோபம் இம்சை இவைகளை விட்டிருப்பவள் ஆதலால் அந்த ஜரத்காருமுனிவர் உன்னிடம் உண்மையில் தோஷம் வைப்பதற்கின்றி உன்னையாசித்துக் கேட்டுக்கொண்டார். அப்படிப்பட்ட நல்லொழுக்க முள்ளவளான நீ எனக்குத்தாயான திதியைப்போல் பூசிக்கப்பட்டாய். தயாரூபமான நீ எனக்குச்சகோதரியாயிருக்கின்றனை. க்ஷமாரூபமான நீ எனக்குத் தாயாயிருக்கின்றாய். உன்னால் என்பிராணன்களும் புத்திர களத்திராதிகளும் காக்கப்பட்டன. நான் உன்னைப் பூஜிக்கின்றேன். என்னிடம் உனக்குப் பிரீதி விருத்தி யடையவேண்டும். சகல லோகத்துக்கும் தாயாரான தேவியே! நீ சகலராலும் பூசிக்கத்தக்கவளாயிருந்தாலும் நான் அந்தப் பூசையை விருத்திசெய்கின்றேன். எவர்கள் ஆஷாடசங்கிரமணத்திலாவது ஆஷாடபஞ்சமியிலாவது மாதமுடிவிலாவது தினந்தோறுமாவது பூசைசெய்வார்களோ அவர்களுக்குப் புத்திர பௌத்திராதிகளும் தனமும் விருத்தியாகும்; கீர்த்தி புகழ் வித்தை குணம் உள்ளவர்களாயும் இருப்பார்கள். எவர்கள் என்னைப் பூசிக்காமலும் நிந்திக்கின்றவர்களாகவும் இருக்கின்றார்க

ளோ அவர்கள் சம்பத்தில்லாதவர்களாகவும் சர்வபயமுள்ளவர் களாகவும் ஆவார்கள். வைகுண்டத்தில் இலக்குமி விஷ்ணு வோடிருப்பதுபோல் ஜரத்காருமுனிவரை நீயநுசரித்திருக்க உன்னை உனதுதந்தை சிருட்டித்தார், என்னைக்காக்க நீ மனஸா என்கிற பெயருள்ளவளாக இருக்கின்றனை. சக்தியினுடைய அம்சத்தால் நீ மனஸாதேவியாக அவதரித்தாய். இப்போது சித்தயோகினியா யிருக்கின்றனை. அதனால் பூஜிக்கப்பட்டவளாயும் நமஸ்கரிக்கப்பட் டவளாயு மிருக்கின்றனை. எதனால் தேவர்கள் மனோபக்தியினால் பூசி க்கின்றார்களோ அதனால் உன்னை மனஸாதேவி என்கிறார்கள். நீ சத்திய சொரூபமாக இருக்கின்றாய். எவன் உன்னை மனதினால் தியானிக்கின்றானோ அவன் உன்னை அடைவான். என்றிவ்வாறு துதித்துப் பாலினால் அபிஷேகஞ்செய்து மிகப்பிரீதியோடு பூசிக்க வும் அத்தேவி துர்லபமான ஞானத்தை உபதேசித்தனள். இத்துதி யைத் தேவியைப்பூசித்து படிக்கின்றவனுக்கும் அவன்வமிசத்தோர் க்கும் சர்ப்ப பயமில்லை. விஷம் அமிர்தம்போலிருக்கும். இத்துதி சித்தியாக ஐந்துலக்ஷம் ஜபிக்கவேண்டும் என்றனர். (சு - ம். கசரு)

நாற்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹாநிவிருத்தி விவர்ஜிதாயைநமஃ

## நாற்பத்தோன்பதாம் அத்தியாயம்.

## சுரபி உபாக்யானம்.

---

நாரதர், ஒ முனிஸ்ரேஷ்டரே! கோலோகத்திலிருந்துவந்த சுரபிஎன்னும் தேவி யார்? அவளது சரித்திரம் என்ன? என்றுவினவ, நாராயணர் கோக்களுக்கு அதிஷ்டானமானவளும், கோக்களை முத லில்பெற்றவளும், பிரதானமானவளும், கோலோகத்தில் சிருட்டிக்கு முன்பிறந்தவளுமான சுரபியின்சரிதையைக் கூறுகின்றேன் என்றார்.

பிருந்தாவனத்தில் கோபிகாஸ்திரீகளால் சூழப்பட்டவராய் கிருஷ்ணன் ராதிகையோடு ரகஸ்யத்தில் விளையாடிக்கொண் டிருக்

குஞ்சமயத்தில் பாலைக்குடிக்க எண்ணங்கொண்டவராய் லீலையாகத் தன்பக்கலில் சுரபியை மனோரதமென்னுங் கன்றோடும் சிறந்த பாலோடும் சிருட்டித்தார். ஸ்ரீதாமாஎன்பவள் புதியபாத்திரத்தில் அமிர்தத்தைக்காட்டிலும் ருசியாயும், ஜனனமிருத்யு முதலானவைகளை நீக்குவதாயும் இருக்கிற அப்பசுவின்பாலைக் கறந்தாள். அதனை அந்தக்கோபிகாபதி பானஞ்செய்யுஞ் சமயத்தில் பால்பாத்திரம் உடைந்து நூறுயோசனை சுற்றளவு ஓர்குளமாய் நிறைந்துவிட்டது. பூலோகத்தில் இதனை க்ஷீர சரஸ் என்று வழங்குகின்றனர். அது கோபிகளுக்கும் ராதைக்கும் கிரீடாசரஸாகி ரத்னங்களால் நிறைக்கப்பட்டிருந்தது. காமதேனுவின் ரோமங்களிலிருந்து லக்ஷங்கோடி கோபாலர்களோடு லக்ஷங்கோடி காமதேனு பிறந்தன. பின்னர் அந்தப்பசுக்கள் அநேகமாகச் சந்ததிவிருத்தியடைந்தன. அதனால்சகல லோகமும் காமதேனுவைப் பூசிக்கத்தொடங்கிற்று. அப்பூசைசாயங் காலத்தில் தீபத்தோடு செய்யத்தக்கது என்று தருமர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதற்குரிய மூலமந்திரம் தியானம் துதி பூஜா விதி முதலியவைகளையுங் கூறுகின்றேன் கேட்பீராக:—

பிரணவத்தை முதலாகவும், நமஃ என்பதை இறுதியாகவுமுடைய சுரப்யைஎன்னும் ஆறு அக்ஷரத்தாலாகிய மந்திரத்தைலக்ஷம் உரு ஜபித்தால் சித்தியாகும். பக்தர்களுக்குக் கற்பகவிருக்ஷமாயிருப்பது. யஜுர்வேதத்திற் கூறப்பட்ட தியானமும் பூஜையும் புக்தியையும் விருத்தியையும் முக்தியையும் சகலகாமங்களையுங் கொடுக்கும். லக்ஷ்மிசொரூபிணியாயும்,ராதைக்குத் தோழியாயும், கோக்களுக்கு அதிஷ்டானதேவதையாயும், பசுக்களுக்குத் தலைமையாயும், தாயாயும் பரிசுத்தமான ஆகாரமுள்ளதாயும், பக்தர்களுக்கு சர்வகாமத்தையுங் கொடுப்பதாயும், சகலபிரபஞ்சத்தையும் பரிசுத்தஞ்செய்கிறதாயு முள்ள சுரபிதேவியை நமஸ்கரிக்கின்றேன்என்று தியானித்து கலசத்திலாவது, கம்பத்திற்செய்யப்பட்ட கோசிரசிலாவது, பிரத்யக்ஷமான கோசிரசிலாவது, சலத்திலாவது, அக்னியிலாவது, காமதேனுவைப் பிராமணன் பூஜித்தல்வேண்டும். மறுதினம் முற்பகலில் தீபத்தோடு பூஜித்தல்வேண்டும். இவ்வாறு எவனொருவன் செய்வானோ அவன் எல்லாராலும் பூஜிக்கப்படுவான்.

முன்னொருகாலத்தில் விஷ்ணுமாயையால் காமதேனு பாலையடக்கத் தேவர்கள் சிந்தாகுலமுற்று பிரமலோகத்தையடைந்து பிர

மனைத்துதிக்க அவருடைய ஆக்ஞையால் இந்திரன் காமதேனுவை நமோதேவ்யை மஹாதேவ்யை ஸுரப்யைசநமோநம꞉ கவாம்பீ ஜஸ்வரூபாயை நமஸ்தே ஜகதம்பிகே. (உச) நமோராதா ப்ரி யாயைச பத்மசாயை நமோநம꞉, நம꞉ கிருஷ்ணப்ரியாயைச கவாம் மாத்ரே நமோநம꞉ (உரு) கல்பவிருக்ஷஸ்வரூபாயை ஸர்வே ஷாம் ஸததம்பரே க்ஷீரதாயைதனதாயை புத்திதாயை நமோ நம꞉ (உசு) ஸுபதாயை ஸுபத்ராயை கோப்ரதாயைநமோநம꞉ யசோதாயை கீர்த்திதாயை தர்மதாயை நமோநம꞉ (உஎ) என்று துதித்தான். துதித்தவுடன் லோகமாதாவான சுரபி சந்தோஷ மடைந்து எதிரேவந்து வரத்தைக்கொடுத்து கோலோகம்போய்ச் சேர்ந்தது. தேவர்களும் தங்களிடம் சேர்ந்தார்கள். அப்போது பசுக்கள் பாலைக் கறக்கத்தொடங்கினர்; அப்பாலிலிருந்து தயிர் நெய் யுண்டாயிற்று. அதனால் யாகங்களைச்செய்ய தேவர்கள் திருப் தியடைந்தார்கள். இத்துதியை எவன்படிப்பானோ, அவன் கோசம் பத்துள்ளவனாகவும், தனவானாகவும், கீர்த்திமானாகவும் இருப்பான். அவன்தான் சகலபுண்ணியதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்தவன். அவன்தான் யக்ஞத்திலும் தீக்ஷைசெய்து கொண்டவன். அவன் இம்மையில் சுகமடைந்து மறுமையில் [illegible]மபதத்தையடைவன். அவன் மீண்டும்பிறவாது பிரமபுத்ரனாவன் என்றனர். (சு-ந-ந)

நாற்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹவ்யங்க வீந ஹ்ருத யாயைநம꞉

## ஐம்பதாம் அத்தியாயம்.

## ராதா துர்க்கா விதானம்.

---

நாரதர், சம்சாரபந்த நிவர்த்தியைச் செய்வதும் வேதத்திற் கூறப்பட்டுள்ளதுமான ராதா துர்க்காதேவிகளுடைய சரித்திரத் தைச் சொல்லவேண்டும். பராசக்திகளான அவ்விருவருடைய மகி மைகளைக்கேட்டு எவனுடைய மனத்தில் பக்தியுண்டாகாம லிருக் கும். இப்பிரபஞ்சம் யாருடைய அம்சமோ, எல்லாப் பிரபஞ்சமும்

யாருடைய ஆக்ஞைக்கு உட்பட்டிருக்கிறதோ, யாருடையபக்தி யால் முக்தியுண்டாகுமோ அதனையும் கூறியருளுவீரென்ன நாராய ணர் கூறுகின்றார்.

வேதத்தில் கூறப்பட்ட ரகஸ்யத்தைக் கூறுகின்றேன். அது வெகுரகசியமாயும் சாராத்சாரமாயும் பராத்பரமாயும் உள்ளதாகை யால் சாதாரணமான வர்களுக்கு வெளியிடக்கூடாது. உலகமுண் டாகுங்காலத்தில் சம்வித்சொரூபமான மூலப்பிரகிருதிதேவி பிரா ணன் புத்தி இவைகளுக் கதிஷ்டானையாய், ரக்ஷை சிக்ஷைசெய் துகொண்டிருக்கின்றனள். அசையும்பொருள் அசையாப்பொருள் களாயுள்ள விராட்புருஷன் முதலான சகல சீவர்களும், அச் சத்திகளுக்குச் சர்வசுவாதீனமாக விருக்கின்றனர். அவர்களுடைய அனுக்கிரப் பிரசாதமன்றியில் மோக்ஷங்கிடைப்பதரிது. ஆதலால் பிரசாதமுண்டாவதற்கு நாடோறும் அவர்களுடைய சேவையைச் செய்துவரவேண்டும். அது மந்திரமன்றியில் செய்யக்கூடாதாகை யால் பராத்பரரூபமாயும், திரிமூர்த்திகளால் சேவிக்கப்பட்டதாயும் உள்ள ராதிகாமந்திரத்தைக் கூறுகின்றேன் கேட்பீராக:—

மந்திரம் ஸ்ரீராதாஎன்பதாம். அதனைச் சதுர்த்தியந்தமாகவும் அதன்பின் அக்னிபத்னியின் பெயரையும் சேர்க்க ஆறுஅக்ஷரமா கின்றது. அம்மகாமந்திரம் தருமமுதலிய புருஷார்த்தங்களைத் தர த்தக்கதாயும், மாயைக்குப் பீஜமாயும், சிந்தித்தவற்றைக்கொடுக் கும் சிந்தாமணிபோன்றதாயும் உள்ளது. இம்மந்திர மகாத்மிய த்தை ஆயிரங்கோடிமுகமும், நூறுகோடி நாக்கும் படைத்தாலும் சொல்லமுடியாது. முதலில் கிருஷ்ணமூர்த்தி பக்தியோடு மூலதே வியினால் உபதேசிக்கப்பெற்றார். அந்தகிருஷ்ணர் விஷ்ணுமூர்த் திக்கும், அவர் பிரமனுக்கும், அவர் விராட்டுக்கும் உபதேசித்த னர். அம்மந்திரத்தை நான் செபித்து ருஷியாயினேன். பிரமாமுத லான சகலமான தேவர்களும் ராதிகையைப் பூசிக்கின்றனர். ராதா பூஜையில்லாமல் கிருஷ்ணன்பூசை உபயோகமில்லை. ஆதலால் சகல பக்தர்களும் ராதிகையைப் பூசித்தல் வேண்டும். கிருஷ்ணனுக்குப் பிராணனுயும் அவருடையராஜக்கிரீடைக்கு எஜமானியாயும், கிரு ஷ்ணனைத் தன்சுவாதீனத்தில் வைத்திருப்பவளாயும், அவரும் அவ ளைவிட்டு ஒருக்ஷணமும் நீங்காதவராயும் இருக்கின்றார். ராதனம் என்றால் புருஷார்த்தத்தைச் சாதிப்பது என்று பொருள். பக்தர்க

ளுக்கு புருஷார்த்தங்களைக் கொடுக்கின்றபடியால் ராதையென்று சொல்லப்படுகிறாள். இம்மந்திரத்துக்கு நாரதருஷி, சந்தஸு காயதிரி, தேவதைராதிகா, சக்தி பீஜம், சக்திஸ்வரூபம் முன்சொல்லப் பட்டிருக்கிறது. மூலமந்திரா வர்த்தியினால் அங்கன்னியாசம் கரன்னியாசம் செய்து, பிறகு சாமவேதத்தில் சொல்லப்பட்ட தியானத்தை முன்சொல்லியபடி வெண்சண்பக நிறமுடையவளாயும், சரத்கால சந்திரன்போன்ற முகமுடையவளாயும், அச்சந்திரன்போன்றநேத்திரமுடையவளாயும்,கோடிசந்திரனைப்போல் பிரகாசிக்கின்றவளாயும்,கோவைப்பழம்போன்ற உதடுள்ளவளாயும்,பெருத்தபிருஷ்டமுடையவளாயும், ஒட்டியாணத்தோடுகூடிய நிதம்பமுடையவளாயும், குந்தமொக்குக்குச் சமானமான தந்தமுடையவளாயும், வன்னிசுத்தமான வெண்பட்டைத் தரித்தவளாயும். புன்சிரிப்புள்ள முகமுள்ளவளாயும், யானையின் மத்தகம்போன்ற தனமுடையவளாயும்,எப்போதும் பன்னிரண்டுவயதுள்ளவளாயும்,இரத்னபூஷணங்களால் பூஷிக்கப்பட்டவளாயும்,சிருங்கார ரசரூபமான ரசிகையாயும், பக்தர்களை அநுக்கிரகிக்கும் ஆவலுள்ளவளாயும், மல்லிகை மாலதி முதலிய புஷ்பமாலைசூடிய கூந்தலால் பிரகாசிக்கின்றவளாயும், மிருதுவான சரீரமுள்ளவளாயும், ராஸமண்டலமத்தியில் வசிக்கிறவளாயும், வரதாபயங் கொடுக்கின்றவளாயும், சாந்தையாயும், எப்போதும் ஸ்திரமான யௌவனமுள்ளவளாயும், ரத்னசிங்காதனத்தில் வீற்றிருக்கின்றவளாயும்,அனேககோபிகளுக்கு எஜமானியாயும், கிருஷ்ணப்பிரியையாயும், வேதத்தில் துதிக்கப்பட்டவளாயும், பரமேஸ்வரியாயு மிருக்கின்றவளென்று ராதாதேவியைத் தியானித்து கலசத்திலாவது, எட்டுதள யந்திரத்திலாவது, ஆவாகித்துவிதிப்படிஆசமனமுதலான உபசாரங்களை மூலத்தாற்கொடுத்து மதுபர்க்கத்தையும் பால் கொடுக்கும் பசுவையும் கொடுக்கவேண்டும். பிறகு ஸ்நானவேதிகையில் தேவியை எழுந்தருளச்செய்து, அப்யங்கன முதலான ஸ்நானங்களைச் செய்து வஸ்திரம் சந்தனம் துளசி பாரிஜாதம் தாமரைமுதலிய நானாவிதபுஷ்பம் ஆகிய இவைகளைக்கொடுத்து அக்னி ஈசானியன் நிருதி வாயு இவர்கள் மத்தியில் திக்பூஜைசெய்யவேண்டும். பின்பு பிரதக்ஷிணமாக கிழக்குமுதல் ஈசானியம் ஈறுகவுள்ள எட்டு தளங்களில் மாலாவதி மாதவி ரத்னமாலை சுசீலகை சசிகலை பாரிஜாதை அமராவதி பிரியகாரணி ஆகிய இவர்களையும், அவர்களுக்கு வெளிப்பக்க

த்தில் அதற்குப் புறம்பில் பிரமன்முதலானவர்களையும், திக்பாலகர்களையும், வச்சிரம் முதலிய ஆயுதங்களையும் பூஜித்து ராஜோபசாரங்களைச்செய்து, சகஸ்ரநாமங்களால் அருச்சித்து தேவியை சந்தோஷப்படுத்தி தேவிமந்திரத்தை ஆயிரம் உருசெபிக்கவேண்டும். ராதைக்குப்பிரியமான தேவியை எவன் இவ்வாறு பூசிப்பானோ அவன் கோலோகத்தில் சுகமாய் பரமாத்மாவுக்குச் சமானமாயிருப்பான். கார்த்திகைபௌர்ணமியில் ராதா ஜன்மோற்சவத்தைச் செய்கின்றவனுக்கு ராதாதேவி எப்போதும் சாந்நித்தியத்தைத் தருகின்றாள். ஏதோ வொருகாரணத்தால் கோலோகத்தில் பிருந்தாவனத்தில் ராதாதேவி விருஷபாநு மகளாகப்பிறந்து நிலையாகவசித்துக் கொண்டிருக்கிறாள். இங்குசொல்லியிருக்கும் மந்திரங்களுடைய அக்ஷரகணக்கின்படி புரச்சரணை செய்யவேண்டும். ஜபத்தில் பத்திலொருபாகம் எள்ளினால் மூன்றுஹோமமுஞ் செய்யவேண்டும் என்றனர்.

நாரதர் நாராயணரைநோக்கி ஓ முநிவரே! தேவி எதனால் சந்தோஷமடைவாளோ அந்தத்துதியைச் சொல்லவேண்டுமென்று கேட்க நாராயணர் கூறுகின்றார். நமஸ்தே பரமேஶானி ராசமண்டலவாஸிநீ, ராஸேஸ்வரி நமஸ்தேஸ்து கிருஷ்ணப் பிராணாதிகப்பிரியே. (சுசு) நமஸ் த்ரைலோக்ய ஜநநீ பிரசீத கருணார்ணவே, பிரஹ்மவிஷ்ண்வாதி பிர்த்தேவைர் வந்தியமான பதாம்புஜே. (சுஎ) நமஸ் ஸரஸ்வதீ ரூபே நமஸ் ஸாவித்ரிஶங்கரீ, கங்கா பத்மாவதீ ரூபே நமஸ் ஸாவித்ரி ஶங்கரீ. (சுஅ) கங்கா பத்மாவதீ ரூபே ஷஷ்டி மங்களசண்டிகே, மனஸே துளஸீ ரூபே நமோ லக்ஷ்மீஸ்வரூபிணீ. (சுகூ) நமோ துர்க்கே பகவதீ நமஸ்தே ஸர்வரூபிணீ, மூலப்ரகிருதி ரூபாந்த்வாமஃ பஜாம்கருணார்ணவாம். (௱) ஸம்சார ஸாகராதஸ்மாந் சுந்தராம் பதயாம்குரு. இத்துதியை எவன் முக்காலத்திலும் ராதையைத் தியானித்து வாசிப்பானோ அவனுக்குக் கிடைக்காத பொருளொன்றுமில்லை. தேகமுடிவில் கோலோகராசமண்டலத்தில் வசித்திருப்பான். இந்த ரகசியத்தை எவனுக்குஞ் சொல்லக்கூடாது.

இனி நினைத்தமாத்திரத்தில் எல்லா ஆபத்துகளையும் நீக்குபவளாயும், உலகில் யாவராலும் வணங்கப்பட்டவளாயும், எல்லோராலும் உபாசிக்கத் தகுந்தவளாயும், சிவசக்தி சொரூபமாயும், அற்பு

தமான மகிமையுடையவளாயும், சகலருடைய புத்திக்கும் அதிதேவதையாயும், அந்தர்யாமி சொரூபமாக இருக்கின்றவளாயும், துக்கமென்னுஞ் சங்கடத்தை நீக்குகிறபடியால் துர்க்கையென்று பிரசித்தி யடைந்தவளாயும், வைணவர் சைவர் இருவர்களாலும் உபாசிக்கப்பட்டவளாயும், மூலபிரகிருதி ரூபையாயும், முத்தொழிலைச் செய்கின்றவளாயும் இருக்கின்ற துர்க்காதேவியினது விதானத்தைச்சொல்லுகிறேன் கேட்பீராக:—

பிரமவிஷ்ணு ருத்திரர்கள் ருஷிகளாகவும்,காயத்திரி உஷ்ணிக் அநுஷ்டுப்பு இவை சந்தஸ்ஸுகளாகவும், மகாகாளி மகாலக்ஷுமி சரஸ்வதி இவர்கள் தேவதைகளாகவும் ரக்ததந்திகா, துர்க்கா பிராமரி மூவரும் பீஜங்களாகவும், நந்தா சாகம்பரி பீமா மூவரும் சக்திகளாகவும், தர்மார்த்த காமமோக்ஷங்கள் விநியோகமாகவும் சொல்லப்படும். இவைகளை சிரசு முகம் இருதயம் ஸ்தனம் இவ்விடங்களில் முறையே நியசிக்கவேண்டும். மூன்று பீஜங்களிலாவது, நான்கு பீஜங்களி லாவது, இரண்டுபீஜங்களி லாவது, எல்லாப்பீஜங்களி லாவது,சிகை கண் காது நாசி முகம் புஜம் இவ்வாறங்கங்களில் நியாசஞ்செய்யவேண்டியது. கட்கம் சக்கரம் கதை பாணம் சாபம் பரிகம் சூலம் புஜுண்டி சிரசு சங்கம் இவைகளைத் தரித்திருக்கின்றவளாயும், மஹாகாளிஸ்வரூபமாயும், முக்கண்ணுடைய வளாயும், நானுவித பூஷணங்களால் அலங்கரிக்கப் பட்டவளாயும், கறுத்த மேகராசியைப்போல் பிரகாசிக்கின்றவளாயும், பத்துமுகம் பத்து காலுள்ளவளாயும், மதுகைடப நாசத்துக்காகப் பிரமாவினால் தியானிக்கப்பட்டவளாயு மிருக்கிற தேவியைத் தியானிக்கின்றேன் என்று மஹாகாளியையும்; ஜபமாலை பரசு கதை பாணம் குலிசம் கமலம் தநுசு குண்டிகை தண்டம் சக்தி கத்தி கவசம் மணி சுராபாத்திரம் சூலம் பாசம் சுதரிசனம் இவைகளைத் தரித்துக்கொண்டு செவந்தகாந்தியோ டிருக்கிறவளாயும், செந்தாமரைப்பூவை அடைந்திருக்கிற வளாயும், மாயாசொரூபிணியாயும், மகிஷாசுரனை நாசஞ் செய்தவளாயும் இருக்கின்ற மகாலக்ஷுமியைத் தியானிக்கின்றேன் என்று மகாலக்ஷுமியையும்;மணி சூலம் கலப்பைசங்கு உலக்கை சக்கிரம் தநுசு பாணம் இவைகளைக் கரங்களி லேந்தினவளாயும், சும்பன் முதலானவர்களைச் செயித்த வாணிபீஜ ஸ்வரூபிணியாயும், சச்சிதானந்த சொரூபிணியாயும் இருக்கிற மஹாசரஸ்வதியைதியா

னிக்கின்றேன் என்று மஹாசரஸ்வதியையுந் தியானிக்கவேண்டும். இனியந்திரபூஜையைக் கூறுகின்றேன்:—மூன்று ஆறுகோணங்களோடும், எட்டுதளபத்மம் இருபத்துநான்கு தளபத்மங்களோடும், பூகிரகத்தோடும் கூடியிருக்கிற யந்திரத்தைச்சிந்தித்து கலசத்திலாவது யந்திரத்திலாவது பதுமைகளிலாவது, பாணலிங்கத்திலாவது, இலிங்கத்திலாவது, சூரியனிடத்திலாவது, அநந்யமாகத் தியானித்துப் பின்னர் ஜயாதிசக்திகளோடு கூடிய பீடபூஜையைச் செய்யவேண்டும்.

பிறகு முக்கோணத்துள் பூர்வகோணத்தில் சரஸ்வதியோடு கூடிய பிரமனையும், நைருதிகோணத்தில் இலக்ஷுமியோடுகூடின விஷ்ணுவையும்,வாயுகோணத்தில் பார்வதியோடுகூடிய சம்புவையும், தேவிக்கு வடபக்கத்தில் சிம்ஹத்தையும், வாமபாகத்தில் மகிஷனையும், ஷட்கோணத்தில் நந்தை ஜயை ரக்ததந்தை சாகம்பரி துர்க்காதேவி பிராமரி தேவியையும், அஷ்டதள பத்மத்தில் பிராம்ஹி மாகேஶ்வரி கௌமாரி வைஷ்ணவி வராஹி நாரசிம்ஹி ஐந்திரி சாமுண்டா இவர்களையும், இருபத்து நான்கு தளபத்மத்தில் முதலில் விஷ்ணுமாயை சேதனை புத்தி நித்திரை க்ஷுதை சாயா சக்தி பரா திருஷ்ணு க்ஷாந்தி ஜாதி லஜ்ஜை சாந்தி சிரத்தை கீர்த்தி லக்ஷுமி திருதி விருத்தி சுருதி ஸ்மிருதி தயை துஷ்டி புஷ்டிமாதா பிராந்திரதி இவர்களையும், பூபுரகோணத்தில் கணபதி க்ஷேத்ரபாலகர் வைரவர் யோகினிகள் இவர்களையும், யந்திரத்திற்கு வெளியில் இந்திரன் முதலானவர்களையும் வச்சிராதி ஆயுதங்களையும் பூசித்துப் பின்தேவிக்கு ராஜோபசாரஞ் செய்யவேண்டும். பின் வாக்பவம் சம்புவனிதா காமபீஜம் சாமுண்டா என்பவைகளை சதுர்த்தியந்தமான துர்க்காநாமத்தோடு கூட்டிஉச்சரிப்பதாகிய நவாவர்ண மந்திரத்தை அர்த்தந்தெரிந்தவனாய் ஜபித்துசப்தஸதி தோத்திரத்தைப் படிக்கவேண்டும். மூவுலகிலும் இத்துதிக்குச் சமானமில்லை.

இதில் சந்தோஷிப்பதுபோல் வேறெவைகளிலும் சந்தோஷிப்பதில்லை. இவ்வண்ணம் தினந்தோறும் மாஹாதேவியைப் பூஜித்தால் சதுர்வித புருஷார்த்தங்களுக்கு இருப்பிடமாய்விடுகிறான். எதனால் சகலகாரியமும் சித்தியாகுமோ அந்தத்துர்க்காபூஜையை இப்போதுசொன்னேன். பிரமவிஷ்ணு முதலியதேவர்களும், லக்ஷுமி முதலிய சகலதேவிகளும் ஞானிகளும் யோகிகளும் ஆச்ரமிகளும்

சிவையைத் துதிக்கிறார்கள். துர்க்காதேவியின் ஸ்மரணையிருந்தால் தான் ஜனன மெடுத்ததற்குப்பலன். பதினான்கு மநுக்களும், சகல மானதேவர்களும், தேவிபாதாரவிந்தத்தைத் தியானித்தே தங்கள் தங்கள் பதவிகளை யடைந்தனர். அதிகரகசியமான பிரகிருதிதேவி யின் பஞ்சகத்துவமும் அவரவர் அம்சமும் சொல்லப்பட்டது. இத னைக் கேட்டமநிதன் புருஷார்த்தங்களையும் புத்திரனில்லாதவன் புத்திரனையும் வித்யார்த்தி வித்தையையும், இவைபோலும் எவரெ வர் எதை எதை யடையவிரும்புகின்றனரோ அவரவர் அவ்வ வைகளையும் அடைகின்றனர். இதனை நவராத்திரியில் தேவிசந் நிதியில் பாராயணஞ்செய்தால் சந்தோஷமடைவாள். எவன் ஒவ் வொரு அத்தியாயம் நாடோறும் படிப்பானோ அவனுக்கு தேவி சுவாதீனமாய்விடுவாள். தேவிக்கு இஷ்டன் அவனைப்போல் ஒரு வனுமில்லை.

இவ்விஷயத்தில் பரிக்ஷையும் பார்க்கலாம். எவ்வாறெனின், ஓர் கன்னிகையின் கையிலாவது, ஓர்பிள்ளையின் கையிலாவது, ஓர் புஷ்பத்தைக்கொடுத்துத் தான்கோரிக்கையை நினைத்துக்கொண்டு புத்தகத்தின்மேல் புஷ்பத்தை வைக்கச்செய்து தெரிந்துகொள்ள லாம். புத்தகத்தையும் மாயாதேவியையும் பூசித்து நன்றாக ஸ்நா னஞ்செய்த சுத்தமான கன்னிகையைவரவழைத்துபூசித்துப்பொன் னாற்செய்யப்பட்ட ஓர்சர்க்கை நடுவேநாட்டி பரிட்சைசெய்தால் சுப மோ அசுபமோ எவ்வாறிருக்கிறதோ அவ்வாறே நடக்கும். இது நிச்சயம். மத்யமாகவந்தால் மத்யமாகவே யிருக்கும் என் றனர். (சு - ம். கOO)

ஐம்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்யாயம் ருO-க்கு சுலோகம் (ங்கூஉச)

ஒன்பதாம் ஸ்கந்தம் முற்றிற்று.

உ

ஸ்ரீ திரிபுர சுந்தரியை நமஃ.

# தேவீ பாகவதம்.

## பத்தாம் ஸ்கந்தம்.

அத்தியாய அட்டவணை. பக்கம்.

உ

ஹரிகோபாருணும் சுகாயைநமஃ

# தேவீ பாகவதம்.

## பத்தாம்ஸ்கந்தம்.

### முதலாமத்தியாயம்.

### சுவாயம்புவின் விருத்தாந்தம்.

*துங்காபி ராம குசபர சிரிங்காரித மாப்ரயாமி காஞ்சிகதம்*
*கங்காதர பரதந்திரம் ப்ருங்கா ராத்வைத தந்திர சித்தாந்தம்.*

நாரதர் கூறுகின்றார்:— ஓ நாராயணரே! பூமிக்கெல்லாம் ஆதாரமாயிருக்கின்றவரே! தேவரீரால் சகலரக்ஷணைகட்கும் காரணமாயும் சகல பாபங்கட்கும் நாசகரமாயுமுள்ள தேவியினது சரித்திரஞ் சொல்லக்கேட்டுள்ளேன்; தேவியானவள் எல்லா மன்வந்தரங்களிலும் எந்த வுருவமாயுள்ளவள்? எங்கெந்த வுருவங்களாகத் தோன்றுகின்றவள்? பக்தவத்ஸலையாகிய அத்தேவி எங்கெந்தப் பக்தர்களால் பூஜிக்கப்பட்டவளாய்த் தோத்திரஞ்செய்யப்பட்டவளாய் அவர்களுடைய மனோரதங்களைப் பூர்த்திசெய்திருக்கின்றாள்? அந்த மஹிமையோடுகூடிய சரித்திரங்களைக் கிருபா சமுத்திரமாயுள்ள தாங்கள், கேட்கும் ஆவலுள்ள எனக்குச் சொல்லி யருளு மென்றனர்.

நாராயணர் கூறுகின்றார்: — ஓ மஹருஷியே! பக்தர்களது பாபத்தை நாசஞ்செய்கிறதாயும் அவர்கட்குப் பக்தியை யுண்டு பண்ணுவதாயும் அவர்களடையவேண்டிய மகா சம்பத்துக்குக் காரணமாயு மிருக்கின்ற அந்தத் தேவியினது சரித்திரங்களைக் கேட்பாயாக. பூர்வத்தில் உலகைப்படைத்தற்குக் காரணராகிய பிரமதேவர் நாராயணரது நாபிக்கமலத்திலிருந்து வெளியேவந்தனர். அவருடைய மனத்திலிருந்து சுவாயம்புமநுவும் அவர் பத்னியாகிய சதரூபையுந் தோன்றினர். பின்னர் அம்மநுவானவர் மிகவும் பரிசுத்தமான திருப்பாற்கடற் கரையின்கண் மகா பாக்கிய பலப்பிரதையான தேவியை மிருத்திகையினாற் பிரதிஷ்டைசெய்து உண்ணத்தக்க ஆகாரங்களை யொழித்து சுவாசத்தை யடக்கி நியம

மாகக்கொண்ட விரதங்களால் சரீரம் இளைக்கப்பெற்றுக் காமக் குரோதாதிகளையடக்கிப் பூமியில் ஓர் காலையூன்றி அசைவறநின்று தேவியினது பொன்னடிகளை உள்ளக்கமலத்தில்வைத்து வாக்பவ மென்னும் மந்திரத்தை ஜபித்துக்கொண்டு நூறுவருடம் ஸ்தாவ ரம்போலிருந்தனர்.

அப்பொழுது தேவியானவள் வெளிப்பட்டுவந்து, ஓ அரச னே! உனக்கு வேண்டிய வரங்களைக் கேளென்றாள். ஆனந்தத்தை விளைவிக்கும் அந்த வாக்கை அரசன்கேட்டுத் தன் மனதி லெண் ணியவாறு தேவர்களாலும் அடைதற்கரிதான இவ்வரத்தைக் கேட்கலுற்றனன். ஓ விசாலமான கண்ணுடையாளே! யாவருடைய உள்ளத்திலும் வாசஞ்செய்கின்றவளே! யாவராலும் பூஜிக்கத் தகுந்தவளே! எல்லா வுலகங்களையுந் தரிக்கின்றவளே! எல்லா மன்வந்தரங்கட்கும் மங்கள மானவளே! நீ நன்றாய் விளங்கவேண் டும். உனது கடாக்ஷ வீக்ஷண்யத்தாலன்றோ பிரமவிஷ்ணு ருத் ரர்கள் சிருட்டி திதி சங்காரங்களைச்செய்து வருகின்றனர்! உனது ஆக்ஞையினாலன்றோ இந்திரன் மூன்றுலகத்திற்கும் அதிபதியா யிருக்கின்றான்! பிரேத நாயகனாகிய காலன் பிராணிகளைத் தண் டிக்கிறான்! ஜலஜந்துகளுக் கதிபதியாகிய வருணன் எம்போன்றவர் களை ரக்ஷிக்கின்றான்! குபேரன் நிதிபதியாயிருக்கின்றான்! அக்கினி நிருதி வாயு ஈசானன் உன் அமிசத்திற் பிறந்து உன் பக்தியினால் விருத்தி யடைகின்றனர்! ஓ தேவியே! அவர்கட்கெல்லாம் வரங் கொடுத்ததுபோல் சுவர்க்ககாரியத்தில் பிரவேசித்திருக்கும் எனக் கும் இப்போது வரங்கொடுக்கத் தகுமானால் என்னை நோக்கிவரும் இடையூறுக ளெல்லாம் இடையூறுபட் டொழியக்கடவது. சித்ரூ பையே! என்னால் ஜபிக்கப்பட்ட வாக்பவ மந்திரத்தை எவர்கள் ஜபிக்கின்றார்களோ அவரது காரியங்கள் சீக்கிரத்தில் சித்தியாக வும், இச் சம்வாதத்தைப் படிக்கின்றவர்களும் கேட்கின்றவர்களும் புத்திமுத்திகளை எளிதாகவுடையவும், இவற்றோடு யாவர்க்கும் இன்பத்தை விளைவிக்கும் இன்சொல்லும் புத்திர பௌவுத்திராதி விருத்தியும் ஞானசித்தியும் கர்ம மார்க்க சித்தியும் பூர்வஜன்ம ஞானமும் முண்டாகவும் அருள்செய்ய உன்னைச் சேவித்துப் பிரா ர்த்திக்கின்றேன். (சு. உ௬௭)

முதலாமத்தியாய முற்றிற்று.

---

## இரண்டாமத்தியாயம்.

## விந்தியாசல விருத்தாந்தம்.

பூமியைப் பரிபாலிக்கவல்ல ஓ அரசனே! சுவாயம்பு மநுவே! உன்னால் பிரார்த்திக்கப்பட்ட யாவும் உண்டாகும்படி நான் அநுக்கிரகஞ் செய்தேன். அசுரநாசனியாயும் மதித்தற்கரிய அள விறந்த பராக்கிரம சாலினியாயு மிருக்கின்ற நான் வாக்பவ மந் திரத்தோடு நீசெய்துவந்த தவத்தினால் சந்தோஷமடைந்தேன். உனக்குச் சத்துருவில்லாத ராஜ்ஜியமும், வமிசவிருத்தியைச் செய் யவல்ல புத்திரர்களும், என்னிடத்தில் திடமான பக்தியும், தேகா ந்தத்தில் மீண்டும் பிறவாநெறியாகிய மோக்ஷமு முனக்குண்டா கக்கடவனவென்று விஷ்ணு சகோதரியாயும் வரதேஸ்வரியாயும் சர் வலோக பூஜ்யையாயு முள்ள தேவி அநுக்கிரகித்து அரசன் பார்த் துக்கொண் டிருக்கும்போதே, அவள் திருவுருக்கரந்து சூரியன் செல்லுங்கதியைத் தடுத்ததும் அகஸ்திய முநிவரால் அடங்கப் பெற்றதுமான விந்தமலையை யடைந்தனள்.

இருடிகள் வினவுகின்றனர்:—ஓ சூதரே! விந்தமலை என்பது யாது? அது யாதுகாரணமாய் ஆகாயத்தி லெழுந்து சூரியன் செல்லத்தக்க மார்க்கத்தைத் தடுத்தது? அகஸ்தியர் மேலோங்கி இறுமாந்திருந்த அந்தப்பர்வதத்தை எவ்வாறு அடக்கினர். அவை யனைத்தும் எங்கட்கு விரிவாய்ச் சொல்லவேண்டும். ஓ சாந்தசீ லரே! தேவரீர் திருமுகத்தி னின்றும் பெருகாநின்ற தேவிசரித் திரமென்னும் அமுதத்தை நாங்கள் பானஞ்செய்தும் திருப்திய டைந்தோ மில்லை. இன்னமும் அந்த அமுதத்தி னிடத்து ஆசை யேவளருகின்றது.

சூதர் கூறுகின்றார்: — விந்தம் மலைகளுக்குட் சிறந்தது. பல பருப்பதங்களால் பூஜிக்கத்தகுந்த மேம்பாடுடையது. அநேக விதமான விருக்ஷங்களால் நெருங்கியுள்ள ஆரண்யங்களாலும் மலர் கள் நெருங்கியுள்ள புதர்களாலும் நதிநதங்களாலும் சூழப்பட் டது. மான் பன்றி புலி வேங்கை வானரம் நரி முதலியவிலங் கினங்கள் தன்னிடத்து உல்லாசமாக வுலாவப்பெற்றது. கின்

னர கிம்புருடர்களாலும் அப்சரஸ்திரீகளாலும் நிறையப்பெற்றது இத்தகு சிறப்புடைய அவ்விந்த மலையைநோக்கித் தன்னிச்சை வழி எவ்வுலகத்தும் உலாவவல்ல நாரதர் அதிக பிரீதியோடு தற்செயலாய் வந்தனர். அவர் வருகையைக்கண்ட அவ் விந்தமலை திடுக்கிட்டு விரைந்தெழுந்து அர்க்கிய பாத்திய ஆசமனாதிகளைக் கொடுத்து சுகமாய் ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து பூஜித்து அவரைப்பார்த்து, ஓ உத்தமரே! இங்கு யாதுகாரணங் கருதிவந் தீர்? தேவரீ ரிங்கு வரப்பெற்றதனால் எனது கிருகம் விமலமடைக்கக் கூடாததாயிற்று. சூரியனுடைய சஞ்சாரமானது எப்படித் தேவர்களுக்கு நன்மையைத் தருவதோ அப்படியே தேவரீரது சஞ்சாரமும் தேவர்கட்கு நன்மையைத் தருவதன்றோ! அபூர்வமான சங்கதி ஏதேனு மிருக்குமானால் அதனைச் சொல்லுமென்று வினவ நாரதர் கூறுகின்றனர்.

இந்திரனுக்கு வைரியாயுள்ள விந்தமே! நானிப்போதுபொன் மலையாகிய மேருவினின்றும் வருகின்றேன். அதில் லோகபாலகர்களான இந்திராதியர்கள் வசிக்குங் கிருகங்களை அவரவர் வசித்தற் குரிய உலகங்களைப்போற் கண்டேனென்று சொல்லிப் பெருமூச்சு விட்டனர். விந்தமலை, ஓ முநிபுங்கவரே! நீர் பெருமூச்சுவிடுங் காரணமென்னையோ அதனைக்கூறு மென்ன, அவர் ஓவிந்தமே! மேருமலை இப்போது கொண்டிருக்கும் இறுமாப்பை என்னென்று சொல்லுவேன். இமயபர்வதம் பார்வதியாருக்குத் தந்தையானபடியால் சிவபெருமானுக்கு மாமனாராய் அவ்விசேடத்தால் யாவராலும் பூஜிக்கும் பெருமையை யடைந்தது. ஸ்ரீகைலாயமும் சிவபெருமான் தன்னிடம் நீங்காது வீற்றிருக்கப்பெற்ற காரணத்தால் யாவராலும் வணங்குந் தன்மையைப்பெற்றது. நிடத நீல கந்தமாதன முதலிய பருப்பதங்களும் ஒவ்வோர் காரணத்தால் சிறப்படைந்திருக்கின்றன. மேரு, தான் ஆயிரங்கிரணங்களோடு கூடிய சூரியன் சகல கிரகங்களோடும் நக்ஷத்திரங்களோடும் நாடோறும் வலம்வரப் பெற்றுள்ள தென்றும் அதனால் தனக்குச் சமானமானதும் மேம்பட்டதும் உலகில் ஒரு மலையுமில்லை யென்றும் தானே சிறந்ததென்றும் அகங்கரித்திருக்கின்றதை இன்று கண்டேனாகையால் பெருமூச்செறிந்தேன். ஆனால் தவஞ்செய்வோனாகிய யான் ஒருவரடைந்திருக்கும் அகங்காரத்தைச் சிந்திக்க வேண்டியது மில்லை. பிறரிடத்திற் சொல்லவேண்டியது

மில்லே. நீ என்னைப்பார்த்து அபூர்வமான சங்கதி ஏதேனுமிருக்கு மானுல் அதனைச் சொல்லு மென்று கேட்டபடியினுல் வார்த்தை மேல் வார்த்தையாய்ச் சொல்லவந்தது. இனி யான் என்னிடம் போய் வருகின்றே னென்று பிரமனுலகம் போயினர். (சு. உஅ.)

இரண்டா மத்தியாய முற்றிற்று.

---

லதாபூஜ்யாயைநமஃ



மூன்றமத்தியாயம்.

## விந்திய கிருதபாநு மார்க்க நிரோதனம்.

---

சூதர் கூறுகின்றுர் :—நாரதமுனிவர் சென்றபின் மேரு மிக்க இறுமாப் படைந்திருக்கின்றதென்று கேள்வியுற்ற விந்தியமலே சிந் தாகுலமடைந்து, நாம் அந்த மலேயைக் கர்வபங்கஞ் செய்யாமற் போவோமாயின் நமக்கென்ன சிறப்பிருக்கின்றது. நாம் அதனே எப் படி வெல்வோம். வெல்லாதொழியின் நமது மனம் எப்படி தணி யப் போகின்றது. நமது வன்மையையும் ஆண்மையையும் நெருப் பிற்றுன் சுடவேண்டுமென் றெண்ணிக்கொண் டிருக்கும்போதே மேருமலேயின் இறுமாப்பை யடக்க நாம் செய்யவேண்டிய காரிய மிதுவென்று தெளிவாய் மனதிற் ரேன்றிற்று. அது யாதெனின், சூரியன், கிரகாதி நக்ஷத்திரங்களோடு நாடோறுந் தன்னே வலம் வருகின்று னென்கின்ற இவ் வொன்றினுலன்றே அளவில்லாத அகங்காரங் கொண்டிருக்கிறது இன்று. நமது கைகளால் அந்த சூரி யன் வரும் மார்க்கத்தைத் தடைசெய்வோ மாயின் அவனெப்படி அதை வலம்வரப் போகின்றுன். அவ்வாறு வலம்வராணுயின் அந்த மேருகர்வ பங்கமடையு மென்பதில் சந்தேக முண்டோ என்று நிச்சயித்ததே. அவ்வாறே அக்கணமே உன்னதமான தனது சிகரங் களால் ஆகாயத்தை யளாவிச்சென்று சூரியனெப்போது உதய கிரியி லுதிக்கப் போகின்றுன் ; நாமெப்போது தடுக்கப் போகின் ருேம் என்றெண்ணிக்கொண்டே அவ் விரவெல்லாம் கீழ்த்திசை யைநோக்கி யிருக்கும்போது பிராஹ்ணு (முற்பகல்) அபரான்ணு (பிற்பகல்) மத்யான்ணு (நடுப்பகல்) என்று மூன்று காலங்களைக் காட்டி அக்காலங்களால் தேவர்களுக்கு அவ்யபத்தையும் பிதுர்க்க

ளுக்குக் கவ்யத்தையும் ஏனைய பூதபலிமுதலிய வற்றையும் செய்விக்கின்றவனும், உலகிலுள்ளார் யாவரையும் தந்தந் தொழில்களில் முயல்விக்கின்றவனும், தாமரை மலரவும் ஆம்பல் குவியவும் செய்கின்றவனுமாகிய சூரியன் உதித்து, பிரிவரும் தன்பிரிய நாயகன் தன்னை நெடுநாட் பிரிந்திருக்க அதனு லுண்டாகிய விரகநோயி லிருக்கின்ற தலைவியைத் தனது காட்சியால் அந்நோயைத் தணிப்பவன்போல் கிழக்குத் திக்கையும் அக்கினிதிக்கையும் பிரகாசப் படுத்தி சமாதானமாக்கி தக்ஷிணதிக்கை நோக்கிச் செல்லும்போது இரதத்திற் பூட்டியிருக்கும் குதிரைகள் செல்லுவதற்கு வழிதெரியாமல் மயங்கி யிடர்ப்பட்டன. அது கண்ட அருணனென்னுந் தேர்ப்பாகன் சூரியனைப் பார்த்து, ஓ அர்க்கமூர்த்தியே! விந்தமலை இப்போது மேருமலையோடு பகைத்து அம் மலையை நீர் வலம்வரா வண்ணம் தடுப்பதற்கு தான் மேலோங்கி நாம் போகவேண்டிய மார்க்கம் தெரியாவண்ணஞ் செய்திருக்கின்ற தென்றனன். அது கேட்ட அருக்கனும் ஆஹா! இச்செய்கை மிக ஆச்சரியமாக விருக்கின்றது! தெய்வத்தின்செயல் இப்படியு மிருந்ததா! அதன் செயலே செயல். வீரனுயுள்ளவன் துன்மார்க்கத்தில் பிரவேசிப்பனுயின் அவன் எந்தக் காரியத்தைத் தான் செய்யத் துணியான்! அதுபோல் இந்த விந்தம் செய்துவிட்டது. அந்தோ! குதிரைகள் போவதற்கு வழிகாணுமல் தத்தளிக்கின்றனவே! நாம் ராகுவினுல் விழுங்கப்பட்டு ஒளிமழுங்குங் காலத்திலேயும் தடையின்றிப் போய்க்கொண் டிருக்கின்றோம். அப்படிப்பட்ட நாம் இன்று இந்தமலை தடுப்பதனு லுண்டாகிய இருளை நம தொளியாலோட்டிக் குதிரைகளுக்குப் போகும்படியான மார்க்கத்தைக் காட்டுவதற் கில்லாமற் போயிற்றே! இந்தமலை இப்படியே வழிவிடாமல் தடைசெய்து கொண் டிருந்தால் நாமென்செய்ய வலியுடையோம்! ஊழின் வலியே வலி என்று வியசனமடைந்து ஏனைய தேவர்களாவது இதனைக்கண்டு எவனைச் சரண மடையவேண்டுமோ அவனைச் சரணடைந்து வழிதேடினு ரில்லை; இன்னது செய்யலாமென்று நமக்கும் நிச்சயப்பட வில்லையென்று சித்ரகுப்த னுதியர்கட்கும் கால நிர்ணயத்தை யறிவிக்கவல்ல சூரியன் கவலையுற்றனன். ஓ இருடிகளே! தெய்வ சங்கற்பத்தால் இவ்வண்ணம் சூரியன் தடைபட்டு நிற்கவே தேவ பிதுர்க்களுக்குச் செய்வதாகிய சுவாகாகாரமும் சுவதாகாரமும் நின்றுவிட்டன. அவை நிற்கவே அநேகமாக உயிர்கள்

நசித்துப்போயின. தென்றிசையில் இருளடைந்து அங்குள்ளா ரெல்லாம் கண்ணைத் திறப்பதற்கு மின்றி மூடிக்கொண்டனர். உத்தரதிக்கிலும் கிழக்குத் திக்கிலும் சூரியனுடைய ஒளி மிகுந்து எரிக்கத் தொடங்கிய படியினால் அநேகர் இறந்தனர். அநேகர் வாடிப் போயினர். அநேகர் ஆவென்று ஓடிப் போயினர். இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் பயமுற்று என்செய்வோமென்று ஏங்கினர். (சு. உகூ.)

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

லயஸ்தித்யுத்பவேஶ்வர்யைநம:

## நான்காம் அத்தியாயம்.

## ருத்ரம்பிரதி இந்திராதிஸ்வவிருத்தாந்தகதனம்.

---

சூதர் கூறுகின்றார்:—என் செய்வோமென் றேங்கிய இந்திராதி தேவர்கள் பிரமனை யழைத்துக்கொண்டு தேவதேவனையும் கிரிஜாபதியாயும் சந்திர சேகரனாயு மிருக்கின்ற உருத்திரமூர்த்தி யிடஞ் சென்று அவரது பிரபாவத்தைக் காட்டவல்ல தோத்திரங்களாலும் அடிக்கடி செய்யும் நமஸ்காரங்களாலும் வழிபடத் தொடங்கி, ஓ கணாத்யக்ஷரே! பார்வதி தேவியாரால் கொண்டாடத்தக்கவரே! அன்பர்களுக்கு அஷ்டமா சித்தி விபூதியைக்கொடுக்கின்றவரே! மஹாமாயா விலாசத்துக்கு ஸ்தானமா யுள்ளவரே! பரமாத்ம சொரூபரே! விருஷபாரூடரே! அமரீசரே! கைலாசவாசரே! அக்கினிஸ்வரூபரே! யோகஸ்வரூபரே! யோகிகளுக்குப்பதியானவரே! உமக்கு நமஸ்காரம். யோகிகளுக்கு ஈசரே! உமக்கு நமஸ்காரம். யோகத்துக்குப் பலத்தைக் கொடுக்கின்றவரே! தீனர்களுக்குத் தானஞ்செய்கின்றவரே! கிருபாசாகரமூர்த்தியே! பக்தர்களது பீடையைப் போக்கடிக்கின்றவரே! உக்ரமான வீரியமுடையவரே! குணமூர்த்தியே! விருஷபத்வஜரே! காலஸ்வரூபரே! காலகாலரே! உமக்கு நமஸ்காரம் என்று துதித்து வணங்கிய பொழுது சிவபெருமான் தேவர்களைப்பார்த்து, நீங்கள் செய்த உத்தமமாகிய தோத்திரத்துக்கு மகிழ்ந்தேனென்று நகைத்துக்கொண்டே உங்களது மனோரதத்தைப் பூர்

த்தி செய்கின்றேன்; வேண்டுவது யாதென்று கேட்க, தேவர்கள் ஓ சர்வதேவேசரே! கிரீசரே! சந்திரமௌளியே! துக்கமுடையவர்க்குச் சுகத்தைக் கொடுக்கின்றவரே! மகாபலமுள்ளவரே! எங்களுக் கிப்போது சுகத்தைக் கொடுத்தருளும். விந்தமலையானது மேருவோடு துவேஷங்கொண்டு சூரியனுடைய மார்க்கத்தைத் தடுக்கும் பொருட்டு மேலோங்கி வளர்ந்து யாவருக்குந் துக்கத்தை விளைவித்து விட்டது. ஆகையினால் தேவரீர் அந்தமலையை யடக்கிச் சுகத்தைக்கொடுக்க வேண்டும். சூரியனைத் தடை செய்து விட்டால் காலநிர்ணயம் எப்படி யேற்படும். ஸ்வாஹா ஸ்வதா என்கிற மந்திரங்களாற் செய்யத்தகும் கிரியைகள் கெட்டிருக்கும் இவ்வுலகிற்கு எவன் புகலிடமாவான்? பயமுற்றிருக்கும் எங்களுடைய துக்கங்களைத் தொலைக்கத்தக்கவர் நீரென்றே காண்கின்றோம். ஓ கிரிஜாபதியே, தயைசெய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கும் பொழுது உருத்திரமூர்த்தி சிரித்துக்கொண்டே தேவர்களைப் பார்த்து, சத்திகளிலே ஒருவரா யெண்ணப்பட்டவராயும் பிரபுவாயும் உங்களால் பூஜிக்கத்தக்கவராயும் இருக்கின்ற விஷ்ணுமூர்த்தி அவ் விந்தமலையினது விருத்தியை அடக்க வல்லவர் ஆதலால் அவர்தான் உங்களுடைய துக்கத்தைப் போக்கடிக்கத் தக்கவ ராவர் என்று கூறவே பிரமனாதி தேவர்கள் வைகுண்டத்தை யடைந்தனர். (சு. ககூ.)

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

லாஸ்யதர்சன சந்துஷ்டாயைநமஃ.



ஐந்தாம் அத்தியாயம்.

## விஷ்ணுஸ்துதி.



சூதர் கூறுகின்றார்,— வைகுண்டத்துக்குப்போன தேவர்களெல்லாம் பிரபுவாயும் லக்ஷ்மி பதியாயும் ஜகத்குருவாயும் கமலாக்ஷராயும் காந்தி ஸ்வரூபராயும் விளங்கும் விஷ்ணுமூர்த்தியைப் பார்த்துப் பக்தியோடு வாய்குழறிக்கொண்டே ஓ ஸ்ரீயப்பதியே! மஹாபுருஷரே! அசுரசங்காரரே! மன்மதனைப்படைத்தவரே! சர்வகாம பலப்ரதரே! கோவிந்தரே! மஹாயக்ஞ சொரூபரே! ஜகதோற்பத்தி காரணரே! மத்ஸ்யாவதாரரே! வேதோத்

தாரணஞ் செய்தவரே! சத்யவிரதரே! பூதநாயகரே உமக்கு நமஸ்காரம். தேவகாரியங்களை முடிக்கின்றவரே! அமரர்களுக்கு அமிர்த முண்டாக்கும் பொருட்டு கூர்மரூப மெடுத்தவரே! உமக்கு நமஸ்காரம். அசுர சங்காரத்தின் பொருட்டு வராஹநரசிம்ஹ வாமனவதாரங்களை யெடுத்தவரே! பக்தர்களுடைய ஆபத்தைப் போக்கப் பெண்ணுரு வெடுத்தவரே! உம்மைக்காட்டிலுந் தயவுள்ளவர்கள் யாவரிருக்கின்றன ரென்று தோத்திரஞ் செய்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனர். அவர்கள்செய்த தோத்திர நமஸ்காரங்களை யேற்றுக்கொண்ட விஷ்ணுமூர்த்தி பிரசன்னராய் ஓ தேவர்களே! உங்கள் தோத்திரத்தைக் கேட்டு மகிழ்ந்தோம். உங்களுடைய சகிக்கொணா துன்பத்தைத் தொலைத்து விடுகிறோம். பெறுதற்கரிய இவ்வரத்தை யென்னிடம் பெற்றுக்கொள்ளுங்கள். இப்போது நீங்கள் செய்த துதியை யென்னிடம் பக்தியுள்ளவர்கள் படனம் பண்ணுவார்களானால் அவர்கள் இம்மை மறுமைகளில் எய்தவேண்டிய வெல்லாச்சுகங்களும் பெற்றுவாழக் கடவர் என் றநுக்கரிக்க மறுபடியுந் தேவர்கள் சில சொல்லத் தொடங்கினர். (சு-ம். உ௭௯)

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

லாபாலாப விவர்ஜிதாயைநமஃ.

## ஆறம் அத்தியாயம்.

## * இந்திரகிருத அகஸ்திய பிரார்த்தனை.

சூதர் கூறுகின்றார்,— விஷ்ணுமூர்த்தி அநுக்கிரகம் பெற்ற தேவர்கள் கலங்கியமனந் தெளிந்தவராய் களிப்படைந்து ஓ தேவ தேவரே! மஹாவிஷ்ணுவே! விந்தமலை சூர்யமார்க்கத்தைத் தடைபடுத்தியிருக்கின்றதனால் உலகில் நடக்கவேண்டிய எல்லாக்கருமங்களுங்கெட்டு நாங்களுஞ் சுகமிழந்து திக்கற்றவர்களானோம். நாங்கள் எவ்விடத்திற்செல்வோம் என்னசெய்வோ மென்றனர். திருமாலானவர் ஓ தேவர்களே! எந்தத் தேவியானவள் எல்லாவுலகம் படைத்தனளோ ஆதியானவளோ குலவர்த்தினியோ அந்தத் தேவியாகிய பகவதியை மிக்க அன்புடன் பூசித்தவரான மஹா

---

* இந்திரன் செய்துகொண்ட அகத்தியர் பிரார்த்தனை.

தேஜஸுள்ள அகஸ்திய முநிவர் காசிக்ஷேத்திரத்தி லிருக்கின்ற னர். அவரே விந்தய பர்வதத்தின் பலத்தை யடக்கச் சக்தியுள் ளவர் ஆதலால் பிராமண சிரேஷ்டரான அவரைச் சந்தோஷப் படுத்த வாரணுசிக்குச் செல்வீர்களென்முர். விஷ்ணுவினுல் கூறக் கேட்ட தேவர்கள் மிக்க சந்தோஷமும் வணக்கமும் உள்ளவர்க ளாய்க் காசியை யடைந்து மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்து தேவர்களுக்கும் பிதுர்க்களுக்கும் தர்ப்பணஞ்செய்து பலவிருக்ஷ ங்கள் நிறைந்துள்ளதாயும் மயில் சாகசம் ஹம்சம் சக்கிரவாகம் முதலிய பக்ஷிகள் வாழப் பெற்றதாயும், பெரும்பன்றி முள்ளம் பன்றி புலி மான் மரை வேங்கை முதலிய மிருகங்கள் உலாவத் தக் கதாயுமுள்ள பெரிதான அகஸ்தியர் ஆசிரமத்தை யடைந்து பிரஹ் மதேஜஸினுல் பிரகாசிக்கிற அம்முநிவரைக்கண்டு பூமியில் அடிக் கடி தண்டம்போல் வீழ்ந்து நமஸ்காரஞ்செய்து பிராம்ஹணர்க ளுக்கெல்லாஞ் சிரேஷ்டரே! பூசிக்கத்தக்கவரே! பூமிக்குத் தேவ ரானவரே! வாதாபிபலத்தை நசிக்கச்செய்தவரே! கலசத்திற் பிறந் தவரே! லோபாமுத்திரைக்குப் பர்த்தாவானவரே! மித்ராவரு ணனிடம் உற்பத்தியானவரே! சர்வவித்தைக்கும் இருப்பிடமா னவரே! அகஸ்திய முநிவரே! உமக்கு நமஸ்காரம். யாருடைய உற்பத்தி மாத்திரத்தினுல் ஜலம்தெளிந்து போகின்றனவோ அப் படிப்பட்ட வுமக்கு நமஸ்காரம். நாணற்புஷ்பம்போல் பிரகாசிக் கின்ற திருமேனி யுடையவரே! லங்காவாசப்பிரியரே? சடை முடியுடைய சிஷ்யர்களை யுடையவரே! உமக்கு நமஸ்காரம். சகல தேவர்களாலுஞ் சேவிக்கத்தகுந்த சத்குணராசியா யுள்ளவரே! வரிஷ்டரே! உமது பத்தினியோடு உமக்கு நமஸ்காரம். உம் மைச் சரண்புகுந்தோம். ஓ சுவாமிந்! மகாமகிமை யுள்ளவரே! விந்தியத்தினு லுண்டாயிருக்கிற பீடையினுல் பீடிக்கப்பட் டிருக் கின்றோம். அதாவது விந்தபருவதத்தால் சூரியமார்க்கம் தடைபட மூவுலகும் கோலாகலமாய் விட்டது. உம்முடைய தபோபலத்தி னுல் அம்மலையின் வேகத்தை யடைக்குவீராக. உமது மகிமை யினுல் அம்மலை யடங்கி விடுமென்பதற்குச் சந்தேகமில்லை யென்று தாம் வந்த காரியத்தை விண்ணப்பிக்க, பரமதார்மிகரான அகத் தியர் மிகவுஞ் சந்தோஷித்து சிரித்தமுகத்தோடுஞ் தேவர்களை நோக்கி, நீங்கள் சிறந்தவர்கள் மூவுலகுக்கும் பிரபுவானவர்கள் திக்பாலகர் மகாமஹிமை யுள்ளவர் சிக்ஷிப்பதிலும் ரக்ஷிப்பதி

லும் சமர்த்தர் எவன் அமராபதிக்குப் பிரபுவோ எவனுக்கு வச்சிரம் ஆயுதமோ எவனுடைய வாசலில் அணிமா முதலான அஷ்டசித்திக ளிருக்கின்றனவோ அவனே உங்களுக்கெல்லாம் அரசனு யிருக்கிறுன். அவ்யகவ்யங்கள் வகிக்கின்றவனும் சர்வ தேவர்களுக்கும் முகமாயிருக்கின்றவனுமாகிய அக்னிபகவானுக்கு ஆகாததுயாது! ராக்ஷஸ கணங்களுக்குப்பிரபுவும் எல்லாருடைய கர்மங்களுக்குச் சாக்ஷியுமாகிய சூரியனுக்கு இயலாததுயாது? ஓ தேவர்களே! பாசதண்டத்தைக் கையிலேந்திய இந்தயமனுக்கு யாதுமுடியாதது. ஆயினும் இக்காரியம் என்சக்தியா லாகவேண்டு மெனில் அப்படியே முடிக்கச் சித்தமாயிருக்கிறேன் என்று முநி வர் கூற தேவர்கள் சந்தோஷித்தவர்களாய்த் தத்தம் இடங்களுக் கேகினர். (சு-ம். உஎ௬)

ஆரும் அத்தியாயம் முற்றிற்று.

---

லக்ஷ்மீதரக்ஞாயைநம:.

ஏழாம் அத்தியாயம்.

## † அகஸ்திய கிருத விந்திய விருத்திகுண்டனம்.

சூதர் கூறுகின்றார்:—பிராமண சிரேஷ்டரான அகத்திய முநி வர் தேவர்களுடைய வார்த்தையைக்கேட்டு ஓ தேவர்களே! உங் கள் வேண்டுகோளின்படியே யான் செய்கின்றேனென்று கூற அத னைக்கேட்ட தேவர்களும் பிராமண சிரேஷ்டர்களும் உய்ந்தோமெ ன்று சந்தோஷித்துத் தத்தமிடம் போய்ச்சேர, பின்னர் அகத்திய முநிவர் தம்பத்தினியைப்பார்த்து ஓ ராஜபுத்திரியே! இப்போது தேவர்கள் நம்பால்வந்து விந்தமலை சூரியன் செல்லுமார்க்கத்தைத் தடைபடித்திய தென்றும் அத்தடை என்னுலொழிய வேண்டுமெ ன்றும் பிரார்த்திப்பதாகிய பிரார்த்தனை நாம் காசியில் வாசஞ்செய் யவிரும்பிய விருப்பத்துக் கிடையூருக ஏற்பட்டதென்று நினைக் கிறேன். பூர்வம் உண்மையறிந்த முநிவர்கள் மோக்ஷாபேக்ஷை யுடையவர்களால் அவிமுக்தஸ்தானமாகிய காசிவாசம் விடத்தக்க

---

† விந்தியமலையின் விருத்தியை அகத்தியர் யடக்குதல்.

தல்லவென்றும் அங்ஙனம் வசிப்பாராயின் அவர்களுக்கு விக்னம் அவசியம் நேரிடுமென்றுங் கூறியிருக்கின்றனர். அதுபோலவே இப்போது தடைவந்துவிட்டது. இதற்கு நானென்செய்வது ஓ என் அன்புள்ள மனைவியே! என்று மனம்வருந்தி மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்து விஸ்வநாதனைத்தெரிசித்து தண்டபாணியைப் பூஜித்து காலராஜனையடைந்து ஓ காலராஜனே! நீண்டகையுள்ளவனே! பக்தர்களது பயத்தைப்போக்குபவனே! காசிப் பட்டணத்தி லாசையோடுவசிக்கும் என்னை எதற்காகத் தூரத்தில் துரத்திவிடுகின்றனை! நீகாசியில் வசிப்பவர்களுக்கு வரும் விக்னங்களை நாசஞ்செய்கின்றவனல்லவா! இங்குள்ள பக்தர்களுடைய பீடையைத்தொலைத்து ரக்ஷிக்கின்ற நீ காசியினின்றும் என்னைவிலக்கி மனவருத்தத்தை யுண்டாக்குகின்றனையே; நான் பிறர்மேற்கூறும் அபவாதத்தினைக் கேட்டதுமில்லையே; கோளும் பொய்யும் சொன்னது மில்லையே; இப்படிப்பட்ட பாபச்செயல்களைச் செய்யாத என்னை எந்த பாவகர்மஞ் செய்ததாக வெண்ணி காசியினின்றும் விலக்குகின்றனை? இவ்வாறு அகத்தியமுனிவர் காலராஜனைத் துதித்துப் பிரார்த்தித்துப் பின்னர் சர்வவிக்னத்தையும் நாசஞ்செய்பவரான ஸ்ரீசாக்ஷி விக்னேஸ்வரரை யடைந்து தெரிசித்துப் பூசித்துப் பிரார்த்தித்து பட்டணத்தை விட்டுவிலகித் தென்திசைநோக்கிச் சென்று காசியைநினைந்து நினைந்து மனைவியுடன் மனவருத்தப் பட்டுக்கொண்டே ஆகாயத்தை யளாவிய விந்தகிரியினெதிரில் ஒருக்ஷணத்திற்போய் அதனைப்பார்த்து நின்றனர். அந்தமலை இவரைக் கண்டதும் ஒழியாத அகங்கார மொழிந்து மெய்நடுங்கி சிற்றுருக் கொண்டுவந்து அவரைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து வணக்கத்துடன் நிற்க, அதனைப்பார்த்து அகஸ்தியர் ஓ குழந்தாய்! யான் தென்திசைக்குப்போக இச்சையுடையேனு யுள்ளேன். நீ யுயர்ந்திருப்பையாயின் நானெவ்வா றுன்னைக் கடப்பேன். இப்போது நீ இருத்தல்போல் நான் வருமளவு மிருத்தல் வேண்டுமென்று கூறி அம்மலைமீதேறி அதனைக்கடந்து தென்றிசை யடைந்து ஸ்ரீ சைலத்தைத்தெரிசித்து பொதியமலைக்குப்போய் அவ்விடத்தில் வசித்திருந்தனர். ஓ மஹருஷிகாள்! விந்தமலையின் செய்தியிதுவாகும். அம்மலை அகஸ்தியபகவானால் அடக்கப்பெற்ற மகிமையுள்ளதாகலின் அம்மகிமை எக்காலத்தும் விளங்கும் பொருட்டுத் தேவியும் அதில் வாசஞ்செய்கின்றாள் ஆதலால் விந்தியா

சலவாசினி யென்று உலகில் அவளுக்கோர் நாமமு முண்டாயிருக்கின்றது.

ஓ முநிவர்களே! இச்சரிதத்தை நால்வகைப்பட்ட வர்ணாச்சிரமிகள் கற்றாலுங் கேட்டாலும் ஞானம் வெற்றி தனம் தானியம் என்பவற்றையும் அறம்பொருள் இன்பம் என்பவற்றையும் முறையே பெறுவர்.

ஓ ஸ்வாயம்புவே! இது விந்தபர்வதத்தின் சரித்திரமென்று சொல்ல அம்மநுவானவன் சந்தோஷித்துத் தேவியைப் பக்தியோடு பூசித்துத் தனது மன்வந்தரத்துக்குட்பட்ட ராஜ்யத்தையடைந்தனன். இன்னமும் உனக்குக் கூறவேண்டுவது யாதென்றனர். (சு-ம். உகூ)

ஏழாம் அத்யாயம் முற்றிற்று.

---

லாவண்ய சாலிந்யைநமஃ.

## எட்டாம் அத்யாயம்.

## ஸ்வாரோசிஷாதி மநுசரித்ரம்.

சௌனகமுநிவர் கூறுகின்றார்,— சூதபகவானே! தேவரீர் முதல் மன்வந்தரமாகிய சுவாயம்புவைப்பற்றிக் கூறியருளினீர். இதுபோலவே ஏனைய மநுக்களுடைய விருத்தாந்தங்களைக்கேட்க ஆவலுடையவனா யிருக்கின்றேன் சொல்லுமென்றனர். சூதமுநிவர், ஓசவுனகரே! நாரதரும் நாராயணரை அப்படியே கேட்டிருக்கின்றார், அம்முறையே நானுங்கூறுகின்றேன் கேட்பீராக வென்று சொல்லத்தொடங்கினர்.

நாரதர் நாராயணரைநோக்கி எனக்கு மநுக்களுடைய வுற்பத்தியைக்கூற வேண்டுமென்று கேட்க நாராயணர் ஓ மகாமுநிவரே! முதல் மநுவாகிய சுவாயம்புமநு தேவி பூஜாவிசேடத்தால் பகையில்லாத ராஜ்யத்தையடைந்து தானெண்ணியபடி சகல தருமங்களையும் விருத்திசெய்தனன். அவனுக்குப் பிரியவிரதன் உத்தானுபாதன் என்று இரண்டு புத்திரர்கள்பிறந்து பிரசித்திபெற்றிருந்தனர். அவருள் மூத்தோனாகிய பிரியவிரதனுக்கு சுவாரோசிஷன் என்னும் புத்திரன்பிறந்து இரண்டாவது மநுவாயினன்,

அவன் காளிந்திநதிக்கரையில் ஓர் பர்னசாலையமைத்து அதிலிருந்து உலர்ந்த சருகுகளைப் புசித்துக்கொண்டு தேவியினது திருவுருவத்தை மண்ணினாலமைத்து மிக்கபக்தியுடன் பன்னிருவருடம் பூசித்து அரியதவம்புரிந்து வந்தனன். அப்போது தேவி ஆயிரஞ்சூரிய ருதித்தாற்போல் அவன் முன்றோன்றி அவனைத் தமது திருக்கண்களால் கருணையுடனோக்கி ஓ சுவாரோசிஷனே! உனக்கு சர்வமன்வந்தரங்களுடைய ஆதிபத்யத்தையும் கொடுத்தேனென் றநுக்கிரகஞ்செய்தனள். அதனால் அம்பிகை ஜகத்தாத்ரி-தாரிணி என்னும் நாமங்களால் பிரசித்தியடைந்தனள். இவ்வாறு சர்வ சத்ருக்களாலும் விடப்பட்ட ராஜ்யத்தை அந்த சுவாரோசிஷாவடைந்து சகல ராஜ்யதர்மங்களையும் ராஜ்யங்களையும் தனது குமாரனிடம் ஒப்புவித்துத் தான்சுவர்க்கலோகம் போய்ச்சேர்ந்தனன். அதன்பின்னர் பிரியவிரதன்மகனாகிய உத்தமன் மூன்றாவது மநுவாகிக் கங்கைக்கரையில் தவங்கிடந்து வாக்பவமந்திரத்தை மானஸீகமா யுச்சரித்து மூன்றுவருடம் உபவாசமாயிருந்து தேவியநுக்கிரஹத்தைப்பெற்று, பக்தியுடன் சிறந்த தோத்திரங்கள் செய்து சத்துருபயமற்ற ராஜ்யத்தையும் பெருகிய சந்ததியுமுடையனாய் ராஜ்யசுகத்தையும் தர்மசுகத்தையுங் குறைவின்றி யநுபவித்து ராஜவிருடிகளடையுங் கதியையடைந்தனன். அதன்பின்னர் பிரியவிரதன் மகனாகிய தாமசன் நான்காவது மநுவாகி நர்மதாநதியின் தென்கரையில் காமராஜகூடத்தை ஜபித்து ஜகத்சொரூபிணியான தேவியை வசந்தகாலத்திலும் சரத்காலத்திலும் நவராத்திரி பூஜையினால் ஆராதித்துச் சந்தோஷிப்பித்து அவளது கருணையையடைந்து தோத்திரஞ்செய்து சத்துருபாதையில்லாத ராஜ்யத்தையடைந்து மகாபலசாலிகளாயும் சூரராயுமுள்ள பத்துப் பிள்ளைகளைப்பெற்று தனது பத்னியுடன் சுவர்க்கத்தை யடைந்தனன். அதன்பின்னர் அவன்சகோதரனான ரைவதன் ஐந்தாவது மநுவாகிக் காளிந்திநதிக்கரையில் வாக்பலத்தைக்கொடுப்பதாயும் வெகுசாதகமாயு மிருக்கிற காமபீஜத்தை ஜபித்து அதனால் சகல சித்தியைக் கொடுப்பதான பலத்தையும்பெற்றுத் தன்ராஜ்யத்தையடைந்து நெடுங்காலமழியாத சந்ததிப்பெருக்குடையவனாய்த் தர்மத்தை ஸ்தாபித்து நானாவிதபோகங்களை யநுபவித்து சுவர்க்கத்தை யடைந்தனன். (சு-ம். உசஎ)

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

லகுசித்திதாயைநம꞉.

ஒன்பதாம் அத்யாயம்.

## சாக்ஷுஷமநு ருபாக்கியானம்.

நாராயணர் கூறுகின்றார்,— ஓ நாரதரே! இன்னமும் உத்தமமாகிய தேவீமகாத்மியத்தை உனக்குச்சொல்ல நான் ஆவலுள்ளவனா யிருக்கின்றேன். பூர்வத்தில் அங்கராஜனுடைய புத்திரன் தேவியின் உபாசனையினால் ராஜ்யமடைந்ததைக்கேளும். அவ்வங்கராஜபுத்திரன் ஆறுவது மநுவாகிப்புலகருஷியை நமஸ்கரித்து ஓ மகருஷியே! சரணமடைந்தவர் பீடையைப்போக்கவல்ல தவசீலரே! உம்மைச்சரணடைந்தேன். எதைக்கைக்கொண்டு நான் சம்பத்தையடையப் பெறுவேனோ அதனை யடியேனுக் குணர்த்துவதுமன்றி அகண்ட பூமண்டலாதி பத்தியமும் ஒருவராலும் வெல்லக்கூடாத புஜபலமும் அஸ்திரசஸ்திரப் பிரயோக சாமர்த்தியங்களும் நீண்டகால மிருக்குஞ்சந்ததியும் இகபோகமும் முடிவில் மோக்ஷமும் எப்படிகிடைக்குமோ அந்தவுபாயத்தையும் எனக்குபதேசிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, புலகமுநிவர் ஓ அரசனே! நீ தேவியைப் பூசிப்பையாயின் அவளநுக்கிரஹத்தால் எல்லாமுமுண்டாகு மென்றனர்.

அரசன் தேவிபூஜை எப்படிப்பட்டது அதனைச்செய்யும்விதமெப்படியென்ன, முநிவர் நீ ஸ்ரீதேவியினது மந்திரங்களிற்சிறந்த வாக்பவ மந்திரத்தை எப்பொழுதும் ஜபித்துவருவாயாக. அது சித்திபுத்திகளைக் கொடுக்கத்தக்கது. அதனினுஞ் சிறந்த மந்திரங் கிடையாது. ஸகலசித்தியையுஞ் சீக்கிரத்தில் கொடுக்கும். இம்மந்திர ஜபத்தினாலேயே மும்மூர்த்திகளும் முத்தொழிலைச்செய்யும் வல்லபத்தைப் பெற்றனர். ஏனைய லோகபாலகர்களும் நிக்கிரஹாநுக்கிரகங்களைச்செய்ய வல்லவராயினர். ஆகையால் நீ அந்தத்தேவியைப் பூஜித்து அந்தமந்திரத்தை ஜபித்து மஹைதைஶ்வர்யமடையக்கடவாயென் றுசிபுகன்றனர்.

அந்த அங்கபுத்திரன் அவ்வாசியையேற்று விரஜாநதிக்கரையையடைந்து முதல்வருடந் தளிர்களையும் இரண்டாம்வருடம் சலத்தையும் மூன்றாம்வருடம் வாயுவையுமாகப் பன்னிரண்டுவருடம்

மாறிமாறிப்புசித்து வாக்பவமந்திரத்தை முக்காலத்தும் தவறாது ஜபித்து அரியதவஞ்செய்து வந்தனன். அந்த ஜபதபவிசேடத்தால் அவனுக்கு முன்னர் சுபகரமான மனமுண்டாயிற்று. அஃதுண்டான பின்னர் சகலதேவ சொரூபிணியாய் தேஜோரூபிணியாய் தேவி எதிர்நின்று, ஓ அரசனே! உனக்கென்ன அபேக்ஷையிருக்கின்றதோ அதனைக்கேட்பாயாக வென்றாள். அரசன் ஆனந்தபரவசனாய், ஓ தேவதேவேச்வரி! நீ சர்வசராசரங்களிலும் அந்தர்யாமியா யிருக்கின்றபடியால் என்மனக்கருத்தை நீயேயறிவாய் ஆயினும் சகலதேவர்களாலும் பூஜிக்கப்பட்ட நீ என்பாக்கியவசத்தால் தரிசனந்தந்து என்னை யாதுவேண்டுமென்று வினவுகின்றமையால் மநுக்களால் ஆளப்பட்டுவருகின்ற இந்தராஜ்யத்தை நான் ஆளச்செய்வாயென்று பணிந்தனன். தேவி, அன்பனே! அப்படியே நீயாளக்கடவாய். அன்றியும் உனக்கு உன்னிலும் எட்டுப்பங்கு பலமுள்ள புத்திரர்கள் பிறப்பார்கள். ராஜ்யமும் சத்ருபயமில்லாமலிருக்கும் முடிவில் நீ மோக்ஷமும் பெறுவாயென் றநுக்கிரகஞ்செய்து திருவுருக் கரந்தனள். ஓ முநிவரே! சாக்ஷுஷ மநுவானவன் தேவியினுடைய அநுக்கிரகபலத்தால் மகாபலவான்களாயும் அநேககாரியங்களைச் சாதிக்கவல்ல மகாசூரர்களாயும் தேவியிடத்தில் மறவாத பக்தியுடையவர்களாயும் செல்லு மிடங்கடோறுஞ் சிறப்பினை யடையத் தக்கவர்களாயுமுள்ள புத்ரசம்பத்தோடு ராஜ்யசம்பத்தையும் யாதொரு குறைவின்றி யநுபவித்துத் தேவியினது பதத்தை யடைந்தனன். (சு-ம். உகூ)

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஸாக்ஷாரஸ ஸவர்ணுபாயைநமஃ.

பத்தாம் அத்தியாயம்.



## வைவஸ்வத மநோ ருபாக்கியானம்.



நாராயணர் கூறுகின்றார்,—ஓ நாரதமுநிவரே! இனி ஏழாவது மநு வைவஸ்வத மநுவாகும். அவன் தேவியினது அநுக்கிரகப் பிரசாதத்தால் மந்வந்தராதிபதியாய், பரமானந்த திருப்தனாய், சர்வத்ர பூஜ்யனாய் வாழ்ந்திருந்தனன். இவனைப்போலவே இவனுக்குப்பின் எட்டாவது மநுவாகிய சாவர்ணிமநு என்பவன் சன்மாங்

திரத்தில் தேவியை யாராதித்துப் பெற்றுவந்தவரத்தால் அவனும் மநுவந்தராதிபதியாய் சர்வராஜ பூஜ்யனுய் மஹாபாராக்கிரம சாலியாய் மஹாதீரனு யிருந்தன னென்றனர்.

அப்போது நாரதர் ஓ நாராயணரே! அந்த வைவஸ்வதமநு பூர்வ ஜன்மத்திற்செய்த பூஜையின் விசேடம் எப்படிப்பட்டதென்று அறிய ஆவலுள்ளவனு யிருக்கின்றே னென்று வினவ நாராயணர் ஓ முநிவரே! பூர்வத்தில் அவன் சைத்ர வம்சத்திற்பிறந்து சுரதனென்னும் பெயருடையனுய் தநுர்ப்பாணியனுய் குணக்ரகண்யனுய் தனுர்ஜிதனுய் யாசகபோஷகனுய் சத்ருநாசகனுய் பெருமையிற் சிறந்தவனுய் சர்வசாஸ்திர பாரங்கதனுய்ப் பிரகாசித்துக் கொண் டிருந்தனன். சிலகாலங் கழிந்தபின்னர் இவன் பகைவனுகிய சுரதனென்பவன் வல்லவனுய்ச் சதுரங்க சேனைகளோடும் போர்க்குவர இவன் வெல்லும் வலியற்று ஊழின்வலியால் அவனுக்கு மெலிவுற்றுத் தோல்வி யடைந்தனன். அடையவே அப்பகைவன் இவனது ராஜ்யாதி சகல சம்பத்துகளையுங் கொள்ளை கொண்டு இவனையும் துறத்திவிட்டனன். அப்போது அந்தவைவஸ்வதன் யாதொரு துணையுமின்றி ஓர் குதிரைமீ தேறிக்கொண்டு மாநுட சஞ்சாரமில்லாத ஆரணியத்துட் பிரவேசித்து அங்குமிங்கும் உலாவித் திரிந்துவருநாளில் ஓர்நாள் ஓராச்ரமத்தைக் கண்டு அதனுள் நுழைந்தனன். அங்கு நுழைந்தபோதே இவனுக்கு மனவுபசாந்தியுண்டாயிற்று. அவ் வாச்ரமத்தில் அநேகசீடர்களோடும் தீர்க்கதிருஷ்டி என்கிற முநிவர் இருக்கக்கண்டு களிப்படைந்தவனுய் அவரைச் சரணமடைந்து அவருடைய சீடர்களில் தானும் ஒருவனுக இருந்துவரும் ஓர் நாளில் அம்முநிவர் தமது நித்யபூஜைமுடித்து அங்கிருக்குங் தருணத்தில் மிக்க விநயத்துடன் அவரடிபணிந்து ஓ முநிபுங்கவரே! தேவரீரால் பிரவஞ்சசுகம் மித்தையென் றறிந்தவனு யிருந்தும் என்ராஜ்யத்தைச் சத்துருக்கள் கொள்ளையிட்ட விஷயத்தைப்பற்றி என்மனம் மிகவும் வருந்துகின்றது. ராஜ்யத்தை யடையவேண்டு மென்னும் ஆசையும் நானென்னும் அகங்காரமும் என்னை விடவில்லை. இதற்கு நா னென்செய்வேன்! நா னென்னகதியாய்ப் போவேன்! எவ்வழியாய்ச் சுகமடைவேன்? இப்போது வேதவித்தாய் பரமசிரேஷ்டரா யிருக்கின்ற உம தனுக்கிரகத்தை இவ்விசாரத்தைப் போக்கப் பிரார்த்திக்கின்றேன் என்றுன். முநிவர் ஓ அரசனே!

நீ கவலைகொள்ளற்க, தேவியினுடைய மஹிமையினால் சகலகாமங்களுஞ் சித்திக்கும் நீ ஐயுறவேண்டாம். அதுநிற்க, எனக்கோர் ஆச்சரிய முண்டாயிற்று. என்னெனின் மஹா மாயா சொரூபிணியாகிய அந்தத் தேவியானவள் சர்வப் பிராணிகளுடைய மனத்தையுந் தன் மாயாவசமாக்கிப் பிரபஞ்சத்தில் துக்கமொன்றே தோன்றவுஞ்செய்து அத்துக்கத்திற் றானே மோகத்தையும் உண்டுபண்ணுகின்றனளே இதனினும் ஆச்சரியமான தொன்றுண்டோ? சகலப்பிரபஞ்சத்தையும் பிரமரூபிணியாகச்சிருட்டித்தும் விஷ்ணுரூபிணியாக ரக்ஷித்தும் ருத்திர ரூபிணியாகச் சங்கரித்தும் வருகிறாள். காளராத்திரியாய்ச் சகலகாமங்களைக் கொடுக்கிறாள். சகலத்தையுஞ் சங்கரிக்கிறாள். லக்ஷ்மிதேவியாயிருக்கிறாள் அவளிடம் சகலப் பிரபஞ்சமும் ஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது. முடிவில் அவளிடத்திலேயே லயமடைகிறது. ஆகையால் அவளே பராத்பரை ஓ அரசனே! அவளநுக்கிரகம் எவனுக் குண்டாகிறதோ அவன் மோகத்தைத் தாண்டுகிறான்; இல்லாவிடில் முடியாது. (சு-உருஉ)

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.



லக்ஷ்மணாக்ரஜபூஜிதாயைநமஃ.



## பதினோராம் அத்தியாயம்.

## மஹாகாள்யுத்பத்யாதி.

அரசன் கூறுகின்றான்,— ஓ முநிபுங்கவரே! தேவரீரால் சொல்லப்பட்ட தேவியானவள் யாவள்? ஆன்மாக்களை மோகப்படுத்துகின்றவள் யாவள்? அவள் என்னகாரணத்துக்காக மோகப்படுத்துகின்றாள்? எதற்காகத் தோன்றுகின்றாள்? அவள் உருவமென்ன? அவள் சுபாவமென்ன? இவை எல்லாம் எனக்குக் கருணையுடன் சொல்லியருளுமென்றான். முநிவர் ஓ பூபதி! அப்படியே சொல்லுகின்றேன்.

முன்னொரு யுகத்தில் சங்காரகாலத்தில் நாராயணர் சமுத்திரத்தில் சேஷசாயியாய் நித்திராதேவிக்குச் சுவாதீனராய் யோகநித்திரை செய்யும்போது அவர் காதிலுள்ள மலத்திலிருந்து கோரரூபிகளாய் மது, கைடபனென்னும் அசுரர் இருவர் தோன்றி பிரம

தேவனைக் கொல்வதற்கெண்ணிச் சென்றார்கள். அவர் வருகை யைப் பிரமன்கண்டு பயமுற்று ஓ நித்திரைசெய்கின்ற நாராயண னே! பகவானே! அசுரர்களைக் கொல்வதற்கு நீர் வரவேண்டு மென்று பிரார்த்தித்தனன். பிரார்த்தித்தும் அவர் வராமையைக் கண்டு அந்தோ! அவர் என்செய்வார் அவர் நித்திராதேவியின் வசப்பட்டிருக்கின்றா ரன்றோ என்று சிந்தித்து அவரைத் தன் வசப் படுத்திக்கொண் டிருக்கும் நித்திராதேவியைத் துதிப்போ மென் றெண்ணி ஓ தேவதேவி! ஜகத்தாத்ரீ! பக்தாபீஷ்ட பலப் பிரதே! ஜகன்மயே! மஹாமாயே! சமுத்திரசயனே! சிவே! உன்னுடைய ஆக்ஞைக்கு உட்பட்டு யாவரும் தத்தந்தொழிலைச் செய்து வருகின்றனர். ஓ காலராத்ரீ! மஹாராத்திரீ மோஹராத் திரீ! மதோத்கடே! வ்யாபிநீ! வசகா! (யாவர்க்குஞ் சுவாதீன மானவளே) மான்யா! (யாவராலும் கவுரவிக்கத்தக்கவளே) மஹா நந்தத்திற்கு ஸ்தானமா யிருக்கின்றவளே! மஹநீயா! மஹாராத் யா! மாயாமதுமதீ! மஹீ! பராபரே! (சர்வப் பிராணிகளுக்கும் பரமாத்மாவா யிருக்கின்றவளே) லஜ்ஜா! புஷ்டீ! க்ஷமா! கீர்த்தீ! காந்தீ! காருண்யவிக்ரஹா! காமநீயா! ஜகத்வந்தியா! ஜாக்ரதா திஸ்வரூபிணீ! பரமா! பரமேசாநீ! பராநந்தா! பராயணா! ஏகானேகஸ்வரூபா! ஸத்விதீயா! த்வயாத்மிகா! திரயீ! திரிவர் க்கநிலயா! துரீயா! துர்யபதாத்மிகா! பஞ்சமீ! பஞ்சபூதேசீ! ஷஷ்டீ! ஷஷ்டேச்வரீ! சப்தமீ! சப்தவாரேசீ! சப்த சப்த வரப்ரதா! அஷ்டமீ! வசுநாதா! நவக்ரஹ மயீச்வரீ! நவராக களாரம்யா! நவசங்கியா! நவேஸ்வரீ! தசமீ! தசதிக் பூஜ்யா! தசாஸ்யா! வ்யாபினீரமா! ஏகாதசாத்மிகா! ஏகாதச ருத்ரநிஷே விதா! ஏகாதசி திதிப்ரீதா! ஏகாதசகணாதிபா! துவாதசீ! துவா தசபூஜா! துவாதசாதித்யஜன்மபூ:! திரயோதசாத்மிகாதேவீ! திர யோதசகணப்ரியா! திரயோதசாபிதா பின்னா! விச்வேதேவாதி தைவதா! சதுர்த் தசேந்திரவரதா! சதுர்த்தச மநுப்ரசூ:! பஞ் சாதிக தசீவேத்யா! பஞ்சாதிக தசீதிதி:! சோடசீ! சோடசபுஜா! சோடசேந்துகலாமயீ! ஷோடசாத்மக சந்திராம்சு வியாப்ததிவ் யகளேபரா! (சந்திரனது பதினாறுகலையின் வியாப்தமான திவ்ய சரீரமுள்ளவளே) ஓ தேவேசீ! நிர்க்குணே! தர்மசோதயே! என்று துதித்து விஷ்ணுமூர்த்தி உன்னால் கிரகிக்கப்பட்டவராயி ருக்கின்றார். மதுகைடபர்களாகிய இவ்வசுரர்களோ மகா கோபத்

தோடுவந்திருக்கிறார்கள். இவர்களைச்சங்கரிக்கப் பரமாத்மாவாகிய விஷ்ணுமூர்த்தியை நித்திரையினின்று எழுந்திருக்கச் செய்வாயாக வென்று பிரமன்வேண்டினன். அந்தத் தாமஸிதேவியாகிய நித்திராதேவியானவள் கருணையுடையவளாய் அந்த விஷ்ணுமூர்த்தியை விட்டு நீங்கி அவ்வசுரர்கள்பாற்சென்று அவர்களை மோகிக்கச் செய்தனள். விஷ்ணுமூர்த்தி நித்திரையினின்று நீங்கி எழுந்திருந்து அசுரர்களைப்பார்த்து அவர்களோடு போர்புரிய வெண்ணி மஹாபராக்கிரமத்தோடும் ஐயாயிரம்வருடம் யுத்தஞ்செய்தனர். அங்ஙனஞ்செய்தும் அவர்கள் சாதலின்றி மேலிட்டு வருதலைக் கண்டு விஷ்ணுமூர்த்தி உபாயத்தாற் கொல்லக்கருதி அவர்களைப் புகழ்ந்து சந்தோஷமூட்டி எனக்கொரு வரங்கொடுக்க வேண்டுமென்றனர். அவர்கள் இவருடைய வஞ்சத்தை யறியாமல் அப்படியே தருகின்றோமென்றார்கள். அவ்விஷ்ணு இதுதான் நல்லசமயமென்றெண்ணி நீவிர் என்னாலிறக்கப்பட வேண்டுமென்றுசொல்ல, அவர்கள் எங்களைச் சலமில்லாதவிடத்திற் கொல்லக்கடவாயென்று வரங்கொடுத்தனர். பின்னர் விஷ்ணுமூர்த்தி தன்தொடையின்மீது அவர்கள் தலைகளைவைத்துக் கொன்றனர்.

ஓ அரசனே! என்னால் சொல்லப்பட்ட தேவி மதுகைடபரையழிக்கும்பொருட்டு பிரமன் தோத்திரஞ்செய்ய அக்காலத்தில் மஹாகாளியாயும் சர்வயோகேஶ்வரேஶ்வரியாயுந் தோன்றினாளென் றறியக்கடவாய். இனிமஹாலக்ஷ்மியின் உற்பத்தியைச் சொல்லுகின்றேன். (சு-ம் ௯௪)

பதினோராம் அத்தியாயம் முற்றிற்று.

---

லப்யேதராயைநமஃ.



## பன்னிரண்டாம் அத்தியாயம்.

## மஹாலக்ஷ்மியுத்பத்தியாதி.



முனிவர் கூறுகின்றார்;— மகிஷாசுரன் சகலலோகங்களையும் சகல திக்பாலர்களையும் வென்று ஆண்டிருக்குஞ்சமயத்தில் தேவர்கள் பிரமதேவரை யழைத்துக்கொண்டு சங்கரரும் விஷ்ணுவும்

இருக்குமிடஞ்சென்று மகிஷனுடைய கொடுமைகளைக்கூறி அவனைவெல்லும் உபாயம் யாதென்று சிந்தாகுலப்பட, விஷ்ணுமூர்த்திக்கு அதிக கோபமுண்டாயிற்று. அதுபோலவே உருத்திரமூர்த்திக்கும் பிரமனாதி ஏனைய தேவர்களுக்கும் அடங்காதகோபமுண்டாயிற்று. இவ்வாறு யாவரிடத்தும் உண்டாகிய கோபாக்னியானது ஒவ்வோரொளியாய் வெளிவரலாயிற்று. அவ்வொளிகளுள் ஆயிரம் சூரியப்பிரகாசமுள்ள சம்புவினொளி முகமாகவும், யமனுடையவொளி தலைமயிராகவும், விஷ்ணுவினுடையவொளி கைகளாகவும், சந்திரனொளி ஸ்தனயங்களாகவும், இந்திரனொளி இடையாகவும், வருணனொளி முழங்கால்களாகவும், பூதேவியினொளி நிதம்பமாகவும்; பிரமனொளி பாதமாகவும், சூரியனொளி கால்விரல்களாகவும்; வசுக்கள்ஒளி கைவிரல்களாகவும், குபேரனொளி நாசியாகவும், பிரஜாபதியினொளி பற்களாகவும், அக்னியினொளி மூன்று நேத்ரமாகவும், சாத்தியர்கள்ஒளி இரண்டு புருவமாகவும், வாயுவின் ஒளி இரண்டு காதுகளாகவும் ஆயின. இவ்வாறு சகலதேவர்களுடைய தேஜோரூபங்களை ஒருருவாய் மகிஷனைச் சங்கரிக்க மஹாதேவி, மஹாலக்ஷுமி யென்னுந் திருநாமத்துடன் தோன்றினாள். பின்னர் சிவனார் சூலத்தையும், விஷ்ணுமூர்த்தி சக்கிரமும், வருணன் சங்கமும், அக்னி சக்தியும், வாயு வில்லும் பாணமும், இந்திரன் வச்சிரம் ஐராவதம் கண்டாமணியும், யமன் காலதண்டமும், சூரியன் காந்திமாலையும், காலன் கடகம் கவசமும், சமுத்திரன் ஹாரம் வஸ்திரம் குண்டலம் சூடாமணி தோள்வளை சர்ப்பாபரணம் அட்டிகை நூபுரமுதலியனவும், விஸ்வகர்மா மோதிரமும், ஹிமவான் நானாவிதமான ரத்னங்களும் சிம்ஹமும், குபேரன் சுராபான பாத்திமுரம், ஆதிசேடன் நாகஹாரமும் கொடுத்து மகிஷாசுரனைக் கொல்லவேண்டுமென்று போற்றிவாழ்த்தினர். தேவி சந்தோஷித்து கர்ச்சித்து மகிஷனோடு யுத்தஞ்செய்வதற்குவர அவ்வசுரன் சிக்ஷுரன் துர்த்தரன் துன்முகன் பாஷ்கலன் தாம்பிரகன் பிடாலன் முதலானவர்கள்சூழ எதிர்த்து வந்து போர்செய்தனன். தேவி அவர்களையெல்லாம் நாசஞ்செய்து மகிஷனையும் பாசத்தினாற்கட்டி கத்தியினால் சிரசை வெட்டித் தொலைத்தனள். அதுகண்டு தேவர்களெல்லாம் போற்றிவாழ்த்தினர். இவ்வாறு மகாதேவி மகிஷனைக்கொல்ல மகாலக்ஷுமியாய்த் தோன்றின ளென்றறிவாயாக.

புண்ணியசீலனாகிய அரசனே! இனி சரஸ்வதி தேவியினது உற்பத்தியைச்சொல்லுகிறேன். சும்பன் நிசும்பன் என்னும் இரண்டசுரர்களைக்கொல்ல ஹிமகிரியில் தேவரெல்லாந் தேவியைத்தியானித்து பக்தரதுபீடையைத் தொலைக்க வல்லமையுள்ள தேவியே! தானவர்களைச் சங்கரிக்கும் ரூபமுள்ளவளே! ஜராமரணவர்ஜிதையே! சர்வோத்க்ருஷ்டையே! சர்வதேவர்களுக்கும் ஈஸ்வரியே! பக்திக்குச் சுலபமானவளே! மஹாபலபராக்கிரமமுள்ளவளே! திரிமூர்த்திகள் முதலிய சகலதேவருடைய ஸ்வரூபியே! அளவில்லாதபராக்ரமமுள்ளவளே! முத்தொழில் செய்கின்றவளே! காந்தியைக்கொடுக்கின்றவளே! தாண்டவத்தில் பிரியமுள்ளவளே! சந்தோஷத்தைக் கொடுக்கின்றவளே! ஓமாதவீ! கருணைக்கடலே! தயைசெய்வாயாக, நிசும்ப சும்பர்களுடைய பயத்தை நீக்கிவிடுவாயாகவென்று தோத்திரஞ்செய்ய தேவியின் கோசத்திலிருந்து கௌசிகையென்னுந் தேவிதோன்றி தேவர்களைப்பார்த்து நான் அவ்வசுரர்களைக் கொன்றுவிடுகிறேன்; நீவி ரஞ்சற்க என்றுகூறி பொன்மயமான குகையில் நுழைந்துவிட்டனள். சண்டன் முண்டன் இருவரும் அவ்வம்பிகையைப்பார்த்து சும்ப நிசும்பர்களிடம்சென்று நாங்கள் ஒருஸ்திரீரத்னத்தைப் பார்த்தோம். அவள் உன் சம்போகத்துக்குரியவள். அவளைப்போலும் ஒருஸ்திரீ மூன்றுலோகத்துங்கிடையாது என்று சொல்ல; அவன் சுக்கிரீவனைத் தூதாகத் தேவியினிடம் அனுப்பினன். அவன் தேவியினிடஞ்சென்று சும்பனுடைய பிரபாவங்களில் ஒன்றேனும் விடாமற்கூறி நீ அவனுக்கு மனையாட்டியாவாயென்றான். தேவி நீசொல்வது வாஸ்தவந்தான் ஆனால் எனக்கொரு பிரதிக்ஞையுண்டு. அஃது யாதெனில் எவன் என்மதத்தையும் பலத்தையும் போக்குவானோ என்னெதிரில் எவன்நின்று யுத்தஞ்செய்வானோ அவன் என்னை மனைவியாக யனுபவிக்கவேண்டும் என்பதேயாம். இவ்வாறு உங்கள் அரசனை நீ யுத்தஞ்செய்யச் செய்வையாயின் என்பிரதிக்ஞையை நான் முடித்துவிடுவேன் என்றுகூறியனுப்பினள். அவன் அப்படியே அவனுக்குக்கூற அவன் கோபங்கொண்டு தூம்பரனென்பவனைப்பார்த்து, ஓ தூம்பரனே! இந்த சுக்ரீவனால் சொல்லப்பட்டவளிடம் சென்று அவள் தலைமயிரைப் பிடித்திழுத்துக்கொண்டு சீக்கிரம் வருவாயாக வென்று ஏவினான். அவன் அறுபதினாயிரம் சேனையோடுசென்று தேவியைப்பார்த்து எங்கள் எஜமா

னனை நீ புருஷனுக அடைவாய் இல்லாவிடில் உன் மயிரைப்பி டித்திழுத்துப்போவே னென்றுன். தேவி அப்படியே செய்வா யென்று நகைத்துக்கூறி ஓர் ஹுங்காரஞ்செய்து அவனைக் கொன்ற னள். அவன்சேனைகளை அவளது ஊர்தியாகிய சிம்ஹங்கொன்று விட்டது. இதனைக்கேட்ட சும்பன், சண்டன் முண்டன் ரக்த பீஜன் என்னும் இவர்களை முறையே யேவினன். அவர்களைத் தேவி சூலத்தினுல் கொல்லப் பின்னர் சும்பநிசும்பர்கள் போருக் குவந்து நீண்டகாலம் யுத்தஞ்செய்து மாண்டார்கள். பின்னர்தேவ ரெல்லாம் போற்றி வாழ்த்தினர். ஓ அரசனே! மஹாதேவி சும்ப நிசும்பர்களைக் கொல்ல மஹாசரஸ்வதி திருவுருவங் கொண்டன ளென் றறிவாய். இதுகாறும் முத்தேவிகளின் உற்பத்தியுங் கூறப் பட்ட தென்க.

பராவரேஸ்வரியான தேவி சர்வலோகத்தையும் முத்தொழிற் படுத்தி அவரவர் வேண்டுவனவான கோரிக்கைகளைக் கடாக்ஷிக் கின்றுள். ஆகையால் ஜகன்மோகினியாகிய அவளையடைவாய். அவள் உனதுகாரியத்தை நிறைவேற்றுவா ளென்றுசொல்ல, அர சன் முநிவர்வார்த்தையைக் கேட்டுச் சகலத்தையுங் கொடுக்குந்தே வியைச் சரணடைந்தவனு யெண்ணி நிராகாரனுய் மனமடங்கின வனுய் தேவியைத் தியானிக்கின்றவனுய் மிருத்திகையினுல் தேவி யைத் தாபித்து பக்தியோடு பூஜித்துவந்தனன். பூஜைமுடிவில்தன் சரீரத்தி லிருந்து ரக்தத்தை யெடுத்துப் பலிகொடுத்தான். தேவி சந்தோஷித்து பிரத்யக்ஷமாய் வேண்டியதைக் கேளென்றுள். அர சன் தன் அஞ்ஞானநாசத்தையும் உத்தமமான ஞானத்தையும் சத் ருபாதையில்லாத ராஜ்யத்தையும் கேட்டனன், தேவி ஓஅரசனே! இச்சன்மத்திலேயே நீவேண்டியதைத் தந்தேன். மறுசன்மத்தில் சூரியனிடத்திலிருந்து சாவர்ணிமநுவாகவும் அந்தமநுவந்தரத்து க்கு நீயே பிரபுவாகவும் ஆகப்போகிறுய்; அதிகமானசந்ததி யும் அடையப்போகிறு யென்றுகூறி மறைந்தனள். அவனும் பிறகு தேவி யனுக்கிரகித்தபடியே மநுவாயினன். மஹருஷிகாள்! நீவிர் வேண்டியவாறு சாவர்ணிமநுவின் விருத்தாந்தங்கூறினேன் இதைப்படிப்பவருங் கேட்பவரும் தேவி அநுக்கிரகத்துக்குப்பாத் திரமாவார்களென்று அறிவீர்களாக. (சு - ம் ௬௩)

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

லப்தசக்திசுலபாயைநமஃ.

பதின்மூன்றம் அத்யாயம்.

## அவசிஷ்டஷண்மநு விருத்தாந்தகதனம்.

நாராயணர் கூறுகின்ருர் ;— ஓ நாரதரே ! விசித்ரமான மற்ற மநுக்களுடைய சரித்திரங்களேயுஞ் சொல்லுகிறேன். அவைகளேக் கேட்டமாத்திரத்தில் தேவிபக்தி யுண்டாகும். கரூஷன் ப்ரஷத்ரன் நாபகன் த்ருஷ்டன் சரியாதி திரிசங்கு என்று வைவஸ்வதமநுவுக்கு மகாபலசாலிகளாகிய ஆறுபுத்திரர்களிருந்தனர். இவர்கள் உத்தமமான காளிந்திநதிக்குச்சென்று நிராகாரராய் வெவ்வேருக மஹீமயீமூர்த்தியாகிய தேவியைத் தாபித்து நானுவிதமான உபசாரத்தால் பூசித்தும், சருகு சலம் வாயு புகை காந்தி முதலியவைகளேக் கிரமமாய்ப் புசித்துந் தவம்புரிந்துவர, இவ்விரண்டு வகையான சாதனத்தால் அரிய நிர்மலமான புத்தியுடைவர்களாயும் அவ்வறிவால் சர்வமோக விநாசினியாகிய தேவியினது திருவடியை விட்டுநீங்காத சிந்தனே யுடையவர்களாயும் அச்சிந்தனுவிசேடத்தால் பரமாத்மாவைவிட்டு இவ்வுலகெல்லாம் இல்லே என்கிற ஞானமுடையவர்களாயும் பன்னிரண்டாண்டு தவம்புரிந்து வந்தனர். ஓ மஹேப்வரீ ! ஈசானீ ! ஜயஜய ! கருணுலயே ! வாக்பவாராதனப்ரியே ! வாக்பவப்பிரதிபாதிதே ! க்லீங்காரவிக்ரகே ! தேவீ ! க்லீங்காரப்ரீதிதாயினீ ! (க்லீங்காரத்தினலே பிரீதியைக் கொடுப்பவளே) காமராஜமனேமோததாயினீ ! (காமராஜமந்திரத்தினல் மனதுக்குச் சந்தோஷத்தைக் கொடுப்பவளே) ஸ்வரதோஷிணீ (ஸ்வரத்தில் சந்தோஷப்படுகின்றவளே) மகாமாயே ! மோதபரே ! (சந்தோஷத்தையே ப்ரதானமாக உள்ளவளே) மகாசாம்ராஜ்யதாயிநீ ! விஷ்ணூர் வர்க்க ஹர சக்ரா ஸ்வரூபே ! (விஷ்ணு சூரியன் உருத்திரன் இந்திரன் இவர்கள் சொரூபமாக விருக்கின்றவளே) போகவர்த்தினீ ! (போகத்தை விருத்தி செய்கிறவளே) ஜயஜய ! என்று துதிக்க, தேவி மலர்ந்தமுகத்துடன் அரசகுமாரர்களேப்பார்த்து ஓ மஹான்களே ! நீவிர் நிஷ்கல்மஷமான சித்தத்தோடு என்னேத்தியானித்து உபாசித்துச் செய்த தவத்

தினல் சந்தோஷமடைந்தேன். நீங்கள் மனதில் எண்ணியிருக்கும் அபீஷ்டங்களைக் கொடுப்பதற்கே நான் பிரசன்னமா யிருக்கின் றேனுதலால் அவற்றைக் கேளுங்களென்ருள். அக்குமாரர்கள் ஓ தேவீ! சத்ருபாதையில்லாத ராஜ்யமும் நெடுங்காலம் ஜீவித்திருக் கும் சந்ததியும் இடையே அழிவெய்தாத போகமும் காந்தியும் கீர்த் தியும் புத்தியும் ஆகிய இவையெல்லாம் எக்காலத்தும் நீங்காம லிருக்கச்செய்வதுவே எங்கட்கு இதமான வரமாகுமென்ருர். பர மேச்வரி நீங்கள் வேண்டியபடியே தீர்க்கசந்ததியும் தீர்க்கசம் பத்தும் தீர்க்கானுபவமும் தீர்க்கலாபமும் தீர்க்க ஐச்வர்யமும் தேஜஸும் எனது அநுக்கிரகத்தாற் கிரமமாய்ப்பெறுவதுமன்றி நீங்கள் மங்வந்தரங்களுக்கு அதிபதிகளாக விருக்கக்கடவீர்களெ ன்று பிராமரியாகிய ஜகதம்பிகை திருவாய்மலர்ந்து மறைந்தனள். இவ்வாறு வரம்பெற்ற அவ்வுத்தமமான ராஜபுத்திரர்கள் அச்சன் மத்தில் அகண்ட பூமண்டலாதி பதிகளாய் மஹாபோகாநுபவ புருஷர்களாய் சந்ததிப் பெருக்குடையவர்களாய் வாழ்ந்து மறுமை யில் சாவர்ணி யென்னும் பட்டப்பெயருடைய மநுக்களாயினர்.

இனி அம்மநுக்கள்வந்த முறைமையைக் கூறுகின்றேன். தாக்ஷசாவர்ணி என்பவன் ஒன்பதாம் மநுவாயும், மேருசாவர்ணி என்பவன் பத்தாம்மநுவாயும், சூர்யசாவர்ணி என்பவன் பதினே ராம் மநுவாயும், சந்திரசாவர்ணி என்பவன் பன்னிரண்டாம் மநுவாயும், ருத்ரசாவர்ணி என்பவன் பதின்மூன்ரும் மநுவாயும் விஷ்ணுசாவர்ணி என்பவன் பதிஞன்காம் மநுவாயுமாயினர். இவ ரெல்லாம் பிராமரியினுடைய அநுக்கிரகத்துக்குப் பாத்திரர்களா கவும் அவளுடைய ஆராதனத்தை மறவாதவர்களாகவும் மஹாபல பராக்கிரமசாலிகளாகவும் யாவராலும் போற்றத்தக்கவராகவு மிரு ந்தனரென்ருர்.

இதனைக்கேட்ட நாரதமுநிவர் ஓ ஐயா! பிராமரிஎன்னுந் தேவி யார்? அத்தேவியுண்டான காரணமென்னே? அவ் வம்பிகை யெப்படி யிருப்பாள்? சோகநாசமாயும் விசித்திரமாயு முள்ள அச்சரிதையைச் சொல்லுமென்று கேட்க வியாசர் கூறுகின்ருர்,— ஓ நாரதனே! தம்மக்களிடத்துக் காரணங்கருதாது தாய்க்குண்டா கும் இரக்கத்தைப்போல் அம்பிகை கருணையினுற்கொண்ட அந் தப்பிராமரி தேவியினுடைய திருவுருவ வரலாறுமுதலியவற்றைக் கூறுகின்றேன் கேட்பாயாக.

பூர்வம் அருணன்என்னும் அசுரன் மஹா பலசாலியாய்த் தேவர்களிடத்துத் துவேஷமுடையவனாய் பாதலத்தில் தன்னினத்தவர் வசிக்கும் ஸ்தானத்திலிருந்து சிலநாள்கழித்து தேவர்களை யழிக்கவேண்டுமென் றெண்ணி இமயமலையை நோக்கிச் சென்று கங்கைக்கரையில் ஓர் பர்ணசாலை யமைத்துக்கொண்டு அதிலிருந்து காயத்திரியை ஜபித்துப் பதினாயிரம்வருடம் ஜலபானஞ்செய்தும், பதினாயிரம் வருடம் வாயுபட்சணஞ்செய்தும், பதினாயிரம்வருடம் யாதுமின்றி நிராகாரனாயிருந்தும் தவம்புரியும்போது அவன் சரீரத்தினின்றும் ஓரக்கினி எழுந்து ஸகலலோகத்தையும் பஸ்மீகரப்படுத்திற்று. அப்போது தேவர்களெல்லாம் இதுவென்ன இதுவென்ன வென்று நடுக்கமுற்று பிரமனிடஞ் சென்று சரணடைந்து தங்கட்குண்டாகிய நடுக்கத்தைக்கூற, பிரமதேவன் அதனைக்கேட்டு காயத்திரிதேவிசமேதனாய் அன்னவாகனாரூடனாய் அவ்வசுரனிடஞ்சென்று அசுரன் சரீரத்தில் பிராணன்மாத்திர மிருப்பதையும் சரீரமெல்லாம் ஒட்டை ஒட்டையாயிருப்பதையும் வயிறு உலர்ந்திருப்பதையும் கண்கள் தியானநாட்டத்தோடிருப்பதையும் இரண்டாவது அக்னிபோல் பிரகாசிப்பதையும் பார்த்து ஓ குழந்தாய்! என்னவரம் வேண்டும் கேளென்ன அவன் கண்ணைத்திறந்து காயத்திரியோடும் நான்குவேதங்களோடும் கமண்டலம் செபமாலை இவைகளுடன் பிரமசொரூபமாகப் பிரகாசிக்கின்ற பிரமனைப்பார்த்து எழுந்து நமஸ்கரித்துப் போற்றி ஓ பிரமதேவரே! யான்மரணமடையா திருத்தல்வேண்டுமென்று உம்மைப்பிரார்த்திக்கின்றே னென்றான். பிரமன் அவனை இனிது நோக்கி ஓ அசுரனே! யான்முதலாகச் சொல்லப்பட்ட விஷ்ணுவாதி சகலதேவர்களும் மரணத்துக் குட்பட்டுள்ளோமென்றால் ஏனையோர்க்குச் சொல்லவேண்டுமா ஆகையால் என்னால் கொடுக்கக்கூடுமான வரமெதுவோ அதனைக்கேட்பாயாக நீ புத்திமானாகலின் கோபங்கொள்ளற்க என்றான். அசுரன் ஓசிருட்டிகர்த்தாவே! எனக்கு யுத்தத்தாலும், அஸ்திர சஸ்திரங்களாலும், புருஷாளாலும், ஸ்திரீகளாலும், இரண்டுகால் நான்குகாலுள்ள செந்துக்களாலும் மரணமுண்டாகாமல் வேறெந்தவிதத்தினாலாவது மரணம்வந்தால் வருக; இப்போது தேவர்களையெல்லாம் வெல்வதற்கான அளவில்லாத பலத்தைக் கொடுப்பாயாக வென்று கேட்டனன். அப்படியே யாகுகவென்று கூறித் தன்னி

டம்போயினன். பின்னர் அசுரன் கர்வமடைந்து பாதாளத்திலி ருக்கும் அசுரர்களையெல்லாம் வெளியே யழைத்துவந்து ஒருவனை நோக்கி நீ அமராவதிக்குச்சென்று இந்திரனைக்கண்டு யான்யுத் தத்தை விரும்பியுள்ளேனென்று சொல்வாயாகவென்று தூதனுப்ப அவன் அதுபோல் சென்று இந்திரனுக்குச்சொல்ல அதனைத் தேவேந்திரன்கேட்டுப் பயமுற்றுப் பிரமதேவரையடைய அவ ரும் விஷ்ணுவினிடம்போக அவரும் பிரமனுதியர்களோடு ருத் திரரிடம்போய் ஆலோசித்தனர். இவர்கள் செய்தி யிங்ஙனமி ருக்க, அசுரன் சுவர்க்கலோகத்துக்குத் தூதனுப்பியபின் சூரியன் யமன் அக்னி முதலானவர்களையோட்டித் தானே அவ்வவர்க ளைப்போல் வுருக்கொண்டு அவ்வத் திக்குகளிலிருந்து மூவுலகை யும் ஆண்டுவந்தனன். சூரியன்முதலானவர்கள் கைலைக்குச்சென்று சிவபெருமானைச் சரணடைந்து தத்தம் குறைகளைக் கூறும்பொ ழுது தேவர்கள் மிகவும்வருத்தமுற்று அந்தோ! அவன் யுத்தத் தினுலும் அஸ்திர சஸ்திரங்களினுலும் விலங்குமுதலியன வற்று லும் மரணமடையாத வரத்தைப் பிரஹ்மாவினிடம் பெற்றிருக் கின்றனனே நாங்கள் என்செய்வோமென்று ஏங்குங்கால் "நீங் கள் தேவியையடையுங்கள்; அவள் உங்களிஷ்டத்தைப் பூர்த்தி செய்வாள்; அசுரன் செய்யும் காயத்திரி ஜபத்தைச் செய்யாது விடுவானுனல் மிருத்யுவுக் காளாவான்" என்று அசரீரிவாக் குண் டாயிற்று. அவ்வாக்கை இந்திரன்கேட்டு அக்கணமே தன்னுசிரி யரை அழைத்து என்னுசிரியரே! தேவர்கள்படுந் துன்பத்தைத் தேவரீ ரறிவீரன்றே, அதனையொழிப்பார் தேவரீரன்றி யாருள் ளார். ஆகலான் எங்களைவருத்தும் அந்த அருணன் என்னும் அசுரனிடஞ்சென்று அசரீரிவாக்கின்படி அவன் தேவிகாயத்திரி ஜபத்தைச் செய்யாமலிருத்தற்கு எவ்விதஞ் செய்யவேண்டுமோ அவ்விதஞ் செய்யும், நாங்களும் தியானயோகத்தினுல் தேவியைப் பிரார்த்திக்கின்றேம், அவள் உமக்கு அங்கு சகாயஞ்செய்வாள். என்றுகூறி ஜாம்பூநதேச்வரியை யடைந்து மாயாபீஜத்தைச்செ பித்துப் பூஜையில் ஆவலுள்ளவர்களா யிருந்தனர். தேவகுருவும் அக்கணமே அருணனிடம்போக அசுரன் அவரைப் பார்த்து ஓ முனிவரே! நீர் ஏன்வந்தீர்? என்னகாரணம்? உம்மிடத்தில் நான் பிரீதிவைத்தவனல்லவே பிரீதிவைத்தவன் என்சத்துருவல் லவா எனக்கூறத் தேவகுரு, ஓ அசுரனே! என்னுற்பூசிக்கப்பட்ட

தேவியை நீ பிரதிதினம் பூஜித்துவருகின்றதனுல் நீ என்னிடம் பக்ஷம்வைத்தவனல்லவா? ஆகலான் நான் உன்னைப் பார்க்கவந் தேன் என்றார். அவ்வொருசொல்லானே அசுரன் மகிழ்ந்தவனுய் தான்செய்துவரும் ஜபவிசேடத்தை யெண்ணிச் செருக்குற்றுன் அதனுலும் தேவமாயையினுலும் பரமமந்திரமான காயத்திரிஜப த்தை மறந்தனன். மறக்கவே அவன்பாலுள்ள தேஜஸூம் ஒழிந்து போயிற்று. தேவகுரு தான்வந்தகாரியம் முற்றுப்பெற்றதென்று இந்திரனிடம்போய்ச்சொல்ல அவன் சந்தோஷித்து மஹேஸ்வரி யைத் தேவர்களோடு பூசித்துவந்தனன். அநேககாலங் கழிந்தபின் ஒருநாள் உலகமாதாவாயும் உலகங்கட்கெல்லாம் மங்களத்தைக் கொடுப்பவளாயும் சகலவேதங்களாலும் புகழப்பட்டவளாயும், சர் வாத்மிகையாயும் சர்வமயியாயும் சர்வமங்கள ஸ்வரூபிணியாயும் சர் வக்ஞையாயும் சர்வஜநநியாயும் சர்வேஸ்வரியாயும் கோடிசூரியப் பிரகாசையாயும் கோடிமன்மத சௌந்தரியமுடையவளாயும் விசித் திரமான சந்தனப்பூச்சுடையவளாயும் விசித்திரமான வண்டுகள் மொய்த்திருப்பதுபோ லுள்ள நவமணிமாலைகளைத் தரித்தவளா யும் அதுபோலவே பலவிசித்திரமான வண்டுகளோடு கூடின புஷ் பமாலையைத் தரித்தவளாயும் அளவில்லாத பெண்வண்டுகள் ஹ்ரீம் என்கிற மநுவைப் பக்கத்துக்குக் கோடிகோடி சத்தித்துக்கொ ண்டு தொடர்ந்துவரப்பட்டவளாயும் சிருங்காரவேஷங்களெல்லாம் நிறையப்பெற்றவளாயும் வரதாபயமுடையவளாயும் சாந்தையா யும் கருணமிர்த சாகரையாயும் சர்வ வேதங்களாலும் எடுத்தாளப் பட்டவளாயும் சர்வாத்மிகையாயும் சர்வமங்கள ரூபிணியாயும் சிவையாயும் எல்லாமாயுமுள்ளதேவி பிரசந்நமாயினள். அத்தேவி யைச் சகலதேவர்களுஞ் சந்தோஷம்நிறைந்த மனத்துடன் களிப் போடுகண்டு வணங்கி ஓ தேவியே! ஓ மகாவித்யா ஸ்வரூபிணி யே! சிருட்டிதிதிலயங்கட்குக் காரணியே! உனக்கு நமஸ்காரம்தா மரைப் பூப்போன்ற கண்ணுடையவளே! உனக்கு நமஸ்காரம் சக லத்துக்கும் ஆதாரமாக விருக்கின்றவளே! உனக்கு நமஸ்காரம். விஸ்வ தைஜஸ பிராக்ஞையாயும் விராட்சொரூபிணியாயும் சூத் ராத்மிகையாயும் இருப்பவளே! உனக்கு நமஸ்காரம். அவ்யாக்ருத சொரூபிணியே கூடஸ்தரூபிணியே உனக்கு நமஸ்காரம். ஹே துர்க்காதேவியே! சிருட்டியிலகப்படாதவளே! துஷ்டரைச்சங் கரிக்கின்றவளே! சரீரமில்லாதவளே! பிரேமகம்மியமானவளே!

பர்க்கஸ்வரூபிணியாகிய தேவியே உனக்கு நமஸ்காரம். ஸ்ரீகாளிகாதேவியாகிய தாயே! உனக்குநமஸ்காரம். நீலசரஸ்வதியே! உனக்குநமஸ்காரம். பயங்கரமான கருவிழியுள்ளவளே! உனக்கு நமஸ்காரம். பயங்கரமான ரூபமுள்ளவளே உன்னைத்தினந்தோறும் நமஸ்காரஞ் செய்கின்றோம். பீதாம்பரதாரீ! திரிபுரசுந்தரீ! பைரவீ! மாதங்கி! தூமாவதீ! உனக்குநமஸ்காரம். அறுபட்ட தலையுள்ளவளே! பாற்கடலின்கண் வீற்றிருக்குங் கன்னீ! சாகம்பரீ! ரக்ததந்தமுள்ளவளே! உனக்குநமஸ்காரம். நிசும்ப சும்பர்களைச் சங்கரித்தவளே! ரக்தபீஜனை நாசஞ்செய்தவளே! தூம்பரலோசனனை நாசஞ்செய்தவளே விருத்திராசுரனைச்சங்கரித்தவளே! சண்டமுண்டாதி தானவர்களைச் சங்கரித்தவளே! சிவே! உனக்கு நமஸ்காரம்! விஜயே! கங்கே! சாரதே! பிருத்வீரூபே! தயாரூபே! தேஜோரூபே உனக்குநமஸ்காரம். பிராணரூபே! மகாரூபே! பூதரூபே! உனக்குநமஸ்காரம் விஸ்வமூர்த்தே தயாமூர்த்தே தர்மமூர்த்தே நமோநமஃ ஜ்யோதிர்மூர்த்தே தேவமூர்த்தே ஞானமூர்த்தே உனக்குநமஸ்காரம். காயத்ரீவரதே! தேவீ! சாவித்திரீ சரஸ்வதீ சுவாஹே சுவதே! தக்ஷிணே! உனக்குநமஸ்காரம் என்று நமஸ்காரங்கூறி எந்தத்தேவி சகலவேதங்களாலும் அகப்படவில்லை அகப்படவில்லையென்று சொல்லப்படுகின்றளே அப்படிப்பட்டதேவியைப் பிரத்யக்ஷமாய்க் கண்டோமல்லவா? பிரமரங்களால் சூழப்பட்டிருப்பதனல் பிராமரிஎன்று சொல்லப்படுகின்ற உன்னை நித்தியம் நமஸ்கரிக்கிறோம். உன்னை இருபக்கத்திலும் நமஸ்கரிக்கிறோம். முன்னும் பின்னும் நமஸ்கரிக்கிறோம் மேலுங்கீழும் நமஸ்கரிக்கிறோம் எல்லாவிடத்தும் நமஸ்கரிக்கிறோம். மணித்வீபத்தில் வசிக்கின்ற மஹாதேவியே! அகிலாண்டகோடி பிரஹ்மாண்டநாயகியே! ஜகன்மாதாவே! தயைசெய்வாயாக. பராத்பரையே! சகலபுவனத்துக்கும் ஈஸ்வரியே! உத்தமத்துக்கெல்லாம் உத்தம மானவளே, ஜய! சிறந்த கல்யாண குணத்துக்கு ஸ்தானமாகவிருக்கின்றவளே! புவனேஸ்வரியே! பரமேஸ்வரியே எங்கட்குப் பிரசன்னமாவாய் என்றுதுதிக்கின்ற தேவர்கள் துதியைக்கேட்டு லோகமாதாவானதேவி குயிலொலித்தலைப்போலும் தேவர்களைப்பார்த்து ஓ தேவர்களே! நீங்கள்வேண்டும் வரங்களைக் கொடுக்கச் சித்தமாயிருக்கின்றோம் கேளுங்கள்என்றாள்.

தேவர்கள் தாங்கள்படும் துக்கத்துக்குக் காரணமான அசுரன்செய்தியைச் சொல்ல, தேவிகேட்டுத் தன்திருக்கரங்களி லிருக்கும் பிரமரங்களையும் தன்னை எப்பக்கத்துஞ் சூழ்ந்திருக்கும் பிரமரங்களையும் நானாவிதரூப மெடுக்கச்செய்து அவைகளை அசுரனிடம் ஏவினாள். அவ்வண்டுகள் மூவுலகமும் நிறைந்து குருவிக் கூட்டங்களைப்போல் தொகைதொகையாகப் புறப்பட்டு ஆகாய

முற்றுமறைத்து பூமியிலிருளுண்டாக்கி எங்கும்பிரமரமயமாய் ஜனங்களெல்லாம் பிரமித்து ஆச்சரியமடையச்செய்து ராக்ஷஸக்கூட்டங்கள் எங்கெங் கிருக்கின்றனவோ அங்கங்குஞ் சென்று அவர்கள்மார்பைத் துளைத்து அங்கங்கே மரணமடையச்செய்தன. அந்தோ! பாணங்கள் மார்பைத்துளைப்பதுபோல் வண்டுகள் துளைத்ததைநோக்குங்கால் யுத்தமுகத்தில் வீரர்களாலும் செய்தற்கரிது. அன்றியும் யுத்தமுகத்தில் வீரர்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளும் பேச்சில்லாமலே ஒருக்ஷணகாலத்தில் சகலரிடத்தும் மரணவோசையுண்டாய்விட்டன. பின்னர் பிரமரங்கள் அசுரர்களை முடித்துவிட்டு தேவியினிடம் போய்ச்சேர்ந்தன. இதனைக்கண்ணுற்ற அமரரெல்லாம் ஜகன்மாதாவின்செயல் என்ன ஆச்சரியம் என்ன ஆச்சரியம் என்றதிசயித்து சந்தோஷசாகரத்தில் மூழ்கிப் பிரமராம்பிகையை நானாவித உபசாரங்களாலும் திரவியங்களாலும் பூஜித்து ஜயசப்தத்தோடு புஷ்பத்தை வாரிவாரித் திருமேனியின்மேற் றூவி துந்துபிமுதலிய வாத்தியங்களைமுழக்கி அப்சரஸ்திரீகளை நடிக்கச்செய்தனர். முனிவர்களெல்லாம் வேத கோஷஞ்செய்தனர். கந்தர்வர்கள் மிருதங்கமுதலிய வாத்தியங்களை வாசித்தனர். மணி சங்கு முதலியவற்றின் துவனிகள் மூன்றுலோகமும் நிறைந்தன. ஏனையரெல்லாம் நானாவித தோத்திரஞ்செய்து சிரமீது கைகளைக்கூப்பி ஜயமாதா! ஜயஈசானி! என்று பிரதாபங்கள் கூறினர்.

இவ்வாறு யாவரும் செய்யுஞ்செயலைத் தேவிகண்டு சந்தோஷமடைந்து ஒவ்வொருவருக்கும் வரமளித்து அவரவர்களால் பிரார்த்திக்கப்பட்ட தன்பக்தியையும் கொடுத்து மறைந்தனள். ஓ முநிவரே! பிராமரிசரித்திரம் நீர்விரும்பியவண்ணஞ் சொன்னேம். இதனைப் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் சகலபாவமும் நாசமாம். கேட்டமாத்திரத்தில் ஆனந்தத்தையும் பின் சம்சாரநாசத்தையும் உண்டாக்கும். இதுவேயுமன்றி இந்தஸ்கந்தத்தில் சகலமநுக்கள்சரிதமும் சொல்லப்பட்டது. தேவிமகாத் மியத்தைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் பயங்களினின்றும் விடுபட்டவர்களாய்த் தேவிசாயுச்சிய மடைவார்கள். (சு. ம்—கஉஎ)

௧௩-ம் அத்தியாய முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௧௩-க்குச் சுலோகம் (௫௱௩௯.)

ஆகஸ்கந்தம் (௧௰) க்கு அத்தியாயம். உ௮௰.
ஸ்லோகம். (௧௫௧௩௭.)

பத்தாவது ஸ்கந்தம் முற்றிற்று.



உ

# பதினொன்றாம்ஸ்கந்தம்.

## அத்தியாயவிஷய அட்டவணை.

உ

லாங்கலாயுதாயைநமஃ

# தேவீபாகவதம்.

## பதினொன்றும் ஸ்கந்தம்.

### முதலாம் அத்தியாயம்.

### சதாசாரவிதிக் கிரமம்.

காஞ்சீ ரத்நவிபூஷாம் காமபிகந்தர்ப்ப ஸௌதிகா பாங்கீம் பரமாங் களாமுபாஸே. பரசிவ வாமாங்க பீடிகாவஸீம்நாம்.

நாரதமுனிவர்கூறுகின்றார் ;—ஓநாராயணரே! ஓரக்ஷகமூர்த்தியே! உம்மால் சொல்லப்பட்ட தேவியினது சரித்திரங்கள் மிகவும் ஆச்சரியகரமாயும் பரமோத்தமமாயும் இருக்கின்றன. இப்பொழுது சொல்லிவந்த சரித்திரங்களில் தேவியினது அவதாரவிசேடங்கள் தேவர்களுடைய பிரார்த்தனைக் கிடாக அசுரர்களைச் சங்கரிப்பதற்காகக் கொண்ட கோலங்களென்றும் அவரது சகலாதிகார பிரபுத்வ விசேடங்களெல்லாம் உயிர்களிடத்துவைத்த பூரணகிருபையென்றும் வெளியாயிற்று. ஓநாராயணரே! பக்தர்களிடத்து கருணாகரியாகிய தேவி எந்தச்செய்கையில் சந்தோஷமடைந்து அநுக்கிரகிப்பாள்? அவளுக்கு எப்பொழுதும் பிரியமாயுள்ளது எது? அந்த ஆசாரத்தைச் சொல்லுமென்று கேட்க நாராயணர் கூறுகின்றார்.

ஓ தத்வக்ஞராகிய நாரதரே! விதிக்கிரமமாயுள்ள சதாசார அநுட்டானமே தேவிக்கு எப்பொழுதும் பிரீதியாயுள்ளது. ஆகலான் அஃதொன்றே போதுமானசாதனமென் றறிவாய். எந்தஆசாரங்களையும் நடத்திக்காட்ட வேண்டியவன் பிராமணனுகையால் அவன் தனக்கென்று ஏற்பட்ட கர்மாநுஷ்டானங்களை காலை

லெழுந்து செய்யவேண்டும். அவனப்படிச் செய்தால்தான்உபகார மாகும். உதயமுதல் அஸ்தமிக்கிறவரையில் எந்தெந்தகர்மங்கள் தனக்குவிதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவற்றையே அவன்செய்ய வேண்டும். வேறொன்றுஞ் செய்யலாகா; அக்கர்மங்கள் நித்தியம் நைமித்திகம் நிந்திக்கப்படாதகாமியம் எனச் சொல்லப்படும். அவற்றால் தன் (ஆத்ம) க்ஷேமத்தை விருத்திசெய்து கொள்ள வேண்டும்.

தாய் தந்தை புத்திரன் புத்திரி மனைவி ஞாதி இவரெல்லாம் இம்மூவிதகர்மங்களைப்போலும் ஆத்மக்ஷேமத்தைச் சிறிதேனும் விருத்திசெய்யமாட்டார்கள். ஆகையால் அம்மூவகையான சத்கர்மங்கள்தான் சகாயமாயும் நாடோறும் ஏறும் சஞ்சிதத்தைத் தடுப்பதற்கு சாதனமாயும் உள்ளவை. இக்கர்மானுஷ்டானங்களில்லாமற் போனால்கடத்தற்கரிய அஞ்ஞானந்தகாரத்தை ஒருவிதத்துங்கடக்க முடியாது. ஆசாரமென்பதும் இதுவே. இவைதான் பிரதமதர்மமென்றுசொல்லப்படும். அது சுருதியுக்ததர்மமென்றும்,மிருதியுக்த தர்மமென்றும் இருவகைப்படும். சுருதியினாலும் சுருதிசம்பந்தமான ஸ்மிருதியினாலுஞ்சொல்லப்பட்டவைதான் மிகவுஞ்சிறந்தன. ஆகலான் அவ்விரண்டையுமே அந்தணன் உரிமையாகக் கைக்கொண்டு தினந்தோறும் ஆசாரதருமத்தில் ஆவலுள்ளவனா யிருத்தல் வேண்டும். ஏனெனில் ஆசாரமே சகலசுபங்கட்கும் காரணமா யுள்ளது; ஆயுள்விருத்திசெய்வது, சந்ததிப்பெருக்கை யுண்டாக்குவது, குறைவின்றி எக்காலத்தும் அன்னத்தைக்கொடுப்பது, பாபத்தை நாசஞ்செய்வது, இகபரங்களில் மிக்கசுகத்தை யுண்டுபண்ணுவது, அஞ்ஞானத்தால் மோஹிக்கப்பட்ட ஆத்மாக்களுக்குத் தருமரூபமான ஒருமகாதீபமா யுள்ளது, முக்திமார்க்கம் இதுவாமென்று காட்டுவது, சிரேஷ்டத்தன்மையை விளைவிப்பது, சத்கருமமும் சத்கருமத்தால் ஞானமும் உண்டாக்குவது, ஆகலான் ஆசாரந்தான் சிறந்தது இதனினுஞ் சிறந்தது ஒன்றில்லை. இவ்வண்ணமே மநுவினாலுங் கூறப்பட்டுள்ளது. எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ள ஆசாரமொன்று இருக்குமானால் எல்லாப்பொருளையும் எளிமையாயடையலாம். எந்தப்பிராமணன் ஆசாரமில்லாமலிருக்கின்றானோ அவன் சூத்திரனைப்போல வெளியில் ஒதுக்கிவைக்கத்தக்கவன். ஏனெனின் ஆசாரமுடைமையே பிராமணத்துவமும் அஃதின்மையே சூத்திரத்வதுமும் ஆகலான் சாதியினால் சமமாகக் கொள்ளுதல்கூடாது. சூத்

திரனெப்படியோ அப்படியே அவனும். ஓநாரதரே! இப்பொழுது சொல்லிவந்த ஆசாரமானது சாஸ்திரீயமென்றும் லோகரீதி என்றும் இரண்டுவிதமாம். சாஸ்திரீயமானதருமம் அறியாதவன் லோகரீதியானதருமத்தை யறிந்து அவ்வழி நிற்றல்வேண்டும். சுகத்தைக்கோரத்தக்கவன் இவ்விரண்டிலொன்றை அநுட்டித்தல்வேண்டும். லோகரீதியானதருமமாவன,—கிராமதருமம் சாதிதருமம் தேசதருமம் குலதருமம் என்பன. இவ்விதமாகிய ஆசாரங்களைவிட்டுத் துராசாரமாயிருக்கிறபுருஷன் உலகத்தாரால் நிந்திக்கப்படும் நிந்தனைக்குப் பாத்திரவானுகவும் எப்போதுந் துக்கத்தை யடைகிறவனுகவும் வியாதியினுல் பீடிக்கப்பட்டவனுகவும் இருப்பான். அறத்தை விட்டவனிடத்துப் பொருளும் இன்பமும் பொருந்தாவாம். ஓநாரதரே! வேதமொழிந்த ஏனைய நூல்களில் கூறப்பட்டவை தருமமானுலும் அசுகத்தைக்கொடுப்பதானுல் அதை அநுட்டிக்கக்கூடாது என்று கூறவே நாரதர் ஓமுனிவரே! தருமங்களைப் பலசாஸ்திரங்கள் பலவகையாகக் கூறுகின்றபடியால் அவைகளில் செய்வன தவிர்வன இவையாமென்று எப்படிநிச்சயித்துச் செய்யக்கூடும் என்று கேட்டனர்.

நாராயணர் கூறுகின்றுர்,ஓநாரதரே! சுருதி மிருதி என்னும் இரண்டும் இரண்டுகண்களாகும். புராணம் ஹ்ருதயமாகும். இம்மூன்றில் சொல்லப்பட்டவையே தருமங்களாம். இம்மூன்றுக்கும் விரோதமாகச் சொல்லப்பட்டவை தருமமாகா. மூன்றிலும் ஒன்றுக்கொன்று விரோதம் உண்டாகுமானுல் வேதத்திற் சொன்னவையே பிரமாணமெனக் கொள்ளல்வேண்டும். வேதத்திற் சொல்லப்பட்டவையும் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்குமானுல் இரண்டு தருமத்தையுங் கொள்ளவேண்டும். அவற்றைவிடுதல் கூடா. மிருதியில் ஒன்றுக்கொன்று விரோதமிருக்குமானுல் அதை வேறு வேறு விஷயங்கட்கென்று பிரித்துவிடவேண்டும். புராணங்களில் ஒன்றுக்கொன்று விரோதமானதருமமிருக்குமானுல் அதைக் கொள்ளக்கூடாது. எந்தத்தருமங்களும் வேதத்துக்கு விரோதமில்லாதிருக்குமாயின் அவைகளைக் கிரகிக்கலாம். பிரத்தியக்ஷமாய் வேதத்துக்கு விரோதங் காணப்படுமாயின் அவை பிரமாணமாகமாட்டா. எவ்விதத்தாலும் வேதம் தருமமார்க்கத்தைக் காட்டவந்ததாகலான் அதற்கு விருத்தமில்லாமலிருக்கிற தரு

மங்களே பிரமாணமாகும். மற்றவைகள் பிரமாணமாகமாட்டா. எவன் வேதப்பிரமாணத்தைவிட்டு மற்றைப் பிரமாணத்தைப் பிரமாணமாக எண்ணியநுட்டிக்கின்றானோ அவனைச்சிக்ஷிக்கவே யமலோகத்தில் நரககுண்டங்கள் ஏற்பட்டிருகின்றன. ஆதலால் சர்வப்பிரயத்தனத்தாலும் வேதத்திற் சொல்லப்பட்டதர்மங்களையே யநுட்டிக்க வேண்டுமென்றி அதிற்சொல்லப்படாதன ஸ்மிருதியாகவிருந்தாலும் புராணமாகவிருந்தாலும் வேறுதந்திரங்களாகவிருந்தாலும் வேறுசாஸ்திரங்களாகவிருந்தாலும் அநுட்டித்தல் கூடா. ஏனெனின் சுருதிக்குவிரோதமானவை பிரமாணமாகமாட்டா. சாஸ்திரமென்று பெயர் பெற்றனவெல்லாம் பிரமாணங்களாமென்று ஒருசாஸ்திரத்தைப்பிடித்துக்கொண்டு எவர்கள் அனுட்டிக்கின்றார்களோ அவர்கள் தலைகீழாக நரகப்பெருக்கில் மூழ்கிவிடுகிறார்கள். அவர்களாவார் காமாசாரர்களும் * பாசுபதர்களும் லிங்கதாரிகளும் தப்தமுத்ராங்கிதர்களும் வைகானசர்களுமேயாம். இவர்களெல்லாம் வேதமார்க்கத்திற்குப்புறம்பாயுள்ளவராதலால் இவர்களெல்லாம்நரகமடைதல் திண்ணம். இதனால் மாநுடன் வேதாங்கீகாரமாகியதருமங்களையே அனுஷ்டிக்கவேண்டுமென்று ஏற்பட்டிருக்க நானிப்போது எழுந்தெழுந்து அடிக்கடிசொல்லவந்தது என்னையெனின்! எதையடிக்கடி செய்யவேண்டுமோ கொடுக்கவேண்டுமோ எதையொருவனுக்குக் கொடுப்பிக்கவேண்டுமோ மிருதுவான எந்தவாக்தருமம் செய்யவேண்டுமோ அவையெல்லாம் என்னாலேயே போதிக்க வந்தனவல்லவென்று உலகினர்க்கு அறிவித்தற்கேயாம். எனவே நூல்களில் என்னால்விதிக்கப்பட்டனவாகக் காணப்பட்டனவெல்லாம் என்னால் விதிக்கப்பட்டனவன்று, அநாதியாயுள்ள வேதத்தால் விதிக்கப்பட்டனவேயாமென்று அறிதற்கேயாம்.

இனி ஒருவனுக்கு உபபாதகம் மகாபாதகங்களெல்லாம் நேர்ந்திருந்தபோதிலும் அவன் இராத்திரியில் ஒருசாமகாலம் பிரமத்தியானஞ் செய்யவேண்டும். அந்தத்தியானம் எவ்வாறு செய்யவேண்டுமெனின் சத்துவகுணமுள்ளவனாய் தொடையின்மேல் கால்களுடையவனாய் மார்பைப்பார்க்கும்படி முகத்தைச் சிறிது உயரப்படுத்திக் கண்ணைமூடினவனாய் பற்கள் ஒன்றுக்கொன்று படாதவனாய் இரண்டு தாடைகளிலும் சரிக்காத நாவுடைய

* வாமாசாரமுடையவர்.

வனும் மூடினவாயுடையவனும் அசையாத சரீரமுடையவனும்சிறிது உயரமான ஆசனத்தில் வீற்றிருக்கின்றவனும் இரண்டுபங்காவது மூன்றுபங்காவது பிராணாயாமத்தை ஆரம்பிக்கவேண்டும். அதன்பின்னர் இருதயவாசியாய் இருதயத்தில் தீபம்போல் பிரகாசிக்கும் பகவானைத் தியானித்து அப்பகவானிடத்தில் ஆத்மாவைப்பொருந்தியிருக்கச்செய்யவேண்டும். இதுதான் தியானமுறையாகும்.

இனிப் பிராணாயாமம் சதூமம் விதூமம் சகர்ப்பம் அகர்ப்பம் சலக்ஷ்யம் அலக்ஷ்யமென ஆறுவகைப்படும். இந்தப்பிராணாயாமத்துக்குச் சமானமான சாதனம் வேறொன்றில்லை. அதற்கதுவே சாதனமானது. அந்தப்பிராணாயாமம் ரேசக பூரக கும்பகங்களால் செய்வதாகும். இதுமூன்று வர்ணரூபமாயிருக்கும். இந்தப் பிராணாயாமம் தன்மயத்தைச் செய்யுந் தன்மையுடைத்தான தாகையால் இதனைப் பிரணவமென்றும் கூறப்படும். இடைகலையினால் வாயுவைப் பூரித்து உதரத்தில்கும்பித்து அந்தவாயுவைப் பதினாறு மாத்திரை யளவுகாலம் மெதுவாகப் பிங்கலையினால் ரேசித்தலே சதூமப் பிராணாயாமம் எனப்படும்.

இவ்வாறு பிராணாயாமம் செய்து "ஆதாரேலிங்கநாபி பிரகடிதஹ்ருதயே தாலுமூலே லலாடே - துவைபத்ரே ஷோடசாரே துவிதச தளதளதுவாசதார்த்தே சதுஷ்கே-வாசாந்தே பாலமத்யே டபகட சஹிதே கண்டதேசே ஸ்வராணும்-ஹம் க்ஷம் தத்வார்த்தயுக்தம் சகலதளகதம் வர்ணரூபம் நமாமி" என்று தியானித்து செந்தாமரையில் வசிக்கின்றவளாயும் அச்செந்தாமரைத்தூள் போன்ற நிறமுள்ளவளாயும் ஈஸ்வரனால் நியமிக்கப்பட்ட சின்னமுடையவளாயும் தாமரைநூல்போன்ற ஆகாரமுள்ளவளாயும் சூரியன் அக்கினி சந்திரன் இவர்களுக்குச் சமானமான முகமுள்ளவளாயும் ஸ்தனங்களால் பிரகாசிக்கின்றவளாயும் உள்ளதேவியை எவன் மனதில் க்ஷணகாலம் நினைக்கின்றானோ அவன்முக்தன். அவன் நான் இருப்பதாகிய இருப்பு தேவியின் இருப்பே, நடை தேவியின் யாத்திரையே, என்னுடைய புத்தி தேவியின்சிந்தையே, பேசுவது தேவியின் தோத்திரமே, நானும் சர்வாத்மகமாகவிருக்கின்ற தேவிஸ்வரூபமே, சகலதேவர்களுடைய அருச்சனை தேவியின் அருச்சனையே, நான் தேவி, நான் தேவியைக்காட்டிலும் வேறானவனல்ல,

நான் தேவிஸ்வரூபமான பிரமமே, நான்சோகத்துக்குப் பாத்திரன ல்ல, நான் சச்சிதானந்தரூபனு யிருக்கிறேன் என்று தன்னை நினைத் துக்கொள்ளவேண்டும். முதல் பிரயாணத்தில் பிரகாசிக்கிறவளாயும், பிரதிபிரயாணத்தி (திரும்புகாலி)ல் அமிர்தம்போலிருக்கிறவளா யும், பிறகுஹ்ருதயத்தில் சஞ்சரித்துக்கொண்டு ஆனந்தமயமாயிருக் கிறவளாயுமுள்ள ஸ்திரீரூபமான சக்தியைச் சரணமடைகிறேன் என்று தியானித்து பிறகு ஈஸ்வர சொரூபமாகவுள்ள நிஜகுருவை பிரமரந்திரத்தில் தியானித்து விதிப்படி சோடசோபசாரங்களாற் பூசித்து ஜிதேந்திரியனாய் "குருர்பிரஹ்மா குருர்விஷ்ணு குருர் தேவோமஹேஸ்வரः; குருர்தேவ பரப்பிரஹ்மதஸ்மை ஸ்ரீ குரவே நமः" என்று துதித்து வெளியே புறப்படவேண்டும். (சு-ம்சகூத)

முதலாம் அத்தியாயமுற்றிற்று.

---

உ

லக்நசாமரஹஸ்த ஸ்ரீசாரதாபரி வீஜிதாயைநமः

## இரண்டாம் அத்தியாயம்.

---

### சௌசவிதி.

---

நாராயணர் கூறுகின்றார்;—அந்தணன் வேதங்களை நன்றாயறிந் திருப்பினும் ஆசாரஹீனனாயிருப்பானாயின் அவனை அவ்வேதங்கள் பரிசுத்தஞ்செய்யாவாம். அன்றியும் ஓர்கூட்டிலிருக்கிற பக்ஷியா னது இரக்கைமுளைத்தவுடன் பறந்தோடுவதைப்போல் மரணகா லத்தில் உடம்பாகிய கூண்டைவிட்டு இவன் ஓடும்போது இவனி டத்தில் வாழ்ந்திருந்த வேதங்களும் இவனைவிட்டு ஓடிப்போம். இஃதுண்மையாகலின் ஓநாரதனே! அந்தஆசாரத்தைக் கூறுகின் றேன் கேட்பாயாக.

பிராமணன் பிராஹ்மி முகூர்த்தகாலத்தில் எழுந்திருந்து அதுமுதல் செய்யவேண்டியவையெல்லாம் நன்குணர்ந்து ஒன்றே னும் விடாமற்செய்துவரவேண்டும். ஓஅரசனே! அவையாவையெ னின்! இரவு பிற்பக்கத்து நான்காம் ஜாமத்தில் எழுந்துவேதாத்

யயனஞ் செய்தல்வேண்டும். அதன்பின் சிறிதுகாலம் தனது இஷ்டதெய்வத்தைச் சிந்தித்தல்வேண்டும். யோகியானல் பூர்வஞ்சொல்லியவாறு பிரமத்தியானஞ் செய்தல்வேண்டும். அத்தியானத்தால் எப்பொழுதும் சீவப்பிரஹ்மைக்கியமுண்டாம். அங்ஙனமான அவ்வைக்கியதியானத்தை நாடோறுஞ் செய்துவருவானாயின் அந்தக்ஷணத்திலேயே அவன் ஜீவன்முத்திநிலையை யடைவன்.

இனிப் பிராமிஎன்னுங் காலம் யாதெனின், ஓர்நாளுக்குரிய நாழிகை அறுபதில் ஐம்பத்தாறுவது நாழிகைமுதல் அறுபது நாழி பரியந்தத்துக் குள்ளாகிய ஐம்பத்தைந்து நாழிகையாகுமாயின் அது பஞ்ச பஞ்ச வுஷத்காலமாம். ஐம்பத்தேழுநாழிகையாகுமாயின் அது அருணோதயகாலமாம். ஐம்பத்தெட்டுநாழிகையாகுமாயின் அதுபிராதக்காலமாம். அதற்குமேல் சூரியோதயகாலமாம். அக்காலத்தில் கிருகத்தைவிட்டுப் புறப்பட்டு நிருதிதிசைக்கண் சென்று ஓர்கணைவிடுதூரத்திற்கு அப்புறம்போய் உழுதபூமி போகும்வழி சுடுகாடு மலை இடிந்தகோயில் பள்ளமுள்ளவிடம் ஜலமுள்ளவிடம் சூளைபோட்டவிடம் புற்றிடம் புல்படர்ந்தவிடம் மலவிசர்ஜனஞ் செய்திருந்தவிடம் ஏதேனுஞ்செந்துக்க ளிருக்குமிடம் ஆகிய இவ்விடங்களல்லாத விடங்களில் யாகத்துக்கு உதவாதபுற்களையாவது இலைகளையாவது போட்டு தேவர்களையும் இருடிகளையும் பைசாசங்களையும் இராக்கதர்களையும் சர்ப்பங்களையும் அப்புறம் போகவேண்டுமென்று வேண்டிக்கொண்டு, பிரமசாரியாயின் பூணூல்முழுவதும், கிருகஸ்தனாயின் ஓர்சுற்றும் காதில்சுற்றிக்கொண்டும் வானப்பிரஸ்தனாயின் பின்புறமாய் விட்டுக்கொண்டும், வஸ்திரத்தினால் சிரசைச்சுற்றி மூடிக்கொண்டும் மவுனமாய் மூச்சுவிடாமலும் எச்சில் உமிழாமலும் காற்று அக்னி பிராஹ்மணன் சூரியன் ஜலம் பசுக்கள் இவைகளைப்பாராமலும் பகலில் வடக்குமுகமாயும், இரவில் தெற்குமுகமாயும், மலஜல விசர்ஜனம் செய்தல் வேண்டும். அதன்பின் எழுந்திருந்து அவற்றை உலர்ந்த புல்லாலாவது சருகுகளாலாவது மறைத்து தண்ணீரிருக்கு மிடத்துக்குப்போய் பாத்திரத்தில் தண்ணீரைமுகந்துகொண்டு வேறிடத்துக்குப்போய்ப் பிராமணன் வெண்மண்ணையும் ஏனையர் செகப்பு மஞ்சள் கருப்பு மண்களையும் ஒவ்வொருதரத்துக்கும் பச்சைநெல்லிக்காயளவுக்குக் குறையாமல் ஆண்குறிக்கு இரண்டுதரமும்,

குதத்துக்கு ஐந்துதரமும், கைகளுக்குப்பத்துத்தரமும், இரண்டு கைகளையுஞ் சேர்த்து ஏழுதரமும், முன்னர் இடக்காலுக்குநான் குதரமும், பின்னர்வலக்காலுக்கு நான்குதரமும் சுத்திசெய்தல் வேண்டும். இவ்வண்ணம் மண்ணாற்செய்யப்படும் சுத்தியை கிருகஸ்தன் இரண்டுபங்கும், பிரமசாரி மூன்றுபங்கும் வானப்பிரஸ்தனும் சந்நியாசியும் நான்குபங்கும்செய்தல்வேண்டும். இதுபகற்காலத்தில் செய்யவேண்டியவிதி. இரவில் இதிற்பாதி. வியாதியாளர்க்கும் பதிதர்களுக்கும் வழிப்போக்கர்களுக்கும் பாதியேதான். ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் குழந்தைகளுக்கும் சக்தியில்லாதவர்களுக்கும் இவ்வளவென்றில்லை; நாற்றம்போமளவும் செய்தல்வேண்டும். இங்ஙனம்கூறிவந்த விதிப்படி எல்லாவருணத்தவரும் சவுசஞ்செய்துகொள்ளவேண்டியது. அதற்குக்குறைந்து ஒருகாலத்தும் கொள்ளக்கூடாது. எந்தத்தேசத்தில் எந்தநிறமுள்ளமண் அகப்படுமோ அதனையுங்கொள்ளலாம். ஆனால் சலத்துக்குள் இருக்கிறமண்ணும் தேவாலயமண்ணும் புற்றுமண்ணும் எலியறுத்தமண்ணும் குப்பைமண்ணும் சௌசஞ்செய்தமண்ணும் ஒருவன்செய்து மிகுந்தமண்ணும் எடுத்துக்கொள்ளக்கூடாது. மூத்திரவிசர்ச்சனத்தைக் காட்டிலும் மலவிசர்ச்சனசுத்திக்கு இரண்டுபங்கும் மைதுனத்தில்மூன்றுபங்குமண்ணுமாகக் கொள்ளவேண்டியது. மூத்திரசவுசத்திற்கு குறிக்கு ஓர்பங்குமண்ணும் கைக்கு மூன்றுபங்குமண்ணும் இரண்டு கையும் ஒன்றுசேர்த்து இரண்டுபங்கு மண்ணுமாகக் கொள்ளவேண்டும். இவ்விதி மலசௌசத்திற்குக் கொள்ளவேண்டுமென்று மநுவால் விதிக்கப்பட்டதாகும்.

ஓ நாரதரே! கொப்பூழின்கீழ் செய்யவேண்டிய சுத்திக்கு இடக்கையும், அதற்குமேலிடத்தில் செய்யவேண்டிய சுத்திக்கு வலக்கையும் நியமித்திருக்கின்றபடியால் அந்நியமத்தின் படியே செய்யவேண்டியதன்றி மாறிச்செய்தல் கூடாது. சுத்திசெய்வதற்குக் கொண்டுபோவதாகிய சலபாத்திரத்தை மலமூத்திரவிசர்ச்சனஞ் செய்வதற்குமுன் கொண்டு போகவேண்டுமேயன்றி விசர்ச்சனஞ் செய்தபின்னர் கொண்டுபோதல் கூடாது. மலஜலமோசனம் செய்தபின்னர் உடனே சுத்திசெய்துகொள்ளவேண்டுமேயன்றி அஞ்ஞானத்தினாலாவது மந்தமதியினாலாவது சிலநேரம்பொறுத்திருந்து செய்தல்கூடாது. இப்போது எதுஎதுசெய்தல் தவறென்றுகூறி

யதோ அவையிற்றை அலக்ஷியமாகவெண்ணி மனம்போற் செய்வராயின் அவர்கள் விதித்திருக்கும் பிராயச்சித்தத்தை அவசியம் செய்துகொள்ளல்வேண்டும். அஃதாவது மூன்றுநாள்வரையில் ஆகாரத்தைவிட்டு நீரைமாத்திரம் உண்டு இரவும் பகலும் நீங்காமல் மந்திரஜபஞ்செய்து பரிசுத்த மடைதலாம்.

இனி மலவிசர்ச்சனம் செய்தால் பன்னிரண்டுதரமும், மூத்திர விசர்ச்சனஞ்செய்தால் நான்குதரமும் நீரால்வாய்கொப்புளித்தல் வேண்டும். இதற்குக் குறைந்து செய்தால் அதுசுத்தியாகாது. நீர் உமிழும்போது தலைகுனிந்து இடதுபக்கம் உமிழ்தல்வேண்டும். வாய் சுத்திசெய்துகொண்டபின் ஆசமனஞ்செய்து தந்தசுத்தி செய்தல் வேண்டும்.

அச்சுத்தியின்விதி யாதெனின்,—தந்தசுத்திக்குக் கொள்ளப்படும் காஷ்டத்தை முள்மரம் பாலுள்ளமரம் முதலியவைகளிற் கொள்ளாமல் கரஞ்சம், அத்தி, மா, கடப்பை, சண்பகம், இலந்தை முதலிய மரங்களை அடைந்து ஆயுள்விருத்தி பலம் புகழ் காந்தி சந்தானவிருத்தி கோவிருத்தி தனவிருத்தி பிரமக்யானம் புத்தி ஆகிய இவைகளைக் கொடுக்கவேண்டுமென்று வனதேவதையைப்பிரார்த்தித்து கனிஷ்டிகைவிரலளவு பருமனும் பன்னிரண்டங்குல நீளமுமுள்ளதாகக் கொள்ளல்வேண்டும். இவை நேரிடாததினங்களிலும், அமாவாசை பிரதமை சஷ்டி நவமி ஏகாதசி முதலிய திதிகளிலும், சங்கிரமணகாலங்களிலும் காஷ்டத்தால் தந்தசுத்திசெய்யாமல் நீரால் பன்னிரண்டுதரம் வாய்கொப்புளித்தல்வேண்டும். இங்ஙனம் விலக்கியதினங்களில் காஷ்டத்தால் ஒருவன் தந்தசுத்திசெய்வானாயின் அவன் சூரியனைப் பக்ஷித்தவனாயும் தன்குலத்தைத் தானே நாசஞ்செய்தவனாயும் ஏழுதலைமுறை பிதுர்க்களை ஹத்திசெய்தவனாயும் ஆய்விடுவன். ஆகையால் விலக்கிய காலங்களில் காஷ்டத்துக்கும் தந்தத்துக்கும் சம்பந்தஞ்செய்வது ஒழிந்து நீரால் ஆசமனஞ்செய்து இரண்டுதரம் அதரத்தைத் துடைத்து தர்ஜனி அங்குஷ்டங்களைச்சேர்த்து நாசித்துவாரங்களையும், அங்குஷ்ட அநாமிகைகளைச்சேர்த்து இரண்டுகண்களையும் இரண்டுசெவிகளையும், கனிஷ்ட அங்குஷ்டங்களைச்சேர்த்து நாபியையும் இருதயத்தையும், விரல்களைச்சேர்த்து சிரசையும் ஸ்பர்சிக்க (தொடல்) வேண்டும்.

ஓ நாரதனே! தந்தசுத்தி செய்யுங்காலம்—சந்தியாகாலங்கள் ஜபகாலங்கள் போஜனகாலங்கள் தேவபிதுர்க்காரியங்கள் செய்யும் மத்தியகாலங்கள் ஸ்திரீசங்கமகாலங்கள் யாகம் தானம் பிரஹ்மயஜ்ஞாதிக ளியற்றும் காலங்கள் ஆகிய இக்காலங்களிலும், ஜபஞ்செய்யும்ஸ்தானம் குருசந்நிதானம் ஆகிய இவ்விடங்களிலும் மலஜலமோசனங்களிலும் செய்தலாகாது. நின்றுகொண்டேனும் நடந்துகொண்டேனும் செபித்தலுங்கூடாது.

இங்ஙனங் கூறிவந்த விதிகளில் பிரமாணபுத்தியும் சிரத்தையுமுள்ளவன் தேசம் காலம் சக்தி தேகநிலைமை ஆகிய இவைகளையறிந்து யுக்தம்போல் செய்யலாமென்றும். பிரமாணபுத்தியும் சிரத்தையும் இல்லாதவன் செய்யாதொழியின் குற்றமாகுமேயன்றி உள்ளவன்செய்தல் குற்றமாகாதென்றுங்கூறினார். சு - ம். (சஉ)

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

லஜ்ஜாபதஸமாராத்யாயைநம:

## மூன்றாம்அத்தியாயம்.

## ஸ்நாநவிதியாதி.

---

நாராயணர் கூறுகின்றார்,—ஓநாரதனே! முன்கூறியவாறு மலசல விசர்ஜனமும் தந்தசுத்தியும் விதிப்படி செய்துமுடித்த பின்னர் ஸ்நானஞ்செய்யவேண்டியது. இதுவும் இன்றியமையாத ஒழுக்கமாதலால் அவ்விதியைக் கேட்பாயாக.

இந்தத்தேகமானது மிகவும் மலினத்தோடுகூடி யிருப்பதாகலானும், ஒன்பது துவாரங்களிலும் மலமே ஒன்பதுவிதமாகவசித்துக்கொண்டிருத்தலினானும், இம் மலசுத்திக்காகப் பிராதக்காலத்தில் ஸ்நானம் விதிக்கப்பட்டிருக்கிறது. அன்றியும் சங்கமம் செய்யக்கூடாத ஸ்திரீயோடு சங்கமஞ்செய்தபாவமும், தானம் வாங்குவதனா லுண்டாகும் பாவமும், இரகசியமாய்ச்செய்யும் பாவமும், ஸ்நானஞ்செய்வதனாற் றொலைந்துபோதலினாலும், ஸ்நானஞ்செய்யாமல் செய்யும் நித்தியகர்மங்களெல்லாம் நிஷ்பலமாய்ப் போம் ஆதலினாலும், பிராதக் காலத்தில் தினந்தோறும் தீர்த்தஸ்நானம் செய்யும்படி விதிக்கப்பட்டிருக்கின்றது. எழுநாள் தர்ப்பையுக்த

ஞய் சந்தியாவந்தனுதிகளை யுத்தேசித்து காலையில் ஸ்நானஞ் செய்யாதவனும், மூன்றுநாள் சந்தியாவந்தனஞ் செய்யாதவனும், பன்னிரண்டுநாள் அக்னிஹோத்ரமில்லாதவனும் சூத்திரத்தன்மையை யடைவான். பிராதக்கால ஸ்நானத்தை விட்டவனுக்கும் அக்னிஹோத்திர காலந்தவறினவனுக்கும் காயத்திரியின் ஜபபலன் இம்மையேயன்றி மறுமையினும் கிடைத்தலரிது.

ஓ நாரதனே! பிராமணனுனவன் ஸ்நானத்தாலுண்டாகும் சுத்தியையும் பலத்தையும் எண்ணி பிராதக்காலத்தில் நதிதீரத்திற் சென்று ஓங்காரத்தோடுகூடிய காயத்திரியை ஸ்மரித்து சிகையை முடித்து முன் ஆசமனஞ்செய்து ஹ்ருதயம் தோள் கண்டம் இவ்விடங்களை நியசித்துப் * பிராணுயாமஞ் செய்தல்வேண்டும்.

அக்னியும் வருணனும் தேவர்களும் சந்திரசூரியர்களும் வாயுவும் காதுகளில் வசிக்கின்றூர்களாதலால் பதிதனேடு பேசினுலும் பொய்சொன்னுலும் தும்மினுலும் எச்சிலுமிழ்ந்தாலும் வலக்காதைக் கையினல் தொட்டால் சுத்தமுண்டாம் ஆதலால் அதனைத் தொடல்வேண்டும்.

தேவருஷி பித்ருக்களைச் சந்தோஷப்படுத்துவதான தர்ப்பணங்களைச்செய்து ஜலத்தினின்றும் வெளியேவந்து சுத்தமானவஸ்திர தாரணமும், பஸ்மருத்திராக்ஷதாரணமும் உடையனுதல் வேண்டும்.

கர்மயோகசாதகன் எப்போதும் ஜபத்துக்கு அவசியமாகக் கொள்ளும் உருத்ராக்ஷதாரண முறைமை யாதெனின்:—கண்டத்தில் முப்பத்திரண்டும் சிரசில் இருபதும் இரண்டுகாதுகளில் தனித்தனி ஆறும் இரண்டுகைகளில் தனித்தனி பன்னிரண்டும் இரண்டு புஜங்களில் தனித்தனி பதினுறும் மார்பில் நூற்றெட்டும் சிரசில் ஒன்றுமாகத் தரித்தல்வேண்டும். இவ்வண்ணம் தரிக்கப்பெற்றவன் நீலகண்டனுய்ப்பிரகாசிப்பன். சிகை காது கண்டம் கரம் உதரம் உபவீதம் முதலியவிடங்களில் தரிக்கும் உருத்திராக்ஷமாலைகளைப் பொன்னினுலாவதுவெள்ளியினுலாவது கட்டி பூஷணம்போலும் அணிந்துகொள்ளலாம். அணிந்துகொள்ளும்போது பஞ்சாக்ஷரத்தையாவது பிரணவத்தையாவது உச்சரித்துப் பத்தியுடன் அணி

* பிராணுயாமம் என்பது வெளிவாயுவைப் பிராணவாயுவோடு சேர்ப்பித்தலாம்.

தல்வேண்டும். சிவஜ்ஞானத்துக்கு ருத்திராக்ஷதாரணம் சாக்ஷாத் சாதனமென்று சிகையில்தரிப்பானாயின் அவனைத் தாரகதத்வமாகவும் இரண்டுகாதில் அணிந்தவனை தேவிதேவனாகவும், யஜ்ஞோபவீதத்திலணிந்தவனைப் பிரமனாகவும், கைகளில்தரித்தவனைத் திக்தேவதையாகவும் பாவித்துப்போற்றவேண்டும். இந்த ருத்திராக்ஷதாரணத்துக்கு பிராமணாதி நான்குஜாதிகளும் பிரமசரியாதி நான்காஸ்ரமிகளும் அதிகாரிகளேயாவர்.

பிராஹ்மணன் ருத்திராக்ஷத்தை மந்திரம் உச்சரித்தேதரித்தல்வேண்டும். ஏனையோர்க் கவ்விதியில்லை. எவரெவர் எப்படியாயினுந் தரிக்கப்பெற்றால் அவரவர் உருத்திரராவதிற்றடையில்லை. காணப்படாததைக் காண்பதனாலும், கேட்கப்படாததைக் கேட்பதனாலும், நினைக்கப்படாததை நினைப்பதனாலும், முகரப்படாததை முகர்வதனாலும், உண்ணப்படாததை உண்பதனாலும், சொல்லப்படாததைச் சொல்வதனாலும் செய்யப்படாததைச் செய்வதனாலும் நடக்கப்படாததை நடத்துவதனாலும் கொடுக்கப்படாததைக் கொடுப்பதனாலும் வரப்பட்ட பாவபேதங்களெல்லாம் உருத்திராக்ஷதாரணத்தால் ஒழிந்துபோம். உருத்திராக்ஷதாரணமுடையோன் புசிப்பானாயின் அது உருத்திரனாகிய மஹாதேவன்புசிப்பதே. அதுபோலவே அவன்பருகுவனவற்றைப் பருகினாலும் வேறு எதனை யனுபவித்தாலும் அவையெல்லாம் அந்த ருத்திரமூர்த்தியே யனுபவிப்பதாகும். இங்ஙனமான சிறப்புடைய உருத்திராக்ஷத்தை எவன்தரிப்பதற்கு நாணமடைகின்றானோ அவன் கோடிஜன்மபரியந்தம் சம்சாரதுக்கத்துக்காளாயிருப்பனேயன்றி மோக்ஷசாதனத்துக்கு ஆளாகான். எவன் ருத்திராக்ஷதாரியைக்கண்டு பரிகாசஞ் செய்கின்றானோ அவன் சங்கரசாதியிற் பிறந்தவனென்று நிச்சயமாய் நினைக்கத்தக்கவனாவான். எவன் உருத்திராக்ஷதாரிகளைக்கண்டு வஸ்திரமாவது தானியமுதலியவைகளையாவதுகொடுக்கின்றானோ அவன் சகலபாவங்களினின்றும் விடுபட்ட புண்ணியசீலனென்று உலகினரால் நினைக்கத்தக்கவனாய் முடிவில் சிவலோகமடையப்பெறுவான். பிதுர்த்திவசங்களில் உருத்திராக்ஷதாரிகளை அறுசுவையோடு உண்பிப்பராயின் பிதுர்க்களெல்லாம் நாங்கள் பிழைத்தோம் பிழைத்தோமென்று சந்தோஷிப்பார்கள். எவன் உருத்திராக்ஷதாரியினது பாதத்தை பிரக்ஷாளனம் (சுத்தி) செய்து அதனைத்தீர்த்தமாகவெண்ணி

மேலே புரோக்ஷி(தெளி)த்துக் கொள்ளுகிறானோ அவன் சகலபாப ங்களினின்றும்நீங்கிச் சிவலோகமடைகின்றான். உருத்திராக்ஷத்தை யணிந்து உருத்திரத்தன்மையைப்பெற்று உருத்திரனென்று பெயர் பெறுகின்றனர். அஃதேபோல் உருத்திராக்ஷத்தையணிந்து பிரஹ்மத்வத்தை யடைந்து பிராஹ்மணனாகின்றான். ஆகலான் உருத்ராக்ஷத்தை எவ்வகையான ஆபரணங்களிலும் சேர்த்துத் தரித்தல் வேண்டும். அதனிலும் சிறப்புடைய தொன்றுமில்லை. ஆகலான் எந்தச் சாதியிற் பிறந்த எந்த மாநுடனாவது சாதா ரணமாய்க் கிடைத்தற்குக்கூடிய உருத்திராக்ஷத்தை எந்த அங் கத்திலாவது மந்திரத்தோடாவது மந்திரமின்றியாவது பக்தியோ டாவது அஃதின்றியாவது வெட்கப்பட்டாவது தரிப்பானாயின் அந்தமாநுடன் சர்வபாபவிமுக்தனாய் சிவஜ்ஞானத்தை யடை கிறான். இன்னமும் இதன்மகிமையைச் சொல்ல எனக்குச் சத்தியில்லை. ஓநாரதனே! இதுகாறும் நான்சொல்லிவந்த பலகார ணங்களினாலும் பலமகிமைகளாலும் சத்புருஷனாயுள்ளவன் சர்வப் பிரயத்தினத்தினாலும் உருத்திராக்ஷதாரணம் செய்துகொள்ள வேண்டும்.

இனி முன் ஸ்நானஆரம்பத்தில் காயத்திரிமகாமந்திரத்தைத் தியானிக்கவேண்டுமென்று கூறினேனன்றோ அந்தக்காயத்திரியின் மகிமையைக்கேட்பாய்,—கானம் செய்கின்றவர்களைக் காக்கின்ற படியால் காயத்திரி எனப்பெயர்பெற்றது. அது ஓங்கார மந் திரத்தோடும் மூன்று வியாகிருதியோடும் கூடியிருப்பது. இது தான் வைதிகமந்திரம். இதனை வேதசம்பன்னனான பிராஹ்மணன் வைதிகதர்மத்தில் புத்தியை யுடையவனாய் எப்பொழுதும் ஜபித்தல் வேண்டும். லவுகிகமந்திரங்களால் வரப்பட்டபலன் கோசிருங்கத் தில் கடுகு எவ்வளவுகாலம் நிற்குமோ அவ்வளவுபலன்றான் கிடைக் கும். ஆதலால் இந்த லவுகிகமந்திரத்தினால் நூறு ஜபஞ்செய்தா லும் பிதுர்க்களைக் கரையேற்றமாட்டாது.

வைதிகமந்திரம் செபத்தோடுகூடியது சகர்ப்பம் என்றும் தியானமாத்திரமாயிருப்பது அகர்ப்பமென்றும் சொல்லப்படும் என்றனர். (சு-ம். ௩சுரு)

முன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

———

உ

லம்படாயைநம:

நான்காம் அத்தியாயம்.

## உருத்திராக்ஷவுற்பத்தியாதி.

---

நாரதர் ஓநாராயணரே! இப்போது உம்மால் உருத்ராக்ஷமகிமை கூறப்பட்டதன்றோ; அந்த உருத்திராக்ஷத்துக்கு அவ்வளவுமகிமையும் பூஜ்யதையும் வருதற்குக்காரணம்யாது கூறுமென்றார். நாராயணர் ஓ முனிஸ்ரேஷ்டனே! நீ கேட்டபடியே பூர்வத்தில் கிரீசப்பிரபுவாயிருக்கின்ற மஹாருத்திரை ஷண்முகக்கடவுள் வினவினார். அதனைக்கேட்ட மஹாதேவர் தமதுகுமாரனாகிய ஷண்முகக்கடவுளைக் கருணையுடன்பார்த்து அந்த உருத்ராக்ஷத்தின் உண்மையைக் கூறுகின்றேன் கேட்பாயாகவென்று கூறத்தொடங்கினார்.

ஓ குழந்தாய்! பூர்வத்தில் திரிபுரரென்னும் அசுரர் ஒருவராலும் ஜயிக்கக்கூடாதவரா யிருந்ததுமன்றி திருமால் பிரமன் முதலிய தேவர்களும் அவ்வசுரரால் அடிக்கப்பட்டவராயினர். அதனால் அவர்கள் எம்மிடம்வந்து தங்கள்குறைகளைக்கூறினர். அக்குறைகளைக் கேட்ட யாம் வேறொருசிந்தனையற்று மனோகரமாயும் சகலதேவஸ்வரூபமாயும் அக்கினிபோற் சுடர்விட்டெரிப்பதாயும் பயங்கரமான ரூபமுள்ளதாயும் சர்வவிக்னங்களையும் நிவிர்த்திசெய்வதாயும் துக்கசிந்தனைகளைப் போக்கடிப்பதாயும் அகோரமென்னும் பெயருள்ளதாயும் பிரகாசிக்கின்ற மகாஸ்திரத்தை ஆயிரந்திவ்யவருஷம் கண்களைமூடிக்கொண்டு சிந்தித்திருந்து பின்னர்விழித்தேம். அப்பொழுது எமது மூன்றுகண்களிலிருந்து ஜலபிந்துக்கள்விழுந்தன. அதினின்றும் மஹாஉருத்திராக்ஷ விருக்ஷங்களுண்டாயின. ஓ ஷண்முகனே! எமது ஆக்ஞையால் யாவருக்கும் நன்மையுண்டாக்குப்பொருட்டு அவ்விருக்ஷங்களினின்றும் முப்பத்தெட்டு பேதமாயுள்ள உருத்திராக்ஷங்களுண்டாயின. அவற்றுள் வலக்கண்ணாகிய சூரியநேத்திரத்திற் றோன்றியவை கபிலநிறமுடையனவாய்ப் பன்னிரண்டு பேதமாயும், இடக்கண்ணாகிய சோமநேத்திரத்திற்றோன்றியவை வெண்ணிறமுடையனவாய் பதினாறு பேதமாயும், அக்னிநேத்திரத்திற்றோன்றியவை கறுப்புநிற முடையனவாய்ப் பத்துப்

பேதமாயும் உள்ளன. இவற்றுள் வெண்ணிறமுள்ளது பிராமணசாதியென்றும், செந்நிறமுள்ளது க்ஷத்திரியசாதியென்றும், மிச்ர (கலந்த) நிறமுள்ளது வைசியசாதியென்றும், கருமைநிறமுள்ளது சூத்திரஜாதி என்றுஞ் சொல்லப்படும். இனி அம்மணிகளுடைய முகங்கள் இத்தனையென்பதும் அவற்றின் சொரூபங்கள் இனைத்தென்பதும் அவற்றாலுண்டாகும் பிரயோசனங்கள் இவையென்பதுங் கேட்பாயாக.

ஒருமுகமுள்ள ருத்திராக்ஷம்—சாக்ஷாத் சிவசொரூபம். பிரமஹத்தியைப்போக்கும். இரண்டுமுகமுள்ளது—தேவதேவிசொரூபம். அது புத்திபூர்வம் அபுத்திபூர்வம் என்றிரண்டு விதமாயுள்ள பாவங்களைப்போக்கும். மூன்றுமுக முள்ளது—சாக்ஷாத் அக்னிசொரூபம். அது ஸ்திரீஹத்தியை ஓர்க்ஷணத்திற் போக்கும். நான்குமுகமுள்ளது—பிரமசொரூபம். அது நரஹத்தியைப் போக்கும். ஐந்துமுக முள்ளது—காலாக்னி ருத்திர சொரூபம். அது புசிக்கக்கூடாதனவற்றைப் புசித்ததனாலும் சங்கமஞ்செய்யக்கூடாத ஸ்திரீயைச் சங்கமஞ் செய்ததனாலும் உண்டாகிய பாவங்களையும் இவைபோன்ற பாவங்களையும் போக்கும். ஆறுமுகமுள்ளது—சுப்பிரமணியசொரூபம். அது பிரஹ்மஹத்தியாதி பாவங்களைப் போக்கும். இது வலக்காதில் அணியத்தக்கது. ஏழுமுகமுள்ளது—மன்மதசொரூபம். அது பொன்முதலியவற்றைக் களவு செய்த பாவங்களைப் போக்கும். எட்டுமுகமுள்ளது—விநாயக சொரூபம். அது அன்னகூடம் தூலகூடம் சுவர்ணகூடம் துஷ்குல ஸ்திரீசங்கமம், குருபத்தினிசங்கமம் முதலான பாவங்களையும் சர்வ விக்கினங்களையும் போக்கி சகல குணங்களையும்கொடுத்து அந்தியத்தில் பரமபதத்தைக்கொடுக்கும். ஒன்பதுமுகமுள்ளது—வைரவஸ்வரூபம். அது புத்திமுத்திகளையும் எமக்குச்சமானமான குணத்தையும் கொடுக்கும். ஆயிரம் புருணஹத்தியையும் நூறு பிரமஹத்தியையும்போக்கி அந்தியத்தில் எம்மையடைவிக்கும். இது இடத்தோளில் அணியத்தக்கது. பத்துமுகமுள்ளது—விஷ்ணுசொரூபம். அது கிரகதோஷங்களையும் பூதபேதாள பைசாச பிரஹ்ம ராக்ஷசாதி பீடைகளையும் சர்ப்பவிஷங்களையும் போக்கும். பதினொருமுக முள்ளது—ஏகாதசருத்ரசொரூபம். அது ஆயிரம் அஸ்வமேதம் நூறுவாஜபேயம் கோடிகோதானம் செய்த பலனைக் கொடுக்கும்.

இதுசிகையி லணியத்தக்கது. பன்னிரண்டுமுகமுள்ளது துவாதசா தித்தசொரூபம். அது கோமேத அஸ்வமேதங்கள் செய்தபலன் களைக் கொடுக்கும். கொம்புள்ள மிருகங்களாலும் ஆயுதபாணிக ளா யிருக்கின்றவர்களாலும் புலிமுதலிய துஷ்டமிருகங்களாலும் உண்டாகும் பய கம்பனுதிகளும் தேகவியாதிகளால் உண்டாகும் துன்பங்களும் ஆனை குதிரை மான் பூனை சர்ப்பம் எலி தவளை கழு தை நாய் இவைகளைக் கொன்றதனு லுண்டாகும் பாவங்களும் போகும். இதுகாதுகளில் அணியத்தக்கது. பதின்மூன்று முகமுள் ளது ஷண்முகக்கடவுளுக்குச் சமானமானது. அது தாய் தந்தை சகோதரன்முதலியோர்களைக் கொன்றபாவங்களைத் தொலைக்கும், சர்வகாமங்களையுங் கொடுக்கும், ரசம் ரசாயன முதலிய சகல போக்ய பதார்த்தங்களையும் நினைத்தவண்ணங்கொடுக்கும். இதிற் சந்தேகமில்லை. பதினன்கு முகமுள்ளது—எவனுக்குக் கிடைக் கிறதோ, எவன் தரிக்கின்றானே அவன் சிவபெருமானுக்குச் சமான மானவனய் தேவர்களால் பூஜிக்கப்பட்டு மோக்ஷத்தையடைகிறான். அதன் மகிமை சொல்லமுடியாது. இந்த உருத்திராக்ஷமஹிமையை யும் அதனை யணிவதனுலுண்டாகும் பயன்களையும் அடிக்கடி சொன் ஞலும் என்னுசையடங்குமோ. உருத்திராக்ஷதாரியே பரகதியை யடையத்தக்கவன். அவனே எப்போதும் தேவர்களால் பூஜிக்கத் தக்கவன். ஆகலான் பிராஹ்மணன் பக்தியோடு ஒரு உருத்திரா க்ஷத்தை சிரசில் தரித்திருத்தல் வேண்டும்.

சிரமுதலிய அங்கங்களில் அணியும் உருத்திராக்ஷமாலைகளுக்கு இருக்கவேண்டிய மணிகளின் விதி யாதெனின், சிரமாலைக்கு மணி கள் இருபத்தாறும், மார்பு மாலைக்கு ஐம்பதும், தோட்களுக்கு பதி ஞறும், மணிக்கட்டுகளுக்குப் பன்னிரண்டுமாம். நூற்றெட்டு ஐம் பது இருபத்தேழு என்னும் எண்களோடுகூடிய உருத்திராக்ஷமாலை களைத் தரிக்கப்பெற்றாலும் ஜபிக்கப்பெற்றாலும் அவனுக்கு ஒவ் வொரு க்ஷணத்துக்கு ஒவ்வொரு அஸ்வமேதபல னுண்டாவதோடு இருபத்தொரு குலத்தை யுத்தாரணஞ்செய்த பலனும் எப்பொழு தும் சிவலோகமே வாழுமிடமாக விருந்து பூஜ்யமாய் வாழும்வாழ் வும் உண்டாகும் என்றனர். (சு - ம். ௬௦.)

நான்காம் அத்யாயம் முற்றிற்று.

---

லகுளேஶ்வர்யைநம:

# ஐந்தாம் அத்தியாயம்.

## ஜபமாலாவிதி.

சிவபெருமான் கூறுகின்றார்,—ஓஷண்முகனே! இனி உனக்கு ஜபமாலையின்விதியைக் கூறுகின்றேன் கேட்பாயாக. உருத்திராக்ஷத்தின் மேற்பக்கமாகிய முகம் பிரஹ்மா, கீழ்ப்பக்கமாகிய புருஷ்டம் விஷ்ணு, நடுக்கண்டமாகிய வட்டவடிவம் உருத்திரன். இவ்வாறு திரிமூர்த்திசொரூபமாயிருத்தலால் போகமோக்ஷத்தைக் கொடுப்பதாகும். இது வெண்மை செம்மை கறுமை என்னும் மூன்றுநிறத்தையும், முட்போன்ற வடிவத்தையும், பஞ்சமுகத்தையும் உடையது. இதனை ஜபமாலையாகக் கோர்த்துக் கொள்ளுங்கால் முகத்தோடுமுகமும் பின்னோடுபின்னுமாகப் பசுவின்வாலைப்போல் இருபத்தைந்து மணிகளைக் கயிற்றிற்கோர்த்துச் சேர்த்து அதில் மேருவாகக் கோர்க்கும் உருத்திராக்ஷத்தின்முகம் மேல்நோக்கியிருக்க நாகபாசத்திற் சேர்த்துக்கொள்ளல் வேண்டும். ஜபமந்திரம் சித்தியாதற்பொருட்டு அந்தஜபமாலையைப் பஞ்சகவ்யத்தானும் சந்தனதீர்த்தத்தானும் அபிஷேகஞ்செய்து பின்னர் சிவசத்திமந்திரங்களால் நியசித்து அஸ்திரமந்திரத்தால் தொட்டு கவசத்தால் அவகுண்டனஞ்செய்து மூலத்தால்அபிமந்திரித்து சத்யோஜாதாதிகளால்புரோக்ஷித்து மூலமந்திரம் நூற்றெட்டுருசெபித்து சுத்தபூமியில் வைத்து சகலகாரணனாகிய பரமசிவனை உமையோடு பிரதிஷ்டை செய்தல்வேண்டும். அது சர்வகாமபலத்தையுங் கொடுக்கும். எந்தத் தெய்வத்துக்கு எந்தமந்திரமோ அந்த மந்திரத்தால் பூசித்தல்வேண்டும். ஜபமாலையைச் சிரசிலாவது கழுத்திலாவது காதிலாவது தரித்துக் கொள்ளல்வேண்டும். ஜிதேந்திரியனாய் உருத்திராக்ஷமாலையைத் தரித்துக்கொண்டே ஜபஞ்செய்யவேண்டும்.

கண்டத்திலும் சிரசிலும் மார்பிலும் காதுகளிலும் தோள்களிலும் விதிப்படி உருத்திராக்ஷங்களை மிக்கபக்தியோடு தினமுந் தரித்தல் வேண்டும். ஸ்நானம் ஜபம் ஹோமம் வைஶ்வதேவம் சிவார்ச்

சனே பிராயச்சித்தம் சிரார்த்தம் தீக்ஷை முதலியவைகளைச் செய்கி ன்றகாலத்து உருத்திராக்ஷதாரணம் விசேடமெனப் புகழ்ந்து விதி க்கப்பட்டிருக்கிறது. ஆகையால் வைதிககர்மங்களை அறிவின்மை யால் ஒருவன் உருத்திராக்ஷதாரணமின்றிச் செய்வானாயின் அவன் நரகமடைவதிற் சந்தேகமில்லை.

உருத்திராக்ஷத்தைக் கயிற்றிற்கோர்த்து சிரசிலும் கண்டத்தி லும் தரிக்கவேண்டும். உருத்திராக்ஷத்தைப் பொன் மணி இவைக ளோடுசேர்த்துக் கோர்ப்பதுசுபமாகும். மற்றவைகளோடு சேர்ப் பது அசுபமாகும். அசுசியாய் எப்போதும் உருத்திராக்ஷம் தரித்தல் கூடாது. உருத்திராக்ஷ மரத்திலுண்டான காற்றிலகப்பட்ட திரண முங்கூட மறுபடியும் திரும்பாத புண்ணியலோகத்தை யடைகிறது. ஓஷண்முகனே! உருத்திராக்ஷந் தரிக்கப்பெற்றவன் பாபஞ்செய்பவ னானாலும் அவன் அப்பாவத்தினின்றும் விடுபடுகிறானென்று ஜாபா லோபநிடதங் கூறுகின்றதல்லவா! இவ்வண்ணங்கூறியதே யல்லா மல் நாற்கால் செந்துக்களும் உருத்திராக்ஷந் தரிக்கப்பெறுமானால் அவைகளும் உருத்திரத்தன்மையை யடைகின்றனவென்றால் மனிதர் கள் உருத்திராக்ஷமாலிகையைத் தரிக்கப் பெறுவார்களாயின் அவ ர்கள் உருத்திரத்தன்மையை யடைவார்க ளென்பதைச் சொல்லவே ண்டுமா. உருத்திராக்ஷமொன்றைச் சிரசில் எப்போதும் தரித்துக் கொண்டிருந்தால் அதுசகலபாவத்தையும் சகலதுக்கத்தையும் நாசஞ் செய்யும். யாவர் உருத்திராக்ஷத்தால் அலங்கரிக்கப்பட்டு சம்புநாம த்தை யுச்சரிக்கின்றார்களோ அவர்கள்தான் பாகவதோத்தமரெ ன்று சொல்லப்படுவார். எந்தவிதமான சிரேயசை விரும்புகின்றவ ர்களும் உருத்திராக்ஷதாரணஞ் செய்துகொள்ளல்வேண்டும். சிகை கண்டம் காது கை வயிறு இந்தவிடங்களில் தரித்துக்கொண்டால் அது சகலநன்மைகளையும் கொடுக்கும். திரிமூர்த்திகளும் அவர் களுடைய விபூதியாகவிருப்பர். ஆதலால் இதரதேவதைகளிடத்தில் பக்தியுடையவர்களாயிருந்தாலும் உருத்திராக்ஷந் தரித்தல் வேண் டும். (இவ்வுண்மையையுணர்ந்தே) சப்தருஷிகளும் ஏனையருஷிக ளும் இவர்களுடைய வம்சத்திற்பிறந்தவர்களும் சிரௌதகர்மங் களை யனுஷ்டிக்கின்றவர்களும் உருத்திராக்ஷதாரணஞ் செய்துகொ ண்டு சுகத்தை யடைகின்றனர். இதைத் தரிப்பதில் சிரத்தை யில் லாதவர்களுக்கு உண்மையான வேதசித்தியும் மோக்ஷமும் உண்

டாகிற தில்லையென்றும் ஒருவனுக்கு அநேக சன்மமுடிவில் மகா தேவனுடைய அனுக்ரகத்தால் உருத்திராக்ஷத்தைத்தரிக்க இச்சை யுண்டாகிறதேயன்றி தன்னுடைய சுபாவ அறிவால் உண்டாகிற தில்லை என்றும் ஜாபால உபநிடதங் கூறுகின்றதல்லவா!

ஓ புத்திரனே! உருத்திராக்ஷமகிமையையுணர்ந்த முநிவர்க ளும் அப்படியே கூறுகின்றனர். இந்த உருத்ராக்ஷத்தினால் உண்டா கும் பிரயோசனம் மூவுலகினும் பிரசித்தி பெற்றிருக்கின்றது. கனிரூபமாயிருக்கின்ற உருத்திராக்ஷத்தைக் கண்ணினாற் கண் டால் மகாபுண்ணியமும், கையினால் தொட்டால் அதனினுங் கோ டிபலனும், உடம்பில் தரித்துக்கொண்டால் அதனினும் நூறுகோடி புண்ணியமும் உண்டாம். அந்த உருத்திராக்ஷத்தால் நாடோறும் ஜபஞ் செய்துவந்தால் அதனினும் ஆயிரத்து நூறுலக்ஷங்கோடி பலனுண்டாம் என்பதிலும், சிரம் கண்டம் காது மார்பு கைகள் இந்த அங்கங்களில் எவன் தரித்துக் கொள்ளுகிறானோ அவன் உருத்திரசொரூபி என்னும் விஷயத்திலும் சந்தேகமேயில்லை.

இந்த உருத்திராக்ஷதாரியானவன் இப்பூவுலகில் சகலப்பிராணி களாலும் துன்பம் அடையப்படாதவனாய் சம்புவைப்போல் திரி ந்துகொண்டிருப்பன். இதுவுமன்றி சுராசுரர்களால் எவ்வண்ணம் சிவபெருமான் சேவிக்கத்தக்கவனா யிருக்கின்றாரோ அவ்வண்ணமே இந்த உருத்ராக்ஷதாரியும் யாவராலும் சேவிக்கத்தக்கவனா யிருப் பன். யாவரினுந் தாழ்ந்த கீழ்மகனாயிருந்தாலும் தன் சாதித்தொழிலை விட்டு வேறுசாதித்தொழிலைச் செய்பவனாயிருந்தாலும் சகலபாவங் களோடு கூடினவனாயிருந்தாலும் உருத்திராக்ஷதாரணஞ் செய்து கொள்பவனா யிருப்பானாயின் அவன் பாவத்தினின்றும் விடுபட்டவ னாய் மேலானதொழிலைச்செய்யும் மேன்மகனாகின்றான். நாயாயிருந் தாலும் கழுத்தில் உருத்திராக்ஷந் தரித்திருக்கப்பெறுமானால் அது வும் முத்தியை யடையுமென்று சொல்லப்பட் டிருக்கிறபோது மாநு டனுக்கு என்சொல்லவேண்டும். ஒருவன் ஜபத்தியானங்க ளில்லாதவ னாய் உருத்திராக்ஷமாத்திரம் தரிப்பவனாயிருப்பின் அவன் சர்வ பாவங்களினின்றும் விடுபட்டவனாய் மேலானகதியை யடைகி றான். ஆகலான் ஒருருத்திராக்ஷத்தையாவது எத்தனத்தோடு தரிக்கவேண்டும். அப்படித்தரிக்கின்றவன் இருபத்தொரு தலை

முறைகளை உய்வித்து சிவலோகத்தில் பூஜிக்கப்பட்டவனுயிருப்பன். ஓ ஷண்முகனே! இன்னமும் உருத்திராக்ஷவிதியைச் சொல்லுகிறேன் கேட்பாயாக வென்றார். (சு - ம் ௩௫அ)

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

௨

லாங்கலாயுதாயைநமஃ

## ஆறும் அத்தியாயம்.

## உருத்திராக்ஷமகிமை.

---

ஈஸ்வரர்கூறுகின்றார். ஓ ஷண்முகனே! குசக்கிரந்தி புத்திரஜீவம் என்றுசொல்லப்பட்ட அனேகமணிகளில் ஒன்றேனும் உருத்திராக்ஷத்தின் பதினாறி லொருபங்குக்கும் ஒப்பாகாது. புருஷர்களில் விஷ்ணுவும் கிருகங்களில் சூரியனும் நதிகளில் கங்கையும் இருடிகளில் காசிபரும் குதிரைகளில் உச்சைஸ்ரவமும் தேவர்களில் மஹாதேவரும் தேவிகளில் கௌரியும் எவ்வாறு சிறப்புடையவர்களோ அவ்வாறேமணிகளில் உருத்திராக்கமணிசிறப்புடையது இதனைத் துதிப்பதைக்காட்டிலும் துதியும் அணிவதைக் காட்டிலும் விரதமும் தானஞ்செய்வதைக்காட்டிலும் குறைவற்றதானமும் வேறில்லை. ஆகலான் சாந்தியுள்ளசிவபக்தர்களுக்கு உத்தமமான உருத்திராக்ஷத்தைத் தானஞ்செய்யவேண்டும். இத் தானபுண்ணியபலத்தின் முடிவை என்னுற் சொல்லிமுடியாது உருத்திராக்ஷத்தைக் கண்டத்திற் றரிக்கின்றவனுக்கு எவன் அன்னங்கொடுக்கிறானே அவன் தனது இருபத்தொரு தலைமுறைகளைக் கடைத்தேறச்செய்து சிவலோகமடைகிறான். எவனதுநெற்றியில் விபூதியில்லையோ! எவனது சரீரவுறுப்புகளில் உருத்திராக்ஷதாரண மில்லையோ! எவனது கிருகத்தில் சிவபூஜையில்லையோ! அவன் பிராஹ்மணனுயினும் சக்கிலியினும் அதமனுவன். உருத்திராக்ஷம் ஒருவனது சிரசில் இருக்குமாயின் அவன் மாமிசத்தைப் புசித்தாலும் மதுபானஞ்செய்தாலும் சண்டாளசம்பந்த மடைந்தாலும் அவ்வப் பாவங்களினின்றும் விடுபடுகிறான். சகலவேதங்களையும் அப்பியாசஞ்செய்து சகல யஜ்ஞங்களையும் தவங்களையும் தானங்களையுஞ் செய்தால் எந்தப்

பலனுண்டாகுமோ அந்தப்பலமும், நான்குவேதங்களையும் புராணத்களையம் சர்வவித்தைகளையும் படித்தால் எந்தப்பயனுண்டாகுமோ அந்தப்பயனும் தீர்த்தயாத்திரைசெய்வதனுல் எந்தப்புண்ணியமுண்டாகுமோ அந்தப்புண்ணியமும், உருத்திராக்ஷம் தரிப்பதனுல் அப்போதே யுண்டாகும் ஒருவன் மரணகாலத்தில் உருத்திராக்ஷத்தைத் தரித்துக்கொண்டு இறப்பானுகில் அவன் சிவத்தன்மையடைந்து மீண்டும் பிறவாநெறியைப் பெறுகின்றுன். 'உத்திராக்ஷத்தைக் கண்டத்திலாவது கரத்திலாவது அணிந்துகொண்டு ஒருவன் இறப்பானுகில் அவனது தலைமுறையைப் புனிதமாக்கி சிவலோகத்தையடைகிறுன். பிராமணராஞலும் சண்டாளராஞலும் குணமுள்ளவராஞலும் குணமில்லாதவராஞலும் பஸ்மருத்திராக்ஷங்களைத் தரிப்பாராயின் அவர் சிவத்தன்மையை யடைவர். சுத்தராகவிருந்தாலும் அசுத்தராகவிருந்தாலும் உண்ணுதனவற்றை உண்பவராஞலும் மிலேச்சராஞலும் சண்டாளராஞலும் சகலபாபங்களோடு கூடினவராஞலும் அவர்கள் உருத்ராக்ஷதாரண மாத்திரத்தில் உருத்திரமூர்த்திகள் என்பதில் சந்தேகமில்லை.

சிரசில் தரித்தால் ஒருகோடிபங்கும், காதுகளில்தரித்தால் பத்துகோடிபங்கும், கண்டத்தில் தரித்தால் நூறுகோடிபங்கும், உச்சியில் தரித்தால் ஆயிரங்கோடிபங்கும், உபவீதத்தில் தரித்தால் பதிஞயிரங்கோடிபங்கும், தோளில் தரித்தால் லக்ஷங்கோடிபங்குமான பலனும் மணிக்கட்டில் தரித்தால் மோக்ஷசாதனமும் உண்டாகும்.

உருத்திராக்ஷத்தை யணிந்தவன் வைதிககர்மத்தைச் சிறிதுசெய்வானுயினும் அவன்பக்தியோடு முற்றுஞ்செய்தபலனை அடைகிறுன். பக்தியில்லாதவனுயும் பாவங்களை நாடோறும் செய்பவனுயும் உள்ள மனிதனேயாயினும் அவன் கண்டத்தில் உருத்திராக்ஷந் தரிப்பானுயின் சர்வபாபத்தினின்றும் விடுபட்டு முக்தனுகின்றுன். எவன் உருத்திராக்ஷத்தில் 'மனமுள்ளவனே எவன் அதைத் தரிக்கின்றுனே அவன் மஹேசலோகத்தில் இலிங்கமூர்த்தியைப்போல் யாவராலும் நமஸ்கரிக்கத்தக்கவ னுகின்றுன். வித்தையில்லாதவனுயினும் வித்தை யுடையவனுயினும் உருத்திராக்ஷந் தரிப்பானுயின் அவன் கீடகதேசத்துக் கர்த்தபம் (கழுதையைப்) போல் சிவலோகமடைகிறுன் என்றுகூறினர்.

ஸ்கந்தமூர்த்தி? ஓ பிரபுவே! கழுதை எந்தக்காரணத்தால் உருத்திராக்ஷத்தைத்தரித்து சிவலோகமடைந்தது? அதனை அருள்செய்யவேண்டு மென்றனர். சிவபெருமான், அப்பனே! விந்தியபர்வதத்தில் ஓர்கழுதை உலாவிக்கொண்டிருந்தது. அதன் முதுகின்மேல் வியாபாரியொருவன் உருத்திராக்ஷமூட்டையைச் சுமத்தி நடத்திக்கொண்டுபோக அது அதிகபாரத்தினால் அம்மூட்டையைச் சுமக்கலாற்றாது வருத்தமுற்று பூமியில் வீழ்ந்து உயிர்விட்டது. அப்போதே அது திரிநேத்திரமும் திரிசூலமும் உடைய சிவரூபமடைந்து என்சமீபத்தை யடைந்தது; என்றுகூறி மறுபடியும் உருத்திராக்ஷமகிமையைக் கூறத்தொடங்கினர்.

தரிக்காமல் சுமந்ததற்கே சிவசாரூப்பியத்தைக் கொடுக்கும் அரியமகிமையுடைய உருத்திராக்ஷத்தை ஒருவன் தரிப்பானானால் அவன் உருத்திராக்ஷத்தில் எத்தனை முகம் இருக்கின்றதோ அத்தனை முகத்திற்கும் ஒவ்வொருயுகம் அளவாக சிவலோகத்தில் பூஜிக்கப்படுகிறான்.

இதுபோன்ற அநேகமகிமைகளைக் கூறத்தொடங்குவோர் தங்கள் சீடர்களுக்குச் சொல்லவேண்டுமேயன்றி, சீடராகாதவர்க்கும் பஸ்மருத்திராக்ஷங்களில் பக்தியில்லாதவர்களுக்கும் பஸ்மம் இத்தன்மைத்தென்றும் உருத்திராக்ஷம் இத்தன்மைத்தென்றும் அறியப்பெறாத மூடர்களுக்கும் ஒருபொழுதும் சொல்லக்கூடாது.

ஓ குமாரனே! உருத்திராக்ஷதாரணபுண்ணியத்துக்கு எவ்வகைத்தான புண்ணியம் சமமாகும்? ஆகையால் உண்மையையறிந்த முனிவர்கள் உருத்திராக்ஷந் தரிப்பதையே பெரியவிரதமாகச் சொல்லுவர். எவன் நியமமுள்ளவனாய் ஆயிரம் உருத்திராக்ஷந் தரிப்பானோ அவன் உருத்திரமூர்த்தி எப்படியோ அப்படியேதான். அவனைத் தேவர்களெல்லாம் வணங்குவர். ஆயிரம்உருத்திராக்ஷம்கிடைக்காமற்போமாயின் தோள்களில் தனித்தனி பதினாறும், மணிக்கட்டுகளில் தனித்தனி பன்னிரண்டும், மார்பில் நூற்றெட்டும், கண்டத்தில் முப்பத்திரண்டும், உச்சியில் ஒன்றுமாக எவன்தரிப்பானோ அவன் உருத்திரமூர்த்தியைப்போல் பூஜிக்கப்படுகிறான். முத்து பவளம் ஸ்படிகம் வெள்ளி வைடூரியம் பொன் இவைகளோடு கலந்து தரிப்பவன் சிவனேயாய்விடுவன். உருத்திராக்ஷமாத்திரம் தரிப்பானாயின் சூரியனைக் கண்ட இருள் போல் அவனைப் பாவங்கள் விட்டுப்போம்.

உருத்திராக்ஷ மாலையைக்கொண்டு ஜபிக்கிறமந்திரமானது அள வில்லாத பலனைக்கொடுக்கும். அநேக புண்ணியங்களைக் கொடுக் கத்தக்க உருத்திராக்ஷங்களில் ஒன்றேனும் தரிக்கப் பெறாதவனது ஜன்மம், பஸ்மத்தினால் திரிபுண்டாம் அணியப்பெறாதவனது சரீ ரம் எவ்வாறு வீணாகுமோ அவ்வாறு வீணனதாகும். எவன் உருத்தி ராக்ஷத்தைச் சிரசில் தரித்து ஸ்நானஞ் செய்கின்றானோ அவனுக்கு கங்காஸ்நானபலன் உண்டாகிறதில் சந்தேகமில்லை. ஒருமுகம் ஐந்து முகம் பதினொருமுகம் பதினான்குமுகம் உள்ளருத்திராக்ஷங்கள் சங்கரஸ்வரூபமென உலகினரால் தியானித்துப் பூஜிக்கப்பட்டுவரு கின்றன. தரித்திரன் உருத்திராக்கமணியினிடத்தில் பக்தியுள்ளவ னாய்த் தரிப்பானாயின் அவன் உலகாளும் அரசனாவன். இதற்குப் புராணசம்மதமான ஓர் இதிகாசங் கூறுகின்றேன் கேட்பாயாக.

கோசலதேசத்தில் தர்மாத்மாவாயும் வேத வேதாந்தங்களை அறிந்தவனாயும் கிரிநாதன் என்னும் பெயரோடு ஓர் பிராமண னிரு ந்தான். அவனுக்கு அழகான உருவமுள்ளவனாய் யவ்வன வயதுள் ளவனாய் மன்மதன்போல் அழகுள்ளவனாய் யாகஞ்செய்பவனாய் அதனால்தீக்ஷிதனென்று அழைக்கப்பட்டவனாய் குணநிதி யென் னும் பெயருடையவனாய் ஓர் புத்திரனிருந்தான். அவன் சுதீக்ஷண ன் என்னும் தனது ஆசிரியனுடைய முக்தாவளி என்னும் பத்தினி யைத் தனதுசௌந்தரியத்தினாலும் யௌவனத்தினாலும் மதகர்வித த்தினாலும் மோகிக்கச்செய்து சிலகாலம் அவளுடன் கலந்து குருவி னிடத்துள்ள அச்சத்தினால் அவருக்கு விஷங்கொடுத்துக்கொன்று பின் யாதொரு அச்சமுமின்றி குருபத்நியுடன் புணர்ந்திருந்தனன். இதனை அவனது தாய்தந்தையர்களறிய, அதனை இவனறிந்து அவ்விருவருக்கும் விஷங்கொடுத்துக் கொன்று தன் கையிலுள்ள பொருளெல்லாவற்றையும் அழித்து பின்னர் அந்தணர்களுடைய கிருகத்தில் திருடுவதற் காரம்பித்தனன். அதுவுமன்றி கட்குடிய னாய் ஒருவரையு மதியாது திரிந்துக்கொண்டிருந்தனன். இவனது செய்தியெல்லாம் ஞாதிகள் அறிந்து அவனைப் பயமுறுத்தி ஊரிலி ல்லாவண்ணம் துறத்த, அவன் அவ்விடம்விட்டு குருபத்தினியோடு ஓர் பெருங்காடு அடைந்து அம்மார்க்கத்தில் வரும் அந்தணரிடத் துள்ள பொருளைக் கொள்ளையிட்டு அநேகநாள் கழித்துவந்தனன். அப்போது அநேகயமபடர்கள் ஓர்புறமும் சிவகணங்கள் ஓர்புற

மும் வந்து இவனைக்கொண்டுபோக முயன்றனர். அக்காலத்தில் யம தூதர் சிவதூதர்களைப்பார்த்து இவன் என்ன புண்ணியஞ் செய்தானென்று இவனைக் கொண்டுபோக வந்தீர்கள் என்றுகேட்க, சிவதூதர்கள் ஓ யமபடர்களே! இறந்துபோன இவ்விடத்துக்குப் பத்துமுழந்தூரத்தில் உருத்திராக்ஷமிருக்கின்றதல்லவா இவ்வளவு சமீபத்தில் இறக்கப்பெற்ற இவன் எப்படிப் பாவியாவன்? நீவிர் உருத்திராக்ஷ மகிமையை நன்றுயறிந்திருப்பீர்களாயின் இவனைக் கொண்டுபோதற்கு துணிந்து இங்குவருவீர்களா வென்றுகூறி, அவனுக்குத் திவ்யரூபங்கொடுத்து திவ்யவிமானத்தி லேற்றிச் சிவ சந்நிதியிற் சேர்த்தனர். இவ்வண்ணம் பாபத்தை நசிக்கச்செய்து மஹாபுண்ணியத்தைக் கொடுப்பதாயுள்ள உருத்திராக்ஷமஹிமையைச் சுருக்கமாய்க் கூறினேனென்றனர். (சு - ம் ருச)

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

லப்தரஸாயைநமஃ

## ஏழாம் அத்தியாயம்.

### உருத்திராக்ஷலக்ஷணம் மந்திரவிந்யாசம்.

---

ஓ நாரதனே! இவ்வண்ணம் ஷண்முகக்கடவுள் தமது தந்தைபால் உருத்திராக்ஷமகிமையைக்கேட்டு மகிழ்வெய்தியதைக் கூறினேன். இனி கதாசாரவழியினால் அதனது லக்ஷணத்தையும் மந்திரவிந்யாசத்தையும் கூறுகின்றேன் கேட்பாயாக.

உருத்திராக்ஷத்தைத் தெரிசனஞ்செய்தால் லக்ஷம்பங்கும், பரிசித்தால் கோடிபங்கும், தாரணஞ்செய்தால் கோடி கோடிபங்கும், ஜபஞ்செய்தால் நூறுலக்ஷங்கோடிபங்கும், தாரணத்தோடு ஜபஞ்செய்தால் ஆயிர லக்ஷங்கோடிபங்குமாகப் புண்ணியமுண்டாம். பத்திராக்ஷிமணி தாரணத்தினாலும் மகாபுண்ணியமுண்டு. நெல்லிக்காயளவுள்ள வுருத்திராக்ஷம் உத்தமம், இலந்தைக்கனியளவுள்ளது மத்திமம், கடலை யளவுள்ளது அதமம் என்று சொல்லப்படும்.

உலகின்கண் பிரமக்ஷத்திரியாதி நான்குசாதிகளும் தங்கள் தங்களுக்குரிய உருத்திராக்ஷங்கள் இது இதுவாமென்று அறிந்து அணிந்து சுகமடையும்பொருட்டு சிவாஜ்ஞையினால் வெண்மை செம்மை பொன்மை கருமை நிறமுள்ள நான்குசாதிகளாக உண்டாக்கப் பட்டிருக்கிறது. சமானமாயும் மேனியையுடையதாயும் திடமானதாயும் முள்ளோடுகூடினதாயும் உள்ளமணிகள் சுகமானவை. புழுக்களினால் அடிப்பட்டதும் அறுக்கப்பட்டதும் பிளக்கப்பட்டதும் முள்ளில்லாததும் காயத்தோடு கூடினதும் மேற்பரணியில்லாததுமான மணிகள் நீக்கத்தக்கவை. தற்செயலாய் துவாரமுள்ளவை சிறந்தன. மனிதரால் துவாரஞ்செய்யப்பட்டவை மத்திமம். சமமாயும் மேனியாயும் திடமாயும் குண்டாயுமுள்ள உருத்திராக்க மணிகளைப் பட்டுநூலால் கோர்த்துத் தரித்தல் வேண்டும். பக்கமுற்றிலும் ஒரேபருமனும் மிகவிலக்ஷணமாயும் பொன்னைப்போல் மாற்றுடையதாயுமுள்ள உருத்திராக்ஷங்கள் சிரேஷ்டமானவைகளாம். அம்மணிகள் சிவபூஜையில் அணியத்தக்கவைகளாம்.

அணியும்முறைமை எங்ஙனமெனின்! சிகையில் ஒன்றும், சிரசில் முப்பத்திரண்டும், கண்டத்தில் முப்பத்தாறும், கண்டத்தடியில் ஐம்பதும், தோள்களில் தனித்தனி பதினாறும், மணிக்கட்டுகளில் தனித்தனி பன்னிரண்டும், உதரபந்தனமாக ஐம்பதும், உபவீதமாக நூற்றெட்டும் அணிதல்வேண்டும். கண்டத்திலணியும் மாலை இரண்டாகவும் மூன்றாகவும் அணிதல் வேண்டும். இவ்வாறணிதலேயன்றி குண்டலம் கிரீடம் கர்னபூஷணம் முத்தாரம் தோள்வளை கடகமுதலாகச் சொல்லப்பட்ட ஆபரணங்களைப்போலும் செய்து அணிதல் வேண்டும்.

அக்காலமன்றி தூங்கும்போதும் ஏதேனும் பானஞ்செய்யும்போதும் மற்றெத்தொழிலைச் செய்யும்போதும் உருத்திராக்ஷதாரணம் இல்லாதிருத்தல் கூடாது. அம்மாலையினளவியாதெனின்! முப்பதுமணிகள் ஐந்நூறுமணிகள் ஆயிரமணிகள் இம்மூவகையும் முறையே அதமம் மத்திமம் உத்தமம் எனச்சொல்லப்படும்.

சிரசில் ஈசானமந்திரத்தாலும், காதுகளில் தற்புருஷமந்திரத்தாலும், நெற்றியிலும் இருதயத்திலும் அகோரபீஜமந்திரத்தாலும் வயிற்றில் வாமதேவமந்திரத்தாலும், ஏனைய அங்கங்களில் அங்கமந்

திரங்களாலும் உருத்திராக்ஷத்தைத் தரித்தல்வேண்டும். உருத்திரா க்ஷத்தைக் கயிற்றில் மூலமந்திரத்தால் கோர்க்கவேண்டும். பரத்து வத்தைப் பிரகாசப்படுத்துகிற ஏகமுக உருத்திராக்ஷத்தைத் தரிப்ப வனுக்குப் பரதத்வம் பிரகாசிக்கும். அர்த்தநாரீசமாகிய இரண்டு முக உருத்திராக்ஷந் தரிப்பவனுக்கு அவ்வீஸ்வரனுடைய பிரீதியுண் டாகும். திரேதாக்கினிசொரூபமாகிய மூன்றுமுகஉருத்திராக்ஷந் தரி ப்பவனுக்கு ஸ்திரீஹத்திநீங்கி அக்னிதேவனுடைய சந்தோஷங்கி டைக்கும். பிரமனது சொரூபமாகியநான்குமுக உருத்திராக்ஷம்தரி ப்பவனுக்கு சம்பத்தும், ஆரோக்கியமும், கியானசம்பத்தும், தேக சுத்தியும் உண்டாகும். பஞ்சப்பிரஹ்ம சொரூபமாகிய ஐந்துமுக உருத்திராக்ஷம் தரிப்பவனுக்கு மஹேஸ்வரனுடைய சந்தோஷங் கிடைக்கும். சுப்பிரமணியசொரூபமான ஆறுமுகஉருத்திராக்ஷந்தரி ப்பவனுக்கு அவரது அநுக்கிரகங்கிடைக்கும். இந்த ஆறுமுக உருத் திராக்ஷத்துக்கு விநாயகரையும் தெய்வமாகக் கூறுவர். சப்தமாத் ருக்களைத் தெய்வமாகவுடைய ஏழுமுகஉருத்திராக்ஷந்தரிப்பவனுக் கு மகாசம்பத்தும், ஆரோக்யமும், ஞானசம்பத்தும் பரிசுத்தத்த ன்மையு முண்டாகின்றன. இதற்குச் சூரியனையும் தெய்வமாகச் சொல்லுவர். அஷ்டவசுக்களைத் தெய்வமாகவுடைய எட்டுமுக உருத்திராக்ஷம் தரிப்பவனுக்கு அஷ்டவசுக்கள் கங்கை இவர்களு டைய பிரியமும் சத்யத்வமு முண்டாகும். இயமனைத் தெய்வமாகவு டைய ஒன்பதுமுக உருத்திராக்ஷந்தரிப்பவனுக்குஇயமபயமுண்டா காது. தசதிக் தேவதா சொரூபமாகிய பத்துமுக உருத்திராக்ஷம் தரிப்பவனுக்கு அந்தந்ததேவதா பிரீதி யுண்டாகும். ஏகாதச ருத் திர சொரூபமாகிய பதினொருமுக உருத்திராக்ஷந் தரிப்பவனுக்குச் சகலசவுக்கியமும் உண்டாகும். இதற்கு இந்திரனையும் தெய்வமா கக் கூறுவர். விஷ்ணுஸ்வரூபமான பன்னிருமுக உருத்திராக்ஷந் தரிப்பவனுக்கு அவர் பிரீதியுண்டாகும். இதனைப் பன்னிருசூரிய சொரூபமெனவும் கூறுவர். மன்மதசொரூபமான பதின்மூன்று முக உருத்திராக்ஷந்தரிப்பவனுக்கு அவனதுபிரீதியும் காமசித்தியும் சுகமும் உண்டாகும். உருத்திரமூர்த்தி சொரூபமாகிய பதினான்கு முக உருத்திராக்ஷம்தரிப்பவனுக்கு சர்வவியாதிகளும்நீங்கி ஆரோக் கிய முண்டாகும், மத்யம் மாம்சம் வெண்காயம் பூண்டு முருங்கை சிலேஷ்மாதகம் விட்வாரகம் இவைகளை உருத்திராக்ஷந்தரிப்பவன்

நீக்கவேண்டும். கிரகணகாலம் விஷு சங்கிரமணகாலம் உத்திராயனம் தக்ஷிணாயனம் அமாவாசை பௌர்னமி இவைபோன்ற புண்ணியதினங்களில் மனிதன் தரிப்பானாயின் அவன் சர்வபாவத்தினின்றும் விடுபடுகிறான் என்றனர். (சு - ம் சக.)

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

லப்தஸம்பத்ஸமுந்நத்யைநம:

## எட்டாம் அத்தியாயம்.

## பூதசுத்தி.

---

நாராயணர் கூறுகின்றார்,—ஓநாரதரே! பூதசுத்திக்கிரமத்தைக் கூறுகின்றேன் கேட்பீராக. குண்டலினி என்னும் பரதேவதையை மூலாதாரத்திலிருந் தெழுப்பி சுழும்னைமார்க்கத்தை யடைந்து பிரமரந்திரத்தைப் பொருந்தியிருப்பதாக ஸ்மரித்துப் பின் ஹம்ச மந்திரத்தினால் சீவனைப் பரப்பிரஹ்மத்தில் சேர்த்து அதன்பின் பிருதிவிமண்டலத்தை, பாதமுதல் முழங்கால் வரைக்கும் நாற்கோணமாயும் வச்சிரரூபமாயும் லம் என்னும் பீஜமுடையதாயும் பொன் வர்ன முடையதாயும், அப்புமண்டலத்தை முழங்கால் முதல் நாபி வரையில் அர்த்தசந்திரனைப்போன்றதாயும் கோகநதரூபமாயும் வம் என்னும் பீஜமுடையதாயும் வெண்ணிறமுடையதாயும், அக்னிமண்டலத்தை நாபிமுதல் ஹ்ருதயம் வரையில் முக்கோணமாயும் சுவஸ்திகத்தோடு கூடினதாயும் ரம் என்னும் பீஜமுடையதாயும் ரக்த வர்னமுடையதாயும்,வாயுமண்டலத்தை ஹ்ருதயமுதல் புருவமத்தி வரையில் விருத்தமான ஆறுபிந்துக்களை அடையாளமாக வுடையதாயும் யம் என்னும் பீஜமுடையதாயும் தூம்பர நிறமுடையதாயும் ஆகாயமண்டலத்தை புருவமத்திமுதல் பிரமரந்தரம் வரையில் விருத்தமாயும் நிர்மலமாயும் மனோகரமாயும் ஹம் என்னும் பீஜமுடையதாயும் ஸ்மரிக்கவேண்டியது. இவ்வாறு ஒவ்வொருபூதத்தை

யுஞ்சிந்தித்துத் தனித்தனியாகப் பூமியைச்சலத்திலும், சலத்தை அக்னியிலும், அக்னியை வாயுவிலும், வாயுவை ஆகாயத்திலும் ஒடுக்கி, ஆகாயத்தை மகா அகங் காரத்திலும், அதை மஹத்தத்துவ த்திலும், அதைப் பிரகிருதியிலும், அதை மாயையிலும், அதை ஆத்மாவிலும் ஒடுக்கி யாவும்சுத்தஞானசொரூபமானதாகச் சிந் திக்கவேண்டும்.

பின்னர் பாவபுருஷனை வயிற்றின் இடதுபக்கத்திலிருக்கின்ற வனுகவும் கரியநிறமுள்ளவனுகவும் அங்குஷ்ட பரிணுமமுள்ளவனு கவும் பிரமஹத்திரூபமான சிரசுள்ளவனுகவும் பொன்னைத் திரு டியபாபமாகிய கையையுடையவனுகவும் சுராபானபாவமே இரு தயமாகவும் குருபத்தினியைப் புணர்ந்தபாவமே இடையாகவும் உபபாதகங்களே இரண்டுகால்களாகவும் கட்கமிருகத்தினுடைய தோலைத் தரித்தவனுகவும் துஷ்டனுகவும் கீழ்நோக்கியமுகமுடை யவனுகவும் காணச் சகிக்கக் கூடாதவனுகவும் சிந்தித்து வாயு பீஜத்தை ஸ்மரிக்கின்றவனுய் வாயுவைப்பூரித்து பாபரூபத்தை வற்றச்செய்யவேண்டும். பின்னர் அதனையும் சரீரத்தையும் வன் னிபீஜத்தால் தகித்துச் சாம்பராக்கிக் கும்பகஞ்செய்து வாயுபீஜத் தால் ரேசித்து அந்தப்பஸ்மத்தை வெளிப்படுத்தி அமிர்தபீஜத் தால் நனைத்து பிருதிவிபீஜத்தால் பொன்னண்டம்போல் திரட்டி முகுராகாரமாகப் பாவித்து ஆகாயபீஜத்தால் முன்போல் கடின மாக்கி சிரசுமுதல் பாதபரியந்தமான அங்கங்களை ஏற்படுத்தி அதில் ஐம்பூதங்களை பிரவேசிக்கச்செய்து: பின்னர் சோகமென் னும் மந்திரத்தால் ஆத்மாவை இருதயகமலத்தில் சேர்ந்து சிவத்தோடுகூடியிருக்கிற சுதாமயமாகவிருக்கும் குண்டலினிசக் தியை இருதயகமலத்தில் ஸ்தாபித்து மூலாதாரத்தையடைந்தவ ளாகப் பாவித்து இரக்தசமுத்திரத்தில் ஓர்பெரியகப்பல்போல் பிரகாசிக்கின்ற செந்தாமரைமலரில் பிரகாசிக்கின்றவளாயும், தாம ரைமலர்போன்ற கரங்களில் சூலம் கரும்புவில் அங்குசம் பஞ்சபா ணம் இவைகளை அடையாளமாகத் தரித்தவளாயும், சிருக்கையும் கபாலத்தையும் தரித்தவளாயும், முக்கண்ணுடையவளாயும் பெரிய ஸ்தனகும்பங்களுடையவளாயும்,பாலசூரியனைப்போன்றநிறமுள்ள வளாயும், சிரேஷ்டமாயுமுள்ள பிராணசக்தி எங்கட்குச் சுகத்தைச் செய்யட்டும் என்று பரமாத்மசொரூபிணியான பிராணசக்தியைத்

தியானித்து சர்வாதிகார சித்திக்காக பஸ்மதாரணஞ் செய்யவேண்டும். இனிச்சுருதி ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டிருக்கிற பஸ்மதாரண விதியையும் அதன் பலத்தையுங் கூறுகின்றேன் என்றனர்.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காரிண்யைநம:

## ஒன்பதாம் அத்தியாயம்.

## சிரோவிரதவிதி.

---

நாராயணர் கூறுகின்றார்,—சிரோவிரத மென்கிறபஸ்ம விரதத்தை எந்தப்பிராமணர்கள் விதிப்படி அநுஷ்டிக்கின்றார்களோ அவர்களுக்கு அஞ்ஞானத்தைப் போக்கடிப்பதாகிய பிரஹ்மவித்தையை உபதேசித்தல் வேண்டும். ஏனெனில் சிரோவிரதத்துக் குரிமையாகாதவர் பிரஹ்மவித்தைக்கும் உரியராகார். இதில் சிரத்தையற்றவர் சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் சொல்லப்பட்ட ஆசாரங்களையுடையவராயினும் அவை அவர்களுக்கு யாதொருபயனையுஞ் செய்யமாட்டா. இந்தவிரதமானது பூர்வீகர்களால் பூர்வீகமாக அநுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இச் சிரோவிரதத்தினாலேயே பிரமனாதி தேவர்களெல்லாம் தெய்வத்தன்மை யடைந்து தேவர்களானார்களேயன்றி வேறெவ்வாற்றானும் ஆனார்களில்லை. அவர்கள் தமக்கு அஞ்ஞானசம்பந்தத்தாலும் அசுரராதியுத்தங்களாலும் வரும் சகலபாபதோஷபிரஹ்மஹத்யாதிகளை அவ்விரத மொன்றானே நீங்கப்பெற்று சுகமடைகின்றனர்.

இந்தமஹிமையறிந்த புத்திமான்கள் சிரோவிரதத்தைவிதிவத்தாக அநுஷ்டித்து வருகின்றனர். இந்தப்பஸ்ம விரதத்தைச் சிரோவிரதமென்று அதர்வசிரசால் சொல்லப்பட்டது. ஆகையால் எல்லாவிரதங்களுக்கும் சிரசாயிருக்கின்ற இந்தப்பஸ்மவிரதத்தை யாரொருவர் அநுட்டிக்காமற் போகின்றார்களோ அவர்களுக்கு வேறு எந்தவிதமான விரதங்களாலும் புண்ணியங் கிடைத்தலரிது.

இந்தச் சிரோவிரதமானது வேதத்தினுடைய சாகாபேதங்களால் அநேகவிதமான பெயர்பெற்று வழங்கிவருகின்றது. சார்த்தூலமென்னும் சாகையில் இதனைச் சிறப்பாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சிவபெருமானுக்கு எப்பொழுதும் நீங்காதுள்ள சித்குண சமூகங்களில் ஒவ்வொரு குணவிசேஷங்களை ஒவ்வொரு பெயரிட்டு வேதசாகைகள் கூறினாலும் அவ்வக்குண விசேஷங்களைக்காட்டும் அவ்வப் பெயர்களெல்லாம் அச்சிவபெருமானையே குறிப்பிப்பது போல் பஸ்மவிரதமும் சாகாபேதங்களால் வெவ்வேறுபெயர்களைப் பெற்றுவழங்கிவரினும் அவையெல்லாம் பஸ்மவிரதமாகிய அச்சிரோவிரதத்தையே குறிப்பிப்பதாகும். சிரோவிரதத்தைக் கொள்ளாதவன் ஏனையவிரதங்களை யெல்லாம் கொண்டானாயினும் கொள்ளாதவனேயாவன். சிரோவிரதத்தைக் கைக்கொண்டவன் எல்லாவிரதங்களையும் எல்லாவித்தைகளையும் உடையஅதிகாரியே யாவன். இதிற் சந்தேக மில்லை. இவ்விரதம் பாவக்காட்டைக் கொளுத்தும் நெருப்பாகவிருத்தலானும் சகலவித்தைகளையும் பெறுதற்குச் சாதனமாகவிருக்தலானும் அதர்வணமானது சூக்ஷ்மமாகவும் சூக்ஷ்மார்த்தமாகவும் பிரகாசப்படுத்தி யிருத்தலானும் மிகப்பிரீதியோடு இதனை நாடோறும் அனுஷ்டித்து வரவேண்டும்.

இச்சிரோவிரதத்தின் விதி யாதெனின்! சுத்தமாகிய பஸ்மத்தை "அக்னிரிதி" என்றற்றொடக்கத்தனவாகிய மந்திரங்களை யுச்சரித்து சகல அங்கங்களிலும் பொருந்தச் சரீரமுற்றும் உத்தூளனஞ் செய்துகொள்ளுதலேயாம். சந்தியாகாலத்தில் இவ்வாறுசரீரமுற்றும் பூசிக்கொள்ளுதல் விசேடமாம். அன்றியும் ஞானோதயமானது எவ்வளவுகாலத்தில் உண்டாகும்படியான பரிபாகம்வருமோ அவ்வளவுகாலம் உத்தமனானவன் இவ்விரதத்தைவிடாது அனுஷ்டித்து வரவேண்டும். காலநிர்ணயஞ்செய்து சங்கற்பித்துக்கொள்ள வேண்டுமாயின் பன்னிரண்டு வருடமாவதுஒருவருடமாவது, ஆறுமாதமாவது, மூன்றுமாதமாவது, இவ்விரதத்தை யநுஷ்டிக்கிறேனென்று சங்கற்பித்துக் கொள்ளலாம்.

இவ்வாறு ஞானோதயத்தை யுத்தேசித்து காலத்தை நிச்சயித்து சங்கற்பமுஞ் செய்து சிரோவிரதமெனப்படும் பஸ்மஸ்நானத்தை விதிப்படிவிடாது அனுஷ்டித்து வருபவன் எவனோ அவனுக்கு எந்தகுருவானவன் உபதேசிக்காமலிருக்கின்றானோ அவனு

டையவித்தையும் குணமும் நசித்துப் போகுமல்லவா! சம்பத்சொரூபமாகிய சர்வேஸ்வரன் காருண்யமுடையவரல்லவா! அவ்வாறே பிரமவித்தியாகுருவும் கருணையுடையவராக இருத்தல் வேண்டுமல்லவா! ஏனெனில் ஆயிரஞ்சன்மங்களில் எவர்கள் வேதகர்மங்களை அனுஷ்டித்துவருகின்றார்களோ அவர்களுக்கு சிரோவிரதத்தில் சிரத்தையுண்டாகுமேயன்றி ஏனையோர்க்கு ஒருபோதும் உண்டாகாதல்லவா! அநேகசென்மங்களில் வேதகர்மங்களை அநுஷ்டிக்காதவனுக்கு அஞ்ஞானம் மேலிட்டு அதனால் சிரோவிரதத்தில் துவேஷமுண்டாகுமேயன்றி சிரத்தையுண்டாகாது. அந்தத்துவேஷத்தால் அவனுக்குஆத்மஞானம் உண்டாகாது. ஆகலான் எவர்கள்சிரோவிரதஸ்நானஞ் செய்தவர்களோ அவர்களே பிரம்ஹவித்யோபதேசத்துக்கு நேரான அதிகாரிகள். ஏனையோர்கள் அதிகாரிகளாகார். இப்படியே வேதத்திலும் எந்தப்பிராமணர்களால் பாசுபதவிரதம் அன்போடு அநுஷ்டிக்கப்பட்டதோ அவர்களுக்கேபிரஹ்மோபதேசம் செய்யத் தக்கதென்று சாசனஞ் செய்திருக்கின்றது. வேதாந்தங்களிலும் எவன் பசுவோ அவன் அந்தப் பசுத்தன்மையை இவ்விரதத்தினாலேயே நீக்கிக்கொள்வான். அதனால் அவன் மீண்டும்பசுத்தன்மையடையும் பாபிஷ்டனாகான். என்று*நிச்சயித்திருக்கிறது.

திரியம்பகமந்திரத்தாலும் தாரகத்தோடு கூடிய சிவமந்திரத்தாலும் திரிபுண்டரதாரணம் தினந்தோறுஞ் செய்யவேண்டுமென்று ஜாபாலோபநிடதத்தால் சொல்லப்பட்டிருக்கிற படியால் கிருகஸ்தன் - மூன்றாவர்த்தி ஓங்காரத்தோடும் ஹம்ஸமந்திரத்தாலும் பிக்ஷுகன் திரியம்பகமந்திரத்தாலும், பிரணவத்தாலும், சிவமந்திரத்தாலும், பிரமசாரி - மேதாவிமுதலிய மந்திரங்களாலும், தினம் திரிபுண்டரந் தரித்தல் வேண்டும். பிராமணன் நெற்றியில் குறுக்காக விதிப்படிப் பிறந்த பஸ்மத்தினாலாவது தினந்தோறும் திரிபுண்டரந் தரிக்கவேண்டும். ஆதியாயுள்ளபிராமணன் திரிபுண்டரம் எப்போதும் பஸ்மத்தினாலேயே தரிக்கவேண்டும். ஓமுநிவர்க

---

* பலவிரதங்களிலும் பாசுபதவிரதமொன்றே வேதாந்த வுபதேசத்துக்கு சாக்ஷாத்சாதனமென்று வேதமும், அந்தசிரோவிரதமே பசுத்தன்மையை யொழித்து சிவத்தன்மையைக்கொடுக்கும் ஆற்றலுடைய தாகலான் அவனுக்கு ஞானசாதனமாகக் கூறும் சிரவண நிதித்யாசனாதிகள் வேண்டாமென்று வேதாந்தமும் அறுதியிட்டுப்பிரமாண பூர்வகமாய்க் கூறியுள்ளன வென்க.

ளே! எவர்கள் திரிபுண்டரம்தரிப்பார்களோ அவர்களேபிராமணர்கள். வேதசித்தமான திரிபுண்டரதாரணத்தையும் தேவகுண்டனத்தையும் சிவலிங்க பூஜையையும் மோகத்தினுலும் விடக்கூடாது. சந்நியாசிகள் திரியம்பகமந்திரத்தாலும் தாரகத்தோடுகூடின பஞ்சாக்ஷரத்தாலும் பிரணவத்தாலும் நெற்றியிலும் இருதயத்திலும் இரண்டு கைகளிலும் திரிபுண்டரம் தினந்தரிக்கவேண்டும். பிரமசாரி கவுணபஸ்மாவை திரியாயுஷ மந்திரத்தாலும் மேதாவிமந்திரத்தாலும் திரிபுண்டரமாகத் தினம் தரிக்கவேண்டும். சூத்திரன் நமோந்தமான சிவமந்திர மொன்றினுலேயே உத்தூளனமும் திரிபுண்டரமும் பக்தியுடன் தரிக்கவேண்டும். எல்லா தருமங்களிலும் இதுவேமேலானதென்று சிரேஷ்டமான திரிபுண்டரதாரணமும் உத்தூளனமும் நாடோறும் பக்தியோடு தரித்தல் வேண்டும்.

அக்னிஹோத்திர பஸ்மத்தை யாவது விரஜாஹோம பஸ்மத்தையாவது ஆதரவுடன் எடுத்துச் சுத்தமானபாத்திரத்தில் வைத்துக்கொண்டு கைகால்களைச் சுத்திசெய்து சுத்தமான விடத்திலிருந்து ஆசமனஞ்செய்து மனதைச்சுவாதீனஞ்செய்துகொண்டவனுய் பஞ்சபிரஹ்ம மந்திரத்தால் சிறிது சிறிதாகவும் மெதுவாகவும் எடுத்துக்கொண்டு மூன்றுவர்த்தி பிராணுயாமஞ்செய்து அக்னிரிதிமுதலிய ஏழுமந்திரங்களால் மூன்றுவர்த்தி மந்திரித்து ஓமாபோஜ்யோதி: என்கிற மந்திரத்தையுச்சரித்துத் தியானித்து அக்னிரிதிமுதலிய மந்திரங்களைச் சொல்லி முதலில் வெண்மையான பஸ்மத்தால் சரீரத்தை உத்தூளனஞ் செய்யவேண்டும். இவ்வாறு செய்பவன் விரக்கதனுய் பாபமில்லாதவனுகின்றுன். அவ்விஷயத்தில் சந்தேகமில்லை. பின்னர் சலாதிபனும் ஜகன்னுதனுமான விஷ்ணுமூர்த்தியைத் தியானித்து பஸ்மத்தை சலத்தோடுகலந்து அக்னிரிதியாதி மந்திரத்தால் குழைத்து சாம்பவமூர்த்தியைத் தியானித்து ஊர்த்துவசிரசில் ஊத்தூளனஞ் செய்து, அந்தத்தியானத்தினுலேயேபிரமசொரூபமாகிய வெண்ணீற்றினுல் நெற்றி மார்பு தோள் இந்த இவ்விடங்களில் ஆச்சிரமத்துக்குத் தக்கபடி மத்திமை அநாமிகை அங்குஷ்டவிரல்களினுல் திரிபுண்டரத்தை அநுலோமவிலோமமாக மூன்று காலமும் பக்தியோடும் தரிக்கவேண்டும். (சு - ம். சக.)

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

ஹ்ரீங்காராதயேநமః

## பத்தாம் அத்தியாயம்.

## கவுணபஸ்மவர்ணனம்.



நாராயணர் கூறுகின்றார்;—வேதமறிந்தவர்களுக்குள் சிறந்த பிரஹ்மருஷியே! அஞ்ஞானத்தை நீக்கும் ஞானசாதகமாக விருக்கின்ற கவுணபஸ்மம் நித்தியாக்கினி விரஜாக்நி ஔபாசனாக்னி சமிதாக்நி பசனாக்நி தாவாக்னி முதலிய பல அக்னிகளில் உண்டாகிறபடியால் பலபெயர்களைப்பெறும். ஓமுநிவரே! நித்யாக்னியாகிய அக்னிஹோத்திரத்திலுண்டானதும் விரஜாக்னியிலுண்டானது மான பஸ்மம் அந்தணர் முதலிய மூன்று வருணத்தவர்களும், ஔபாசனாக்நிபஸ்மம் கிருகஸ்தர்களும், சமிதாக்நிபஸ்மம் பிரமசாரிகளும், பரம்பரையாய் வேதாத்தியயனஞ் செய்துவரும் அந்தணரது வீட்டிலுள்ள பசனாக்நிபஸ்மம் சூத்திரர்களும், தாவாக்நி என்னும் காட்டுத்தீயிலுண்டாகிய பஸ்மம் ஏனையவருணத்தவர்களும் தரித்தல் வேண்டும்.

இங்ஙனங்கூறியவைகளில் விரஜாக்நிபஸ்மோத்பத்தி எவ்வாறெனில்,—தீக்ஷிதன் சித்ராபௌர்ணமிக்கு முன்வரும் திரயோதசிதிதியில் தன்னிருப்பிடத்திலாவது புண்ணிய க்ஷேத்திரத்திலாவது பூந்தோட்டத்திலாவது வனத்திலாவது ஸ்நானஞ்செய்து நித்யகர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஆசாரியரையடைந்து அவரைப்பூசித்து நமஸ்கரித்து அநுக்ஞைபெற்று நித்யபூஜையை விசேஷமாகச்செய்து பின்னர் "சுக்லாம்பரதரம்" என்பதாதிகளால் விக்நேஶ்வரரைப் பிரார்த்தித்து சுத்தயக்ஞோபவீதத்தையும் வெண்மையான புஷ்பமாலையும் அணிந்துகொண்டு கிழக்குமுகமாகவாவது வடக்குமுகமாகவாவது தர்ப்பாசனத்தி லிருந்து தர்ப்பையோடு கையை முஷ்டியாகப்பிடித்து மூன்றுதரம் பிராணாயாமஞ் செய்து மஹாதேவரையுந் தேவியையுந் தியானித்து அவர்களிடம் இவ்விரதத்தைச்சரீரமுள்ளளவாவது பன்னிரண்டு வருடமாவது ஆறுவருடமாவது மூன்றுவருடமாவது ஒருவருடமாவது ஆறுமாதமாவது மூன்றுமாதமாவது ஒருமாதமாவது பன்னிரண்டுநாளாவது ஆறுநா

ளாவது மூன்றுநாளாவது ஒருநாளாவது செய்கிறேனென்று விஞ்ஞாபனவழியாகச் சங்கற்பித்துக்கொண்டு பின்னர் விரஜாஹோமகரணமாய் விதிப்படி அக்னியைக்கொண்டுவந்து நெய்யாலும் சமித்தாலும் சருவாலும் பலமந்திரத்தால் ஹோமஞ்செய்ய, தத்துவசுத்தியைத் தன்னிடம் மனசினுல்செய்து மந்திரங்களெல்லாம் தனது தேகத்தைச் சுத்திசெய்யவேண்டுமென்று ஸ்மரிக்கவேண்டும். அதாவது,—பிருதிவ்யாதி பூதங்களும் சப்தமுதலிய தன்மாத்திரைகளும் வாக்முதலிய கன்மேந்திரியங்களும் சுரோத்திரிய முதலிய ஞானேந்திரியங்களும் துவக்குமுதலிய சப்ததாதுக்களும் மனம் புத்தி அகங்காரங்களும் சத்வமுதலிய மூன்று குணங்களும் மூலப்பிரகிருதியும் புருஷன் ராகம் வித்தை கலைநியதி காலம் மாயையும், சுத்தவித்தை ஈஸ்வரன் சதாசிவன் சத்தி சிவன் முதலியதத்துவங்களும் எனது தேகத்தில் சுத்தியடைய வேண்டுமென்று சிந்தித்து விரஜாமந்திரங்களால் ஓமஞ்செய்து சுத்தனுய் விடுதலாம். பின்னர் கோமயத்தைக் கொண்டுவந்து பிண்டமாகச்செய்து அபிமந்திரித்து அக்னியில் வைத்து அத்தினத்தில் அந்த அக்னியை ரக்ஷித்து விடியற்காலத்தில் சதுர்த்தசியில் முன்சொல்லியவாறு சம்ஸ்காரங்கள்செய்து அன்று ஆகாரமில்லாதவனுய் மிகுந்த காலத்தைக்கழிக்க வேண்டியது. பௌர்ணமி உதயத்தில் முன்போல் ஓமஞ்செய்து ஓமாந்தத்தில் சிவாக்கினியை உபசங்காரஞ் செய்தலாகும். இந்த விரஜாக்னிபஸ்மத்தை எத்தனத்தோடு எடுத்து சடையுடையவனுயினும் முண்டிதனுயினும் சிகையுடையவனுயினும் ஸ்நானஞ்செய்து நாணமில்லாமலிருப்பானுகில்திகம்பரனுகவாவது காஷாயதாரியாகவாவது கிருஷ்ணசர்மதாரியாகவாவது ஏகவஸ்திர முள்ளவனுகவாவது நார்மடிதரித்தவனுகவாவது தண்டமுள்ளவனுகவாவது முஞ்சியுள்ளவனுகவாவது இருத்தல் வேண்டும். பின்னர் பாதங்களைச் சுத்திசெய்து இரண்டுதரம் ஆசமித்து தனது சரீரத்தை சகளீகரணஞ்செய்து மேற்படி விரஜாக்னியா லுண்டான அந்தப்பஸ்மத்தை எடுத்து "அக்னிரிதி" முதலிய மந்திரங்களாலும் அதர்வண மந்திரங்களாலும்முறையாக சிரசுமுதல் பாத பரியந்தமான அங்கங்களைத் துடைத்து அம்மந்திரங்களாலேயே அவ்வங்கங்களைத் தொட்டுப் பின்னர் பிரணவத்தாலாவது சிவ மந்திரத்தாலாவது உத்தூளனஞ் செய்து திரிபுண்டரத்தை "திரியாயுஷ" மந்திரத்தால் அணிந்து சிவபாவனையையடையவேண்டும்.

இவ்வண்ணமான இப்பாசுபத விரதத்தை மூன்று காலத்திலே யும் செய்ய வேண்டும். இந்தவிரதமானது புத்திமுத்தியைக் கொடுத்து பசுத்வத்தை நிவிர்த்தி செய்யுமாதலால் பாசுபதவிரதத்தைச்செய்து பசுத்துவத்தை விட்டு மகாதேவரும் இலிங்க மூர்த்தியுமாகிய சதாசிவமூர்த்தியைப் பூசித்தல் வேண்டும். இந்த பஸ்மஸ்நாநமானது மஹாபுண்யகரமாயும் சர்வசவுக்கியகரமாயும் ஆயுஷ்கரமாயும் திடகரமாயும் ஆரோக்யகரமாயும் சம்பத்தை விர்த்தி செய்கிறதாயு மிருக்கின்றது. ஆதலால் சகலசம்பத்தும் விருத்தியடைவதற்காகவும் ரக்ஷார்த்தமாகவும் மங்களார்த்தமாகவும் பஸ்மத்தைத் தரிக்கவேண்டும். அதைத் தரிப்பவர்களுக்கு மகாமாரிபயமில்லை. இப்பஸ்மம் மூன்றுவிதம். இனி அதனைக் கூறுகிறேன் கேட்பீராக என்றனர். (சு - ம் - ௧௧.)

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீம்மத்யாயைநம:

## பதினொன்றாம் அத்தியாயம்.

## பஸ்மத்ரை வித்தியம்.

---

நாரதர் கூறுகின்றார்.—ஓ தேவருஷியே! பஸ்மம் மூன்றுவிதம் என்றது எப்படி? அதனைக்கேட்க மிக்க ஆசையுடையவனாக இருக்கின்றேன் என்று சொல்ல, நாராயணர் மகாபாதகங்களை நாசஞ் செய்கிறதாயும் மகாகீர்த்தியை உண்டுபண்ணுவதாயுமுள்ள பஸ்மம் சாந்திகம் பௌஷ்டிகம் காமதம் என மூவகைப்படுமென்று அவற்றைச் சொல்லத்தொடங்கினர்.

சாந்திகபஸ்மம் - பசுவின் யோனிசம்பந்தமாகவே கோமயத்தைக் கையிலெடுத்து பிரஹ்மமந்திரத்தால் தகிப்பதாம். பௌஷ்டிகபஸ்மம்—பசுவின்யோனியிலிருந்து பூமியில் விழுவதற்குமுன் பிடித்து ஷடங்கமந்திரத்தால் தகிப்பதாம். காமதபஸ்மம் - பசுவின் யோனியினின்றும் கீழேவிழுந்து பூமிசம்பந்தபட்ட கோமயத்தைக் கையிலெடுத்து பிராசாதமந்திரத்தால் தகிப்பதாம்.

இந்தக்காமதபஸ்மத்தின் விதியாவதுயாதெனின்! பௌர்ணமி அமாவாசை அஷ்டமி முதலிய திதிகளில் பிராதக்காலத்தி லெழுந்திருந்து பரிசுத்தனுய் தொழுவத்தில்போய் கோக்கூட்டத்தை நமஸ்கரித்து பிராமணன்முதலிய நான்குவருணத்தவருக்கும் முறையே உரிமையாகச்சொல்லப்பட்ட வெண்மை செம்மை கபிலம் கறுப்பு என்னும் நிறமுள்ள பசுக்களின் கோமயங்களைப் பிராசாதமந்திரத்தினு லெடுத்து இருதயமந்திரத்தினல் உருட்டி சூரியகிரணத்தால் உலர்த்தி மனேகரமாயும் பரிசுத்தகரமாயுமுள்ள விடத்தில் உமியோடாவது பதரோடாவது பிராசாதமந்திரத்தால் வைத்து அரணியினு லுண்டான அக்னியினுலாவது ஸ்ரோத்திரியினுடைய வீட்டிலுள்ள அக்னியினுலாவது சிவபீஜமந்திரத்தினல் தகித்துப்பின்னர் அவ்வக்னி குண்டத்திலிருந்து அப்பஸ்மத்தை யெடுத்து புதியபாத்திரத்தில் வைத்து அதனேடு தாழம்பூ பாடலிபுஷ்பம் வெட்டிவேர் சந்தனம் குங்குமப்பூ பச்சைகர்ப்பூரம் முதலியவைகளை சத்யோஜாத மந்திரத்தால் சேர்க்கக்கடவன். இந்தப்பஸ்மத்தினுல் ஸ்நானஞ்செய்பவன் முன் சலஸ்நானஞ்செய்து செய்யவேண்டும். சலஸ்நானஞ்செய்ய அசக்தனுயின் பஸ்மஸ்நானமொன்றையே செய்யலாம். எவ்வாறெனில்! கைகால்களைச் சலத்தினுல் சுத்திசெய்துகொண்டு ஈசானமந்திரத்தால் சிரசையும், தற்புருடமந்திரத்தால் நெற்றியையும், அகோரத்தால் இருதயத்தையும், வாமதேவத்தால் நாபியையும், சத்யோஜாதத்தால் மற்றஅங்கங்களையும் பஸ்மத்தினுல் உத்தூளனஞ்செய்து முன் உடுத்திருந்த வஸ்திரங்களைக் கழித்து சுத்தமானவஸ்திரந்தரித்து கைகால்களை அலம்பிக்கொண்டு ஆசமனஞ்செய்து உத்தூளனமில்லாமல் தர்ச்சனி மத்திமை அநாமிகை என்னும் மூன்றுவிரல்களால் முற்பகலில் சலத்தோடும், பிற்பகலில் சலமின்றியும் தலை நெற்றி கழுத்து இருதயம் தோள்முதலிய இடங்களில் திரிபுண்டரந்தரித்தல்வேண்டும். ஐந்துவிரலால் சிரசில் பிராசாதமந்திரத்தாலும், மூன்றுவிரலால் நெற்றியில் சிரோமந்திரத்தாலும், மத்திமைவிரலால் வலக்காதில் சத்யோஜாதமந்திரத்தாலும் இடக்காதில் வாமதேவமந்திரத்தாலும், கழுத்தில் அகோரமந்திரத்தாலும், மூன்றுவிரலால் ஹ்ருதயத்தில் இருதயமந்திரத்தாலும், வலக்கையில் சிகாமந்திரத்தாலும், இடக்கையில் கவசமந்திரத்தாலும், மத்திமைவிரலால் நாபியில் ஈசானமந்திரத்தாலும் தரிக்க வேண்டும்.

மூன்றுரேகைகளில் கீழ்ரேகை பிரஹ்மாவென்றும் மத்தியரேகை விஷ்ணுவென்றும் மேல்ரேகை மஹேஸ்வரன் என்றுஞ்சொல்லப்படும். ஒருரேகைக்கு ஈஸ்வரனே தேவதையாம். சிரோமத்யத்தில் பிரமனும், நெற்றியில் ஈஸ்வரனும், காதுகளில் அஸ்வனி தேவதைகளும், கண்டத்தில் கணேச தேவதையுமாம். பிராமணன் தவிர மற்றமூவர்கள் உத்தூளனஞ் செய்தல்கூடாது. மற்றைச்சாதியார் மந்திரமின்றிப் பஸ்மந்தரிக்க வேண்டும் என்றனர். (உ௭,

பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீம்சிகாமணயேநமஃ

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

## * கல்பாந்தரோக்தரீத்யா பஸ்மதாரணம்.

---

நாராயணர் கூறுகின்றார்;— ஓதேவருஷியே ! இனி சர்வகாம பலத்தையுங்கொடுக்கும் அதிரகஸ்யமான பஸ்மோத்தூளன பலத்தைக்கேட்பீராக. காராம் பசுவினுடைய சாணத்தைப் பூமியில் விழுவதற்குமுன் எடுக்கவேண்டும். கீழே விழுந்திருக்குமாயின் இளகலாயும் மிகவுங்கடினமாயும் துர்க்சந்தமாயும் விழுந்து சாவதானமாயும் இல்லாமலிருக்குஞ் சாணத்தை மேலுங்கீழுங்கழித்து மத்தியிலிருக்குங் கோமயத்தையெடுத்து உருண்டையாகவுருட்டி சிவாக்னி முதலிய அக்னிகளில் மூலமந்திரத்தாலிட்டு அக்னியிலிருந்தெடுத்து நன்றாகச் செய்யப்பட்டதாயுந் திடமான பொன் முதலிய லோகங்களிலாவது மரத்திலாவது வெண்பட்டிலாவது சுத்தமான வஸ்திரத்திலாவது வேறேதேனும் சுத்தமானவைகளிலாவது திடமானதாயும் சுத்தமானதாயும் சுத்தி செய்யப்பட்டதாயும் புரோக்ஷிக்கப்பட்டதாயும் சுபகரமாயுமுள்ள பாத்திரத்தில் மந்திரத்தினால் அபிமந்திரித்து பஸ்மாவை வைத்துத் தனத்தைப் போல் காப்பாற்றவேண்டும். எங்கேனும் பிரயாணமாகும்பொழுது பஸ்மத்தைத் தானாவது பரிசாரகனாலாவது எடுத்துக்கொள்ளவேண்

---

* கல்பாந்தரங்களிற் சொல்லியவிதிப்படி விபூதிதரித்தல்.

டும். அதனை அயோக்யனுடைய கையில் கொடுத்தலும், அசுசியானவிடத்தில் வைத்தலும், நீசனுடையபரிசம் நேரிடுதலும், வீசியெறிதலும் தாண்டுதலுங்கூடாது. கல்பங்களில் சொல்லப்பட்ட விதிப்படி பஸ்மத்தை யெடுத்து மந்திரித்து உபயோகப்படுத்த வேண்டும். என்னுல் சொல்லப்பட்டதும் ஸ்மிருதிசம்பந்தமானதுமான பஸ்ம விரதத்தைச் செய்கின்றவன் சிவதுல்யனுவான் என்பதிற் சந்தேகமில்லை. வேதோக்த கர்மங்களை யநுட்டிக்கிறவர்களான சைவர்கள் சிவசந்நிதியில் பக்தியோடு பிரார்த்தித்துச் சம்பாதித்த பஸ்மத்தையும், தாந்திரீக பூஜகர்களால் தந்திரோக்த மார்க்கத்தால் சித்தித்த பஸ்மத்தையும் தரிக்கவேண்டுமேயன்றி ஏனையவிடங்களில் பஸ்மங்கொடுக்கப்படுமாகில் வைதிகர்கள் பெற்றுக்கொள்ளக்கூடாது. சாதாரணமான பஸ்மாவை சூத்திரர்களும் காபாலிகர்களும் பாஷண்டர்களும் மற்றுமுள்ள வேதபாஹ்யர்களும் பெற்றுக்கொள்ளலாம். திரிபுண்டரத்தைப்பக்தியோடு தரிக்கவேண்டும்; உல்லங்கனஞ்செய்யக்கூடாது. எது வேதத்தில் விதிக்கப்பட்டுள்ளதோ அதைவிட்டவன் பதிதனுய்விடுவான். பக்தியோடு திரிபுண்டரதாரணத்தையும் தேகமுற்றும் பஸ்மத்தை உத்தூளனஞ் செய்வதையும் பிராமணன் மந்திரத்தால் செய்யவேண்டும். அதைவிட்ட அந்தணன் பதிதனுய்விடுவான். உத்தூளனத்தையும் திரிபுண்டரத்தையும் எவர்கள் பக்தியோடு தரிக்கவில்லையோ அவர்களுக்குக் கோடிகோடி சன்மங்களானுலும் சம்சாரநிவிர்த்தி உண்டாவதில்லை. எவர்கள் சொல்லப்பட்ட விதியோடு பஸ்மதாரணஞ் செய்யாமலிருக்கின்றுர்களோ அவர்கள் ஜன்மம் பன்றிஜன்மம்போலென் றறிவாய், மாநுடர்களுடைய சரீரமானது திரிபுண்டரத்தை விட்டிருக்குமானுல் அந்தத்தேகம் ஸ்மசானத்துக்குச்சமானமானதாய்ப் புண்ணியவான்களால் பார்க்கத்தகாததாய் விடும். பஸ்மமில்லாத நெற்றியைச் சுடு. சிவாலயமில்லாத கிராமத்தைச்சுடு. சிவார்ச்சனமில்லாத சன்மத்தைச்சுடு. சிவாஸ்ரயமில்லாத வித்தையைச்சுடு என்று வேதங்கூறுகின்றது. எவர்கள் திரிபுண்டரத்தை நிந்திக்கின்றுர்களே அவர்கள் சிவபெருமானை நிந்தித்தவர்களாவர். எவர்கள் பக்தியோடு தரிக்கின்றுர்களோ அவர்கள் சிவனையே தரிக்கின்றவர்களாவர். எப்படி அக்னியில்லாமல் பர்வதம் பிரகாசிக்கிறதில்லையோ அப்படி சிவார்ச்சனம் எல்லாத்திரவியங்களையு முடையதாய்ப் பஸ்மமாத்திரம் இல்லாததாயின் அது பிரகாசமில்லாததா

கும். எவர்கள் திரிபுண்டரமும் உத்தூளனமும் செய்கிறதில்லையோ அவர்களால் முன்செய்யப்பட்ட புண்ணியங்களெல்லாம் விபரீதமாகமுடியும். பஸ்மத்தைத் திரிபுண்டரமாக வேதமந்திரங்களால் தரிக்கவேண்டும். வேதத்தில் சொல்லப்பட்ட ஆசாரத்தையனுஷ்டிக்காமற்போவது ஸ்மார்த்தவிதிக்கு அனர்த்தகாரணமாகின்றது. எவன் திரிபுண்டரத்தைத் தரிக்காமற் போகின்றானோ அவனாற் செய்யப்பட்டனவெல்லாம் செய்யப்படாதனவாயும் கேட்கப்பட்டனவெல்லாம் கேட்கப்படாதனவாயும் படிக்கப்பட்டனவெல்லாம் படிக்கப் படாதனவாயும் போவதுமன்றி அவனுக்கு வேதயக்ஞம் தபம் விரதம் உபவாச முதலிய யாவும் வீணாய்முடியும். எவன் பஸ்மத்தைவிட்டு முத்தியை விரும்புகின்றானோ அவன் விஷபானத்தினால் தனக்கு நித்தியத்துவத்தை ஆசைப்படுகின்றவனுக்கு ஒப்பாவன். பிரஹ்மா சிருஷ்டியினாலும் திரிபுண்டரதாரணத்தைக் காண்பித்திருக்கின்றனர். எவ்வாறெனில்! அவர்நெற்றியைக் குறுக்காயும் ஊர்த்துவமாயும் சிருஷ்டித்திருக்கின்றாரல்லவா! விருத்தமாகச் சிருஷ்டித்தாரில்லையல்லவா! மானுடருக்கேயல்லாமல்சர்வப்பிராணிகளுக்கும் நெற்றியில் திரியக் ரேகைகள் காணப்படுகின்றனவல்லவா! அப்படி காணப்பட்டும் மூடமனிதர்கள் திரிபுண்டரதாரணஞ் செய்கிறதில்லை. திரியக்புண்டரம் அன்றியில் பிராமணனால் எது அநுஷ்டிக்கப்படுகின்றதோ அது தியானசாதனமுமல்ல, மோக்ஷசாதனக் கிரியையுமல்ல, தானமுமல்ல, தபசுமல்ல. வேதாத்தியயனத்தில் சூத்திரன் எப்படியதிகாரியாகானோ அப்படியே திரிபுண்டர தாரணமன்றியில் பிராமணன் சிவபூஜைக்கதிகாரியாகான்.

பிராமணன் கிழக்குமுகமாக விருந்து கைகால்களைச் சுத்திசெய்து பிராணாயாமமும் சங்கல்பமும் பண்ணி அக்னிஹோத்திரத்தால்உண்டான பஸ்மத்தை எடுத்து ஈசான மந்திரத்தால்சிரசிலும், தற்புருஷத்தால் முகத்திலும், அகோரத்தால் இருதயத்திலும்,வாமதேவத்தால் நாபியிலும், சத்யோஜாதத்தால் பாதங்களிலும் தரித்து பின்னர் பிரணவத்தால் சர்வாங்க உத்தூளனஞ் செய்யவேண்டும். இதனைப்பிரமருஷிகள் ஆக்னேயஸ்நானமென்று சொல்லுகின்றார்கள். இதனைச் சர்வகர்மசித்திக்காக முதலில் அறிவுள்ளவன் செய்து பிறகு கைகால்களைச் சுத்திசெய்துகொண்டு திரியக்புண்டரத்தை விதிப்படி நெற்றி மார்பு கண்டம் முதலியவிடங்களில் பஞ்சப்

பிரம மந்திரத்தினுலேயே தரித்தல்வேண்டும். இப்படி திரிபுண்டரம் தரிக்கப்பட்டால் அது சர்வகர்மங்களுக்கும் பரிசுத்தகரமாயிருக்கும். சூத்திரரிடத்தும் அந்திய சாதியரிடத்தும் பஸ்மம் வாங்கத்தக்க தன்று. அக்னிஹோத்திரபஸ்மத்தினுல் பூசப்பட்டவனுய் கர்மங்களை யநுஷ்டிக்கவேண்டும். அவ்வாறன்றி அநுட்டித்த கர்மங்கள் பலிக்க மாட்டா. எவன் திரிபுண்டரந் தரிக்கவில்லையோ அவனுடைய சத்தியமும் சௌசமும் ஜபமும் ஹோமமும் தீர்த்தயாத்திரையும் தேவாதிபூஜையும் வீணுகும். எவன் பஸ்ம உருத்திராக்ஷந்தரிக்கின் ருனே அவனது ரோகம் பாவம் வியாதி துர்ப்பிக்ஷம் திருடு முதலி யவை நாசகரமாய் எந்தப் பரப்பிரமத்தினிடமிருந்து சீவன் திரும் புவதில்லையோ அந்தப்பிரமத்தை யடைகிருன் பக்திபாவனனுன விப்பிரன் பிராமணனுலும் தேவர்களாலும் பூஜிக்கத்தக்கவனுவன். சிரார்த்தத்திலும் யச்ஞத்திலும் ஜபத்திலும் ஹோமத்திலும் வைஶ்வதேவத்திலும் சிவார்ச்சனையிலும் திரிபுண்டரந்தரிக்கிற மானுடன் பரிசுத்தனுய் மிருத்யுவை ஜயிக்கிறுன். இன்னமும் பஸ்மமகாத்மியத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக என்றனர். (சு - சகஉ.)

பன்னிரண்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காரகுண்டாக்னிசிகாயைநமஃ

## பதின்மூன்ரும் அத்தியாயம்.

## பஸ்மமகிமை.

---

நாராயணர் கூறுகின்ருர்,—ஒருநாளாவது ஒருவன் பஸ்மந்தரிப்பானுயின் அவனுக் குண்டாகும் புண்ணியபலத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. என்னையெனின்! அவன் மகாபாதகங்களைச் செய்திருப்பின் அவைகளும் வேறுபாதகஙகளும் நசித்துப்போம். இது சத்தியம்! சத்தியம்!! சந்தேகமில்லை. வைதிகசுருதியானது பஸ்மத்தை உத்தூளனமாகவும் திரிபுண்டரமாகவும் தரித்தால் சந்நியாசி ஞானமும், வானப்பிரஸ்தன் விரக்தியும், கிருகஸ்தன் இல்லறதருமவிருத்தியும், பிரஹ்மசாரி வேதாத்யயனசித்தியும், சூத்திரன் புண்

ணியவிருத்தியும், ஏனையோர் பாவநாசமும் அடைவரென்று ஓரிட த்திலும், பஸ்மோத்தூளனமும் திரிபுண்டரதாரணமும் சர்வப்பி ராணிகளையும் ரக்ஷிக்கும் பொருட்டென்று ஓரிடத்திலும், பஸ்ம உத் தூளனத்தின்பொருட்டும் திரிபுண்டர தாரணத்தின்பொருட்டுமே வேதங்களில்யஜ்ஞங்களை விதிக்கப்பட்டிருக்கின்றனவென்று ஓரிடத் திலும், பஸ்மோத்தூளனமும் திரிபுண்டரமும் சர்வதர்ம சித்தியின் பொருட் டென்று ஓரிடத்திலும், அவை மகேஸ்வர சொரூபமாகிய சிவலிங்கார்சனத்தின் பொருட்டென்று ஓரிடத்திலும், யாவருக் கும் விஞ்ஞானர்த்தம் உண்டாகும் பொருட்டென்று ஓரிடத்தி லும் விதிக்கப்பட்டிருக்கிறது. திரிமூர்த்திகளாலும் இரண்யகர்ப்ப னாலும் வருணன் முதலிய வர்களாலும் உமை லக்ஷ்மி சரஸ்வதி என்னுமூவராலும் ஏனைய தேவதாஸ்திரீகளாலும் யக்ஷ ராக்ஷஸ கந்தர்வ சித்தவித்தியாதரர்களாலும் முநிவர்களாலும் பஸ்மோத் தூளனமும் திரிபுண்டரமும் தரிக்கப்பட்டிருக்கின்றன. நான்குவரு ணத்தாராலும் சங்கரசாதிகளாலும் தரிக்கப்பட்டிருக்கிறது. பஸ் மோத்தூளனத்தையும் திரிபுண்டரத்தையும் தரிக்கின்றவர்களே சிரேஷ்டர்களும் வித்வான்களுமாவர். அவைதரிக்கப்பெறுதவர் சிரேஷ்டர்களுமாகார்; வித்வான்களுமாகார்.

முக்தி என்கிற ஸ்திரீயை வசீகரஞ் செய்து கொள்ளவேண்டி யவனுக்கு சிவலிங்கம் உருத்திராக்கம் பஞ்சாக்ஷரம் பஸ்மம் என்னும் இவைகள் அவுஷதங்களாம். பஸ்மோத்தூளன முள்ளவன் மூர் க்கனுனும் அபண்டிதனுனும் அவன் எவ்விடத்தில் புசிக்கின்று ஞே அவ்விடத்தில் இடபக்கொடியுடைய பரமேஸ்வரன் தேவியோடு புசிக்கின்முன். சரீரமுற்றும் விபூதியினுல் மறையப்பெற்றவனது பின்னே தொடர்ந்துபோகிறவன் மஹாபாதகனுயினும் அவன் அப் பாதகத்தினின்றும் நீங்கினவனுய் மாநுடரால் பூஜிக்கத்தக்கவனுகின் ருன். அப்படியே சர்வாங்க பஸ்மதாரியை பக்தியோடு தோ த்திரஞ்செய்கின்றவன் பாதகனுயினும் அவன்விமுத்தனுய் யாவ ராலும் தோத்திரஞ்செய்யப்படுவான். திரிபுண்டரதாரணஞ்செய்த வனுக்கு ஒருவன் அன்னமாத்திரங்கொடுப்பானுனும் அவன் மே லான சகல சத்கர்மங்களையும் அனுஷ்டித்தவனுவானென்று சொ ல்லப்படுவான். எந்தப் பிராஹ்மணன்சிரசில் திரிபுண்டரந்தரித்தி ருக்கின்முனே அவன் கீடகதேசத்தில் வசித்தாலும் அந்த க்ஷேத்தி

ரத்தை மாநுடர்கள் காசிக்ஷேத்திரத்துக்குச் சமானமாக நினைத்து நாடோறும் வசித்தல்வேண்டும். ஆசாரமுடையவனானாலும் அநாசாரமுடையவனானாலும் யோகவானானாலும் தரித்திரவானானாலும் பூதிசாதனமுடையவனாயிருப்பின் அவனை எனது புத்திரனாகக் கருதிப் பூஜித்தல்வேண்டும். ஐஸ்வர்யமாகிய விபூதிசாதனத்தைக் கபடத்தினாலாவது ஒருவன் அணிவானாயின் அவனடையுங் கதியை நூறுயாகஞ் செய்தவனும்அடையான். விளையாட்டினாலாவது பயத்தினாலாவது ஒருவன்பஸ்மதாரியைத் தொடுவானானால் அவன் விதிப்படி பஸ்மத்தைத்தரித்தவனேயாய் என்னைப்போல் பூசிக்கத்தக்கவனுமாவன். திரிபுண்டரதாரணமானது திரிமூர்த்திகளுக்கும்பார்வதிதேவிக்கும் லக்ஷ்மிதேவிக்கும் சரஸ்வதிதேவிக்கும் திருப்திகாரணமாயுள்ளது. திரிபுண்டரதாரணத்தினால்அடையும் புண்ணியம்போல் தானம் யாகம் குரூரமானதவம் தீர்த்தயாத்திரை முதலியவற்றைச் செய்தாலும்அடையமுடியாது. மேற்கூறிய தானமுதலியவைகளும் தியானாதிகளும் திரிபுண்டரதாரணத்தின் பதினாறில் ஒருபங்குக்கு ஒப்பாகாது. அரசன் தனது அடையாளந் தரிக்கப்பெற்றவனைத் தன்னவனாக எப்படி எண்ணுகிறானோ அப்படியே மஹாதேவரும் தன்னுடைய அடையாளமாகிய பஸ்மத்திரிபுண்டரங்களை யணிபவனைத் தன்னவனாகவே எண்ணுகிறார். பிராஹ்மணனானாலும் அன்னியனானாலும் சித்தசுத்தியுடையவனாய் பஸ்மதாரியாயிருப்பானாயின் அவன் சிவபெருமானைச் சுவாதீனஞ்செய்துகொண்டவனாவன். சகல ஆஶ்ரம தருமங்களையும் சகல அனுஷ்டான தருமங்களையும் செய்யாதுவிட்டு திரிபுண்டரத்தைமாத்திரம் ஒருதரம் அணிவானாயின் அவன் சமுசாரதாபத்தினின்றும் விடுபடுவான். பஸ்ம திரிபுண்டரங்களை யணிந்தவனது குலத்தை ஞானமுடையதா விரதாசாரமுடையதா என்று பரிக்ஷித்தல்கூடாது. அவனதுகுலம் பூஜ்யமானகுலமேயாகும். சிவமந்திரத்தைக் காட்டிலும் மேலானமந்திரமும், சிவாசாரத்தைக்காட்டிலும் மேலான ஆசாரமும் சிவபரத்தைக் காட்டிலும் மேலானபரமும், சிவார்ச்சனையின் புண்ணியத்தைக் காட்டிலும் மேலான புண்ணியமும், பஸ்ம ஸ்நானத்தைக்காட்டிலும் மேலான தீர்த்தஸ்நானமும், சிவாக்னி வீரியத்தைக்காட்டிலும் மேலான வீரியாக்னியும் எப்படியில்லையோ அப்படியே பஸ்மதாரணத்தைக் காட்டிலும் வேறு மேலானதாரணமில்லை.

சண்டாளனு யிருந்தாலும் அதமனுயிருந்தாலும் மூடனுயிருந்தாலும் பண்டிதனுயிருந்தாலும் சகலதுக்கத்தையும் துவம்சம் பண்ணத்தக்கதாயும் சகலபாவத்தையும் போக்கடிக்கத்தக்கதாயும் உள்ள பஸ்மத்தைத்தரித்தவனுய் எந்தத்தேசத்தில் நித்தியம் வசிக்கின்ருனே அந்தத்தேசத்தில் சதாசிவமூர்த்தி உமாதேவியோடும்சகலபூதகணங்களோடும் சகலதீர்த்தங்களோடும் எப்போதும் சாந்நித்தியமாயிருப்பர்.

பஞ்சபிரஹ்ம மந்திரத்தினுல் பவித்திரமா யிருக்கின்ற பஸ்மமானது காமதகனராகிய மஹேஸ்வரரது திருமேனியில் பூஜ்யமாயிருப்பதாகலின் யாவரும் தங்களுடைய நெற்றியை பஸ்மத்துக்கே யிடமாக்கி சகலபீடா நிவாரணமாகத் திரிபுண்டரத்தைப் பொருந்தத் தரித்தல் வேண்டும் என்றனர். (சு • ம் ௩௫.)

பதின்மூன்ரும் அத்தியாயம் முற்றிற்று.

---

௳.

ஹ்ரீங்காரசசிசந்திரிகாயைநமஃ

## பதினுன்காம் அத்தியாயம்.

## இதுவுமது.

---

நாராயணர் கூறுகின்ருர்,—பஸ்மத்தால் பூசப்பட்ட சரீரமுள்ளவனுக்கு எவனெருவன் சந்தோஷத்தோடு தனத்தைக் கொடுக்கின்ருனே அவனுடைய சகலபாவங்களும் நசித்துப்போகின்றன. இதிற் சந்தேகமில்லை. சுருதிகளும் ஸ்மிருதிகளும் எல்லாப்புராணங்களும் பூதிமகிமையையே கூறுகின்றன. ஆதலால் பிராமணன் சிதாபஸ்மத்தைத் திரிசந்திகளிலும் திரிபுண்டரமாகத் தரிப்பானுயின் சகலபாபங்களினின்று நீங்கிச் சிவலோகமடைகின்ருன். யோகியானவன் பாதாதிகேசபரியந்தம் திரிசந்திகளிலும் பஸ்மத்தினுல் ஸ்நாநஞ்செய்வானுயின் சீக்கிரத்தில் யோகத்தையடைகிருன். மகாபுருஷனனவன் பஸ்மஸ்நானத்தினுல் குலத்தை உத்தாரணஞ் செய்கின்றவனுகிருன், இந்த ஸ்நானமானது ஜலஸ்நானத்தைக் காட்டிலும் அளவில்லாத குணமுள்ளது. சர்வதீர்த்தஸ்நானங்களினுலும் எந்தப்பலனுண்டோ எந்தப் புண்ணியமுண்டோ அவையெல்லாம் இந்தப் பஸ்மஸ்நானம்செய்பவன் அடை

வன். அவன் மகா பாதக வுபபா தகங்களோடு கூடினவனுனாலும் அவைகளைக் கட்டையைக்கொளுத்தும் அக்னியைப்போல்கொளுத் தப்பட்டவனுமாகின்ருன். இதிற் சந்தேகமில்லை.

ஆகலான் பஸ்ம ஸ்நானத்தைக் காட்டிலும் சுத்தமானஸ்நா னம்வேறில்லை இல்லையென்று சிவபெருமான் ஆதியில் கூறி, தானும் பஸ்மஸ்நானஞ் செய்திருக்கின்றனர். பிரமன் முதலிய தேவர்க ளும் முனிவர்களும் செய்திருக்கின்றனர். ஆதலால் ஆக்னேய மென்னும் சிரோவிரதஸ்நானமாகிய பஸ்மஸ்நானத்தைச் சர்வப்பிர யத்தனத்தாலும் செய்யவேண்டியது. அவ்வாறு எவன்செய்கின் ருனே அவன் மாம்சமயமான இந்த நாற்றமுடைய சரீரியா யிருந் தாலும் சிவரூபியேயாவன். அதற்குச்சந்தேகமில்லை. யார் பஸ்ம தாரிகளைப்பார்த்து சந்தோஷமடைகின்ருர்களோ அவர்கள் தேவர் களாலும், முனிவர்களாலும் நித்தியம் பூஜிக்கத்தக்கவராகின்றனர். அதற்குச் சந்தேகமில்லை. சர்வாங்கமும் பஸ்மந் தரித்தவனைப் பார்த்து எவனெழுந்திருக்கின்ருனே அவனை இந்திரன் பார்த் து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்கிருன். ஒருவன் பஸ்மதாரண யுக் தனுய் உண்ணப்படாதனவற்றை உண்டாலும் அதனல் அவனைத் தோஷமுடையவனுக எண்ணிப் பெரியோர்கள் விசாரித்தல் கூடாது. பிரஹ்மசாரி கிருகஸ்தன் வானப்பிரஸ்தன் என்னும் மூவ ரும் முன்னர் சலத்தில் ஸ்நானஞ்செய்து பின்னர் பஸ்மஸ்நா னம்செய்வாராயின் அவர்கள் சகலபாவத்தினின்றும் விடுபட்டவர் களாய் சிறந்தகதியை யடைகின்றனர். சந்நியாசிகளுக்கு ஆக்னேய பஸ்மஸ்நானஞ் சிறந்தது.

சலஸ்நானத்தைப் பிரகிருதி என்றும், பந்தமென்றும் சொல் லுவர். பிரகிருதியாகிய பந்தத்தைத் தொலைப்பதற்கே இந்த பஸ்மஸ்நானம் விதிக்கப்பட்டிருக்கிறது. ரக்ஷணைக்கும், மங்களகர த்துக்கும், பரிசுத்தத்துக்கும் எந்தப் பதார்த்தம் உள்ளதென்று தேவர்கள் பூர்வத்தில் யோசித்துப்பார்த்து பஸ்மந்தா னென்றறிந்து தேவிக்குப் பிரியம் உண்டாகும்படியாய் அதனைக் கொடுத்தார்கள். ஆகையால் ஆக்னேய ஸ்நான மென்னும் சிரஸ்நானத்தை யாதொ ருவன் செய்கின்ருனே அவன் பிறவிக்குக் காரணமாகிய பாசத்தி னின்றும் நீங்கி சிவலோகத்தில் பூஜ்யனுய் வாழ்கின்றவ னுகின்ருன். அன்றியும் இந்தஸ்நானத்தால் ஜ்வரம் பிரஹ்மராக்ஷசு பிசாசம் பூத

சேஷ்டைகள் குஷ்டம் குல்மம் பகந்தரமுதலிய அறுபத்துநான்கு
வாதரோகங்களும், சிலேட்டும ரோகங்களும் வியாக்ரமுதலிய துஷ்
டமிருக பயங்கரங்களும், சோராதி பயங்களும் சிங்கத்தைக்கண்ட
யானையைப்போல் நசித்துப்போம். எவன் பஸ்மத்தைசுத்தமான சீத
ள ஜலத்தினால் குழைத்துத் திரிபுண்டரமாக அணிகின்றானோ அவ
ன் பரப்பிரஹ்மசொரூபத்தை யடைகிறான். அதற்குச்சந்தேகமி
ல்லை. விதியுக்தமாகிய வன்னிவீரியத்தி லுண்டாகிய பஸ்மத்தைத்
தரித்தால் அது நெற்றியிலெழுதியிருக்கும் யமசம்பந்தமான
எழுத்தைத் தொலைத்துவிடும். இதுநிச்சயம். இதுபோலும் கண்ட
த்தில் தரிப்பதால்கண்டத்திலுண்டாகும் பாபமும், கைகளில் தரிப்
பதால் கைகளாற் செய்தபாபமும், மார்பில் தரிப்பதால் மனசினாற்
செய்தபாபமும், நாபியில் தரிப்பதால் ஆண்குறியினால் செய்தபா
பமும், புருஷ்டபாகத்தில் தரிப்பதால் அதனாற் செய்தபாபமும், பக்
கங்களிற் றரிப்பதனால் பரஸ்திரீகளை ஆலிங்கனாதிகள் செய்த பாப
மும்நசித்துப்போம். ஆகலின் எல்லாவிடங்களிலும் மூன்றுகுறியுள்
ளபஸ்மதாரணம் புகழத்தக்கதேயாம். எவ்வாறெனில்! முன்கூறிய
பஸ்பம் பிரஹ்ம விஷ்ணு மஹேஸ்வரராகிய மூவரையும் மூவுல
கினையும் மூன்று அக்கினிகளையும் முக்குணங்களையும் குறிக்கிற
தாயிருக்கின்றது. இவ்வகைத்தான பஸ்மம் பூசிய வித்வானாகிய
பிராமணன் மகாபாதகங்களால் உண்டான தோஷங்களினின்றும்
க்ஷணத்தில் விடுபடுகின்றான். இவ்விஷயத்தில்சம்சயமில்லை. பஸ்ம
நிஷ்ட சம்பந்தமுடையவனது தோஷங்கள் பஸ்மமென்னும் அக்னி
சம்பந்தத்தினாலே கொளுத்தப்படுகின்றன. பஸ்மஸ்நானத்தினால்
சுத்தாத்மாவானபுருஷன் ஆத்மஜ்ஞானமுடையவனென்று சொல்ல
ப்படுகின்றான், பஸ்மம் பூசிய எல்லா அவயவங்களுடையவனையும்,
பஸ்மத்தினால் பிரகாசிக்கும் திரிபுண்டர முடையவனையும், பஸ்மத்
தில் படுத்துக்கொண்டிருக்கிறவனையும்இருக்கிறபுருஷன் பஸ்மநிஷ்ட
(பஸ்மத்தில் ஸ்திரமானவிசுவாசமுடையவ) னென்று சொல்லப்ப
டுகின்றான். பூதம் பிரேதம் பிசாசம் இவைமுதலானகிரகங்களும் சகி
க்கமுடியாதரோகங்களும் பஸ்மநிஷ்டனுடைய சந்நிதானத்தினாலே
ஓடிப்போகின்றன. பாசித்த (பிரகாசித்த) லினாலேபசிதமென்றும்,
கல் மிஷத்தைப்பக்ஷிப்பதினால் பஸ்மமென்றும், ஐஸ்வர்யத்தையுண்
டாக்குவதனால் பூதியென்றும், ரக்ஷிப்பைச் செய்கின்ற படியினால்
ரக்ஷையென்றும் சொல்லப்படுகின்றது. திரிபுண்டரதாரணத்தைப்

பார்த்து பூதப்பிரேத முதலானவையெல்லாம் சிவபெருமானை நினைத் தமாத்திரத்தில் பாவம் எப்படி நசித்துப்போகின்றதோ அப்படி பய ந்து நடுங்கி நசித்துப்போகின்றன. பஸ்மஸ்நானஞ் செய்கின்றவன் செய்யக்கூடாத காரியம் ஆயிரஞ் செய்தவனாயிருந்தபோதிலும் அப் பாபத்தை அப்பஸ்மம் வனத்தைக் கொளுத்தும் அக்கினியைப்போ ல் கொளுத்தி விடுகின்றது. எந்தப்பிராமணன் ஈடில்லாதபாபங்க ளைச்செய்து மரணகாலத்தில் பஸ்மஸ்நானஞ் செய்கின்றானோ அவன் அப்பாவங்களினின்றும் சீக்கிரம் விடுபடுகின்றான். எவன் பஸ்மஸ்நானத்தினால் சுத்தாத்மாவாயும் குரோதத்தைச் செயித்தவ னாயும் இந்திரியங்களை யடக்குகின்றவனாயும் இருக்கின்றானோ அவன் எனது சமீபத்துக்குவந்து மறுபடியும் திரும்பிப்போகிறதில்லை. சந் திரன் வனஸ்பதியை யடைகிற காலத்தில் பஸ்மத்தை உத்தூளன ஞ்செய்து கொண்ட சரீர முடையவனாய் சிவபெருமானைப் பூசித் துத் தெரிசிப்பானாயின் அவன் எல்லாப்பாவங்களினின்றும் விடுபடு கின்றான். ஆயுள் சம்பத்துமோக்ஷம் இவைகளைவிரும்பினபிராமணன் நாடோறும் பஸ்மத்தைத்தரித்துவரல்வேண்டும். பிரமவிஷ்ணுக்களை சிவாத்மகமாக விருக்கின்ற திரிபுண்டரமானது பரமபுண்ணியத்தை க்கொடுக்கிறது. எந்தக் கோரமான ராக்ஷஸர்களுண்டோ எந்தப் பிரேத முதலிய பைசாசங்களுண்டோ எந்த அற்ப செந்துக்களுண் டோ அவைகளெல்லாம் திரிபுண்டரந் தரித்திருக்கின்றவனைப்பார் த்து விலகிப்போகின்றன. இதிற் சந்தேகமில்லை. சௌசமுத லான கர்மங்களைச்செய்து பின்னர் நிர்மலமான தீர்த்தத்தில் ஸ்நா னஞ்செய்து பாதமுதல் சிரசுபரியந்தம் பஸ்மத்தினால் உத்தூளன ஞ்செய்யவேண்டும். இந்தப் பஸ்மஸ்நானமானது உள்ளும்புறம்பு முள்ள மலங்களைப்போக்கும். வாருணஸ்நானம் தேகத்தின் புறம் பேயுள்ள மலத்தைமாத்திரம் போக்கும். ஆகையினால் வாருணஸ் நானத்தை ஓர்கால்விட்டாலும் பஸ்மஸ்நானத்தில் எப்பொழுதும் பிரீதியுள்ளவனாய் அதைத் தரித்துவரல்வேண்டும். இதிற் சம்ச யம்வேண்டாம். ஓமகாமுநியே! ஆக்னேய ஸ்நானமென்று சுருதி யிற் சொல்லப்படும் பஸ்மஸ்நானமன்றியில் செய்யப்பட்டனவெல் லாம் செய்யப்படாதனவேயாம். பிராணிகளுடைய உள்ளும்புறம்பு முள்ள மலங்களை விரைவில் சுத்திசெய்வதாகிய அந்தப்பஸ்மஸ்நா னம் சிவபூஜாபலனைக் கொடுக்கும். பிரதிதினம் கோடி வாருணஸ் நானம் மிக்கஆதரவுடன் செய்தவனாயிருந்தாலும் பஸ்மஸ்நானம

ன்றியில் சுத்தாத்மாவாகான். வேதமானது எந்தப் பஸ்மஸ்நானமகி மையை யுண்மையாயறிந்ததோ, சர்வதேவ சிகாமணியாகிய மஹா தேவர் எந்தப்பஸ்மஸ்நானத்தை யறிந்தாரோ, அதைச்செய்யாமல் யாதொருவைதிகன் வைதிககர்மத்தைச் செய்கின்றானோ அவன் அந் தத்தர்மத்தின் பதினாறிலொருபங்கின் பாதிபலத்தைக்கூட அடை கிறதில்லை. பரிசுத்தமான வஸ்துக்களிலெல்லாம் பரிசுத்தமானது பஸ்மமென்றும் அப்பஸ்மஸ்நானம் எவன்விதிப்படி செய்கிறானோ அவன் சகலவைதிககர்மங்களிலும் அதிகார முள்ளவ னென்றும் வேதங்கூறுகின்றது. அஞ்ஞானத்தினால் எவன் இந்த பஸ்மஸ் நானத்தைச்செய்யாமல் விடுகின்றானோ அவன் மகாபாதகனென் றும் பதிதனென்றும் சொல்லப்படுவான்; எவன்பஸ்மஸ்நானம் செய்கின்றானோ அவன் அளவில்லாத வாருணஸ்நானத்தினால் எந் தப்பலனை அடைகிறானோ அதைக்காட்டிலும் அதிகமானபலனை யடைகிறான். பஸ்மஸ்நானம் சிரௌதகர்மமென்று சொல்லப்படு கிறபடியால் முக்காலத்திலும் பிரயத்தனபூர்வமாகச் செய்யவேண் டும். விதிப்படி சௌசமுதலியவைகளைச் செய்தவனாயினும் பஸ் மஸ்நானமில்லாதவன் பரிசுத்தனுமாகான்; ஒருகாரியத்திலும் அதி காரியுமல்லன். அபானவாயு விட்டாலும் கொட்டாவிவிட்டாலும் கக்கினாலும் தும்மினாலும் மலமூத்திரங்களை விசர்ச்சனஞ்செய்தா லும் பஸ்மந்தரிக்கவேண்டும். இதுகாறும் என்னால் சொல்லிவந்த பஸ்மஸ்நானமஹிமை ஓர்பாகமேயன்றி முற்றுமன்று. இனி அந்த பஸ்மஸ்நானத்தா லுண்டாகும் பலத்தைக்கூறுகின்றேன் சாவதான மாய்க்கேட்பீராக என்றனர். (சு - ம் ருள.)

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காரபாஸ்கரருச்யைநமஃ

## பதினைந்தாம் அத்தியாயம்.

## திரிபுண்டர ஊர்த்துவபுண்டரமஹிமா.

---

நாராயணர்கூறுகின்றார்,—"அக்னிரிதியாதி" மந்திரங்களினால் சோதனைசெய்து பஸ்மத்தைநெற்றிமுதலானவிடங்களில் அந்தணர் களே தரிக்கவேண்டும். பிராஹ்மணன் க்ஷத்திரியன் வைசியன் என்

னூமூவரினும் துவிஜன்தான் திரிபுண்டரத்தை பிரயத்தனத்துடன் தரிக்கவேண்டும். எவனுக்கு உபநயனகர்மம் செய்யப்படுகிறதோ அவன்தான் துவஜன் என்றுசொல்லப்படுகிறான். ஆதலால் சுருதிகூறிய திரிபுண்டரத்தைத் துவஜர்கள் தரிக்கவேண்டியது அவசியம். விபூதி தரிக்காமல் வேதகர்மங்கள் செய்யப்பட்டாலும் அவையெல்லாம் செய்யாமைக்கொப்பாம். பஸ்மதாரணமின்றிச் செய்யும்காயத்திரி வுபதேசமும் வீணுகவேமுடியும். ஆகையால் பஸ்மத்தைத்தரித்தே காயத்திரியை ஜபிக்கவேண்டும். ஓமுநிஸ்ரேஷ்டரே! பிரஹ்மண்ய விஷயத்தில் காயத்திரியை மூலகாரணமாகச் சொல்லுகிறார்கள். அம் மந்திரமானது பஸ்மதாரணமன்றியில் எவனுலும் உபதேசிக்கப்படு கிறதில்லை. நெற்றியில் எவ்வளவுகாலம் பஸ்மந்தரிக்கவில்லையோ அவ் வளவுகாலம் காயத்திரியை ஜபிக்கஅதிகாரமில்லை. நெற்றியில் பஸ் மம் இல்லாமலிருப்பின் அது பிரஹ்மண்யமில்லாமையைக் குறிப்பி ப்பதாகும். ஓபிராஹ்மணரே! இப்போது என்னுல் சொல்லப்பட் டவையெல்லாம் பிரமாணத்தோடு சொல்லப்பட்டதாகும். எவனது நெற்றியில் மந்திரபூர்வகமான பஸ்மம் பிரகாசிக்கின்றதோ அவனே பிராஹ்மணன்; அவனே வித்துவான். இது சத்தியம்! சத்தியம்!! என்று வேதத்தால் சொல்லப்படுகின்றது. இரத்தினத்தைக்கண் டால் ஒருவனுக்கு எப்படி இயற்கையாய்ப் பிரீதியுண்டாகிறதோ அப்படிப் பஸ்மத்தைக் காணும்போது பிரீதியுண்டாயின் அவன் தான் பிராஹ்மணன். என்னுல் சொல்லப்படுகிற இது சத்தியம்! சத்தியம்!! இரத்தினத்தினிடத்தில்இயற்கையாய்ப் பிரீதியுண்டாதல் போல் ஒருவனுக்குப் பஸ்மாவில் பிரீதியுண்டாகாமற் போகுமானுல் அவனது சன்மம் சன்மத்தினுலும் * சண்டாளமுடைத்தென்று அறியத்தக்கது. இது சத்தியம்! சத்தியம்!! எவர்கள் பஸ்மதாரணத் தைச்செய்யாமல் விட்டு $ கனிமுதலியவைகளைப் புசிக்கின்றார்க ளோ அவர்களெல்லோரும் கோரமான நரகமடைவார்களென்பதிற்

---

* விபூதியினிடத்தில் பிரீதியில்லாமையினுல் சண்டாள சென்மமென்று கூறுவதல்ல அவனது சன்மமே சண்டாளசன்மமென் றறியத்தக்கதென்க.

$ கனி முதலியவைகளைப் புசிப்பதாயிருந்தாலும் பஸ்மதாரணஞ் செய்துகொண்டே புசிக்கவேண்டுமென்றி கனிதானே என்றுசாமானியமாக எண்ணி பஸ்மந்தரிக்காமற்புசித்தால் கோரமான நரகம் அடைவரென்க.

சந்தேகமில்லை. பஸ்மதாரணம் செய்துகொள்ளாமல் பொன்னைத் துலையிலிட்டுத் தானஞ் செய்வதாகிய துலாபாரதானத்தை ஒருவன்செய்தாலும் அவன் அப்பலனை யடைவதுமின்றிப் பதிதனுமாவான். பிராஹ்மணன் உபவீதமாகிய யஜ்ஞசூத்திரமின்றி எப்படி நித்தியகர்மம் செய்யக்கூடாதோ அப்படியே பஸ்மதாரணமின்றி சந்தியாவந்தனஞ் செய்யக்கூடாது. சந்தியாவந்தனஞ் செய்யுங்காலத்தில் தோளிலிருக்கும் உபவீதமானது ஓர்கால் விலகுமானால் அது குற்றமாய் முடியுமென்று அக்குற்றம் உண்டாகாமற்பொருட்டு அவ்வுபவீதத்துக்குப் பிரதியாக வஸ்திரமுதலானவற்றை உபவீதமாகத்தரித்துக்கொண்டு காயத்திரிமுதலான ஜபங்களைச் செய்யவேண்டுமென்றும், உபவாசமுதலானதும் செய்யவேண்டுமென்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. அதுபோலும் பஸ்மதாரணத்துக்குப் பிரதியாக வேறொரு அடையாளங்களைத் தாரணஞ்செய்துகொண்டு நித்யகர்மங்களைச் செய்யும்படி விதிக்கப்படவில்லை. பஸ்மதாரணத்தை விட்டு எவன் சந்தியாவந்தனஞ் செய்கின்றானோ அவன் தோஷத்தை யடைகிறான். அந்நியஜாதியாயுள்ளவன் வேதங்களைக்கேட்பானாயின் எப்படி தோஷமடைகின்றானோ அப்படியே பிராஹ்மணன் பஸ்மதாரணமின்றிச் சந்தியாவந்தனஞ் செய்வானாயின் தோஷமடைகின்றான்.

ஆகையால் வேதசம்பந்திகளாகிய வைதிகர் சிரவுதபஸ்மத்தை மிக்கபிரயத்தினத்தோடுசம்பாதிக்கவேண்டும். அந்தப்பஸ்மங்கிடைக்காதபக்ஷத்தில் ஸ்மார்த்தபஸ்மமாவது, அது அகப்படாதபக்ஷத்தில் லவுகிகபஸ்மமாவது சம்பாதிக்கவேண்டும். எவ்வகைப்பட்டதாயினும் பஸ்மம் பரிசுத்தமானதே. ஆகலான் எக்காலத்தில் எந்தப் பஸ்பம்கிடைக்கின்றதோ அந்தப்பஸ்மத்தைப்பிராமணர்கள் அவசியந் தரித்துக்கொண்டு சந்தியாவந்தனஞ் செய்தல்வேண்டும். பஸ்மம் எவ்வகைத்தாயினும் பஸ்மத்தைத் தரித்துக்கொண்டு சந்தியாவந்தனஞ் செய்தல்வேண்டும். எவ்வகைத்தானபஸ்மதாரியாயினும் அந்தப் பஸ்மநிஷ்டனிடம் பாபங்கள் சிறிதும் அணுகா. ஆகையால் அவசியம் பிராமணர்கள் பஸ்மதாரணத்தைச் செய்யும் நியமத்தைக் கொள்ளவேண்டும். திரிபுண்டரதாரணம் வலக்கை நடு மூன்றுவிரல்களினால் ஆறங்குலநீளங் குறையாது இரண்டுநேத்திரக் கடைவரையில் நெற்றியில் அநுலோமமாக ஓர்சமயம் தரிப்பானானாலும் அவன்

உருத்திரனேயாவன். அந்த மூன்றுவிரலில் அநாமிகை அகாரம் மத்திமை உகாரம் தர்ச்சனி மகாரம் எனவும், திரிகுணசொரூபம் எனவும் சொல்லப்படும். இத்திரிபுண்டரதாரண மகிமாவிஷயத்தில் அநாதியாயுள்ள இதிகாசம் ஒன்றுளது அதைக்கேட்பீராக.

பஸ்மத்ரிபுண்டர ருத்ராக்ஷதாரியாய் சிவசங்கர சர்வாத்மன் ஸ்ரீமாதஃ ஜகதம்பிகே என்னு நாமங்களை மூன்று முறை உச்சரிக்கின்றவராய் தூர்வாசர் ஓர் சமயம் பிதுர்லோகம் போகும்போது கவ்ய வாலாதி பிதுர்த்தேவர்கள் எல்லோரும் எதிர்கொண்டழைத்து பாத்யா சமனர்க்கியங்கொடுத்து ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்தல் முதலிய உபசாரங்களைச் செய்ய, அவர்களோடு தூர்வாச முனிவரும் அளவளாவி நானுவிதமாயுள்ள கதாரூபமான சம்பாஷணைகளைச்சம்பாஷித்துக்கொண்டிருந்தனர். அச்சமயத்தில் கும்பீ பாகமுதலிய நரகங்களிலுள்ள மஹாபாபிகளுடைய மகாகோரமான சப்தம் இவருடைய செவியிற்புகுந்தது. அக் கோரசப்தம் யாதோ வெனில், ஐயோ அடிக்கப்பட்டோம்! ஐயோ இறக்கப்பட்டோம்! ஐயோ கொளுத்தப்பட்டோம்! ஐயோ அறுக்கப்பட்டோம்! ஐயோ பிளக்கப்பட்டோம்!! என்று கதறிப் புலம்பும் பேரோசைகளேயாம். இவ்வாறு ஓலமிடும் பாவிகளுடைய அழுகைக்குரலைக்கேட்டு தூர்வாசர்துக்கமுள்ளவராய் பிதுர்நாதரைப்பார்த்து இதுயாருடைய கூக்குரலென்று கேட்டனர். அவர் ஓமுனிவரே! இங்கு யமபுரியிருக்கின்றது! அதில் பாபிகள் பாபாநுபவத்தை அநுபவிக்கும்பொருட்டு யமன் தன்னைப்போன்றபயங்கரமான அநேகதூதர்களோடு வசித்துகொண்டிருக்கின்றனன். அங்குபயங்கரமான யமதூதர்களால் சூழப்பட்டதாய் பாவிகளுக்குப் பாபானுபவங் கொடுப்பதாயுள்ள எண்பத்தாறு நரகங்களிருக்கின்றன. அவற்றுள் கும்பீபாகமென்னும் நரகம் மிகவும் கொடுமையாயும் தலைமையாயும் உள்ளது. அந்தநரகத்தில் இருப்பவர்களுடைய வாதனையை வர்ணிப்பதற்கு நூறுவருஷமானாலும் முடியாது. அது எவர்கள் சிவத்துரோகிகளோ, எவர்கள் தேவி விஷ்ணு வேதம் சூரியன் கணேசன் பிராமணர்கள் ஆகிய இவர்களையும், மாதா பிதா குரு தமையன் இவர்களையும், புராணம் ஸ்மிருதி இவைகளையும் தூஷிக்கின்றார்களோ, எவர்கள் காமாசாரர்களாய் மனம்போனவழி செல்கின்றார்களோ, எவர்கள் தப்தமுத்திராங்கிதர்களோ, எவர்கள் திரிசூலதாரிகளோ, அவர்களெல்

லாம் வீழ்ந்து கிடக்கும் நரகமாகும். உம்மால் இப்போது கேட்கப் படும் பயங்கரமான சப்தமானது மேற்கூறிய பாபிகளுடைய கோர சப்தங்களேயாகும். இக்கோரசப்தத்தைக் கேட்கின்றவர்களுக்கும் வைராக்கியமுண்டாய்விடும் என்றுகூறினர். அதனைக்கேட்ட தூர் வாசமுநிவர் அந்நரகத்தைப் பார்க்கவேண்டுமென்னும் எண்ணத் தோடு எழுந்திருந்து கும்பீபாகத்தைச் சமீபித்து அதனை ஓர்கணம் தலைகுனிந்துப்பார்த்தனர். இம்மகாமுநிவர் பார்த்தமாத்திரத்தில் நரகத்தில் ஆழ்ந்துகிடக்கும் சர்வபாபிகளுக்கும் சொர்க்கலோகத் தைக்காட்டிலும் அதிகசுகமுண்டாயிற்று. அஃதுண்டாகவே சிலர் நகைக்கின்றவராயும், சிலர் பாடுகின்றவராயும், சிலர் நிருத்தஞ் செய் கின்றவராயும், சிலர் ஒருவரோடொருவர் கூடி விளையாடுகின்றவரா யும் ஆயினர். அன்றி மிருதங்கம் முரசம் டக்கா துந்துபி இவைக ளுடைய இனிய சத்தமும் பஞ்சமஸ்வரம்(குயிலோசை)போல்கேட் கப்பட்டது. வசந்தகால புஷ்பக்கொடிகளுடையகாற்று வீசிற்று. குனிந்து பார்த்தவராகிய முனிபுங்கவர் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர். அவருடன்வந்த யமபடர்கள் பயமும் ஆச்ச ரியமும் அடைந்தவர்களாய் அதிசீக்கிரத்தில் தருமராஜனிடஞ்செ ன்று ஓ மகாராஜனே ! இப்போ திவ்விடத்தில் ஓர் பேராச்சரியம் நடந்தது. அதாவது கும்பீபாகத்திலிருக்கின்ற பாபிகளுக்கு சொர்க்கலோகத்தினும் அதிக சுகமுண்டாயிற்று; அதனைக்கண்ட எங்களுக்குப்பயமுண்டாயிற்று. இதன்காரணம் தெரியாமல் உம்மு டையசமீபத்தில் அதிசீக்கிரமாயோடிவந்தோமென்றுகூற,அதனைக் கேட்டயமனும் அதிசயித்து விரைவாக எழுந்து மதத்தபெரியகடா மீதேறி அக் கும்பீபாகத் தருகேவந்து அங்குவிளைந்திருக்கும் சுகத் துக்குக்காரணமறியாது இவ்வதிசயத்தை இந்திரனும் மற்றத் தேவர்களும் அறியவேண்டுமென் றெண்ணி தேவலோகத்திற்குத் தூதர்களை யனுப்பினன். அத்தூதர்களால் அதிசயத்தைக் கேள்வி ப்பட்ட இந்திராதிதேவர்களும் பிரமவிஷ்ணுக்களும் திக்பாலகரும் கும்பீபாகத்தை யடைந்து அதனைச்சூழ்ந்துநின்று சுவர்க்கலோக வாசிகளைக் காட்டிலும் சுகமனுபவிக்கும் கும்பீபாகவாசிகளைப் பா ர்த்து ஆச்சரியமும் பயமும் அடைந்தவர்களாய் இதன்காரணம் யாதோ தெரியவில்லையென்றும், இது ஆச்சரியம் ஆச்சரியமென் றும், பாபாநுபவத்துக்கு ஏற்பட்ட இக்குண்டத்தில் சுகமுண்டா

குமாஞல் இனி எவர்கள் பாபத்துக் கஞ்சுவார்கள்? பரமேஸ்வரஞல் தேவலோகவாசிகளாகிய நமக்குச் சுகமென்றும் நரகவாசிகளாகிய பாபிகளுக்குத் துக்கமென்றும் ஏற்படுத்தப்பட்டவிதி எப்படி தள்ளப்பட்டது? அவரது சங்கல்பம் எப்படிமாறிப்போயிற்று? இது ஆச்சரியம்! இதுஆச்சரியம்!! என்று பலமுறையும் சொல்லிநிற்க, அச்சமயத்தில் விஷ்ணுமூர்த்தி சகலதேவர்களோடும் கயிலாயமடைந்து அங்கு கோடிமன்மதப் பிரகாசமுள்ளவராயும் பார்வதியோடு கூடினவராயும் ரமணீயமான அவயவங்களுள்ளவராயும் காந்திக்கெல்லாம் இருப்பிடம் போன்றவராயும் எப்போதும் பதினறு வயதுள்ளவராயும் பலவித அலங்காரங்களால் பூஷிக்கப்பட்டவராயும் அநேக கணங்களாற் சூழப்பட்டவராயும் பரசிவையைப் புகழ்ந்து கொண்டிருப்பவராயு மிருக்கின்ற சந்திரமௌளியை வேதங்களாற் புகழ்ந்து நமஸ்கரித்து கும்பீபாகத்திற் கண்ட அதிசயத்தைக் கூறி, ஓ பிரபுவே! நாங்களனைவரும் அவ்வதிசயத்தின் காரணத்தையறியாது தேவரீரிடம்வந்தோம், ஓமஹாதேவரே! நீர்சர்வக்ஞராகையால் இதன்காரணத்தைக் கூறியருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். பஸ்மோத்தூளிதராகிய சிவபெருமான் அவைகளைக்கேட்டு மலர்ந்தமுகமுடையவராய் ஓவிஷ்ணுவே! நீங்கள்கண்ட ஆச்சரியத்துக்குக்காரணம் வேறென்றில்லை. அது பஸ்மமஹிமைதான். பஸ்மத்திஞல் எவ்விதமான ஆச்சரியந்தா னுண்டாகமாட்டாது. சைவபுங்கவராகிய தூர்வாசமுநிவர் கும்பீபாகத்தையடைந்து குனிந்து பார்த்தனரல்லவா? அப்போது அவர்நெற்றியில்அணிந்திருந்த விபூதியானது காற்றிஞல் அந்நரகத்தில் வீழ்ந்தது. அதஞலுண்டாகிய அதிசயம் நீங்கள்கண்ணுற்ற அதிசயமாகும். இனி அக்கும்பீபாகமானது பிதுர்லோகத்தி லிருப்பவர்களுக்குப் புண்ணியதீர்த்த மாகப்போகின்றது. அதில்அவர்கள் ஸ்நானஞ்செய்து சுகமடையப்போகிருர்கள். இனிஅத்தீர்த்தம் பிதுர்த்தீர்த்தமெனவழங்கப்படும். அது மூன்றுலோகங்களிலுமுள்ள புண்ணியதீர்த்தங்களைக் காட்டிலும் சிரேஷ்டமாகப்போகின்றது. அங்கு எனதுருவமாகிய சிவலிங்கமும் தேவியும் தாபிக்கப்பட்டு பிதுர்லோகவாசிகளால் பூஜிக்கப்படும். அங்குநடக்கும்தேவிபூஜையிஞல் மூன்றுலோகத்தாராலும்பூஜிக்கப்படும். இவ்வளவும் பஸ்மமகிமைதான் பஸ்மமகிமைதான் என்று மதுரவாக்கோடும் மேகத்தொனிபோற் கூறியருளிஞர். அதைக் கேட்ட தேவர்கள் நமஸ்கரித்து விடைபெற்று கும்பீபாகத்தருகில்

வந்து தருமராஜன்முதலியவர்களைப்பார்த்து சிவபெருமானது திருவாக்கைக்கூற, யாவருஞ் சந்தேகமொழிந்து காரணமறிந்து ஆஹா இது நல்லது இதுநல்லது என்றுபுகழ்ந்தனர். அரிப்பிரஹ்மாதிகள் பஸ்மமஹிமையைப் புகழ்ந்தனர். பிதுர்க்களும் நமக்குப் புண்ணியதீர்த்தலாபங் கிடைத்ததென்று சந்தோஷித்தனர். அப்பொழுதே அதன்கரையில் சிவலிங்கத்தைத் தேவியோடுஸ்தாபித்துத் தேவர்கள் பூஜைகொண்டாடினர். அதில் முன்னிருந்த பாவிகளெல்லாம் மூழ்கி எழுந்து விமானமேறி கைலாயம் அடைந்து பத்திரகணங்களென்னும் பெயருடையவர்களாய் இப்போதும் வசித்துக்கொண்டிருக்கின்றனர். கும்பீபாகநரகம் தீர்த்தகுண்டமாகவே அந்தநரகத்தை அதற்கு வெகுதூரத்தில் நிர்மாணஞ்செய்து அங்கு சைவர்களாயுள்ளார் போகக்கூடாதென்று தடைசெய்து விட்டார்கள். ஓ முனிவரே! என்னாற்சொல்லப்பட்ட இப்பஸ்மமகிமையைக் காட்டிலும் சிறந்தமகிமையுடையது ஒன்றிருக்கின்றதா!

ஓ நாரதரே! இனி அதிகாரிகளுடைய பேதத்தைநோக்கிவைஷ்ணவ ஆகமப்பிரகாரம் ஊர்த்துவபுண்டர விதியையும் பிரமாணத்தையும் வர்னம் மந்திரம் தேவதை பலன் முதலியயாவையுங் கூறுகின்றேன் கேட்பீராக. ஊர்த்துவபுண்டரத்துக்குரிய மண்ணை பர்வதசிகரத்திலும் நதிக்கரையிலும் விசேடமான சிவக்ஷேத்திரங்களிலும் சமுத்திரக்கரையிலும் புற்றிடத்திலும் துளசியின்வேரிலும் எடுக்கவேண்டும். வேறிடத்தில் எடுத்தல்கூடாது. கறுத்தமண் சாந்திகரத்தையும், செகப்புமண் வசீகரத்தையும், பொன்னிறமண் சம்பத்தையும், வெள்ளைமண் தருமத்தையுங் கொடுக்கும். அங்குஷ்டவிரல் புஷ்டியையும், மத்திமை ஆயுளையும், அநாமிகை அன்னத்தையும் பிரதேசினி (தர்ச்சனி) முத்தியையும் கொடுப்பதால் அவ்வவ்விரல்களால் இடவேண்டியதேயன்றி நகத்தினல்தீண்டலுமாகாது. அந்த ஊர்த்துவபுண்டரத்தைத் தீபம்போலவும் மூங்கில் இலைபோலவும் தாமரை யரும்புபோலவுமே யன்றி மச்சம் கூர்மம் சங்கம் இவைகளைப்போலவும் தரித்துக்கொள்ளலாம். பத்தங்குலம் உத்தமம். ஒன்பதங்குலமும் எட்டு ஏழு ஆறு அங்குலமும் மத்திமம். நான்கு மூன்று இரண்டு அங்குலம் அதமம். இவையே ஊர்த்துவபுண்டரத்தின் அளவாகும். நெற்றியில் கேசவனையும், உதரத்தில் நாராயணரையும், மார்பில் மாதவனையும், நெஞ்சுக்குழியில் கோவிந்தனையும், வலப்

பக்கவயற்றில் விஷ்ணுவையும், இடப்பக்கவயற்றில் வாமனரையும், வலதுபுஜத்தில் மதுசூதனரையும், இடதுபுஜத்தில் ஸ்ரீதரனையும், வலக்காதின்கீழ் திரிவிக்ரமனையும், இடதுகாதின்கீழ் ருஷீகேசனையும், புருஷ்டத்தில் பத்மநாபனையும், பின்கழுத்தில் தாமோதரனையும் இவ்வாறு பன்னிரண்டிடங்களில் பன்னிரண்டுநாமங்களையும் உச்சரித்திட்டுப் பின் சிரசில் வாசுதேவனை ஸ்மரித்துத் தரித்துக்கொள்ளல்வேண்டும். பூஜாகாலத்திலும் ஹோமகாலத்திலும் விடியற்காலத்திலும் சாவதானமாயிருந்து முன்சொன்ன நாமங்களையுச்சரித்து ஊர்த்துவபுண்டரந் தரிக்கவேண்டும். அசுசியானவனாயிருந்தாலும் கெட்டநடத்தை யுடையவனா யிருந்தாலும் பாபத்தைச்செய்கிறவனா யிருந்தாலும் சிரசில் ஊர்த்துவபுண்டரம் உடையவனாயின் அவன் பரிசுத்தனே. ஊர்த்துவபுண்டரத்தைத் தரித்தவன் சக்கிலியாயிருந்தாலும் அவன் எவ்விடத்திலிருந்தாலும் விமானமூர்ந்து விஷ்ணுலோகத்தையடைந்து அங்குள்ளவர்களால் கௌரவிக்கப்படுகின்றான். ஏகாந்திகளாயிருக்கின்ற மஹாநுபவரும் நடுவே விசாலமுள்ள விஷ்ணுபாதம் போன்ற புண்டரங்களைச் செய்து கொள்ளுகிறார்கள். நடுவில் மஞ்சட்பொடியுள்ளதாகவுஞ் செய்கிறார்கள். அதனைச்சிலர் சூலாகாரமாகவும் சிலர் சந்தில்லாமலும் சிலர் தீபத்தைப்போலும் சிலர் தாமரையிதழைப்போலும் சிலர் மூங்கிலிலைபோலும் தரிக்கிறார்கள். சில சாமானியவைணவர்கள் சந்தோடும் சிலவைணவர்கள் சந்தில்லாமலும் தரிக்கிறார்கள். சந்தில்லாமல் இட்டுக்கொள்ளும் விஷயத்தில் தோஷமில்லை. ஏகாந்திகளாயும் பிரபன்னர்களாயும் பரமேகாந்திகளாயும் இருக்கும் வைஷ்ணவர்களுக்கு சந்தில்லாமல் இட்டுக்கொள்ளும் விஷயத்தில் மிகுந்ததோஷ முண்டாகின்றது. எவன் அழகான ஊர்த்துவ புண்டரத்தை மத்தியில் இடமிருக்கும்படி நமோந்தமான கேசவாதிநாமங்களால் இட்டுக்கொள்ளுகின்றானோ அவன் எனக்குக் கோயில் கட்டினவனாவான். ஊர்த்துவபுண்டர மத்தியில் விஷ்ணு லக்ஷ்மியோடு வீற்றிருக்கின்றவராய் விநோதிக்கிறார். எவன் ஊர்த்துவபுண்டரத்தை மத்தியிலிடமில்லாமல் வைக்கிறானோ அந்த அதமப்பிராமணன் லக்ஷ்மியையும் விஷ்ணுவையும் விலக்கிவிடுகிறவனாயும் இருபத்தொரு நரகத்தையடைகிறவனாயு மாகிறான். கோணலில்லாமலும் பக்கங்கள் ஒழுங்காயும் மத்தியில் விசாலமாயும் தடி தாமரை மச்சம் தீபம் இவைகளைப்போலும் இடவேண்டும். பிராம

ணன் சிகோபவீதம் ஊர்த்துவபுண்டரந் தரிக்கவேண்டும் அஃதில்லாமல் செய்யும் கிரியை வைணவருக்கு வீணாகமுடியும்.

ஊர்த்துவபுண்டரம் திரிசூலம் வர்த்துலம் சதுரஸ்ரம் அர்த்தசந்திரம் இலிங்கம் முதலான குறிகளை வேதநிஷ்டர்த்தரிக்கலாகாது. சன்மத்தால் சாதியடைந்தவன் வேதமார்க்கத்தை அநுசரித்து நெற்றியில் பிரமையினாலேனும் வேறு புண்டரத்தை யணியக்கூடாது. பிரசித்திக்கும் காந்திக்கும் விஷ்ணுவாகமமாதிகளில் வேறுபுண்டரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. சொல்லப்பட்டிருப்பினும் வைதிக அநுஷ்டானமுடையவன் சுருதிப்பிரதிபாதகமான பஸ்மத் திரிபுண்டரத்தைவிட்டு அவைகளைத் தரிக்கக்கூடாது. நெற்றியில் பஸ்மத்தைத் திரிபுண்டரமாகத்தரிக்கவேண்டியதேயன்றி மோகத்தினால் வேறுபுண்டரத்தை வைதிகன் தரிப்பானாயின் அவன் நரகமடைவான். வேதமார்க்கநிஷ்டன் மோகத்தினால் வேறுபுண்டரந் தரிப்பானாயின் அதோகதியடைவான். இதிற்சந்தேகமில்லை. வேதமார்க்கத்தையுடையவன் விக்ரகாதி உருவங்களாயிருக்கின்ற திருமால் அடையாளங்களைத்தரிக்கக்கூடாது. சிரௌத தர்மநிஷ்டர்களுக்கு சிரௌததர்மத்திற்கூறப்படுங் குறியே குறியாகும். சிரௌத தர்மாநுஷ்டானமில்லாதவர்கள் சிரௌத தர்மத்திற்கூறாத குறிகளைத் தரித்துக் கொள்ளலாம். எந்தத்தேவதை வேதசித்தமோ அந்தத்தேவதையின் குறியே வைதிகமாகும். சுருதிப் பிரதிபாதகமில்லாத தேவதையின் குறிகள் வேதசம்பந்தமில்லாத அவைதிகக் குறிகளெனப்படும். மஹாதேவர் சாக்ஷாத் சம்சாரமோசகரென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறார். அவர், பக்தர் உபகாரத்தின்பொருட்டு சிரௌதகுறியைத் தரிக்கின்றனர். வேதத்தில் சொல்லப்பட்ட விஷ்ணுவுக்கும் சிரௌதகுறியன்றி வேறுகுறிகளில்லை.

சிரௌதகுறி என்பது திரிபுண்டர உத்தூளனங்களே யாம். அசிரௌதக்குறி ஊர்த்துவபுண்டர முதலானவைகளாம்; திரியக் திரிபுண்டரமல்ல. வேதமார்க்க நிஷ்டர்களால் வேதோக்தவழியாக நெற்றியில் திரியக் திரிபுண்டரமே தரிக்கத்தக்கது என்றனர். (சு - ம் - கக அ.)

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஹ்ரீங்காராம்போஜசஞ்சலாயைநமஃ

# பதினாறும் அத்தியாயம்.

## சந்தியோ பாசனம்.

---

நாராயணர் கூறுகின்றார். பஸ்மதாரணமான்மியத்தை ஒருவாறு விரித்துக்கூறினேன். இனி சந்தியோபாசனத்தைக் கூறுகின்றேன் கேட்பீராக.

சந்திகள் பிராதஸ்ஸந்தி, மத்தியானஸந்தி, சாயம்ஸந்தி என மூவகைப்படும். அவற்றுள் பிராதஸ்ஸந்தி சூரியவுதயத்துக்குள் நக்ஷத்திரம் தெரியுங்காலம் உத்தமம் என்றும், நக்ஷத்திரந் தோன்றாக்காலம் மத்திமம் என்றும், சூரியன் காணுங்காலம் அதமம் என்றும் சொல்லப்படும். மத்தியானசந்தி-சூரியன் ஆகாயநடுவில் இருக்குங்காலம் உத்தமமென்றும், சாயம்சந்தி சூரியன் காணப்படுங்காலம். உத்தமமென்றும், சூரியன் அஸ்தமிக்குங்காலம் மத்திமமென்றும். நக்ஷத்திரங் காணுங்காலம் அதமமென்றுஞ்சொல்லப்படும்.

பிராஹ்மணன் விருக்ஷமெனவும், சந்திகள் அதன் வேர் எனவும், வேதம் கிளைகள் எனவும், அவ்வேதத்திற்கூறும் கர்மதர்மங்கள் இலைகள் எனவும் சொல்லப்படுகின்றமையால் விருக்ஷவிருத்தி எண்ணுவோன் முயற்சியோடு வேரைக் காப்பாற்றல் வேண்டும். வேரறுமானால் விருக்ஷமும் இலைகளும் இல்லையாமன்றோ, எவன் சந்தி அறியவில்லையோ எவன் அதனை அநுஷ்டிக்கவில்லையோ அவரெல்வாம் ஜீவித்திருப்பினும் அந்தணராகார்; சூத்திரர்களேயாவர். அவர்கள் மரணமடையின் நாயாய்ப் பிறப்பார்கள். ஆகலான் அந்தணர்கள் நாடோறும் சந்திக்குரிய காலங்களையறிந்து சந்தியோபாசனஞ் செய்தல்வேண்டும். அவ்வாறு செய்யாராயின் அவர்கள் எந்தக் கர்மங்களுக்கும் அதிகாரிகளாகார். உதயத்திலும் அஸ்தமனத்திலும் மூன்றுநாழிகைக்குமுன் சந்தியாவந்தனஞ்செய்தல்வேண்டும். அந்தக்காலத்துக்கு மேற்பட்டால் பிராயச்சித்தமும் உண்டு. அஃதாவது அர்க்கியம் நான்காவர்த்தியும், தேவியினது

மந்திரம் நூற்றெட்டாவர்த்தியும் செய்தல்வேண்டும். எந்தக்காலத்துக்கு எந்தக்கர்மமோ அந்தக்கர்மத்தை அந்தக்காலத்துக்குரிய சந்தியாதேவியை உபாசித்துச் செய்தல்வேண்டும்.

சந்திகளை வீட்டிற்செய்தால் சாதாரணம். பசுத்தொழுவத்தில் செய்தால் மத்திமம், நதிதீரத்தில் செய்தால் உத்தமம். தேவி ஆலயத்தில் செய்தால் உத்தமோத்தமம். சந்தியினால் உபாசிக்க வேண்டியவள் தேவியா யிருக்கின்றபடியால் மூன்றுசந்தியையும் தேவியாலயத்திற்றானே செய்தால் அதனால் உண்டாகும்பலன் அனந்தமாம். பிராமணனுக்குச் சிறந்த தெய்வம் தேவியைக்காட்டிலும் வேறில்லை. வேதமும் விஷ்ணுவையுபாசிப்பதும் சிவனை யுபாசிப்பதும் நித்தியமல்ல; மஹாதேவியான காயத்திரியை உபாசிப்பதுதான் நித்தியமானது என்று கூறுகின்றது. ஆகலான் சகலவேத சாரமாயுள்ளது காயத்திரியை அருச்சித்தலேயாம். பிரஹ்மாதிதேவர்களாலும் வேதங்களாலும் காயத்திரி ஜபிக்கப்பட்டும் உச்சரிக்கப்பட்டும் வருகின்றது. ஆகலான் உபாசிக்கத்தக்கது காயத்திரியே. யாவர்க்கும் உபாசனாமூர்த்தி வேதமாதாவும் ஆதிசக்தியுமாகிய காயத்திரிதேவியாகவே யிருத்தலினால் யாவரும் சாக்தர்களேயல்லாமல் ஒருவரும் சைவருமாகார். வைணவருமாகார்.

யாவரும் ஆசமனமும் பிராணாயாமமுஞ்செய்து, கேசவன் நாராயணன் மாதவன் கோவிந்தன் விஷ்ணு மதுசூதனன் திரிவிக்ரமன் வாமனன் ஸ்ரீதரன் ருஷீகேசன் பத்மநாபன் தாமோதரன் சங்கரஷணன் வாசுதேவன் பிரத்யும்னன் அநிருத்தன் புருஷோத்தமன். அதோக்ஷஜன் நரசிஹ்மன் அச்சுதன் ஜனார்த்தனன் உபேந்திரன் ஹரி கிருஷ்ணன் இந்த இருபத்துநான்கு நாமங்களையும் ஓங்காரபூர்வகமாயும், ஸ்வாஹாந்த பூர்வகமாயும் உச்சரித்து ஜலத்தை அள்ளி உட்கொண்டு நமோந்தமாகத் தொடவேண்டும். பின்னர் அந்தநாமங்களில் கேசவாதி மூன்றுமந்திரங்களால் ஆசமித்து, அதன்பின்னுள்ள இரண்டுமந்திரங்களால் கையையும், அதன்பின்னுள்ள இரண்டுமந்திரங்களால் முகத்தையும் சுத்திசெய்து, அதன்பின்னுள்ள இரண்டு மந்திரங்களால் மார்ச்சனமும், அதன்பின்னுள்ள ஒவ்வொருமந்திரத்தால் கை சிரம் பாதம் இவைகளைப் புரோக்ஷணஞ்செய்து இவ்வாறு

அ

பன்னிரண்டும்போக, அதன்பின்னுள்ள சங்கரஷணுதி பன்னிரண்டுநாமங்களால் பன்னிரண்டு இடங்களைத் தொடவேண்டும்.

ஆசமனம்செய்யும்போது இடக்கையால் ஜலத்தைத் தொட்டுக்கொண்டே வலக்கையிலுள்ள கநிஷ்டை அங்குஷ்டவிரல்களை விலக்கி அக்கையைப் பசுவின்காதுபோல் வைத்து, அதில் உளுந்தமுழுந்தும் அளவினதாக ஜலத்தைக்கொண்டு ஆசமனஞ்செய்யவேண்டும். ஆசமனம் செய்யும்போதெல்லாம் ஜலத்தைத் தொட்டுக்கொண்டிராம லிருந்தால் அந்தஜலம் சுத்தமாகாது. ஆசமனதீர்த்தம் ஓர் உளுந்தளவுக்குக் குறைவாகவும் அதிகமாகவும் கொண்டால் அது சுராபானஞ் செய்வதனேடொக்கும். இவ்வாறு விதிப்படி ஆசமனஞ்செய்தபின்னர் பிராணுயாமஞ் செய்யவேண்டும். அது எவ்வாறெனில், நாசியின் தக்ஷிணநாடியை அங்குஷ்டவிரலாலும், உத்தரநாடியை கனிஷ்டிகை அநாமிகை விரல்களாலும் பிடித்துக்கொண்டு மத்திமை தர்ஜனிவிரல்களைவிட்டு பிரணவத்தை நினைத்து நான்குபாதத்தோடுகூடிய காயத்திரியைச் சிரோமந்திரத்துடன் உச்சரித்து தக்ஷிணநாடியால் வாயுவை ரேசித்து வாமநாடியால் உதரத்திற்பூரித்து கும்பகத்தால் வாயுவைத் தாரணஞ்செய்தலாம்.

இவ்வாறு ரேசக பூரக கும்பகங்களைச் செய்வதைத்தான் சகலசாஸ்திரங்களாலும் முநிவர்களாலும் யோகிகளாலும் பிராணுயாமமென்றுசொல்லப்படுகின்றது. ரேசகம்—வாயுவைவெளியில் விடுவது. பூரகம்-சுத்தவாயுவைப்பூரிப்பது. கும்பகம் - வாயுவைவிடுவதும்பூரிப்பதுமின்றிச் சமமாகநிறுத்துவது. பூரகஞ்செய்யுஞ் சமயத்தில் நாபிமத்தியில் கருநெய்தலின் இதழ்போல் கரியநிறத்தையும், சதுர்ப்புஜங்களையுமுடைய விஷ்ணுமூர்த்தியையும், கும்பகம் செய்யும் சமயத்தில் இருதயத்தில் கமலாசனருடனுய், சிருட்டி கர்த்தாவாய், ஜகந்நாதனு யிருக்கின்ற நான்குமுகமுள்ள பிதாமகனையும், ரேசகஞ்செய்யுஞ் சமயத்தில் நெற்றியில் சுத்தஸ்படிகம்போல் பிரகாசிக்கின்றவராயும் நின்மலராயும் பாவத்தை நாசஞ்செய்கின்றவராயு முள்ள மஹேஸ்வரரான சங்கரரையும் தியானிக்கவேண்டும். அந்தத் தியானத்தினுல் பூரகத்துக்கு விஷ்ணுபதத்தையும், கும்பகத்துக்கு நான்முகன் பதத்தையும், ரேசகத்துக்குப் பரம்பொருளான சிவசாயுச்சியத்தையும் அடையக்கூடும். முன்னே

விஷ்ணு நாமங்களால் சொல்லிவந்த ஆசமனுதிகள் புராணத்திற் கூறப்படும் விதியாகும்.

இனி, சகலபாபங்களேயும் போக்கும்படியான சிரௌதாசமனத்தைச் சொல்லுகின்றேன். முதலில் பிரணவத்தையுச்சரித்து காயத்திரியின்பாதம் ஒவ்வொன்றுக்கு வியாகிருதியுடன் உச்சரித்தல் சிரௌதாசமனமெனவும், வியாகிருதியைமுன்னிட்டு காயத்திரியைச் சிரசோடு கூடினதாயும் ஒவ்வொன்றும் பிரணவத்தோடு கூடினதாயும் மூன்றுதரம் உச்சரித்து ஐந்துவிரல்களினுல் மூக்குநுனியைப் பிரணவத்தா லழுத்தல் பிராணுயாமம் எனவும் சொல்லப்படும். இந்தப் பிராணுயாமம் கிருகஸ்த வானப்பிரஸ்தர்களுக்குப் பாபங்களேயெல்லாம் போக்கத்தகுந்த முத்திரை எனவும், கனிஷ்டிகை அநாமிகை அங்குஷ்டங்களால் பிடிப்பது எதிகளுக்கும் பிரமசாரிகட்கும் பாபத்தை யொழிக்கும் முத்திரை எனவும் கூறுவர்.

"ஆபோஹிஷ்டா" என்னு மூன்றுமந்திரங்களே யுச்சரித்து தர்ப்பையோடு கூடின சலத்தால் அம்மூன்று மந்திரங்களின் முடிவிலாவது அந்தந்த மந்திரங்களின் முடிவிலாவது சாவதானமான மனமுள்ளவனுய்த் தன்னேப் புரோக்ஷணஞ்செய்துகொள்ளவேண்டும். ஒன்பது பிரணவத்தோடுகூடின பயோஹிஷ்டை மந்திரங்களால் புரோக்ஷணஞ்செய்தால் ஒருவருடஞ் செய்தபாபம் நசிக்கும். பிறகு ஆசமனம்புரிந்து சூரியமந்திரத்தால் ஒரு ஆசமனமுஞ் செய்தல்வேண்டும். அதனுல் அந்தக்கரணத்தை அநுசரித்துள்ள பாபங்கள் நசித்துப்போம். பிரணவசம்பந்தமான வியாகிருதிகளோடு கூடிய காயத்திரியினுலும் பிரணவசஹிதமான "அபோஹிஷ்டை" என்னும் சூக்தத்தாலும் மார்ச்சனம்செய்யவேண்டும். கோகர்ணுகாரமாக வலக்கையில் ஜலத்தையெடுத்து நாசிவரையில் தூக்கி வாமகுக்ஷியில் பாபத்தைநினைத்து புருஷன் கிருஷ்ணவர்ணனென்று உச்சரித்து (த்ருபத) ருக்கையும் உச்சரித்து தக்ஷிணநாசியின்வழியாய் சுவாசமார்க்கத்தினுல் அந்தப்பாபம் கைசலத்தில் வந்ததாகப் பாவித்துக் கண்களால் பார்க்காமல் இடம்பக்கத்திலிருக்கும் கல்லின்மீதுவிட்டுத் தனதுசரீரம் பாபமில்லாததென்று பாவித்தல்வேண்டும்.

பிறகு எழுந்திருந்து இரண்டுபாதங்களேயும் சமமாகச்சேர்த்துக்கொண்டு தர்ச்சனியில் அங்குஷ்டம் சேராமல் விலக்கி சூரியனைப்பார்த்து காயத்திரியால் அபிமந்திரித்த சலத்தை அஞ்சலியாக எடுத்து பிராதஸ்ஸந்தியிலும் சாயம்சந்தியிலும் மூன்றுதரமும் மாத்யான்னத்தில் ஒருதரமும் அர்க்கியம்விட்டு ஆதித்யமந்திரத்தால் பிரதக்ஷிணஞ்செய்யவேண்டும். அர்க்கியஜலத்தைப் பிராதஸ்ஸந்தியில் சிறிதுவளைந்தும், மத்தியானத்தில் தண்டம்போல் நின்றும், சாயங்காலத்தில் ஆசனத்திலிருந்தும் விடவேண்டும. இந்த அர்க்கியஜலத்தை எடுத்து எதற்காக விடுகின்றதோ அந்தக்காரணமும் சொல்லுகின்றேன் கேட்பீராக.

மகாவீரர்களாயும் நன்றிமறந்தவர்களாயும் பயங்கரர்ளாயும் இருக்கின்ற முப்பதுகோடி "மந்தேஹா" என்னும் ராக்ஷசர்கள் சூரியனைவிழுங்க இச்சிக்கிறார்கள். அவர்கள் இச்சையைக்கெடுப்பதற்கு தேவகூட்டங்களும் ருஷிகளும் சந்தியை உபாசித்து உதகாஞ்சலியாகிய அர்க்கியத்தை விடுகிறார்கள். விட்டவுடன் அந்த அர்க்கியஜலம் வச்சிர வுருவங்கொண்டு அந்தராக்ஷசர்களைக் கொளுத்துகின்றது. இதுதான் அதன் காரணம். ஆகலான் பிராஹ்மணர்கள் நாடோறும் சந்தியை உபாசிக்கின்றார்கள். இச்சந்தியோபாசனம் மகாபுண்ணியத்தை உண்டாக்குகிறதென்று சொல்லப்படும்.

ஓ நாரதரே! இனி இங்கு விதிப்படி செய்யும் அர்க்கியத்துக்கு அங்கபூதமான மந்திரம்யாதெனின்! நான் சூரியஜ்யோதிரூப மாய் விட்டேன். இவ்விதமான சோதிரூபமாயிருக்கின்ற நான் சுக்ல சோதிரூபமாயுள்ள ஜலசொரூபியாய்விட்டேன். பிரமரூபமான காயத்திரியே! வரத்தைக்கொடுக்கின்றவளே! நீ ஜபானுஷ்டான சித்திக்காக எனது இருதயத்தில் பிரவேசிக்கவேண்டும். என்பதேயாம். இந்தமந்திரத்தை மிக்க சிறத்தையுடன் உச்சரித்தமாத்திரத்தில் சந்தியாபலம் சித்திக்கும். பிறகு சுத்தமான ஸ்தானத்தில் ஆசனமிட்டு அதிலிருந்து வேதமாதாவான காயத்திரியை ஜபிக்கவேண்டும். அவ்வாசனத்திலேயே பிராணுயாமத்துக்குப்பின் பிராதஸ்ஸந்தியில் முனிவர்களால் கேசரிமுத்திரை சொல்லப்பட்டிருக்கிறது. அஃதாவது,—மனமும் நாக்கும் ஆகாயத்தில் சஞ்சரிக்கின்றனவாயும், கண் புருவத்துக்குள் நுழைந்திருக்கிறதாயும் இருப்பதாகும். இம்முத்திரைக்குச் சமானமான முத்திரையும் சித்தாசனத்துக்குச்

சமானமான ஆசனமும் கும்பகத்தின் காற்றுக்குச் சமானமான காற்று மில்லை. ஓநாரதரே ! இது உண்மை உண்மை. மணிபோல் பிரணவத்தை யுச்சரிப்பதால் மிகவும் முயற்சியோடு வாயுவைச் செயித்து ஸ்திரமான ஆசனத்தில் ஸ்திரமாய் நிற்கின்றவனாய் யான் எனதென்பது அற்றவனாய் இருக்கவேண்டும். இனி சித்தாசனத்தின் லக்ஷணத்தைக் கூறுகின்றேன் கேட்பீராக.

யோனி ஸ்தானத்தைக் கால்விரலின் மூலம் அடைந்ததாகவும் ஆண்குறியைப் பாதத்தால் மறைத்ததாகவும், மற்றொருகால் இருதயத்தை யடைந்ததாகவும் செய்து ஒரே மனதுள்ளவனாயிருந்து சரீரத்தைச் சமமாகவிருத்தி ஸ்தம்பம்போ லிருக்கின்றவனாய் இந்திரியங்களை யடக்கினவனாய் சலிக்காத நேத்ரத்தினால் புருவமத்தியைப்பார்த்துக்கொண்டிருக்கவேண்டும். இவ்வாறிருத்தல் யோகிகளுக்குச் சுகத்தைக்கொடுக்கிற சித்தாசனமெனச் சொல்லப்படும்.

நாசரகிதையாயும் பிரஹ்மத்தோடும் கூடினவளாயும் வேதமாதாவாயும்வரத்தைக்கொடுக்கின்றவளாயும் காயத்திரிசொரூபிணியாயும் இருக்கின்ற ஓதேவீ ! என்னிடத்தில்வந்து தோத்திர ரூபமாகிய தவத்தை அங்கீகரித்துக்கொள்வாய். மத்தியானத்தில் எந்தப்பாபஞ் செய்யப்பட்டதோ அந்தப்பாபம் அந்தமத்தியானப் பொழுதிலும், இராத்திரியில் எந்தப்பாபஞ் செய்யப்பட்டதோ அந்தப்பாபம் அந்தராத்திரியிலும் விடுபடவேண்டியது என்றும், சர்வாபரணசொரூபிணியாயும் சந்தியாவித்தியா சொரூபிணியாயும் சரஸ்வதிசொரூபிணியாயும் விருத்தபருவத்தை யடையாதவளாயும் சர்வதேவிஸ்வரூபிணியாயுமிருக்கின்ற ஓமஹாதேவியே ! உனக்கு நமஸ்காரம் என்றும், "ஓஜோஸீத்" யாதி மந்திரங்களினால் தேவியை ஆவாஹனஞ் செய்துகொள்ள வேண்டியது. உன்னைக் குறித்து என்னால் எந்த அநுட்டானங்கள் செய்யப்படுகிறதோ அவையெல்லாம் சம்பூரணமாக முடியவேண்டுமென்று பிரார்த்திக்கவேண்டும். பின்னர் பிரஹ்மாவினாலும் விஸ்வாமித்திரராலும் வசிட்டராலும் உண்டான காயத்திரி சாபவிமோசனம் அவ்வவர் நாமங்களை நினைப்பதாலுண்டாகும்.

இருதய கமலமத்தியில் புருஷப்பிரமாணராயும் சத்யாத்மகஸ்வரூபராயும் சகத்ஸ்வரூபராயும் நித்தியராயும் பரமாத்மஸ்வரூபராயும் சித்ரூபராயும் வாக்குக் கெட்டாதவராயும் ஒன்றானவராயும் இருக்கின்ற மூர்த்தியை நாடோறும் தியானிக்க வேண்டும்.

இனி சந்திக்கு அங்கபூதமா யிருக்கின்ற நியாசாதிகளைச் சொல்லுகிறேன் கேட்பீராக. பிரணவ பூர்வமாகவும் நமோந்தமாகவும் மந்திரங்களை யுச்சரித்து அந்தந்தவிடங்களில் நியாசஞ் செய்யவேண்டும். எப்படி யெனின்,— பூஃ என்பதால் பாதங்களையும், புவஃ என்பதால் முழங்கால்களையும், சுவஃ என்பதால் இடையையும், மஃ என்பதால் நாபியையும், ஜநஃ என்பதால் இருதயத்தையும், தபஃ என்பதால் கண்டத்தையும், சத்யம் என்பதால் நெற்றியையும் நியசித்துப்பின் தத்ஸவிது என்பதால் அங்குஷ்டங்களையும், வரேண்யா என்பதால் தர்ச்சனிகளையும், பர்க்கோதேவஸ்ய என்பதால் மத்திமைகளையும், தீமஹி என்பதால் அநாமிகைகளையும், தியோயோநஃ என்பதால் கனிஷ்டிகைகளையும், ப்ரசோதயாத் என்பதால்கரதலகரபுருஷ்டங்களையும் நியசித்து, (இது கரந்நியாசம்) அதன்பின்னர் பிரமஸ்வரூபமான தத்ஸவிது என்பதால் ஹ்ருதயத்தையும், விஷ்ணுஸ்வரூபமான வரேண்யம் என்பதால் சிரசையும், ருத்ரசொரூபமான பர்க்கோதேவஸ்ய என்பதால் சிகையையும், சக்திசொரூபமான தீமஹீ என்பதால் கவசங்களையும், காலாத்ம சொரூபமாகிய தியோயோநமஃ என்பதால் நேத்ரத்திரயங்களையும் நியசித்து, (இது அங்கநியாசம்) ப்ரசோதயாத் சர்வாத்மஸ்வரூபே அஸ்திராய என்பவைகளால் கையைத்தட்டி, பிரணவ பூர்வகமான பூஃ புவஃ சுவஃ என்னு மந்திரங்களால் திக்பந்தனமும் செய்தல்வேண்டும். இனிப்பாபத்தைப் போக்கும் அக்ஷரநியாசத்தைக் கூறுகின்றேன்.

தத் என்பதால் பாதாங்குஷ்டங்களிலேயும், ஸ என்பதால் குல்பங்களிலேயும், வி என்பதால் ஜங்கங்களிலேயும், து என்பதால் ஜாநுக்களிலேயும், வ என்பதால் ஊருக்களிலேயும், ரே என்பதால் குதஸ்தானத்திலேயும், ணி என்பதால் லிங்கத்திலேயும், ய என்பதால் இடையிலேயும், ப என்பதால் நாபியிலேயும், கோ என்பதால் இருதயத்திலும் தே என்பதால் ஸ்தனங்களிலேயும், வ என்பதால் ஹ்ருதியிலேயும், ஸ்ய என்பதால் கண்டத்திலேயும், தீ என்பதால் முகத்திலேயும், ம என்பதால் தாலுவிலேயும், ஹி என்பதால் நாசிநுனியிலேயும், தி என்பதால் நேத்ரமண்டலத்திலேயும், யோ என்பதால் புருவநடுவிலேயும், யோ என்பதால் நெற்றியிலேயும், நஃ என்பதால் பூர்வமுகத்திலேயும், ப்ர என்பதால் தக்ஷிணமுகத்திலேயும், சோ என்பதால் பச்சிமமுகத்திலேயும், த என்பதால் உத்தரமுகத்திலே

யும், யோ என்பதால் மூர்த்தினியிலேயும், த என்பதால் சர்வவியா பகமாகவும் நியசிக்கவேண்டும். இந்தநியாசத்தை ஜபத்தில் ஆசக்தி யுள்ள சிலர் இச்சிக்கிறதில்லை.

பிறகு மகாதேவியாகியும் ஜகன்மாதாவாகியும் மகேஸ்வரஸ்வ ரூபிணியாகியும் இருக்கின்ற காயத்திரிதேவியை செம்பருத்தி புஷ் பம்போல் காந்தியுள்ளவளாயும், கௌரியாயும், செந்தாமரையை ஆசனமாகவுடையவளாயும்,செவந்த சந்தனத்தையும் செவந்தமாலை யையும் அணிந்தவளாயும், நான்குமுகமும் நான்குகைகளும் எட் டுக்கண்களும் உடையவளாயும், சிருக் ஸ்ருவம் ஜபமாலை குண்டி கைகளைத் தரித்தவளாயும், சர்வாபரணங்களினால் பிரகாசிக்கின்ற வளாயும், ருக்வேதத்தை அத்யயனஞ் செய்கின்றவளாயும், ஹம் ஸவாகனரூடையாயும், ஆகவநீயம் என்னும் அக்னிமத்தியில் வசி க்கின்றவளாயும், பிரஹ்மசொரூபிணியாயும், நான்குபாதங்களையும் எட்டு உதரங்களையும் ஏழுசிரசுகளையும் உடைத்தானவளாயும், மஹேஸ்வர சொரூபிணியாயும், அக்னிமுகமுடையவளாயும், உரு த்ர சொரூபமான சிகையையும், விஷ்ணுசொரூபமான சித்தத்தை யும், பிரஹ்மசொரூபமான கவசத்தையும் உடையவளாயும், சாங் கியாயனம் என்னுங் கோத்திரத்தை யுடையவளாயும், ஆதித்யமண் டலத்தி லிருப்பவளாயும் தியானிக்கவேண்டும்.

பிறகு சம்முகம், சம்புடம், விததம், விஸ்த்ருதம், த்விமுகம், திரிமுகம், சதுர்முகம், பஞ்சமுகம், ஷண்முகம், அதோமுகம், வியாபகாஞ்சலி, சகடம், யமபாசம், கிரதிதம், சம்முகோன்முகம், பிரலம்பம் முஷ்டிகம், மச்சம், கூர்மம், வராஹம், சிம்ஹாகிராந்தம், மகாக்ராந்தம், முத்கரம், பல்லவம் ஆகிய இருபத்துநான்கு முத்தி ரைகளைத் தேவிக்குத் தெரிசனஞ் செய்வித்து திரியம்பக ருக் என் னும் பெயருடைய மகாபுண்ணிய கரமான நூறு அக்ஷரத்தோடுங் கூடியகாயத்திரியை ஒருதரஞ் செபிக்கவேண்டியது. ஓங்கார பூர்வக மாக பூஃ புவஃ சுவஃ என்னும் பதத்தோடுகூடியதும் இங்குசொல்லப் பட்ட இருபத்துநான்கு அக்ஷரத்தோடு கூடியதுமான காயத்திரி யையும் ஜாதவேதசம் என்னும் பெயருடைய ருக்கையும் உச்சரிக்க வேண்டியது. எந்தப்பிராமணன் தினம் இவ்வாறு ஜபிக்கின்றானோ அவன் சந்தியாவந்தன பலத்தைப் பூர்த்தியாக அடைந்து சுகம் பெறுவான் என்றனர். (சு - ம் கOசு.)

ஹிரீங்காரகந்தாங்குரிகாயைநமஃ

# பதினேழாம் அத்தியாயம்.

## சந்தியாதி கிருத்தியம்.

நாராயணர் கூறுகின்றார்,— சாயத்திரி மந்திரத்தின் பாதங்களைத் தனித்தனியாக ஜபிக்கவேண்டும். அவ்வாறு ஜபித்தால் பிரஹ்மஅத்திநீங்கிவிடும். பாதங்களைக்கூட்டி ஜபித்தால் பிரஹ்மஹத்தியைக் கொடுப்பதுமன்றி நூறுகற்பகோடிகாலம் தலைகீழாக இருக்கச்செய்யும். ஆறு பிரணவத்தால் சம்புடமாயிருக்கின்ற காயத்திரி மந்திரம் மூன்றுவிதமாக இருக்கின்றது, தருமசாஸ்திரங்களிலும் புராணங்களிலும் இதிகாசங்களிலும் பஞ்சப்பிரணவயுக்தமாய்க்காயத்திரியை ஜபிக்கவேண்டுமென்று கூறியிருக்கின்றன. ஜபத்தினுடைய எண்ணிக்கையில் எட்டாவது பாகத்தில் காயத்திரியினது நாலாவது பாதத்தைக்கூட்டி பிராஹ்மணசிரேஷ்டன் ஜபிப்பானாயின் சாயுஜ்யத்தையடைகிறான். அவ்வாறு ஜபிக்காவிட்டால் பலனைக்கொடுக்க மாட்டாது. ஆறுபிரணவத்தோடு கூடியிருக்கின்ற காயத்திரி யோகிகளுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. பிரமசாரியும் கிருகஸ்தனும் மோக்ஷகாமிகளாயிருப்பாராகில் "துரீயபாதோ காயத்திரியாஃ பரோரஜஸி ஸாவதோம, தியான மஸ்ய பிரவக்ஷியாமி ஜபஸாங்க பலப்பிரதம்" என்றபடி துரீயபதத்தைச் சேர்த்து ஜபிக்கவேண்டும். நாடோறும்ஜபபலத்தை முற்றுங்கொடுக்கும் படியானதியானத்தைச்செய்யவேண்டும்.

அஃதாவது,- மலர்ந்த பத்மரூபமாயும் சோமசூரியாக்னிசொரூபமாயும், பிரணவசொரூபமாயும், அசிந்தியமாயுமுள்ளபீடம் யாதொரு தேவதைக்கோ அப்படிப்பட்டபீடத்தை இருதயத்தில் கற்பித்துக்கொண்டு அசலமாகவும் பரமசூக்ஷ்ம சொரூபமாகவும் தேஜோரூபமாகவிளங்கும் ஆகாசசாரமாகவுமிருக்கிறசச்சிதானந்தரூபமானது எனக்குச் சந்தோஷத்தையுண்டாக்குக என்று தியானித்து திரிசூலமுத்திரை யோனிமுத்திரை தேனுமுத்திரை அக்ஷமாலாமுத்திரை இலிங்கமுத்திரை கமலமுத்திரை மஹாமுத்திரை ஆகிய எழுமுத்திரைகளைத் தரிசிப்பித்து சச்சிதானந்த சொரூபிணியா

யிருக்கின்ற காயத்திரியை பக்தியினுல் நமஸ்கரித்து பூஜனைசெய்து (லம்) பிருதிவியாத்மநே கந்தம் சமர்ப்பயாமி நமோநமஃ (ஹம்) ஆகாசாத்மனே புஷ்பம் சமர்ப்பயாமி நமோ நமஃ (யம்) வாயுவாத்ம நே தூபம்சமர்ப்பயாமி நமோ நமஃ (ரம்) வன்னியாத்மனே தீபம் சமர்ப்பயாமி நமோ நமஃ (வம்) அமிர்தாத்மனே நைவேத்தியம் சம ர்ப்பயாமி நமோ நமஃ என்று அங்குஷ்டமுதல் கநிஷ்டாந்தம் வரை யில் நியசிக்கும் பஞ் சோபசாரமும் (யம் ரம் லம் வம் ஹம்) என்று செய்யும் புஷ்பாஞ்சலியுமாகிய முத்திரைகளைக் காட்டி. அதன்பின் னர் சிரமும் கண்டமும் அசையாமலும், பற்கள் மறைவாகவும் இரு ந்து காயத்திரிதேவியை மனதில் நினைத்து அந்த காயத்திரி மந்திர த்தை நூற்றெட்டுருவாவது இருபத் தெட்டுருவாவது பத்துரு வாவது ஜபித்தல் வேண்டும். இதற்குக் குறைவாகவும் ஜலமத்தி யிலும் ஜபிக்கலாகாது. ஜபாந்தத்தில் சுரபி கியானம் சூர்ப்பம் கூர்மம் யோனி பங்கஜம் இலிங்கம் நிர்வாணகம் என்னும் இவ் வெட்டு முத்திரைகளையும் தெரிசிப்பித்து காசிபருக்குப் பிரீதியான சொல்லை யுடையவளே! நான்செய்த தோத்திரங்களில் அக்ஷரம் பதம் ஸ்வரம் இவைகளால் உண்டாகிய குற்றங்கள் முழுமையும் க்ஷமிக்கவேண்டியது என்று பிரார்த்தித்து, "தேவீம் உத்தமே" என் கிற மந்திரத்தைக்கூறி விசர்ஜனம்செய்து, காயத்திரீ சந்தஸ், விஸ் வாமித்ரருஷிஃ, சவிதா தேவதா, என்பதாதிகளைச் சொல்லி விநியோகமுஞ் செய்து, காயத்திரியாதி தர்ப்பணங்களைச் செய்யத் தொடங்கி பூஃ ருக்வேதபுருஷம் தர்ப்பயாமி, புவஃ யஜுர் வேதபுரு ஷம் தர்ப்பயாமி, சுவஃ சாமவேத புருஷம் தர்ப்பயாமி, மஹஃ அதர் வணபுருஷம் தர்ப்பயாமி, ஜநஃ இதிகாசபுராண புருஷந்தர்ப்பயாமி, தபஃ சர்வாகமபுருஷந் தர்ப்பயாமி, சத்யம் சத்யலோக புருஷந்த ர்ப்பயாமி, ஓம் பூஃ பூலோகபுருஷந் தர்ப்பயாமி, புவஃ புவர்லோகபு ருஷந்தர்ப்பயாமி, சுவஃ சுவர்க்கலோகபுருஷந் தர்ப்பயாமி, ஓம் பூஃ ஏகபதாம் நாமகாயத்திரீம் தர்ப்பயாமி, புவஃ த்விபதாம் காயத் திரீம் தர்ப்பயாமி, ஸ்வஃ திரிபதாம் காயத்திரீம் தர்ப்பயாமி, ஓம் பூஃ புவஃ ஸ்வஃ சதுஷ்பதாங்காயத்திரீம் தர்ப்பயாமி, உஷஸீம் தர்ப்பயாமி, காயத்திரீம் தர்ப்பயாமி, சாவித்ரீம் தர்ப்பயாமி, ஸர ஸ்வதீம் தர்ப்பயாமி, வேதமாதரம் தர்ப்பயாமி, பிருதிவீம் தர்ப்ப யாமி, அஜாம் தர்ப்பயாமி, கவுசிகீம் தர்ப்பயாமி, சாங்கிருதிம் தர் ப்பயாமி சார்வஜிதிம் தர்ப்பயாமி, காயத்திரீம் தர்ப்பயாமி என்று

தர்ப்பணஞ்செய்து, தர்ப்பணாந்தத்தில் சாந்தியின் பொருட்டு ஜாத வேதமந்திரம், மானஸ்தோகமந்திரம், திரியம்பகமந்திரம், தச்சம் யோரிதிமந்திரம்ஆகிய இவைகளை ஜபித்து, அதோதேவா என்னுமந் திரங்களால் சர்வாங்கங்களையும் பரிசித்து, ஸ்யோநா என்னும் பிரு திவிமந்திரத்தால் பூமியையும், கோத்ரப்ரவரங்களையும் உச்சரித்து நமஸ்கரிக்கவேண்டும். இச்சந்தியாவிதியை பிராதக்காலத்தில் செய் யும்படி விதிக்கப்பட்டிருக்கின்றது.

அந்த ஸந்திக்குப்பின் அக்னிஹோத்திரம் செய்து, பஞ்சாயத் தன பூஜாஞ்ச ததஃ குர்யாத் ஸமாஹிதஃ; சிவாம் சிவம் கணபதிம் சூர்யம் விஷ்ணும் ததார்சயேத். பவுருஷேணது ஸூக்தேன வ்யா ஹ்ருத்யாவா ஸமாஹிதஃ, மூலமந்திரேணவாகுர்யாத் திரிஸ்சத இதிமந்திரிதஃ என்றபடி பரமேஸ்வரியை மத்தியிலும், ஈசானத்தில் விஷ்ணுவையும், அக்னிதிக்கில் ஈஸ்வரரையும், நைருதிதிக்கில் கணே சரையும், வாயுதிக்கில் சூரியனையும் அமைத்து புருஷசூக்த மந்தி ரத்தினாலாவது வ்யாகிருதி மந்திரத்தினாலாவது மூலமந்திரத்தினாலா வது தேவிசூக்தத்தினாலாவது சோடசோபசார பூஜைசெய்யவும். இவ்வண்ணம் தேவிபூஜை செய்த பிறகு இதரதேவர்களையும் பூஜை செய்ய வேண்டும். தேவிபூஜையைக் காட்டிலும் புண்ணியத்தைக் கொடுக்கும் பூஜை ஒன்றுமில்லை. ஆகையால் சந்திகள் தோறும் சந் தியோபாசனையும் பூஜையும் செய்யும்படி சுருதியில் சொல்லப்பட்டி ருக்கிறது. அக்ஷதையினால் விஷ்ணுவையும், துளசியினால் கணே சரையும், தூர்வையால் துர்க்கையையும், தாழம்பூவினால் ஈஸ்வரரை யும் அர்ச்சிக்கலாகாது. மல்லிகை சாதி குடமல்லிகை பலா கல்யா ணமுருக்கு வகுளம் குந்தம் (குறுக்கத்தி) லோத்ரம் கரவீரம் சிம் ஸபா பராஜிதா பந்தூகம் அகஸ்தியபுஷ்பம் மதந்தம் சிந்துவாரம் பலாசம் அறுகம்புல் பில்வதளம் குசமஞ்சரி ஸல்லகீ மாதவீ அர்க் கபுஷ்பம் மந்தாரை தாழைமலர் கர்ணிகாரம் கதம்பகுசுமம் புந்நா கம் சண்பகமுதலாகச் சொல்லப்பட்ட தேவிக்குப் பிரீதிகரமான புஷ்பங்களினால் அர்ச்சித்து தூபதீப நைவேத்தியஞ் செய்து மூல மந்திரத்தை ஜபித்து வேதாப்பியாசஞ்செய்து பிறகு தினத்தினு டைய மூன்றாவது பாகத்தில் நியமமுடையவனாய்ப்பூஜையைப்பூர் த்திசெய்யவேண்டுமென்றனர். (சு - ம் சுஎ.)

பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

ஹ்ரீங்காரைக பராயணுயைநமஃ

## பதினெட்டாம் அத்தியாயம்.

# ஸ்ரீதேவிபூஜா விசேஷம்.

---

நாரதர் மனிதர்கள் யாரொருவரை ஆச்ரயித்து கிருதகிருத்யராகின்ருர்களோ அந்த மஹாதேவியினது பூஜாவிசேஷத்தைக் கேட்க இச்சையுடையவனு யிருக்கின்றேன் என்று வினவ, நாராயணர் கூறுகின்ருர்:—ஓமுநிவரே! புத்திமுத்தியைக்கொடுப்பதாயும், சகல ஆபத்துக்களேயும் சந்தேகமின்றி அப்பொழுதே போக்கடிப்பதாயுமுள்ள தேவியினது பூஜாவிதியை நீர்விரும்பிய படி சொல்லுகிறேன் கேட்பீராக.

முன்னர் ஆசமனஞ்செய்து மௌனமாயிருந்து சங்கற்பம் பூதசுத்தி மாத்ருகாநியாசம் ஷடங்கந்யாசம் ஆகிய இவைகளேச் செய்துகொண்டு பின்னர் சங்கஸ்தாபனமும் சாமான்யார்க்கியமும் செய்து அந்தச்சாமான்யார்க்கியத்தைக் கொண்டு அஸ்திரமந்திரத்தால் பூஜாதிரவியங்களேப் புரோக்ஷித்துகுருவினிடம் அனுக்ஞைபெற்று பீட பூஜையைச் செய்துதேவியைத்தியானித்து அதன்பின்னர் ஆசனுதி;உபசாரங்களோடு பக்திபிரேமையுடன் பஞ்சாமிர்தத்தையும் ரசவர்க்கங்களேயும், கரும்புரச முள்ள நூறுகலசங்களேயும், மாம்பழரசமுதலானவைகளேயும், வேதபாராயணத்தோடு அபிஷேகஞ்செய்ய வேண்டியது. கரும்பின்ரசஅபிஷேகத்தினுல்மறுபிறப்புண்டாகமாட்டாது. மாம்பழரசத்தினுல் ஜகதம்பிகைக்கும் சரஸ்வதி லக்ஷ்மிக்கும் அபிடேகஞ்செய்தால் நித்தியனுயிருப்பன். திராக்ஷாரசத்தினுல் மஹேசானியை அபிஷேகித்தால் அந்தரசத்தின் அணுக்கள் எவ்வளவோ அவ்வளவுகாலம் தேவி லோகத்தில் குடும்பத்துடன் வசிக்க இடமுண்டாம். கற்பூரம் அகரு குங்குமப்பூ கஸ்தூரி இவைகளோடு சந்தனத்தைத் தேவிக்கு அபிஷேகித்தால் நூறுஜன்மத்தில்செய்த பாபம் நீருய்விடும். பாற்குடங்களினுல் அபிஷேகித்தால் கற்பகாலம் பாற்கடலில் வாசமுண்டாகும். தயிர் தேன் நெய் சர்க்கரை இவைகளினுல் தேவியை அபிஷேகித்தால்அவ்வக்கடல்களேயாளும் ஆதிபத்ய முண்டாகும். அன்றியும் இவைகளே

அன்புடன் ஆயிரம்கலசத்தினால் அபிஷேகித்தால் இம்மைமறுமைக ளில்சுகானுபவமுண்டாகும். இப்போது சொல்லிவந்த அபேஷங்க ட்கெல்லாம் வேதபாராயண மிருத்தல் வேண்டும். இரண்டு பட்டு வஸ்திரங்கள் சமர்ப்பிக்கிறவன் வாயுலோகத்தில் வசிப்பான். இரத் னாபரணங்களைச் சமர்ப்பிக்கிறவன் குபேரனாவான். தேவிதிருமேனி யில் காஸ்மீரசந்தனத்தையும், நெற்றியில் கஸ்தூரிதிலகத்தையும் பாதத்தில் லக்தபத்ரகம்போலும் சீமந்த சிந்தூரத்தையும், சமர்ப் பிக்கிறவன் தேவர்களுக்குத் தலைவனாய் இந்திரனுடைய சிங்காத னத்தில் சமமாய்வீற்றிருப்பன். தேவிபூஜைக்குரிய அநேகவித மான புட்பங்களில் கிடைத்தவரையில் பூஜிக்கிறவன் கைலாயமடை வான். மூன்று தளத்தோடு கூடிய பில்வத்தை செவந்தசந்தனத் திற்றோய்த்து நமோந்தமாக மாயா பீஜாதிமந்திரத்தை நான்காம் வேற்றுமையுடன் உச்சரித்து பரமபக்தியோடு தேவிபாதகமலங்க ளில் சமர்ப்பிக்கிறவன் மநுவாகிறான். வில்வபத்திரங்களால் பரா சக்தியை அமோகமாக அர்ச்சிக்கிறவன் இம்மையிலும் மறுமையி லும் துக்கமடைகிறதில்லை. புவனேஸ்வரிக்கு நிர்மலமான கோடி வில்வம் சமர்ப்பிக்கிறவன் பிரமாண்டத்துக் கதிபதியாவன். புது குருக்கத்திபுஷ்பத்தை அஷ்டகந்தத்திற் கலந்து கோடிகணக்காக அர்ச்சிக்கின்றவன் பிரமாவின் சம்பந்தமாகின்றான். மாலதி (சாதி) மல்லிகையினால் முன்போல் அஷ்டகந்தங்கலந்து கோடிகணக்காக அர்ச்சிக்கின்றவன் நான்முகனாகின்றான். இதுபோலும் பத்து கோடிசமர்ப்பிக்கின்றவன் மிகவுந்துர்லபமான விஷ்ணுத்வத்தை யடைகிறான். இப்போது விஷ்ணுவாயிருக்கின்றவரும் பூர்வத்தில் இவ்வாறு அர்ச்சித்துப்பெற்றவராகும். நூறுகோடியாக அர்ச் சிக்கின்றவன் சூத்ராத்மத்வத்தை யடைகிறான். இப்போதுள்ள வரும் இவ்வண்ணம்பக்திப்பிரயத்தினத்தோடு செய்து பெற்றவ ரேயாகும். இரண்ய கர்ப்பரும் இப்படியே. ஜபாகுஸுமம் பந்தூகம் மாதுளம் இந்தப்புஷ்பங்களினால் அருச்சனைசெய்தாலும் மேலேசொல்லியபலன்கிடைக்கும். இவைகளல்லாத வேறு புஷ் பங்களினால் ஸ்ரீதேவியை அருச்சிக்கின்றவனது புண்ணியத்தை ஈஸ்வரனாலும் சொல்லமுடியாது. அந்தந்த ருதுக்களில் உண்டா கும் புஷ்பங்களால் தேவியைக்குறித்து நியமமாய் வருடந்தோறும் சஹஸ்ரநாமங்களால் பக்தியோடு அருச்சிக்கின்றவன் மஹாபாதக

உபபாதகங்களினின்றும் விடுபட்டு தேஹாந்தத்தில் துர்லபமாகிய தேவியினது ஸ்ரீபதாம்புஜத்தை யடைந்து தேவதைகளோடு வசிக்கிறான். இவ்விஷயத்தில் சம்சயமில்லை. காரகில் கற்பூரம் சந்தனம் சில்ஹகம் நெய்குங்கிலியம் இவைகளைக்கலந்து தேவிக்குத் தூபங்கொடுக்கின்றவனுக்கு தேவி காட்சிதந்து திரிலோகாதிபத்யத்தைக் கொடுக்கின்றாள். கர்ப்பூரங்கலந்த தீபம் நூறுவது, ஆயிரமாவது காட்டுகின்றவன் எப்போதும் சூர்யலோகத்தில் வசிப்பான். இவைகளைச்சந்தேகித்து விசாரிக்கவேண்டியதில்லை.

தேவிக்கு முன்பாக லேஹ்ய சோஷ்யாதி ஷட்ரசங்களோடு மலைபோலும் நிவேதனத்தையும், திவ்யமாயும் மிருதுவாயும் இரசங்களோடு கூடினதாயும் உள்ள நானுவிதமான பலங்களையும், சொர்ணபாத்திரத்தில் வைத்து நாடோறும் நிவேதனம் செய்து வருவானாயின் ஸ்ரீமஹாதேவி திருப்தியடைவாள். ரஜ்ஜு சர்ப்பமயமாயிருப்பதுபோல் யாவும் அவள் மயமாயிருப்பதால் மூன்று லோகமுந்திருப்தியடையும். கற்பூரங்கலந்ததாயும் சீதளமாயும் கலசத்திலுள்ளதாயும் மகத்தாயும் சுபகரமாயுமுள்ள கங்காதீர்த்தத்தைத் தாகசாந்தியின்பொருட்டு நிவேதித்து கற்பூரம் ஏலம் லவுங்கம் இவைகளோடு முகவாசனையை யுண்டுபண்ணும் தாம்பூலத்தை பக்தியினுல் தேவிக்குக்கொடுத்தால் அவள் திருப்தியடைந்து பிரசன்னமாகின்றாள். பின்னர் மிருதங்கம் வீணை முரசம் டக்கா துந்துபி மோகத்தை யுண்டுசெய்யும் காகளம் இப்படிப்பட்ட வாத்தியகோஷங்களாலும் வேதபாராயணம் புராணம் ஸ்தோத்திரம் இவைகளினுலும் தேவியைத்திருப்திசெய்து குடை சாமரம் முதலான ராஜோபசாரங்களைத் தினமும் நடாத்தி அநேக விதமாகப் பிரதக்ஷிண நமஸ்காரம் புரிந்து ஜகதம்பிகையைக் குறித்து அடிக்கடி க்ஷமைகேட்கவேண்டும். ஸ்மரணமாத்திரத்தில் தேவிபிரசன்னையாகின்றாளென்றால் இப்படிப்பட்ட வுபசாரங்களால் தேவி பிரசன்னையாகின்றாளென்பதில் ஆச்சரியமென்ன! மாதாவுக்குப் புத்திரர்களிடம் கருணையுண்டாவது இயற்கையாதல் போலும். ஜகன்மாதாவுக்குப் பக்தர்களிடம் சுபாவமாக கருணையுண்டாவதைப் பற்றி சொல்லவேண்டுவதென்ன. இதுவிஷயத்தைப்பற்றி பிரஹ்லாதன் என்னும் இராஜருஷியினுடைய பிரீதிகரமும் பக்திப்பிரதமுமான ஓர்புராணகதையைச் சொல்லுகிறேன்கேட்பீராக.

பொதியமலையில் ஓர்பக்கத்தில் ஓர்சக்கிரவாளப் பக்ஷியிருந்தது. அது ஓர் காலத்தில் பறந்துகொண்டே நானாதேசங்களைச் சுற்றிக்கொண்டு பூர்வபுண்ணிய விசேடத்தால் முத்தியைக் கொடுக்கும் காசியையடைந்து அன்ன பூரணிஸ்தானத்தை விட்டு நீங்காது தினமும் பிரதக்ஷணமாகப் பறந்துகொண்டேயிருந்து காலாந்தரத்தில் சுவர்க்கத்தை யடைந்து அங்கு தேவரூபத்தோடு இரண்டு கற்பகாலம் வரையில் பலவிதமான போகங்களை அனுபவித்து உத்தமோத்தமமாகிய க்ஷத்திரியகுலத்தில் பூர்வஞானத்துடன் பிறந்து பிரஹத்ரதன் என்று பிரசித்தியடைந்தவனும் மகத்தானயாகங்களைச் செய்கின்றவனும் சத்தியவாதியாயும் ஜிதேந்திரியனும் திரிகாலமும்அறிந்தவனும் சார்வபௌமனும் அஷ்டாங்கயோகத்தில் ஆசக்தியுள்ளவனும் இருந்தான். பூவுலகில் பூர்வஜன்மவுணர்ச்சி யுடையவனா யிருக்கின்றானென்று பலமுநிவர்கள் கேள்விப்பட்டு அவனிடம்வந்தனர். அரசன் அவர்களை விநயத்துடன் ஆசனங்கொடுத்து உபசரித்தனன்.முநிவர்கள் அரசனைநோக்கி பூர்வஜன்மவுணர்ச்சியும் திரிகாலக்யானமும் எவ்வாறு எந்தப்புண்ணியத்தால் உமக்குக்கிடைத்ததென்று வினவினர். அரசன் பூர்வத்தில் நான் நீசசரீரமுள்ள சக்கிரவாளப்பக்ஷியாயிருந்து புண்ணியவசத்தால் ஞானமில்லாமலே காசியில் அன்னபூரணியைப்பிரதக்ஷிணஞ் செய்துவந்தேன். அதனால் சுவர்க்கமடைந்து அங்கு இரண்டு கற்பகாலம் சகலபோகங்களையும் அநுபவித்துப் பின் பூமியில் இச்சரீரம்பெற்று திரிகாலச்யான முள்ளவனா யிருக்கின்றேன். ஜகதம்பிகையின் பாதஸ்மரணையின் பலத்தை யாரறிவார்கள். இதனை நினைத்த மாத்திரத்தில் எனது கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் பெருகுகின்றது. எவர் சர்வமாதாவாகிய தேவியை உபாசிக்கவில்லையோ அப்படிப்பட்ட பாபமாகிய துஷ்டசன்மத்தை நிந்திக்கவேண்டும். சிவோபாசனை விஷ்ணுவுபாசனை நித்தியமானதல்ல. சக்தியுபாசனையே நித்தியமானதென்று சுருதியிலே சொல்லப்பட்டிருக்கிறது. அதிகமாக என்னசொல்ல வேண்டும். பகவதியின் பாதாம்புஜம் நிரந்தரம் சேவிக்கத்தக்கது. தேவியை சகுண சொரூபமாகவேனும் நிர்குணசொரூபமாகவேனும் சேவிப்பதைக் காட்டிலும் சிரேஷ்டமானது வேறொன்றில்லையென்று கூற, முநிவர்கள் மலர்ந்த நெஞ்சமுடையவர்களாய்த் தங்கள்

தங்களிடம்போய்ச்சேர்ந்தனர். தேவியினது பூஜாபலம் இவ்வள வென்று யாவரால் சொல்லமுடியும்; யாவரால்கேட்கமுடியும். எவர் களுக்கு ஜன்மசாபல்லியமுண்டோ அவர்களுக்குத்தான் தேவியி னிடத்தில் சிரத்தையுண்டாகும். எவர்கள் ஜன்மசாங்கர்யமுடைய வர்களோ அவர்களுக்குத் தேவியினிடத்தில் சிரத்தையுண்டாகிற தில்லை என்றனர். (சு - ம். எக)

பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காரதீர்க்கிகா ஹம்ஸியைநமஃ

## பத்தொன்பதாம் அத்யாயம்.

### மாத்யாந்நிகசந்தி.

---

நாராயணர் கூறுகின்றார்:—ஓநாரதரே! யாதொரு அனுட்டான த்தினால் உத்தமமானபல னுண்டாகிறதோ அப்படிப்பட்ட சுபகரமா னமாத்யாந்நிக சந்தியாவிதியைச் சொல்லுகிறேன் கேட்பீராக:— யௌவன சொரூபிணியாயும் வெண்ணிறமுடையவளாயும் முக்கண் ணுடையவளாயும் வரத்தைக் கொடுக்கின்றவளாயும் வரதம் அக்ஷ மாலை திரிசூலம் அபயம் இவைகளோடுகூடியதிருக்கரங்களுடை யவளாயும் விருஷபவாகனமுடையவளாயும் யசுர்வேத சொரூபிணி யாயும் ருத்ரசொரூபிணியாயும் தமோகுணமுடையவளாயும் புவர் லோக வாசினியாயும் சூர்யசொரூபமாக விருக்கின்றவளாயும் சூர் யமார்க்கத்தில் சஞ்சரிக்கின்றவளாயும் மாயாரூபிணியாயும் ஆதிதே வியாயுமிருக்கிற சாவித்திரிதேவியை நமஸ்கரிக்கின்றேன் என்றுதி யானித்து அர்க்கியப்பிரதானம் புஷ்பம் அல்லது பில்வசகிதமாக மேல்நோக்கி சூரியனுக்குநேராகவிட்டு பிராதஸ்ஸந்தியில் சொன்ன பிரகாரம் உபசம்ஹாரஞ்செய்யவும்.

மாத்யாந்நிகசந்தியில் சாவித்திரியை சிலர் இச்சிக்கிறார்கள். அது அசம்பிரதாயமாக விருக்கிறது; அது காரியஹானியைச் செய் யும். அதற்குக் காரணத்தைச் சொல்லுகிறேன்:—சூரியனைச்சந்திக ளில் மந்தேஹாஎன்னும் இராக்ஷசகூட்டங்கள் பக்ஷிக்க இச்சிக்கி றார்கள் என்னும் காரணத்தைச் சுருதியில் சொல்லியிருக்கிறது. ஆகையால் சந்திகளில் பிரணவத்தோடு கூடியகாயத்திரியினால் சல த்தை அபிமந்திரித்து அர்க்கியம்விடுகிறார்கள். அவ்வாறு செய்யா

விடில் சுருதியைக் கொன்றவனுவன். ஆகர்ஷணமந்திரத்தால் புஷ்பசகிதமாகவாவது பில்வம் தூர்வை இவைகளினுலாவது சூத்ரோக்தமாய் அர்க்கியத்தைப் பிரயத்தின பூர்வமாக எவன்விடுவானே அவன் சந்தியாபலத்தைப் பூரணமாக அடைகிருன்.

இனி மாத்தியாங்நிக தர்ப்பணத்தைக் கூறுகின்றேன். புவஃபுநஃ புருஷம் - யஜுர்வேதம் - மண்டலம் - இரண்யகர்ப்பம் - அந்தராத்மானம்-சாவித்ரீம்-தேவமாதரம்-சாங்கிருதிம்-சந்தியாம் - யுவதீம் - ருத்திராணீம் - நீம்ருஜாம் - சர்வார்த்தாணும்-சித்திகரீம்-சர்வமந்திரார்த்தசித்திதாம்-பூஃ புவஃ சுவஃ புருஷம் இவைகளோடு தர்ப்பயாமிநமோநமஃ என்பதை முடிவிற்கூட்டித் தர்ப்பிக்கவேண்டும்.

அதன்பின் உதுத்தியம் என்கிற சூக்தத்தாலும், சித்ரம்தேவாணும் என்னும் சூக்தத்தாலும் சூர்ய உபஸ்தானஞ்செய்து மந்திரசாதனத்தை இச்சிக்கிறவனுக ஜபஞ்செய்ய வேண்டும். எவ்வாறெனின், பிராதக்காலத்தில் நிமிர்ந்தகையோடும், மத்தியானத்தில் இருதயத்தினிடத்துப் பொருந்தியகையோடும், சாயம்சந்தியில் கவிழ்ந்தகையோடும் அங்குஷ்டவிரலால் அநாமிகைவிரலின் நடுரேகையிலிருந்து கனிஷ்டாதி கிரமமாக தர்ஜனிவிரலின் அடிவரையிலுள்ள ரேகைகளைத் தொட்டுத்தொட்டு எண்ணிஎண்ணி ஜபிப்பதாகும். இவ்வாறு கையிற்செய்வதைக்கரமாலே என்று சொல்லுவர்.

பசு தாய் தந்தை சிசு இவர்களைக் கொன்றபாவமும், குருபத்னியைப் புணர்ந்தபாவமும், பிராஹ்மணனது நிலந்திருடியபாவமும், பிராஹ்மணன் மதுபானஞ்செய்வானுயின் அந்தப்பாவமும் மனவாக்குக் காயங்களால் மூன்றுஜன்மங்களிற் செய்தபாவமும் காயத்திரியை ஆயிரம் உரு ஜபித்தால் நீங்கிவிடும்.

காயத்திரியை ஒருமுறைஜபித்தால் நான்குவேதங்களையும் அத்தியயனம்செய்தபலனும், காயத்திரியின் அர்த்தத்தைத்தெரிந்து ஒருமுறைஜபித்தால் நான்குவேதங்களின் அர்த்தத்தைத்தெரிந்து அத்தியயனஞ்செய்தபலனும் உண்டாகும். இதன்மகிமையறியாது ஜபஞ்செய்தால் அதுஒருபயனையும் உண்டாக்காது வீணுகும். இதுவரையில் மாத்தியாங்நிகசந்தியின் விதியைக்கூறினேன். இனி பிரஹ்மயஞ்ஜவிதியைக் கூறுகின்றேன் என்றனர். (சு - ம் ௨௯.)

பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காரோத்யானகேகின்யைநம:

# இருபதாம் அத்தியாயம்.

## பிரஹ்மயக்ஞாதிவிதி.

நாராயணர்கூறுகின்றார்:—ஓநாரதரே! பிராமணன் மூன்றுவர்த்தி ஆசமனஞ்செய்து உதட்டை இரண்டுமுறை துடைத்து ஒருமுறை முகத்தைத் தடவி சலத்தைக்கையிலெடுத்து கைகளிலேயும் பாதங்களிலேயும் புரோக்ஷணஞ்செய்து அதன்பின் சிரம் கண் நாசி காது இருதயம் மௌளி முதலான இடங்களைத்தொட்டு வலக்கையில் இரண்டுதர்ப்பையும் இடக்கையில் மூன்றுதர்ப்பையும் வைப்பதுமன்றி உபவீதத்திலும் சிகையிலும் ஆசனத்திலும் இரண்டுபாதங்களிலும் தர்ப்பைகளைவைத்து தேசகாலங்களைக்கூறி சர்வபாப விமோசனத்தின்பொருட்டு சூத்ரோக்ததேவதாபிரீத்யர்த்தம் பிரமயஜ்ஞஞ் செய்கிறேனென்று சங்கற்பித்து ஆரம்பத்தில்காயத்திரியைமூன்று முறைஜபித்து "அக்நிமீளே, யதங்கேதி, அக்னிர்வை, மஹாவிரதம், ஏசக்ஷபந்தா, விதாமகவத், இஷேத்ஓர்ஜே, அக்ன ஆயாஹி, ஸந்நோதேவி, என்பதாதி வேதமந்திரங்களையும் சம்ஹிதாமந்திரங்களையும் விரதமந்திரஙகளையும் சாந்திரமானுதி ஐந்து வருடங்களைக் குறிக்கும் ஜோதிட சம்மந்தமான ம ய ர ச த ஜ ப கௌ க்மா என்னும் அக்ஷரங்களைமுதலாகவுடைய ஜோதிஷ சூத்திரங்களையும், அதாதோதர்மசிஞ்ஜாஸாம் அதாதோபிரஹ்மசிஜ்ஞாஸா, தச்சம் யோரிதிபிரஹ்மணேநம:"என்பதாதிவேதாந்தசூத்திரங்களையும் உச்சரித்து பிரஜாபதி பிரஹ்மா வேதா: தேவா: ருஷய:சர்வாணிசந்தாம்ஸி ஓங்கார: வஷட்கார: வியாஹ்ருதய: சாவித்திரி காயத்ரியக்ஞா: த்யாவா பிருதிவீ அந்தரிக்ஷம் அஹோராத்திரம் சங்கியாசித்தா: கடல்கள் நதிகள் பர்வதங்கள் க்ஷேத்திரங்கள் ஓஷதிகள் அரண்யங்கள் கந்தர்வர்கள் அப்சரசுகள் நாகங்கள் பக்ஷிகள் பசுக்கள் சாத்தியர் பிராமணர்கள் யக்ஷர்கள் ராக்ஷசர்கள் பூதங்கள் என்பதாதி நாமங்களைக்கூறி தேவதர்ப்பணஞ்செய்து, பின்னர் பூணூலை மாலையாக அணிந்துகொண்டு சதர்ச்சி: மத்தியமா: கிருத்ஸமத: விஸ்வாமித்ர: வாமதேவ: அத்ரி: பாரத்வாஜ: வசிஷ்ட: ப்ரகாத:

பாவமாங்ய: க்ஷுத்ரசூக்த: மஹாசூக்த: சநக: சநந்தன: சநாதன: சநத்குமார: கபிலா: சூரிநா: ஓஹலி: பஞ்சசிரிஷ: இவர்கள் நாமங்களைக்கூறி ருஷிதர்ப்பணஞ்செய்து, பூணூலை இடப்பாகமாக மாற்றிக்கொண்டு சுமந்து ஜைமினி வைசம்பாயந: பைலா: சூத்ரயுக் பாஷ்ய: பாரத: மஹாபாரத: தர்மாசாரிய: இவர்களும் திருப்தியடையும் பொருட்டு தர்ப்பணஞ்செய்து,ஜானந்தி: பரஹவி: கார்க்க: கவுதம: சாகல: பாப்ரவ்ய: மாண்டவ்ய: மாண்டூகே: கர்க்கீ சக்ரவீ: வடபா: ப்ராதிதேயி: சுலபாயுக்த: மயித்ரேய: கஹோளா: கவுஷிதக: மஹாகவுஷீதக: இவர்களுக்கும் மறுபடி பாரத்வஜ: பைங்கிய: மஹாபயிங்க: சுயஜ்ஞ: சாங்கியாயன: மைத்ரேய: மஹைதரேய: பாஷ்கல: சாகல: சுஜாதவக்த்ர: அவுதவாஹி: சவுஜாமி: சௌநக: ஆஸ்வலாயந: இவர்கள் நாமங்களைக்கூறி ஆசார்யதர்ப்பணஞ்செய்து, பின்னர்* என்குலத்தி லுண்டானவர்கள் கோத்திரத்தில் வந்தவர்கள் புத்திரஹீனர்களாக இறந்தவர்கள் என்னால் வஸ்திரத்தைநனைத்துப் பிழிந்துகொடுக்கும் சலத்தைக்கிரகித்து திருப்தியடையுங்கள் என்று யாவருக்குந் திருப்தியுண்டாகும்படி தர்ப்பணஞ்செய்து பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்யவேண்டும்.

இவ்வண்ணஞ்செய்வது பிரஹ்மயக்ஞ விதியென்றறிக. யாதொரு சாதகன் உத்தமமாயிருக்கிற இவ்விதியைச்செய்கின்றானோ அவன் சர்வவேத வேதாங்க படனத்தினால் அடையும் பயனையடைகிறான். அதன்பின்னர் நாடோறும் வைஸ்வதேவம் நித்யஸிரார்த்தம் அதிதிபூஜை இவைகளை நடத்தி தினத்தின் ஐந்தாவது முகூர்த்தகாலத்தில் பசுவுக்கிறையும் பிராமணர்களுடன் போஜனமு முடித்து ஆறுவ்து ஏழாவது முகூர்த்தங்களில் புராணதிசிரவணங்களும் செய்து எட்டாவது முகூர்த்தகாலத்தில் சாயம்சந்தியை யுத்தேசித்து வெளியேபோக வேண்டியது. ஓ நாரதரே! எந்த அநுட்டானத்தினால் மஹாமாயா ஸ்வரூபிணி பிரசன்னமாகின்றாளோ அந்தசாயம் சந்தியைச் சொல்லுகிறேன் கேட்பீராக.

யோகசாதகன் சாயங்காலத்தில் நிலைபெற்றமனதுடையவனாய் ஆசமனபிராணாயாமங்களைச்செய்து பத்மாசனத்தில் அசைவற்றவனாயிருந்து சுருதிஸ்மிருதி சம்பந்தமான கரும ஆரம்பத்தில் பிராண

* ஏகேசாஸ்மத் குலே ஜாதா அபுத்ரா கோத்ரிணோ மிருதா:, தேகிருஹ்ணந்து மயாதத்தம் வஸ்திர நிஷ்பீடனோதகம்.

வாயுவைக் கர்ப்பத்தில் பூரகஞ்செய்து தியானித்து மந்திரத்தையுச்சரித்து பூரககும்பக ரேசகங்களால் சலக்ஷணத்தோடு தேவியைத் தியானித்தலாகிய பூதசுத்தியைச் செய்யவேண்டும். இதனைச்செய்யாமல் தியானித்தல்கூடாது. சரஸ்வதிதேவியை விருத்தரூபிணியாயும் கரிய நிறத்தையுடையவளாயும் கரியவஸ்திரத்தைத் தரித்தவளாயும் சங்கம் சக்கிரம் கதை பத்மம் இவைகளைத் தரித்திருக்கும் திருக்கரங்களையுடையவளாயும் கருடவாகனரூடையாயும் நவரத்னமயமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாயும் மணிகளோடுகூடிய மேகலாபரணத்தையுடையவளாயும் விலையுயர்ந்த மகுடத்தைத்தரித்தவளாயும் நக்ஷத்திரம்போன்ற முத்தாரங்களைத் தரித்தவளாயும் தாடையில் ஒளிவீசும் தோடுகளையணிந்த காதுகளையுடையவளாயும் பீதாம்பரத்தைத் தரித்தவளாயும் சச்சிதானந்தரூபிணியாயும் சாமவேதத்தோடு கூடினவளாயும் சத்திய மார்க்கத்தை யுடையவளாயும் சுவர்கத்திலுள்ளவளாயும் சூரியமார்க்கத்தில் நடப்பவளாயும் இருக்கின்ற ஓ தேவி! நான் உன்னை ஆவாகனஞ்செய்கின்றேன். நீ சூர்யமண்டலத்தினின்றும் வருவாயாக. இவ்வண்ணமாகத் தியானித்து சாயம்சந்தியைச்செய்ய சங்கல்பிக்கவும்.

சாதகனானவன் சுத்தமனத்துடன் "ஆபோஹிஷ்டேதி" என்கிறமந்திரத்தினால் புரோக்ஷணமும் "அக்னிஸ்சேதி" என்கிற மந்திரத்தால் ஆசமனமும்செய்து இரண்டுபாதங்களையும் சேரவைத்துக்கொண்டு அஞ்சலியாகச் சலத்தைக்கரத்திலேந்தி சூரியமண்டலத்தில் வசிக்கும்தேவதையைத்தியானித்து காயத்திரியையுச்சரித்து சூரியப்பிரீதியாக அர்க்கியத்தை ஜலக்கரையில்விடவேண்டும். ஞானசூனியனாயிருக்கிற மூடாத்மாவானவன் ஜலத்தில் அர்க்கியத்தைவிடுவானாயின் ஸ்மிருதிமந்திரங்களை உல்லங்கனஞ் செய்தவனாகவும் பிராயச்சித்தத்துக் குரியவனாகவும் ஆகின்றான். சூரியவுபஸ்தானத்தின்பொருட்டு "அஸாவாதித்ய" என்கிறமந்திரத்தை யுச்சரித்துப் பிரதக்ஷிணஞ்செய்யவும். பின்னர் கிருஷ்ணஜினமுதலிய ஆசனங்களிலிருந்து ஆயிரமாவது ஐஞ்ஞூறுவது தேவிதியானபூர்வகமான காயத்திரிஜபம் செய்யவேண்டும். பிராதக்காலத்தில் உபஸ்தானாதிகள் எப்படிசெய்யப்பட்டதோ அப்படியே சந்தியாகாலத்திலும் செய்யவேண்டும்.

இனி சாயஞ்சந்தியில்செய்யப்படும்தர்ப்பணுதிகள்வருமாறு,— வசிஷ்டர்ரேவாத்திரர் சரஸ்வதி விஷ்ணுரூபமுள்ளதேவதைகள் சந்தஸ—ு ஸ்வஃ சாமவேதம் மண்டலம்இரண்யகர்ப்பன் பரமாத்மா சரஸ்வதி காயத்திரி சங்கிருதி சந்தியை விருத்தை வைஷ்ணவீ உஷஸிநிம்ருஜீம் சர்வசித்திகாரணி சர்வமந்திராதிபதி பூஃ புவஃ சுவஃ ஸ்வஸ்சபூருஷம் சர்வமந்திராதிபதிகை இவர்களுக்கு தர்ப்பணஞ் செய்வது சுருதிசம்மதமாகும். பாபநாசனமாயும் சர்வதுக்கஹரமாயும் வியாதிநாசனமாயும் மோக்ஷப் பிரதமாயும் சதாசாரப் பிரதானமாயும் உள்ள சாயம்சந்திவிதியைச்சொன்னேன். சந்தியை அனுஷ்டிப்பதனால் தேவியானவள் பக்தர்கள் விரும்புவனவற்றைக் கொடுக்கின்றவ ளாகின்றாள் என்றனர். (சு - ம் சநு௨.)

இருபதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காராரண்யஹரிண்யைநமஃ

## இருபத்தோன்றாம் அத்தியாயம்.

## காயத்திரி புரஸ்சரணகர்மம்.

---

நாராயணர்கூறுகின்றார்,—இனி பாவநாசனமாயும் புண்ணியகரமாயும் அபீஷ்டங்களைக் குறைவறக்கொடுக்கின்றதாயுமுள்ள காயத்திரிபுரஸ்சரணையைக் கூறுகின்றேன் கேட்பீராக.

மலையினுச்சியிலாவது நதிதீரத்திலாவது வில்வமூலத்திலாவது சலதீரத்திலாவது பசுக்களைக்கட்டுமிடத்திலாவது தேவாலயத்திலாவது அரசமரத்தடியிலாவது உத்யானவனத்திலாவது துளசீவனத்திலாவது புண்ணியக்ஷேத்திரத்திலாவது ஆசாரியர்சந்நிதியிலாவது எந்தவிடத்தில் சித்தம் லயமாகுமென்று தோன்றுகின்றதோ அந்தவிடத்திலாவது புரஸ்சரணைசெய்ய வுத்தேசித்தவன் செய்வானாயின் மந்திரசித்தியுண்டாகும் சந்தேகமில்லை.

எந்தெந்த மந்திரங்களை உபதேசஞ்செய்யப் பெற்றானோ அந்தந்தமந்திர சித்தியின்பொருட்டு புரஸ்சரணை செய்யவேண்

டியது. வியாகிருதிபூர்வகமாய் காயத்திரிமந்திரத்தைப் பதினாயிரம் உரு ஜபிக்கவேண்டும். நாரசிஹ்மம் சவுரம் வராஹமுதலிய மந்திரங்களாயினும்,வேதசம்பந்தமான மந்திரங்களாயினும் காயத்திரியை விட்டுச்செய்தால் அம்மந்திரங்களெல்லாம் பலனைக்கொடுக்கமாட்டா. ஏனெனில் வேதமாதாவாயும் ஆதிசத்தியாயும் இருக்கின்ற காயத்திரியைப் பிராஹ்மணர்களெல்லாம் உபாசிக்கின்றபடியால் அவர்கள் சாக்தர்களேயல்லாமல் சைவர்களுமல்லர் வைணவர்களுமல்லர். மந்திரசோதனைக்குப் பூர்வாங்கமாகவும் உத்தமமாகவுமுள்ள ஆத்மசோதனையைச் செய்து, பின் தந்திரசோதனையையும் புரஸ்சரணையையும் செய்யவேண்டும். ஆத்மதத்துவசோதனைக்கு மூன்று லக்ஷமாவது ஒருலக்ஷமாவது ஜபிக்கவேண்டுமென்று சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்மசுத்தியைச் செய்யாமல் ஜபஹோமாதிகள் செய்தால் அவைகள் நிஷ்பலமாகுமென்று அறிதல் வேண்டும். தேகத்தைத் தவத்தினால் வாட்டிப் பிதுர்க்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்பிக்க வேண்டியது. தவத்தினால் சுவர்க்கத்தை யடைவதேயல்லாமல் பிரஹ்மத்தையும் அறிகின்றான். க்ஷத்திரியன் புஜபலத்தினாலும் வைசியனும்சூத்திரனும் தனத்தினாலும் தங்களுக்குண்டாகும் ஆபத்தினின்றும் நீங்குகின்றார்கள். பிராமணனோ ஜபஹோமாதிகளால் ஆபத்தினின்றும் நீங்கவேண்டியவனா யிருக்கின்றபடியால் பிரயத்தனத்துடன் அவைகளைச் செய்யவேண்டும். பிராமணனுக்கு விதிப்படி கிருச்சிரம் சாந்திராயணமுதலிய விரதங்களால் தேகத்தைவாட்டுதலே உத்தமமானதபசாகும். சுத்தமானபிக்ஷாந்நத்தை நான்குபாகமாகச்செய்து முதற்பாகம் பிராமணர்களுக்கும் இரண்டாவதுபாகம் பசுவுக்கும் மூன்றாவதுபாகம் அதிதிகட்கும் கொடுத்து நான்காவதுபாகத்தை பத்தினியுடன் தான்புசிக்கவேண்டும். அந்தந்த ஆச்சிரமங்கட்குத் தக்கவாறு போஜனஞ்கொள்ளும்விதியைக் கூறுகின்றேன்: கிருகஸ்தன் எட்டுகவளமும் வானப்பிரஸ்தன் நான்குகவளமும் பிரமசாரி திருப்தியாகுமளவும் கொள்ளவேண்டும். கவளமென்பது-குக்குடஅண்டத்தினளவாம். உண்பதற்குமுன் கோமூத்திரசலத்தினால் அன்னத்தை ஒன்பது அல்லது ஆறு அல்லது மூன்று தடவை சாவித்திரி ருக்கையும் அதன்சம்பந்தமான மந்திரங்களையும் உச்சரித்து விதிப்படி இடைவிடாது கையால் புரோக்ஷிக்கவேண்டும்.

சோரனிடத்திலும் சண்டாளனிடத்திலும் க்ஷத்திரியவைசியரிடத்லும்அன்னத்தை எந்தப்பிராமணன் கொடுக்கப்பெறுகின்றுனே அவனே அதமனுக விதியில் சொல்லப்பட்டிருக்கிறது. சூத்திராது அன்னத்தினுலேயும் சூத்திரசகவாசத்தினுலேயும் சூத்திரனேடு சமான ஆசனத்திலிருப்பதனுலேயும் அந்தணர்கள் சூரிய சந்திரர்கள் உள்ளவரையில் கோரமான நரகதுன்பத்தை யடைவார்கள். சந்தஸுகளேடுகூடிய காயத்திரிக்கு எவ்வளவு அக்ஷரங்களுள்ளனவோ அந்த ஒவ்வொரு அக்ஷரத்துக்கும் ஒவ்வொரு லக்ஷஞ் செய்ய வேண்டுமென்பது விஸ்வாமித்திரருடைய சம்மதம். உயிரில்லாத தேகம் எப்படியோ அப்படிப்போல புரஸ்சரணே செய்யாத மந்திரமானது சகலகர்மங்களிலும் யோக்கியமுடையதல்லவென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனி ஆடி புரட்டாசி தைமாதங்களும் மலமாதங்களும், செவ்வாய் சநி வியதிபாதம் வைத்ருயோகங்களும், சதுர்த்தி சஷ்டி அஷ்டமி நவமி திரயோதசி சதுர்த்தசி அமாவாசை திதிகளும், பிரதோஷகாலம் இராக்காலங்களும் பரணி கிருத்திகை திருவாதிரை ஆயில்யம் கேட்டை அநுஷம் சிராவணம் ஜன்மநக்ஷத்திரம் இந்தநக்ஷத்திரங்களும், மேஷம் கடகம் துலாம் மகரம் கும்பம் இந்தலக்னங்களும் புரஸ்சரணேசெய்தற்குரியகாலங்களல்லவாம். சந்திரபலம் தாராபலம் சுக்லபக்ஷம்இவைகள் கூடிய காலத்தில் புரஸ்சரணேசெய்யின் மந்திரசித்தியுண்டாகும். புரஸ்சரணேசெய்வதற்குமுன் ஸ்வஸ்திவாசனபூர்வகமாய் நாந்திசிரார்த்தம்செய்து பிராமணர்களுக்கு அன்னதானம் வஸ்திரதானங்களும் கொடுத்து அதன்பின்னர் அவர்களிடத்தில் அநுக்ஞைபெற்று சிவபெருமானுக் கெதிர்முகமாகவும் பிராஹ்மணமுகமாகவும் இருந்து ஜபிக்கவேண்டியது. காசி கேதாரம் மஹாகாளம் நாசிகம் திரியம்பகம் இந்தபஞ்சமகாக்ஷேத்திரங்கள் பூமண்டலத்தில் தீபம்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. அவ்விடங்களில் ஆசனங்களுள் தீபம்போல் பிரகாசிக்கின்ற கூர்மாசனத்திலிருந்து ஜபிக்கவேண்டும். ஆரம்பதினத்தில் எவ்வளவுஎண்ணிக்கையாக ஜபிக்கப்படுகிறதோ அவ்வளவு அளவாகவே ஜபிக்கவேண்டுமேயன்றி அதிகமாகவும் குறைவாகவும் 'ஜபித்தல் கூடாது. நாள்தோறும் தவராது பிராதக்காலந்தொடங்கி மத்தியான்னகாலம் வரையில் எண்ணிக்கைப்படி மனம் அசைவில்லாமலும் சுத்தியாகவும் தியானத்துடனும் மந்திரார்த்த சிந்தனையுடனும் விதியுடன்புரஸ்சரணேசெய்யவேண்

டும். ஜபசங்கியையில் பத்தில் ஒருபங்கு ஹோமத்தை நெய் பால் எள் பத்திரங்கள் புஷ்பங்கள் தானியங்கள் மதுரமான திரவியங்கள் ஆகிய இவைகளால் மந்திரசித்தியின்பொருட்டுச் செய்யவேண்டும். தர்மார்த்தகாமமோக்ஷங்களைக் கொடுக்கின்றகாயத்திரிதேவி நித்திய நைமித்திக காமியங்களினுற் சேவிக்கத்தகுந்தவள். இவ்வுலகிலும் மேலுலகிலும் காயத்திரிக்குச் சமானமான மந்திரமொன்றுமில்லை. மத்தியான்னகாலத்தில் அதிகபோஜனஞ் செய்யாதவனும் மூன்று காலங்களிலும் ஸ்நானஞ்செய்பவனும் தேவதார்ச்சனை செய்பவனும் ஜலத்தில் நின்று மனதை மந்திரத்தில் அநந்நியமாகவிருத்தி ஜபிக்கும் கிரியையோடு கூடிய அறிவுடையவனும் மூன்று லக்ஷம் ஜபிக்கவேண்டியது. அவ்வாறின்றி மனதை இச்சையின்வழி வேறு காரியங்களில் விடுவானுயின் அவனுக்கு ஜபசித்தியுண்டாகாது. எது வரையில் தன்காரியம் சித்திக்கவில்லையோ அது வரையில் ஜபிக்க வேண்டும். இனி சாமான்ய காமியகர்மத்துக்குரிய விதியைச்சொல்லுகின்றேன்.

சூரியோதயத்தில் ஸ்நானஞ்செய்து தினம் ஆயிரம்காயத்திரி ஜபம்செய்யவேண்டும். ஒருவருடம் ஆறுமாதம் மூன்றுமாதம் ஜபஞ்செய்துவரின் இதற்குள்ஆயுள் ஐஸ்வர்யம் ஆரோக்யம் தனம் இவைகளெல்லாம் சித்தியாகும். தாமரைப்புஷ்பத்தை நெய்யில் தோய்த்து லக்ஷம் ஓமஞ் செய்வானுகில் மோக்ஷசித்தியுண்டாகும். இதில் சந்தேகமில்லை. மந்திரசித்தியில்லாமல் ஜபஹோமாதிகள் செய்தால் அவைகள் நிஷ்பலமாம். பாலினுலாவது தயிரினுலாவது இருபத்தைந்து லக்ஷம் ஓமஞ்செய்தால் தேகத்தோடு முக்தியடைகிறுன். இது மகருஷிகளுடைய சம்மதம். அஷ்டாங்க யோகசித்தியும் இதனுலேயே யுண்டாகிறது. குருபக்தியும் நியத ஆகாரமுமுடையவனும் மந்திரஜபஹோமங்கள் எவன்செய்கின்றுனே அவனுக்குச் சர்வசித்தியும் உண்டாகும். ஒருநாள் பஞ்சகவ்யபோஜனமும் ஒருநாள்வாயுபக்ஷணமும் ஒருநாள் பிராமண அன்னபோஜனமும் உள்ளவன் காயத்திரிஜபபலனையடைகிறுன். கங்கைமத்தியில் நின்று கங்காஜலத்தையுண்டு நூறு காயத்திரி ஜபத்தைச் செய்கிறவன் எல்லாப்பாபங்களினின்றும் விடுபடுவதுமன்றி சாந்திராயணவிரதாதிகளை யநுட்டித்தபலனையும் அடைகிறுன். அரசனும் பிராமணனும் தனது கிருகத்திலிருந்து இந்தப் புரஸ்சரணை யாகிய

தவத்தைச் செய்யலாம். பிரஹ்மசாரி கிருகஸ்தன் வானப்பிரஸ்தன் ஆகிய இவர்களுக்கு அவரவர்கள் அதிகார பேதப்படி பலனுண்டாகும். மோக்ஷ காமியானவன் வேதவிதியாகவாவது ஸ்மார்த்த விதியாகவாவது அக்னிகார்யாதி சதாசாரங்களைச் செய்தல் வேண்டும். பிரஹ்மசாரி இவ்விரதத்தைத் தொடங்குவானாயின் பழங்களையாவது கிழங்குகளையாவது சலத்தையாவது சுத்தமாகக் கிடைக்கும் பிக்ஷான்னத்தில் எட்டுக்கவளமாவது புசித்தல்வேண்டும். இவ்வண்ணஞ் செய்வானாயின் மந்திரசித்தியுண்டாகும். தரித்திரமுடையவன் அதினின்றும் விடுபடுவான். இதனைச் சிரவணஞ்செய்தவனும் மஹத்தாகிய சித்தியையடைகிறான் என்றனர்.

(சுலோகம் - ருரு)

இருபத்தொன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காரவாலவல்லர்யைநமஃ

## இருபத்திரண்டாம் அத்தியாயம்.

## வைஶ்வதேவம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—ஓ நாரதரே! புரஶ்சர்ய விதியைக் கூறிவரும்போது பிரஹ்மவைஶ்வதேவ விதி எனது நினைவுக்குவந்தது; அதனால் அவ்விதியையுங் கூறுகின்றேன். யக்ஞம் தேவயக்ஞம் பிரஹ்மயக்ஞம் பூதயக்ஞம் பிதுர்யக்ஞம் மாநுடயக்ஞம் என ஐந்துவகைப்படும். அவைகள் கிருகஸ்தனால் செய்யப்படும் சுள்ளி முதலானஐந்துவகையானபாவங்களை யொழிக்கும்பொருட்டுஏற்பட்டுள்ளன. இவ்வைஶ்வதேவத்தைக் குண்டத்திலாவது தண்டிலத்திலாவது செய்யவேண்டுமேயன்றி அடுப்பிலும் இரும்புபாத்திரத்திலும் வெற்றுத்தரையிலும் வரட்டியிலும் செய்தல்கூடாது. தேவர்கள் அக்னிமுகமாயிருப்பதால் அவ்வைஶ்வ தேவாக்னியை கையினலாவது முறத்தினலாவது கிருஷ்ணசனத்தினலாவது வஸ்திரத்தினலாவது ஜொலிப்பிக்கக்கூடாது. முகத்தினலேயே ஜ்வலிப்பிக்கவேண்டும். வஸ்திரத்தினல் செய்தால் வியாதியும் முறத்தினல்

தனநாசமும் கையினுல்மரணமும்உண்டாமாகலின் கர்மசித்தியையுண்டாக்கும் முகத்தினுலேயே செய்தல்வேண்டும். தயிர்நெய்கிழங்கு காய் கனி தண்ணீர் இவைகளாலும் இவைகள் கிடைக்காவிடில் விறகு கிழங்கு புல் முதலியவைகளாலும் ஓமம் செய்யலாம். மேற் கூறியவைகளையெல்லாம் நெய்யினுற் புரோக்ஷித்துச் செய்தல்வேண்டும். ஓமதிரவியங்கள் காரமும் புளிப்பும் தைலசம்பந்தமும் இல்லாதனவா யிருத்தல்வேண்டும். சுத்திசெய்வதற்கு நெய்யில்லாவிடின் பால் தயிர் இவைகளாலும் அவைகளில்லாவிடின் தீர்த்தத்தினுலும் செய்யலாம். உலர்ந்ததும் பழமையானது மானவைகளாற் செய்தால் குஷ்டரோகமும், சேஷப்பட்டதைச் செய்தால் சத்துருக்களுக்குச் சுவாதீன மாய்விடுதலும், காரவஸ்துக்களாற் செய்தால் தரித்திரமும், உப்பினுற்செய்தால் அதோகதியும் உண்டாகும். ஓமத்தை அக்னியின் வடப்புறத்தில் ஜ்வலிக்கும் தழலிற்செய்யவேண்டும். சுள்ளி வேஷணி உபஸ்கரம் கண்டினி உதகும்பம் என்னும் *ஐவகைப் பாவங்களைப்போக்கவல்ல இந்தவைஶ்வதேவத்தைச்செய்யாமல் எந்த மூடப்பிராமணன் புசிக்கின்றுனே அவன் காலபாசத்தாற் கட்டுப்பட்டுத் தலைகீழாக நரகில் வீழ்வான். காய்கள் கீரை வகைகள் கிழங்கு வகைகள் பழவர்க்கங்கள் இவற்றில் எதை ஆகாரமாகக் கற்பித்துக்கொள்ளுகிறுனே அதனை ஓமஞ்செய்யவேண்டும். வைஶ்வதேவம் செய்வதற்குமுன் சந்நியாசி பிக்ஷையை யுத்தேசித்துவந்தால் வைஶ்வதேவத்துக்குரிய பாகத்தை யெடுத்து வைத்துவிட்டு பிக்ஷையிடவேண்டும். வைஶ்வதேவத்தினு லுண்டாகும் தோஷத்தை பிக்ஷுவுக்கு பிக்ஷைகொடுப்பதனுல் போக்கிக்கொள்ளலாம். பிக்ஷுவுக்கு பிக்ஷை கொடாததினு லுண்டாகும் குற்றத்தை வைஶ்வதேவத்தால் மாற்றமுடியாது. சந்நியாசிகளும் பிரஹ்மசாரிகளும் சமைத்திருக்கும் அன்னத்துக் குரியவர்களாதலால் அவர்களுக்கு அன்னங்கொடாமல் எவன் சாப்பிடுகிறுனே அவன் சாந்திராயணவிரதத்தை யநுட்டிக்கக்கடவன்.

அதிதியானவன் ஒருவனது கிருகத்தில் புசிப்பதற்கின்றிகுறைவுடையவனுகப் போவானுயின் அப்பொழுதே தன்பாபத்தை அவ

* விறகையெறிப்பது, மிளகாமுதலியவை அரைப்பது, மெழுகுவது, காய்கறிகளைத்திருத்துவது, சலமெடுப்பது ஆகிய இவைகளாலுண்டாகும் ஐவகைப்பாவங்கள்.

னுக்குக்கொடுத்து அவனது புண்ணியத்தைத் தான்கிரகித்துக்கொண்டுபோவான். வைஸ்வதேவத்துக்குப்பின்னர் பசுவுக்கு ஆகாரங் கொடுக்கவேண்டும். எவ்வாறெனின் விஷ்ணுசொரூபமாக விருக்கின்ற ஹேமாதாவே! நாள்தோறும் விஷ்ணுபதத்தி லிருக்கின்றவளே! பால்கறக்குங்காலவளவு என்வீட்டின் தாழ்வாரத்தில் நீவசிக்க வேண்டும் என்று பிரார்த்தித்து கோப்யோநமஃ என்று பூஜித்து உனக்கு நான்கொடுக்கும் ஆகாரத்தை நீகொள்ளவேண்டும் என்று துதித்துக்கொடுக்கவேண்டும். இவ்வண்ணஞ்செய்வானுனல் காமதேநு திருப்தியடையும்.

ஓ நாரதரே! தாய் தந்தை குரு சகோதரன் புத்திரன் அடிமை அடுத்தவன் தனக்குப் பழக்கமில்லாதவன் அதிதி போஜனவேளைக்குவருகின்றவன் அக்னி இவர்களெல்லாம் போஷிக்கத்தக்கவர்கள். இவ்விதிகளையறிந்த கிருகஸ்தன் இப்போது சொல்லிவந்த வைகளையெல்லாம் செய்யானுயின் இகலோக பரலோக கதியையடையான். தரித்திரனுயுள்ள பிராமணன் பஞ்சயக்ஞத்தைச் செய்வானுயின் தனவானுகிய பிராமணன் சோமயாகஞ் செய்தபலனை அடைவான்.

ஜனன மரணம் நரை திரை முதலியவற்றைப் போக்குகின்ற பிராணுக்னிஹோத்திரத்தைக் கூறுகின்றேன். இவ்விதியையறிந்தவன் மூன்று கடன்களினின்றும் எல்லாப்பாவங்களினின்றும் விடுபடுவான். இவனது இருபத்தொரு தலைமுறையில் வீழ்ந்துகிடக்கும் பாவிகளும் கரையேறுவார்கள். அன்றியும் எல்லா யாகபலன்களையும் எல்லாப்பதங்களிலுஞ் செல்லும் சுதந்தரமும் உடையவனுவன்.

இருதயம் கீழ் அரணியாகவும், மனம் கடைகிற கட்டையாகவும், பிராணவாயு கயருகவும்,கண்கள் அத்வரி(எஜமானன்)ஆகவும், அக்னியை யுண்டாக்கி தர்ஜனி மத்திமை அங்குஷ்டங்களாகிய மூன்று விரல்களால் பிராணுகுதியும், மத்திமை அநாமிகை களோடு அங்குஷ்டத்தைச்சேர்த்து அபானுகுதியும், கநிஷ்டிகை அனுமிகைகளோடு அங்குஷ்டத்தைச்சேர்த்து வியானுகுதியும், கநிஷ்டிகை தர்ஜனிகளோடு அங்குஷ்டத்தைச்சேர்த்து உதானுகுதியும், எல்லா விரல்களையுஞ் சேர்த்து சமானுகுதியும் தனித்தனி அன்னத்தை

எடுத்துக்கொடுத்தல்வேண்டும். இவ்வாறு ஆகுதிகளைக் கொடுக்கும் போது முதலில் பிரணவத்தையும் முடிவில் ஸ்வாஹா என்பதையுங் கூட்டி உச்சரித்தல்வேண்டும்.

முகத்தில் ஆகவனீயத்தையும், இருதயத்தில் காருகபத்தியத்தையும், நாபியில் தக்ஷிணாக்னியையும், நாபிக்கடியில் "சப்யன் அவசத்யஃ" என்பவைகளையும் பாவித்து, வாக்குஹோதா (ஹோமஞ்செய்கின்றவன்) ஆகவும், பிராணன் - உத்காதா (மந்திரத்தை யுச்சரிக்கின்றவன்) ஆகவும், கண்கள்-அத்வரியாகவும், மனம்-பிரஹ்மா (சாக்ஷியாயிருக்கின்றவன்) ஆகவும், காதுகள்-ஆக்னித்ரஃ(அக்கினியைரக்ஷிக்கின்றவர்கள்) ஆகவும், அகங்காரம்-பசுவாகவும், பிரணவம்-ஆசனமாகவும், புத்தி-பத்னியாகவும், கிருகஸ்தன்-யாககர்த்தாவாகவும், மார்பு-வேதிகையாகவும், உரோமங்கள்-தர்ப்பைகளாகவும், கைகள்-ஸ்ருக் ஸ்ருவங்களாகவும் தியானித்தல்வேண்டும்.

பிராணவமந்திரத்துக்குப்பொன்னிறமாயுள்ளஜடராக்னி ருஷியாகவும், சூரியன் தேவதையாகவும், காயத்திரி சந்தசாகவும் பாவித்துக்கொண்டு பிராணாயஸ்வாஹா என்று ஆகுதிகொடுத்து, ஆதித்ய தேவாயநமஃ என்றுச்சரித்தும், அபானாகுதிமந்திரத்துக்கு பசுவின் பால்போலும் வெண்ணிறமுள்ள சிரத்தாக்னிருஷியாகவும், சந்திரன் தேவதையாகவும், உஷ்ணிக் சந்தஸாகவும் பாவித்துக்கொண்டு அபானாயஸ்வாஹா என்றுஆகுதிகொடுத்து, ஸோமாயநமஃ என்றுச்சரித்தும், வியானாகுதிமந்திரத்துக்கு தாமரைபோலும் நிறமுள்ள அக்னி ருஷியாகவும், அக்னிதேவன் தேவதையாகவும், அநுஷ்டுப் சந்தஸாகவும் பாவித்துக்கொண்டு வியானாயஸ்வாஹா என்று ஆகுதிகொடுத்து, வியானாயநமஃ என்றுச்சரித்தும், உதானாகுதி மந்திரத்துக்கு இந்திரகோபம்போலும் நிறமுள்ள அக்னிருஷியாகவும், வாயுதேவன் தேவதையாகவும், ப்ருஹதீ சந்தஸாகவும் பாவித்துக்கொண்டு உதானாயஸ்வாஹா என்று ஆகுதி கொடுத்து, உதானவாயவே நமஃ என்றுச்சரித்தும், சமானாகுதி மந்திரத்துக்கு மின்னல் போலும்நிறமுள்ள அக்னி ருஷியாகவும், மேகம் தேவதையாகவும், பங்தி சந்தஸாகவும் பாவித்துக்கொண்டு சமானாயஸ்வாஹாஎன்று ஆகுதிகொடுத்து, சமானவாயவேநமஃ என்றுச்சரித்தும்,பஞ்சாகுதிகளைச்செய்து ஆறுவதுஆகுதியாக வைஸ்வானரன்என்னும் மகாக்

னி ருஷியாகவும், காயத்திரிசந்தஸாகவும், தனதுஆத்மாவே தேவதையாகவும் பாவித்துக்கொண்டு பரமாத்மாய ஸ்வாஹா என்று ஆகுதிகொடுத்து, பரமாத்மநாயநமஃ என்றுச்சரித்து பிராணாக்னி ஹோமத்தைச் செய்தல்வேண்டும்.

இவைகளையறிந்து செய்கின்றவன் பிரஹ்மசொரூபத்தையடைகின்றான். இப்போது சொல்லிவந்தவை யாவும் சங்கிரகமென்றறிவாயென்றனர். (சு - ம் - சரு௨.)

இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்கார பஞ்சர சுக்யைநமஃ

## இருபத்துமூன்றும் அத்தியாயம்.

## புரஸ்சர்யா கிரிந்நியமம்.

---

நாராயணர் கூறுகின்றார்:—உத்தமனுகியசாதகன் "அமிர்தாபிதானம்" என்கிறவாக்கியத்தை உச்சரித்து பரிகலத்திலுள்ள சேஷமாகிய உச்சிஷ்டான்னத்தை "ஏகேசாஸ்மத் குலேஜாதா தாசாதாஸ்யோந்ந காம்க்ஷிணஃ, தேசர்வே திருப்திமாயாந்து மயாதத்தேந பூதலே" என்குலத்திலுண்டான அடிமைப்பெண்கள் அடிமையாட்கள் என்னால்கொடுக்கும் இந்தமீதிஅன்னத்தால் திருப்தியடைவர் என்றுகூறி பூமியில்வைத்தல்வேண்டும். இதுபோலும் ஆபோஜனதீர்த்தசேஷத்தை விடும்போது "ரௌரவே அபுண்யநிலயே பத்மார்புதநிவாசினும், ஆர்த்தினும்உதகம்தத்தம் அக்ஷய்யம் உபதிஷ்டது" என்னால்கொடுக்கப்படும் இந்தசேஷ ஜலத்தால் ரௌரவாதி அபுண்யவிடங்களிலிருப்பவரும் திருப்தியடைந்து யாதொருகுறைவின்றியிருத்தல்வேண்டும் என்றுகூறிவிடல்வேண்டும். போஜனம்செய்தபின் கையிலணிந்திருக்கும்பவித்திரத்தைப் போஜனபாத்திரத்திற்குச் செய்யும் பரிசேஷணமாகிய மண்டலத்தில் முடியவிழ்த்துப்போடவேண்டும். அதைவிட்டுப் பரிசுலத்தில்போ

டுவானாயின் பங்திதோஷனாய்விடுவான். போஜனாந்தத்தில் ஆபோ ஜனங்கொண்டபின்னர் பரிகலத்தைத் தொடுதல்கூடாது. ஒருகால் தொட்டாலும் அன்றி நாய் சூத்திரர் தொட்டாலும் அன்றிரவு ஆ காரமில்லாமலிருந்து மறுநாள் ஸ்நானாதிகர்மங்களைமுடித்துக்கொ ண்டு பஞ்சகவ்யத்தை யுட்கொள்வானாயின் சுத்தனாவான்.

முற்கூறியவாறு பிராணாகுதிஒன்றைக் கொள்வானாயின் அது கோடியாகபலனைக்கொடுக்கும். பஞ்சப்பிராணாகுதி செய்வானாகில் ஐந்துகோடி யக்ஞபலனைக்கொடுப்பதுமன்றி எண்ணிறந்த பலன்க ளையுங்கொடுக்கும். பிராணாக்னிஹோமவிதி யறிந்தவனுக்கு எவன் அன்னங்கொடுக்கின்றானோ அவனும் ஏற்றவனும் சுவர்க்ககாமப லனையடைகிறார்கள். பவித்திரமணிந்தகையோடும் எவன்ஆகாரத் தைக்கொள்ளுகின்றானோ அவன் ஒவ்வொருகவளத்திற்கு ஒவ்வொ ருமுறை பஞ்சகவ்யத்தைக்கொண்டபலனை யடைகிறான்.

புரஸ்சரணை செய்பவன் மூன்றுகாலம் ஸ்நானம் பூஜை ஜபம் தர்ப்பணம் ஹோமம் பிராஹ்மணபூஜை பூமியிலே சயனம் இவற் றைச்செய்பவனாயும் தருமசிந்தையுடையவனாயும் விநயமுள்ளவனா யும் எப்போதும் சாந்தமுள்ளவனாயும் சுபமானவார்த்தையுடையவ னாயும் குரூரமற்றவனாயும் இந்திரியநிக்ரஹனாயும் ஸ்திரீ சூத்திரன் பதிதன் தீக்ஷாஹீனன் விராத்தியன் நாஸ்திகன் அயோக்யன் அசுத் தன் தேவபிராஹ்மணர்கள் ஆசாரியர்குரு இவர்களை நிந்திக்கின்ற வர்கள் மாதா பிதாக்களைத்துவேஷிக் கின்றவர்கள் சண்டாளர் இவ ர்களிடம் வார்த்தையில்லாதவனாயும் குறைவாயும் இஷ்டமாயும் இதமானதாயும் உள்ள ஆகாரமுடையவனாயும் இருத்தல்வேண்டும். ஜபஹோம அர்ச்சனாதி காலங்களில் நமஸ்கரிக்கத் தக்கவர்கள் நேரி ட்டால் அவர்களுக்கு நமஸ்காரஞ் செய்ய வேண்டுமேயன்றி அவர் களிடம் பேசுதல் கூடாது. மைதுனவிஷயமான உல்லாச வார்த் தைகள் அதற்குரிய கூட்டத்தார் இவர்களோடு எப்போதும் மன வாக்குக் காயங்களால் கூடுதல்கூடாது. இப்படி எவ்விதத்தும் மை துனப் பிரஸ்தாபம் இல்லாதிருப்பதுதான் * பிரஹ்மசரியம். இவ் விதிஅரசனுக்கும் கிருகஸ்தனுக்கும் விதிக்கப்பட்டது.

---

* ஈண்டு பிரகாசரியம் ஆச்சிரமத்தைக் குறித்ததல்ல.

இவர்கள் ஓமமுன்னிலையில்கொண்ட தன்பத்தியினுடையருது காலத்தையறிந்து பிரயத்தனத்தோடு இரவில்சங்கமஞ்செய்யவேண்டும். இவ்வாறுசெய்வதால் மந்திரபுரஸ்சரணை நியமத்தைமேற்கொண்டிருத்தலாகிய பிரமசரியவிதிக்கு விரோதமில்லை. ஏனெனில் ருணத்திரயத்தை விசாரியாமலும் புத்திரோற் பத்தியைச் செய்யாமலும் யாகஞ்செய்யாமலும் மோக்ஷத்தையபேக்ஷிக்கிறவன் நரகினையடைகிருன். அவன்ஜன்மம் ஆட்டின்கழுத்தில் தொங்குவதாகிய அசைதாடிஎப்படியாதொன்றுக்கும் பயன்படுவதில்லையோ அப்படி இவன் எதற்கும் பயன்படான். என்பதால் பிரமசரியத்தால் ருஷிகடனையும் திலங்கொண்டுசெய்யும் தர்ப்பணத்தால் பிதுர்க்கடனையும் யக்ஞத்தால்தேவகடனையும் அவசியம்நீக்கிக்கொள்ளவேண்டும். ஏனெனில் யாவரும் அம்மூவரிடத்தும் கடன்பட்டவராகையால் அக்கடன் தீர்த்தற்பொருட்டு ஆஸ்ரமத்தை அநுட்டிக்கவேண்டும். ஈங்கிவைநிற்க.

பால் காய் கனி அவிசு பிக்ஷான்னம் இவைகளிலொன்றை ஆகாரமாகக்கொள்ளவேண்டும். சாந்திராயணவிரதமுங் கொள்ளவேண்டும். உப்பு காரம் புளிப்பு போஜனத்துக்கருகமில்லாத வெண்காயம்முதலியவை தாம்பூலம் இரண்டுகாலபோஜனம்மதத்திருத்தல் சுருதிக்கும் ஸ்மிருதிக்கும் விரோதமாகநடத்தல் இவைகளை நீக்கவேண்டும். சூதாடுதலினும் ஸ்திரீகளோடு சம்பாஷணுதிகள் செய்வதிலும் நித்திரைசெய்வதிலும் வாதஞ்செய்வதிலும் காலத்தை வீணுகப்போக்காமல் தேவதாபூஜையிலும் தோத்திரங்களிலும் ஆகமசாஸ்திர விசாரணையிலும் போக்கவேண்டும்.

தினம் திரிகால ஸ்நானம் பிரமசரியவிரதம் மௌனம் பூ சயனம் சூத்ரகர்மசம்பந்தமில்லாமை நித்தியபூஜை நைமித்திகபூஜை நித்தியதானம் ஆனந்தஸ்துதி கீர்த்தனம் குரு தேவதா பக்தி ஜபம் ஆகிய பன்னிரண்டுகாரியங்களும் சித்தியைக் கொடுக் கத்தக்கது. தினம் சூரியமூர்த்திக் கெதிரில் ஜபமும் தேவதாரூபமான பதுமையிலாவது அக்னியிலாவது பூஜையும் செய்தல்வேண்டும். ஸ்நானம் பூஜை ஜபம் தியானம் ஹோமம் தர்ப்பணம் இவைகளை நிஷ்காமமாகச்செய்து தேவதையிடத்தில் நிஷ்காமமாகச் சமர்ப்பிக்கவேண்டும். இவ்வாறுசெய்வது புரஸ்சரணையாம். ஆகையால் பிரா

ஹ்மணன் ஜபஹோமபரனுயிருப்பின் நிர்மல ஆத்மாவாகின்றான். பஞ்சபூதங்களையும் ஒடுக்கிச்செய்தலாகிய தவத்தை நியமமாகச் செய்யின் சுவர்க்கமும் சம்பத்துமேயன்றி வித்வேஷணம் சம்ஹரணம் மாரணம் ரோகநாசனம் ஆகியசித்திகளும் சித்தியாய்விடும். எந்தத்தேவதையைக்குறித்து எந்தருஷிகள் தோத்திராதிகள்செய்து எந்தப்பலனை யடைந்தார்களோ அந்தத்தேவதையைக்குறித்து தவஞ்செய்பவரும் அந்தப்பலனையடைவர்.

மேற்கூறியகர்மங்களுக்குரிய விதானங்களைக் கூறுகின்றேன். கர்மசித்திக்குக்காரணம் புரஸ்சரணையேயாகலின் அதனை ஆரம்பிக்குங் காலத்தில் பிரஜாபத்தியகிருச்சரம் அநுஷ்டித்து க்ஷவரம் ஸ்நானம் முதலானவைகளைச் செய்து நித்யகர்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு இரவும் பகலும் மௌனியாகவும் சத்யவிரதனுகவுமிருந்து பவித்திரங்களாகிய வியாகிருதிகளையும் சாவித்திரியையும் பிரணவத்தோடு ஜபித்து, பிறகுசுத்தமும் பாவனமுமாகிய ஆபோஹிஷ்டேதி சூக்தங்களையும்,மங்களகரமாயிருக்கின்ற பவமான சூக்தங்களையும் கர்மாவுக்கு முன்னும்பின்னும் உச்சரிக்கவேண்டியது. ஜபம்-ஆயிரம் உருவாவது நூறுருவாவது பத்துருவாவது செய்யவேண்டியது. ஓங்காரபூர்வமாக வியாகிருதிகளையும் சாவித்திரியையும் ஜபிக்கவேண்டியது. அவ்விதமாகவே தர்ப்பணமும் செய்வதுமன்றி குரு ருஷி சந்தஸு தேவதைகளுக்கும் தர்ப்பணஞ் செய்யவேண்டும்.

பிரஜாபத்திய சாந்தபன பராக சாந்திராயண கிருச்ரங்கள் பஞ்சமகா பாதகங்களையும், தப்தகிருச்சரம் எல்லாப்பாதகங்களையும் க்ஷணத்திற்போக்கும். மூன்றுசாந்திராயணத்தினுல் பிரமனுலகத்தையும், எட்டுசாந்திராயணத்தினுல் தேவதைகளை நிதரிசனமாகக் காணுதலையும், சகலவேத கலைக்யான அநுக்கிரகத்தையும், பத்துசாந்திராயணத்தினுல் சகலஇஷ்டார்த்தங்களையும் அடையலாம்.

பிராஜாபத்தியம்—மூன்றுநாள்பகலினும், மூன்றுநாள் இரவினும், மூன்றுநாள் யாராவதுகொடுப்பதையும் புசித்தும் மூன்றுநாள் புசியாமலும் இருப்பதாகும்.

சாந்தபனம்—ஒருநாள் பஞ்சகவ்வியத்தைப்புசித்து ஒருநாள் உபவாசமாயிருப்பதாம்.

மகாசாந்தபனம்—மூன்றுநாள் ஒவ்வொருகவளம்புசித்து மூன்றுநாள்உபவாசமாயிருப்பதாகிய அதிகிருச்ரத்தைப்போல் மூன்றுமுறை கொள்வது.

பராகம்—பன்னிரண்டுநாள் உபவாசமாகவிருப்பதாகும். இது சர்வபாபங்களையும் போக்கும்.

தப்தகிருச்சரம்—ஜலம் பால் நெய் வாயு இவைகளை மும்மூன்றுநாள் உஷ்ணமாயுண்பதாகும்.

சாந்திராயணம் - சுக்லபக்ஷம் பிரதமைமுதல் ஒவ்வொருகவளமாக அதிகமாக்கியுண்டு கிருஷ்ணபக்ஷத்தில் ஒவ்வொருகவளமாகக் குறைத்துண்டு அமாவாசையில் உபவாசமாக இருப்பதாகும். சிசுசாந்திராயணம் - மூன்றுசந்தியிலும் ஸ்நானஞ்செய்து காலையில் நான்குகவளமும், மாலையில் நான்குகவளமும், ஏழுநாளைக்குக்கொள்வதாகும். எதிசாந்திராயணம் - மத்தியானத்தில் எட்டுகவளம் ஏழுநாளைக்குக்கொள்வதாகும்.

இதனை உருத்திரர்களும் ஆதித்யர்களும் வசுக்களும் அநுஷ்டித்துத் தத்தம்பதவிகளை யடைந்து சௌபாக்யத்தை யுடையவரானார்கள். இவ்விரதத்தை ஏழுநாள் விதிப்படிச்செய்வானாகில் தோல் இரத்தம் மாம்சம் நரம்பு மேதை மச்சை வபை இவைகள்சுத்தமாகின்றன. புரஸ்சரணைசெய்பவன் சுத்தாத்மாவாயும் சத்தியவானாயும் ஜிதேந்திரியனாயும் இருந்து இக்கிருச்சிரங்களில் ஒன்றையநுட்டித்துச் செய்வானாகில் இஷ்டசித்திகள் சித்திக்குமென்பதில் சம்சயமில்லை. ஒவ்வொருவிரதத்துக்கும் மத்யானபோஜனமாவது இராப்போஜனமாவது முன் மூன்றுநாள்செய்யவேண்டும்.

ஓநாரதரே! அன்னியருக்குத் தெரிவிக்கக்கூடாததாயும் வேதசாரமாயும் அதிரகசியமாயும் சர்வபாபநாசகரமாயும் எல்லாப் பலன்களையுங் கொடுப்பதாயுமுள்ள தேகசோதனை பூர்வகமான புரஸ்சரணைக்கிரமத்தைக் கூறினேன் என்றனர். (சு - ம் - சுரு.)

இருபத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங் காராங்கண தீபிகாயைநமః

## இருபத்துநான்காம் அத்தியாயம்.

## காம்ய கர்மவிதி.

---

நாரதர், இதுபோலவே சாந்தியாதிகிருத்யங்களையும் சொல்லியருளவேண்டுமென்றுவினவ, நாராயணர் அதிரகசியமாயுள்ளதும் துஷ்டர்களுக்கும் தூஷணர்களுக்குஞ் சொல்லக்கூடாததுமான நீர்கேட்டசாந்தியைச் சொல்லுகின்றேனென்றனர். பூத பைசாச பயங்களுக்கும் பாதகங்களுக்கும் வன்னிசமித்தினால்ஹோமஞ்செய்தால் நிவாரணமாகும். பாலுள்ளவிருக்ஷங்களின் ஈரசமித்துக்களால் ஹோமஞ்செய்தாலும், சூரிய சம்பந்தமான ருக்குகளைச் சொல்லி ஜலத்தில் தர்ப்பித்தாலும் முழங்கால்ஜலத்தினின்று ஜபித்தாலும் பூதரோகங்கள் நிவர்த்தியாகும். கழுத்தளவுஜலத்தினின்று ஜபித்தால் பிராணசந்தேகமானபாபம் நிவர்த்தியாகும். ஸ்வர்னம்வெள்ளி தாம்பிரம் பாலுள்ளமரம் இவைகளினால் செய்த பாத்திரங்களிலாவது மண்பாத்திரத்திலாவது பஞ்சகவ்யம்சேர்த்து அதற்குரிய மந்திரமும் ஜபித்து இடதுகையில் பிடித்துக்கொண்டு ஜ்வலிகின்ற அக்னியில் பாலுள்ளமரங்களின் சமித்துக்களை பஞ்சகவ்யத்தில் தோய்த்து ஆயிரம் ஆகுதிசெய்து தர்ப்பையினால் அப்பஞ்சகவ்யத்தைத் தொட்டு பூதாதிகளால் பீடிக்கப்பட்டவர்கள் மீதிலாவது வீடுகள் முதலிய இடங்களிலாவது மந்திரங்களைச் சொல்லித்தெளித்தால் நிவர்த்தியாகும். பிறகு தேவியைத்தியானித்து பலிமுதலியவைகளைக் கொடுக்கவேண்டும். அப்பலியினாலும் நிவர்த்தியாகும். வீடு கிராமம் பட்டினம் ராஜதானி இவ்விடங்கள் தோஷமடைந்திருந்தாலும் இதனால் நிவர்த்தியாகும்.

சுவர்னம் வெள்ளி தாம்பிரம் மண் இவைகளாற் செய்யப்பட்ட கும்பங்களை நூலினாற்சுற்றி நான்குதிக்குகளிலிருந்து கொண்டுவந்த ஜலத்தினால் பூரித்து மணலில்மண்டலஞ்செய்து தான்யங்களைப்பரப்பி அதன்மீது கும்பத்தைவைத்து ஏலம் சந்தனம் கர்ப்பூரம் ஜாதிபுஷ்பம் பாதிரி மல்லிகை பில்வபத்திரம் இவைகளை

அதிற் சேர்த்து பாலுள்ளவிருக்ஷங்களின் தளிர்களை அதன்முகப் பில்வைத்து கூர்ச்சங்களிட்டு நியமமுள்ள மூன்றுபிராமணர்களைக் கொண்டு ஆயிரம் உரு பூஜாபூர்வமாக ஜபஞ்செய்வித்து அத்தீர்த்த த்தால் பூதாதிகள்பிடித்த மனுஷ்யனுக்கு அபிடேகித்தால் நிவிர்த்தி யாய்ச் சுகமடைவான். மிருத்யுரோகங்களும் நிவர்த்தியாகும். அர சன் செய்தால் தீர்க்கமான ஆயுளையடைவான். ஜபஞ்செய்த மூன்று பிராமணர்களுக்குச் சந்துஷ்டியாய் சக்திக்குத்தக்கபடி மரியாதை செய்ய வேண்டும்.

குடூசி என்னும்சமித்தைப் பாலில் தோய்த்து மிருத்யஞ்சயமந்தி ரத்தினல் ஓமித்தால், சர்வவியாதியும், மாந்தளிரைப் பாலில்தோய் த்து ஓமித்தால்சுரமும், மாந்தளிரையாவது சோமலதைஎன்கிற கொடியைக் கணுவுகள்தோறும் ஒடித்தாவது பாலில்தோய்த்து சூரியமந்திரத்தால் ஓமித்தால் க்ஷயமும், தேன் நெய் சர்க்கரை களால் ஓமித்தால் வெண்குஷ்டமும், சூரியன்பொருட்டு பாயசமா வது அவிசாவது நிவேதித்து ஓமித்து சேஷத்தைப்புசித்தால் ராஜ க்ஷயமும், சங்கவிருக்ஷ புஷ்பத்தால் ஓமித்தால் குஷ்டரோக மும், நாயுருவிஅரிசியினல் ஓமித்தால் அபஸ்மாரவியாதியும், பாலு ள்ள மரசமித்துக்களால் ஓமித்தால் உன்மாதமும், அத்தி சமித்தி னல் ஓமித்தால் மேகவியாதியும், தேன் கருப்பஞ்சாறுகளால் ஓமித் தால் பிரமேகவியாதியும், மது த்ரயத்தாலும் கபிலைப்பசுவின் நெய் யாலும் ஓமித்தால் வைசூரியும், அத்தி ஆல் அரசு இவைகளினல் ஓமித்தால் பசு யானை குதிரை இவைகளின்வியாதியும் நீங்கும்.

வீட்டில் தேன்கூடு புத்து உண்டாகுமானல் வன்னிசமித்து நெய் அன்னம் இவைகளால் ஓமித்தால் தோஷநிவர்த்தியாகும். மேகஇடியினலும் பூ கம்பங்களாலும் உண்டாகிறபயம் ஏழுநாள் சீந்தல் கொடியினல் ஓமித்தால் நிவர்த்தியாகி ராஜதானிமுதலான வைகளும் சுகமடையும். காற்று அக்னி சத்துரு இவைகளால் உண் டாகும்பயம் மண்கட்டிகளை நூறு உருஜபித்து நான்குதிக்குக்களி லும் இறைத்தால் நீங்கும். விலங்கு முதலியவற்றல் கட்டுண்டவன் நூறு உருஜபித்தால் கட்டுகள்விலகிவிடும். விஷரோகம் பூதரோக முள்ளவர்களைத் தொட்டுக்கொண்டு நூறு உரு ஜபித்தால் நீங்கி விடும். சலத்தை மந்திரித்துண்டாலும் விபூதியைமந்திரித்து சிரசில் தரித்துக்கொண்டாலும் பூதாதிரோகங்களும் சமஸ்தமானவியாதி களும்நீங்கித் தீர்க்காயுளுண்டாகும்.

புஷ்பஹோமங்களைப் பிராமணமுகமாகச்செய்து அவர்களைத் தன்சக்திக்குத்தக்கபடித் திருப்திசெய்வித்தால் சம்பத்துண்டாகும். செந்தாமரையாலாவது சாதிபுஷ்பத்தாலாவதுசாலிதண்டுலத்தாலாவது பில்வசமித்துக்களாலாவது பில்வபத்திரங்களாலாவது பில்வபுஷ்பங்களாலாவது பில்வபலங்களாலாவது பாயசம் நெய் இவைகளில் தோய்த்து ஏழுநாள் ஓமஞ்செய்தால் சம்பத்துண்டாகும். நெற்பொரியை நெய் தேன் கருப்பஞ்சாறு என்னும் மதுக்களோடு சேர்த்து ஓமித்தால் வரனுக்கு விரும்பியகன்னிகையும் கன்னிகைக்கு விரும்பியவரனுங்கிடைப்பார்கள். செங்கழுநீர்புஷ்பங்களினால் ஏழுநாள் ஓமித்தால் சுவர்ணமும், சூரியனைக்குறித்து அர்க்கியங்கொடுத்தால் மறைந்திருக்கும் பொன்னும், அன்னத்தால் ஓமித்தால் அன்னமும், நெற்கதிரால் ஓமித்தால் மிக்கதானியமும், கரீஷசூர்ணங்களால் ஓமித்தால் பசுக்களும் கிடைக்கும். பிரியங்கு தண்டுலத்தினால் செய்த பாயசத்தை நெய்யோடு ஓமித்தால் பிரஜைகள் விருத்தியடைவர். சூரியனைக்குறித்து அன்னம் பாயசம் இவைகளைநிவேதித்து ஓமித்து சேஷத்தை புஷ்பவதியானஸ்திரீ நான்காம் நாள்ஸ்நானஞ் செய்தபின் போஜனஞ் செய்வாளாகில் சுபுத்திரனைப் பெறுவள்.

குருத்துள்ள உலராதசமித்துக்களாலாவது குருத்தோடுகூடிய பாலுள்ள விருக்ஷசமித்துக்களை மதுத்திரயங்களோடாவது பொன்னினாற்செய்த மலர் அரும்புகளாலாவது ஓமித்தால் ஆயுள்விருத்தியடையும். நெற்கதிரினால் நூறு ஓமமியற்றினால் ஆயுளும் பொன் முதலியவைகளுமுண்டாகும்.பால் தேன் நெய் இவைகளாலாவது வன்னி அன்னம் பால் நெய் இவைகளாலாவது கல்லாலமரத்தின் சமித்து பால் இவைகளாலாவது ஏழுதினம் நூறு ஓமஞ்செய்தால் அவமிருத்யுநிவாரணமாம். பாலை யாகாரமாகக்கொண்டு மிருத்யஞ்சயமந்திரத்தினால் ஏழுநாள் ஜபஞ்செய்தால் ஜயப்பிரதமும், நிராகாரனாயும் மௌனியாயும் மூன்றுநாள்ஜபித்தால் யமபயநிவர்த்தியும் உண்டாகும். ஜலத்தில்மூழ்கி ஜலத்தில் நின்று செபிப்பானாகில் அக்கணமே மிருத்யுவினின்றும் விடுபடுகின்றான். பில்வமரத்தடியில் ஒருமாதம் ஜபித்தால் ராஜ்யசம்பத்தையும் பில்வத்தளிர் வேர் பழம் இவைகளால் ஓமித்தால் ராஜ்யத்தையும், நூறுபத்மத்தினால் ஒருமாதம் ஜபித்தால் ராஜ்யாதிபத்தியத்தையும், யவாகு என்னும் தான்

யத்தை கதிரோடு ஓமித்தால் கிராமாதிபத்தியத்தையும், அரசமர த்தின்சமித்துக்களால் ஓமித்தால் யுத்தத்தில் ஜயமடைந்து அரசத் தன்மையையும், எருக்குசமித்துக்களால் ஓமித்தால் மண்டலாதி பத்யத்தையும் அடையலாம். வஞ்சியினது பத்திரபுஷ்பங்களைப் பா லிலும் பாயசத்திலும் தோய்த்து ஏழுநாள் நூறுஹோமஞ் செய் தாலும் நாபியளவு ஜலத்தில் ஏழுநாள் ஜபித்தாலும் புஷ்டியடைகி ருன். ஜலத்தில் பஸ்மத்தை நூறு ஆகுதிசெய்தால் அதிக மழை சமனமாகும். முருக்கு மரசமித்தினுல் ஓமித்தால் பிரஹ்மதேஜ ஸும், முருக்குமரபுஷ்பம்ஓமித்தால் எல்லா இஷ்டகாமியங்களும், பாலில் ஓமித்தால் ஞானவிருத்தியும், நெய்யினுல் ஓமித்தால் புத்தி விசேஷமும் உண்டாகும். ஜலத்தை அபிமந்திரித்துப் பானஞ்செய் தால் பிரமக்யானமும், புஷ்பங்களினுல் ஓமித்தால் வஸ்திராதிகளும் உண்டாகும். உப்பை தேன்கலந்து ஓமித்தால் இஷ்டம் தானேசெய் தவனையடையும், பில்வபுஷ்பங்களை தேனில்தோய்த்து ஓமித்தால் இஷ்டத்தைச் செய்தவனடைகிருன்.

ஜலத்தில்நின்றுகொண்டு கையால்ஜலத்தையெடுத்து ஸ்நானஞ் செய்வானுகில் சிரோஷ்டமான புத்தி ஆயுள்விர்த்தி நிச்சிந்தை இவைகளையடைகிருன். இந்தஸ்நானத்தை ஒருவருக்காகச்செய் தாலும் தானும் அவனும் பலத்தையடைவார்கள்.

பரிசுத்தமான இடத்தில் ஒருமாதம் ஆயிரம் உரு நாளொன்று க்குஜபித்தால் ஆயுள்விர்த்தியும், இரண்டுமாதம் ஜபித்தால் ஆயுளும் ஆரோக்யமும், மூன்றுமாதம் ஜபித்தால் அவ்விரண்டுடன் சம்ப த்தும், நான்குமாதம் ஜபித்தால் அம்மூன்றுடன் புத்திரர் பத்னி கீர்த்தி இவைகளும், ஐந்துமாதம் ஜபித்தால் புத்திரன் பத்னி ஆயுள் ஆரோக்யம் சம்பத்து வித்தையுமுண்டாகும். இவ்வாறு மாதம் வளர வளர சம்பத்துக்களும் விருத்தியடைகின்றன.

கையையுயர்த்தி ஒருபாதத்தில்நின்று நிராசையாக ஒருமாதம் முந்நூறு உரு தினந்தோறும் ஜபித்தால் இஷ்டங்களெல்லா மடை கிருன். ஆயிரத்து நூற்றெட்டுருஜபித்தால் எல்லாம் உண்டாகிறது. நிச்சல புத்தியாக ஆயிரம் உரு ஜபித்தால் ஒருமாதத்தில் மோக்ஷ முண்டாகும், மூன்றுலக்ஷம் ஜபித்தால் எல்லாம் சித்தியாகும்.

ஒருமாதம் நீரில்மூழ்கி நூறு உரு ஜபித்தால் இஷ்டகாயங்களும், மூன்றுலக்ஷம் உருஜபித்தால் சர்வமுமுண்டாகின்றன. ஜலத்தில் ஏகபாதனாய்நின்று கையைமேலேயுயர்த்தி நிராசையுடையவனாய் இராத்திரியில் உப்பில்லாத போஜனமுடையவனாய் ஒருவருடம் ஜபித்தால் ருஷியாகின்றான், இரண்டுவருடம் ஜபித்தால் சமஸ்தவித்தையும், மூன்றுவருடம் ஜபித்தால் திரிகாலஞானமும், நான்குவருடம் ஜபித்தால் மகாதேவப்பிரத்யக்ஷமும், ஐந்துவருடம் ஜபித்தால் அணிமாதிகுணங்களும், ஆறுவருடம்ஜபித்தால்எவ்விதரூபம் எடுக்க எண்ணமோ அவ்விதமானரூபம் எடுக்கும் வன்மையும், ஏழுவருடம் ஜபித்தால் தேவதாரூபமும், ஒன்பதுவருடம் ஜபித்தால் மநுத்வமும், பத்துவருடம் ஜபித்தால் இந்திரத்துவமும், பதினொருவருடம் ஜபித்தால் பிரஜாபதித்வமும், பன்னிரண்டுவருடம் ஜபித்தால் பிரமத்வமும் உண்டாகும். இப்படிப்பட்ட தவங்களைப்புரிந்து எல்லாவற்றையும் அடைகின்றனர். சிலருஷிகள் கனிகளையும் சிலர்மூலங்களையும் சிலர் சருகுகளையும் சிலர் பால் சிலர் நெய் சிலர் சோமபானம் சிலர்பிக்ஷான்னம் ஆவிசு இவைகளையுண்டு எல்லாவற்றையும் அடைகிறார்கள்.

சுவர்னம் திருடல் சுராபானம் குருபத்னி கமனம் ஆகிய இப்பாவங்கள் ஒவ்வொன்றுக்கு ஒருமாதம் நாள் ஒன்றுக்கு மூவாயிரம் உருஜபித்தால் நீங்கும். இஃதேபோல் வனத்தில் குடிசையிலிருந்து ஒருமாதம் ஜபித்தால் பிரம்ஹத்திதோஷம் நீங்கும். சகலபாவங்களும் பண்ணிரண்டு நாள் ஜலத்தில் மூழ்கி தினம் ஆயிரம் உரு ஜபித்தால் சகலபாவங்களும் நீங்கும். நியமமாயும் மௌனியாயும் ஒருமாதம்வரையில் பிராணாயாமத்தோடு மூவாயிரம் உருஜபித்தால் மகாபயத்தையுண்டாக்கும். மகாபாதகநிவர்த்தியுண்டாகும். ஆயிரம் பிராணாயாமத்தால் பிரஹ்மஹத்திநீங்கும். ஆறுதரம் ரேசகபூரகங்களை அப்பியாசஞ் செய்வது ஒருபிராணாயாமமாகும். இது சர்வபாபத்தையும் போக்கும். ஆயிரம்முறை ஒருமாதத்துக்குள் அப்யசித்தால் ராஜஹத்திநீங்கும். பன்னிரண்டுநாளைக்குள் மூவாயிரம் உரு ஜபித்தால் கோஹத்திநீங்கும். தனித்தனி பதினாயிரம் உரு காயத்திரிஜபஞ்செய்தால் சேரக்கூடாதஸ்திரீகளோடுசேர்ந்ததும் திருடியதும் கொலைசெய்ததும் புசிக்கக்கூடாததைப்புசித்ததும் ஆகிய பாவங்கள் நீங்கும். நூறுபிராணாயாமம் செய்தால் சகல

பாவமும் நீங்கும். ஒருமாதம் வனத்தில் உபவாசமாய் ஆயிரம் பிராணுயாம அப்யாசமும், மூவாயிரம் காயத்திரிஜபமுஞ்செய்தால் சகலபாபமும் நிவர்த்தியாகும். பிராணுயாமஅப்யாசத்தை இருபத்துநான்காயிரம் செய்தால் கிருச்சரம் என்றும், அறுபத்து நான்காயிரஞ்செய்தால் சாந்திராயணத்திற்குச் சமானமென்றுஞ் சொல்லப்படும். உதயாதிசந்திகளில் நூறுபிராணுயாம அப்யாசமும், நூறு காயத்திரிஜபமும் செய்தால் சர்வபாவமும் நாசமடையும். இப்போது கூறியவைகள் யாவும்சாந்திகர்மசுத்திஎன்றுசொல்லப்படும். இவை ரகசியங்களுக்குள் அதிரகசியமான படியால்நீபாதுகாத்தல் வேண்டும். இதுவரையில் ஆசாரசங்கிரகத்தைச் சுருக்கமாகச்சொல்லிவந்தேன் இதனைவிதிப்படிச்செய்தால் துர்க்காதேவிசந்தோஷித்து பிரசன்னமாவாள். நித்ய நைமித்திக காம்யகர்மங்களை விதிப்படிஅநுட்டித்துவந்தால் புத்திமுக்திப்பிரயோஜனமுண்டாகும். ஆசாரந்தான் முதலாயுள்ளதருமம். அதற்குத்தலைவி ஈஸ்வரியே. இவ்வாறு சகலசாஸ்திரங்களிலுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இச்சதாசாரத்துக்கு மகத்தான பலனுண்டு. ஆசாரமுடையுவன் எப்போதும் பரிசுத்தனும் சுகமுடையவனுயுமிருப்பான். அவனே எப்போதும் தன்யன். இதுசத்யம்! இதுசத்யம்! ஓநாரதரே! தேவியினது பிரசாதத்தை யுண்டுசெய்கின்றசதாசாரக்கிரமத்தைஎவன்கேட்கின்ருனே அவன் இகலோக பரலோகங்களில் மகாசம்பத்தையும் சௌக்கியத்தையும் உடையவனுயிருப்பன். இதுகாறும் சதாசாரக்கிரமாதி மகிமைகளைக் கூறினேன்? இனி எதனைக்கேட்க விரும்புகின்றனை யென்றனர். (சு - ம் கoo)

இருபத்து நான்காம் அத்தியாயம்
காம்யகர்ம விதி முற்றிற்று.

---

ஆக அத்யாயம் உச - க்குச் சுலோகம் (கஉசக.)

---

பதினென்ரும் ஸ்கந்தம் முற்றிற்று.

---

காமாக்ஷிதேவ்யைநமஃ

# பன்னிரண்டாம் ஸ்கந்தம்.

## அட்டவணை.

| நெம்பர். | | பக்கம். |
|---|---|---|

உ

ஹ்ரீங்காரகந்தாரசிம்ஹைநம:.

# தேவீபாகவதம்.

## பன்னிரண்டாம் ஸ்கந்தம்.

### முதலாமத்தியாயம்.

### காயத்திரீ விசாரம்.

கம்பாதீரசராணும் கருணுகோரகித த்ருஷ்டி பாதாநாம் ।
கேளீவநம் மநோமே கேஷாம் சித்பவது சித்விலாஸாநாம் ॥

நாரதர் கூறுகின்ருர் ;- ஓதேவ! தேவரீரால் சதாசாரவிதியை க்கேட்டதேயன்றி சர்வபாபங்களேயும் போக்கவல்லதாயும் ஒப்பில்லாதமகத்துவமுடையதாயுமுள்ள தேவியினது கதாவமிர்தம் உமது முகமாகிய தாமரையினின்றும் பெருகிவரக் கண்டேன். சாந்திராயணவிரதத்தை முதலாகவுடைய எந்தவிரதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அவையெல்லாம் ஒருவனுல் சாதித்தற்கு அருமையுடைத்தென்றும் கஷ்டத்தினுல் சாதிக்கத்தக்கதென்றும் அறிகிறேன். ஆகையினுல் பிராணிகளுக்குச் சுகமானசாதனத்தால் சாதிக்கக் கூடியதாயும் தேவி அநுக்கிரகம் கிடைக்குமாறு செய்வதாயும் சுகமான அநுட்டானத்தினுல் சித்திப்பதாயுமுள்ள கர்மா எதுவோ அந்தக்கர்மாவைக் கிருபையினுல் சொல்லுவீராக. ஓ சுவாமிந்! சதாசாரவிதியில் காயத்திரிக்கு எந்தவிதி சொல்லப்பட்டிருக்கின்றதோ அந்தவிதியில் முக்கியமாயுள்ளது எதுவோ அதுவும், அதிகபுண்ணியத்தைக் கொடுக்கத்தக்கது எதுவோ அதுவும், தத்துவ சங்கையாகச் சொல்லப்பட்ட காயத்திரிவர்ணங்கள் எவைகளோ அவைகளும், அவைகளுக்குரிய ருஷிகளும் சந்தஸுகளும் தேவதைகளும் ஆகிய இவைகளெல்லாம் ஓ பிரபுவே! எனக்குச் சொல்லுவீராக. இவைகளேக் கேட்கவேண்டுமென்னும் ஆவலானது என்மனதில் அதிகமாக விருக்கின்றது

என்றார். நாராயணர்கூறுகின்றார். பிராமணனானவன் இதரமான அனுட்டானங்களைச் செய்தாலும் செய்யாதுவிட்டாலும் காயத்திரியைமாத்திரம் விடாதுசெய்வானாயின் அவன் கிருதகிருத்யனாகின்றான். சந்தியாகாலங்களில் அர்க்கியங்கொடுத்து காயத்திரியை மூவாயிரம் செபிப்பானாயின் அவன் தேவர்களால் பூஜிக்கப்படுகிறான். நியாசங்களைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் காயத்திரியைமாத்திரம் செபித்தல்வேண்டும். அந்தக்காயத்திரி செபத்தைச் சச்சிதானந்த ரூபிணியாயிருக்கின்ற தேவியைத் தியானித்து பலாபேக்ஷையின்றிச் செய்வானாயின் அந்தக்காயத்திரியின் ஒரு அக்ஷரசித்திற்கே மும்மூர்த்திகளுக்கும் சோமசூர்யாக்னிகளுக்கும் சமானமாகுந்தன்மையை அந்தப்பிராமணன் அடைகின்றான். ஓ முனிவரே! இனி காயத்திரி வர்னத்துக்குரிய ருஷி சந்தஸு தேவதை இவைகளை உண்மையாய் முறைப்படிச்சொல்லுகிறேன் கேட்பீராக.

## ருஷிகள்.

வாமதேவர் அத்திரி வசிட்டர் சுக்ரர் கண்ணுவர் பராசரர் விச்வாமித்ரர் கபிலர் சவுநகர் யாக்ஞவல்கர் பரத்துவாசர் ஜமதக்கினி கௌதமர் முத்கலர் வேதவியாசர் லோமசர் அகஸ்தியர் கௌசிகர் வத்ஸர் புலஸ்தியர் மாண்டுகர் துர்வாசர் நாரதர் கச்யபர் இந்த இருபத்து நால்வரும் வர்ணங்களுக்குரிய ருஷிகளாகச் சொல்லப்படுகின்றனர்.

## சந்தஸ்ஸுகள்.

காயத்துருஉஷ்ணிக் அநுட்டுப் ப்ருஹதி பங்தி திரிஷ்டுப் ஜகதீ அதிஜகதி சக்வரீ அதிசக்வரீ திருதி: அதிதிருதி: விராட் பிரஸ்தாரம் பங்தி கிருதி: பிருகிருதி: ஆகிருதி: விகுர்தி: சங்கிருதி: அக்ஷரபங்தி: பூ புவ: சுவஹ: ஜோதிஷ்மதீ இந்த இருபத்துநான்கும் சந்தஸுகளாகச் சொல்லப்படுகின்றன.

## தேவதைகள்.

ஆக்னேயம் பிராஜாபத்தியம் ஸௌம்யம் ஈசானம் சாவித்திரம் ஆதித்யம் பார்ஹஸ்பத்யம் மைத்ராவருணம் பகதெய்வதம் சார்யமைச்வரம் கணேசம் துவாஷ்டரம் பௌஷ்ணம் ஐந்திராக்னம் வாயவ்யம் வாமதேவ்யம் மைத்ராவருணி வைச்வதேவம் மாத்ருகம் வைஷ்ணவம் வசுதெய்வகம் ருத்ரதெய்வதம் கௌ

பேரம் ஆப்ஃவினம் மகாபாபங்களைப் போக்கடிப்பதாயும் பரம சிரேஷ்டமாயுமுள்ள இந்த இருபத்துநான்கும் தெய்வங்களாகச் சொல்லப்படுகின்றன. இவைகளைக் கேட்டமாத்திரத்தில் சாங்கமாகக் காயத்திரியை ஜபஞ்செய்தால் எந்தப்பலனுண்டாகுமோ அந்தப்பலனுண்டாகும். (சு - ம் - உளஉ)

முதலாம் அத்யாய முற்றிற்று.

---

ஹ்ரீங்காராம்புஜபிருங்கிகாயைநமஃ

இரண்டாம் அத்தியாயம்.



## காயத்திரியாஃ சக்திவர்ணாதி கதனம்.



நாராயணர்கூறுகின்றார்,—ஓ முநிவரே! மஹாபாபங்களைப் போக்கவல்ல இருபத்துநான்கு வர்ணங்களுக்கு எந்தச்சக்திகள் எந்தநிறங்கள் எந்தத்தத்துவங்கள் எந்தமுத்திரைகள் சொல்லப் பட்டிருக்கின்றனவோ அவைகளை முறையாகச் சொல்லுகிறேன் கேளும்.

### சத்திகள்.

வாமதேவீ பிரியை சக்தியா விப்ஃவா பத்ரவிலாசிநீ பிரபாவதீ ஜயா சாந்தா காந்தா துர்க்கா சரஸ்வதீ வித்ருமா விசாலேசா வியாபிநீ விமலா தமோபஹாரிணீ சூட்சுமா விஶ்வயோநீ ஜயா வசா பத்மாலயா பாரசோபா பத்ரா திரிபதா இச்சக்திகளேயாம்.

### நிறங்கள்.

சண்பகம் காசாம்பூ பவளம் ஸ்படிகம் தாமரை இளஞ்சூரியன் * சங்கு குருக்கத்தி சந்திரன் இளந்தாமரையிலை பத்ராகம் இந்திரநீலம் முத்து குங்குமம் மை ரக்தம் வைடூரியம் தேன் மஞ்சள் குருக்கத்திப்பால் சூரியகாந்தி கிளிவால் சதபத்திரம் (தாமரை) தாழை மல்லிகை அலரி இம்மலர்களுக்குரிய நிறங்களே நிறங்களென்று சொல்லப்படும்.

### தத்துவங்கள்.

பிருதிவிமுதலிய பஞ்சபூதம், கந்தமுதலிய பஞ்சதன்மாத்ரை, உபஸ்தாதி பஞ்சகன்மேந்திரியங்கள், ஆக்ராணாதி பஞ்சஞானேந்

---

* சங்கு குருக்கத்தி சந்திரன் இம்மூன்றையும் ஓர் நிறமாகக்கொள்க.

திரியங்கள், பிராணன் அபானன் வியானன் சமானன் ஆகிய நான்குவாயுக்கள். இவ்விருபத்துநான்குமே தத்துவங்களென்றுசொல்லப்படும்.

## முத்திரைகள்.

சம்முகம் (எதிர்கூப்புதல்) சம்புடம் விததம் (விரித்தல்) விஸ்ரிதம் துவிமுகம் த்ரிமுகம் சதுர்முகம் பஞ்சமுகம் ஷண்முகம் அதோமுகம் வியாபகாஞ்சலி சகடம் யமபாசம் கிரதிதம் (சேர்த்தல்) சம்முகோன்முகம் பிரலம்பம் முஷ்டி மச்சம் கூர்மம் வராஹம் சிம்ஹாக்கிராந்தம் மகாகிராந்தம் முத்கரம் (உலக்கை) பல்லவம் (தளிர்) திரிசூலம் இவ் விருபத்துநான்கும் தனிமுத்திரைகளெனவும் யோனி சுரபி அக்ஷமாலை லிங்கம் பத்மம் மஹாமுத்திரை இவ்வாறும் நன்நான்குக்கு ஒவ்வொரு மகாமுத்திரைகளெனவுஞ் சொல்லப்படும். (சு-ம்-கஅ.)

இரண்டாம் அத்தியாய முற்றிற்று.

---

ஹ்ரீங்கார ஸுமனோ மாத்வை நமஃ.

மூன்றும் அத்தியாயம்.



## காயத்திரீகவசம்.



நாரதர் கூறுகின்றார்:— ஓ சுவாமிந்! சர்வஜகந்நாதரே! அறுபத்துநான்கு கலைகளும்வல்லவரே! யோகிகளுக்குள் சிரேஷ்டமானவரே! எனக்குச் சிலசந்தேகங்க ளிருக்கின்றன. அவை என்னவென்று தேவரீர் கேட்டருளவேண்டும். எந்தப்புண்ணியத்தினால் பாபத்தினின்றும் விடுபட்டு நான் பிரமசொரூபமாக எப்படியாவேனோ, என்தேகம் தேவதாரூபமாயும் மந்திரரூபமாயும் எப்படியாகுமோ, அந்தக்கர்மாவையும் விதிபூர்வமான நியாசம்ருஷி சந்தஸு தெய்வம் விதியோடுகூடிய தியானம் இவைகளை அறியாதிருக்கின்றேனுகலின் அவற்றைக்கேட்க இச்சிக்கின்றேன். (ரு)

நாராயணர் கூறுகின்றார் :—அதிபரமரகசியமான காயத்திரீ கவசமென ஒன்றிருக்கின்றது. அதனை ஒருவன் படனஞ்செய்தாலும் மனதில்சிந்தித்தாலும் சர்வபாபங்களினின்றும் விடுபட்டு சகலகாமங்களையும் அடைந்து தேவீசொருபமாகின்றான். காயத்

திரிகவசத்திற்கு பிரமவிஷ்ணு மஹேச்வரர்களே ருஷிகள், நான்குவேதங்களே சந்தஸ்ஸுகள், பிரமசொரூபமே தேவதை, பரமாளா காயத்திரி பீஜம், பர்க்கன் சக்தி, தியஃ கீலகம், மோக்ஷார்த்தமே விநியோஜநம். இந்த நியாசங்களைச்செய்தபின்னர் நான்குவர்னங்கள் ஹ்ருதயத்தினிடத்தும், மூன்றுவர்னங்கள் சிரத்தினிடத்தும், நான்குவர்னங்கள் சிகையினிடத்தும், மூன்றுவர்னங்கள் கவசமந்திரமாகத் தோள்களிடத்தும், நான்குவர்னங்கள் நேத்திரங்களிடத்தும், நான்குவர்னங்கள் அஸ்திரமந்திரமாகத் திக்பந்தனத்துக்குமாகக்கொண்டு நியாசஞ் செய்யும்படிச் சொல்லப்பட்டிருக்கின்றன. இனிச்சாதகனுக்கு அபீஷ்டத்தைக் கொடுக்கும் தியானஞ் சொல்லுகிறேன். முத்து பவளம் சுவர்னம் நீலம் வெண்மை இந்த நிறங்களோடுகூடிய முகமுடையவளாயும் மூன்று நேத்ர முடையவளாயும் சந்திரனோடுகூடிய ரத்னமகுட முடையவளாயும் தத்வார்த்தங்களுள்ள வர்னசொரூபிணியாயும் வரதம் அபயம் பாசம் அங்குசம் வெண்ணிறமுடையகபாலம் சங்கம் சக்கரம் இரண்டு தாமரை இவைகளைக் கையிற்றாங்கினவளாயுமுள்ள காயத்திரீ தேவியைப் பஜிக்கின்றேன்:

காயத்திரி கிழக்குதிக்கில் காக்க, சாவித்திரீ தெற்குதிக்கில் காக்க, ப்ரஹ்மசந்தி மேற்குதிக்கில்காக்க, சரஸ்வதீ உத்தரதிக்கில் காக்க, பாபஹாரிணியாயும் மேசம்ரக்ஷிணியாயும் ஜலசாயினியாயுமுள்ள பார்வதி அக்னிதிக்கில் காக்க, ராக்ஷசர்களைப் பயப்படுத்தும் யாதுதானி நைருதிதிக்கில் காக்க, பவமான விலாசிநீ வாயுதிக்கில்காக்க, ருத்ராணீ ஈசானதிக்கில்காக்க, பிரஹ்மாணீ எனது ஊர்த்துவபாகத்தைக்காக்க, வைஷ்ணவீ அதோபாகத்தைக்காக்க, இந்தப்ரகாரம் இந்தச்சத்திகள் பத்துத் திக்குகளிலுங்காக்க, புவனேச்வரீ சர்வாங்கத்தையுங்காக்க, தத்பதம் எனது பாதங்களைக்காக்க, சவிதுப்பதம் கணைக்கால்களைக்காக்க, வரேண்யம் இடையைக்காக்க, பர்க்கம் நாபியைக்காக்க, தேவஸ்யம் எனது ஹ்ருதயத்தைக்காக்க, தீமஹீ முகவாய்க்கட்டையைக்காக்க தியப்பதம் நேத்ரங்களைக்காக்க, யஃபதம் நெற்றியைக்காக்க, நப்பதம் சிரசைக்காக்க, பிரசோதயாத் சிகையைக்காக்க, தத்பதம் சிரசைக்காக்க, ஸகாரம் பாலத்தைக்காக்க, விஎன்னும் அக்ஷரம் நேத்திரங்களைக்காக்க, துகாரம் கபோலங்களைக்காக்க, வகாரம் நாசியைக்காக்க, ரகாரம் முகத்தைக்காக்க, நிகாரம் மேலுதட்டைக்

காக்க, யகாரம் கீழுதட்டைக்காக்க, ப (ஹ) காரம் வாயின்மத்தி யைக்காக்க, கோ (மோ) காரம் முகவாய்க்கட்டையைக்காக்க, தே (டீ) காரம் கண்டத்தைக்காக்க, வகாரம் தோள்களைக்காக்க, ஸ்யகாரம் வலதுகையைக்காக்க, தீகாரம் இடக்கையைக்காக்க, மகாரம் ஹ்ருதயத்தைக்காக்க, தி (யி) காரம் வயற்றைக்காக்க, தி (யி) காரம் நாபியைக்காக்க, யோகாரம் இடுப்பைக்காக்க, யோ காரம் குஹ்யத்தையும் நஃபதாக்ஷரம் தொடைகளைக்காக்க, மகா ரம் முழங்கால்களைக்காக்க, சோகாரம் கணுக்கால்களைக்காக்க, த (ஓ) காரம் புறங்கால்களைக்காக்க, யாகாரம் இரண்டு பாதங்களை யுங்காக்க, தகாரம் சர்வாங்கங்களைக்காக்க.

இத்திவ்யமானகவசம் நூறுவிதமான துன்பங்களைப் போக்க டிப்பதாயும் அறுபத்துநான்கு கலைஞானங்களைக் கொடுப்பதாயும் மோக்ஷகாரகமாயு மிருக்கிறது. இதனைப் படித்தாலும் கேட்டா லும் ஆயிரம் பசுக்களைத் தானஞ்செய்தபலனை யடைந்து சர்வபா பங்களினின்றும் விடுபட்டு பிரமசொரூபத்தை யடைகிறார்கள்.

* நாராயண ॥ அஸ்தியேகம் பரமம்குஹ்யம் காயத்ரீ கவசந்ததா ।
படநாத் தாரணாந் மர்த்ய சர்வபாபைஃ ப்ரமுச்யதே ॥ (ச)

ஸர்வாந் காமா நவாப்நோதி தேவீரூபஸ்ச ஜாயதே ।
காயத்ரீ கவசஸ் யாஸ்ய பிரஹ்மவிஷ்ணு மஹேஸ்வராஃ ॥ (ரு)

ருஷயோ ருக்யஜுஸ்ஸாமா தர்வச்சந்தாம்ஸி நாரத ।
பிரஹ்மரூபா தேவதோக்தா காயத்ரீ பரமாகளாஃ ॥ (சூ)

தத்பீஜம் பர்க்க யித்யேஷா சக்திருக்தா மநீஷிபிஃ ।
கீலகஞ் சதியஃப்ரோக்தம் மோக்ஷார்த்தே விநியோஜனம் ॥ (எ)

சதுர்ப்பிர் ஹ்ருதயம் ப்ரோக்தம் த்ரிபிர் வர்ணைஸ் ஸிரஸ்மதம் ।
சதுர்ப்பிஸ்யாச் சிகாபஸ்சாத் த்ரிபிஸ்து கவசம் ஸ்மிருதம் ॥ (அ)

சதுர்ப்பிர் நேத்ரமுத்திஷ்டம் சதுர்ப்பிஸ்யாத் ததஸ்ரகம் ।
அதத்தியானம் பிரவக்ஷ்யாமி ஸாதகா பிஷ்டதாயகம் ॥ (கூ)

முக்தா வித்ரும ஹேமநீல தவளச் சாயைர் முகைஸ்திரீக்ஷணைர் ।
யுக்தாமிந்து நிபத்த ரத்ன மகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம் ।

காயத்ரீம் வரதா பயாங்குச கசாஸ் சுப்ரங் கபாலங்குணம் ।
சங்கம் சக்ரமதாரவிந்த யுகளம் அஸ்தைர் வஹந்தீம் பஜே ॥ (க0)

காயத்ரீ பூர்வதஃபாது ஸாவித்ரீ பாதுதக்ஷிணே ।
ப்ரஹ்ம சந்தியாதுமே பஸ்சா துத்தராயாம் சரஸ்வதீ ॥ (கக)

பார்வதி மேதசம்ரக்ஷே பாவகீ ஜலசாயிநீ ।
யாது தாநீ திசம்ரக்ஷேத் யாதுதாந பயங்கரி ॥ (கஉ)

ஸாவமாநீ தசம்ரக்ஷேத் பவமான விலாசிநீ ।
திசம்ரௌத்ரீசமேபாது ருத்ராணீ ருத்ர ரூபிணீ ॥ (கங)

ஊர்த்வம் பிரஹ்மாணி மேரக்ஷ ததஸ்தாத் வைஷ்ணவீததா ।
ஏவங் தசதிசோ ரக்ஷேத் சர்வாங்கம் புவனேஶ்வரீ ॥ (கச)

தத்பதம் பாதுமே பாதௌ ஜங்கேமே சவிதுஃபதம் ।
வரேண்யம் கடிதேசேது நாபிம் பர்க்கஸ் ததைவச ॥ (கரு)

தேவஸ்ய மேதத்திருதயம் தீமஹீதிச கல்லயோஃ ।
தியஃபதஞ்ச மேநேத்ரே யஃபதம்மே லலாடகம் ॥ (கசு)

நஃபாது மேபதம்மூர்த்நீ சிகாயாம்மே ப்ரசோதயாத் ।
தத்பதம் பாதுமூர்த்தாநம் ஸகாரஃ பாதுபாலகம் ॥ (கஎ)

சக்ஷுஷீது விகாரார்ணோ துகாரஸ்து கபோலயோஃ ।
நாஸாபுடம் வகாரார்ணே ரகாரஸ்து முகேததா ॥ (கஅ)

நிகாரவூர்த்வ மோஷ்டந்து யகாரஸ் த்வதரோஷ்டகம் ।
அஸ்யமத்யே பகாரார்ணோ கோகாரஶ் சுபுகேததா ॥ (ககூ)

தேகாரஃ கண்டதேசேது வகாரஸ் கந்ததேசகம் ।
ஸ்யகாரோ தக்ஷிணம்ஹஸ்தம் தீகாரோ வாமஹஸ்தகம் ॥ (உ0)

மகாரோ ஹ்ருதயம் ரக்ஷேத் திகாரம் உதரேததா ।
திகாரோ நாபிதேசேது யோகாரஸ்து கடிந்ததஃ ॥ (உக)

குஹ்யம்ரக்ஷது யோகார ஊரூத் வந்நஃ பதாக்ஷரம் ।
மகாரோ ஜாநுநீரக்ஷேச் சோகாரோ ஜங்கதேசகம் ॥ (உஉ)

தகாரம் குல்பதேசேது யாகாரஃ பதயுக்மகம் ।
தகார வ்யஞ்சனஞ்சைவ சர்வாங்கேமே சதாவது ॥ (உங)

இதந்து கவசந்திவ்யம் பாதாசத விநாசநம் ।
சதுஷ்ஷ்டிகளாவித்யா தாயகம் மோக்ஷகாரகம் ॥ (உச)

முச்யதே சர்வபாபேப்யஃ பரம் ப்ரஹ்மாதி கச்சதி ।
படநாச் சிரவணாத் வாபி கோசகஸ்ர பலம்லபேத் ॥ (உரு)

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

ஹ்ரீங்கார தருமஞ்சர்யைநமஃ.

நான்காம் அத்தியாயம்.

# காயத்திரீ ஹ்ருதயம்.

நாரதர்கூறுகின்றார்:—பகவானே! தேவதேவேசரே! சிவர்களால் தோத்திரஞ்செய்யப்பட்டவரே! ஜகத்பிரபுவாகிய நாராயணரே! காயத்திரீமந்திரத்திற்குத் திவ்யசொரூபமாக விருக்கின்ற கவசம் தேவரீரால் கேட்கப்பெற்றேன். ஜபிப்பதனாலும் மனதிற்றரிப்பதனாலும் சகலவிதமான புண்ணியங்களும் வருகின்றனவோ அந்த ஸ்ரேஷ்டமாகிய காயத்திரீ ஹ்ருதயத்தை இப்போது நான் கேட்க இச்சிக்கிறேனென்றனர். நாராயணர் கூறுகின்றார்:—ஓ நாரதரே! நீவிரும்பியபடி அதர்வண வேதத்தில் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிற ரகசியத்திலும் அதிரகசியமாகிய தேவீஹ்ருதயத்தை நானிப்போது சொல்லுகிறேன். வேதமாதாவாயும் விராட்ரூபிணியாயும் மகாதேவியாயு மிருக்கின்ற காயத்திரியைத் தியானஞ்செய்து அந்தத்தேவியினுடைய அங்கங்களிற் சொல்லப்படுந் தேவதைகளைத் தியானிக்கவேண்டும். எவ்வாறெனின் சாதகன் பிண்டபிரமாண்டங்கள் அத்தேவியினிடத்தில் ஐக்கியமாயிருக்கின்றபடியால் தன் சரீத்தைத் தேவியினது நிஜசொரூபமாகத் தியானிக்கவேண்டியது. வேதவித்துக்கள் தன்னைத் தேவிசொரூபமாக நினைக்காதவன் தேவீ தியானத்துக்கு யோக்யனல்லனென்று சொல்லுகிறார்கள். ஆகையால் தன்தேகத்தில் இந்தத் தேவதைகளைப் பேதமின்றித் தியானிக்கவேண்டும். தியானித்தபின் தன்மயத்தனுதலைப் பிறகு சொல்லுகிறேன். இந்தக்காயத்திரீ ஹ்ருதயத்துக்கு நாராயணனாகிய நானேருஷி, காயத்திரியே சந்தஸு, தேவதை பரமேஸ்வரி, அங்கன்னியாஸம் முற்கூறியபடி. மாநுடசஞ் சாரமில்லாத விடத்தில் ஆசனத்தில் ஏகாக்கிர மனத்துடன் தியானிக்கவேண்டியது. அதன் பிறகு அர்த்தந் நியாசஞ் செய்யவேண்டும். எப்படியெனில் சிரசில் சுவர்க்கதேவதை, பல்வரிசையில் அஸ்வனிதேவதைகள், அதரத்தில் உபயசந்தி, முகத்தில் அக்னி, நாக்கில் சரஸ்வதி, கண்டத்தில் பிரகஸ்பதி, ஸ்தனத்தில் அஷ்டவசுக்கள், புஜத்தில் சப்தமருத்துக்கள், ஹ்ருதயத்தில்

மேகம், வயிற்றில் ஆகாயம், நாபியில் அந்தரிக்ஷம், இடையில் இந்திரன் அக்னி, புருஷ்டங்களில் விஞ்ஞானதனம் பிரஜாபதி தொடைகளில் கைலாயம் இமயம், முழங்காலில் விஸ்வதேவர்கள், கணுக்கால்களில் கவுசிகர், ஆண்குறியில் அயனம், பாதங்களில் பிருதிவி, விரல்களில் வனதேவதைகள், ரோமங்களில் ருஷிகள், நகங்களில் முகூர்த்தங்கள், அஸ்திகளில் கிருகங்கள், ரக்த மாம்சங்களில் ருதுக்கள் சம்வத்ஸரங்கள் நிமிஷங்கள் இராப்பகல் சந்திர சூரியர்கள். இவ்வண்ணமாக அர்த்த நியாசஞ்செய்து சிரேஷ்டமாயும் திவ்யமாயும் ஆயிரங் கண்ணுள்ளவளாயும் இருக்கின்ற அந்த காயத்திரி தேவியைச் சரணாக அடைகின்றேன். என்று சொல்லி "ஓம் தத்ஸவிது" என்னும் மந்திரங்களைச் சொல்லித் தியானித்தல் வேண்டும்.

இந்த காயத்திரி இருதயத்தை இந்த முறைப்படி எவன் காலையில் தியானிக்கின்றானோ அவன் ராத்திரியிற்செய்த பாவத்தினின்றும் விடுபடுகின்றான். எவன் மாலையில் தியானிக்கின்றானோ அவன் பகற்பொழுதிற்செய்த பாவத்தினின்றும் விடுபடுகின்றான். எவன் இரண்டுபொழுதினும் தியானிக்கின்றானோ அவன் பாவமில்லாதவனாகவே ஆகின்றான். இதுவேயுமன்றி அவன் சர்வ தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்தவனாகின்றான். சகல தேவதைகளாலுந் தெரியப்பட்டவனாகின்றான். சொல்லத்தகாத சொல்லைச் சொல்வதனாலும் உண்ணக்கூடாத பக்ஷ்ய போஜ்ய சோஷ்ய முதலியவற்றை உண்பதனாலும் அசாத்ய சாதனங்களைச் செய்வதனாலும் நூறாயிரம் துர்த்தானங்களை வாங்குவதனாலும் சர்வதானங்களை வாங்குவதனாலும் சமானமாக விருந்து உண்ணக்கூடாதவர்களோடிருந்து உண்பதனாலும் பிரமசரிய நிலையினின்றும் தவறுதலாலும் உண்டாகும் பாவங்களினின்றும் விடுபடுகின்றான். ஆயிரம் யாகஞ்செய்தால் எந்தப்பலனோ அந்தப் பலனையும் அறுபதினாயிரம் காயத்திரி ஜபஞ்செயதால் எந்தப்பலனோ அந்தப் பலனையும் அடைகிறான். இதனை எட்டுப் பிராம்ஹணர்கள் கிரஹிக்கும்படி யுபதேசித்தால் சித்தியுண்டாகும். ஆகையால் பிராஹ்மணன் பிராதக் காலத்தில் சுசியுடையவனாய் இதனைத் தியானிப்பானாயின் சர்வ பாவங்களினின்றும் விடுபட்டவனாய் பிரஹ்மலோகத்தில் பூஜிக்கப் படுகிறான் என்று நாராயணர் கூறினார்.

நான்காம் அத்யாய முற்றிற்று.

ஸகாராக்யைநமஃ.

ஐந்தாம் அத்தியாயம்.



# காயத்ரீதோத்திரம்.



நாரதர் நாராயணரைப்பார்த்து ஓ பக்தாநுக்கிரகம் புரிகின்றவரே! சகலமு முணர்ந்தவரே! தேவரீர் அடியேனுக்குப் பாபத்தைப் போக்கும் காயத்திரி ஹ்ருதயம் சொல்லியருளினீ ராகலான் காயத்திரீ தோத்திரத்தையும் எனக்குச் சொல்லவேண்டு மென்று கேட்க நாராயணர் கூறுகின்றார். ஆதிசக்தியாயும் ஜகன்மாதாவாயும் பக்தாநுக்கிரக காரணியாயும் சர்வ வியாபிநியாயும் அந்தமில்லாதவளாயும் திரிசந்தி சொரூபிணியாயு மிருக்கின்ற ஓ காயத்ரீ உனக்கு நமஸ்காரம் ஓ காயத்ரீ! நீதான் சந்தீ நீதான் காயத்திரீ நீதான் சாவித்திரீ நீதான் சரஸ்வதீ நீதான் பிராம்ஹீ நீதான் வைஷ்ணவீ நீதான் ரௌத்ரீ நீதான் ரக்தை நீதான் ஸ்வேதா நீதான் கறுப்பு. ஓ பகவதீ! நீயே பிராதக்காலத்தில் பாலா சொரூபிணியாயும் மத்யானகாலத்தில் யௌவன சொரூபிணியாயும் சாயங்காலத்தில் விருத்தசொரூபிணியாயு மிருக்கின்றாயென்று முநிவர்கள் எக்காலத்தும் சிந்திக்கின்றனர். அம்ஸவாகனுரூடையாயும் கருடாரூடையாயும் வ்ருஷபா ரூடையாயும் பூமியில் ருக்வேதத்தைத் தியானஞ் செய்கின்றவளாயும் தபஸ்விகளால் எந்தத்தேவி காணப்படுகின்றாளோ அந்தரிக்ஷத்தில் யஜுர் வேதத்தைப் படிக்கின்றவளாக எவள் பிரகாசிக்கின்றாளோ எங்கும் சாமத்தைக் கானஞ் செய்கின்றவளாக எவளிருக்கின்றாளோ அவள் பூமியில் சஞ்சாரஞ் செய்கின்றவளா யிருக்கின்றாளென்றும், நீயே ருத்ரலோகத்தை யடைந்திருக்கிறாய் நீயே விஷ்ணுலோகத்தில் நிவாசிநியா யிருக்கின்றாய் பிரமலோகத்தில் மநுஷ்யாளுக்கு அநுக்கிரக காரணியா யிருக்கின்றாய் சப்தருஷிகளுக்குப் பிரீதியை யுண்டாக்குகின்றாய் மாயா சொரூபிணியா யிருக்கின்றாய் அநேகவரங்களைக் கொடுக்கின்றவளா யிருக்கின்றாய் பார்வதி பரமேஸ்வரர்களது கரங்களின் வியர்வையினின்றும் நேத்திரங்களின் கண்ணீரினின்று உண்டானவளா யிருக்கின்றாய் யாவருக்கும் ஆனந்தத்தை யுண்டுசெய்கின்றவளா யிருக்கின்றாய் தசதுர்க்கா சொரூ

பிணியா யிருக்கின்றாயென்றும் கூறப்படுவதுமன்றி அடையத்தக்க வளாயும் வரத்தைக் கொடுக்கின்றவளாயும் சிரேஷ்டையாயும் உத்தம ஸ்திரீயாயும் குருத்வமுடையவளாயும் வராஹ சொரூபிணியாயும் சப்தவராஹியாயும் நீலகங்கையாயும் சந்தியையாயும் சர்வ போகமோக்ஷங்களைக் கொடுக்கின்றவளாயும் மத்யலோகத்தில் பாகீரதியாயும் பாதாளத்தில் போகவதியாயும் திரிலோகவாஹினியாயும் தேவிஸ்தானத்ரய நிவாசினியாயும் நீயே பூர்லோகத்தில் தாத்ரீ (சகலத்தையும் தாங்குகின்றவளாயும் சோகதாரணியாயும் புவலோகத்தில் வாயுசக்தியாயும் சுவர்லோகத்தில் தேஜஸூக்கு நிதியாயும் மகாலோகத்தில் மஹாசித்தியாயும் ஜனர்லோகத்தில் ஜநநயாயும் தபோலோகத்தில் தபஸ்விநியாயும் சத்தியலோகத்தில் சத்யவாக்காயும் விஷ்ணுலோகத்தில் கமலையாயும் பிரமலோகத்தில் காயத்திரியாயும் ருத்திரலோகத்தில் பரமசிவனது அர்த்தாசன வாசிநியாகிய கவுரியாயும், எனக்கும் மகத்துக்கும் பிரகிருதியாயும் சமானமான அவஸ்தா சொரூபிணியாயும் சபளப் பிரம்ஹசொரூபிணியாயும் பராபரையாயும் இச்சாசக்தி கிரியாசக்தி ஞானசக்தி என்னும் மூன்று சக்திகளாயும் இருக்கின்றாயென்றும் கங்கை யமுனை விபாசை சரஸ்வதி சரயு தேவிகா சிந்து நர்மதா ஐராவதி கோதாவரி சதத்துரு காவேரி தேவலோகதா கௌசிகி சந்திரபாகை விதஸ்தை சரஸ்வதி கண்டகீ தபநீ தோயதா வேத்ரவதி என்கிற தீர்த்தசொரூபிணியாயும் சரீரத்திலிருக்கிற இடை பிங்கலை சுஷும்நை காந்தாரி அஸ்தஜிஹ்வை பூஷை அலம்பூஷை குஹூஹூ சங்கினி பிராணவாஹினி என்று சொல்லப்பட்ட நாடிகளாயும் இருக்கின்றாயென்றும், ஹ்ருதய கமலத்தில் பிராண சக்தியாயும் கண்டத்தில் ஸ்வப்நநாயகியாயும் தாலுவில் சதாதாரையாயும் பிந்துஸ்தானத்தில் பிந்துமாலினியாயும் மூலத்தில் குண்டலினிசத்தியாயும் கேசமூலத்தில் வியாபிநியாயும் சிகைமத்தியில் வியாபிநியாயும் சிகைநுனியில் மநோன்மணியாயும் இருக்கின்றாயென்றும் சொல்லப்பட் டிருக்கின்றது. இன்னும் விரிவாய்ச் சொல்வதினால் பிரயோஜன மென்னை. மூன்றுலகத்திலும் எது எது விருக்கின்றதோ அவையெல்லாம் நீயேதான். ஓ மஹாதேவி! ஓ ப்ரியே! ஓ சந்திசொரூபிணீ! உன்னை நமஸ்கரிக்கிறேனென்று எவன் சந்தியாகாலத்தில் பக்திசிரத்தையோடு பாராயணஞ் செய்கின்றானோ அவனுக்கு அளவில்லாத புண்ணியத்தைக் கொடுக்

கும். மஹாபாபத்தைப்போக்கும். மஹாசித்தியைக் கொடுக்கும். புத்திரஹீனனுக்குப் புத்திரனையும் தனஹீனனுக்குத் தனத்தையும் சகலதீர்த்த ஸ்நானபலத்தையும் தவம் யக்ஞம் யாகம் முதலிய பலன்களையும் வேண்டினவர்க்கு அவ்வப்பலன்களையுங் கொடுக்கும். போகமோக்ஷங்களை வேண்டினவர்க்கு இம்மையில் போகங்களையும் அந்தியத்தில் மோக்ஷத்தையும் அடையும்படிச் செய்யும். இத்துதியை எந்தெந்த ஸ்நாநகாலங்களில் எவன் படித்து எந்த சலத்தில் ஸ்நானஞ்செய்தபோதிலும் சந்தியா காலத்தில் ஸ்நானஞ்செய்தபலனை யடைவன். இதிற் சந்தேகங்கிடையாது. ஓ நாரதரே! இது அமிர்தவாக்கியமாகும். இது சத்தியம் சத்தியம். (சுலோகம் உகூ.)

ஐந்தாம் அத்யாயம் முற்றிற்று.

---

ஸமரஸாயைநமஃ

ஆறம் அத்தியாயம்.



## காயத்திரி சஹஸ்ரநாமம்.



நாரதர் நாராயணரைப்பார்த்து ஓ பகவானே! சகலமுமுணர்ந்தவரே! சகலசாஸ்திரங்களிலும் வல்லவரே! நாராயணரே! தேவரீரால் சுருதி ஸ்மிருதிபுராணங்களின் ரகசியங்களைக் கேட்கப்பெற்றேன். ஓ தேவ! எந்த வித்யாபிரவர்த்தகத்தால் பாவநாசமுண்டாகுமோ எதனால் பிரஹ்மவிக்யான முண்டாகுமோ எதனால் மோக்ஷசாதன முண்டாகுமோ எதனால் பிராமணர்களுக்கு நல்ல கதியுண்டாகுமோ எதனால் மிருத்யுநாசமுண்டாகுமோ எதனால் இகலோக பரலோக பலனுண்டாகுமோ அதை ஆதிமுதலாகக் குறைவில்லாமற் சொல்லவேண்டும். ஓ பத்மலோசனரே! என்று பிரார்த்தித்தனர். ஸ்ரீ நாராயணர் கூறுகின்றார். பிராக்ஞராகியும் தோஷமில்லாதவராகியு மிருக்கின்ற ஓ மஹாசாதுவாகிய நாரதரே! நீர்கேட்டதாகிய ஒவ்வொன்றும் நல்லகேள்விகளாகலின் பாவநாசனமாயும் திவ்யமாயும் சுபமாயு மிருக்கும் காயத்திரி நாமங்கள் ஆயிரத்தெட்டுள்ளன. அவை பகவானால் சிருட்டியின் ஆரம்பத்தில் சொல்லப்பட்டன. அவைதான் அந்தணர்கட்கு அக்கணமே பாவநாசத்தைச் செய்வதும் மோக்ஷசாதன

த்தைக் கூட்டுவதும் பிரஹ்மஞானத்தை விளைவிப்பதும் மிருத்யு பயத்தைப்போக்கி நல்லகதியை யுண்டாக்குவதுமாம்; அவற்றைப் பிரயத்தனத்துடன் உமக்குச் சொல்லுகிறேன் கேளும். அந்த சகஸ்ர நாமத்துக்கு ருஷி பிரஹ்மா அநுஷ்டுப்பு சந்தஸு காயத்திரிதேவதை பீஜம் ஹல் ஸ்வரம் சத்தி அங்கன்னியாச கரன்னியாசம் மாத்ருகாக்ஷரங்கள் என்னும் இவைகள் உள்ளன. இனிச் சாதகனுக்கு இதங்கொடுக்கும் பொருட்டு தியானஞ்சொல்லுகிறேன்:— சிகப்பு வெளுப்பு கறுப்பு பொன்தவளம் ஆகிய நிறத்தோடும் திரிநேத்திரத்தோடும் புதிய சிகப்பு புஷ்பமாலையோடும் நவரத்நமணிகளின் பிரகாசத்தோடும் விளங்கும் குமாரியாயும் காயத்திரியாயும் பத்மாசனையாயும் கரதலத்தில் பிரகாசிக்கும் தாமரைபோன்ற பாத்ரமுடையவளாயும் பத்மாக்ஷியாயும் வரத்தைக் கொடுப்பவளாயும் அன்னவாகன முடையவளாயு மிருக்கின்ற தேவியைத் தியானஞ் செய்கின்றேன் என்று தியானித்தல் வேண்டும்.

அசிந்திய லக்ஷணயைநமஃ
அவ்யக்தாயைநமஃ
அர்த்தமாத்ருமஹேஶ்வர்யைநமஃ
அமிர்தார்ணவமத்யஸ்தாயைநமஃ
அஜிதாயைநமஃ
அபராஜிதாயைநமஃ
அணிமாதி குணதாராயைநமஃ
அர்க்கமண்டலசம்ஸ்திதாயைநமஃ
அஜரா ஜாயைநமஃ
அபராயைநமஃ (க0)
தர்மாயைநமஃ
அக்ஷசூத்ர தராயைநமஃ
தராயைநமஃ
அகாராதி க்ஷகாராந்தாயைநமஃ
அரிஷட்வர்க்க பேதின்யைநமஃ
அஞ்சனத்ரி ப்ரதீகாசாயைநமஃ
அஞ்சநாத்ரிநிவாஸிந்யைநமஃ
அதித்யைநமஃ
அஜபாயைநமஃ
வித்யாயைநமஃ (உ0)
அரவிந்த நிபேக்ஷணயைநமஃ
அந்தர் பஹிர் ஸ்திதாயைநமஃ
அவித்யா த்வம்ஸிந்யைநமஃ
அந்தராத்மிகாயைநமஃ
அஜாயைநமஃ
அஜமுகா வாஸாயைநமஃ
அரவிந்த நிபாநநாயைநமஃ
அர்த்த மாத்ராயைநமஃ
அர்த்த தானக்ஞாயைநமஃ
அரிமண்டல மர்த்திந்யை (ந0)
அசுரக்ந்யைநமஃ
அமாவாசியைநமஃ
அலக்ஷ மிக்ந்யைநமஃ
அந்தியஜார்ச்சிதாயைநமஃ
ஆதிலக்ஷ்மியைநமஃ
ஆதிசக்தியைநமஃ
ஆக்ருத்தியைநமஃ
ஆயதா நநாயைநமஃ
ஆதித்ய பதசாராயைநமஃ
ஆதித்ய பரிஸேவிதாயை (ச0)
ஆசார்யாயைநமஃ
ஆவர்த்தநாயைநமஃ
ஆசாராயைநமஃ
ஆதிமூர்த்தி நிவாசிந்யைநமஃ

ஆக்ரேயைநம:
ஆமர்யைநம:
ஆத்யாயைநம:
ஆராத்யாயைநம:
ஆசனஸ்திதாயைநம:
ஆதார நிலயாயைநம: (ரு0)
ஆதாராயைநம:
ஆகாசாந்த நிவாஸிந்யைநம:
ஆத்யாக்ஷ சமாயுக்தாயைநம:
ஆந்தராகாசரூபிண்யைநம:
ஆதித்யமண்டல கதாயைநம:
ஆந்தரத்வாந்த நாஸிந்யைநம:
இந்திராயைநம:
இஷ்டதாயைநம:
இஷ்டாயைநம:
இந்தீவரநிபேக்ஷணுயைநம: (சூ0)
இராவத்யைநம:
இந்திரபதாயைநம:
இந்திராண்யைநம:
இந்திரரூபிண்யைநம:
இக்ஷுகோதண்டசம்யுக்தாயை
இக்ஷுசந்தானகாரிண்யைநம:
இந்திரநீல சமாகாராயைநம:
இடாபிங்கள ரூபிண்யைநம:
இந்திராக்ஷ்யைநம:
ஈச்வரீதேவ்யைநம:. (எ0)
ஈஹாத்ரய விவர்ஜிதாயைநம:
உமாயைநம:
உஷாயைநம:
உடுநிபாயைநம:
உர்வாரூக பலானனுயைநம:
உடுப்ரபாயைநம:
உடுமத்யைநம:
உடுபாயைநம:
உடுமத்ய காயைநம:
ஊர்த்வாயைநம: (அ0)
ஊர்த்வ கேப்யைநம:
ஊர்த்வாதோகதி பேதின்யைநம:
ஊர்த்வபாஹு ப்ரியாயைநம:
ஊர்மிமாலாவாக்கிரந்ததாயிந்யை
ருதாயைநம:
ருஷயேநம:
ருதுமதீயைநம:
ருஷிதேவ நமஸ்கிருதாயைநம:
ருக்வேதாயைநம:
ருண ஹர்த்ரியைநம: (கூ0)
ருஷிமண்டலசாரிண்யைநம:
ருத்திதாயைநம:
ருஜுமார்க்க ஸ்தாயைநம:
ருஜுதர்மாயைநம:
ருதுப்ரதாயைநம:
ருக்வேதநிலயாயைநம:
ருஜ்வியைநம:
லுப்ததர்ம ப்ரவர்த்தின்யைநம:
லூதாரிவரஸம்பூதாயைநம:
லூதாதிவிஷஹாரிண்யை (க00)
ஏகாக்ஷராயைநம:
ஏகமாத்ராயைநம:
ஏகாயைநம:
ஏகைகநிஷ்டிதாயைநம:
ஐந்திர்யைநம:
ஐராவதா ரூடாயைநம:
ஐஹிகாமுஷ்மிக ப்ரதாயைநம:
ஓங்காராயைநம:
ஓஷத்யைநம:
ஓதாயைநம: (கக0)
ஓதப்ரோத நிவாஸிந்யைநம:
ஔர்வாயைநம:
ஔஷத ஸம்பந்நாயைநம:
ஔபாஸந பலப்ரதாயைநம:
அண்டமத்யஸ்திதாதேவ்யைந [ம:
அரீகாரமநுரூபிண்யைநம:
காத்யாயிந்யைநம:
காளராத்ரைநம:
காமாக்ஷியைநம:
காமசுந்தர்யைநம: (கஉ0)
கமலாயைநம:
காமிந்யைநம:

காந்தாயைநமஃ
காமதாயைநமஃ
கலகண்டிந்யைநமஃ
கரிகும்ப ஸ்தனபராயைநமஃ
கரவீரசுவாசிந்யைநமஃ
கல்யாண்யைநமஃ
குண்டலவத்யைநமஃ
குருக்ஷேத்திர நிவாஸிந்யைநமஃ
குருவிந்த தளாகாராயைநமஃ
குண்டல்யைநமஃ
குமுதா லயாயைநமஃ
காளஜிஹ்வாயைநமஃ
கராலாஸ்யாயைநமஃ
காளிகாயைநமஃ
காலரூபிண்யைநமஃ
கமநீய குணாயைநமஃ
காந்தியைநமஃ
கலாதராயைநமஃ (கசo)
குமுத்வத்யைநமஃ
கௌசிக்யைநமஃ
கமலா காராயைநமஃ
காமசார பிரபஞ்சிந்யைநமஃ
கௌமார்யைநமஃ
கருணா பாங்கியைநமஃ
ககுபந்தாயைநமஃ
கரிப்ரியாயைநமஃ
கேசர்யைநமஃ
கேசவநுதாயைநமஃ (கருo)
கதம்பகுசும ப்ரியாயைநமஃ
காளிந்தியைநமஃ
காளிகாயைநமஃ
காஞ்சியைநமஃ
கலஸோத்பவஸம்ஸ்துதாயைநமஃ
காமமாதாயைநமஃ
க்ரதுமத்யைநமஃ
காமரூபாயைநமஃ
க்ருபாவத்யைநமஃ
குமார்யைநமஃ (கசூo)
குண்டநிலயாயைநமஃ
கிராத்யைநமஃ
கீரவாஹநாயைநமஃ
கைகேயைநமஃ
கோகிலா லாபாயைநமஃ
கேதகி குஸுமப்ரியாயைநமஃ
கமண்டலு தராயைநமஃ
காள்யைநமஃ
கர்மநிர்மூல காரிண்யைநமஃ
கலஹம்ஸ கத்யைநமஃ (களo)
கக்ஷாகிருதகௌதுகமங்களாயை
கஸ்தூரிதிலகாயைநமஃ
கம்ராயைநமஃ
கரீந்திரகமனாயைநமஃ
குஹ்வைநமஃ
கர்ப்பூர லேபனாயைநமஃ
கிருஷ்ணாயைநமஃ
கபிலாயைநமஃ
குஹராச்ரயாயைநமஃ
கூடஸ்தாயைநமஃ (கஅo)
குதராயைநமஃ
கம்ராயைநமஃ
குக்ஷிஸ்தாகிலவிஷ்டபாயைநமஃ
கட்கசேட கராயைநமஃ
கர்வாயைநமஃ
கேசர்யைநமஃ
ககவாஹனாயைநமஃ
கட்வாங்க தாரிண்யைநமஃ
க்யாதாயைநமஃ
ககராஜோ பரிஸ்திதாயை
கலக்நீயைநமஃ
கண்டித ஜராயைநமஃ
கடாக்யான ப்ரதாயிந்யைநமஃ
கண்டேந்து திலகாயைநமஃ
கங்காயைநமஃ
கணேசகுஹ பூஜிதாயைநமஃ
காயத்ரீயைநமஃ
கோமத்யைநமஃ
கீதாயைநமஃ
காந்தார்யைநமஃ (உoo)
கான லோலுபாயைநமஃ
கௌதம்யைநமஃ

காமிந்யைநம:
காதாயைநம:
கந்தர்வாப்ஸரஸேவிதாயை
கோவிந்தசரணக்ராந்தாயைநம:
குணத்ரயவிபாவிதாயைநம:
கந்தர்வைநம:
கஹ்வர்யைநம:
கோத்ராயைநம: (உகo)
கிரீசாயைநம:
ககனயைநம:
கம்யைநம:
குஹாவாஸாயைநம:
குணவத்யைநம:
குருபாபப்ரணாசிந்யைநம:
குர்வியைநம:
குணவத்யைநம:
குஹ்யைநம:
கோப்தவ்யாயைநம: (உஉo)
குணதாயிந்யைநம:
கிரிஜாயைநம:
குஹ்யமாதாங்கீநம:
கருடத்வஜவல்லபாயைநம:
கர்வாபஹாரிண்யைநம:
கோதாயைநம:
கோகுலஸ்தாயைநம:
கதாதராயைநம:
கோகர்ணநிலயாசக்தாயைநம:
குஹ்யமண்டலவர்த்திந்யை உகூo
தர்மதாயைநம:
கந்தாயைநம:
கண்டாயைநம:
கோரதானவ மர்த்திந்யைநம:
க்ருணிமந்திர மயைநம:
கோஷாயைநம:
கனஸம்பத்தி தாயிந்யைநம:
கண்டாரவ ப்ரியாயைநம:
க்ராணயைநம:
க்ருணிசந்துஷ்டிகாரிண்யை உசுo
கோரிமண்டலாயைநம:
கூர்ணயைநம:
க்ருதாயைநம:
கநவேகின்யைநம:
ஜ்ஞானதாதுமயீயைநம:
சர்ச்சாயைநம:
சர்ச்சிதாயைநம:
சாருஹாஸிந்யைநம:
சடுலாயைநம:
சண்டிகாயைநம: (உருo)
சித்ராயைநம:
சித்ரமால்யவிபூஷிதாயைநம:
சதுர்ப்புஜாயைநம:
சாருதந்தாயைநம:
சாதுர்யைநம:
சரிதப்ரதாயைநம:
சூலிகாயைநம:
சித்ரவஸ்திராந்தாயைநம:
சந்திரம: கர்நகுண்டலாயைந
சந்திரஹாஸாயைநம: (உசுo)
சாருதாத்ரியைநம:
சகோர்யைநம:
சந்திரஹாஸிந்யைநம:
சந்திரிகாயைநம:
சந்திரதாத்ரியைநம:
சௌர்யைநம:
சோராயைநம:
சண்டிகாயைநம:
சஞ்சத் வாக்வாதிந்யைநம:
சந்திரசூடாயைநம: (உஎo)
சோரவிலாசிந்யைநம:
சாருசந்தனலிப்தாங்யைநம:
சஞ்சத்சாமரவீஜிதாயைநம:
சாருமத்யாயைநம:
சாருகத்யைநம:
சந்திலாயைநம:
சந்திரரூபிண்யைநம:
சாருஹோமப்ரியாயைநம:
சார்வா சரிதாயைநம:
சக்ரபாகுகாயைநம: (உஅo)
சந்திரமண்டல மத்யஸ்தாயை
சந்திரமண்டலதர்ப்பணயைநம:

சக்ரவாகஸ்தந்யைநம:
சேஷ்டாயைநம:
சித்ராயைநம:
சாருவிலாஸிந்யைநம:
சித்ஸ்வரூபாயைநம:
சந்திரவத்யைநம:
சந்திரமாயைநம:
சந்தனப்ரியாயைநம: (உகூ0)
சோதயித்ரியைநம:
சிரப்ரக்ஞாயைநம:
சாதகாயைநம:
சாருஹேதுக்யைநம:
சத்ரயாதாயைநம:
சத்ரதராயைநம:
சாயாயைநம:
சந்த:பரிச்சதாயைநம:
சாயாதேவ்யைநம:
சித்ரநிகாயைநம: (ந00)
சந்நேந்திரியவிஸர்ப்பிண்யைநம:
சந்தோநுஷ்டுப்ரதிஷ்டாந்தாயை
சித்ரோபத்ரவபேதின்யைநம:
சேதாயைநம:
சத்ரேஸ்வர்யைநம:
சிந்நாயைநம:
சூரிகாயைநம:
சேதனப்ரியாயைநம:
ஜநந்யைநம:
ஜந்மரஹிதாயைநம: (நக0)
ஜாதவேதாயைநம:
ஜகந்மயைநம:
ஜாந்நவ்யைநம:
ஜடிலாயைநம:
ஜேத்ரைநம:
ஜராமரணவர்ஜிதாயைநம:
ஜம்புத்வீபவத்யைநம:
ஜ்வாலாயைநம:
ஜயந்த்யைநம:
ஜலசாலிந்யைநம: (நஉ0)
ஜிதேந்திரியாயைநம:
ஜிதக்ரோதாயைநம:
ஜிதாமித்ராயைநம:
ஜகத்ப்ரியாயைநம:
ஜாதரூபமயைநம:
ஜிஹ்வாயைநம:
ஜானக்யைநம:
ஜகத்யைநம:
ஜராயைநம:
ஜநித்ரைநம: (நந0)
ஜன்ஹுதநயாயைநம:
ஜகத்ரயஹிதைஷிண்யைநம:
ஜ்வாலாமுக்யைநம:
ஜபவத்யைநம:
ஜ்வரக்நியைநம:
ஜிதவிஷ்டபாயைநம:
ஜிதக்ராந்தமயைநம:
ஜ்வாலாயைநம:
ஜாக்ரத்யைநம:
ஜ்வரதேவதாயைநம: (நச0)
ஜ்வலந்தியைநம:
ஜலதாயைநம:
ஜ்யேஷ்டாயைநம:
ஜாகோஷாஸ்போடதிங்முக்யை
ஜம்பிந்யைநம:
ஜ்ரும்பணாயைநம:
ஜ்ரும்பாயைநம:
ஜ்வலந்மாணிக்ககுண்டலாயை
ஜிஞ்சிகாயைநம:
ஜணநிர்க்கோஷாயைந: (நரு0)
ஜஞ்சாமாருதவேகின்யைநம:
ஜல்லகீவாத்யகுசலாயைநம:
ஞரூபாயைநம:
ஞபுஜாஸ்மிருதாயைநம:
டங்கபாணசமாயுத்தாயைநம:
டங்கின்யைநம:
டங்கபேதின்யைநம:
டங்கீகணக்ருதாகோஷாயைநம:
டங்கநீயமஹோரஸாயைநம:
டங்காரகாரணீதேவ்யைநம:
டடசப்தநிநாதிந்யைநம:

டாமர்யைநமஃ
டாகின்யைநமஃ
டிம்பாயைநமஃ
டுண்டுமாரைகநிர்ஜிதாயை
டாமரீதந்திரமார்க்கஸ்தாயை
டமட்டமருநாதிந்யைநமஃ
டிண்டீரவஸஹாயைநமஃ
டிம்பலஸத்க்கிரீடாபராயணாயை
துண்டிவிக்நேசஜநந்யைநமஃ
டக்காஹஸ்தாயைநமஃ
டிலிவ்ரஜாயை
நித்யக்ஞாநாயைநமஃ
நிருபமாயைநமஃ
நிர்க்குணாயைநமஃ
நர்மதாநத்யைநமஃ
திரிகுணாயைநமஃ
திரிபதாயைநமஃ
தந்திரியைநமஃ
துளஸ்யைநமஃ (௩அ0)
தருணாயைநமஃ
தருவேநமஃ
திரிவிக்ரமபதாக்ராந்தாயைநமஃ
துரீயபதகாமிந்யைநமஃ
தருணாதித்யசங்காசாயைநமஃ
தாமஸ்யைநமஃ
துஹிநாயைநமஃ
துராயைநமஃ
திரிகாலக்யானசம்பந்நாயைநமஃ
த்ரிவள்யைநமஃ (௩௯0)
திரிலோசனாயைநமஃ
த்ரிசக்தியைநமஃ
த்ரிபுராயைநமஃ
துங்காயைநமஃ
துரங்கவதநாயைநமஃ
திமிங்கிலகிலாயைநமஃ
தீவ்ராயைநமஃ
திரிஸ்ரோதாயைநமஃ
தாமஸாதிந்யைநமஃ
தந்திரமந்திரவிசேஷக்ஞாயை
தநுமத்யாயைநமஃ
த்ரிபிஷ்டபாயைநமஃ
த்ரிசந்தியாயைநமஃ
த்ரிஸ்தந்யைநமஃ
தோஷாசம்ஸ்தாயைநமஃ
தாலப்ரதாபிந்யைநமஃ
தாடங்கிந்யைநமஃ
துஷாராபாயைநமஃ
துஹிநாசலவாஸிந்யைநமஃ
தந்துஜாலசமாயுக்தாயைநமஃ
தராஹாராவலிப்ரியாயைநமஃ
திலஹோமப்ரியாயைநமஃ
தீர்த்தாயைநமஃ
தமாலகுஸுமாக்ருத்யைநமஃ
தாரகாயைநமஃ
த்ரியுதாயைநமஃ
தன்வியைநமஃ
த்ரிசங்குபரிவாரிதாயைநமஃ
தலோதர்யைநமஃ
திலோபாஷாயைநமஃ (௪௨0)
தாடங்கப்ரியவாதிந்யைநமஃ
த்ரிஜடாயைநமஃ
தித்தர்யைநமஃ
திரிஷ்ணாயைநமஃ
த்ரிவிதாயைநமஃ
தருணாக்ருத்யைநமஃ
தப்தகாஞ்சனசங்காசாயைநமஃ
தப்தகாஞ்சனபூஷணாயைநமஃ
த்ரியம்பிகாயைநமஃ
திரிவர்க்காயைநமஃ (௪௩0)
த்ரிகாலக்யானதாயிந்யைநமஃ
தர்ப்பணாயைநமஃ
த்ருப்திதாயைநமஃ
த்ருப்தாயைநமஃ
தாமஸ்யைநமஃ
தும்புருஸ்துதாயைநமஃ
தார்க்ஷியஸ்தாயைநமஃ
த்ரிகுணாகாராயைநமஃ
த்ரிபங்கியைநமஃ
தநுவல்லர்யைநமஃ (௪௪0)

தாத்கார்யைநமஃ
தாரவாயைநமஃ
தாந்தாயைநமஃ
தோஹிந்யைநமஃ
தீநவத்ஸலாயைநமஃ
தாநவாந்தகரீயைநமஃ
துர்க்காயைநமஃ
துர்க்காசுரநிபர்ஹிண்யைநமஃ
தேவரீத்யைநமஃ
திவாயைநமஃ (சரு௦)
ராத்ரியைநமஃ
த்ரௌபத்யைநமஃ
துந்துபிஸ்வனாயைநமஃ
தேவயாந்யைநமஃ
துராவாஸாயைநமஃ
தாரித்ரியபேதிந்யைநமஃ
தாமோதரப்ரியாயைநமஃ
தீப்தாயைநமஃ
திக்வாஸாயைநமஃ
திக்விமோஹிந்யைநமஃ (சசு௦)
தண்டகாரண்யநிலயாயைநமஃ
தண்டிந்யைநமஃ
தேவபூஜிதாயைநமஃ
தேவவந்தியாயைநமஃ
திவிஷடாயைநமஃ
த்வேஷிண்யைநமஃ
தானவாகிருத்யைநமஃ
தீனநாதஸ்துத்யாயைநமஃ
தீக்ஷாயைநமஃ
தைவதாயைநமஃ (சஎ௦)
தீஸ்ரூபிண்யைநமஃ
தாத்ரியைநமஃ
தநுர்த்தராயைநமஃ
தேந்வைநமஃ
தாரிண்யைநமஃ
தர்மசாரிண்யைநமஃ
துரந்தராயைநமஃ
தராயைநமஃ
தாராயைநமஃ
தனதாயைநமஃ (சஅ௦)
தான்யதோஹின்யைநமஃ
தர்மசீலாயைநமஃ
தநாத்யக்ஷாயைநமஃ
தநுர்வேதவிசாரதாயைநமஃ
த்ருத்யைநமஃ
தாந்யாயைநமஃ
த்ருதபதாயைநமஃ
தர்மராஜப்ரியாயைநமஃ
த்ருவாயைநமஃ
தூமாவத்யைநமஃ (சகூ௦)
தூமகேஶ்யைநமஃ
தர்மசாஸ்திரப்ரகாசிந்யைநமஃ
நந்தாயைநமஃ
நந்தப்ரியாயைநமஃ
நித்ராயைநமஃ
ந்ருமதாயைநமஃ
நந்தனாத்மிகாயைநமஃ
நர்மதாயைநமஃ
நளின்யைநமஃ
நீலாயைநமஃ (ரு௦௦)
நீலகண்டசமாச்ரயாயைநமஃ
நாராயணப்ரியாயைநமஃ
நித்யாயைநமஃ
நிர்மலாயைநமஃ
நிர்க்குணாயைநமஃ
நிதியைநமஃ
நிராதாராயைநமஃ
நிருபமாயைநமஃ
நித்யசுத்தாயைநமஃ
நிரஞ்சனாயைநமஃ (ருக௦)
நாதபிந்துகளாதீதாயைநமஃ
நாதபிந்துகளாத்மிகாயைநமஃ
ந்ருசிம்ஹிந்யைநமஃ
நகதராயைநமஃ
ந்ருபநாகவிபூஷிதாயைநமஃ
நரகக்லேசசமன்யைநமஃ
நாராயணபதோத்பவாயைநமஃ
நிரவத்யாயைநமஃ
நிராகாராயைநமஃ
நாரதப்ரியகாரிண்யைநமஃ

நாஞ்ஜ்யோதிசமாக்யாதாயைநஃ
நிதிதாயைநமஃ
நிர்மலாத்மிகாயைநமஃ
நவசூத்ரதாராயைநமஃ
நீதியைநமஃ
நிருபத்ரவகாரிண்யைநமஃ
நந்தஜாயைநமஃ
நவரத்நாட்யாயைநமஃ
நைமிசாரண்யவாசிந்யைநமஃ
நவநீதப்ரியாயைநமஃ (௫௩0)
நாரீயைநமஃ
நீலஜீமூதநிஸ்வனாயைநமஃ
நிமேஷிண்யைநமஃ
நதீரூபாயைநமஃ
நீலக்ரீவாயைநமஃ
நிசீஸ்வர்யைநமஃ
நாமாவள்யைநமஃ
நிசும்பக்நீயைநமஃ
நாகலோகநிவாஸிந்யைநமஃ
நவஜாம்பூனதபிரக்யாயைநமஃ
நாகலோகாதிதெய்வதாயைநமஃ
நூபுராக்ராந்தசரணாயைநமஃ
நரசித்தப்ரமோதிந்யைநமஃ
நிமக்நாரக்தநயனாயைநமஃ
நிர்காதசமநிஸ்வனாயைநமஃ
நந்தனோத்யானநிலயாயைநமஃ
நிர்வ்யூஹோபசாரிண்யைநமஃ
பார்வத்யைநமஃ
பரமோதாராயைநமஃ
பரப்பிரஹ்மாத்மிகாயைநமஃ
பராயைநமஃ
பஞ்சகோசவிநிர்முக்தாயைநமஃ
பஞ்சபாதகநாஸிந்யைநமஃ
பரசித்தவிதானஜ்ஞாயைநமஃ
பஞ்சிகாயைநமஃ
பஞ்சரூபிண்யைநமஃ
பூர்ணிமாயைநமஃ
பரமாயைநமஃ
ப்ரீத்யைநமஃ
பரதேஜப்ரகாசிந்யைநமஃ (௫௬0)

புராண்யைநமஃ
பௌருஷ்யைநமஃ
புண்யாயைநமஃ
புண்டரீகநிபேக்ஷணாயைநமஃ
பாதாளதலநிர்மக்னாயைநமஃ
ப்ரீதாயைநமஃ
ப்ரீதிவிவர்த்திந்யைநமஃ
பாவந்யைநமஃ
பாதசஹிதாயைநமஃ
பேசலாயைநமஃ (௫௭0)
பவநாசிந்யைநமஃ
ப்ரஜாபத்யைநமஃ
பரிஸ்ராந்தாயைநமஃ
பர்வதஸ்தனமண்டலாயைநமஃ
பத்மப்ரியாயைநமஃ
பத்மசம்ஸ்தாயைநமஃ
பத்மாக்ஷ்யைநமஃ
பத்மசம்பவாயைநமஃ
பத்மபத்ராயைநமஃ
பத்மபதாயைநமஃ (௫௮0)
பத்மிந்யைநமஃ
ப்ரியபாஷிண்யைநமஃ
பசுபாசவிநிர்முக்தாயைநமஃ
புரந்திரீநமஃ
புரவாஸிந்யைநமஃ
புஷ்கலாயைநமஃ
புருஷாயைநமஃ
பர்வாயைநமஃ
பாரிஜாத சுமப்ரியாயைநமஃ
பதிவ்ரதாயைநமஃ (௫௯0)
பவித்ராங்கீநமஃ
புஷ்பஹாஸபராயணாயைநமஃ
ப்ரக்ஞாவதீசுதாயைநமஃ
பௌத்ரியைநமஃ
புத்ரபூஜ்யாயைநமஃ
பயஸ்விந்யைநமஃ
பட்டிபாசதராயைநமஃ
பங்தியைநமஃ
பிதுர்லோகப்ரதாயிந்யைநமஃ
புராண்யைநமஃ (௬00)

புண்யசீலாயைநம:
ப்ரணதார்த்திவிநாஶிந்யைநம:
ப்ரத்யும்நஜநந்யைநம:
புஷ்டாயைநம:
பிதாமஹபரிக்ருஹாயைநம:
புண்டரீகபுராணவாஸாயைநம:
புண்டரீகசமானனாயைநம:
ப்ருதுஜங்காயைநம:
ப்ருதுபுஜாயைநம:
ப்ருதுபாதாயைநம: (சுக0)
ப்ருதூதரீயைநம:
ப்ரவாளசோபாயைநம:
பிங்காக்ஷ்யைநம:
பீதவாஸாயைநம:
ப்ரசாபலாயைநம:
ப்ரஸவாயைநம:
புஷ்டிதாயைநம:
புண்யாயைநம:
ப்ரதிஷ்டாயைநம:
ப்ரணவாகத்யைநம: (சுஉ0)
பஞ்சவர்ணாயைநம:
பஞ்சவாண்யைநம:
பஞ்சிகாயைநம:
பஞ்சரஸ்திதாயைநம:
பரமாயாயைநம:
பரஞ்சோதிஷேநம:
பரப்ரீத்யைநம:
பராகத்யைநம:
பராகாஷ்டாயைநம:
பரேசாநீயைநம: (சுங0)
பாவநீயைநம:
பாவகத்யுத்யைநம:
புண்யபத்ராயைநம:
பரிச்சேத்யாயைநம:
புஷ்பஹாஸாயைநம:
ப்ருதூதராயைநம:
பீதாங்கியைநம:
பீதவஸநாயைநம:
பீதசையாயைநம:
பிசாசிந்யைநம: (சுச0)
பீதக்ரியாயைநம:
பிசாசக்நீயைநம:
பாடலாக்ஷ்யைநம:
படுக்ரியாயைநம:
பஞ்சபக்ஷ்யப்ரியாசாராயைநம:
பூதநாப்ராணகாதிந்யைநம:
புந்நாகவநமத்யஸ்தாயைநம:
புண்யதீர்த்தநிஷேவிதாயைநம:
பஞ்சாங்கியைநம:
பராசக்தியைநம: (சுரு0)
பரமாஹ்லாதகாரிண்யைநம:
புஷ்பகாண்டஸ்திதாயைநம:
பூஷாயைநம:
போஷிதாகிலவிஷ்டபாயைநம:
பாநப்ரியாயைநம:
பஞ்சசிகாயைநம:
பந்நகோபரிசாயிந்யைநம:
பஞ்சமாத்ராத்மிகாயைநம:
ப்ருத்வியைநம:
பதிகாயைநம: (சுசு0)
ப்ருதுதோஹிந்யைநம:
புராணந்யாயமீமாஞ்சாயைநம:
பாடலீபுஷ்பகந்திந்யைநம:
புண்யப்ரஜாயைநம:
பாரதாத்ரியைநம:
பரமார்க்கைககோசராயைநம:
ப்ரவாளசோபாயைநம:
பூர்ணாசாயைநம:
ப்ரணவாயைநம:
பல்லவோதர்யைநம: (சுஎ0)
பலிந்யைநம:
பலதாயைநம:
பல்கவேநம:
பூத்காரியைநம:
பலகாகிருத்யைநம:
பணீந்திரபோகசயனாயைநம:
பணிமண்டலமண்டிதாயைநம:
பாலபாலாயைநம:
பஹுமதாயைநம:
பாலாதபநிபாம்சுகாயைநம:

பலபத்ரப்ரியாயைநமஃ
வந்தியாயைநமஃ
படபாயைநமஃ
புத்திஸம்ஸ்துதாயைநமஃ
பந்தீதேவ்யைநமஃ
பிலவத்யைநமஃ
படிசக்நியைநமஃ
பலிப்ரியாயைநமஃ
பாந்தவ்யைநமஃ
போதிதாயைநமஃ (௬௯0)
புத்யைநமஃ
பந்தூககுஸுமப்ரியாயைநமஃ
பாலபாநுப்ரபாகாராயைநமஃ
ப்ராம்ஹீநமஃ
ப்ராம்ஹணதேவதாயைநமஃ
ப்ருஹஸ்பதிஸ்துதாயைநமஃ
ப்ருந்தாயைநமஃ
ப்ருந்தாவநவிஹாரிண்யைநமஃ
பாலாகிநீயைநமஃ
பிலாஹாராயைநமஃ (௭00)
பிலவாஸாயைநமஃ
பஹூதகாயைநமஃ
பஹூநேத்ராயைநமஃ
பஹூபதாயைநமஃ
பஹூகர்ணவதம்ஸிகாயைநமஃ
பஹூபாஹூயுதாயைநமஃ
பீஜரூபிண்யைநமஃ
பஹூரூபிண்யைநமஃ
பிந்துநாதகலாதீதாயைநமஃ
பிந்துநாதஸ்வரூபிண்யைநமஃ
பத்தகோதாங்குளித்ராணாயை
பதரிகாஸ்ரமவாஸிந்யைநமஃ
ப்ருந்தாரகாயைநமஃ
ப்ருஹஸ்கந்தாயைமஃ
ப்ருஹத்யைநமஃ
பாணபாதிந்யையநமஃ
ப்ருந்தாத்யக்ஷாயைநமஃ
பஹூமதாயைநமஃ
வநிதாயைநமஃ
பஹூவிக்ரமாயைநமஃ (௭௨0)

பத்தபத்மாஸநாஸீநாயைநமஃ
பில்வபத்ரதலஸ்திதாயைநமஃ
போதித்ருமநிஜாவாஸாயைநமஃ
படிஸ்தாயைநமஃ
பிந்துதர்ப்பணாயைநமஃ
பாலாயைநமஃ
பாணாசனவத்யைநமஃ
படபாணலவேகின்யைநமஃ
ப்ரஹ்மாண்டபகிரந்தஸ்தாயை
பிரஹ்மகங்கணசூத்ரிண்யைநமஃ
பவாந்யைநமஃ
பீஷணவத்யைநமஃ
பாவிந்யைநமஃ
பயஹாரிண்யைநமஃ
பத்ரகாள்யைநமஃ
புஜங்காக்ஷ்யைநமஃ
பாரத்யைநமஃ
பாரதாசயாயைநமஃ
பைரவ்யைநமஃ
பீஷணாகாராயைநமஃ (௭௪0)
பூதிதாயைநமஃ
பூதிமாலிந்யைநமஃ
பாமிந்யைநமஃ
போகநிரதாயைநமஃ
பத்ரதாயைநமஃ
பூரிவிக்ரமாயைநமஃ
பூதாவாஸாயைநமஃ
ப்ருகுலதாயைநமஃ
பார்க்கவ்யைநமஃ
பூசுரார்ச்சிதாயைநமஃ (௭௫0)
பாகீரத்யைநமஃ
போகவத்யைநமஃ
பவநஸ்தாயைநமஃ
பிஷக்வராயைநமஃ
பாமிந்யைநமஃ
போகிந்யைநமஃ
பாஷாயைநமஃ
பவாந்யைநமஃ
பூரிதக்ஷிணாயைநமஃ
பர்க்காத்மிகாயைநமஃ (௭௬0)

பீமவத்யைநமஃ
பவபந்தவிமோஹின்யைநமஃ
பஜனீயாயைநமஃ
பூததாத்ரியைநமஃ
ரஞ்சிதாயைநமஃ
புவநேஶ்வர்யைநமஃ
புஜங்கவலயாயைநமஃ
பீமாயைநமஃ
பேருண்டாயைநமஃ
பாகதேயிந்யைநமஃ (௭௭0)
மாதாயைநமஃ
மாயாயைநமஃ
மதுமத்யைநமஃ
மதுஜிஹ்வாயைநமஃ
மதுப்ரியாயைநமஃ
மஹாதேவ்யைநமஃ
மஹாபாகாயைநமஃ
மாலிந்யைநமஃ
மீநலோசனாயைநமஃ
மாயாதீதாயைநமஃ (௭௮0)
மதுமத்யைநமஃ
மதுமாம்ஸாயைநமஃ
மதுத்ரவாயைநமஃ
மானவ்யைநமஃ
மதுஸம்பூதாயைநமஃ
மிதுலாபுரவாஸிந்யைநமஃ
மதுகைடபஸம்ஹத்ரியைநமஃ
மேதிந்யைநமஃ
மேகமாலிந்யைநமஃ
மந்தோதர்யைநமஃ (௭௯0)
மகாமாயாயைநமஃ
மைதல்யைநமஃ
மஸ்ருணப்ரியாயைநமஃ
மகாலக்ஷ்மியைநமஃ
மகாகாள்யைநமஃ
மஹாகந்யாயைநமஃ
மஹேஶ்வர்யைநமஃ
மாஹேந்திர்யைநமஃ
மேருதநயாயைநமஃ
மந்தாரகுஸுமார்ச்சிதாயைநமஃ
மஞ்சுமஞ்சீரசரணாயைநமஃ
மோக்ஷதாயைநமஃ
மஞ்சுபாஷிண்யைநமஃ
மதுரத்ராவிண்யைநமஃ
முத்ராயைநமஃ
மலயாயைநமஃ
மலயாந்விதாயைநமஃ
மேதாயைநமஃ
மரகதஶ்யாமாயைநமஃ
மாகத்யைநமஃ (௮௧0)
மேனகாத்மஜாயைநமஃ
மஹாமார்யைநமஃ
மஹாவீராயைநமஃ
மஹாஶ்யாமாயைநமஃ
மநுஸ்துதாயைநமஃ
மாத்ருகாயைநமஃ
மிஹிராபாஸாயைநமஃ
முகுந்தபதவிக்ரமாயைநமஃ
மூலாதாரஸ்திதாயைநமஃ
முக்தாயைநமஃ (௮௨0)
மணிபூரகவாஸிந்யைநமஃ
ம்ருகாக்ஷியைநமஃ
மஹிஷாரூடாயைநமஃ
மஹிஷாஸுரமர்த்திந்யைநமஃ
யோகாசனாயைநமஃ
யோககம்யாயைநமஃ
யோகாயைநமஃ
யௌவநகாஶ்ரயாயைநமஃ
யாவந்யைநமஃ
யுத்தமத்யஸ்தாயைநமஃ (௮௩0)
யமுனாயைநமஃ
யுகதாரிண்யைநமஃ
யக்ஷிண்யைநமஃ
யோகயுக்தாயைநமஃ
யக்ஷராஜப்ரஸூதிந்யைநமஃ
யாத்ராயைநமஃ
யானவிதானக்யாயைநமஃ
யதுவம்சஸமுத்பவாயைநமஃ
யகாராதிஹகாராந்தாயைநமஃ
யாஜுஷ்யைநமஃ (௮௪0)

யக்ஞரூபிண்யைநம:
யாமிந்யைநம:
யோகநிரதாயைநம:
யாதுதானபயங்கர்யைநம:
ருக்மண்யைநம:
ரமராயைநம:
தாமாயைநம:
ரேவத்யைநம:
ரேணுகாயைநம:
ரத்யைநம: (அ௱0)
ரௌத்ரியைநம:
ரௌத்ரிப்ரியாகாராயைநம:
ராமமாதாயைநம:
ரதிப்ரியாயைநம:
ரோஹிண்யைநம:
ராஜ்யதாயைநம:
ரேவாயைநம:
ரமாயைநம:
ராஜீவலோசனாயைநம:
ராகேஸ்யைநம: (அசுா0)
ரூபஸம்பந்நாயைநம:
ரத்நஸிம்ஹாஸநஸ்திதாயை
ரக்தமால்யாம்பரதராயைநம:
ரக்தகந்தானுலேபநாயைநம:
ராஜஹம்ஸஸமாரூடாயைநம:
ரம்பாயைநம:
ரக்தபலிப்ரியாயைநம:
ரமணீயயுகாதாராயைநம:
ராஜீதாகிலபூதலாயைநம
ருருசர்மபரீதாஞயைநம: (அஎ0)
ரதின்யைநம:
ரத்னமாலிகாயைநம:
ரோகேஸ்யைநம:
ரோகசமந்யைநம:
ராவிண்யைநம:
ரோமஹரிஷிண்யைநம:
ராமசந்திரபதாக்ராந்தாயைநம:
ராவணச்சேதகாரிண்யைநம:
ரத்நவத்ஸரபரிச்சிந்நாயைநம:
ரதஸ்தாயைநம: (அஅ0)

ருக்மபூஷணாயைநம:
லஜ்ஜாதிதேவதாலோலாயை
லளிதாயைநம:
லிங்கதாரிண்யைநம:
லக்ஷ்மியைநம:
லோலாயைநம:
லுப்தவிபாஷாயைநம:
லோகிந்யைநம:
லோகவிஸ்ருதாயைநம:
லஜ்ஜாயைநம: (அசுா0)
லம்போதரீதேவ்யைநம:
லாக்யைநம:
லலநாயைநம:
லோகதாரிண்யைநம:
வரதாயைநம:
வந்திதாயைநம:
வித்யாயைநம:
வைஷ்ணவீயைநம:
விமலாக்ருத்யைநம:
வராஹ்யைநம: (கூ00)
விரஜாயைநம:
வர்ஷாயைநம:
வரலக்ஷ்மியைநம:
விலாசிந்யைநம:
விந்தாயைநம:
வ்யோமமத்யஸ்தாயைநம:
வாரிஜாஸநஸம்ஸ்த்திதாயைநம:
வாருண்யைநம:
வேணுஸம்பூதாயைநம:
வீதிஹோத்ராயைநம: (கூக0)
விரூபிண்யைநம:
வாயுமண்டலமத்யஸ்தாயைநம:
விஷ்ணுரூபாயைநம:
விதிக்ரியாயைநம:
விஷ்ணுபத்நியைநம:
விஷ்ணுமத்யைநம:
விசாலாக்ஷ்யைநம:
வசுந்தராயைநம:
வாமதேவப்ரியாயைநம
வேளாயைநம: (கூஉ0)

வஜ்ரிண்யைநமஃ
வஸுதோஹின்யைநமஃ
வேதாக்ஷரபரீதாங்கியைநமஃ
வாஜபேயபலப்ரதாயைநமஃ
வாஸவியைநமஃ
வாமஜநந்யைநமஃ
வைகுண்டநிலயாயைநமஃ
வராயைநமஃ
வியாஸப்ரியாயைநமஃ
வர்மதராயைநமஃ (௯௩0)
வால்மீகிபரிஸேவிதாயைநமஃ
சாகம்பர்யைநமஃ
சிவாயைநமஃ
சாந்தாயைநமஃ
சாரதாயைநமஃ
சரணாகத்யைநமஃ
சாதோதர்யைநமஃ
சுபாசாராயைநமஃ
சும்பாசுரவிமர்த்திந்யைநமஃ
சோபாவத்யைநமஃ (௯௪0)
சிவாகாராயைநமஃ
சங்கரார்த்தசரீரிண்யைநமஃ
சோணாயைநமஃ
சுபாசயாயைநமஃ
சுப்ராயைநமஃ
சிரஸ்ஸந்தானகாரிண்யைநமஃ
சராவத்யைநமஃ
சரானந்தாயைநமஃ
சரத்ஜ்யோத்ஸ்னாயைநமஃ
சுபானனாயைநமஃ (௯௫0)
சரபாயைநமஃ
சூலிந்யைநமஃ
சுத்தாயைநமஃ
சபர்யைநமஃ
சுகவாஹனாயைநமஃ
ஸ்ரீமத்யைநமஃ
ஸ்ரீதரானந்தாயைநமஃ
சிரவணானந்ததாயிந்யைநமஃ
சர்வாண்யைநமஃ
சர்வரீவந்தியாயைநமஃ (௯௬0)

ஷட்பாஷாயைநமஃ
ஷட்ருதுப்ரியாயைநமஃ
ஷடாதாரஸ்திதாதேவ்யைநமஃ
ஷண்முகப்ரியகாரிண்யைநமஃ
ஷடங்கரூபாயைநமஃ
சுமத்யைநமஃ
சுராசுரநமஸ்க்ருதாயைநமஃ
சரஸ்வத்யைநமஃ
சதாதாராயைநமஃ
சர்வமங்களகாரிண்யைநமஃ
சாமகானப்ரியாயைநமஃ
சூக்ஷ்மாயைநமஃ
சாவித்ரியைநமஃ
சாமசம்பவாயைநமஃ
சர்வாவஸாயைநமஃ
சதானந்தாயைநமஃ
சுஸ்தந்யைநமஃ
ஸாகராம்பராயைநமஃ
ஸர்வைச்வர்யப்ரியாயைநமஃ
ஸித்தயேநமஃ
ஸாதுபந்துபராக்ரமாயைநமஃ
ஸப்தருஷிமண்டலகதாயைநமஃ
சோமமண்டலவாஸிந்யைநமஃ
சர்வக்ஞாயைநமஃ
சாந்த்ரகருணாயைநமஃ
சமானாதிகவர்ஜிதாயைநமஃ
சர்வோத்துங்காயைநமஃ
சங்கஹீனாயைநமஃ
சத்குணாயைநமஃ
சகலேஷ்டதாயைநமஃ (௯௯0)
சாகாயைநமஃ
சூர்யதநயாயநமஃ
சுகேச்யைநமஃ
சோமசம்ஹத்யைநமஃ
ஹிரண்யவர்ணாயைநமஃ
ஹரிண்யைநமஃ
ஹ்ரீங்கார்யைநமஃ
ஹம்ஸவாஹிந்யைநமஃ
க்ஷௌமவஸ்திரபரீதாங்கியைந
க்ஷீராப்திதநயாயைநமஃ (௧000)

க்ஷமாயைநம:
காயத்ரியைநம:
சாவித்ரியைநம:
பார்வத்யைநம:
ஸரஸ்வத்யைநம:
வேதகர்ப்பாயைநம:
வராரோஹாயைநம:
ஸ்ரீகாயத்திரியைநம:.
பராம்பிகாயைநம:

சகல பாபங்களைப் போக்கடிப்பதாயும் புண்ணியத்தைக் கொடுப்பதாயும் மகத்தான சம்பத்தைக் கொடுப்பதாயும் இருக்கிற காயத்திரி சகஸ்ரநாமம் இதுவாகும். ஓ முனீந்திரரே! சந்தோஷத்தையுண்டுபண்ணுகின்ற இந்த சகஸ்ரநாமம் பிராம்ஹணளோடு அஷ்டமிதிதியில் விசேடமாய்ப் படித்து ஜப ஹோமங்களும் பூஜை தியானங்களும் விசேடமாய்ச் செய்யவேண்டியது. இந்த சகஸ்ரநாமத்தை ஒருவருக்குங் கொடுக்கக்கூடாது. நல்ல பக்தனுயும் நல்ல சிஷ்யனுயும் இருக்கிற பிராஹ்மணனுக்குச் சொல்லவேண்டியது. சாதகன் பந்துவாயிருந்தாலும் பிரஷ்டனுயிருப்பானுயின் அவனுக்குக் காண்பிக்கக்கூடாது. எவனது கிருகத்தில் இந்த சகஸ்ரநாமம் இருக்கிறதோ அவனுக்கு ஓரிடத்திலிருந்தும் பயம்வராது. மஹாலக்ஷ்மி சஞ்சலையாயிருந்தாலும் அவனிடத்தில் ஸ்திரமாயிருப்பாள். இது பரமரகஸ்யமாயும் புண்ணியத்தைக் கொடுப்பதாயும் தரித்திரனுக்கு நிதியையும் முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தையும் காமிகளுக்கு சர்வ காமங்களையும் கொடுப்பதாயு மிருக்கிறது.

இதைப் படிக்கிறவன் ரோகியாயினும் அரோகியாகிறான். பந்தத்தில் கட்டுப்பட்டிருப்பினும் அக் கட்டினின்றும் விடுபடுகிறான். பிரஹ்மஹத்தி சுராபானம் சுவர்ண அபகாரணம் இவைகளைச் செய்தோரும், குருபத்தினியைக் கூடினவனும் ஒருக்கால் படனஞ்செய்யப் பெறுவாராயின் அவர்கள் அவ்வப்பாதகங்களினின்றும் விடுபடுகின்றனர். இவர்களேயன்றி பெறக்கூடாத தானங்களைப் பெறுகின்றவனும் உண்ணக் கூடாதனவற்றை யுண்டவனும் பாஷண்டனும் பொய் சொன்னவனும் இவர்களோடு கூடியிருந்தவனும் படனஞ் செய்வாராயின் அவர்களும் அவ்வப்பாபங்களினின்றும் விடுபடுவர். ஓ நாரதரே! என்னல் சொல்லப்பட்ட இந்த சகஸ்ரநாம ரகசியமானது பரிசுத்தமாகிய மனிதர்களுக்கு பிரஹ்ம சாயுச்சியத்தைக் கொடுக்கும். இது சத்தியம் சத்தியம். சம்சயமில்லை.

(சு - கசாரு)

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

---

ஸகலாகமசம்ஸ்துதாயைநமஃ

## ஏழாம் அத்தியாயம்.

## தீக்ஷாவிதி.



நாரதர் கூறுகின்றார்:—காயத்திரியினது பலத்தையும், மஹா சிரேயஸ்ஸையும் மகா பாக்கியத்தையும் கொடுப்பதா யிருக்கிற சஹஸ்ர நாமத்தையும், தேவரீரால் கேட்கப் பெற்றேன். பிரஹ்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் எந்த தீக்ஷையில்லா மல் அதிகாரஞ் சித்திக்காதோ அந்த வுத்தமமான தீக்ஷாவிதியை முன் சாமான்யமாகக் கேட்டுள்ளேன். அதனை இப்போது விரி வாய்ச் சொல்லவேண்டுகிறேன்.

நாராயணர் கூறுகின்றார். பரிசுத்தாத்மாக்களாயிருக்கிற சிஷ் யர்களுக்கு எந்தத் தீக்ஷையினுல் தேவாக்னி குரு பூஜைக்கு அதி காரம் உண்டாகிறதோ, எந்தத் தீக்ஷ திவ்யமான ஞானத்தைக் கொடுத்து அஞ்ஞானமாகிய பாவத்தை நாசஞ்செய்கிறதோ, எது யாதொரு காரணம் வேண்டாது வெகுபலத்தைக் கொடுக்கிறதோ, குரு சிஷ்யர்கள் அதி பரிசுத்தர்களாக விருப்பதற்கு எதனை யபே க்ஷிக்கின்றார்களோ, அந்தத் தீக்ஷையைத்தான் தீக்ஷ என்றும் அதனை அவசியம் செய்துகொள்ள வேண்டுமென்றும் நிகமாகமங் களை யறிந்த சமர்த்தர்கள் கூறுகின்றனர்.

இனி அந்தத் தீக்ஷாவிதியைக் கேட்பீராக. ஆசிரியர் விதித்த படி மலமோசனாதி கிருத்தியங்களையும், நதிக்கரையை யடைந்து ஸ்நானம் சந்தி முதலிய நியமங்களையும் செய்து, பின்னர் கமண்ட லத்தைக் கையிற்றாங்கிக்கொண்டு, மவுனமாய் நதிக்கரையினின்றும் புறப்பட்டு கிருகத்துக்குப்போய் யாக மண்டபத்தை யடைந்து சிரேஷ்டமான ஆசனத்தில் உட்கார்ந்து ஆசமனப் பிராணுயாமஞ் செய்து சாமான்யார்க்யத்தில் கந்தபுஷ்பங்களிட்டு ஏழுதரம் அஸ் திரமந்திரத்தால் ஜபித்து அந்தத் தீர்த்தத்தைக்கொண்டு அந்த மந் திரத்தினுலேயே துவார முதலிய இடங்களைப் புரோக்ஷித்து, பின் னர் பூஜையை ஆரம்பித்து வாசக்காலின் மேற்படியின் தக்ஷிணத்தில் கணபதியையும், உத்தரத்தில் சரஸ்வதியையும், நடுவில் லக்ஷ்மி யையும் ஸ்தாபித்து, அவரவர் மந்திரங்களால் கந்தபுஷ்ப அர்க்கி

யங்களைக் கொண்டு பூஜித்து, பின்னர் மேற்படி துவாரத்தின் தக்ஷிணசாகையில் கங்கையையுங் கணபதியையும், வாமசாகையில் க்ஷேத்திர பாலகரையும் யமுனையையும், கீழ்ப்படியில் அஸ்திர தேவனையும் ஸ்தாபித்து, முன்போலவே அவரவர் மந்திரங்களைக் கொண்டு பூஜித்து, இந்தப் பரிவாரமூர்த்திகளை யெல்லாம் தேவி மயமாகப் பாவித்துத் தியானித்து, பின்னர் திவ்ய முத்திரையி னால் மேலிடத்திலுள்ள விக்னங்களையும், அஸ்திர மந்திரத்தால் அந்தரிக்ஷ விக்னங்களையும், பாத தாடனத்தினால் பூமியிலுள்ள விக்னங்களையும் போக்கிப் பின்னர் தக்ஷிணங்கிரிணியினால் வாமசா கையின்கண் பிரவேசித்து, தீர்த்த கலசத்தை ஸ்தாபனஞ்செய்து, பின்னர் நிருதிதிக்கில் வாஸ்துபதி பிரஹ்மாவை ஸ்தாபனஞ் செய்து கந்த புஷ்பாதிகளைக் கொண்டு சாமான்யார்க் கியத்தால் பூஜித்து, அதற்குப் பின்னர் பஞ்சகவ்வியத்தைக்கொண்டு மண் டப தோரண ஸ்தம்பம்வரையில் புரோக்ஷித்து, இது வரையில் சொல்லிவந்த தேவதைகளை யெல்லாம் தேவிமயமாக மனதில் பாவித்து, பக்தியோடு மூலமந்திரத்தை ஜபித்துப் புரோக்ஷணஞ் செய்து அஸ்திரமந்திரத்தை யுச்சரித்து மண்டப ஸ்தானத்தைத் தாடனஞ்செய்து அஸ்திர மந்திரத்தோடு ஹூம் என்னும் மந்திரத் தை யுச்சரித்து அப்யுக்ஷணஞ்செய்து, ஆகாயத்தில் தூபங்கம ழும்படி தூபங்கொடுத்து தர்ப்பை கூர்ச்சத்தால் சுத்திசெய்ய வேண்டியவை யெல்லாம் சுத்திசெய்து அந்தக் கூர்ச்சத்தை ஈசா ன்ய திக்கில் வைத்துவிட்டு, பின்னர் புண்யாஹவாசனம்செய்து ஏழைப் பிராமணர்களைப் போஜன பதார்த்தங்களால் சந்தோஷிப் பித்து, பின்னர் கிழக்குமுகமாக ஆசனத்தில் உட்கார்ந்து, தன் ஆசி ரியனை நமஸ்காரஞ்செய்து தியானிக்க வேண்டிய தெய்வத்தை அந்த தெய்வமந்திரத்தால் தியானித்துத் முன் சொன்னபடி பூத சுத்தி முதலியவற்றைச்செய்து, பின்னர் சிரசில் ருஷியையும், முகத்தில் சந்தஸ்ஸையும் இருதயத்தில் தேவதையையும் குஹ் யத்தில் பீஜத்தையும் பாதங்களில் சக்தியையும் முறையாக நிய சித்து, அதன்பின்னர் தாளத்திரயமும் சோடிகா முத்திரையினால் மூன்றுதரம் திக்பந்தனமும் பிராணாயாமமுஞ்செய்து மூலமந்தி ரத்தை யுச்சரித்து, பின்னர் தேகத்தினிடத்தில் மாத்ருகாநியாசஞ் செய்யவேண்டியது. எவ்வாறெனின் சிரசுமுதல் பாத பரியந்தம் மந்திரவித்தாயுள்ள ஓம் அம்நம என்னும் மந்திரத்தால் நியசித்து,

அதன்பின்னர் மூலமந்திர ஷடங்கமந்திரங்களின் ஆதியில் பிரணவத்தையும் அந்தத்தில் நமஃ, ஸ்வாஃ, வஷட், ஹும், வௌஷட், பட் என்பவைகளைச் சேர்த்து அங்குஷ்டமுதல் கநிஷ்டிகாந்தம்வரையிலும் ஹ்ருதயாதி ஸ்தானங்களிலும் செய்வதாகிய கரந்நியாச அங்கந் நியாசங்கங்களைச்செய்வதும், பின்னர் வர்ணநியாசங்களைக் கல்பங்களில் எந்த எந்த விடங்களில் எப்படி எப்படி செய்யும்படி சொல்லப்பட்டிருக்கின்றனவோ அப்படியப்படி மூல மந்திரத்தைக் கூட்டிச்செய்வதும் உத்தமம். இந்தப்படி கல்பப்பிரகாரம் வர்ணநியாசஞ்செய்து முடிந்தபின்னர் தனது சரீரத்தைத் தேவிக்குப் பீடமாகக் கற்பித்துப் பூஜையாதிகளைச் செய்யவேண்டும்.

எங்ஙனமெனின், வலதுதோள் இடதுதோள், வலதுதொடை இடதுதொடை, முகம், இடது விலாப்புறம் நாபி வலது விலாப்புறம் இவ்வெட்டிடங்களில் முறையே தர்மம் ஞானம் வைராக்யம் ஐஸ்வர்யம் அதர்மம் அஜ்ஞானம் அவைராக்யம் அநைஸ்வர்யம் என்னும் எட்டுமந்திரங்களால் நியசித்து, இவ்வெட்டுள் தர்மாதி நான்கு மந்திரங்களை நான்கு கால்களாகவும், அதர்மாதி நான்கு மந்திரங்களைக் காத்திரமாயுள்ள பீடப்பரப்பாகவும் பாவித்து, மத்திய ஸ்தானமாகிய மிருதுவாயுள்ள இருதய நடுவில் அநந்தனென்னும் மந்திரத்தால் நியசித்தும், நிர்மலமாயுள்ள பிரபஞ்சபத்மமாகிய அந்த இருதயகமலத்தில் பன்னிரண்டு கலையோடுகூடிய சூரியன் பதினாறு கலையோடுகூடிய சந்திரன் பத்துக்கலையோடுகூடிய அக்னி என்னும் மூவரையும் அவரவர் மந்திரங்களால் சங்கிரகமாக நியசித்தும், அதன்மேல் சத்வம் ரஜஸு தமஸு என்னும் முக்குணங்களை நியசித்தும், அதன்மேல் ஆத்மா அந்தராத்மா பரமாத்மா என மூன்றுவிதமாயுள்ள ஆத்மஸ்வரூபத்தினிடத்தில் ஞானத்மாவை நியசித்தும் செய்வதாகிய பாவனு பூஜையையே பீடபூஜை என்று வித்வான்கள் கூறுகின்றனர்.

ஓ நாரதரே! இவ்வாறு பீடத்தைக் கற்பித்துக்கொண்ட பின்னர் "அமுகாசனயநமஃ" என்னும் மந்திரத்தினால் ஆசனத்தைப் பூஜித்து, அவ்வாசனத்தில் தியானிக்கப்படும் தியேயமூர்த்தியாகிய பராம்பிகையைத் தியேய மந்திரத்தைக்கொண்டு தியானித்து, யதாவிதியாக மானசிகமாய்ச் சர்வோப சாரங்களையுஞ்செய்து அவ்வம்பிகைக்குச் சந்தோஷத்தை விளைவிப்பதாகிய முத்திரைகள்

எவைகளோ அந்தமுத்திரைகளைக்காட்டிச் சந்தோஷிப்பித்து, பின்னர் அவ்வாசனத்துக்கு இடப்பாகத்தின் அக்ரத்தில் சதுரஸ்ரமாகவும் அதனுள் விருத்தாகாரமாக ஷட்கோணமும், அதனுள் திரிகோணமாக மண்டலமும் அமைத்து, அதன் மத்தியில் சங்கமுத்திரைகாட்டி, பின்னர் ஷட்கோணங்களை அக்னிதிக்கு முதலாக ஷடங்க மந்திரத்தால் நல்லமலர்களைக்கொண் டர்ச்சித்து, சங்கத்துக்கு ஆதாரபாத்திரத்தை அந்த ஷட்கோண மத்தியில் வைத்து, அஸ்திரத்தால் புரோக்ஷித்து "மம் வன்னிமண்டலா யோக்தா - தேதாத சகளாத்மநே, அமுதகதேவ்யா அர்க்யபாத்திர ஸ்தாயநம" என்கிற மந்திரத்தை யுச்சரித்து அக்னிமண்டலத்துக்குச் சொல்லியிருக்கும் பத்துக்கலைகளையும் கிழக்குமுதல் பிரதக்ஷணக் கிரமமாகப் பூஜித்து, மூலமந்திரத்தால் புரோக்ஷிக்கப்பட்ட சங்கத்தை யெடுத்து மூலமந்திரோச்சாரணையோடு முன்சொன்ன ஆதார பாத்திரத்தின்கண் வைத்து, "அம் சூர்யமண்டலாயோக்தா த்வாத சாந்தே களாத்மநே - அமுகதேவ் யர்க்ய பாத்ராயநம" என்றும், "ஶம் ஶங்காயபதம் புரோச்யம் நம" என்றும் உச்சரித்துப் புரோக்ஷணஞ்செய்து, சூரியனுக்குச்சொல்லி யிருக்கும் பன்னிரண்டு கலைகளையும் பூஜித்து, யதாக்கிரமமாக அப்பன்னிரு கலையையும் ஸ்தாபித்து, மாத்ருகா மந்திரத்தையும் மூலமந்திரத்தையும் விலோமமாக வுச்சரித்து, அந்தச் சங்கத்தில் ஜலத்தைப் பூரித்து சந்திரமண்டலத்துக்குரிய பதினாறு கலைகளையும் நியசித்துப் பின்னர் "உம் ஸோம மண்டலா யோக்தாம் தேஷோடஶக ளாத்மநே - அமுகார்க்ய மிருதாயநம" என்கிற மந்திரத்தை யுச்சரித்து, புஷ்பாஞ்சலி சகிதமாக இருதயத்தியானத்தோடு ஸ்ருணி முத்திரையினால் ஆவாகனஞ்செய்து, அந்த மந்திரத்தையே எட்டுத்தரமும், அஃதேபோல் மூலமந்திரத்தை எட்டுத்தரமும் ஜபித்து அவற்றோடு இருதயாதி ஷடங்கங்களையும் ஜபித்து மச்சமுத்திரையால் கையைமூடி (அப்யுக்ஷணஞ்செய்து), பின்னர் அந்தச் சங்கத்துக்கு தக்ஷிணதிக்கில் புரோக்ஷண பாத்திரத்தைவைத்து அதில் சங்கதீர்த்தத்தைச் சிறிதுவிட்டு அந்தத் தீர்த்தத்தால் சகல பூஜாத்திரவியங்களையும் தன்னையும் புரோக்ஷித்து அப் பூஜாத்திரவியங்களையும் தன்னையும் சுத்தமாகப் பாவித்து பின்னர் தன்னெதிரில் வேதிகை யொன்றையும் அதன்மேல் சர்வதோபத்திரமென்னும் மண்டலத்தையும் கற்பித்துக்கொண்டு அதன்மத்தியில்

கர்ணிகை யெழுதி நெல்லையும் அரிசியையும் ததும்பப் பரப்பி அதன்மேல் சிதிலமில்லாமல் லக்ஷணத்தோடுகூடிய தர்ப்பை கூர்ச்சத்தைவைத்து ஆதாரசக்திமுதல் பீடம்வரையில் அர்ச்சித்து, பின்னர் கறுப்பில்லாத இரண்டு மண்குடத்தை உள்ளும் புறம்பும் அஸ்திரமந்திரத்தை யுச்சரித்து தீர்த்தத்தால் சுத்திசெய்து மூன்றிழையோடுகூடிய நூலால்சுற்றி அந்த கும்பகலசத்தினுள் கூர்ச்சமும் நவரத்தினமும் இட்டு தாரா மந்திரத்தால் கந்தபுஷ்பங்களைக்கொண்டு அர்ச்சித்து பின்னர் அந்தக் கும்பத்துக்கும் பீடத்துக்கும் ஐக்யபாவனை நியாசஞ்செய்து பின்னர் பிரதிலோமமாக மாத்ருகா மந்திரத்தை ஜபித்து அதனோடு மாலாமந்திரத்தை ஜபித்து அந்த ஜபோச்சாரணையோடு கும்பத்தில் தீர்த்தத்தைப் பூரித்து அரசன்றளிர் பலாவின்றளிர் மாந்தளிர் இவைகளைக் கும்பமுகப்பில்வைத்து அக்ஷதைகளையிட்டு இரண்டு வஸ்திரந்தரித்து பிராணஸ்தாபன மந்திரத்தால் பிராணப்பிரதிஷ்டை செய்து பின்னர் தேவி கற்பத்திற் சொல்லியிருக்கின்றபடி ஆவாஹனாதி முத்திரைகளால் பராசக்தியைச் சந்தோஷிப்பிக்கச்செய்து தியானித்து, (ஸ்வாகதந்தே மஹாதேவி என்று) குசலப்பிரசனஞ் செய்ததாகவும், அதற்குத்தேவி (வர்த்தஸ்வ ஸ்வாகதம் என்று) உத்தரமளித்ததாகவும் எண்ணி சுவாகதார்க்யமும் பாத்யாசமனார்க்கியமும் கொடுத்து மதுபர்க்கநிவேதனம் செய்து பின்னர் ஸ்நானார்த்தமாகத் தைலாதிகளையும் சந்தனாதி சுகந்தங்களையும் சமர்ப்பித்து செகப்புப் பட்டுவஸ்திரங்களாலும் நானாவிதமான ஆபரணங்களாலும் அலங்கரித்து, பின்னர் தேவியினது அங்கங்களில் மாத்ருகா நியாசஞ்செய்து பச்சைகர்ப்பூரம் கஸ்தூரி குங்குமப்பூ முதலிய நல்லவாசனையோடுகூடிய சந்தனத்தையும், குருக்கத்திமுதலிய வாசனையுள்ள மலர்களையும் சாத்திப் பின்னர் அகில் விலாமிச்சை சந்தனம் தேன் சர்க்கரை முதலியவைகலந்த தூபமும் தீபமுங்காட்டி அநேகவிதமாயுள்ள நைவேத்ய பதார்த்தங்களை நிவேதனஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்யும்பொழுது முன் புரோக்ஷணத்துக்கு அமைத்துள்ள அர்க்யதீர்த்தத்தால் ஒவ்வொன்றையும் புரோக்ஷித்து நிவேதனஞ் செய்யவேண்டுமே யன்றி புரோக்ஷண மில்லாமல் செய்யக்கூடாது. நிவேதனமான பின்னர் தேவியினுடைய சாங்கங்களைப் பூஜிப்பதாகிய அங்கபூஜையைச் செய்து பின்னர் வைப்ரவதேவஞ் செய்யவேண்டும். எப்படியெ

னின், தக்ஷிணபாகத்தில் நெல்லைப்பரப்பி அதில் அக்னியைஸ்தா பித்து மூர்த்தியைக் கிரமமாக ஆவாகித்துப் பூஜித்து, தாராமந் திரத்தினாலும் மூலமந்திரத்தினாலும் இருபத்தைந்து முறை பாய ஸத்தினாலும் நெய்யி னாலும் ஹோமஞ்செய்து மறுபடியும் வியா ஹ்ருதி மந்திரத்தால் ஓமஞ்செய்து சந்தன புஷ்பங்களால் அர்ச் சித்து அக்னியிலிருக்கும் மூர்த்தியைப் பீடத்தில் யோஜித்து அக் னிக்குப் பாயசபலிகொடுத்து அக்னியை விசர்ஜனஞ்செய்து பின் னர் பராசத்தியின் ஆவரண தேவதைகளை கந்தபுஷ்பமுதலிய வைகளால் பூஜித்து பராசத்திக்கு பஞ்சோபசாரஞ்செய்து தாம் பூலங்கொடுத்து சத்ரசாமரங்களால் உபசரித்து தேவிமந்திரத்தை ஆயிரம் உருஜபித்து தேவிக்கு ஈசான்யதிக்கில் சமர்ப்பித்து வேதி கைக்கு ஈசான்யபாகத்தில் கரகத்தை ஸ்தாபனஞ்செய்து அதில துர்க்காமந்திரத்தை ஆவாகித்துப் பூஜித்து அந்தக்கரகத்தை ரக்ஷிக் கவேண்டுமென்று சொல்லி கையிலெடுத்துக்கொண்டு அக்கரகத் திலிருந்து ஜலம் கீழேவிழும்படி பிரதக்ஷிணமாக அந்தவிடத்தை நனைத்து கரகத்தை முன்னிருந்த விடத்திலேயே ஸ்தாபித்து அங்கு அஸ்திரமந்திரத்தால் அஸ்திரதேவதையைப் பூஜிக்கவேண் டும். பின்பு ஆசாரியர் சிஷ்யனுடன் மவுனமாய்ப் போஜனஞ் செய்து யாகசாலையில் நியமத்தோடு நித்திரைசெய்ய வேண்டும்.

இனி, குண்டத்தையும் தண்டிலத்தையும் சம்ஸ்காரஞ் செய்யு நிமித்தம் ஆசிரியர் சுத்தியோடு எந்தவிதியினால் எந்தவிதஞ்செ ய்யவேண்டுமோ அதைச்சொல்லுகிறேன். ஆசாரியர் தேவிமூல மந்திரத்தை யுச்சரித்து, குண்டத்தையும் ஸ்தண்டிலத்தையும் நிரீ க்ஷித்து,அஸ்திரத்தால் புரோக்ஷித்து,மேற்படி மந்திரத்தால் தாட னமும் கவசத்தால் அப்யுக்ஷணமுஞ் செய்து, மூன்று தர்ப்பை களால் மேற்குமுதல் கிழக்குவரையிலும் தெற்கு முதல் வடக்கு வரையிலும் மூன்று ரேகையிழுத்து, பிரணவத்தால் குண்டத்தை அப்யுக்ஷணஞ்செய்து,ஆதாரசக்திமுதல் பீடம்வரை பூஜித்து,பரம காரணர்களாகிய வாகீஸ்வரி வாகீஸ்வரர்களை கந்தபுஷ்பங்களால் பூஜித்து, வாகீஸ்வரி வாகீஸ்வரரோடு கூடிக்கொண்டும் காமா துரையாயும் ருதுஸ்நானத்தை யுடையவளாயும் இருவரும் சிறிது காலம் கிரீடிக்கின்றவர்களாயும் தியானித்து, பிறகு வன்னியை ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொண்டு அதினின்றும் சிறிது அக் னியை நைருதி திக்கில் ராக்ஷஸ ப்ரீதியாகத் தள்ளிவிட்டு முன்

குண்டத்துக்குச் சொல்லியதுபோல் அவ் வக்னிக்கு சதுஸ் ஸம்ஸ்காரஞ்செய்து, (ரம்) என்னும் அக்னி பீஜத்தை உச்சரித்து, அக்னியினிடமிருந்து அவ்வக்னி தன் சைதன்னியத்தில் கலந்ததாகவும் மீண்டும் அவ்வக்னியினிடம் சேர்த்ததாகவும் பாவித்து, பிரணவத்தால் ஏழுதரம் அபிமந்திரித்து, தேனுமுத்திரைகொடுத்து, அஸ்திரத்தால் ரக்ஷையும் கவசத்தால் அவகுண்டனமுஞ் செய்து, பாத்திரத்தோடு கையி லெடுத்துக்கொண்டு, குண்டத்துக்குமேல் மூன்று தரம் பிரதக்ஷிணமாகச்சுற்றி, அவ்வக்னியைச் சிவபீஜ மாகவும் குண்டத்தை தேவியோநியாகவும் பாவித்துக்கொண்டு, இரண்டு முழங்காலும் பூமியில் தாங்கும்படி யிருந்து குண்டத்தில் அக்நியை யிட்டு, இருவருக்கும் ஆசமனங் கொடுத்து அதன்பின்னர் சித் பிங்கள ஹந தக பச இவைகளை யிரட்டித்துச் சொல்லி, "சர்வக்ஞாக்ஞாபய ஸ்வாஹா" என்னும் வன்னிதீப மந்திரத்தினல் ஜொலிக்கச்செய்து, சுவலித்துக்கொண்டிருக்கிற அக்னியைத் தியானித்து, நான்குதிக்கிலும் முகமுள்ளதாயும் விசேஷப் பிரகாசத்தோடு கூடியதாயும் நிர்மலமாயும் சுவர்னம்போல் பிரகாசிப்பதாயும் ஓமத்தையே ஆகாரமாயுள்ளதாயும் வேதமாதாவாயும் விசேஷமாய்ச் சொலித்துக்கொண் டிருப்பதாயும் உள்ள அக்னியை நமஸ்கரிக்கிறேனென்னும் மந்திரத்தினல் விசேட ஆதரவுடன் தோத்திரஞ் செய்து, அதன்பின் "ஸஹஸ்ரார்ச்சி சுவஸ்திபூர்ண உத்திஷ்ட புருஷ: தூம வ்யாபீ ஸப்தஜிஹ்வோ தநுர்த்தவ" என்னும் வன்னி மந்திர ஷடங்கங்களையும் அக்நியின் பூர்வபச்சிம தக்ஷிணோத்தர நைருதி ஈசான ஸ்தானங்களில் நியசித்து, மங்களமாயுஞ் சிறந்ததாயுமுள்ள இஷ்டசக்தி ஸ்வஸ்திகம் இவைகளைத் தரித்துக் கொண்டு பத்மாசனத்தி லிருப்பதாகவும் மூன்று கண்களை யுடையதாகவும் பொன்னிற முள்ளதாகவும் அக்னியைத் தியானித்து, பிறகு குண்டத்து மேகலையில் நான்கு பக்கமும் ஜலத்தினல் பரிசேஷணஞ் செய்து, அதன்பிறகு தர்ப்பையை நான்கு பக்கமும் பரிஸ்தரணமிட்டு, அதன்மீது பரிதியாக நான்கு சமித்துக்களை வைத்து, குண்டமத்தியில் அஷ்ட தளபத்மமும் அதனடுவில் ஷட்கோணமும் அதனடுவில் விருத்த கோணமும் அதனடுவில் திரிகோணமுமாகப் பாவிக்கவேண்டும். அல்லது முன்னரே எழுத வேண்டும். பின்னர் அவ்வக்னியை வைஸ்வாநர! ஜாதவேத! லோகிதாக்ஷ! நீர் இந்தஸ்தானத்தை வஹிக்கவேண்டும். வஹித்து

சகல காரியங்களையுஞ் சாதிக்கக் கடவீர் என்று ஸ்வாஹா மந்திரத் தால் பூஜித்து, மத்யமாயிருக்கிற ஷட்கோணத்தில் ஹிரண்யா! ககனு! ரக்தா! கிருஷ்ணு! ஸுப்ரபா! பஹுரூபா! அதிரக்திகா! என்னு மந்திரங்களாலும் கேசரங்களில் அங்கமந்திரங்களாலும் அர்ச்சித்து, எட்டு தளங்களில் ஜாதவேதா சப்தஜிஹ்வா ஹவ்ய வாஹந அப்ஸ்வோதரஜஃ சஞ்ஜோாந்யஃ வைஸ்வாநர கௌமார தேஜ விஸ்வமுக தேவமுக என்பவர்களை பூஜித்து, அவ்வவ் விடங்களில் அவரவர்கள் பிரஸந்நமா யிருப்பதாகவும், நான்கு பக் கங்களிலும் லோகபாலகர் ஆயுதசஹிதமாக இருப்பதாகவும் தியா னித்துப் பூஜித்து, அதன்பிறகு சிருக் சிரவம் ஆஜ்யம் இவைகளை சம்ஸ்காரஞ்செய்து, பிறகு சிரவத்தால் ஆச்சியத்தை ஆஜ்யபாத் திரத்தின் தக்ஷிணத்தி லிருந்தெடுத்து, அக்னியின் தக்ஷிணநேத் திரத்தில் அக்னியே ஸ்வாஹா என்னு மந்திரத்தால் விட்டு, பிறகு வாமபாகத்தினின்றும் நெய்யை எடுத்து, அக்னிவாம நேத்திரத் தில் சோமாய ஸ்வாஹா என்னும் மந்திரத்தால்விட்டு, பாத்தி ரத்தின் நடுவிலிருந்து நெய்யையெடுத்து, அக்னீ ஷோமாப்யாம் ஸ்வாஹஃ என்னும் மந்திரந்தால் மத்யநேத்திரத்தில் விட்டு, மறுபடி தக்ஷிணதிக்கி லிருந்தெடுத்து, அக்நிமுகத்தில் அக்நயே ஸ்விஷ்ட க்ருதேஸ்வாஹா என்னு மந்திரத்தாலும் தாராமந் திரத்தோடு கூடிய வ்யாகிருதி மந்திரங்களினுலும் ஓமஞ்செய்து, பிறகு அக்னி மந்திரத்தினுல் மூன்றுதரமும் பிரணவத்தால் கர்ப் பாதானம் பும்ஸவனம் சீமந்தோன்னயனம் ஜாதகர்மம் நாமகர்மம் உபநிஷ்கிருமணம் அன்னப்ராசநம் சூடாகர்மம் விரதபந்தனம் மஹாநாம்யவிரதம் உபநிஷத்விரதம் கோதான விரதம் உத்வா ஹம் என்னும் கிருத்யங்களுக்கு பதினுறு ஹோமமும் செய்து, அதன்பிறகு வாகீஸ்வர வாகீஸ்வரிகளைப் பூஜித்து உத்வாஸனஞ் செய்து, பின்னர் ஐந்து சமித்தால் அக்னியைக் குறித்து ஓமஞ் செய்துபின் ஆவரண தேவதைகளுக்கும் ஒவ்வொரு ஹோமஞ் செய்வேண்டும். அதன் பின்னர் சிருவத்தினுல் நெய்யையெடுத்து சிருக்கில் நான்குதரம் விட்டு சிருவத்தினுல் சிருக்கைமூடி தன்னு சனத்தினின்றெழுந்து வௌஷட் என்பதை இறுதியாகவுடைய அக்னி மந்திரத்தினுல் பூர்ணுகுதி செய்யவேண்டும். பின்பு மஹா கணேச மந்திரத்தால் பத்தாகுதிசெய்து, வன்னியில் பீடத்தைப் பூசித்து, உத்தேச தேவதையைத் தியானித்து, அந்த அக்னியில்

அந்தத் தேவதையைக்குறித்து நெய்யினால் அக்கினிமுகமும் தேவதையின் முகமும் ஐக்கியமாக விருக்கிறதாகப் பாவித்து, இருபத்தைந்துஹோமம் மூலத்தாற் செய்து,பின்னர் ஏகிபாவமாகப் பாவித்து, அக்னியை ஆத்மாவினிடம் ஒடுக்கிக்கொண்டு ஷடங்க தேவதைகளுக்கு ஹாகுதிகளைத் தனித்தனிசெய்து, அதன்பிறகு பதினொரு ஆகுதிசெய்து, இதனால் வன்னிக்கும் தேவிக்கும் நாடிசந்தானஞ் செய்து, கற்போக்த திரவியங்களைக் கொண்டாவது எள்ளினாலாவது தேவதையினுடைய மூலமந்திரத்தால் ஆயிரத்தெட்டாவர்த்தி ஹோமஞ் செய்யவேண்டியது. இவ்விதம் ஹோமஞ் செய்தபிறகு தேவி சந்துஷ்டையா யிருப்பதாகவும் அப்படியே ஆவரண தேவதைகளும் வன்னியாதி தேவதைகளும் சந்துஷ்டையா யிருப்பதாகவும் பாவித்து பிறகு ஸ்நான சந்தியாதிகளைச் செய்தவனாயும் இரண்டு வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் அணிந்தவனாயும் கையில் கமண்டலந் தரித்தவனாயும் சுத்தனாயு மிருக்கிற சிஷ்யனை குண்டத்துக்குச் சமீபத்தில் வரவழைத்து, ஆசாரியராகிய தன்னையும் சபையிலுள்ளோரையும் குலதெய்வத்தையும் நமஸ்கரித்து தர்ப்பாசனத்தில் உட்காரும்படிச் செய்து, கிருபையுடன் கூடிய நோக்கத்தோடு அவனைப் பார்த்து, அவனுடைய சைதன்னியம் தன்னிடத்தில் சேர்ந்ததாகப் பாவித்து, தேவி அநுக்கிரகத்துக்கு எப்படி யுரியவனாவனோ அப்படி சிஷ்யனுடைய சரீரத்தை திருஷ்டியினாலும் அத்வாக்களை (வழியை) ஓமத்தினாலும் சோதனை செய்யவேண்டியது, எவ்வாறெனில் அவனுடைய சரீரத்தில் ஷடத்துவாக்களைத் தியானித்து, பாதங்களில் கலாத்வாவையும் சந்தியில் தத்வாத்வாவையும் நாபியில் புவனாத்வாவையும் ஹ்ருதயத்தில் வர்ணாத்வாவையும் நெற்றியில் பதாத்வாவையும் சிரசில் மந்திராத்துவாவையும் தியானித்து, அந்தந்த அத்வாக்களை ஸ்வாஹாந்தமாக வுச்சரித்து, எள்ளோடுகூடிய நெய்யிற்றோய்த்த கூர்ச்சத்தினால் சிஷ்யனைத் தொடவேண்டும். பிறகு பிரணவத்துடன் கூடிய அத்வமந்திரத்தினால் எட்டெட்டாகுதிசெய்து, அதன்பிறகு ஷடாத்வாக்களை பிரஹ்மத்தில் ஒடுங்கினதாகப் பாவித்து, மறுபடி சிருட்டிமார்க்கமாய் அத்வாக்கள் பிரஹ்மத்திலிருந் துண்டானதாகப் பாவித்து தன்னிடம் ஒடுங்கிய சிஷ்ய சைதன்னியத்தை சிஷ்ய சரீரத்தில் யோஜித்து, அதன்பிறகு பூர்ணாகுதி செய்யவேண்டும். அதன் பின்னர் குண்

டத்திலிருக்கிற தேவதையைக் கலசத்தில் யோஜித்து மறுபடி வ்யாகிருதி ஹோமஞ்செய்து, அக்கினியினது அங்க ஆகுதிகளை ஒவ்வொருதரஞ் செய்து, அக்னியைத் தன்னிடம் ஒடுக்கிக்கொண்டு, நேத்திர மந்திரத்தினுல் சிஷ்ய நேத்திரத்தை வஸ்திரத்தினுல் கட்டி, குண்டத்தினின்று மண்டலத்தை அடைவித்து, அவன் கையில் புஷ்பத்தைக்கொடுத்து, முக்கிய தேவதையிடத்தில் புஷ்பாஞ்சலி செய்வித்து, நேத்திரபந்தத்தை யவிழ்த்து, குசாசனத்தில் உட்காரச்செய்து, தேகத்தில் பூதசுத்தியும் மந்திர நியாசங்களும் செய்து, சிஷ்யனை எழுப்பி, வேறு மண்டலத்தில் உட்காரவைத்து, கும்பத்தி லிருக்கிற தளிர்களை சிரசில் வைத்து, தேவி மந்திரத்தைஜபித்து, தெய்வ ஸ்வரூபமாக விருக்கின்ற கலச ஜலங்களைக்கொண்டு அபிடேகஞ் செய்து, ரக்ஷார்த்தமாக வர்த்தினி ஜலத்தைத் தெளித்தல் வேண்டும். பிறகு சிஷ்யன் இரண்டு வஸ்திரந்தரித்து விபூதியணிந்து குருசந்நிதியில் உட்கார வேண்டும். கருணாநிதியாகிய ஆசாரியர் தன் இருதயத்தினின்றும் பராசக்தியை வெளிப்படச்செய்து சிஷ்யன் இருதயத்தி லடைந்ததாகப் பாவித்து சிஷ்யனை கந்தபுஷ்பாதிகளால் அருச்சித்து தனக்கும் தேவிக்கும் ஐக்கியபாவமாகவெண்ணி மகாதேவி மந்திரமாகிய தேவிகாயத்திரியை சிஷ்யன் வலக்காதில் மூன்றுமுறை யுபதேசித்தல் வேண்டும். பிறகு தனது தக்ஷிண அஸ்தத்தை சிஷ்யன் சிரசில்வைத்து நூற்றெட்டுரு சிஷ்யன் ஜபிக்கும்படிச் செய்யவேண்டும். ஜபித்தபின்னர் சிஷ்யன் தேவஸ்வரூபமாயிருக்கிற ஆசாரியனைப் பூமியில் தண்டாகாரமாக நமஸ்கரித்து வேறு சிந்தையின்றி சர்வத்தையும் ஆசாரியார்ப்பணஞ் செய்து யாகசம்பந்தமுடைய பிராமணர்களுக்கு தக்ஷிணைகொடுத்து சந்தோஷிக்கச் செய்து போஜனமுஞ் செய்வித்து சுமங்கலிகட்கும் கன்னிகைகளுக்கும் பிரஹ்மசாரிகளுக்கும் தீனர்களுக்கும் ஆதரவு அற்றவர்களுக்கும் தரித்திரர்களுக்கும் தன் சம்பத்துக்குத் தக்கபடி திருப்தி செய்வித்து கிருதார்த்தனுயினேனென்று நினைத்து தினம் இந்த மஹாமநுவை ஆராதித்து வரவேண்டும். ஓ நாரதரே! உனக்குத் தீக்ஷாவிதியை விமரிசையாக சொன்னேன் ஆகையால் நீ தேவி பதாம்புஜத்தைப் பஜிக்கவேண்டியது. இதைக்காட்டிலும் பரமான தருமம் வேறுகிடையாது. வைதிகன் வேதோக்தத்திற் சொல்லியபடி உபதேசஞ் செய்யக்கடவன். தாந்திரீகன் தாந்

திரீகப்படி உபதேசஞ் செய்யக்கடவன். சாரமுள்ள இந்தத் தீக்ஷாவிதியை அந்தந்தப் பிரயோகமுள்ளவர்கள் அந்தந்தப்படி நடத்தவேண்டியது. உன்னால் கேட்கப்பட்டவை யெல்லாம் என்னால் சொல்லப்பட்டது என்று நாராயணர் நாரதருக்குக் கூற அவர் நமஸ்கரித்து தேவி தரிசனத்தை மனதில் நினைத்துக்கொண்டு பராம்பிகையின் பாதகமலங்களைப் பஜித்து பரமகதி யடைந்ததாக வியாசர் ஜனமேஜயனுக்குக் கூறினர். (சு-ம். கருரு௨)

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வ வேதாந்த தாத்பர்ய பூம்யைநம:

## எட்டாம் அத்தியாயம்.

## * கேநோபநிஷத் அர்த்தவர்நநம்.

ஜனமேஜயன் கூறுகின்றான்:—பகவானே! சர்வதர்மங்களையும் சர்வ சாஸ்திரங்களையும் அறிந்தவர்களில் சிரேஷ்டரே! சகலமான பிராஹ்மணர்களுக்கும் வேதத்தில் சத்தியுபாசனை சொல்லப்பட் டிருக்கிறது. மூன்று சந்திகளிலும் வேறு காலங்களிலும் சத்தியுபாசனையே செய்யப்பட்டு வருகின்றது. ஆகவே அச்சத்தியைவிட்டு எந்தக் காரணத்தால் வேறு தேவதையை யாவர் கிரகிப்பார்கள்.

சிலர் வைணவர்களாயும் சிலர் காணபத்யர்களாயும் சிலர் மரவுரி தரித்தவர்களாயும் சிலர் திகம்பரர்களாயுமுள்ள காபாலிகர்களாயும் சிலர் பவுத்தர்களாயும் சிலர் சார்வாகர்களாயும் பிரிவுபட்டவர்களாய் வேதத்தில் சிரத்தை யில்லாதவர்களாக விருக்கின்றனர். ஓ சர்வஜ்ஞரே! மங்களத்தை விடுகிறதற்கு ஒருவருக்கும் புத்தி பூர்வகமாய் இச்சையுண்டாகாது. அப்படி யிருக்க, இவர்கள் இப்படி யிருக்கிறதற்குக் காரணமென்னை! என்பதனையும், முன் கூறியுள்ள மணித்வீப வர்ணனையில் தேவியினது மகத்தானதும் சிரேஷ்டமானதுமான ஸ்தானம் எப்படிப்பட்டது? எப்படி யிருக்கிறது? என்பதனையும் சொல்லவேண்டும். ஆசாரியராயுள்ளார் எந்தவிதமான ரகசியத்தையும் சொல்லுகிறார்களாகையால் தேவரீர் என் விண்ணப்பத்துக் கிரங்கிச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க வியாசர் கூறுகின்றார்.

---

* கேநோப நிஷத்தின் அர்த்தவர்னனை.

ஓ ஜனமே ஜயனே! நீ கேட்டபடி எதைக் கேட்பதினுல் பிராஹ்மணர்களுக்கு வேதத்தில் சிரத்தை யுண்டாகுமோ அதனையும், மணித்வீபத்திலுள்ள தேவியினுடைய ஸ்தான வைபவத்தையும் கூறுகின்றேன். சமயத்துக்கு உசிதமான கேள்வியை நன்ருய்க் கேட்டனே. நீ மிகவும் புத்தியுள்ளவனுயும் வேத அபிப்பிராயத்தில் சிரத்தையுள்ளவனுயும் காணப்படுகின்ருய்.

பூர்வத்தில் அசுரர்கள் மிகுந்த கர்வ முடையவர்களாய் தேவர்களோடு நூறுவருட காலமாய் நானுவிதமான அஸ்திரங்களாலும் சஸ்திரங்களாலும் விசித்திரமான மாயைகளாலும் உலகம் அழியும்படி ஆச்சரியகரமான யுத்தஞ் செய்தார்கள். அப்போது பராசத்தியின் கிருபையினுல் தேவர்கள் ஜயமடைந்தார்கள். அசுரர்கள் அபஜயமடைந்து பாதாளத்தை யடைந்தார்கள். இதன்பிறகு தேவர்கள் பராசத்தியின் செயலை யறியாது தங்களுக்கு நேர்ந்த பராக்கிரமத்தை யெண்ணி நமக்கேன் ஜயமுண்டாக மாட்டாது. நமது மஹிமை சர்வோத்தம மானதன்ருே! பாமரர்களாயும் பராக்கிரம மில்லாதவர்களாயு மிருக்கின்ற தைத்தியர்களெங்கே! யஸஸோடு கூடினவர்களாயும் சிருஷ்டி திதி சங்காரங்களைச் செய்கின்றவர்களாயும் இருக்கின்ற நாமெங்கே! பாமரர்களாகிய தைத்தியர்கதை ஓர் கதையா? என்று மோகத்தினுல் ஒருவருக்கொருவர் சொல்லித் திரிந்தனர். அப்பொழுது அவர்களுக்கு அனுக்கிரகஞ்செய்ய கிருபா சம்பூரணையாகிய ஜகதம்பிகை யக்ஷரூபமாக ஆவிர்ப்பவித்தனள்.

எப்படி யென்ருல் - கோடிசூரியப் பிரகாச முடையதாயும் கோடி சந்திர சீதளகிரணப் பிரகாச முடையதாயும் ஓரே சமயத்திலுண்டான கோடி மின்னற்காந்தி யுடையதாயும் கைகால் முதலிய உறுப்புக்கள் தோன்ருததாயும் இதற்குமுன் ஒருவராலுங் காணக்கூடாத சுந்தரமுடையதாயு மிருக்கின்ற தேஜஸோடுங் கூடிய ஓர் யக்ஷ உருவத்தோடு தோன்றினள்.

அப்போது தேவர்கள் இது வென்ன! இது வென்ன என்று ஆச்சரியமுடையவர்களாயும் பெரிதாயும் செய்யக் கூடாததாயுமிருக்கிற இம்மாயை தானவர்களால் உண்டாகிய சேஷ்டையா! அல்லது நமக்கு அதிசயகரமாக வேறு யாவராலாவது செய்யப்பட்டதா! என்று யாவரும் ஒருங்கேகூடி ஓராலோசனை செய்த

னர். அதாவது நம்மில் யாராவது அந்த யக்ஷவிலுடைய சமீபம் போகவேண்டியது போய் அதன் வரலாற்றை யறிந்து செய்ய வேண்டியவற்றைச் செய்ய வேண்டியது என்று தீர்மானித்துக் கொண்டு தேவேந்திரன் அக்னிதேவனைக் கூப்பிட்டு எங்களுக்கு நீ முகமாயிருப்பதால் நீ முன்னேபோய் யக்ஷஸு யாரென்று அறிந்து கொள்வாயென்று கூற, அவ்வக்னிதேவன் உடனே விரைவாகச்சென்று யக்ஷவின் சமீபத்திற்போய் நீ யாரென்று கேட்டான். அந்த யக்ஷஸு அக்னிதேவனைப் பார்த்து நீயார்! உன்னிடம் என்னபல மிருக்கின்றது! என்முன்னே அவைகளைக் கூறுவாய் என்று கேட்க, அவன் நான் அக்னி ஜாத வேதஸு, என்றும், சர்வத்தையும் தகனஞ் செய்யும் சக்தியுள்ளே னென்றும் கூறினன். யக்ஷஸு அக்னிதேவ னெதிரில் ஓர் துரும்பை எறிந்து அவனைப்பார்த்து நீ லோகத்தை யெல்லாம் கொளுத்துஞ் சத்தியுள்ளேனென்று கூறினையே இச் சிறுதுரும்பைக் கொளுத்துவையோ என்ன! அவன் சகல பலத்தோடும் அதனைக் கொளுத்த எத்தனித்தான் எவ்வளவு எத்தனித்தும் கொளுத்த முடியாமல் நாணமுற்று தேவர்களிடம் போய்ச் சேர்ந்து அவர்களுக்குத் தான் போய்வந்த காரியங்களை நன்கு யறிந்து கொள்ளும்படிச் சொல்லி நமக்கு ஏன் இந்த வீணை அகங்கார முண்டாயிற்று இதனல் ஆவது என்னென்று கூற, தேவர்கள் அவனைவிட்டு வாயு தேவனைப்பார்த்து ஜகமெல்லாம் உன்னிடஞ் சேர்ந்திருக்கின்றது, உன்னசைவினல் உலகமுற்றும் இருந்துகொண் டிருக்கின்றது, எல்லா வுயிர்கட்கும் பிராண ரூபமா யிருக்கின்றாய், சர்வசக்தியையுந் தரிக்கின்றவனா யிருக்கின்றாய், ஆகையால் நீயே அந்த சிரேஷ்டமான யக்ஷஸுவினிடம் போய்வருவாய், உன்னைத்தவிர வேறொருவரும் அறிவதற்குச் சமர்த்தரில்லை என்று சொல்ல, வாயுதேவன் உடனே அகங்காரத்தோடும் அந்த யக்ஷஸுவினிடம் போயினன். யக்ஷஸு அவனைப்பார்த்து நீயார்? உன்னிடம் யாது சக்தியிருக்கின்றது? என்முன் சொல்லுவாயென்று கேட்க, வாயுதேவன் அதிக அகங்காரத்தோடும் நான் மாதரிஸ் (வாயு) வாயிருக்கின்றேன். என்னிடத்தில் சகலத்தையும் சலிப்பிக்கச் செய்யும் வீரியமும் கிரகிக்கும் வீரியமும் இருக்கின்றன. என் சேஷ்டையினல் சகல ஜகத்தும் விகாரப் படுகிறது என்று கூற, யக்ஷஸு இதோ உன்முன்னிருக்கிற இந்தத் திரணத்தை உன்னிஷ்

டப்படி சலிக்கச் செய்வாய். அப்படிச் செய்யாவிடில் உன்னை யனுப்பிய இந்திரனிடம் போய்ச் சேருவாயென்று சொல்ல, உடனே அந்த வாயுதேவன் சர்வசக்தியோடு கூடினவனாய் அந்தத் திரணத்தை அந்த ஸ்தானத்தினின்றும் பெயரும்படி எத்தனித்தான். அது தன்னிடமிருந்து ஒரு சிறிதும் சலிக்காம லிருப்பதைக்கண்டு கர்வமெல்லாம் அடங்கினவனாய் நாணி இந்திரனிடம் போய்ச் சேர்ந்து தனக்குக் கர்வபங்க முண்டான காரணத்தைச் சொன்னான். சொல்லவும் தேவர்களெல்லாங் கேட்டு நாம் ஏன் வீணை கர்வங்கொண்டோம். இந்த யக்ஷஸை யறிய நமக்குச் சாமர்த்தியமோ இல்லாமற் போயிற்று. அந்த யக்ஷஸோ அதிக பயங்கரத்தை விளைவிப்பதாயும் ஒருவராலுங் கண்டறியாத தேஜஸை யுடையதாயும் காணப்படுகிறது என்று இந்திரனைப் பார்த்துச் சொல்லி மறுபடியும் தேவர்களெல்லாம் நீ தேவராஜனானபடியால் நீயே அந்த யக்ஷஸுவினுடைய உண்மையை யறியவல்லவனாவாய் என்று பிரார்த்தித்தனர். உடனே இந்திரன் அந்த யக்ஷஸைத் துறத்தப் போயினான். பராத்பரமாகிய அது ஓடிப்போகாமல் அவனெதிரில் அதிவேகமா யோடிவந்து மறைந்து போயிற்று.

போகவும் இந்திரன் அதிக வெட்கமடைந்து நம்மை இந்த யக்ஷஸு ஒருபொருளாக மதிக்காமலும் நம்மை யொன்றும் வினவாமலும் போயிற்று. நமக்கு முன்வந்த அக்னி வாயுவினிடமோ பேசிற்று, என்று பெருங்குறைவடைந்து நாம் தேவர்களுடைய கூட்டத்தில் போகக்கூடாது. அவர்களிடத்தில் இந்த அவமானத்தை என்னவென்று சொல்லுகின்றது. அவர்களிடம் இதைக் கூறுவதினும் உயிரைவிடுவது மேலானது. ஏனெனில் மகான்களுக்கு மானந்தான் பெரிதான தர்மமாயுள்ளது மானங் கெடுமானால் இறந்தவனுக்குச் சமானமாகு மல்லவா இதிற் சம்சயமில்லை என்று நிச்சயித்து கர்வத்தைவிட்டு கர்வபங்கஞ்செய்த அந்த யக்ஷஸை சரணாகதி யடைந்தான். அச்சமயத்தில் ஓ இந்திரனே! நீ மாயா பீஜத்தை ஜபஞ்செய் அதனால் சுகமடைவாய் என்று ஓர் ஆகாய வாக்குண்டாயிற்று. அதுகேட்டு லக்ஷவருஷம் நிராகாரனாய் தியானத்தினால் கண்ணை மூடிக்கொண்டு பராத்பரமாகிய மாயாபீஜத்தை ஜபஞ்செய்தான். அப்போது அகஸ்மாத்தாக சித்திரைமாசம் நவமிதிதி மத்தியானத்தில் முன் தேஜோரூபமாக யக்ஷஸு உண்டான அந்தஸ்தானத்தில் ஓர் பேரொளி உண்டாயிற்று.

அவ்வொளி, நடுவில் குமாரியாயும் அப்போது தோன்றிய யவ்வனையாயும் ஜபா புஷ்பம்போன்ற காந்தியையும் கோடி யிளஞ் சூரியர்போன்ற பிரகாசத்தையும் சிரோபூஷணமாக பாலசந்திரனை யும் வஸ்திரத்தினுள்ளே பிரகாசிக்கின்ற தனத்தையும் பாசாங்குச வரதா பயங்களாக விருக்கும் அஸ்தங்களையும் மிருதுவாகிய தளிர் போன்ற மேனியையும் உடையவளாயிருப்பதுமன்றி மனோகரையா யும் பக்தர்களுக்குக் கற்பக விருக்ஷம் போன்றவளாயும் நானுவித மான ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டவளாயும் திரிநேத் திர தாரியாயும் மல்லிகை மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட கூந் தலையுடையவளாயும் நான்கு வேதங்களும் வடிவங்கொண்டு நான் குதிக்கிலும் நின்று தோத்திரஞ் செய்யப் பட்டவளாயும் தந்த காந்திகளால் பூமியானது பத்மராகம்போல் பிரகாசிக்கச் செய் கின்றவளாயும் பிரஸந்நையாயும் புன்னகையோடு கூடிய முக முடையவளாயும் கோடி மன்மதர்கள்போல் அழகுடையவளாயும் செவந்த ஆடையுடையவளாயும் செவந்த சந்தனத்தினால் பூசப்பட் டவளாயும் சிவையாயும் ஹைமவதியாயும் சர்வகாரணங்களுக்கும் காரணியாயும் காரணங்கருதாத கருணாகரையாயும் உமாதேவி தோ ன்றினாள். அத்தேவியை நிறைந்த அன்புடன் தெரிசித்துக்கண்கள் ஆனந்த நீர்பொழிய சரீரம் புளகாங்கிதங் கொள்ள நமஸ்கரித்துத் துதித்து இந்த யக்ஷஸு என்ன? எங்கிருந்துண்டாயிற்று? அதன் வரலாற்றைக் கூறவேண்டுமென்று வினவ, தேவி ஓ இந்திரனே! அந்த யக்ஷஸு காரணத்திற்குக்காரணமாகிய என் ஸ்வரூபம், தோ ஷரகிதமாயும் சர்வசாக்ஷியாயும் மாயாதிஷ்டானமாயுமுள்ள பிரஹ்ம ஸ்வரூபம். இனிசகல வேதங்களும் எதனுடைய பாதங்களை நமஸ் கரிக்கின்றதோ, சகல தபசுகளும் எதைச் சொல்லுகின்றதோ, பிர ஜைகள் எந்தவஸ்துவின்மீது அன்புவைத்து பிரஹ்மசரியத்தை ஆஸ்ரயிக்கின்றனவோ, அந்தப்பதத்தைச் சங்கிரகமாகச்சொல்லுகி றேன். ஓம் என்கிற ஏகாக்ஷரம் பிரஹ்மம்; அதையே ஹ்ரீம்சொரூப மாகவும் சொல்லுவர். இந்த இரண்டும் எனக்குப் பீஜமந்திரங் கள். முக்கியமாகிய இந்த இரண்டு பீஜஸ்வரூபமா யிருக்கின்ற நான் ஜகத்தைச் சிருட்டிக்கிறேன் - அதில் ஒருபாகம் சச்சிதானந்த சொ ரூபமெனவும் மற்றொன்று மாயாபிரகிருதிஎனவுஞ் சொல்லப்படும். பராசக்தியாயும் சக்திமதியாயும் ஈஸ்வரியாயுமிருக்கின்ற என்னிடத்

தில் அந்தமாயை சந்திரனிடம் சந்திரிகை எப்படி அபேதமாயிருக்கிறதோ அப்படி அபேதமாயும் சமமாயுமிருக்கிறது. ஜகத்பிரளயத்தில் என்னிடம் அபேதமாயிருக்கும் பிராணிகளுடைய கர்மங்களின் பரிபாகவசத்தால்மறுபடி அவ்யக்தமாயிருக்கிற அந்தமாயைவியக்த (பிரகாச)மாகின்றது. அந்தர்முகமாகவிருக்கின்ற அவஸ்தையாதோ அதுதான் மாயை; பகிர்முகமா யிருக்கிற மாயை யாதோ அதுதான் தமசு. அந்தத்தமசிலிருந்துசத்வமும், சிருட்டி ஆரம்பத்தில்ரஜஸும் உண்டாகின்றன. பிரமவிஷ்ணு ருத்திரர்கள் இம்முக்குணமுடையவர்கள். பிரமனுக்கு ரஜோகுணமும், விஷ்ணுமூர்த்திக்கு சத்வகுணமும், உருத்திர மூர்த்திக்கு தமோகுணமும் அதிகரித்திருக்கும். உருத்திரர் சர்வகாரணரூபத்தையும் அடைவதற்குக் காரணமாயிருக்கிறார். பிரஹ்மா ஸ்தூலதேகமும் விஷ்ணு சூக்ஷுமதேகமும் உருத்திரர் காரண தேகமும் துரியம் நானாகவும் உள்ளேன். சமாவஸ்தையா யிருக்கின்ற தென்று எது சொல்லப் படுகிறதோ அது சர்வாந்தர்யாமியா யிருக்கின்ற நான்தான். உருவமில்லாமலிருக்கின்ற பிரஹ்மம் எதுவோ அந்தப்பிரஹ்ம ரூபமும் நானேதான். என்னுருவை நிர்க்குணம் சகுணம் என்று சொல்லப்படும். நிர்க்குணம் மாயையில்லாதது; சகுணம் மாயையோடு கூடியது. அந்த இரண்டுருவமாயிருக்கிற நான் சகல சகத்தையுஞ் சிருட்டித்து அதற்குள்பிரவேசித்துச்சீவர்களுடையகர்மங்களை அநுசரித்து எப்போதும்அவர்களைத்தூண்டிக் கொண்டிருக்கிறேன். சிருட்டிதிதிசங்காரங்களில் திரிமூர்த்திகளையும் பிரேரேபணைசெய்து கொண்டிருக்கிறேன். வாயுசலிப்பதும், சூரியன் சஞ்சரிப்பதும், இந்திரன் அக்கினி யமன் முதலிய நீங்கள் சஞ்சரிப்பதும் எனது ஆஞ்ஞையினால் தான். என் அநுக்கிரகத்தால் நீங்கள் ஜயத்தையடைந்தீர்கள். மரத்தினாற் செய்யப்பட்ட பதுமை போன்றவர்களாகலான் உங்களை நான் ஆட்டிவைக்கின்றேன். அவரவர்களின் கர்மங்களையநுசரித்து சர்வத்தையுஞ்செய்யும் சுதந்தரி யான். ஆதலால் சிலசமயம் உங்களுக்கு ஜயமும், சிலசமயம் அசுரர்களுக்கு ஜயமும் உண்டாகும் வண்ணம் செய்கின்றேன். சர்வசொரூபமா யிருக்கின்ற என்னை நீங்கள் கர்வத்தினால் மறந்து கரையில்லாத மோகமடைந்து அகங்காரத்தினாற் சூழப்பட்டவராயினீர். உங்களுக்கு அநுக்கிரகஞ் செய்வதற்காக உங்களுடைய தேகத்தினின்றும் வெளிப்பட்டிருக்கிற சிரேஷ்டமான தேஜஸு என்தேஜஸு. ஆகையால் உங்களுக்குண்

டாயிருக்குங் கர்வத்தை விட்டு சச்சிதானந்த ரூபிணியாயிருக்கின்ற என்னைச் சரணமடைவீர்கள் என்றுகூறி, மூலப்பிர கிருதியாயும் ஈஸ்வரியாயு மிருக்கிற மஹாதேவி தேவர்களால் பக்தியோடு துதிக்கப்பட்டவளாய் அப்போதே மறைந்தனள்.

பிறகு பகவதியினுடைய பராத்பரமாகிய பாததாமரையை எல்லாத்தேவர்களும் அகங்காரமற்று ஆராதித்து மூன்று காலங்களிலும் காயத்திரி ஜபத்தையே செய்து யக்ஞ பாகங்களைக் கொடுத்து வழிபட்டு வந்தனர். இப்படி கிருதயுகத்தில் சகல பிராமணர்களும் காயத்திரி மந்திரம் பிரணவம் ஹ்ருல்லேகாமந்திர ஜபம் ஆகிய மந்திர ஜபங்களில் மிகுந்த ஆசையுடையவர்களாக விருந்தார்கள். வேதத்தில் சிலவிடங்களில் விஷ்ணு வுபாசனை நித்தியமாகச் சொல்லப்பட்டிருப்பினும் அது நித்தியமல்ல. ஆகையால் அந்த விஷ்ணு வுபாசனையும் அந்தத்தீக்ஷையும் சிவோபாசனையும் இல்லாதவர்களாயிருந்தாலு மிருக்கலாம். சகலவேதங்களினாலும் காயத்திரியுபாசனை நித்தியமாகச் சொல்லப் பட்டிருக்கிற படியால் அவ்வுபாசனையில்லாமல் இருக்கக்கூடாது. இல்லாத அந்தப்பிராமணனுக்கு எந்தப் பிரகாரத்தினாலும் அதோகதியுண்டாகிறது. பிராமணனுக்குக் காயத்திரியினால் கிருதகிருத்ய முண்டாகிறது. அவனுக்கு காயத்திரியபேக்ஷை தவிர வேறு அபேக்ஷை வேண்டியதில்லை. அதை ஜபிக்கிற பிராமணன் மோக்ஷமடைகிறான். உலகத்தில் தர்மத்தைப்பரிபாலிக்க வந்த மநுவானவர் அந்தணர்கள் வேறு கிருத்யங்களைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் காயத்திரி யுபாசனைமாத்திரம் விடாமல் செய்யவேண்டிய தென்றும் அதைவிட்டு வேறு உபாசனை செய்கின்றவன் நரகடைவா னென்றுங் கூறியிருக்கின்றனர். ஆதலால் ஓ ராஜனே! முதல்யுகத்தில் காயத்திரி ஜபபராயிருக்கின்ற பிராமண சிரேஷ்டர்கள் தேவிபதாம்புஜத்தில் பக்தியுள்ளவர்களாயிருந்தார்களென் றறிவாய் என்றனர்.　　(சு - ம் கூஉ௯.)

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

உ

ஸதஸதாஸ்ரயாயை நமஃ

# ஒன்பதாம் அத்தியாயம்.

## * பிராஹ்மணனும் கவுதமசாபம்.

வியாசர் கூறுகின்றார்;—அரசனே! காயத்திரி ஜபவிசேடத்தை கவுதம முனிவர் சரித்திரத்தால் தெரிவிக்கிறேன் கேட்பாயாக. ஓர்காலத்தில் பிராணிகளுடைய கர்மவசத்தால் பன்னிரண்டுவருடம் இந்திரன் மழைபெய்விக்காமலிருக்க அதனால் மனிதர்கள் சாகும் படியான துர்ப்பிக்ஷ முண்டாகி பிணங்களுடைய கணக்கை எண்ணமுடியாமற் போய்விட்டது. சிலர் பசியினால் குதிரைகளையும் பன்றிகளையும சிலர் மனிதசபங்களையும் புசித்து வந்தனர். சிசுக்களைத் தாயும் ஸ்திரிகளைப் புருஷர்களும் சாப்பிட்டனர். இவ்வாறு பிராணிகளெல்லாம் பசியினால் பீடிக்கப்பட்டு உண்ணுதன வெல்லாம் உண்ண, அப்பொழுது பிராமணர்களில் அனேகர் கூடி நாமனைவரும் கவுதமரிடம் போவோம் அவர்தபசையே தனமாகவுடையவர் காயத்திரி ஜபத்தை மறவாதவர் அவர் நமது வறுமையைப்போக்கு வார் அவருடைய ஆச்சிரமம் சுபிக்ஷமாயிருக்கிறதென்று அநேகர் போயிருக்கின்றனர். ஆனபடியால் அவருடைய ஆச்ரமத்தை யடைவோம் என்று ஆலோசித்து குடும்பிகளாயும் அக்னிஹோத்திரத் தோடும் பசுமாட்டை யோட்டிக்கொண்டு வேலைக்காரர்களோடும் அவ்வாச்சிரமத்தினுடைய நான்கு திக்கின் வழியாக வந்துசேர்ந்தனர். அக்கூட்டங்களைக் கவுதமர் பார்த்து நமஸ்கரித்து ஆசனங்கொடுத்து அர்க்கியபாத்திய ஆசமனாதிகளால் பூஜித்து குசல ப்ரஸ்னம் வினவி நீங்களனைவரும் இங்குவந்தகாரணம் யாதோவென்று கேட்டனர். அவ்வந்தணர்கள் அடங்காத துக்கத்தோடும் தங்களுடைய விருத்தாந்தங்களைத் தனித்தனியே சொன்னார்கள். கவுதமர் மிகவும் இரக்கமுடையவராய் துக்கமடைந்திருக்கிற அந்தப்பிராமணர்களைப்பார்த்து அபயங்கொடுத்து ஓ அந்தணர்களே! இவ்வாச்சிரமம் எப்போதும் உங்களுடையது தான். நான் உங்களுடைய அடியவனாயிருக்கிறேன். அவ்வாறிருக்கும்

* அந்தணர்களுக்கு கவுதமர் இடுஞ் சாபம்.

பொழுது உங்களுக்கு என்னசிந்தனையிருக்கின்றது.நான் தன்யனாய் விட்டேன். நீங்களெல்லோரும் மஹாதபோதனர்கள். உங்களுடைய தெரிசன மாத்திரத்தில் தீயவொழுக்கங்களெல்லாமரிய நல்லொழுக்கங்களாய் விடுகின்றன. உங்கள் பாத தூளியினால் என்கிருகம் சுத்தமாய்விட்டது. உங்கள் அநுக்கிரகத்தால் என்னைவிட தன்யராயுள்ளவர் யாவர்! நீங்கள்யாவரும் சந்தி ஜபம் பாராயண முதலியவற்றைச் செய்துகொண்டு சுகமாயிருங்களென்று சொல்லி காயத்திரிதேவியைத் தியானித்து மிக்கபக்தியோடு வணங்கிய கழுத்துடையவராய் வந்திந்து ஹேதேவி! வித்யே ஹே வேதமாதாவே! பராத்பரே! வ்யாகிருதிமுதலிய மகாமந்திரரூபியே! பிரணவரூபிணியே! சமானுவஸ்தரூபிணியே! ஹிரீங்காரரூபிணியே! சுவாஹா சுவதாரூபிணியே! சகலார்த்தத்தையுங் கொடுக்கின்ற வுன்னைநமஸ்கரிக்கிறேன். பக்தர்களுக்குக் கற்பகவிருக்ஷம்போலும் அவஸ்தாதிரயங்களுக்கு சாக்ஷியாயும் துரீயாதீதஸ்வரூபிணியாயும் சச்சிதானந்த ரூபிணியாயும் சகலவுபநிஷத்துக்களால் அறியத்தகுந்தவளாயும் சூரியமண்டலவாசினியாயும் பிராதக்காலத்தில் சிவந்தநிறமுள்ள பாலையாயும்மத்யான காலத்தில் சிறந்த யவ்வனையாயும் சாயங்காலத்தில் கறுப்பு நிறமுள்ள விருத்தையாயு மிருக்கின்ற வுன்னை நித்தியம் நமஸ்கரிக்கின்றேன். சர்வப்பிராணிகளது ஞானேதயத்துக்கு அரணியாயிருப்பவளே! பரமேஸ்வரியே! நீ எங்களாலுண்டாகும் அபராதத்தை க்ஷமிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தனர். ஜகன்மாதாவும் பரமகலாரூபியாயுமிருக்கின்ற காயத்திரிதேவி பிரத்யக்ஷமாய் தெரிசனங் கொடுத்து எதனால் யாவரையும் ரக்ஷிக்கப்படுமோ அப்படிப்பட்ட சர்வபோஷண பாத்திரத்தைக் கொடுத்து ஓ கவுதமா! நீ எதனை விரும்புகின்றனையோ அவைகளையெல்லாம் இப்பாத்திரங்கொடுக்கும். நீ பெற்றுக்கொள்ளென்று கூறி மறைந்து போயினள்.

பின்னர் பர்வதத்துக்குச்சமமாக அன்னராசிகளும் அறுசுவை பதார்த்தங்களும் திவ்யமான பூஷணங்களும் பட்டுகளும் வஸ்திரங்களும் யக்ஞத்துக்குரிய திரவியங்களும் பாத்திரங்களும் இவைபோலும் கவுதம முனிவரால் வேண்டப் படுவன வெல்லாமும் அப்பாத்திரத்தி லிருந்துண்டாயிற்று. முனிவர் கண்டு மகிழ்ந்து எல்லாப்பிராமணர்களையும் வரவழைத்து அவைகளை யெல்லாங் கொடுத்தனர். மறுபடியும் அப்பாத்திரத்தி லிருந்து பசு எருமை ஆடு முத

லியவைகளும் அவைகட்கு ஆகாரமான அநேகவித புற்களும் யக்ஞத்துக்குரிய கிருச்ரவமுதலிய சம்பாரங்களும் திரிலோகத்தும் எங்கெந்த வஸ்துக்கள் சுந்தரமுள்ளனவாகக் காணப்படுகின்றனவோ அவைகளெல்லாமும் உண்டாக அவைகளையும் முனிவர்கொடுக்கப்பெற்றுக்கொண்டு அந்தணர்கள் மிக்கசந்துஷ்டர்களாய் யக்ஞஞ் செய்ய ஆரம்பித்தனர்.

ஓ அரசனே! அந்தவிடத்தைப் பார்க்கும்போது சுவர்க்கத்துக்குச்சமானமாகப்பிரகாசித்தது. பிராமணர்களும் பிராமணஸ்திரீகளும் வஸ்திராதி பூஷணங்களாலும் சந்தனுதி சுகந்தபுஷ்பங்களாலும் அமரரைப்போலும் அப்சரஸ்திரீகளைப்போலுங் காணப்பட்டனர். இவ்வாறு கௌதமர் ஆச்சிரமம் நித்யோத்ஸவத்தோடு கூடினதாயும் சிறிதும் ரோகமுதலிய பயமற்றதாயும் அசுரபயம் சிறிதும் அணுகாததாயும் நான்குபக்கமும் நூறு யோசனை தூரம் விசாலமுள்ளதாயும் பிரகாசித்தது. இவ்விதமான சிறப்பால் அந்தணர்களே யன்றி இதரமானவர்களும் அங்குவர, அறிவிற் சிறந்த கௌதமர் யாவருக்கும் அபயமளித்துப் போஷித்து வந்தனர். அவ்வாச்சிரமத்தில் நடக்கும் சாஸ்திரோக்தமான அநேக யாகங்களால் தேவர்கள் சந்தோஷமடைந்து கௌதமரது கீர்த்தியைச்சொல்லிக்கொண் டிருந்தனர். இந்திரன் தனது சபையில் மநிதர்கள் சாகும்படியான இந்தக்ஷாமகாலத்தில் அவிசு வபை முதலானவையுண்டாதல் துர்லபமாயிருக்க அவையெல்லாம் அளவில்லாம லுண்டாகின்றன. இங்குள்ள நமது கற்பகவிருக்ஷம் நம்முடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்கின்றது என்று சொல்லிக் கொண்டிருந்தனன். இவ்வாறு இந்திராதி தேவர்களால் போற்றத்தக்கவரா யிருந்தும் கவுதமர் சிறிதும் அகங்கார மின்றி பன்னிரண்டுவருடம் முநிகணங்களையெல்லாம் புத்திரர்களைப்போல ரக்ஷித்து வந்தனர்.

இதுவுமன்றி சகல முநிசிரேஷ்டர்களும் அந்தந்த விடங்களில் காயத்திரி தேவியாகிய ஜகதம்பிகையைப் பூசிக்க முக்கிய மான விடங்களை யேற்படுத்தினர். அவ்விடங்களில் இன்னும் பக்தியோடு புரஸ்சரணைசெய்யும் பிராமணர்களுக்கு தேவி காலையில் பாலையாயும் நடுப்பகலில் யுவதியாயும் மாலையில் விருத்தையாயுந் தோன்றுகின்றுள்.அப்படிப்பட்ட இடத்தில் மஹதிஎன்னும்வீணையை மீட்டிக்கொண்டும் காயத்திரிதேவியினுடையபரமகுணங்களைக்

கானஞ்செய்து கொண்டும் நாரதர் பரிசுத்தாத்மாக்களாகிய ருஷிக
ளுடைய சபாமத்தியில் வந்துட்கார்ந்தனர். அப்போது கௌதமர்
முதலியோர் சாந்தராகிய அவரைப் பூஜித்தார்கள். நாரதரும் கௌ
தமருடைய கீர்த்தியை யெடுத்துச்சொல்ல ஆரம்பித்து ஓ பிரம்ஹ
ருஷியே! தேவசபையில் தேவேந்திரன் நீர் ருஷிகளைப் போஷிப்ப
தனு லுண்டாகிய கீர்த்தியைச் சொல்ல அதை நான்கேட்டு உம்
மைப்பார்க்கவந்தேன். ஹேமுநிஸ்ரேஷ்டரே! ஜகதம்பிகையின் அநு
க்கிரகத்தால் தன்யராயிருக்கின்றீரென்று கூறி முன்சொன்ன காய
த்திரி ஸ்தானத்தைச் சேர்ந்து பிரீதியினுல் விகசித்திருக்கும் நேத்
திரங்களை யுடையவராய் ஜகதம்பிகையைப் பார்த்து விதிப்படி துதி
த்து சுவர்க்கம்போய்ச் சேர்ந்தனர்.

பிறகு கௌதமரால் போஷிக்கப்படும் பிராமணர்களெல்லாம்
கௌதமருடைய உத்கரஷத்தைக் கேள்விப்பட்டு அசூயை (பொ
றுமை) யினுல் கர்வமடைந்து எவ்விதஞ்செய்தால் இவரது கீர்த்தி
போய்விடுமோ அவ்விதஞ் செய்யவேண்டுமென்று எத்தனித்திருக்
கும்பொழுது பூமியிலெங்கும் மழைபொழிய ஆரம்பித்தது. எல்லாத்
தேசங்களிலும் சுபிக்ஷமுண்டாயிறறு. அதை அவ்வந்தணர்கள்கே
ட்டு கவுதமரைச் சபிக்க எத்தனித்தார்கள். அந்தோ! இந்தப்பிராம
ணர்களுடைய தாய்தந்தையர்கள் எவ்விதமான புண்ணியஞ் செய்த
வர்களோ அவர்களுடைய உற்பத்தி எப்படிப்பட்டதோ ஓ அரச
னே! நானறியேன். (என்றுல் இவர்களைப் பெற்றவர்களுடைய பாவ
த்துக் களவில்லை என்றும் அவர்களுடைய வுற்பத்தி குற்றமுடைய
தென்றும் கூறியதாகும்) காலமகிமையையாவரால் சொல்லமுடியும்.

ஓ பூபாலனே! அவ்வந்தணர்கள் எவ்விதமாய் சபிக்கத்தொடங்
கினுரென்றுல் மிகக்கிழமாயும் பிராணன்போகும் சமயமாயுமுள்ள
ஓர் மாயாரூபமான பசுவை நிர்மித்து அதனைக் கவுதமர் ஹோமஞ்
செய்யுங்காலத்தில் அவ்வோமசாலையை யடையும்படிச் செய்தனர்.
கௌதமர் அதனை ஹூம்ஹூம் என்னுஞ் சப்தத்தால் தடுத்தனர்.
அப்பசு அவ்வொலிக்குப் பயந்து பிராணனைவிட்டது. அங்கிரு
ந்த ருஷிகளெல்லாம் துஷ்டராகிய இந்த கவுதமரால் பசுகொல்லப்
பட்டதென்று கூச்சலிட்டு ஆரவாரஞ்செய்தனர். கௌதமர் ஓம
த்தைப் பூர்த்திசெய்துவிட்டு பசுவானது இறந்ததைக்கண்டு மிக

வும் ஆச்சரியமடைந்து சமாதிநிஷ்டராயத் தியானஞ்செய்து பசு இறந்தகாரணத்தைச் சிந்தித்து அறிந்துகொண்டு அப்போதே பிரளயகால வுருத்திரரைப்போல் கோபித்து கண்செவந்து ஹே பிராமண அதமர்களே! நீங்கள் வேதமாதாவாகிய காயத்திரியினிடத்திலும் அதன் தியானத்திலும் ஜபத்திலும் பராமுகர்களாயிருக்கக்கடவீர். வேதத்தினிடத்தும் அதிற்கூறும் யாகங்களிடத்தும் அந்தவசனங்களிடத்தும் ஈஸ்வரனிடத்தும் ஈஸ்வரவிஷயமான சாஸ்ரங்களிடத்தும் மந்திரத்தினிடத்தும் அசத்புத்தி யுடையவர்களாயும் அஃதேபோல் மூலபிரகிருதியிடத்தும் ஸ்ரீ தேவியிடத்தும் அவர்கள் தியானத்தினிடத்தும் கதைகளிடத்தும் நீங்கள் பராமுகமாக விருக்கக்கடவீர். தேவிமந்திரத்தினிடத்தும் தேவிஸ்தானத்தி னிடத்தும் தேவியுபாசனுகர்மத்தினிடத்தும் தேவிவுற்சவதரிசனத்திலும் தேவி நாமவுச்சாரணையிலும் தேவிபக்தனைச் சமீபிப்பதிலும்தேவிபக்தனுடைய பூஜையிலும் ஈஸ்வரனுடைய வுற்ஸவத்திலும் தெரிசனத்திலும் ஈஸ்வரபக்த பூஜை செய்வதிலும் பஸ்ம ருத்திராக்ஷ பில்வ முதலியவைகளிலும் சிரௌதாசார ஸ்மார்த்தா சாரங்களி லும் ஜ்ஞானமார்க்கத்திலும் அத்வைதஞான த்திலும் சாந்தி தாந்தியாதி சாதனங்களிலும் நித்யகர்மாநுஷ்டானங்களிலும் அக்னிஹோத்திர முதலியவற்றைச் செய்வதிலும் வேதாத்தியயனஞ் செய்வதிலும் வேதப்பிரவசனத்திலும் கோதான முதலிய தானங்களிலும் பிதுர் ஸ்ரார்த்தாதிகளிலும் சாந்திராயணமுதலிய கிருச்சிரமபிராயச்சித்தங்களிலும் பராமுகர்களா யிருக்கக்கடவீர்கள். ஸ்ரீ தேவியைத் தவிர இதரதேவதைகளிடத்து பக்திசிரத்தையோடு கூடினவர்களாயும் சங்க சக்கிராங்கிதர்களாயும் இருக்கக்கடவீர். காபால தந்திரத்திலும் பௌத்தசாஸ்திரங்களிலும் பாஷண்டாசாரத்திலும் ஆசக்தியுள்ளவர்களாகக் கடவீர். பிதா தாய் மகன் உடன்பிறந்தவன் கன்னிகை பாரியை இவர்களை விற்பனை செய்யுந் தொழிலுடையவராவீர்கள். வேதம் தீர்த்தம் தர்மம் இவைகளை விக்ரயஞ் செய்யக் கடவீர்கள். பாஞ்சராத்திரம் காமசாஸ்திரம் காபாலிகம் பௌத்தம் இந்தமதங்களில் சிரத்தையுடையவராகக் கடவீர்கள். மாதா கன்னிகை உடன்பிறத்தார் பரஸ்திரீ இவர்களோடு புணரக்கடவீர். உங்களுடைய வம்சத்திலுண்டாகும் ஸ்திரீ புருஷர்கள் நான்கொடுத்த சாபத்தீயால் தக்தப்பட்டவர்களாக உங்களைப்போலவே ஆகக்

கடவர்கள். நானதிகமாகச்சொல்லுவதலென்ன. மூலப்பிரகிருதி யாயும் ஈஸ்வரியாயும் சிரேஷ்டையாயுமிருக்கிற காயத்திரி உங்களிடம் கோபித்தவளாகக்கடவள். இருள்மயமாயிருக்கிறகிருகம் உங்கட்குஸ்தானமாக சித்திக்கக்கடவது. என்றிவ்வண்ணமான கொடுஞ்சாபத்தைக் கொடுத்து சலத்தைத்தொட்டு பின்னர் மிக்க ஆவலுடன் தனது பூஜாஸ்தானத்தை யடைந்து காயத்திரி தேவியைத் தெரிசித்து நமஸ்கரித்தனர். அப்போது சிரேஷ்டமாகிய தேவி சாபகிரஸ்தாளாகிய பிராஹ்மணருடைய கிருத்யத்தைப் பார்த்து புன்சிரிப்பாகச் சிரித்தனள். நாளைக்கும் அத்தேவி அங்கு சிரிப்புடையவளாகக் காணப்படுகிறாள். ஓ அரசனே! அத்தேவி முநிசிரேஷ்டராகிய கௌதமரைப் புன்சிரிப்புடன் பார்த்து பாம்புக்குக் கொடுத்த பால் எப்படி விஷமாகின்றதோ அப்படி இவர்களுக்கு நீ செய்த நன்றியாயிற்று. மகாபாக்கிய சாலியாகிய ஹே கௌதமனே! மனவெப்பமொழிந்து சாந்தியடையக்கடவாய். உலகரீதி இப்படிப்பட்டது என்று திருவாய் மலர, கவுதமர் தேவியைநமஸ்கரித்துத் தன்னிடத்தை யடைந்தார். பிறகு பிராமணர்களெல்லாம் கவுதமர் சாபத்தால் தகிக்கப்பட்டு வேதராசிகளை மறந்து காயத்திரியையு மறந்தனர்.

பின்னர் இவர்களெல்லாம் ஏக்கங்கொண்டவர்களாய் கவுதமரைத் தண்டாகாரமாய் நமஸ்கரித்து லச்சையினால் இறங்கின முகமுடையவர்களாய் வேறொருவார்த்தையுஞ் சொல்லாமல் அநுக்கிரகிக்கவேண்டும் என்று நான்குபக்கமுஞ் சூழ்ந்து பிரார்த்தித்தார்கள். கருணாசாலியாகிய கவுதமர் அவர்களைப்பார்த்து என்வார்த்தை எப்பொழுதும்பொய்யாகாது நீங்கள் அனைவரும்கிருஷ்ணாவதாரம்வரையில் கும்பீபாகத்திலிருக்கக்கடவீர். கலியுகத்தில்உங்களுக்குச்சன்மமுண்டாகும். அப்போதுநான்சொன்னவையெல்லாம் உண்மையாய்ச்செய்யத்தக்கவராவீர்கள். அச்செய்கை வுங்களைவிட்டுப்போகாது. சாபவிமோசனத்தில் ஆசையிருந்தால் காயத்திரியின் பாதபங்கஜத்தைச் சேவியுங்களென்று சொல்லியனுப்பிவிட்டு இது பிராரத்தம் என்றுசொல்லி கோபத்தைவிட்டு மனோசாந்தியடைந்தனர்.

பின்னர் கவுதமர் கூறியபடியே கிருஷ்ணாவதார முடிந்து கலியுக முண்டான காலத்தில் சாபமடைந்தவர்களாகிய அந்தணர்களெல்லாம் கும்பீபாகத்தினின்று வெளிப்பட்டு பூமியிற்றோன்றி திதி

சந்தியைவிட்டும் காயத்திரிஜபத்தை விட்டும் வேதத்தில் பக்தியை யிழந்தும் பாஷண்டமதத்திற் புகுந்தும் அக்னி ஹோத்திர முதலிய சத்கர்மங்களைக் கைவிட்டும் தேவர்களுக்கும் பிதுர்க்களுக்கும் அன்னாதிகள் கொடுப்பதைக் கைவிட்டும் தருமமூலத்தை யறியாதவர்களாய் தப்த முத்திரைகளைத் தரிக்கின்றவர்களாய் மனம்போன வழியே ஆசாரங்களை யநுட்டிக்கின்றவர்களாய் காபாலிகளாயும் பௌத்தாளாயும் க்ஷமணாளாயும் பண்டிதர்களாயிருந்தாலும் துராசாரத்தைக் கைக்கொண்டவர்களாயும் பரஸ்திரீகளிடம் ஆசையுள்ளவர்களாயும் இருப்பவராயினர். ஓ அரசனே! அவர்கள் அப்போது செய்யும் கர்மங்களால் மறுபடி கும்பீபாகத்தை அடையப்போகிறார்கள். ஆகையால் எவ்விதத்தினாலும் நித்யமாகிய பரமேஸ்வரி யுபாசனையைச் செய்யவேண்டியது. அதைவிட்டுவேறு வுபாசனை நித்யமானதன்று. சக்தியுபாசனைதான் நித்தியமானது. அஃதில்லாவிடில் கீழே வீழ்வான். இது வரையில் அந்தணர்களுக்குத் தேவியினிடம் பக்திவராமைக்குக் காரணம் கவுதமர் சாபமெனக் கூறினேன். இனி பவாரணியாயும் ஆத்யையாயு மிருக்கிற புவனேஸ்வரியினுடைய மேலான ஸ்தானம் எதுவோ அந்த மணித்வீப வர்ணனையைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. (சு. )

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸகலாயை நமஃ

## பத்தாவது அத்தியாயம்.

## மணித்வீப வர்ணனம்.

---

வியாசர் கூறுகின்றார்:—பிரமலோகத்தின் மேற்பாகத்தில் சர்வலோகமும் இருக்கிறதென்று எது கேட்கப்பட்டதோ அதுதான் மணித்வீபமென்று சொல்லப்படும். அதிற்றான் தேவி பிரகாசிக்கின்றாள். இது வைகுண்டம் கைலாசம் கோலோகம் என்பவைகளையும் பூலோகமுதலிய எல்லாவுலகங்களையும் தன்னுட்கொண்டிருத்தலால் சர்வலோகமென்றும் தேவிதான் எப்பொழுதும் வசிப்பதற்குத் தனது சுவேச்சையாக மூலப்பிரகிருதி

யினின்றும் கற்பிக்கப்பட்ட படியினுல் சர்வலோகாதிகம் என்றும் சொல்லப்படும். இதனினுஞ் சிறந்ததும் அழகான இவ்வுலகத்துக்குச் சமானமானதும் மூவுலகிலும் இல்லே. பிறவித்துன்பத்தை நாசஞ்செய்கிற இந்த மணித்வீபம் திரிலோகத்துக்கும் கொடைபோ லிருக்கிறது. இதுவே பிரமாண்டத்துக்குச் சாயையாயும் அனேக யோசனே தூரம் அகல முள்ளதாயும் அழகாயும் நாற்புறமும் அமிர்தசாகரத்தால் சூழப்பட்டதாயு முள்ளது. அக்கடலானது காற்றினுல் மோதும் அலேகளே யுடைத்தானதாயும், இரத்னம் போற் பிரகாசிக்கின்ற மணற்பரப்பை யுடைத்தானதாயும், அநேகவிதமான மச்சங்களாலும் சங்கினங்களாலும் வியாபரிக்கப் பட்டதாயும், அலேமடிந்து வீழுந்தோறும் சிதறும் திவலேகளினுல் குளிர்ந்திருக்கும் நிலப்பரப்பை யுடைத்தானதாயும், அநேகமான கொடிமரங்களோடு கூடியுள்ள மரக்கலங்களே யுடைத்தானதாயும், நான்குபக்கங்களினும் விருக்ஷங்களால் பொலிவுபெற்றிருக்குந் தன்மையை யுடைத்தானதாயும் உள்ளது. அதற்கு வடக்கில் நான்கு துவாரத்தோடுங்கூடி ஏழுயோசனே உயரமுள்ள இரும்பினுல் அமைக்கப்பட்ட மதில் ஒன்றிருக்கின்றது. அதில் அநேக அஸ்திர சஸ்திரந் தரித்தவர்களாயும், யுத்தத்தில் சமர்த்தர்களாயும் உள்ள காவலாளிகள் வாசஞ்செய்வர். ஒவ்வொருதுவாரங்களில் எண்ணிறந்த துவாரபாலகர்களும், தேவியினுடைய பக்தகணங்களும், ஜகதீஸ்வரியினுடைய தெரிசனுர்த்தம் வருகின்றவர்களுடைய கூட்டங்களும் நெருங்கியிருப்பதோடு அவர்களுடைய வாகனங்களும் அணியணியாய் நெருங்கிக்கிடக்கும். விமானங்கள் ஒன்றோடொன்று உராய்வதினுல் உண்டாகும் மணிகளின் ஓசை எங்கும் பரவியிருக்கும். திசைகளெல்லாம் குதிரைகள் கனேக்கும் கனேப்பொலியாலும் அவைகளின் குளம்படியின் படபடப் பொலியாலும், காதுகளெல்லாம் செவிடுபடும். ஜனமேஜயனே! அந்தத் திசைகளில் கையில் பிரம்புவைத்திருக்கிற கூட்டத்தவர்கள் வரிசை வரிசையாய் நிற்பார்கள் அவர்கள் அவ்வழியாய்வரும் தேவகணங்களேத் தாங்கள் தாங்கியிருக்கும் பிரம்பினுலடிக்க அவ்வடியினுல் அவர்களெல்லாம் அலறும்ஓசையும்நிறைந்திருக்கும். அந்தக்கோலாகலத்தினுல் இது இன்னவோசை இது இன்னசப்தமென்றறியமுடியா. இவ்வோசைகளேயன்றி இன்னும் அநேகவிதமான துவனிக

ளும் துவனித்துக்கொண் டிருக்கும். இதனால் இது இன்னசத்த மென்றும், இது இன்ன வோசை என்றும், இது இன்ன ஒலி என்றும் ஒருவராலும் அறிதற்குக்கூடா. அந்த மார்க்கங்களில் நீர்நிறைந்திருக்கிற தடாகங்களும் இரத்தினமயமான விருக்ஷங்களும் பிரகாசிக்கும். அதற்குவடக்கில் வெண்கலமயமான மண்டபம் ஒன்றுண்டு. அதைச்சூழ்ந்து ஆகாயத்தை யளாவியிருக்கும் கோபுரங்களோடு மகத்தான பிராகாரம் ஒன்றுளது. அதுமுன்சொன்ன பிராகாரத்திலும் நூறுமடங்கு அதிகமான காந்தியோடு பிரகாசிக்கும். அங்கு உலகில் எவ்வளவு விருக்ஷசாதிகளுண்டோ அவ்வளவும் எப்போதும் நறுமணங்கமழும் புஷ்பம் பழம் தளிர் இவைகளோடு கூடினதா யிருக்கும். பலா மகிழம் வெள்ளலோத்தி செம்பாலை கரணிகாரம் கோங்கு அசோகு தேவதாரு முதலிய விருக்ஷசாதிகளுடைய வனங்களும் உபவனங்களும் இவ்வனங்களோடு பிசினியை யுடைய மதத்தவிருக்ஷங்களும் அநேகதடாகங்களும் அங்குசூழ்ந்திருக்கும். மேலேசொல்லிய அந்தவனங்களில் ஆறு ருதுக்களிலும் உண்டாகவேண்டிய பலன்கள் எவை எவையோ அவைகளெல்லாம் தவறாது எப்போதும் உண்டாகும். குயிலோசைகளாலும் வண்டுகளுடையரீங்கார சப்தங்களாலும் அநேக பக்ஷிகளுடைய சஞ்சாரங்களினாலும் அநேகவிதமான ரசங்கள் நதிகளாய்ப் பெருகி வருவதினாலும் புறா கிளி அன்னம் இவைகளுடைய ரக்கைகளின் அசைவினால் உண்டாகும் காற்றினால் அசைகிற விருக்ஷங்களினாலும் அவ்விருக்ஷங்களின்சுகந்தத்தைக் கவர்ந்துவருகிற காற்றினாலும் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருக்கிற அநேக பெண்மான்களாலும் நிருத்தஞ்செய்கின்ற மயில்கூட்டங்களின் சுகமானகேகா சப்தங்களினாலும் சோபிதமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும். இதற்கு வடக்கில் சதுராகாரமாகவும் ஏழுயோசனை யுயரமுள்ளதாகவும் ஓர்தாம்பிரப்பிராகாரம் இருக்கின்றது. அதுபொன்போன்றமலர்இலைஇவைகளால்பிரகாசிக்கிறதாயும்பத்துயோசனை தூரம் வியாபரிக்கப்பட்ட வாசனையுடைத்தானதாயும் உள்ள கற்பகவிருக்ஷங்களால் சூழப்பெற்றது. அவ்விடத்தில் எப்போதும் வசந்தருதுவானவன் புஷ்பசிம்ஹாசத்தில் உட்கார்ந்து புஷ்பக்கொடை நிழல்செய்ய புஷ்பபூஷணங்களினால் அலங்கரிக்கப்பட்டு புஷ்பங்களினின்றும் பெருகாநின்ற தேன்வெள்ளத்தினால் சுழல்கின்றகண்களோடு இருப்பன்.

அவனோடு அவனுடைய மது மாதவிஎன்னும் ஸ்திரீகளிருவர் புன்சிரிப்புடன் கிரீடித்துக்கொண்டிருப்பர். அங்கு கானஞ்செய்யும் கந்தர்வர்கள் தங்கள் ஸ்திரீகளுடன் நிறைந்திருப்பர். கோகிலங்களுடைய சப்தங்கள் நிறைந்திருக்கும். வசந்தகால வுல்லாசத்தை அவாவும் காமிகளுக்கு மனோரதத்தைவிருத்திசெய்யும். அதற்குவடக்கில் ஏழுயோசனையுயரமுள்ள ஈயப்பிராகாரம் ஒன்றிருக்கின்றது. அது சாலைகள்தோறும் பத்துயோசனை தூரம் வாசனைவீசும் சந்தன விருக்ஷங்களையும் பொன்போல்பிரகாசிக்கின்றதாயும் எப்போதும் மலர்ந்திருக்கும் மலர்களும் அமிர்தம் போன்ற ரசங்களும் மதுரமுள்ள பலன்களுமுள்ள கற்பகவிருக்ஷங்களையு முடையது. அவ்வனத்தில் கிரீஷ்மருது நாயகன்சுக்ரஸ்ரீ சுசிஸ்ரீ என்னும் மனைவிகளுடன் சுகித்திருப்பன். அங்கு சகலஜனங்களும் தாப நிவிர்த்தியின் பொருட்டு தங்கியிருப்பர். வேதங்களையறிந்த சித்தர்களிருப்பர். திவ்யமான சந்தனபுஷ்பமணிந்த அநேகஸ்திரீகள் கையில் விசிறியுடையவர்களாகவிருப்பர். இவரொழிந்த அநேகர் கூட்டம் கூட்டமாக சீதளமானஜலத்தின் குளிர்ச்சியை விரும்பி வந்திருப்பர். அதற்குவடக்கில் ஏழுயோசனை யுயரமுள்ள பித்தளைப்பிராகார மொன்றுண்டு. அது அரிசந்தன விருக்ஷங்களாலும் புதியதளிர்களையுடைய விருக்ஷங்களாலும் பசியபுற்களாலும் நிறையப்பெற்றும் நதிநதங்களுடைய பிரவாகங்களையும் ஆசையுடையவனுடைய மனம்போல் கலங்கப்பெற்ற சரசுகளையும் தேவியினுடைய வுபாசனகர்மத்தைச் செய்யும் சித்தர்களும் தேவர்களும் வசிக்கும் சிறந்த இடங்களையும் உடைத்தாயுள்ளது. தேவியின்பொருட்டு தடாகங்கள் கிணறுகள் முதலிய தருமங்களைச் செய்தவர்கள் தங்கள்ஸ்திரீகளோடு இருக்கப்பெற்றுள்ளது. அந்தப்பிராகாரத்தில் மேகவாகனனாகிய வருஷருதுஎன்னும் நாயகன் வசிப்பன். அவனுக்கு நேத்திரம்-மின்னல், கவசம்-மேகம், சப்தம்-இடி, வில், இந்திரதனுசு, சேனைகள்-வருஷதாரைகளாகியகணங்கள். ஸ்திரீகள்-நபஸ்ரீ நபஸ்யஸ்ரீ ஸ்வரஸ்யாரஸ்யமாலினீ அம்பா அதுலா அநிரத்நி அப்ரமந்தீ மேகயந்திகா வருஷயந்தீ சிபுணிகா வாரிதாரா என்றுசொல்லப்பட்ட பன்னிரண்டுசக்திகள். அதற்கெதிரில் ஏழுயோசனை உயரமுள்ள பஞ்சலோகத்தால் நிர்மிக்கப்பட்ட ஓர்பிராகாரம் உளது. அதன்மத்தியில் மந்திரசாலை ஒன்று உள்ளது. அது புஷ்பங்களாலும் கொடிகளாலும் தளிர்களா

லும் விளங்கிக்கொண்டிருக்கும். அங்கு அநேகவிதமான சித்துக்களில் வல்லசித்தர்கள் பரிவாரங்களோடும் ஸ்திரிகளோடும் வசிப்பர். அதற்குநாயகன் சரத்ருது. அவனுக்கு இலக்ஷ்மி ஊர்ஜலக்ஷ்மி என்னும் இரண்டு மனைவிகள். அதற்குமுன் பெரிய கொடிமுடிகளோடுகூடிய வெள்ளிப்பிராகாரம் ஏழுயோசனை யுயரத்தோ டிருக்கின்றது. அதன்மத்தியில் பூங்கொத்துகளோடுகூடிய பாரிஜாத விருக்ஷங்கள் இரண்டுவரிசைகளிலும் இருக்கும். அவைகள் அங்கு தேவியினது தியானுதிகர்மங்களைச் செய்கின்றவர்களைச் சந்தோஷிக்கச்செய்யும். அதற்கு அதிபதி ஏமந்தருது. அவன் சகலகணத்தோடும் ஆயுதத்தோடும் கூடிக்கொண்டு காமிகளை ரமிக்கச்செய்து கொண் டிருப்பன். அவனுக்கு சகஸ்ரீ சகஸ்யஸ்ரீ என்னும் இரண்டு மனைவிகள். அங்கு தேவிவிரதத்தைச்செய்த சித்தர்கள் வசிப்பர். அதற்குமுன் ஏழுயோசனைஉயரமுள்ள உருக்கிவார்த்த பொன்பிராகாரம் ஒன்றுளது. அதனடுவில் புஷ்பங்களாலும் தளிர்களாலும் நிறைந்த கதம்பவனங்கள் சூழ்ந்திருக்கும். அவ்வனத்தின்தேன் ஆயிரந்தாரையாய்ப் பெருக்கெடுத்தோடும். அதைப் புசிக்கின்றவர்கள் தேவியின் நிஜானந்தத்தை அநுபவித்துக்கொண் டிருப்பர். அதற்கு நாயகனுகிய சிசிருது அவனுக்கு தபஸ்ரீ தபஸ்யஸ்ரீ என்னு மனைவியர்களோடிருப்பன். அங்கு தேவி விரதத்தைச் செய்கின்ற சித்தர்கள் நானுவித போகங்களினு லுண்டாகும் மஹானந்தத்தை யுடையவர்களாய் ஸ்திரீகளோடும் பரிவாரங்களோடும் கூடியிருப்பர். அதற்குமுன் ஏழுயோசனையுயரத்திலுள்ள புஷ்பராகமயமான பிராகாரம் ஒன்றிருக்கின்றது. அங்குள்ள பூமியும்வனங்களும் உபவனங்களும்சோலைகளிலுள்ள ரத்னவிருக்ஷங்களும் மதில்களும் புஷ்பராகமயமாகவே பிரகாசித்தும். பக்ஷிகள் ஜலங்கள் மண்டபங்கள் ஸ்தம்பங்கள் சரசுகள் சரசுகளிலுள்ள கமலங்கள் முதலியனவும் ரத்னமயமாகவே யிருப்பதனுல் ரத்னசாலையென்று பெயர்பெற்று விளங்கும். இது முன்சொன்ன பிராகாரங்களைக்காட்டிலும் தேஜசினுல் லக்ஷம்பங்கு அதிகமாய்ப் பிரகாசிக்கும். ஒவ்வொரு பிரமாண்டத்திலுள்ள திக்பாலகர்களும் அங்குள்ள திக்பாலகர்களும் தங்கள் தங்கள் ஆயுதங்களுடன் அங்கு வசித்துக்கொண்டிருப்பர். அதற்குக் கிழக்கில் அமராவதிஎன்னும் ஓர்பட்டணம் மிகவும் உன்னதமாய் நானுவிதமான உபவனங்களோடும் பிரகாசித்துக்கொண் டிருக்கும்.

அந்த பிரகாசம் சுவர்க்கலோக காந்தியினு மேம்பட்டிருக்கும். அவ்விடத்தில் ஆயிரங்கண்களுடையவனும் ஐராவதாரூடனும் வஜ்ரஹஸ்தனும் தேவசேனைகளாற் சூழப்பட்டவனும் பிரதாபவானுமுள்ள தேவேந்திரன் தேவஸ்திரீகளோடும் இந்திராணியோடுங் கூடிப் பிரகாசித்துக்கொண் டிருப்பன். அக்னிகோணத்தில் அக்னிக்குச் சமானமான வன்னியபுரி என்னும் ஓர்பட்டணம் உண்டு. அங்கு அக்னிஸ்வாஹா சுவதா என்னும் இரண்டுமனைவிகளோடும் தனக்குரிய வாகனம் பூஷணாதிகளோடும் கணங்களோடும் கூடினவனாய்ப் பிரகாசித்துக்கொண் டிருப்பன். யமதிக்கில் யமபுரி என்று ஓர்புரியுண்டு. அதில் சூரியன்மகனாகிய யமன் தன்பத்தினியுடன் சித்ரகுப்தர் முதலான படர்களுடன் கூடினவனா யிருப்பன். நிருதிதிக்கில் நைருதி என்பவன் ராக்ஷஸர்களோடும் தன்பத்னியோடும் கட்கதாரியாய் வசிப்பன். வருணதிக்கில் வருணன் பாசதாரியாய் பிரதாபவானாய் மச்சாரூடனாய் மதுவினால் மயங்கினவனாய் சமுத்திரத்திலுண்டாகும் சங்குமுதலிய வஸ்துக்களோடு கூடினவனாய் தன் சக்தியுடன் வசித்துக்கொண்டிருப்பன். வாயுகோணத்தில் வாயு வாயுவைப் பக்ஷிக்கிற யோகிகளோடு கூடினவனாய் கொடியைக் கையில்தரித்தவனாய் பரந்தகண்களை யுடையவனாய் மான்வாகனமுடையவனாய் மருத்கணங்களோடு கூடினவனாய் தன்பத்தினியோடு கூடியிருப்பான். வடதிசையில் யக்ஷலோகத்தில் யக்ஷாதிபதியாகிய குபேரன் விருத்தி ருத்தி முதலான சக்திகளுடனும் நவநிதிகளுடனும் பெருத்த வயறுடனும் தனத்துக்கு நாயகனாய் மணிபத்திரன் பூர்ணபத்ரன் மணிமான் மணிகந்தரன் மணிபூஷணன் மணிஸ்ருக்வி மணிகன் முகதாருகன் இவர்கள்முதலிய யக்ஷசேனாதி பதிகளோடு கூடினவனாய் நிஜசக்தியுடன் வசிப்பன். ஈசானகோணத்தில் விலையில்லாத ரத்னங்களால் செய்யப்பட்ட மஹாத்புதத்தோடு கூடிய ருத்ரலோக மொன்றுண்டு. அதில் ஈசானதிக்பதி என்றும் ஈசானரென்னும் பெயருள்ள உருத்திர ரிருப்பர். அவர் கோபமுள்ளவராயும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற நேத்திரமுடையவராயும் நாணேறிட்ட தனுசையும் பாணத்தையுங் கையிலுடையவராயும் சூலாயுதத்தைத் தரித்தவராயும் விகாரமான முகமும் அக்கினியைக்கக்கும் முகமும் மூன்றுநேத்திரமும் பத்துக்கண்டமும் நூறுகரமும் ஆயிரம்புஜமும் பத்துபாதங்களும் உடையவராயும் தனக்குச்

சமானராயுள்ள உக்கிரமூர்த்திகளாய் அந்தரிக்ஷத்திலும் பூமியிலும் சஞ்சரிக்கிற உருத்திரகூட்டங்களும் உருத்திராத்தியாயத்தில் எந்த உருத்திரர்களைச் சொல்லப்பட்டிருக்கிறதோ அவர்களும் தம்மைச் சூழ்ந்திருக்கும் கணங்களாகப் படைத்தவராயும் கோடிருத்ராணிகளோடு கூடியிருக்கும் பத்திரகாளிமுதலிய மாத்ருகாகணங்களாலும் அநேகவிதமான சக்திகளோடு கூடியிருக்கிற டாமர்யாதிகணங்களாலும் வீரபத்திரர் சகிதமான மஹாருத்ரர்களாலுஞ் சூழப்பட்டவராயும் சிரமாலைதரித்தவராயும் நாகத்தைக் கங்கணமாகவுடையவராயும் நாகத்தினால் சுற்றிய கண்டமுடையவராயும் புலித்தோலை யுடுத்தினவராயும் யானைத்தோலை உத்தரீயமாக வுடையவராயும் மஹா ஸ்மசானபஸ்மத்தை அங்கத்தில் பூசிக்கொண்டவராயும் பிரமதகணங்களால் சூழப்பெற்றவராயும் திக்குகள் செவிடுபடும்படியான சத்தத்தையுடைய மானையுடையவராயும் ஆகாயம் பயப்படும்படி அட்டகாசஞ் செய்கின்றவராயும் பூதங்களோடு கூடினவராயும் பூதங்களுக்கு ஆஸ்ரயராயும் மஹேஸ்வரராயுமிருப்பர். (சு - கoo.)

பத்தாம் அத்தியாய முற்றிற்று.

---

உ

ஸச்சிதானந்தாயைநமஃ

## பதினோராம் அத்தியாயம்.

## மணித்வீப வர்ணனம்.

---

வியாசர்கூறுகின்றார்:—ஓ ஜனமேஜயனே! புஷ்பராகமயமான இந்தப்பிராகாரத்துக்கு முன் பத்துயோஜனை உயரமுள்ளதாயும் கோபுரத்துவாரங்களோடு கூடினதாயும் குங்குமம்போற் செவந்த நிறமுள்ளதாயும் இருக்கிற பத்மராகப்பிராகார மொன்றிருக்கின்றது. அதில் பத்மராக ஸ்தம்பங்களோடு கூடியிருக்கும் அநேக மண்டபங்கள் இருக்கின்றன அவைகளில் அறுபத்து நான்கு கலைகள் சக்திரூபமாக வீற்றிருப்பர். எவ்வாறெனில் நானாவிதமான ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு இரத்னாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு பத்மராகங்களால் பிரகாசிக்கும் ஒவ்வொரு லோகங்களை

யுடையவர்களாய் அந்தந்தலோகங்களுக்கு அதிபதிகளாய் அங்கங்குள்ள பிரஜைகளோடும் வாகனங்களோடுமிருப்பர். அவர்களுடைய நாமங்கள் யாதெனின்! பிங்களாக்ஷி விசாலாக்ஷி சமர்த்தி விர்த்தி சிரத்தா சுவாஹா சுவதா அபிக்யா மாயா சம்ஞா வசுந்தரா திரிலோகதாத்ரீ சாவித்திரீ காயத்திரீ திரிதசேஸ்வரீ அரூபா பகுரூபா ஸ்கந்தமாதா அச்சுதப்ரியா விமலா அமலா அருணி ஆருணி பிருகிருதி விகுர்திஃ ஸ்ருஷ்டி ஸ்திதிஃ சம்ஹ்ருதிஃ சந்தியா மாதா சதி ஹம்சி மர்த்திகா வச்ரிகா வரா தேவமாதா பகவதீ தேவகி கமலாசனை த்ரிமுகி சப்தமுகி சுராசுரவிமர்த்தனீ லம்போஷ்டி ஊர்த்வகேசீ பகுசிருஷா வ்ருகோதரீ ரதரேகா சசிரேகா ககனவேகா பவனவேகா மதனாதுரா அனங்கமதனை அனங்கமேகலா அனங்ககுசுமா விஸ்வரூபா சுராதிகா க்ஷயங்கரி அக்ஷோப்யா சத்யவாதினீ பகுரூபா சுசிவ்ருதா உதரவாசிசீ என்று சொல்லப்பட்டவைகளேயாம். இவ்வறுபத்துநான்கு சக்திகளும் பயங்கரமாய் ஜ்வலிக்கின்ற நாக்கும் முகமும் உடையவர்களாய் மேனோக்கிய செம்பட்டமயிருடையவர்களாய் அக்னியைக் கக்குகின்றவர்களாய் சகலமான ஜலத்தையும் குடித்துவிடுவோமா அக்னியைச் சம்ஹரிப்போமா காற்றை ஸ்தம்பனஞ்செய்துவிடுவோமா அகிலமான சகத்தையும் புசித்து விடுவோமா என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு சிவந்தகண்களை யுடையவர்களாய் தநுசையும் பாணத்தையும் தரித்துக்கொண்டு கடகடவென்று பல்லைக்கடித்துத் திக்குகள் நடுங்கும் படிச்செய்வார். இவருள் ஒவ்வொருவரும் லக்ஷம் பிரமாண்டத்தை நாசஞ்செய்யவல்ல வன்மையுடைய நூறு அக்குரோணிசேனையுள்ளவர்கள். அவர்கள் என்னதான் செய்யார்கள். அவைகளைச் சொல்லுவதற்குச் சாத்தியமல்லை. இதுபோலவே அங்குள்ள சகலமான யுத்தசாமான்களுடைய கணக்கையும் ரத கஜ துரக பதாதிகளுடையகணக்கையும் சொல்லமுடியாது. இந்த பத்மராகமயமான பிராகாரத்தின்மேல் செம்பருத்திப் புஷபம்போல் பிரகாசிக்கும் பத்துயோசனை நீளமுள்ள கோமேதகப்பிராகாரம் ஒன்றுபிரகாசித்துக்கொண் டிருக்கும். அதில் வசிக்கிறவர்களுடைய கிருகங்களும் அந்தக் கோமேதகத்தினால் செய்யப்பட்டு குங்குமம்போல் சிவப்பாகவே பிரகாசிக்கும். அதுபோலவே பக்ஷிகளும் ஸ்தம்பங்களும் விருக்ஷங்களும் நடபாவிகளும் சரசுகளும் பிரகாசிக்கும்.

அதன் மத்தியில் மகாதேவிகளாகிய முப்பத்திரண்டு சக்திகள்நாறு வித சஸ்திரங்களையுடையவர்களாய் கோமேத மணிகளால் அலங்கரிக்கப்பட்டு ஒவ்வொரு லோகங்களிலும் பூசிக்கப்பட்டிருப்பர். அவரெல்லாம்பைசாசமுகமுடையவர்களாயும் சக்கரத்தைக் கையிலுடையவர்களாயும் சேதனம்செய் பசனஞ்செய் கொளுத்து அறுத்துவிடு என்றுகூறும் வார்த்தைகளை யுடையவர்களாயும் யுத்தத்தில் ஆசையுடையவர்களாயு மிருப்பர். ஒவ்வொரு மஹாசக்திகளும் பத்து அக்குரோணிசேனைகளோடு கூடியிருப்பர். லக்ஷப்பிரமாண்டத்தை நாசஞ்செய்யும்படியான பலத்தையுடைய இவர்களுடைய ரதங்களையும் இவ்வளவென்று எவ்வாறு வர்ணித்து சொல்லக்கூடும்.

அங்கு தேவியினால் செய்யப்படும் சர்வயுத்த ஆரம்பத்துக்கும் வேண்டியவைகளெல்லாம் இருக்கும். பாவநாசம்பண்ணும்படியான அந்தச் சக்திகளுடைய நாமங்கள் யாதெனின்;—வித்யா ஹ்ரீபுஷ்டி பிரக்ஞா சினீவாலீ குஹூ ருத்ரா வீர்யா பிரபா ஆனந்தா போஷணீ புத்திதா சுபா காளராத்திரீ மஹாராத்திரீ பத்திரகாளீ கபர்த்தினீ விகிர்தீ தண்டீ முண்டிநீ இந்துகண்டா சிகண்டிநீ நிசும்பசும்பமதநீ மஹிஷாசுரமர்த்தனீ இந்திராணீ ருத்திராணீ சங்கரார்த்தசரீரிணீ நாரீ நாராயணீ திரிசூலினீ பாலநீ அம்பிகா ஹ்லாதிநீ என்னு நாமங்களுடைய இவர்களில் ஒருவருக்கொருவர் கோபம்வந்துவிடுமேயானால் பிரமாண்டங்களுக்கு நாசம் நேரிடும். இவர்களுக்கு எப்போதும் எங்கும் அபஜயம் உண்டாவதில்லை. இந்தக் கோமேதகப் பிராகாரத்துக்குமேல் கோபுரங்களோடுகூடிய பத்துயோஜனையுயரமுள்ள வச்சிரப்பிராகாரம் ஒன்றுண்டு அதில் கதவுகளெல்லாம் சங்கிலியிட்டிருக்கும். எங்குமில்லாத நூதன விருக்ஷங்கள் நிறைந்தும் பூமி கிராமங்கள் வீதிகள் மகாமார்க்கங்கள் கணங்கள் விருக்ஷங்களுடைய நீர்க்கால்வாய் பக்ஷி வாபி தடாகம் இவைகளெல்லாம் வச்சிரமயமாயும் இருக்கும். அங்கு தேவிபரிசாரகர்கள் வசித்துக் கொண்டிருப்பார்கள். அதில் மதகர்விதர்களான லக்ஷம் தாசிகளால் சேவிக்கப்பட்டவர்களாயும், சிலர் பானபாத்திரத்தையும் சிலர் சிவிரிகளையும் சிலர் சாமரைகளையும் சிலர் தாம்பூலத்தையும் சிலர் புஷ்பத்தையும் கையிலுடையவர்களாயும், சிலர் அநேகவித

மான விசித்திரவஸ்திரங்களைத் தரித்துக்கொண்டிருப்பவர்களாயும் சிற்சிலர் குங்குமம் சந்தனம் கண்ணாடி குடை விசிறி இவைகளைக் கையில் ஏந்தியிருக்கின்றவர்களாயும், சிலர் சித்திரமெழுதுவதிலும் சிலர் பாதம்பிடிப்பதிலும் ஆசையுள்ளவர்களாயும், சிலர் சிறந்த பூஷணாலங்காரத்தையும் சிலர் சுகந்த புஷ்பா லங்காரத்தையும் செய்துகொண் டிருப்பவர்களாயும், சிலர் புஷ்பஞ்சூட்டிக் கொண்டும் சிலர் அநேகவிதமான ஆடல் பாடல்களைச் செய்துகொண்டும் பால்யர்களான எல்லோரும் மேல்வஸ்திரம் தரித்துக்கொண்டும் இருப்பார்கள். இவ்வாறான சிருங்கார தேகமுடையவர்களாய் தேவியினதிகிருபாலேசத்தால் மூன்றுலோகத்தையும் திரணமாக மதிப்பவர்களான அவர்களுடைய நாமங்கள் யாதெனில்! அநங்கரூபா அநங்கமதனா சுந்தரீ மதநாதுரா புவனவேகா புவனபாலிகா சிசிரா அனங்கவேதநா அநங்கமேகலா என்பவைகளாம். இவர்களெல்லாம் மின்னற்கொடிபோன்றவர்களாயும் சப்திக்கின்ற ஒட்டியாணமுடையவர்களாயும் ஒலிக்கும் சிலம்பணிந்த பாதமுடையவர்களாயும் உள்ளும்புறம்பும் உலாவிக்கொண் டிருக்கிறவாகளாயும் சகலமான காரியங்களிலும் சமர்த்தர்களாயும் கையில் பிரம்புடையவர்களாயும் பல ஆயுதங்களை யுடையவர்களாயும் பலவாகனாரூடர்களாயும் எட்டுத்திக்குகளிலுஞ் சூழ்ந்திருக்கும் பிராகாரங்களின் வெளியில் காவலாகச்சூழ்ந்திருப்பர். இந்த வச்சிரப்பிராகாரத்தின்மேல் வைடூரியப்பிராகாரம் பத்துயோசனை யுபரமுன்ளதாயும் கோபுரத்தோடுகூடியதாயும் பூமி வீடு வீதி ராஜமார்க்கம் வாபி கூபம் தடாகம் கால்வாய் மணல் இவைகளெல்லாம் வைடூரியமயமாயும்இருக்கும் கிழக்குமுதல் மண்டலாகாரமாக அஷ்டதிக்குகளிலும் அநேக பிரமாண்டமாதர்களுடைய கூட்டங்களோடு பிராம்ஹீ மாஹேஸ்வரீ கௌமாரீ வைஷ்ணவீ வராஹீ இந்திராணீ சாமுண்டா என்கிற சப்தமாதர்களும் மஹாலக்ஷ்மியும் ஆகிய எண்மரும் இருப்பர். இவர்கள் பிரம ருத்திராதி தேவர்களைப் போல் மஹாகவுரவமுடையவர்களாய் சகத்துக்கு மங்களத்தைச் செய்பவராயிருப்பர். அந்தப் பிராகாரத்தின் துவாரங்களில் திரிமூர்த்திகளுடைய வாகனங்களாகிய அன்னம் கருடன் விருஷபமுதலியவைகளும், இந்திராதியர்களுடைய வாகனங்களும் கோடிகோடிகணக்காய் எண்ணிறந்தனவாய் அலங்காரமாய் வெகு

சாக்கிரதையாய் சித்தமாயிருக்கும் ஆகாயத்தையளாவியும் ஒன்றன்பின் னொன்றாகவுமுள்ளரதங்களும் அநேக சின்னங்களோடுகூடிய விமானவரிசைகளும் அநேகவிதமானகொடிகளும் வாத்தியங்களும் நிறைந்திருக்கும். இந்த வைடூரியப்பிராகாரத்துக்குமேல், பத்து யோஜனை உயரமுள்ள இந்திரநீலப் பிராகாரமிருக்கின்றது. அங்கு பூமி வீதி மஹாமார்க்கம் கிருகம் நடபாவி கிணறு தடாகம் இவைகளெல்லாம் இந்திரநீல மயமாகவே யிருக்கும். அங்கு ஓர் பெரியபத்மம் அநேகயோசனை விசாலமுள்ளதாய் சுதர்சனத்துக்கு இரண்டாவதாய் சோடச கோணங்களுடையதா யிருக்கும். அதில் பதினறு சக்திகளுடைய கிருகம் சர்வ சாமக்கிரியைகளால் நிறைந்திருக்கும். அச்சக்திகளின் நாமங்களாவன;—கராளீ விகராளீ உமா சரஸ்வதீ ஸ்ரீ துர்க்கா உஷா லக்ஷ்மீ சுருதி ஸ்மிருதி த்ருதி சிர்த்தா மேதா மதி காந்தி ஆர்யா என்பனவாம். இவர்கள் நீலமேகம் போன்றவர்களாயும் கைவாளை யுடையவர்களாயும் சமான வுருவமுடையவர்களாயும் கேடகத்தைக் கையிலுள்ளவர்களாயும் யுத்த சந்நர்களாயும் ஜகதீசையாகிய ஸ்ரீதேவிக்கு சேனாதிபதிகளாகியும் ஒவ்வொரு பிரமாண்டங்களிலுமுள்ள மஹாசக்திகளுக்கு எஜமானிகளாயும் பிரமாண்டங்களைக் கலக்கும்படிச் செய்கின்றவர்களாயும் தேவிசக்திகளோடு கூடியிருக்கின்றவர்களாயும் நானாவிதமான ரதாரூடர்களாயும் நானாவிதமான சக்திகளோடு கூடினவர்களாயு மிருப்பர். இவர்கள் பராக்கிரமங்களைக்கூற ஆயிரமுகமுள்ளவனாலுஞ் சொல்லமுடியாது. இந்த இந்திரநீல பிராகாரத்துக்குமேல் பத்துயோஜனை நீளமுள்ள முத்துபிராகாரமுளது. அங்கு பூமியெல்லாம் முத்துமயமாகவேயிருக்கும். அதன்மத்தியில் அஷ்டதள தாமரை முத்துக்களால்நிறைந்தும் விஸ்தாரமான கேசரங்களோடு மிருக்கும். அதில் தேவிக்குச் சமானமான சரீராகாரமுள்ளவர்களாயும் தேவி ஆயுதங்களைத் தரித்திருக்கிறவர்களாயும் ஜகத் விருத்தாந்தங்களைச் சொல்லுகின்றவர்களாயும் தேவிக்குச் சமானமான போகத்தை யுடையவர்களாயும் குறிப்பினால் மனோபாவனையை அறியுஞ் சக்தியுடையவர்களாயும் பண்டிதர்களாயும் சகலகாரியங்களிலும் சமர்த்தர்களாயும் சுவாமி காரியத்தையே செய்கின்றவர்களாயும் தேவி அபிப்பிராயத்தை யறிந்தவர்களாயும் சதுரர்களாயும் மிக்க அழகுள்ளவர்களாயும் நானாவித சக்தியோடு கூடின

வர்களாயும் பிரதி பிரயாண்டங்களிலுள்ள பிராணிகளுடைய எண்ணங்களை யறிகின்ற சக்தியுள்ளவர்களாயுமுள்ள எட்டுமந்திரிணிக ளிருப்பர். அவர்கள் நாமங்களாவன,—அநங்ககுஸுமா அநங்க குஸுமாதுரா அநங்கமதனா அநங்கமதனா துரா புவனபாலா ககன வேகா பாசாங்குசவரா பீதிதரா அருணாவிக்ரஹா என்பனவாம். இவர்கள் லோகசம்பந்தமான விருத்தாந்தங்களைப் பிரதிநிமிஷமும் சொல்லிக்கொண்டிருப்பர். இந்த முத்துப்பிராகாரத்துக்குமேல் பத்துயோசனைநீளமுள்ள மரகதப்பிராகாரம் இருக்கும். அது நானா விதசௌபாக்கியத்தோடும் போகத்தோடுங் கூடியிருக்கும். அங்கு பூமி வீடு முதலியனவெல்லாம் மரகதமயமாகவே யிருக்கும். அங்கு விஸ்தீரணமான ஷட்கோணமொன்றுளது. அதில் பூர்வகோணத் தில் காயத்திரிசமேதனுயும் குண்டிகை தண்டாயுதம் அக்ஷமாலை தாங்கினவனுயும்பிரமன் வீற்றிருப்பன். காயத்திரிதேவியைப்போல் ஸ்மிருதிகளும் சர்வவேதசாஸ்திரங்களும் மந்திரசாஸ்திரங்களும் புராணாதிகளும உருக்கொண்டு மூர்த்திகளாயிருக்கும். இவைபோ லும் எத்தனைபிரமர்கள் எத்தனை காயத்திரிகள் எத்தனை வியாஹ்ரு திகள் உண்டோ அவைகளெல்லாம் திவ்யமான உருக்கொண்டு நித் தியம் வசித்துக்கொண் டிருக்கும். நிருதிகோணத்தில் விஷ்ணு மூர்த்தி சங்கு சக்கிரம் கதை தாமரை இவைகளோடு சாவி த்திரியும் மச்சகூர்மாதி தசாவதாரங்களும் சாவித்திரி எவ்வள வுண்டோ அவ்வளவோடுங்கூடி இருப்பர். வாயுகோணத்தில் பரசு அக்ஷமாலை அபயம் வரதம் தாங்கினவராய் உருத்திரமூர்த்தி யிருப்பர். அங்கு சரஸ்வதிதேவியும் இருப்பள். தக்ஷிணாஸ்யா முத லான உருத்திரபேதங்கள் எவ்வளவுண்டோகௌரிபேதங்கள் எவ் வளவுண்டோ அவ்வளவும் அவ்விடத்தில் வசித்துக்கொண்டிருக் கும். அவர்களேயன்றி இருபத்தெட்டாகமங்களும் இன்னும் எத் தனைவிதமாயுள்ள ஆகமங்களும் சரீரத்தோடு வசித்துக்கொண்டி ருக்கும். அக்கினிகோணத்தில் ரத்நகும்பம் மணிகரண்டம் இவை களைக் கையிலுடைய தனபதியாகிய குபேரன் மகாலக்ஷுமியோடு தேவியினது நிதிக்கு அதிபதியாய் தன்கணங்களோடிருப்பன். மேற்கு கோணத்தில் ரதியோடு மன்மதன் பாசம் அங்குசம் தநுசு பாணம் இவைகளைத்தரித்தவனாய் வீற்றிருப்பன். அவனுடன் சிருங் கார ரசங்களெல்லாம் வடிவங்கொண்டு எப்போதும் வசித்துக்

கொண்டிருக்கும் ஈசானகோணத்தில் புஷ்டியான சரீரமுடையவரா யும்பாசாங்குச தரராயும் விநஹர்த்த ராயுமுள்ள விக்கிநேஸ்வரர் வீற்றிருப்பர். அவருக்கு எங்கெங்கு விபூதிகளுண்டோ அவைக ளெல்லாம்மகத்தான ஐஸ்வர்யத்தோடு கூடினவைகளாய் அங்கு வசி த்துக்கொண்டிருக்கும்.கோணங்களில் இருக்கவேண்டியவரெல்லாம் இருக்க பிரமாண்டத்திலுள்ள பிரமக் கூட்டங்களெல்லாம் ஜகதீஸ் வரியைச் சேவித்துக்கொண் டிருப்பர். அந்தமரகதப் பிராகாரத் திற்குமேல் நூறுயோசனை நீளமுள்ள பவளப் பிராகாரம் இருக்கி கிறது. அங்குள்ள பூமியும் அதிலுள்ளவீடுகளும் பவளத்தாற செய் யப்பட்டதாகவே யிருக்கும். அதன்மத்தியில் பஞ்சபூத அதிபதி களோடு ஹ்ருல்லேகா ககனு ரக்தா காரளிகா மஹோச்சுஷ்மா என் னும் பஞ்சசக்திகள் பஞ்சபூதங்களைப்போல் காந்திகளையுடையவர் களாய்ப் பாசாங்குச வரதா பயங்களுடன் சர்வாபரணங்களையுந் தரித்தவர்களாய் தேவிக்குச் சமானமான வேஷங்களுடையவர் களாய் நூதனமான யௌவனத்தினால் கர்விதர்களா யிருப்பர். இந்தப் பிரவாளப்பிராகாரத்திற்குமேல் நவரத்னங்களாற் செய்யப் பட்ட அநேகயோஜனை நீளமுள்ள பிராகாரமொன்றுண்டு. அங்கு ஆம்னாயங்களுக்குரிய அநேக கிருகங்க ளிருக்கின்றன. அதில் தடா கங்கள் முதலானவையெல்லாம் நவரத்நமயமாகவேயிருக்கும். அங்கு ஸ்ரீதேவிக்குரிய மந்திரங்களும் மஹாவித்தைகளும் மஹா வேதங்களு மிருங்கின்றன. அங்குத் தேவியினுடைய ஆவரணதேவ தைகள் பூஷணங்களோடு கோடிசூரியப்பிரகாசமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். சப்தகோடிமகாமந்திரங்களும் வசிக்கும்.நவரத்ன மணிப்பிராகாரத்திற்குமுன் சிந்தாமணிகிருகம் இருக்கின்றது. அங் குள்ள சகலவஸ்துக்களும் சிந்தாமணியினாலேயே நிர்மிக்கப்பட்டி ருக்கிறது. சூர்யகாந்தககல் சந்திரகாந்தக்கல் மின்னல்போன்றகல் இவைகளாற் செய்யப்பட்ட ஸ்தம்பங்களுடைய காந்தியினால் உள் ளே யிருக்கின்றவஸ்துக்கள் தெரியாமலிருக்கும்.

பதினொன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸாத்வியைநம:

# பன்னிரண்டாம் அத்தியாயம்.

## இதுவுமது.

அதன்மத்தியில் தேவீஸ்தானமாகிய ஆயிரக்கால்மண்டபம் பிரகாசித்துக்கொண் டிருக்கும். அம்மண்டபத்தினுடைய நான்கு பக்கத்தில் சிருங்காரமண்டபம் முக்திமண்டபம் ஞானமண்டபம் ஏகாந்தமண்டபம் என நான்குமண்டபங்களுண்டு. அவைகள் நாநுவிதமான விதானங்களோடும் நாநுவிதமான நறுமணங்கமழும் தூபங்களோடும் கோடிசூரியர்களுக்குச் சமானமான காந்தியோடும் பிரகாசித்துக்கொண்டிருக்கும். அம்மண்டபங்களில் நான்குபக்கத்திலும் காஸ்மீர திரைகளிட்டு மல்லிகை குந்தம் இவைகளை வனம்போல் நிறைத்தும் அளவிறந்த கஸ்தூரியினால் திமிர்த்தும் வைத்திருக்கும். அம்மண்டபங்களைச் சூழ்ந்துள்ள தாமரைத்தடாகங்கள் இரத்னமிழைத்த படிகளோடும் அமிர்தரசத்தோடும் சப்திக்கின்ற வண்டுகளோடும் அன்னம் காரண்டவம் இவைகளோடும் நிறைந்திருக்கும். முன்சொன்ன சிருங்கார மண்டபமத்தியில் சகதம்பிகை வீற்றிருப்பாள். அங்கு கணங்களாகிய தேவிகள் அநேகவிதமான கானங்களைப் பாடிக்கொண்டிருப்பார்கள். அதனை அங்குள்ளாரெல்லாங் கேட்டு மகிழ்வர். இரண்டாவதான முக்திமண்டபமத்தியில் தேவிவீற்றிருந்து ஆத்மாக்களுடைய பாசத்தை மோசனஞ் செய்யும் விதத்தை எப்போதும் எண்ணிக்கொண்டிருப்பள். மூன்றுவதான ஞானமண்டபத்தில் பாசமோசனத்துக்கான ஜ்ஞானோபதேசஞ் செய்துகொண்டிருப்பள். நான்காவதான ஏகாந்தமண்டபத்தில் ஜகத்தை ரக்ஷிக்கவேண்டிய சிந்தனையை மந்திரிணிகளோடு கூடி சிந்தித்திருப்பள். இந்நான்குமண்டபத்தோடும் பிரகாசிக்கின்ற சிந்தாமணிகிருகத்தில் சக்தி தத்வாத்மகமா யிருக்கின்ற பத்துப்படிகளோடு கூடிய மஞ்சம் ஒன்றுண்டு. அதற்குக் கால்கள் பிரஹ்மா விஷ்ணு ருத்திரர் மஹேஸ்வரர் என்று சொல்லப்பட்டவர்கள். பலகை சதாசிவர். அப்பலகையின் மீது மஹாதேவர் புவனேசராகப் பிரகாசிக்கத் தானிருப்பள். இவ்வாறு தேவி தனது நிஜலீலார்

த்தமாக இரண்டுவிதமாக அவ்விடத்திற்பிரகாசிப்பள். சிருட்டிஆதி
யில் தேவியினது அர்த்தாங்கம் ஈஸ்வரனே, அவர் மன்மதனுடைய
அகங்காரத்தை நாசஞ்செய்புநிமித்தம் கோடி மன்மதனைப்போல்
சுந்திரமூர்த்தியாயும் பஞ்சமுகம் திரிநேத்ரம் இரத்னமணிபூஷணம்
வரதம் அபயம் பரசு முதலியவைகளைத் தரித்தவராயும் பதினாறு
வயதுள்ளவராயும் மகாதேவராயும் கோடி சூரியப் பிரகாசமுடைய
வராயும் கோடிசந்திரனைப்போல் சீதளமுடையவராயும் சுத்தஸ்படி
கம் போன்றவராயும் சீதளமான காந்தியுடையவராயும் மிருப்பர்.
வாமாங்கத்தில் ஸ்ரீதேவியாகிய புவனேஸ்வரியை யுடையவராயு மிரு
ப்பர். அந்தப்புவனேஸ்வரியானவள் நவரத்னங்கள் பதிந்திருக்கும்
ஒட்யாணத்தினாலும் சுத்தமான பொன்னில் வைடூரிய மிழைத்த
தோள்வளைகளினாலும் ஸ்ரீசக்கிர தாடங்கத்தினாலும் பிரகாசிப்ப
வளாயும், அர்த்தசந்திரனைச் செயித்த நெற்றியையும் கோவைப்
பழம்போன்ற உதட்டையும் கஸ்தூரிதிலகத்தினால் பிரகாசிக்கின்ற
நெற்றியையும் உடைத்தானவளா யிருப்பதுமன்றி அந்தநெற்றியி
ன்மேல் சந்திர சூரியர்களைப் போல் திவ்யசூடாமணியா லியற்றப்
பட்ட ஆபரணங்களால் பிரகாசிக்கின்ற திவ்ய திருமேனியையுடைய
வளாயும் உதிக்கின்ற சுக்கிரனைப்போல் பிரகாசிக்கின்ற நாசிகாபர
ணத்தை யணிந்தவளாயும் முத்தாரத்தோடு குங்கும கர்ப்பூரங்கல
ந்த திவ்யசந்தனாதிகளால் பூசப்பட்ட ஸ்தனங்களையுடைத்தான
வளாயும் சங்குக்குச் சமானமான கண்டத்தை யுடையவளாயும் மா
தளம்பழம்போல்பல்வரிசையினால் பிரகாசிக்கின்றவளாயும் விலையில்
லாத ரத்னங்களிழைத்த மகுடத்தைத் தரித்துக்கொண்டிருப்பவ
ளாயும் முன்னுச்சிமயிரால் பிரகாசிக்கின்றவளாயும் அதன்மேல்
களங்கமில்லாத சரத்கால சந்திரன்போன்ற முகமுள்ளவளாயும் கங்
காசலத்தின் சுழிபோன்ற நாபியையுடையவளாயும் மாணிக்கமோ
திரங்களாற் பிரகாசிக்கின்ற விரல்களை யுடையவளாயும் தாமரையி
னதுதளம்போன்ற காந்தியை யுடையவளாயும் ரத்நசிலங்கையோடு
கூடிய ரத்னவளையலை யுடையவளாயும் முத்தாரமுதலியவற்றோடு
பலரத்நாரங்களிற் கோர்ப்புண்டிருக்கும் பலபதக்கங்களாற் பிரகா
சிக்கின்றவளாயும் மல்லிகைநிறைந்த கூந்தலை யுடையவளாயும்
நெருக்கமாயும் உன்னதமாயும் இருக்கும் ஸ்தனபாரங்களால் மந்
தையா யிருப்பவளாயும் இருப்பாள். இன்னமும் அந்த சிவையான

வள் பாசாங்குச வரதாபயங்களைத்தரித்துக்கொண்டிருப்பவளாயும் சர்வ சிருங்கா ரவேஷ முடையவளாயும் வல்லிக்கொடிபோன்ற அங் கத்தை யுடையவளாயும் சவுந்தர்ய தாரைக்குப் பிறப்பிடமாயும் காரணமில்லாத கருணையுடையவளாயும் நிஜஸல்லாப மாதுர்யத்தி ஞல் திரஸ்காரஞ்செய்யப்பட்டிருக்கிற வீணையையுடைத்தானவளா யும் அநேககோடி சந்திர சூரியருடைய காந்தியை யுடையவளாயும் சகிகள் தாசிகள் தேவதாஸ்திரீகள் சகலமானதேவதைகள் ஆகிய இவர்களால் சூழப்பட்டிருப்பவளாயும் இச்சா ஞானக் கிரியாசக்தி களாற் சூழப்பட்டிருப்பவளாயுமிருப்பள். அத்தேவியோடு லஜ்ஜை துஷ்டி புஷ்டி கீர்த்தி காந்தி க்ஷமா தயா புத்தி மேதா ஸ்மிருதி லக்ஷ்மி இவர்களெல்லாம் மூர்த்திகளாயிருப்பர், பீடசக்திகளாகிய ஜயை விஜயை அபராஜிதை நித்தியை விலாசிநீ தோக்திரீ அகோரை மங்களை இவர்கள் சதா சேவித்துக்கொண்டிருப்பர். பக்கங்களில் சங்கநிதி பதுமநிதிகளிருக்கும். இங்ஙனமான சிந்தாமணி கிருகத் தருகில் புவனேஸ்வரிக்கு வாமபாகத்தில் நவரத்நமயமான நதி ஒன் றிருக்கிறது. அந்நதி பலநதிகளாகப்பிரிந்து அமிர்தசாகரம் வரை யிற்போகின்றது. சர்வேஸ்வரனுக்கு இப்புவனேஸ்வரியினுடைய சம்பந்தத்தால் மஹேஸ்வரரென்னும் பெயர்வந்தது. இல்லாவிடில் வராது. இனி சிந்தாமணி கிருகத்தின் பிரமாணத்தைச் சொல்லுகி றேன். நீளம் ஆயிரம்யோசனையுள்ளது. அதற்கு வடக்கில் ஒரு பிரா காரம் ஆதாரமின்றி இரண்டாயிரம்யோசனையுயரமுள்ளதாய் ஆகா யத்தையளாவியிருக்கின்றது. அது பிரளயத்தில் சுருங்கியும் சிருட்டி யில் விரிந்தும் காண்கிறது. இதற்குமேலான காந்தியுடையது ஒன்று மில்லை. தேவிஎதில் தேஜோ ரூபியாயிருக்கின்ருளோ அதுசிந்தாமணி கிருகம் என்றறிதல்வேண்டும். தேவலோகங்களிலும் நாகலோகங்களி லும் மநுஷ்ய லோகங்களிலும் இன்னுமுள்ள இதரலோகங்களிலும் ஒவ்வொரு பிரமாண்டங்களிலுமுள்ள எந்த வுபாசகர்களிருக்கின் ருர்களோ அவர்களெல்லோரும் இதனையேஜபஞ்செய்கிருர்கள். தேவி யை ஆஸ்ரயிக்கின்றவர்கள் தேகநீக்கத்தைப் பெறுவராயின் அவர் களும் இங்கேவந்திருப்பர். இன்னமும் அம்மணித்வீபத்தில் நெய் பால் தயிர் தேன் இவைகள் தனித்தனி ஓடும் கால்வாய்களாகவும் அமிர்தம் நதியாகவும் இருக்கும். சிலநதி தாக்ஷாரசமாகவும் சிலநதி நாவற்பழரசமாகவும், சிலநதி மாம்பழரசமாகவும். சிலநதி கருப்பஞ் சாருகவும் ஓடிக்கொண்டிருக்கும். எந்தப் பழரசங்களை எவர்கள்

விரும்புகின்றார்களோ அவர்களுக்கு அந்த விருக்ஷங்கள் அந்தப் பழங்களைக்கொடுக்கும். அப்படியே நடபாவி கிணறுகளு மிருக் கின்றன. குறைவு ஒருவிதத்துங்கிடையாது. ரோகமும் ஜரையுங் கிடையாது. கவலைப்படும் சிந்தையுமில்லை. மாச்சரியம் காமம் குரோ தங்களுங் கிடையாது. எல்லோரும் ஸ்திரீகளோடுகூடிய யௌவன முடையவர்களாயும்கோடிசூரியப்பிரகாசமுள்ளவர்களாயுமிருப்பர். இவர்களெல்லாம் புவனேஸ்வரியாகிய தேவியைப் பஜித்துக்கொண் டிருப்பர். இதில் சிலர் சாலோகத்தையும் சிலர் சாமீப்யத்தையும் சிலர் சாரூபத்தையும் சிலர் சாயுச்சியத்தையும் அடைந்தவர்களாக விருப்பர். ஒவ்வொரு பிரமாண்டத்திலுள்ள தேவதைகளெல்லாம் ஒன்றாக (சமஷ்டியாக) இங்கிருந்துகொண்டு சேவிப்பர்கள். சப்த கோடிமகாமந்திரங்கள் மூர்த்திமான்களாய் உபாசித்துக்கொண்டிரு க்கும். சகலமானமகாவித்தைகளும் மாயாசபளித விக்ரகங்களும் காரணமாகிய பிரம்ஹரூபத்தை சோஹம் என்னுமுறையால் தியா னித்துத்தேவியை யுபாசித்து ஆனந்தமுற்றிருக்கும். ஓ அரசனே! மணித்வீபம் இவ்வண்ணம்பிரகாசித்துக்கொண்டிருக்கும். மகிமை யிற் சிறந்த அதன்விசேஷத்தை யுனக்குச்சொன்னேன். சூரியன் சந்திரன் அக்னி மின்னல் இவைகளெல்லாம் இந்தமணித்வீபத்தி னுடைய காந்தியின் கோடியம்சத்தின் கோடி அம்சத்துக்குச் சமா னமாகாது. சிலவிடத்தில் பவளத்துக்குச் சமானமாயும் சிலவிடத் தில் மரகதத்திற்குச் சமானமாயும் சிலவிடத்தில் மின்னல் சூரியன் இவைகளுடைய சாயைக்குச்சமானமாயும் பிரகாசிக்கும். சிலவிட த்தில் நடுப்பகல் சூரியனைப்போலும் சிலவிடத்தில் கோடிமின்னலி னால் வியாபித்திருக்கிற பிரகாசம்போலும் பிரகாசம் வியாபித்திருக் கும். சிலவிடத்தில் சிந்தூரம் நீலமணி மாணிக்கம் இவைகளுக்குச் சமானமாக இருக்கும். சிலவிடத்தில் வச்சிரகாந்தியைப்போலும் சிலவிடத்தில் காட்டுத்தீயைப்போலும் சிலவிடத்தில் உருக்கிய பொன்போலும் சிலவிடத்தில் சந்திரகாந்தக் கல்லைப்போலும் சில விடத்தில் சூரியகாந்தக் கல்லைப்போலும் பிரகாசிக்கும். சிலவிடங் களில் ரத்னசிருங்கமுள்ள பர்வதங்களும் சிலவிடங்களில் ரத்னகோ புரப்பிராகாரங்களும் சில விடங்களில் ரத்ன இலைகளும் கனிகளு முள்ள விருக்ஷங்களுமிருக்கும். சிலவிடங்களில் மயில்கள் விளையா டிக்கொண்டும் சிலவிடங்களில் புறவுகள் கிளி முதலியவைகள் சப்தி த்துக்கொண்டும் இருக்கும்.ரமணீயமாயும் ரம்மியமாயுமுள்ள சலங்

கள் சிலவிடங்களிலும் அநேகசரசுகளும் இருக்கும். அதன்மத்தியில் நூறுயோசனைதூரம் பரவிய சுகந்தமுள்ள ரத்நத்தாமரைகள் மலர்ந்திருக்கும். மந்தமாருதத்தினால் அசையும் விருக்ஷங்களையும் சிந்தாமணிச் சோதியினால் பரவிய ஆகாயத்தையும் ரத்னப் பிரபையினால் தகத்தகாயமாயிருக்கும் திக்குகளையும் உடைத்தானதாயிருக்கும். விருக்ஷத்தினுடைய வாசனைகளாலும் நல்லகாற்றினாலும் பூரிக்கப்பட்டு தூபங்களாலும் அநேகமணிமயமாகிய தீபங்களாலும் நிரம்பப்பெற்றுமுள்ளது. சகலஐஸ்வர்யம் சகல சிருங்காரம் சர்வக்ஞை அகண்ட தேஜஸூ சகலபராக்கிரமம் உத்தமமான சகலகுணம் எல்லாவுயிர்களிடத்துமுள்ளதயை இவைகளுக்கெல்லாம் முடிவான இடமாயுமுள்ளது. ஓ அரசனே! இவ்வுலகானந்தமாகிய ராஜ்யானந்தமுதல் பிரஹ்மானந்தம்வரையிலுள்ள எல்லா விதமான ஆனந்தங்களும் அடங்கியிருக்கும் இடமாயுமுள்ளது. இந்தப்பிரகாரம் வர்ணித்துச் சொல்லப்பட்ட மணித்வீபமே மகாதேவிக்கு சகல லோகத்துக்கும் மேலான உத்தமோத்தம ஸ்தானமாகும். இதனை நினைத்தாலும் சகலபாவங்களும் அப்போதே நசித்துவிடும். பிராணன் நீங்குஞ்சமயத்தில் நினைப்பானாகில் மணித்வீபத்தையேயடைகிறான். இந்த ஐந்து அத்யாயத்தைச் சிரத்தையுடன் பாராயணம் செய்தால் பூத பிரேத பிசாசாதிகளால் யாதொரு தீங்கும் நேரிடாது. ஆகையினால் இவற்றைப் பிரயத்தனத்துடன் நூதனமாக ஓர் கிருஹத்தையமைத்து வாஸ்துசாந்திமுதலாகச் சொல்லப்பட்ட யாகத்தைச்செய்து பின்னர் இவ்வத்தியாயங்களைப் படிக்கச்செய்தால் எல்லாமங்களங்களும் உண்டாகும் என்றனர்.

பன்னிரெண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

உ

ஸத்கதி தாயின்யைநமஃ

## பதின்மூன்றும் அத்தியாயம்.

## *புராணபலப்ரதர்சனம்.

வியாசர் கூறுகின்றார்:—ஓ அரசனே! நீ விரும்பிக்கேட்டபடியால் நாரதருக்கு நாராயணர் சொன்னமுறைப்பிரகாரம் உனக்கு யாவும்சொன்னேன். பரமாத்புதமாயிருக்கின்ற இந்தத் தேவிபு

*புராணபலனைக் கூறுவது.

ராணத்தை எவன் கேட்கிறானோ அவன் தேவிக்கு இஷ்டனாயும் தன் யனாயும் ஆய்விடுகிறான். நீ பிதுர்க்களின் உத்தாரணத்தின்பொரு ட்டு அம்பிகையினுடைய யாகத்தைச்செய்து நாம்செய்தயாகத் தால் பிதுர்க்கள் துர்க்கதியினின்றும் நீங்கினார்களோ இல்லையோ வென்று துக்கிதனாயிருக்கின்றாய். ஜன்மத்துக்குச் சாபல்யத்தைக் கொடுக்கத் தகுந்ததாயும் சர்வோத்தமமாயு மிருக்கிற தேவிமந்திரத் தை விதிப்படி நீ கிரகித்துக்கொள் என்றார்.

சூதர்கூறுகின்றார்:—வியாசர் கூறியதை சிரேஷ்டனாகிய அர சன் கேட்டு அப்படியே வியாசரைப் பிரார்த்தித்து அவரிடமிரு ந்து பிரணவ சம்ஜ்ஞையுடைய தேவிமந்திரத்தைத் தீக்ஷாவிதானப் படி கிரகித்துக்கொண்டு தௌமியர் முதலான ஆசாரியர்களை வரவழைத்து அம்பிகையினுடைய யக்ஞத்தை லோப மின் றிச்செய்தான். பிராமணர்களைக்கொண்டு ஸ்ரீதேவியின்முன் அம் பிகை பிரீதியின்பொருட்டு இப்புராணத்தைப் படனஞ்செய்வித்து பிராமணர்களுக்கும் அநேக சுமங்கலிகளுக்கும் குமாரிகளுக்கும் தீனர்களுக்கும் அன்னமிட்டு தனங்களைக்கொடுத்து சந்தோஷப் படுத்தி யக்ஞத்தைமுடித்தான். அப்போதே நாரதர் ஆகாயத்தி னின்றும் இறங்கிவர, அரசன் அவரைக்கண்டு விரைந்து ஆசன முதலிய உபசாரங்களைப்புரிந்து குசலப் பிரஸ்னைசெய்து நீர் எங்கி ருந்து வருகின்றீர்! நான் ரக்ஷிக்கப்பட்டவனாயும் கிருதார்த்தனாயும் ஆய்விட்டேன். என்றுகூற முனிவர்கூறுகின்றார்:—ஓஇராஜசிரேஷ்ட னே! இப்போது ஓர் ஆச்சரியத்தைக்கண்டு அதை உன்னுடன் சொல்லவந்தேன். உன்பிதா தன்கர்மவித்தியாசத்தினால் துர்க்கதி யடைந்திருந்தார். இப்போது அவர் நல்லசொரூபத்தையடைந்து தேவர்களாலும் அப்ஸர ஸ்திரிகளாலும் துதிக்கப்பட்டவராய் சுவர் க்கமடைந்து அதன்பின் சிரேஷ்டமான விமானத்திலேறி மணித் வீபமடைந்தார். ஓ அரசனே!நீகேட்டுவந்ததேவிபாகவத சிரவணபல த்தாலும் அம்பிகையினுடைய யாகபலத்தாலும் உன்பிதா சத்கதி யையடைந்தார். தன்யராயும் கிருதகிருத்யராயும்ஆயினர். உன்பிழை ப்பு நல்லபிழைப் பாய்விட்டது. குலத்துக்கு அலங்காரமாயிருக்கி ன்றவனே! நீ உன் பிதாவை நரகத்தினின்றும் உத்தாரணஞ்செய்து விட்டனை. உன்கீர்த்தி தேவலோகத்திலும் பிரசித்தியாயிருக்கிறது. என்று நாரதர்கூறியவைகளைக் கேட்டு அத்புதகர்மத்தைச் செய்வி

த்த வியாசரைத் தழுதழுத்த மனத்துடன் அரசன் நமஸ்கரித்து உமது அநுக்கிரகத்தால் நான் கிருதார்த்தனுய்விட்டேன். உமக்கு நான் பதில் நமஸ்காரந்தவிர வேறு என்னசெய்யப் போகின்றேன். ஓ முநிவரே! நான்எப்போதும் உம்மால் அநுக்கிரகிக்கப்பட்டவனு யிருக்கிறேன். என்றுகூறும் அரசனுடைய வார்த்தையைக்கேட்டு முநிவர் ஆசீர்வதித்து ஓ அரசனே! நீசகல கர்மத்தையும் விட்டு தேவி பாதாம்புஜத்தைப் பஜனம் செய்வாய். நித்தியம் தேவிபாகவதத் தையே படனஞ்செய்வாய். இவ்வண்ணஞ் செய்துவருவையாயின் ஆயாசமின்றி பந்தத்தினின்றும் விடுபடுவாய். விஷ்ணுபுராணம் சிவ புராணம் ஏனையபுராணங்கள் இருக்கின்றன. அவைகளெல்லாம் இத்தேவிபாகவதத்துக்கு ஒருபாகத்துக்குச் சமானமாகாது. இப்பு ராணம் வேதபுராணங்களின் சர்வசாரம். எந்தப்புராணத்தில் மூலப் பிரகிருதியாகிய தேவியைப் பிரதிபாதிக்கின்றதோ அந்தப்புராண த்திற்குச் சமானமாக வேறு எந்தப்புராணம் சமமாகும். இதைப் பாராயணஞ்செய்தால் வேதபாராயணஞ்செய்த புண்ணியங்கிடைக் கும். பண்டிதர்கள் பிரயத்தனப்பட்டுப் படிக்கவேண்டியது. ஆகையால் நீதேவிபாகவத பாராயணத்தோடு தேவியினுடைய யக்ஞத்தையும் தவருதுசெய்து வருவாய். இவ்வண்ணஞ் செய்து வருவையாயின் ஆயாசமின்றிப்பந்தத்தினின்றும் விடுபடுவாயென்று அனேக ஆசிகள்கூறி வியாசமுனிவர் தம்மிடம் போய்ச்சேர்ந்தனர். தவுமியர்முதலிய முநிவர்களெல்லாம் அவரவரிடம் போய்ச்சேர்ந்து தேவிபாகவதத்தினுடைய பெருமையைக்கூறிக்கொண்டு காலங் கழித்தனர். அதன்பிறகு ஜனமேஜயன் சந்தோஷமாகத் தேவிபாக வதத்தைப் படித்துக்கொண்டும் கேட்டுக்கொண்டும் இராஜ்யபரிபால னஞ்செய்து வந்தனன் என்றனர்.

பதின்மூன்ருவது அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸநகாதி முநி த்யேயாயநமஃ

## பதினான்காம் அத்தியாயம்.

## தேவீபாகவத மகிமை.

---

சூதமுநிவர், நைமிசாரணியவாசிகளாயும் தவங்களிலும் விரதங் களிலும் யோகசாதனங்களிலும் வேதவேதாந்த சிரவணங்களிலும்

இவையெல்லாம் எடுத்துச்சொல்லவல்ல புராணசிரவண படனங் களினுஞ் சிறந்தவர்களாயும் தம்மிடத்துக் குருபக்தியினும் சிறந்த பக்தி யுடையவர்களாயும் இருக்கின்ற மகருஷிகளைப்பார்த்து, ஓ ஞானசீலர்காள்! இதுவரையில் எனது ஆசிரியராகிய வியாச பகவானிடத்தில் நான்கேட்டவண்ணம் மஹாபுராணங்களிற் சிறந்த இத்தேவிபாகவதத்தைக் கூறிவந்தேன். நீங்களனைவரும் பக்தி சிரத் தையோடு ஏகாக்கிரசித்தமுடையவர்களாகக் கேட்டுவந்தீர்கள். இப் பொழுது தேவிசொரூபத்தையும், தேவி அநுக்கிரகத்தையும், தேவி உபாசனமகிமையையும், தேவிமந்திரவிந்யாசங்களையும், மந்திரசித் திகளையும், இகபோகபரபோகப் பிரயோசனங்களையும், பாபபுண் ணிய விசேடங்களையும், பிரம்ஹயக்ஞாதிக் கிரமங்களையும், பிராம ணத்துவத்தையும் பிரஹ்மசித்தியையும் கொடுக்கவல்ல காயத்திரி சம்பந்தமா யிருக்கின்ற சகல மகிமா விசேஷங்களையும், பஸ்ம திரிபுண்டர ருத்திராக்ஷ தாரண விசேஷங்களையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் காட்டுகின்றது. இத்தேவிபாகவத மாகையால் இதனை யாவரும் படனஞ்செய்து இஃதொன்றினாலேயே சகலசித் திகளையும் பெறக்கடவார்களென்றெண்ணி அதன் மகிமையை இறு தியிற் கூறத்தொடங்கினேன் கேட்பீர்களாகவெனக்கூறுகின்றனர்.

அர்த்த சுலோகாத்மகமாயும், தேவியினது தாமரைமலர் போன்ற திருமுகத்தினின்றும் வெளிப்பட்டு வேத சித்தாந்த போ தகமாயும், வடபத்ரசாயியாயிருக்கின்ற விஷ்ணுவின் பொருட்டு உபதேசிக்கப்பட்டதாயும், பிரமாவினால் நூறுகோடி கிரந்தமாகச் செய்யப்பட்டதாயு முள்ளது. அதனை வியாசர் சுகமுநிவருக்கு பதி னெண்ணாயிரம் கிரந்தமாகவும், பன்னிரண்டு ஸ்கந்தங்களாகவும் இத்தேவீ பாகவததைத் இயற்றினர். இப்போதும் தேவலோ கத்தில் வெகுவிரிவாயிருக்கிறது. இதற்குச்சமானமாயும் பாபத் தைப் போக்கடிப்பதாயு முள்ள புராணங்கிடையாது. எவன் இதைப்பாராயணஞ் செய்கின்றானோ அவன் அஸ்வமேத பலனை யடைகிறான். இதனைப் பாராயணஞ்செய்கின்றவரை வஸ்திராபர ணங்களால் பூஜித்துப் போஷித்து வியாசராகப்பாவித்து அவரிடங் கேட்க வேண்டும். ஓ முநிசிரேஷ்டரே! இப்புராணத்தை தன்கையா லாவது பிறராலாவது எழுதி புரட்டாசிமாதம் பௌர்ணமிதினம் அலங்கரிக்கப்பட்ட பசு தக்ஷணை இவற்றுடன் பொன்னாற்

செய்யப்பட்ட சிங்கமுத்திரை யோடிருக்கின்ற புத்தகத்தைப் பிராமணர்களுக்குக் கொடுக்க வேண்டும். பாகவதத்தைக் கிரமமாகப்பாராயணஞ்செய்து முடித்தபின்னர் அத்தியாயத்திற்கு ஒருபிராமணனாகக் கணக்கிட்டு அவ்வாறே சுவாசினிகளுக்கும் குமாரிகளுக்கும் போஜனஞ் செய்விக்க வேண்டும். அவர்களைத் தேவியாகப்பாவித்து வஸ்திராபரணங்களாலும் பாயசான்னங்களாலும் புஷ்பங்களாலும் பூஜித்தல் வேண்டும்.

இப்புராணதானத்தினால் பூதானபலன் கிடைக்கும். தினம் பக்தியுடன்சிரவணஞ் செய்கின்றவர்களுக்கு எக்காலத்துங் கிடைத்தற்கரிய பொருளொன்றுமில்லை. எல்லாப்பொருளையும் எண்ணியவாறே பெறுவர். புத்திரசம்பத்து தனசம்பத்து கல்விசம்பத்து முதலியவைகளைப் பெறாதவர் அவைகளைப்பெறுவர். மலடிகள் வந்திகள் மிருதவந்திகள் பயமாகிய தங்கள்பாபங்களினின்றும் நீங்குவர். கிருகஸ்தனாயுள்ளவன் இத்தேவிபாகத்தைப் பூஜிப்பானாயின் அவனை இலக்குமியும் சரஸ்வதியும் விட்டுநீங்கார். வேதாளம் டாகினி ராக்ஷஸர்கள் அவனது கிருகத்தை நோக்கார். ஜ்வரம்முதலிய நோய்களால் பாதிக்கப்பட்டவர்களுக்கு இத்தேவி மகிமாசிரவணத்தால் ரோகம் நிவாரணமாகும். ஒருமண்டலம் பாராயணஞ்செய்தால் மண்டலஜ்வரமும், நூறுதரம் பாராயணஞ்செய்தால் க்ஷயரோகமும் நீங்கிவிடும். தினம் சந்தியைமுடித்துக்கொண்டு ஒவ்வொரு அத்தியாயத்தைப் பாராயணஞ்செய்தால் ஞானவானாய்விடுவன். இதுவுமன்றி உத்தேசிக்கும் காரியங்கள் முடியும் முடியாதென்பதைப் பார்க்கும் விதத்தை முன்னரே கூறியுள்ளேன். நவராத்திரியில் படனஞ் செய்தால் கோரினபலத்துக்கு மேலானபலத்தைத் தேவிகொடுப்பாள். வைஷ்ணவர்களும் சைவர்களும் சௌரர்களும் காணபத்தியர்களும் அவரவர்களுக்குரிய இலக்குமி முதலிய சக்திகளைக்குறித்தும் வைதிகர் வேதகாயத்திரியைக்குறித்தும் நவராத்திரியில் பாராயணமும் உபாசனையுஞ் செய்வராயின் அவையெல்லாம் தேவிக்குச் சந்துஷ்டியாகவே யிருக்கும். சூத்திரர்களும் ஸ்திரீகளும் நவராத்திரியில் பூஜையும் உபாசனையும் பிராமணமுகமாகச் செய்வாராயின் அவர்களும் அப்பலனை யடைவார்கள். நான் அதிகமாக என்னசொல்ல வேண்டும். இப்புராணம் வேதசாரமாயும்புண்ணியகரமாயு மிருப்பதாகலான் இதனைப் பாராயணஞ்செய்கின்றவர்களுக்கு வேதபாரா

யணபலமும் படனஞ் செய்கின்றவர்களுக்கு வேதபடனபலமும் உண்டாம்.

இவ்வாறுகூறி சூதமுனிவர் சச்சிதானந்த ரூபிணியாயும் காயத்திரிரூபிணியாயும் ஹ்ரீம்மயீயாயுமிருக்கிற உன்னை நமஸ்கரிக்கிறேன் என்னைக்காப்பாற்றவேண்டும். என்றுதியானித்திருக்க அப்பொழுது பௌராணிகோத்தமராகிய அவரை நைமிசாரணியவாசிகள் சர்வோபசாரத்துடன் பூசித்து தேவிபாகவத சிரவண பிரபாவத்தினல் நிர்மலமானமனமுடையவர்களாயும் தேவிபாதாம்புஜ அர்ச்சகர்களாயும் சிரேஷ்டமான மோக்ஷத்துக்குரியவர்களாயுமுள்ள முனிவர்கள் மீண்டும் நமஸ்கரித்து சம்சாரசாகரத்தினின்றும் கரையேற்றிவைப்பதற்குத்தேவரீர் ஓடம்போன்றவராயிருக்கின்றீர். எங்களால் நேரிட்ட குற்றங்களைப் பொறுக்கவேண்டுமென்று பலமுறைவணங்கினர்கள். தியானத்திலிருந்த அம்முனிவர் வேதரகசியமாயும் புராணரகசியமாயுமுள்ள இப்புராணத்தை கூறும்படிச்செய்வித்த இக்கூட்டம் நீடூழிவாழவேண்டுமென்று தேவிசரணங்களைத் தியானித்து அக்கூட்டத்தை நமஸ்கரித்துத் தமதிடத்துக்கெழுந்தருளினர். சுபம்.

பதினன்காம் அத்தியாயம் முற்றிற்று



பன்னிரண்டாம் ஸ்கந்தம் முற்றிற்று.



ஸ்கந்தம் கஉ-க்கு அத்தியாயம் ௩கஅ.

ஆ ஸ்கந்தம் கஉ-க்குச் சுலோகம் (க௲0C0)

ஶ்ரீகாமாக்ஷி தேவ்யைநமஃ

